



ஸ்ரீ
ஓம் பண்டரீகவரதாய நம:

சத்துவகுண பிரசித்தர்களின்
சரித்திரங்களாகிய

# ஸ்ரீ மகா பக்தவிஜயம்.

(முதற்பாகம்.)



சித்தூர் அருளவாக்கு

வேங்கடதாஸர் அவர்களால்

மகாராஷ்டிர பாஷையிலிருந்த

ஜெயதேவர், கபீர், துளசி. நாமதேவர். ஞானேசுவரர்
முதலாகிய ஐந்து தாஸர்களின் சரித்திரங்களோடு

சாத்தப்பாக்கம்

கிருஷ்ணசாமி முதலியா அவர்களியற்றிய
குசேலர் சரித்திரமும் அடங்கி இருக்கின்றன.

இப்புத்தகம் கிடைக்கும் இடம்:—

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

புக்ஷாப், "ஸ்ரீகோபால் மஹால்",

வடக்குச்சித்திரை வீதி, மதுரை.

இதன் விலை] 1929. [ரூபாய் 3.



# ஸ்ரீ மகா பக்தவிஜய சரித்திரக்குறிப்பின் அட்டவணை.



ஸ்ரீ மகா பக்தவிஜய சரித்திரக்குறிப்பின் அட்டவணை முற்றிற்று.

ஸ்ரீ

ஓம் பரப்பிர்மணே நம:

# ஸ்ரீ மகா பக்தவிஜய விளம்பரம்.



இதனால் சகலருக்குந் தெரிவிப்பது யாதெனின், ஓம் சச்சிதானந்த நித்ய நிர்மலக் கடவுளாகிய பரப்பிரமம் தன் மாயாவிலாசத்தால் மூவுருவாகி சிருஷ்டி ஸ்திதி சம்ஹார கிருத்தியஞ்செய்யும் இப்பூவுலகின் கிரேதா திரேதா துவாபர யுகங்களில் நடந்தவண்ணமே இக்கலியுகத்திலும் சகுணநியானமும் பிர்மக்ஞானமும் கிரகஸ்த சன்யாச வர்ணாசிரம தர்மங்களும் நடக்கும்பொருட்டு மூவரும் முனிவரும் அவதாரஞ்செய்து மாந்தர்களின் பக்குவா பக்குவப்படி போதிக்க வேண்டியதாகும் என்று பவுஷிய புராணத்திலுரைத்தபடியே இக்கலியுகத்தில் அவதாரஞ்செய்த பக்தமுக்தரனேகருள் 700-பேர்களின் சரித்திரங்களடங்கிய நாபாஜி சித்தர் செய்த இந்துஸ்தானிப் பாஷையிலுள்ள பக்திசாரத்தையும், உத்தவ சித்தர் செய்த பக்தமாலாவையும இதனுதாரத்தால் மைபதிபாவாஜி யென்பவர் சில சரித்திரங்களைச் சங்கிரகமாக மாராஷ்டகத்தில் செய்த பக்தவிஜயம் சந்த விஜயத்தையும் இன்னம் இச்சரித்திரங்களைச் சார்ந்த சில நூல்களையும், வடதேசத்தில் 16-வருஷங்களாயிருந்து சக்தியானுசாரமட்டும் ஆராய்ந்து சங்கைகளைப் பல பெரியோர்களைக் கேட்டறிந்து இலக்கிய விலக்கணஞ் சற்றுந் தெரியாதவனாயிருந்தும் பக்தர் திருவிளையாடலென்னும் சரித்திரங்கள் உளத்தில் நிறைந்து இடம்போதாது பொங்கி இதைப்பார்க்கும் புண்யவான்களின் கண்களின் வழியாகவும் கேட்போர் செவியின் வழியாகவும், நிறைந்து தன் ஆற்றலடங்கவும் அவர்களாசீர்வாதப் பலனை அடியேற்குத் தருவிக்கவும், சகலரும் எளிதிலுணர வசனரூபமாய் வெளிப்பட்டு அதின் முகப்பிலுள்ள ஐவர் திருவிளையாடல்களை முன்னிட்டுப் பலதேசங்களிற் பரவப் பகற்கண்ணனை சூரியனும் இராக்கண்ணனை சந்திரனும் உள்ளமட்டும் மேற்படி பக்த விஜயத்தில் ஸ்ரீ வியாசாவதாரமான ஜீவகாருண்ய விரதமுடையோர்க்கே மோக்ஷமுண்டெனத் தன் சரித்திரத்தாற் காட்டிய ஸ்ரீ ஜெயதேவர் ஸ்ரீ சுகாவதாரமான தவத்திலும் தர்மமே பரமபத மடைவதற்கேதுவான மார்க்கமெனத் தன் சரித்திரத்தாற் புலப்படுத்திய ஸ்ரீ கபீர்தாஸர் ஸ்ரீ வால்மீகாவதாரமான நிஷ்காமமே பேரின்பமடையும் சூட்சும மார்க்கமெனத் தன் சரித்திரத்தால் வெளிப்படுத்திய ஸ்ரீ துளசிதாஸர் ஸ்ரீ உத்தவதாரமான பகவத் பக்தியே பரந்தாமனது பதாம்புஜங்களின் தரிசனத்துக் கேதுவாகிய முக்கிய நெறியெனத் தன் சரித்திரத்தால் விளக்கிய ஸ்ரீ நாமதேவர் ஸ்ரீ விஷ்ணுவாவதாரமான இல்லறத்திலிருந்து தேர்ந்த பிரம்மக்ஞானியே பிர்மானந்தவாரிக் குரியவனெனத் தன் சரித்திரத்தாற் றெரிவித்த ஸ்ரீக் ஞானேஸ்வரர் ஆகிய இவ்வைவரின் சரித்திரங்கள் கங்காஸ்நானஞ் செய்யவந்த சதுர்வேத சித்தாந்த சபைத்தலைவராகிய ம-ா-ா-ஸ்ரீ சைதாபுரம் சோதிட வல்ல சிற்றம்பல முதலியார், ம-ா-ா-ஸ்ரீ ஆறைமாநகரம் முத்தமிழ்க்கவி திருவேங்கடம் பிள்ளை, பரிட்சைக் குட்பட்டுப் புரசை அஷ்டாவதானம் ம-ா-ா-ஸ்ரீ சபாபதி முதலியார் முதலான கவிவாணரின் சாற்றுகவிகளைப்பெற்ற புத்தகத்தைக் கொண்டும், பழைய பிரதிகளைக்கொண்டும் இப்போது அச்சிட்டு விற்பனை செய்கிற ஆறுதாஸர் சரித்திரமென்னும் பக்த விஜயத்தை இதுகாறும் சென்னையில் அநேக அச்சுக்கூடத்தலைவர்கள் அச்சுப்போட்டது யாவருக்குந் தெரிந்த விஷயமே. இப்புத்தகமும் அதுபோ லெண்ணவேண்டாம். கரும்பு ருசிக்குமென்று நாம் சொல்ல வேண்டுவதில்லை. அதனைத் தின்றுளார்க்கு அதன் இனிமை தெரிந்துள்ளதே போல பல்லாயிரம் பிழைகளோடு பதிப்பிக்கும் குஜிலிக்கடை பதிப்புப் போலல்லாது உலகோபகாரமாக பிழையின்றி ஐதீகப்படி முக்தியடைந்த தாசர்கள் திருவுருவப்படங்க ளமைத்து அச்சிட்டிருக்கின்றோம். இதனை வைணவரேயன்றி எனையோரும் முயன்று வாங்கி வாசித்துப் பலனடைவார்களென்றே விலை சுருக்கினோம். விஷ்ணுவினுடையவும், பக்தர் முக்தர்களுடையவும் அற்புத மகிமைகளை அறிந்துய்ய விருப்புடையோர் இப்பக்த விஜயத்தினை விரும்பாதிரார், விரைவில் முந்திக் கொள்ளுங்கள். சில பிரதிகளையே பதித்துள்ளோம். வாங்குவோருக்கு இதுவே தருணம்.

உ

கடவுள் துணை.

# ஸ்ரீ மகாபக்தவிஜய சிறப்புப்பாயிரம்.

இஃது, உபாத்தியாயர் ம-ா-ா-ஸ்ரீ தஞ்சாவூர்

## இலட்சுமணசுவாமி முதலியாரவர்கள் பாடிய

### நேரிசை ஆசிரியப்பா.

மணிமலர் பொருவில மகளடை யழகுற-அணியென வுடுத்தபா லாழியி னெடுமால்
உந்தியங் கமலத் தொளிதரு பொகுட்டில்-வந்த நான்முகன் வாக்கினி லிருந்த
நாமக ளயின்ற நான்மறைக் கடலைத்-தோமறக் கடந்த சுயம்பிர காசன்
இருந்தவ ருள்ளத் தெழுந்த செழுஞ்சுடர்-தெரிந்துரை செய்ய வொணாதசிந் தாமணி
அந்தமு நடுவு மாதியி லாதாய்-முந்த மலிந்த மோன வடிவாய்ச்
சிற்குணத் தவர்தஞ் சிந்தையு ணிறைந்த-நற்குண வாரி நானில மொருங்கு
பரவிய தனைய பாந்தண்மேற் கிடந்த-தரைமிசை யுருக்கொடு சாந்த தயாநிதி
குறைவிலா வன்ப ருளங்குடி கொண்ட நறைவிரிந் தொழுகு நாண்மல ரனைய
தேசிகன் பரந்த ஜெகத்குரு வாகி-மாசிலா னென்னு மாதவத் துயர்ந்த
சங்கரா சாரியின் ருளானு தினமு மங்கள கரமுடன் வாழ்த்து மடியரில்
மாதமும் மாரி வரையறப் பெய்து-தாதவிழ் சோலைசேர் தாமரைப் பொய்கையும்
சங்கின மீன்ற தாளத்தை யுற்றே-அங்கிருந் தன்ன மடைபல கிடப்பச்
செந்நெல் மலிந்த செழுவய லுடனே-கன்னன் முதிர்ந்த கழனியு மாருப்
புயல்புறம் போகாப் பொழிலு மாமதிலும்-நயமுறு பால்பொரு னண்ணிய கடையும்
பன்மணி யிடையிடை பதித்த கோபுரமுநற்-சொன்மலி புலவர் சூழ்மா ளிகையும்
கயல்விழி யார்கழங் காடுசா லைகளும்-மயலறு தவத்தினர் வாழுமண் டபமும்
நீர்வள மிகுந்த நிலமங்கை நெற்றி-சீர்பெற வணிந்த திலகமென் றுலகஞ்
செப்புதற் கரிய சேர்நா டதனில்-ஒப்பிலாச் சிற்றா ருரியநன் னூரான்
நிகரிலா சித்த லிங்கமென் றவரும்-புகழிரு நாமன் புண்ணிய வசத்தால்
மரபினி லுதித்து மண்ணுளோர் களிக்கப்-பரிவுறு கலைபல பண்புட னுய்ந்து
மலரயன் வகுத்த மன்பதைத் தொகுதியுள்-அலகிலா மக்கட் பிறப்பரி தென்னுய்ந்
துருகுசிந் தையனு யுய்யுமா றோர்ந்து-பெரும்பய னடைதலே பிறத்தற் கரிதென
முற்பவ மொழித்த வற்புதாத் துவித-கற்பலை கடந்த விற்பனே விவேக
சற்சன சாது சங்கத் தமர்ந்து-துற்சன குழாங்களைத் துறந்தவ னாகிப்
பூமலி வனமும் புனிதர்க ளினமும்-மாவளர் குயிலும் மன்னுபூ மயிலும்
பூவை கிள்ளை பொருந்திய வன்றில்-பாவைய ராடப் பாவலர் கூடக்
கீத வோதையும் கிளர்ந்தெழு நாத-வேத வோதையு மிகவொலி தரவே
ராயவே லூரி னலம்பெற விருந்து-தூயனைம் புலனைத் துகளறக் களைந்து
தத்துவ மகன்ற சாத்வீக காரண-சுத்த நிர்மல சொரூப சாக்ஷாத்
பூரண வகளங் கனிர்நாம வரூப-வெண்குண னதரித்த கொள்கை போன்றுற்ற
மாரிமுத் தாசான் மலரடி வணங்கிச்-சூருயி ரருந்தி சுரர்க்கருள் சுரந்து
தெள்ளித் தெளிந்த தெய்வ சிகாமணி-வள்ளி மணாளனை வழிபடு கடவுளாய்த்
துணைப்பத முடிமிசை சுடருறச் சூட்டிக்-கணப்பொழு தகலாக் கருத்துட்கொண்டு
இந்துஸ் தானெழின் மராஷ்டகத் தெய்திய-சுந்தர முயர்திரு துளசிதாஸ் நாம்தேவ்
ஜெபதேவ் முதலாச் சிறந்தவர் சரிதை-மகிதலத் தமர்ந்த வாரண வித்தை
சொற்பொரு ளிசைத்த சுவைநலந் தோன்றப்-பொற்பமை யாவு நிறைநிறை பொருந்த
வரையிலாத் தென்கலை மன்டத் தூன்றிக்-கரையிலா னந்தக் கடனீர் பெய்து
நன்குணர்ந் தவரெலா ஞான மலரெனத்-தென்புட னறிவுயர் சென்னையிற் றுலங்கக்
கொடுத்தனன் கொடுக்கக் கொண்டுளோ ரகத்துத்-திடத்துட னொளிதர தெளிந்த வரகவி
வேங்கட தாசன் விளங்கப்-பாங்குற வியற்றிய பக்த விஜயமே.

கடவுள் துணை.

# ஸ்ரீ மகா பக்தவிஜய சாற்றுகவிகள்.

இஃது புரசை அஷ்டாவதானம் ம-ா-ா-ஸ்ரீ
## சபாபதி முதலியாரவர்களா லியற்றப்பட்ட
நேரிசை ஆசிரியப்பா.

மழைதவழ்குடுமி யிமயமலைவடபாற்-தென்பாற்குமரி திகழ்நிலவரைப்பில்
விளங்குமீன்முதற்பல களங்கறுமுறுக்கொடு-செல்லல்களைவான் றெல்லைஞான்றுதித்த
புயனிறமேனிப் பவளவாய்ப்பெரும்பர்-தண்மையும்வெம்மையுந் தருபெருஞ்சுடரிரு
தடக்கைதாங்கிய எழிற்றிருமார்பன்-பேரருட்களைகணாற் பிறல்கிலாவாரணப்
பொருட்பயனுகிய சாங்கியயோகக்-கருப்பொருளுணர்ச்சியிற் கைவருநெடுந்தகை
அடியரிற்சிறந்த அறிஞர்பற்பலருள்-ஞானதேவ ரைவகப் பெரிய
இந்திரியத்தொடக் குறுமைந்தடக்கிய-ஜெயதேவர் நாமதேவர்
துளசிதாசர் கபீர்தாசர்முதலாம்-புண்ணியர்சரித நண்ணியமுதனூல்
இந்துஸ்தான்மராட்டிர மெனுமிவற்-றிருப்பதைத்தமிழி யியாவருமெளிதிற்
புலங்கொடுதேர்ந்து நலம்பெறுமாண்பின்-நயந்தரக்காணூஉ வியந்தனர்களிப்பப்
பக்தவிஜய மெனப்பெயர்பணித்து-வளங்கிளர்வசன நடையினிற்றந்தனன்
சரோருகமலர்த்தடம் விராவுமிராய-வேலூர்ப்பதியினன் மாலூர்ப்பழவினை
வலனறக்கடிந்த நிலையுறழ்சீர்மைசால் மாரிமுத்துப் பிரமமாதவன்
பொற்பதம்பழிச்சு விற்பனமேதகை-தேங்கமழ்பொழிற்கண் மாங்குயிற்றெருகுதி
பண்ணிசைகூட்ட விண்ணிடைத்தருமலர்-தம்மினுமினியன வம்மினென்றத்தலைச்
சுரும்பரையழைக்கும் பெரும்பரிசுடைத்தன-மெல்லியநறுமென் பல்லவம்பொதுளிய
சேபிதழ்பூத்திர ளாயிடைவார்தரூஉம்-நருந்தேனூர்வுற விருந்தயின்றகங்கொளிஇக்
களிதலைசிறப்ப வளியினம்பாண்செயக்-கற்றுணர்மாக்களின் பொற்றுணர்கொடைசொரீ
சரந்தருகொன்றை நிறந்தரீள்புரவம்-உருவவோரிக்கட் பருவம்விரிசிகைச்
சிற்றிடைமகளிர் பொற்றொடிகரமெனக்-காந்தள்ம்போந்தக மேந்துபல்சுடர்நிறை
வயங்குசிற்றாருறை பயன்செறிபருட்கவி-நேசமால்வெங்கட தாஸனென்ப
அன்னத்தையுழூநர் பண்ணையிலூப்பும்-ஏறுநீருழக்கலின் வாளைபாய்தடஞ்சூழ்
ஆறைபம்பதியின் வீறுமுத்தமிழ்-கவித்திருவேங்கட னெனவருநாவல
னும்மைதவழ்தண்டலை மதிமுகத்தநலார் நெய்தவழ்கூந்தல் நிகர்புறுசைதைவாழ்
சோதிடப்பெருநூ றுளக்கறவுணர்ந்த-கோதறுகுணச்சிற் றம்பலக்குரிசிலும்
ஆர்வமுற்றினிதிற் பார்வையிட்டுதவ-அன்னசிற்றம்பல னகமகிழ்சோதரன்
சென்னையிற்புகழ்மை திகழ்சதுர்வேத சித்தாந்தசபைக்குத் திருமுதல்வன்
கல்விக்கடற்கரை கண்டவான்புலவர்-சொல்வித்தகந்தரு தொன்மைமருத
நிதிகுலதிலக னெனநவிலுமாபதி-சதுரனுரவுநேர்ந் தரணியிலெவரும்
மெச்சிடுமெழுத் தியந்தரத்-தச்சிடுவித்து நல்கினனமைவுறவே.

இஃது ம-ா-ா-ஸ்ரீ, கா. பச்சையப்ப முதலியார் கல்விச்சாலை பிரதமபண்டிதர்
## ம-ா-ா-ஸ்ரீ சுப்பராயபிள்ளை யவர்களாலியற்றப்பட்ட
பன்னிருசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

திருமருவு பக்தவிஜ யத்தைமக ராட்டிரந் திகழுமிந் துஸ்தானிபாம்
தெளிமொழியி னின்றுதமி ழின்மாரி முத்தென்னச் செப்பவரு பிரமவள்ளல்
மருவுரு மாணாக்கன் சிற்றூர் சிறக்கவரு மகிபனெனு டிருவேங்கட
மாதாசன் செப்பியதைச் சைதைவளநகர்தனில் வயங்குசிற் றம்பலவனென்
றுருமருவு வள்ளலொடு பொழில்சூழு மாறைமெனு மொப்பிலா நரபதியினன்
ஒளிருமுத் தமிழ்க்கவித் திருவேங்க டப்புலமை யுயிர்கவிஞ ராய்ந்திட
அருமைபெரு சென்னைபுரி சதுர்வேத சித்தாந்த வஞ்சபைத் தலைவனெனவே
அமருபா பதிநரேந் திரனுலகு போற்றவே யச்சிட்டளித்தனனரோ.

இஃது, ம-ா-ா-ஸ்ரீ கா. பச்சையப்பமுதலியார் கல்விச்சாலை
தமிழ் இரண்டாம் உபாத்தியாயர்

## திருமணம்-கேசவசுப்பராய முதலியார் பாடிய

பதினைந்து சீரடியாசிரிய விருத்தம்.

சீர்மருவு மரிதாசர் சரிதமிந் துஸ்தானி செழுமராட்டிரபாஷையிற்
றேந்துபண் டுற்றதைப் பக்தவிஜ யப்பெயர் தெளித்தினிய செந்தமிழினாற்
றேர்மருவு மொழிபோத்து மாரிமுத் துப்பிரம தேசிகற் கன்"பூண்ட
தெய்வவேங் கடதாச னருளிடச் சதுர்வேத சித்தாந்த சபைதனக்குப்
பார்மருவு தலைமையொடு சோதிடப் புலமைவரு பான்மைசெறி சிற்றம்பலப்
பாவலன் முத்தமிழ்த் திருவேங்க டச்செம்மல் பழுதறும் புரைதபுக்கத்
தார்மருவு குவளைப்பு யாசல னுமாப திச்சைதையான சென்னை நகரிற்
றமிழ்வளர்த் திட்டநம் வள்ளச் சிற்பதிவ தான்செய் தளித்தனனரோ.

திரிசிரபுரம் வித்வான் ம-ா ா-ஸ்ரீ

## கோவிந்தபிள்ளை யவர்களா லியற்றப்பட்ட

விருத்தம்.

அரிதாச ரானபத்தா துவிஜபமா ராஷ்டமிந் துஸ்தான் பாஷை
விரிதாசர் புகன்றவற்றை விளங்குசெந் தமிழில் வசன ரூபமாக
வரிதாசர் மாரிமுத்துப் பிரமதே சிகர்மகிழ்மா ணக்கர் சேட
கிரிதாச ரெனுந்திருவேங் கடதாச ரியற்றிடச்சென் னைக்கண் மாதோ.

சதுர்வேத சித்தாந்தச் சபைத்தலைவ ரானசிற்றம் பலச்சான் றோரும்
முதுசீர்சா லறைதிரு வேங்கடமுத் தமிழ்கவியு முயன்று நோக்கு
மதுசால வச்சபைக்குத் தலைவருமா பதியறிஞ ரச்சிற் சேர்த்தற்
கெதுதானெப் பெதுவுமிலை யிகபரபோ கங்களுக்கீ தேதுவாமே.

## புரசை ம-ா-ா-ஸ்ரீ, செ. அப்பாவுபிள்ளை யவர்களியற்றிய

இரட்டை ஆசிரிய விருத்தம்.

பரப்பிரம மார்திருமா லிணையடிக்கன் புடனினிய பக்திசெய்து
பாகவத மாதவரா யோகமுமெய்ஞ் ஞானபூ ரணருமாகித்
திரப்பேறு பெற்றுள மாதுளசி தாசர்கபீர் தர்ஸர் தூய
ஜெயதேவ ருடனுமை தேவர்ஞா னேசுரனென் றைவர்தங்கள்
சரித்திரமிந் துஸ்தான் மராஷ்ட மதினின்றெம் வெங்கடேச
தாஸனுந் தகையனற் றமிழ்வசன மாச்செய்ய வதனைச்சைதா
புரத்தருமா பதியெனுமா லொடுசிற்றம் பலவேளாம் புலமைமிக்கோர்
பொருவில்சீ ரச்சுதனிற் பதிப்பித்து வழங்கினர்பூப் புகழுவம்மா.

நாகப்பூர் டிவிஷன் ஜெனலஜிட்டன் ஆபீஸ் எட்ரைட்டராகிய ம-ா-ா-ஸ்ரீ

## தி, வீரராகவலு நாயகரவர்க ளியற்றிய

விருத்தம்.

சுந்தரஞ்சேர் சிக்கந்தர் பாதில்வாழும்-சோமசுந் தரனிதய தானதன்னைச்
சந்ததம் விட்டகலாத முருகன்றன்னை-தனதகத்திற் றினங்குடியாய்க் கொண்டநேமன்
பந்தவுல கோரறிந்து படிக்கக்கேட்கப்-பாசமுடன் றலைக்கணிய விநயஞ்செய்ய
விந்தையதாய்ப் பக்தவிஜ யத்தையீய்ந்தான்-வேங்கடதா ஸனுநாமன் விரைந்துதானே.

ஆசிரிய விருத்தம்

பொன்னகர்க் கரசன்வே தாசௌரி நின்மலன் பொய்யிலா முனிவர் தேவர்
போற்றுந் திருப்பழனி யாண்டவனை யனுதினம் புளகமொடு துதிசெய்குவோன்
மன்னுமறை முடிவருட் சங்கராசாரியர் மரபினைச் சார்ந்த புகழார்
மாரிமுத் துப்பிரம தேசிகன் றனதுதிரு மலரடிகளைப் பரவுவோன்
தன்னிகரி லில்லாத சிற்றார ஞந்திவ்ய சற்குணச் சித்தலிங்கம்
தந்திடப் புவியில்வேங் கடதாஸ னுயிலகு சாதுசன் மார்க்க தீரன்
மன்னுதமி ழால்பக்த விஜயமென் றிந்தனன் பரிவுட னகங் களித்தே
பார்த்தபே ருஞ்செவியிற் கேட்டபே ரும்புவியில் பல்லாண்டு வாழ்மின்களே.



ஸ்ரீ

ஓம் பரப்பிர்மணே நம:

ஸ்ரீ சத்குருவே நம:

# ஸ்ரீ மகா பக்த விஜயம்.

## பாயிரம்.

### பரப்பிர்ம துதி காப்பு.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

சீரார்நெஞ் சினூராற்றுஞ் செபக்கோவை தனைச்சூடுந் தேவதேவைப்
பாராதி பஞ்சகர்த்தர் பகுதிபவ நெரிக்கிடமாம் பரமான் மாவைப்
பேராதி யிலகோவை மனச்சோர்வை யகற்றும்பரப் பிரமசேவை
தூராதி தூரமெனு மகப்பார்வைத் தரும் வாழ்வைத் தொழுதல் செய்வாம்.

### கஜானன் துதி.

வஞ்சித்துறை.

திருவாழ் வருளுங் கரிமா முகனற்
சரணும் புயநஞ் சிரமே லணிவாம்.

### திருநாதன் துதி.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

பிரகலாதனுக் காகத்தூணிற் பெருநர ஹரியானனைக்
கரியழைத் திடவேவந்து காத்தருளிய மாயோனை
அரியுனக் கபயமென்றுட் காடைமேன் மேற்றந்தானைத்
துரியமாநிலைபெற்றுய்யத் தோத்திரஞ்செய்குவோமே.

### பார்க்கவி துதி.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

அரன்பிர மத்திதிரா தனேகநா ளலையும்போதவ்
வரன்பிர மத்திதன்னை யரைகணத்திற் றீர்த்தாளைக்
கரிதனை யுணர்த்ததுக்கா ராமரின் காந்தைக்கன்று
பெருநிதி யளித்தாடன்னைப் பேணிநம் மிடிகடீர்ப்பாம்.

### நிடலாட்சன் துதி.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

மிருகண்ட முனியின் சேய்க்கும் வியாக்கிர பாதர் சேய்க்கும், பெருவயதுடன் பாலவசம்பிரியமாய்க் கொடுத்த நாதன், திரிபுரந்தனையுக் காமன் றனையுஞ் செவ்வனலாய்ச் செய்தோன், திருவடிக்கமலம்போற்றித் தீங்கினை யகற்றுவோமே.

### பவானி துதி.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

புசுண்டனுக்கழியாயோகம் பூரணமாய்போதித்தாளை
அசியுணர்குகற்காவானோர்க் கருண்மகவில்லாதென்றும்
வசைமொழிபுகன்றிட்டாளை மாசிலாவதனத்தாளை
நிசபதத்தோடதீதப் பதம்பெறநினைவில்வைப்பாம்.

### காயத்திரி துதி.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

ஹரியெழுத்தறியாநாயேன் றனைத்தடுத்தாட்கொள்வாளை
அருமறையாகமத்தோ டனந்தசாத்திரமானாளைப்
பிரமனூர் நாக்குற்றாளைப் பிரிபலீலையை யாண்டாளை
எரியுணுதரும்பச்சோலை யாகினாட்கிணக்கஞ்செய்வாம்

### கார்த்திகேயன் துதி.

பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அடியாரெங்குண் டெங்குண்டென்
றலையுமறுமா முககுகனே
அரனார்கணினுற் பவித்தவனே,
அமரர்சிறையைத் தவிர்த்தவனே
அடியாதியிலா வறிவுருவே
அகஸ்தியர்க்கன் றருட்குருவே
அருணகிரிநா தரையாண்ட
வருளேஞானப் பரம்பொருளே
படிமீதடியார் சரித்திரமாம்
பக்தவிஜய மெனுநூலைப்

பக்தியோடு வாசகமாப்
பண்ணுநாபே ணுவதனிற்
குடியாயிருந்தோர் குறைவின்றிக்
குணமாமுழுது முடித் தெனையாட்
கொள்வாய்தோகை வாகனனே
கூவுஞ்சேவற் கொடியோனே.

ஜீவன்முத்தர் துதி.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஜெபதேவ்நாம்தேவ் சோபான்தேவ்
க்ஞான்தேவ் நிவர்த்திதிகழ்சாது
நயமீரொயிதாஸ் சூரதாஸ்மா
நாண்யதுளசிதாஸ் கபீர்தாஸ்
சயமில்ராம்தாஸ் புரந்தரதாஸ்
கனமாதவதாஸ் கூர்மதாஸ்
சுயதுக்காரா மேகநாது
சுவாமியெனைக் காக்கவுங்கடனே

குருபரம்பரை துதி.

கலி விருத்தம்.

அங்க லிங்க வயிக்ய முணர்த்துநற்
கெங்க னும்மில கும்பர மோருய
ரங்க மாயிவ் வகிலத் தெழுந்தருள்
சங்க ராசாரி தண்பத மேத்துவாம்.

தத்து வங்க ளௌலாமகன் றானந்த
வத்து வாகி விளங்கிடு மாதவ
வித்தி யாரண்ய ஸ்வாமி விமலனைப்
பத்தியோடு பணிந்தினி யுய்குவாம்

அத்பு தானந்த வற்புத வச்சுத
சத்தி னேதவிச் சர்வ வியாபக
சித்வி லாச சதாசிவப் பிரமமாந்
தத்வ நீதனுக் குச்சர ணங்களே.

நேத்ர மாதி நினைவுக ளும்மிகு
காத்ர மாபெருங் காவு மலவல
சூத்ர தாரியென் றோர்ந்தரு பேகர
பாத்ர ஸ்வாமியை யேத்திப் பணிகுவாம்.

அங்க மாதி யலவென்ற கன்றரு
வங்க மாப்பரை யாதி யகன்றுயர்
லிங்க மேவிய நின்மல னாகிய
புங்க சேஷ கிரிசனைப் போற்றுவாம்

சச்சி தானந்த னுங்கிருஷ்ண சாமியை
அச்சுத வேங்க டேசக் குரவனை
உச்சி யையுணர் நாராய ணன்றனை
நிச்சய யம்பெற நெஞ்சு விருத்துவாம்.

சகல ரூப்பிர மந்தனை யுற்றிட
ரகலவேண்டிக் கைவல்ய மறைந்தநற்
சுகசொரூபநற் றுண்டவமூர்த்தியின்
மிகுபதத்தினை மேவிப் புகழுவாம்.

குரு துதி.

இரட்டைபாசிரிய-விருத்தம்.

தானந்தவத்தின்மிகு ஜீவகாருண்யமுஞ்
சாந்தமுஞ் சரிதையென்றும்
தத்துவமுணர்த்துமரு ளாரியர்க்குப்பணிக
டாஞ்செய்தல் கிரியையென்றும்
ஞானந்ததும்புமறி வினையருந்தருனெறியை
நாடவுயிர் யோகமென்றும்
நாதனருளாலறிவு நானெனத்திடமதாய்
நம்பன்மிகு ஞானமென்றும்
ஆனந்தமாமெனக் கிடர்பிறப்பில்லையென்
றறிவதே நிஷ்டையென்றும்
ஆமிந்த்ரியகரண கருமமறிவாமெனக்
கணுகா தெனத்தெரிந்தே
மோனந்தனைப்பெற்று யாதொன்றுநாடாத
மோனமுபாசகசமென்றும்
முத்திமுடிவருள்ஞான மாரிமுத்துப்பிரம
முத்தனை யகத்துள்வைப்பாம்

மகத்துக்கண் மகிமை.

ஓம்-அகண்டாகண்ட-அசல-அதுலஅச்சுத-அத்வித அபய-அட்சய-அபாகிய-அபாசிய-அனுமய-அப்ர மேய-அவிகார-அசரீர-அனந்த-அனந்தானந்த-ஆதிமத்யாந்தர கிதமாயும், ஈசுவர-ஏகதேவ-கருணாலய கர்த்தவ்ய கருணாகரக்கடவுளாகியும், தற்பர சிற்பர நாத சச்சிதானந்த-சகோதய சம சாந்த சாஸ்வித-சர்வசாக்ஷீ சர்வோன்னத-சர்வலோகசரண்ணிய சர்வக்ஞ சர்வகாரண சர்வேசுர-சர்வேந்திரியாமியாகியும், உசித உத்க்ருஷ்ட உத்தம உத்தமோத்தமமாகியும், சுயசுகசிந்தசுயம் பிரகாசசோதி சொரூப சாக்ஷாத்கார சுபமங்கள சுவாமியாகியும், நிக ஜோத்ய நிக்லேத்ய நிர்வேத்ய நிர்வாக்கிய நிதான நிசாதன நிஜார்த்த நித்ய சத்ய நிரஞ்சன நிர்சலன நிர்பந்த நிர்சங்க நிஷ்களங்க நிர்காம நிர்குண நிர்விகாரமாகியும் நிர்பேதநிர்சேத நிகர்வநிரவயவ நிருபநிர்சின்னநிர்பின்ன நிர்பாத நிர்ஜீவ நிராங்கார நிராலம்ப நிர்விசேஷானந்தமாகியும், நிர்சப்த நிஷ்கர்ம நிஷ்கள புஷ்கள நிர்மலநிரந்தர நிராகுல நிர்வர்ண நிஷ்பிர பஞ்சமாகியும், நிரா

வரண நிராமய நிராதார நிராகார நிரதிசயானந்தமாகியும் நீதிபர பரஞ்சோதி பரதுக்க துக்கபரம பரம்பர பரப்பிர்ம பரமேஸ்வர பராபர பரிபூரணமாகியும், புண்ய கன்ய புனித புராதன ஜனுதன புத்த முத்த சுத்த விஷ்ணு வ்யோமவ்யா பகமாகியும், கேவல கைவல்ய பிர்மானந்த மெஞ்ஞான சின்மய தேஜோமய சித்விலாச தேவ தேவனுகியும் விளங்காநின்ற சமஸ்தமத சம்மதக் கடவுளாகிய பரப்பிர்மத்தை நானெனதென்னும் அகங்கார மமகாரமறத் திரிகரணச் சுத்தியோடும் வணங்கி இதைப் பார்க்கும் புண்ணியவான்களின் திருவருட் கமலக்கழல்களைச் சிரமேற் கொள்ளுதற்கிணங்கிப்,

புளியம்பழத்தின் போர்வை போலவும்
தெளிவூமை செவிடன் போலவும்
நீர்மீதுறுங்வ நீதம் போலவும்
நீர்தனிற்றெரியும் நிழலைப் போலவும்
பூமியிலுறுமகப் பூச்சியை போலவும்
ஆயில்விழும்பல ஆற்றைப் போலவும்
ஆடும்தொம்ம ராகத்தைப் போலவும்
பாடும்பாடகன் பாட்டைப் போலவும்
கனவிற்காணுங் காட்சியைப் போலவும்
புனற்குடமேந்திய பூவைப் போலவும்
விபசாரிசெய்யும் வேலை போலவும்
உபகாரபுருஷ னுள்ளம் போலவும்
பரத்தையர்காட்டும் பட்சம் போலவும்
சிரத்தையிற்சிறந்த சீஷன் போலவும்
பஞ்சபூதங்களின் பண்பைப் போலவும்
பஞ்சவர்னங்கவர் படிகம் போலவும்
அருங்குழவிகளி னுசை போலவும்
பருந்துநிழலுறும் பான்மை போலவும்
உடன்கட்டையேறு முத்தமி போலவும்
மடங்கொக்குவீதி மணியைப் போலவும்
சமணர்போற்றுஞ் சாமியைப் போலவும்
சமலத்துறுமுத கந்தனைப் போலவும்
ஏகசக்ராதி பனிச்சை போலவும்
நாகங்குயில்மயில் நாணயம் போலவும்
நெய்யுண்டுகக்கும் ஞானியைப் போலவும்
வெப்யோன்விசிறி வீணை போலவும்
கண்ணிற்கரிக்குங் கருமை போலவும்
விண்ணிற்றெரியும் மேகம் போலவும்
கற்பகங்காக்கை கருவிழி போலவும்
கற்பைக்காக்குங் கன்னியைப் போலவும்
பித்தன்போலவும் பேயன் போலவும்
பத்தன்போலவும் பாமரன் போலவும்

சமுசார வியாபாரத்தி லிருந்தே பிபீலிகாதிசமஸ்த வஸ்துக்களிலும், பிரமமே நிறைந்திருக்கிற தென்றும் பிரமமில்லாத விடமுண்டோவென்றும், பரப்பிரமத்துள் நானென்பது முக்காலத்திலுமில்லையென்றும், நானெனுமகந்தையே மூலஞ்ஞானமென்றும், நானெனுஞ் சீவத்தன்மை அறிவூன்றி விசாரிக்கில் சுத்தசூன்பமாகுமென்றும், நானீயெமதும தென்னும் விகற்பமற் றிருத்தலே பிரமக்ஞானமென்றும் நானெனலற்றவிடத் துதயமான வின்பமே, நிரதிசயாநந்தமென்றும், பரப்பிரமமே ஒருருவா யெழுந்தருளிய குருஸ்வாமிகட் குடல் பொருளாவி யென்னு மூன்றையுந் தத்தஞ்செய்து நானென்பதை யடக்குவதே உத்தம தானமென்றும், தனக் கிதர ஜீவர்களாற் பொல்லாங்கு நேரிட்டாலும் தானப்படி செய்யாதிதஞ்செய்து நானென்பதை யடக்குவதே சாந்த நிதானமென்றும், நான்மறை முடிவாகிய மகா வாக்கியார்த்தங்களைச் சிரவணஞ் செய்து தேகேந்திரியபிராணகரண சீவவிருள் நானலவென் றுத்ம ஸ்வரூபமாகிப் பர பிரமத்துள்ளே சீவக பாவமாதலே பிரமத்தியானமென்றும், இம்மனன பலத்தாற் றிரிகரணங்களை அசைவற நிறுத்தி நானென்னு மகங்காரக் கிரந்தியைக் களைதலே பிரமக்ஞானமென்றும், திரிகரணங்களின் கலனமற்ற போ துதயமான பிரமானந்த வாரியி லமிழ்ந்து தன்னை மறத்தலே மகா மௌனமென்றும், திக்கு தேசாதிகளை மறந்து சங்கற்ப விகற்ப மிறந்து நனவிற் சுழுத்தியையடைந்து மானுபி மானங்களைக் கடந்து நிருவிகற்பமாயிருத்தலே ஜீவன் முந்தியென்றும், இப்பேர்க்கொத்த அபேத நிலையிலிருந்து சாக்ஷாத்கார மடைதலே மோக்ஷமென்றும்; தன்னையடைந்த சத்சீஷர்களுக் குபதேசித்து இஷ்ட தேவதையை யுபாசித்து எப்போது மாசானைப் பூசித்து இரவிபோலென்றும் பிரகாசித்து எழிலாரருள் பெற யாசித்து இன்ப மீவாரையே நேசித்து, இகவாழ் வற்பமென்று யோசித்து குருவேபதி யெனப் பூசித்துக் கோதிலா நூல்களை வாசித்துக் குருமொழிகளை விசுவாசித்துக் குரு சங்சிர்த்தனங் கோஷித்துச் சாத்விகராய்ச் சந்தோஷித்துச் சாக்ஷிப் பொருளாய்ச் சேவித்துச் சர்வ சாக்ஷியாய் விசேஷித்துத் துரிய வீட்டினிற் பிரவேசித்துச் சும்மாயிருக்கவே ஆசித்து ஆனந்தவாரியில் நிதானந் தப்பி தானிறந்திருந்தும் தன்னைக்கொல்ல நினைந்த சண்டாளர்மேல் சாகரத்தைப் போன்ற கருணையும், சங்கரன் சாரங்கபாணி தமக்குப் பணி செய்யும்படியான பெருமையும் மாயா வாழ்க்கையி லுள்ளோர்த் தம்மை மானபங்கஞ் செய்யும் போது மங்கள காதல

துள்ள மகிழ்வும், தம்மை யண்டினோர்க்கு போக்ஷ வாழ்வளிக்குந் திகழ்வும் தருமார்த்தமாகத் தநயன்றலை யையரிந்த தைரியமும், சாதுக்களுக்கன்னமளிக்குமிமித் தம் தன் மனைவியை அயலானுக் கசமகிழ்வோடீந்தபிரிய மும், மிருகங்கள் வாக்கால் வேதத்தைச் சொல்வித்த சாதுரியமும், சவத்தை யெழுப்பின திறமையும், ஜனார்த் தனனைப் பனிரெண்டாண்டு ஜலம்சுமக்கவைத்த உரிமை யும், பிறருயிர்க்காத் தன்னுயிரை மாய்க்கத் துணிந்த ஒருமையும், தருமர் சுகர் ருக்மாங்கதர் முதலானோர் சகலரும் பார்க்கப் பொந்தியோடு வானுலகடைந்ததைப் போலவே தேகத்தோடு மேலுலகிற் சென்றும், ரூப மாய்த் தெரிந்தும் வெட்டும்போது, ஆகாயவடிவாய் நின் றும் பக்தர்கள் மத்தியி லிருந்தபடி மாயமாகியும், தங்க ளாக்கையைப் புஷ்ப துளசிகளாய்க்காட்டியும் அழியாச் சிரஞ்சீவிபட்டத்தைப்பெற்றும், வானுலகிலிருந்துபுஷ்ப விமானங்கள் வர அதிலமர்ந்து சென்றும், அடியார்கள் முன் அரியர ஸ்வரூபிகளாய் நின்றும் சமயோபதேசர்க் குப் பிரமோபதேசஞ் செய்தும், மதபேதர்க்குச் சம்மத போதமளித்தும், பகவானுக்குங் கல்லுருவான ரிஷபத் துக்கு மன்ன மூட்டியும், அனுபவக்ஞானத்தால் இதர மதஸ்தரை வாட்டியும், ஆகாயத்திலிருந்து கொடிகள் வர நாகேசுரர் கோயிலில் நாட்டியும், கற்களை யெல்லாம் பரிசவேதியாசச் செய்து காட்டியும் நாகேசுரர் கோயிலை மேற்கு முகமாகத் திருப்பியும் பாதங்களைத் தூக்கி வைத்த இடங்களிலெல்லாம் லிங்கங்கள் முளைக்கச் செய் தும் சமாப்தமான பின்னும் பக்தர்கள் கூப்பிட ஏனென் றுத்தரவீந்தும், இன்ன இன்ன மனேக விநோதங்களைக் காண்பித்தும், விளக்குமுற்றிருந்த ஜெயதேவ் நாமதேவ் க்ஞான்தேவ் சோபான்தேவ் சாங்தேவ் துளசிதாஸ்கபீர் தாஸ் கூர்மதாஸ் விஷ்ணுதாஸ் சூரதாஸ்ரோயிதாஸ் ராம தாஸ் மாதவதாஸ் மச்சேந்திரநாத் சலந்தர்நாத் கோரக் நாத் ஏகநாத் கோராகும்பார் ராகுமார் பரமானந்த சோகா ஜகமித்ரிநாசர் நிவிர்த்திசாது சாவந்தியமாலி முக்தபாய் ஜெநபாய் மீராபாய் கங்காபாய் நரஹரி கஜனகசாய் துக்காராம் முதலான எா பிர்மக்ஞானிகளி னது சரிதை யெனும் அமிர்தத்தை நிறைத்து வைத் திருக்கும் பக்த விஜயமென்னுங் கிரந்தத்தைப் பொய் மொழிகள் பூரணமா நிறைந்த புன்மையேன் வாக்கினற் புகலக்கூடாததா யிருந்தும், புகலத் துணிந்த காரணம் தேவமன விக்கினமின்றி நிர்விக்கினமாய் முழுது மினிதாக நிறைவேற்றும் கருணாகரக் கடவுளாகிய கண பதியின் திருத்தாட் டாமரைகளின் மகத்துவமே. இவ் வடியேனைத் தடுத்தாட்கொள்ளும் திருமுருகேசனரு ளோ? பக்தசரித்திரங்களைக் கேட்ட விதமோ? யான் அறிகிலேன். அன்றி பிர்மாவதாரனன நாபாஜி சித்த ராற் செய்யப்பட்ட பக்தசாரமென்னும் விசாலமான ராத்திரியில் உத்தமர்க டிருவிளையாடலென்னும் சுகந்த வாசனைவீசும் புஷ்பங்கள் புஷ்களமாய்புஷ்பித்திருக்கும் நந்தவனமாகிய பக்தவிஜயத்தைஇவ்வுரகிலுள்ளபாபங்க ளெல்லாந் திரண் டோருருவமான வடிவமும் க்ஷணநேர மாயினும் சஞ்சலமற்றிராத வஞ்சகமாகிய நெஞ்சக முள்ள கொடியேனுகிய அடியேனுடைய இருதயத்தி லாணவ வந்தகாரத்தைக் கிழித்தெழாநின்ற கோடி சூரியப் பிரகாசமான அருள் விலாசமே பிரவேசித்துத் தமிழ் பாஷையிற் செய்யத் தொடங்கியன அதிசயமே அதிசயமாம்.

## நூற் பெருமை.

பக்தப் பிரியனுகிய பகவானுடைய திருநாபிக் கமலத்தில் வீற்றிருந்தபடி இவ்வண்ட பிண்ட பிர மாண்டங்களை ஓர் நொடியிற் சிருஷ்டித்த பிரமதே வனே இவ்வுலகிடேற் அவதாரஞ் செய்து நாபாஜி சித்தரெனப் பேர்பெற்றுப் பக்த சரித்திரங்களை யெல்லாம் இந்துஸ்தானி பாஷையிற் செய்து வைத்து அன்பரைக் காத்து ரக்ஷித்து நாளது பரியந்த மிவ் வுலகி லுலாவிக்கொண் டிருப்பாரெனி னிதன் மகி மையை ஒருவராற் சொல்லக் கூடியதோ? சொல்ல மானிடராற் பாடியதோ? பக்த சாரமெனப் பேர் வழங்கும் பக்த விஜயமானது பிர்மானந்த ரசத்தை யளித்துச் சந்ததமுங் களித்து அழியாச் சத்ய க்ஞா னந்த பிரம்ம மாத்திரமா யிருக்கச் செய்வதால் தேவாமிர்தமென்றும் கொலை களவு கட் காமம் குரு நிந்தையென்னும் பஞ்சமா பாதகங்களை நீக்குதலால் பகீரதியென்னும் அனந்தஞ் சரிதங்களா லலங்கரிக் கப்பட்டிருப்பதால் இதிகாசமென்றும், ஸ்ரீமந்நாராயண ருடைய திருவிளையாடல் நிறைந்திருப்பதால் விஷ்ணு புராணமென்றும், சாட்சாத் பரமசிவத்தின் பல மகிமை யுடைய சரித்திரங்க ளடங்கி யிருப்பதால் சிவபுரான மென்றும், பிரபஞ்சோற்பத்தி ந சமும் விதி நிஷே தங்களும் பல நிலைகளு முரைப்பதால் வேதமென் றும், வேதமுடிவான மகா வாக்கியார்த்தங்களி னிரக சியங்க ளனந்த மிருப்பதால் வேதாந்த மென்றும் சொல்லப்படும். அன்றி இதில் மத பேதங்களைக் கண்டித்து மானபி மானங்களைத் துண்டித்து அரியரனைச் சமமாகப் புகழ்ந்து அல்ல வென்பவர்

களை யிகழ்ந்து காமக் கிரியைகளைக் குறித்து பிர்மக் ஞானத்தை நிறைத்துத் துன்பத்தி லிருப்போரைப் பிழைத்து இன்பத்தில் வாருமென் றழைத்து ஜன்மங்க ளில்லாமற் போக நன்மைபெற் றெந்நாளும் வாழ்க பிரமானந்த போதத்தையே விரித்துரைத்தலால் வேதா ந்த சித்தாந்த விளக்க மென்றும் சொல்லலாம். இவ் வளவு மாட்சிமையான மோட்ச காட்சிக் கிரந்தத்திற் குப்பக்த விஜயமெனப் பேர்வைத்திருப்ப தேனெனின் அரிய குருபக்தி யில்லாமல் சித்தி முத்தி யடைந்தவர்க ளில்லாமையாலும், எல்லாவற்றிற்கும் பக்தியே காரண மாதலாலும், பக்தியில்லாதவர்க்கு முத்தியில்லாமையா லும், இதிற்சொல்லும் பிர்மக்ஞானிகளனைவரும் பகவத் பக்தியினாலேயே சித்தி விரக்தி முக்தியடைந்தார்களாத லாலும், பக்தியினாற் காமக் குரோத லோப மோக மத மாச்சரங்க ளென்னு மரிஷ்ட வர்க்க வீரர்களைச் செயி த்து, விஜயம்பெற் றுண்மை க்ஞானமும் பேரின்பமும் கைவல்யமு மடைந்தபடியால் பக்த விஜயமெனப் பெயர் வைக்கப் பட்டதுமன்றி,

கலியுகாதி சஅகக-ம் வருஷத்தில் துக்காராம் புத் திரியின் குமாரனாகிய வாசுதேவ பாவா என்பவர் பண் டரிபுரத்தில் பிர்மாம்சமான நாபாஜிசித்தர் செய்த இந் துஸ்தானி பாஷையிலுள்ள பக்தசாரத்தைப் பாராய ணஞ் செய்துகொண்டிருப்பதை அவ்வூருக் கிறைவனா கிய பாதுஷா நாடோறுஞ் சிரவணஞ் செய்துகொண்டே வந்து துக்காராம் பொந்தியோடும் சகலரும் பார்க்க வானுலகிற் சென்றாரென்பதைக் கேட்டுச் சந்தேகங் கொண்டு துக்காராம் போனதைக் கண்ணாரப் பார்த்த வர்களியாராவ திவ்வூரிலிருக்கிறார்களா வெனக் கேட்க, இரண்டொருத்தர் நாங்கள் சிறுவயதுடையவரா யிருந்த போது போனரீதி மெய்மையென் றுரைக்க, அரசன் நம்பிக்கை கொள்ளாமல் இது சுத்த அபத்தமென் றறைய, அதற்குத் துக்காராம் பேரன் வயதில் மிகுந்த என் மாதாவுக்குத் தெரியுமெனப் புகல, இராஜன் உன் மாதாவை யழைத்துக்கொண்டு வந்து மெய்ப்பித்தாலும் நம்பமாட்டே னினி யிப்புராணத்தைக் கேட்கவுமாட் டே னெனச் சபையி லுள்ளவரு மப்படியே புகல,

வாசுதேவபாவா தானுஞ் சந்தேகங்கொண்டு தன் தாயைக்கேட்டு நிஜந் தெரிந்துகொள்ள வேண்டிய வெண் ணத்தால், புராணத்தை நிறுத்திச் சபையோரை நோக்கி, அடியேன் வருகிற பரியந்தம் யாரும் போகா தீர்கள். இதோ அரைக்கணத்தில் வருகிறேனென் றறை ந்து சபையை நீங்கித் தன் வீட்டைநோக்கிப் போகை யில் அச்சபையில் சாதுவேஷத்துடன் வந்து நாடோ றுங் கேட்டுக்கொண்டிருக்கும் துக்காராம் தனது பேர னைக் கூப்பிட்டுக்கொண்டே போய்த் துக்காராம் ரூபத் துடன் நின்று, அப்பா வாசுதேவா! நானே துக்காரா மென, அவர் நீர் துக்காராமாயின் என் தாயிடம் வாரு மெனத் துக்காராம் வாவென் றழைத்துக் கொண்டு போய்த் தன் புத்திரியின் நாமத்தைச் சொல்லிக் கூவ, தந்தையின் தொனியைக்கேட்ட அவ்வம்மணி திடுக் கென் றெழுந் தோடிவந்து, தந்தையி னடிகளிற் பணி ந்து, ஓ என் தந்தையே! நீர் வந்தது வெகு விந்தையே அ௦ வருஷங்களாக எங்கு மறைந்தீர் என பல விதங்க ளாகத் தோத்திரஞ் செய்ய,

துக்காராம் வந்த காரணத்தைப் புகன்று, பேரனுக் குற்ற சந்தேகத்தை நிவர்த்தி செய்து, அடா என் கண் மணியே! நான் மீட்டிக்கொண்டிருந்த இந்தத்தம்பூரைச் சபைக்குக் கொண்டுபோய், ஓ சபையோரே! துக்கா ராம் பொந்தியோடும் மேலுலகிற்சென்றது மெய்யாகின் அவர் கரத்தால் மீட்டிக்கொண்டிருந்த இந்த தம்பூரும் அந்தரத்திற் செல்லுமென்றுரைத்துக் ககனத்திலெறி உடனே நான் பிடித்துக்கொண்டு வானுலகிற் செல்கின் றேனென,

அதைக்கேட்ட வாசுதேவ பாவா சந்தோஷசித்த னாகச் சபையை யடைந்து இறைவனை நோக்கி, ஓ பாது ஷாவே! உமக்குற்ற சந்தேகத்தை இத்தம்பூரால் நீக்கு கிறேன் பாருமென்றுரைத்து, ஸ்ரீமந்நாராயணனைப் பல விதங்களாகத் துதித்து, ஓ என்னாண்டவனே! உமக் கத்தியந்த பக்தனான துக்காராம் பொந்தியோடும் வா னுலகிற் சென்றது சத்தியமானால், அவருடைய தம் பூரும் அந்தரத்திற் செல்லுமென் றறைந்து ஆகாயத்தி லெறிய, உடனே துக்காராம் அதைப் பிடித்துக்கொண்டு தம்பூரை மீட்டித் தாளத்தைக் கூட்டி ஜெய விட்டல் பாண்டுரங்க விட்டலெனப் பற்பல பாடல்களைப் பாடிக் கொண்டே அந்தரத்திற் சென்றதன்றிப் பக்த சரிதத் தை அன்புடன் ஓதுபவர்களும் கேட்பவர்களும் பவ சாகரத்தையும் துக்கசாகரத்தையும் கடந்து, சகல சுப மங்களமும் பிர்மானந்தமு மடைந்து மோக்ஷ வீட்டைப் பெறுவார்க ளென்றுரைத்து மறைந்தாராதலால்,

இதன் பெருமையை மதித்துரைக்கக் கூடுமோ இதைப் பக்தியுடன் பார்ப்போர்பால் யாதொரு துன்ப மும் நாடுமோ? நாடாது. ஸ்ரீமகா பாரதராமாயண பிர் மாண்ட புராணத்திலும், பெருத்த நூலான விதை

கலியுகாதி சளஙஉ-ம் வருஷத்தில் விரிஞ்சாவதாரரான நாபாஜி சித்தர் இந்துஸ்தானி பாஷையில் எ00 - சரித்திரங்களைச் செய்து பக்தசாரமெனப் பெயர் வைத்து உத்தவசித்தர் முதலானவர்களுக்குப் போதித்தார்.

அதுகேட்ட உத்தவசித்தர் எ00 சரித்திரங்களையும் சுருக்கமாகக் குவாலியர் பாஷையிற் செய்து பக்தமாலாவெனப் பெயர் வைத்தார். மைபதி பாவாஜியென்பவர் கலியுகாதி சஅசுஉ-ம் வருஷத்தில் ஒருவர்க்கொருவர் போதித்த ஞானவாக்கியங்களை முழுதஞ் சேர்க்காமல் சிலவற்றைச்சேர்த்து க0கூ சரித்திரங்களை மராஷ்ட பாஷையிற் செய்து பக்தவிஜயமெனப் பெயர் வைத்து மற்றைச் சரித்திரங்களுக்குச் சந்தவிஜயம் சந்தவிஜய லீலாமிர்தமெனப் பெயர்வைத்தார். தீபதேவ் என்பவர் ஞானவாக்கியங்களை மாத்திரஞ் சேர்த்து மராஷ்ட பாஷையிற் செய்து தீபரத்னகரமெனப் பெயர் வைத்தனர். இவைகளையெல்லாம் பார்வையிட்டு ஒன்றுக்கொன்று ஏறக்குறைவா யிருப்பவைகளைப் பெரியோர்கள்பாற் கேட்டுச் சரித்திரங்களிற் சற்றும் பிசகின்றி வரிசையாகக் கலியுக வருஷம் சகூசுசு, விக்கிரமாதித்த வருஷம் ககூஉஉ, கிறிஸ்து வருஷம் கஅசுச, சாலிவாகன வருஷம் களஅஎ, ஹிஜரி வருஷம் கஉஅ0, பசலிவருஷம் கஉஎரு, கொல்லமாண்டு வருஷம் கசச, சதுர்வேத சித்தாந்த சபா வருஷம் உச-ல் சிற்றூர் வேங்கடதாசரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு, சைதாபுரம் உமாபதி முதலியாரால் பிரசித்தஞ் செய்யப்பட்டது.

## அவையடக்கம்.

### விருத்தம்.

கசடரிலுங் காடனெனத் திரிந்துழலு மடியேனுங்
 கரங்கள் கூப்பி
நிசபதத்தை யளிக்கின்ற நித்தியஷண் முகப்பெருமா
 னெடியபாதம்
நசையுடனே பணிந்திந்த பக்தவிஜ யம்மடியே
 னவின்றேன் சொற்கள்
பிசகிடினும்பெற்றோர்க்குப்பிள்ளைசொலுங்குதலைமொழி
 பிரிய மாமால். (க)

தெரியாத தன்மயினன் முன்னோர்க ளுரைத்தபடி
 தமிழிற் செய்யுந்
தரமேது மறியாம லிருக்கையிலுஞ் செய்யுமெனைத்
 தபவி லாமற்
பெரியோர்க ளிகழ்ந்தாலும் பயனலா திழிவுண்டோ
 பிறவி மாற்றுந்
திரமாள வவுடதமாம் பெரியோர்க டிருவாயின்
 றிஞ்சொ ரூனே. (உ)

என்று பெரியோர்களின் திருவருட் கமலக்கழல்களைப் புகழ்ந்து மகிழ்ந்து பிரமா, விஷ்ணு ருத்திரன், ஆதிசத்தி, வியாசர், வான்மீகர், சுகர், உத்தவர், நாரதர், பிரகஸ்பதி, அருணன், அக்ரூரன், அனுமான் முதலானவர்களும் இவ்வுலகிலுள்ளோ ரீடேறும்பொருட்டு அவதாரஞ்செய்த சரித்திரங்கள் நிறைந்த பக்தவிஜயத்தைக் கல்வியில் வல்ல வித்துவான்கள் தமிழிற் செய்யுளாக வல்லது வாசகமாகச் செய்யல் வேண்டும். அக்கல்விக் கவிகளைக் கனவிலுமறியாக் கடையேன் தூர்க்குணங்கள் நிறைந்த மடைமையேன் தமிழிற்செய்ய வாரம்பித்தது எப்படி யிருக்கிறதெனில், வறுமையுள்ளோ னிரசவாதமும், யாசகனிராஜ்ஜீகமும் பொன்னாசையா லிலைவோன் சன்யாசமும், இகபோகங்களை யாசித்துப் பகவானை மேலுக்குப் பூசித்துப் பரமபதமடைய விரும்பின பாமரனும் புருஷனை வஞ்சித்துப் பரபுருஷனை நாடிய பாவை மதிதனின் மிகுந்த பதிவிரதத் தன்மையையும் இச்சித்ததுபோ லிருக்கின்றது. அன்றி, பஞ்சலட்சணங்களை யறிந்து இஷ்டதேவதையின் வரப்பிரசாதங்கள் பெற்ற கவிராஜர்களுக்கு முன் ஆசியக் கூத்தனாகிய அடியேனுரைக்கும் ஆசிய சொற்களி லனேகம் பழுதுக ளிருக்குமாயினு மாசியச் சொற்களைப் பலரும் ஆனந்தமாகக்கேட்டு நகைப்பதன்றி இன்னங்கேட்க விரும்புகிறதைப்போல ஆசியச் சொற்களாகிய விதனையும் விரும்புவார்களானாலும் தீனனுடைய ஈனச்சொற்கள் நகைக்கிடமா யிருப்பினும் பக்த சரித்திரங்களென்னும் ஆனந்தவெள்ள மிதைப்பார்ப்போர்மேற் பொங்கி அகமும் புறமும் நிறைந்து தங்கித் தனக்குள் ளாகிரிக்கொண்டு இதிலுள்ள சகல மாச்சரியமென விண்டு துச்சச்சொற்களை யெல்லாஞ் சொச்ச சொற்களாக காட்டும் குற்றம் பார்க்கப்புகினோ இதில் வரிக்குப் பல குற்றங்களிருப்பதற் கையமில்லை. ஏனெனின் 'முக்கண்ணுள்ள முதல்வன் பாடிய ஓர் பாவில் முக்குற்ற மெடுத்தவருமுண்டு' 'குற்றம்பார்க்கில் சுற்றமில்லை—சுற்றம் பார்க்கிற் குற்றமில்லை' அன்றித் தாய் -தந்தையர் தங்கள் மதலைகள்பேசுங் குதலைச் சொற்களிலோரற்புத மில்லாதிருந்தும் சொற்பமா வெண்ணாமற் கற்கண்டையும் விற்பனமுமுள்ளதாகப் பாவித்து அன்பாயின்பாய்க்கேட் டுல்லாசமடைந் துடம்பு பூரித்தானந்த வாரியில் நிதானந்தப்பித்தானிறந்திருப்பதைப்போலமுத்துக்களையொத்த பற்பலவற்புதச்சொற்களை வித்தகமாகச் சேர்க்கும் உத்தம கர்த்தவ்ய சர்ச்சனர்களாகிய எந்தைகளே! உங்கள் சொந்த மைந்தனுந் தாஸானு தாஸனுமாகிய வேங்கடதா

சன் தங்கடிருத்தாட் டாமரைகளைச் சிரமேற்சூட்டித், தூபதீபங்களைக்காட்டிச் சகல சந்தேகங்களையும் வாட்டி, நிர்பயனெனப்பாராட்டித் தடைவருமென்பதைபோட்டி, அடியாரடிகளை மனதில்நிலைநாட்டிச் சடாட்சரத்தை நாக்கிற்றீட்டிப் பக்த விஜயத்தைச் சக்தியில்லா மோசகன் வாசகமாகச் செய்யுங் கொடியேனாகிய வடியேன் புன்மொழிகளை நன்மொழிகளாக்வங்கிகரித்திவனறிவுக்கெட்டின திவ்வளவென்று போசனையோடு பல ஆசிகள்கூறிப் பழுதிலார் சரித்திரங்களை முழுதும் பார்த்தால் அன்பாக முன்புதோற்றித்தென்பனும் மலைமீதிலேற்றி மனோவிகாரங்களை விலக்கி வினோதம் பல பல துலக்கிப் பரபிர்ம விலாசத்தைக் காட்டிப் பரிபூரணானந்தந்தை நிலைநாட்டி ஆனந்த பாஷ்பங்களைப்பெருக்கி அன்பிலா நெஞ்சினையுருக்கி ஆனந்தசாகரம் புரண்டு அளவிலா வாசைகள் திரண்டு அப்புறம் பேரவாக்குறைத்து ஆனந்த மெய்பொழுதும் நிறைந்து திக்கு தேசாதிகளிறந்து திருக்ஸ்வரூபத்தில் மறைந்து ஆமைபோலடங்கி ஊமைபோலொடுங்கி ஒரு விகாரங்களுமின்றி பெருமை பாராட்டலுங்குன்றிச் சங்கல்ப விகல்பமுங் கெட்டு அங்கமேலாசையும்விட்டுக் கேவல கைவல்ய பிரமானந்த சொரூப சாக்ஷாத்கார சுயம்பிரகாச சபமங்கள சின்மயதேஜோமய சித்விலாச சித்களமான பரப்பிரமத்திற் சொக்கியிருப்பாம்.

---

## விஷ்ணுபத்தர் வாக்கியம்.

### விருத்தம்.

நின்றவொன்றை யுணர்ந்தேனுக்
கதனுணோர்மை யதுவிதுவென்
றொன்றுமொருவர்க் குணரலாகா
துணர்ந்துமேலுங் காண்பதரிது
சென்று சென்று பரம்பரமா
யாதுமின்றித் தேய்ந்தற்று
நன்று தீதென் றறிவரிதாய்
நன்றாய் ஞானங் கடந்ததே.
நன்றாய் ஞானங் கடந்துபோய்
நல்லிந்திரிய மெல்லாமீ
தொன்றாய்க் கிடந்த வருபெரும்பா
மூலப்பிலதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள்
செற்றுக்களைந்து பசையற்றால்
அன்றே யப்போ தேவீடு
யதுவேவீடு வீடாமே.

## சிவபத்தர் வாக்கியம்.

### விருத்தம்.

அஞ்சலென்ற கரதலமுங் கணபணகங் கங்கணமும்
அரைக்கிசைத்த புலியிடையு மம்புலிச் செஞ்சடையும்
நஞ்சுண்ட மணிமிடறு முன்னூலு மார்பும்
நலந்திகழ் வெண்ணீற் றொளிவு மறிமானு மழுவும்
கஞ்சமலர்ச் சேவடியுங் கருணைபொழி முகமுங்
காமனையன் றெரித்ததிருக் கண்களொரு மூன்றும்
பஞ்சடியிற் றிடைமடந்தை யொப்பனைபா கனுமாப்
பால்வண்ண னுளத்திருக்கப் பயமுண்டோவெமக்கே
என்றுரைத்த

---

## பதிக்கவர் சதியுரைத்தவாக்கியம்.

### விருத்தம்.

ஆக்கையெனும் புழுக்குரம்பை யனேகதனையாய்ப் பொ
அருளொளியைப் பராபரத்துக்கப்புறமாமறிவை[ருளை
நீக்கமற மயிர்முனைக்கு மிடமறநின் றிலங்கும்
நிறைந்தநின்ற பெருவெளியைநினைவிலெழுஞ்சுடரை
பாக்கியங்கள் செய்தனந்தர் தவக்குறைகண் முடிக்கும்
பழவடியார்க் கருளுதவும் பருந்துணர் கற்பகத்தை
வாக்குமன விகற்பத்துக் களவுபடாவொன்றை
மாசற்ற பெருவெளியை மனவெளியி லடைப்பாம்

குருநாதன் திருவடி-அருள்போதம் தருமுடி
பாயிரம் முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்தோத்திரம்.

ஓம் பரப்பிர்மணேநம:—கணேசாயநம:—கார்த்திகேயநம:—சிவாயநம:—விஷ்ணுவேநம:

பார்க்கவியேநம:—கௌரியேநம:—பாரதியேநம:—பிர்மதேவாயநம:—நாரதாயநம

தக்ஷிணாமூர்த்தியேநம:—தத்தாத்ரேயயோகீஸ்வராயநம —ஸ்ரீமத்பரமஹம்ஸ

பரிவ்ராஜ்காசார்ய ஸ்ரீமத்சங்கராசார்ய பதாம்புஜமேநம:—அப்தலா

சாயப் திருவடிகளேநம:—அல்லிமீயாசரணங்களேநம:

மாரிமுத்துப்பிரமயோகீஸ்வராநம:

குருவேதுணை—குரு வாழ்க.

சுபம். சுபம்.

உ

கடவுள் துணை.

## பண்டரபுரத்தின் வரலாறு.

ஸ்ரீமந்நாராயணருடைய பிரதானகுணம்போலவும், லம்போதரனணியு மம்பரம் போலவும், சுப்ரமண்யர் திருநாமங்களிலோர் நாமார்த்தம் போலவும், பரமசிவனார் மேனியைப்போலவும், சிதேவியின்ருய்க்குள்ளநிறம் போலவும், உமா மயேசுவரி லலாடத்திலிடும் பொருள் போலவும், நாமகள் வீற்றிருக்கு மாசனம் போலவும், அஷ்டாட்சரன் வாகனம்போலவும், கோதுக்குள்ளாய் வாதஞ்செய்வோர் மனவாதையுடனாதியூதி வேதையுற்றினி போதுமென்றோதும்படியாகச்செய்யும்சூதம்போலவும், பிரணவாக்ஷரத்திலுள்ள திரியாக்ஷரங்களை மாறி இலக்ஷமுருவேற்று இராகுவுக்குச் சசியுணவாயாதி வருணர் ஸ்நானஞ்செய்துக் கிருபைகூரத் தமக்குத்தப்பிப் புறம் புசிதலுக்குமுன் 'மூலாக்ஷரத்தைச்சித்தி செய்துக் கொள்வோரா லூறுசெய்யப்பட்ட பேதியின் வெண்டாதுவைப்போலவும்,' விளக்கமுற்ற அபரங்கள் சுப்பிரமத்திலாரோபமாய்த்திரிகுணங்களுக்கு தாயாகியமாயையில் முதல் முதலுற்பத்தியாய் ஏகருணமாய் எங்குமிருப்பதாய் எங்குமில்லாததாய் சங்கையறப்பார்ப்போர் முன் தங்கியிருந்தா அங்கமில்லா மங்குலிற்றுவி சடாதரன் முடியி லொளித்துக்கொண்டே சோமுகாசுரனும் திதி முதற் சுதனும்பதுங்கவும், மதுசைடகருளாவவும், ஆதிசேஷன் தாங்கவும், இடங்கொடுத்து வாயின்றிதுய ஓயாமல் அஷ்டதிக்குப் பாலகருடனுரக்க மின்றி ஓசையுடன் பேசிக்கொண்டும், ஒருவனுக் கைக்யமாயிரா வேசைக்கிணையாகியும், கற்பி லொப்புவமையில்லாப் பஞ்சகுணமுள்ள வஞ்சியைத்தரங்கமென்னுங் கரங்களாற் றுவிப் பிடிக்க நீட்டி நீட்டி அகப்படாமல் வாட்ட மடைந்து சதுர்க்குண முடனெப்போதும் பிரணவாக்ஷரத்தையுச் சரித்துக்கொண்டிருக்கும் முப்பூவிலொன்றான உப்பளிக்கும் அப்புப்பெண்ணைக் கூடிக் கர்பமடைந்து பின்னிடைந்து திருமால் வண்ணம்போலவும், சிவனார் குணம் போலவும், பாமரன் மனம் போலவும், அளகனே வாக்கொண்ட புளகக்குளகன் றுயினளகம் போலவும், நிதங்கொண்டு மீண்டு கற்புள்ளபதிவிரதையும், ஆசாரமுள்ள பிரமசாரியையும், தருமத்திற் சிறந்த கிரகஸ்தனையும், தவத்திற்செழித்த வான பிரஸ்தனையும், ஏகீக பாவமுள்ள சந்நியாசியையும், தன்னை மறந்த ஆருடக்ஞானியையும், தலைவனிற் கலந்த அவதூதனையும் நீதியால் நிறைந்த வாகுகனையும், ஜீவகாருண்ய விரதத்தையும், அரியர பக்தரையும், அறுபத்து நான்கு கலைகள் கற்றுமகங்கார மற்றிருக்கும் சித்தரையும், அகமமதை பற்றருக்குஞ் சுத்தரையும், களிக்கடலிற்படிந்திருக்கும் மூத்தரையும் திரிகுண சம்பையென்னும் அம்பகத்தைத்திறந்துபார்த்துக்கொண்டே பறந்து உபயகுணன் மோதுவதால் வேதையுற்று அச்சத்தா லிதலுற்றுத் தங்களுக்கு பின்கல நேரிட்டு இடிபட்டுப் பெருங்கூச்சலிட்டுத் தட்டுகெட்டுத் தடுமாறிக்கொண்டே பல

திசைகளிலு மலைந்து குலைந்து கிருஷ்ணபகவானுடன் பிணங்குச் சந்திரதிலகம் காகதுண்டம்-கேசரம் பாடலம்-தருமோத்பலம் திலகம்-சம்பகம் நாகம்-நாரங்கம்-நாகரி-மாலதி-மௌவல்-முல்லை - குல்லைமரவம் கவீரம்-தமாகம் அசங்கம் முண்டகம் வலம்புரி புற்பதி பூக்கம்-கோவலம் பநசம் ஆம்பிரம் நாரிகேளாம் அரம்பைகமழை வடம் காஞ்சநம் காகோரி குஞ்சராசநம் மதலை சதாபலம் மாளுங்கம் கபித்தம் குந்தம் நீபம் பூரணி அஞ்சி முதலிய செடிகொடி தருக்கள் பெருக்கமாய் நெருக்குண்டிருக்கும் திண்டிரவனத்திற் றங்கியிருக்கும் ருக்மணியைக்கண்டு ஆனந்தங்கொண்டு இதுவே நாம் நாடிவந்த ஸ்தானமெனத் துணிந்து சமுசாரிகளின் வாட்டம் நீங்க தவசிகளின் கோஷ்டமோங்க ஆசைகொண்டு யாசகஞ் செய்வோர்க் கறமோருருவா யவதரித்தோனளிக்குந் தானம்போலவும், மோசஞ்செய்யவும் வேசையர் பாசத்துக் குட்பட்டவன் நேசத்துடனந்தாசிகட்கு விசுவாசத்துடன் மாசை யீவதைப்போலவும் மொழிந்து ருக்மணியின் பிணக்கைத் தவிர்க்க உருக்கமாய் வந்து.

சந்திரபாகா நதிக்கரையில் தந்தைதாய்க்குச் சேவைசெய்யும் பண்டரிகன் சிரத்தாபாத்தியை நோக்கி ருக்மணிபாற் செல்லுமவாவை நீக்கிப் பீமநதியின் தீரத்தில் நிற்கும் பகவானைத்தேடிப் பாதபரிசத்தை நாடித் தங்காபலோடிச் சந்திரபாகையைக் கூடிப் பகவானடிகளைத் தழுவி அவற்றைக் கழுவிக் களிப்பால் வழுவி மெதுவாய் நழுவிப்போகும் பகவானுக்கும் சந்திரபாகா நதிக்கும், ருக்மணியிருக்கும் திண்டிரவனத்துக்கும், இடையிலுற்ற பண்டர புரத்தின் மகிமையே மகிமை அன்னப்பிரமம் ஜெகநாதமென்றும், பூரணப்பிரமம் திருப்பதியென்றும் தாரகப்பிரமம் சிவராஜ பென்றும், நாதப்பிரமம் பண்டர புரமென்றும், சாஸ்திரங்கள் முறை யிடுவதால் சமஸ்த சுபங்களாற் பூர்த்தியடைந்திருப்பது பண்டரபுரமே யெனக் காட்டியது.

புண்டரிபக்தன் தன் அண்டையில் வந்த விண்டுவைப் பண்டரபுரத்தி லிருக்கும் தொண்டர்களை யண்டித் தொண்டுசெய் தன்னமுண்டு உயங்கேனென்ன விண்டு ஆனந்தங்கொண்டு, அக்கண்டம் கடக்காமலிருக்க வரம் வாங்கிக் கொண்டபடியால் பண்டரபுரத்தின் மாட்சிமைக் கெதுசாட்சியாகுமென் றுரைக்கலாம் அன்றி.

பண்டரபுரத்தின் சமீபத்தில் சதவருஷங்களுக்கு முன் களிப்பெய்தி ஒரு ஜாமம் பொன்மாரி பொழிந்திருக்க அதற்கெதை ஒப்பெடுத்துரைக் லாம். இவ்வளவு அலங்காரமுள்ள பண்டரபுரத்தில் கோபுரங்களும் மாமரங்களும், கொடிகளும், பிடிகளும், மடங்களும், தடங்களும், ஓடைகளும், மேடைகளும், நீதிகளும், வீதிகளும், நதிகளும், யதிகளும், பெருஞ்சோலைகளும், அருஞ்சாலைகளும், சாதுக்கள் கூட்டங்களும், சங்கீர்த்தன கோஷ்டங்களும், வரையுங் குறையுமின்றி யிருக்குமாயின் தாழ்வொன்றிருப்ப தென்றுரைப்பதற்குக் கூடுமோ? மாந்தரின் மறுமையைக் கழித்து இப்பூவுலகிற் செழித்து இருப்பது பண்டரபுரமேயெனப் பிரத்தியட்சமாகப் பொன்மாரியைப் பொழிந்து மேகங்களே காட்டியிருக்க மதபேதமாயினும் அநுமானங்கொள்ள இடமுண்டோ? இல்லை மேலும் அப்பண்டரி புரத்தில் வசிக்கும் குடிகளின் பக்தியைக் கிஞ்சித்து என்னறிவுக்கெட்டிய வரையில் எடுத்தோதுகின்றேன். அதெப்படியெனில், எட்டுவயது குழந்தைகள் முதல் ஆணும் பெண்ணுமான பெரியோர்களும் அதிக காலையிலெழுந்து சந்திரபாகா நதியை யடுத்து ஸ்நான அநுட்டானங்களை முடித்து பகவந்நாமங்களைப் பலவாறுபடித்து ஆங்காங்கு தன்னைமறந்து நடித்து சன்னதியை யடுத்து பாண்டுரங்கனை சேவித்து மெத்த அன்புசெய்து ஆலிங்கனாதி வினயங்களால் இன்பமெய்து பூர்வஜென்ம வினைகளைக் கொய்து சதாகாலமும் இடைவிடாது பஜனைசெய்து ஆனந்தவாரியில் முழுகி நாளைப்போக்கிக் கொண்டிருப்பார்கள். இது நிற்க வியாபாரிகள் பக்திசெய்யும் விதமெப்படி யெனில் யாதாமொருவஸ்து வேண்டி வருமவர்கள் பணத்தைக் கொடுக்கும்போது விட்டல விட்டல வென்று பகவந் நாமத்தை நவின்றுகொண்டே பணத்தைக் கொடுப்பார்கள் வியாபாரியும் அப்பணத்தைப் பெற்றுக் கொள்ளும்போது விட்டல விட்டல வென்று சொல்லிக்கொண்டே பெற்றுக்கொள்ளுவார்கள் ஆகையால் அப்பண்டரி புரத்தை பகவந்நாம பஜாரென்றே சொல்லத்தகும் அப்படிப்பட்ட பண்டரி புரத்தில் பகவான் சன்னிதி செய்துக்கொண்டு இருப்பதற்குக் காரணம் யாதெனில் புண்டரீகபக்தனிமித்தியம் வைகுந்தமா நகரத்தை விட்டுவந்து புண்டரீகனுக்குக் கொடுத்த வரத்தின் பொருட்டு செங்கல்லின்மீது நின்று இரண்டு கரங்களையும் இடுப்பின்மீது வைத்துக்கொண்டு ராதா ருக்குமணி சமேதராகிய பக்தர்கள் இஷ்டார்த்தங்களைக் கொடுத்து ரட்சித்துக் கொண்டிருக்கின்றார் பாண்டுரங்க நாதனிடம் வரம் பெற்றுக்கொண்ட புண்டரீக னென்பவர் யாவர் அவர் பகவானை பக்திசெய்த விதமெப்படி அந்த

விவரத்தைக் கேழ்க்கவேணு மென்றால் அப்புண்டரீக பக்தன் வரலாறு எப்படியெனில்,

---

## புண்டரீக பக்தன் வரலாறு.

சந்திரபாகா நதிக்கும் திண்டிர வனத்துக்கும் நடுவில் பண்டரியென்கிற ஓர் தலமுண்டு. அதில் புண்டரீக பக்தன் என்னும் ஓர் புண்ணியசீலன் பரமாத்மாக்களில் முதல்வனாகியும் பிரம குலத்திற் பிறந்தவனாகியும், தாய் தந்தையர்க்கு வணங்கி நடப்பவனாகியும், சகல சாஸ்திர புராணங்களில் வல்லவனாகியு மிருந்தமையால் தாய் தந்தையர்கள் சந்தோஷித்துப் புதல்வனுக்கு மணம்புரிவிக்க வெண்ணங்கொண்டு தங்கள் மரபில் ஓர் கன்னிகையைப் பேசி மணஞ் செய்வித்து அன்பாய் இன்பமாய்ப் பாதுகாத்துக்கொண்டு வருகையில் சிலநாள் கடந்தபின் கலியாணப்பெண் தன் கணவனாகிய புண்டரீகனை நோக்கி, ஓ சுவாமி! தங்கள் தாய் தந்தையர்கள் என்னேரமும் என்மீது ஏதோ ஒரு குற்றத்தைச் சாட்டி வைத்துக் கொண்டிருப்பது மன்றிப் பார்த்துப்பார்த்து வயிறெரிகின்றார்கள். ஆகையால் இன்றுமுதல் எனக்கவர்களுடன் ஒரு மித்திருப்பதற்குச் சம்மதியில்லை அவர்களிருவரையும் வேறெங்கேயாகிலுங் குடியேற்றினால் நானும் முடன் கூடி வாழ்வேன் அப்படிச்செய்யாவிடில் நானென் தாய்விட்டைச் சேர்வேனென புண்டரீகபக்தன் தனக்கு மனையாள் மீதிருக்கும் அதிக மோகத்தினால் உடனே தாய் தந்தையர்களை யடித்து வேறகத்திற் குடியேற்றிச் சவரட்சணை செய்துக்கொண்டு மிருப்பவனாகியும். பகவானை யொருநாளும் நினையாதவனாகியும், மனைவியைப் புகழ்பவனாகியும், மாதா பிதாக்களை யிகழ்பவனாகியும் மனையாள்மொழி மகாவாக்கிய மென்பவனாகியும் மாதாபிதாக்கள் வார்த்தை அயோக்கிய மென்பவனாகியும், ஒருபோதுந் தர்மஞ் செய்யாதவனாகியும், ஒருதரமாகிலும் பகவான் திருநாமத்தை உச்சரிக்காதவனாகியும், சாதுக்களைக் கண்டால் தூஷிப்பவனாகியும் தையலரைக் கண்டால் பூசிப்பவனாகியும். வேசையர் வலையிற் சிக்கினவனாகியும், மிகவும் மோகத்திற் சொக்கினவனாகியும், ஈவதை விலக்குபவனாகியும், எளியோரை யெதிர்ப்பவனாகியும், கோள் சொல்வதில் சிரேஷ்டனாகியும், குலத்திலும் சிரேஷ்டனாகியு மிருப்பவன்.

முன்சென்மத்திற் செய்திருந்ததபோபலத்தாலோ? இவன் தந்தை தாய் செய்யும் மாதவத்தாலோ? பிரஜைகளின் பலவந்தத்தாலோ? பண்டரியில் விண்டு வானவர் வந்திருக்கவேண்டுங் காரணத்தாலோ? மற்றெவ்வகைப் புண்ணியத்தாலோ? ஓர் புராணிகர் காசி காண்டத்தை வாசிப்பதைக் கேட்க விசுவாசத்துடனவ்வூரிலுள்ளோ ரனைவரும் போகிறதைக் குறித்து தானும் போக வெண்ணங்கொண்ட புண்டரீக னில்லாலொர் தினந் தன் மணாளனைநோக்கி, ஓ ஸ்வாமி! பகீரதியின் மகத்துவத்தையும் வாரணாசியின் மேன்மையையும் கேட்க விருப்பங்கொண்டே னாதலாற் றேவரீர் கருணைகூர்ந்தின்றைக்குக் காசிகாண்டத்தைப் பாராயணஞ் செய்யுமிடத்தி லென்னை யழைத்துக்கொண்டு போக வேண்டுமெனப் பிரார்த்தனை செய்ய.

புண்டரீகன் அடி பேதாய், அறிவில்லாக் கோதாய், வீட்டிற் பற்பல வேலைகளிருக்க அதை விடுத்துப்போய்ப் புராணத்தைக் கேட்டுவருதல் அன்ன மகப்படுமா? சொர்ன மகப்படுமா? கர்மிகள் புண்ணியக் கதையைக் கேட்பதாற் பிரயோசனமேதுண்டு வெனனின், ஒன்றைக் கேட்டபின னவ்வழியில் நிற்கவேண்டும் சிரவணஞ்செய்தம்மார்க்கத்தில் நெஞ்சகத்தை நிலைநிறுத்தாதவனுக்கு நரகமே பிராப்தியாகும் புராணத்தை ஓதும் ஆதிவருணனே ஓதினபடி சாதனஞ்செய்யக் கூடாமற் றடுமாற்றலத்துடனிருக்க நம்மாற்கூடுமா? ஓதினபடி சாதனஞ் செய்யாப் பேதையரிலும் அதிபேதை யாருமில்லை யென்னும் பழமொழி மெய்யல்லவா? காசிகண்டத்தி லென்னென்ன வைராக்கியங் னிசைத்திருக்கின்றனவோ அரையன் பறைசாற்றின வண்ணம் நடக்கா மாந்தர்க் காக்கினை கிடைப்பதுபோல் பகவானுடைய பறையென்னும் புராணிகளைக் கேட்டவண்ணமே நடக்கவேண்டும் இன்றேல் குற்றத்துக் காளாக்கிக் கடவுளுடைய ஆக்கினைக்குட்பட வேண்டும் ஆதலால் நான் வரமாட்டேனென்று மறுக்க.

அத்தெரிவை, ஓ ஸ்வாமி! பரிசவேதியினால் அயமிரணியமாமன்றி மண்ணுங்கல்லும் மழையாகாத்து போலப் புராணங் கேட்கும் பலரில் ஒருவனே அதினர்த்தத்தைக் கிரகித்து நல்வழியில் நடந்து தீயமார்க்கத்துக் கடைந்து மோக்ஷார்த்தத்தை யடைவான் மற்றவர்களிற் சிலர் நாடோறுங் கேட்கக் கேட்கத் துர்க்குணங்கள் நீங்கிச் சற்குணத்திற் பிரவேசிப்பார்கள் சிலர் பாபகர்மங்கள் செய்யக் கிஞ்சித் தச்சமுற்றுச் செய்து நாட் செல்லச் செல்ல மேற்குணத்திற் பிரவேசிப்பார்கள். சிலர் பாபங்களை முன்போற் செய்தாலும் சிரவணஞ்செய்யும் வே

ளேமாத்திரம் பிரயோசனப்பட்டு மறுஜன்மத்தில் நற்குணமடைவர். இப்படியிருக்க நீர் கேட்டபடி நடக்கச் சக்தியுள்ளவனே புராண சிரவணஞ் செய்யவேண்டுமென் றுரைப்பது விசித்திரமே அசிரத்தையுடன் புராணங்கேட்டாலும் புண்ணிய லோகங் கிடைக்குமென்று புராணங்கள் முறையிடுகின்றன எனக்குவிவாகமாகுமுன் நாடோறும் புராணங்கேட்பதிலேயே நாள்கழித்தேன் விவாகமானபின் பதியே தெய்வமாதலால் உமக்குச் செய்யும் பணிவிடையே சகல நோன்புகளுமெனப் புராணங் கேட்பதையும் விடுத்தேன் எனக்கு உம்மிஷ்டப்படியே நடக்கும் அடக்க ஒடுக்கமே மோக்ஷமளிக்கு மார்க்கமாகும் உமக்கே சாஸ்திரங்கள் கேட்கவும் அதின் வழியால் நடக்கவும் சிரத்தை பூரணமாயிருக்கவேண்டும் அன்றி நீர் புராணங்கேட்க வந்தாலொழிய நான்போக மாட்டேன் காரணப் பதியைப் பிரிந்துபோய்ப் பாவை புராணங்கேட்பது பகவானைப் புகழ்ந்து பரம சிவனை இகழ்ந்ததை யொக்குமென் றுரைத்துக் காதலன் மனதைக் கரைத்துப் பலவந்தமாயழைத்துக் கொண்டுபோயோர்சார்பிலிருந்துகேட்கவிருப்பங்கொண்டிருக்கையில்

புராணிகர் சகரரைக்குறித்துப் பகீரதன் பரம சிவனைநோக்கித் தவஞ் செய்ததும் பகீரதியைக்கொண்டு வந்ததும் பஸ்பமாய்ப்போன சகரர்மேல் கங்கை பிரவாகித்ததும் சாத்வியின் பரிசத்தால் சகரர் புண்ணிய லோக மடைந்ததும் கோஹத்தி சிசுவத்தி பிர்மத்தி ஸ்திரீஹத்தி குருஹத்திமுதலானவை செய்யும் கொடும் பாவிகளானாலும், மந்தாகினியில் ஸ்நானஞ்செய்தால் பாவனராய்ப்போவார்களென்றும், அப்படி அக்கங்கை பகீரதனுக்கு வரமளித்திருக்கிறாளென்றும். வாரணசியில் மரணமடைந்தவர் வலதுசெவியில் ஸ்ரீ விஸ்வநாதர் தாரகமந்திரத்தை உபதேசஞ் செய்கிறாரென்றும், அதனால் மோட்சமடைகிறார்களென்றும், எப்பொழுதும் சுரநதியின்தீரத்தில் முனீஸ்வரர்கள் வாசஞ் செய்கிறார்களென்றும், அவர்களின் பாதங்களைப்பரிசுத்த புண்ணியவான்க ளனேகரிருக்கிறார்க ளென்றும், பிர்மாதி தேவதைகளெல்லாம் மாறுரூபங்கொண்டு தவஞ் செய்கிறார்களென்றும், விரதத்திற் சிறந்தோர் களுக்கு இப்போதுந்தரிசனந் தருகிறார்களென்றும்சொல்லக்கேட்ட,

புண்டரீகபக்தன் உடனே எழுந்து புராணிகரைப் பணிந்து காசியாத்திரைக்குப் பிரயணமாய்ப் போகையில் அவர் சதி பதியை வணங்கி அடியானை மழைத்துக்கொண் டேகுமென்று கூடவேதொடர்ந்து போகையில் அதுதெரிந்த புண்டரீக பக்தனையீன்ற தாய் தந்தை வழிக்குத் தேவையான சாமக்கிரிகைகளேந்திக் கொண்டு தனயனுடன் வாராணசிக்குப் பிரயாணப்பட்டு மார்க்கத்தில் தங்குமிடங்களில் மகனும் மருகியும் அலுப்புற்றிருந்தாலும் வயிரமேறிய மரம்போற்றுங்களைபாகய முதலானவைகள் செய்தூட்ட உண்ணும் குமாரனும் அவன் மனைவியும் விருந்தர்கள் பளுவேந்திக் கொண்டு வருகிறதையும் அன்னபாகங்க ளமைத்துத் தருகிறதையும் கவனத்திற் கொள்ளாமல் வாரணசிக்குப் போக வேண்டுமென்கிற எண்ணத்தையே பெரிதெனமதித்துக் காசி விசுவநாதரையும் விசாலாட்சி யம்மையையும் வரநதியையும் துதித்துக்கொண்டு போகையில்.

மனைவி நடக்கச் சக்தியற்றதாற்றோள் மேலேந்திக் கொண்டு செல்லும்போதும் மாதா பிதாக்களுடைய வருத்தத்தை மனதிற்றரிக்காமல் மறந்து பரந்துகாசியை யடைந்து குக்குடரிஷி வாசஸ்தானமாகிய அசியென்னு மிடத்திலிறங்கி குக்குட மகாரிஷியின் மகிமையை பலருஞ்சொல்லக்கேள்விப்பட்டு அவரைக்காணுதன் கவாக் கொண்டு ரிஷியிருக்கும் அகத்திற்சென்று அவரைக் காணாமல் அங்கு பணிசெய்துக்கொண்டிருக்கும் கங்கா யமுனா சரஸ்வதி நர்மதை கௌதமியெனும் ஐவரையும் பார்த்துக் கரங்களைச்சேர்த்து அவர்களுடைய அழகு சுந்தரத்தையும், ஆபரணங்கள் பூண்டிருக்கும் அலங்காரத்தையும், விசித்திரமான ஆடைகளணிந்துக்கொண்டிருக்குஞ் சிங்காரத்தையும்கண்டு ஆனந்தங்கொண்டு, ! ஓ ஓ இவர்கள் நரலோக ஸ்திரீகளா? சுரலோகஸ்திரீகளா? ஆ ஆ அலிகை - துரோபதை - சீதை - தாரை - மண்டோதரி யென்னும் பஞ்ச கன்னிகைகளாக விருக்க வேண்டும் இன்றேல், மூதேவி - சீதேவி - பவானி - பகீரதி பாரதியா யிருக்கவேண்டும் இன்றேல், பஞ்சகங்கைகளாயிருக்க வேண்டும். இன்றேல் அநசூயை - ரேணுகை - பிருந்தை - இந்திராணி - அருந்ததியாயிருக்க வேண்டுமெனத் துதித்து, வேர்வைகள் சிந்த பலகாரபாகங்களை அதிகபரபரப்போடுஞ் செய்கிறதை குறித்து வாட்டமடைந்து மிகவுமிடைந்து, ஓ புண்ணியபதிகளே நீங்கள் தேவலோக கன்னிகைகளைப்போலவும் இராஜஸ்திரீகளைப் போலவுந் தோற்றப்படுகிறீர்களே இப்பணிகள் செய்யப் பாங்கிகளில்லாமற் போனார்களோ? உங்கள் கைகள்நோகஇனிபாகங்களியார்க்காகசெய்கிறீர்களோ? உங்களிருப்பிடமேதோ? நாமகரணமேதோ? அடியேனுக்

குறைப்பதன்றி மெய்வான கரங்கள் நோக மிருதுவான பாதங்கள் வருந்தச் சிங்காரமான அங்கங்குலுங்கச் செய்யும் இம்மடப்பள்ளி வேலையைச் செய்கிறதை நிறுத்துங்கள் அடியேன் சங்கையைத் திருத்துங்கள், உங்களால் செய்யப்பட்ட பாகங்கள் நானேசெய்வேன் மறுப்பீரேல் என் மனைவியைக் கொண்டியற்றி வைப்பேன் ஐயோ! தூமத்தாற் சோமத்துக்கிணையான உங்கள் வதனங்கள் கருகிப்போகின்றதே? அனலாங்கம் வேகின்றதே? என்றுரைக்கும்,

புண்டரீக பக்தனைபார்த்த பஞ்சகங்கைகள் முனீஸ்வரர்களுக்குங் காணுதற்கரிதான நாம் மாதா பிதாவை வாட்டப்படுத்தின கோட்டனுக்கு புலப்பட்ட காரணமேது? இதுயார் செய்தசூது? என்றெரிந்து கோபம் விரிந்து அடா துன்மார்க்கா! அறிவிலா மூர்க்கா! பஞ்சமாபாதகா! எமகாதகா! சீக்கிரம் இவ்விடம் விட்டுப் போவென் றதட்டும்போது புண்டரீகனன்புடன் பணிந்து, ஓ புனிதவதிகளே! உங்களுடைய நாமதேயத்தையும் யார்க்காக இப்பாகம் செய்கிறீர்களோ? அதையும் திருவாய் மலர்ந்தருளி வீராயின் இக்கணம் இவ்விடம் விட்டுப் போகிறேனெனச் சாற்றப் பஞ்சகங்கைகள் தங்கள் நாமத்தைப்புகன்று குக்குடமகாரிஷிக்கே இப்பாகங்கள் செய்கிறோ மென்றறைந்து இனி யிருப்பிடத்திற்குப் போவென்றுரைக்கப் புண்டரீகபக்தன் நீங்கள் தேவலோக ஸ்திரிகளோ? உண்மையைச் சொல்லுங்களென பஞ்சகங்கைகள் கோபித்து நீ அமுனம் வினவின இரண்டிசங்கைக் குத்தரஞ் சொல்லிவிட்டோ மாகலாலினி பன்னிப்பேசினல் சென்னியைப் பிடித்து இத்திரிபதகையிற் றள்ளிவிடுவோம் போபோவென, புண்டரீகன், ஓ ரூபவதிகளே! பண்டரியிலிருந்து பிரயாணப்பட்டு நெடுநாள் நடந்து அனேக தேசங்கள் கடந்து இக்காசியை யடைந்து விரநதியில் ஸ்நானஞ்செய்யவே யாம் உங்கள் கங்கைகளாளென்னவங் கத்தைத் தீண்டி இக்கங்கையிற் றள்ளினல் யான் செய்த பஞ்சபாதகங்கள் உங்கள் சொந்தமாகும், எனக்குப் பரலோகஞ் சொந்தமாகும் பாகிரதி யிறந்தார் பவித்திர மாவதற்கோர் தடையுமுண்டோ? கங்கையில்ஸ்நானஞ் செய்யாமல் தரிசன பலத்தாலேயே பஞ்சகன்னிகைகட் கிணையான உங்கள் தரிசனம் பெற்றேன் பாகிரதியில் மடிந்தாலெனக்கென்ன பேறு கிடைக்குமோ யானறிகிலேனெனப்பணிந்து பலகாரங்கள் செய்வதற்காகத் தன் நாயகியை விளித்தார்.

அதற்குப் பஞ்சகங்கைகள், அடா மடையா கடையா! ஒருவரறிந்தா லுலக மறியுமெனும் பழமொழிப்படிச்செய்ய யோசித்தாய், இனி இவ்விட மெங்களை வராமற்செய்யத்தானு யூசித்தாய், உன் மனைவியை இக்கழைக்கவே வேண்டாம், நீயுமிங்கு நிற்கவே வேண்டாமென் றுரைத்துக்கொண்டே அதிதுரிதமாய்ப் பாகங்கள் செய்யும்போது புண்டரீகன் கஷ்டத்தைக் காற்றமாட்டாமல் பின்னுந் தன் மனைவியை விளித்தார்.

பஞ்சகங்கைகள், அடா மூடா! எங்களைக்கண்டு கொண்ட திருடா! உன் மனைவி இங்குவந்தால் நாங்களிவ்விடம் விட்டிப்போதே நீங்குவோம், குக்குடரிஷிக்குப் பக்குவபாக மில்லாமையாற் கோபிப்பார், உன்னைச் சாபிப்பாரெனப் புண்டரீகன் குக்குடரிஷி எங்கேபோயிருக்கிறாரெனப் பஞ்சகங்கைகள் தாய் தந்தையர்க்குச் சேவைசெய்யப் போயிருக்கிறாரெனப் புண்டரீகன் உண்மைஞானந் தெரிந்த ரிஷீஸ்வரரும் தாய் தந்தைக்குச் சேவை செய்யப்போனரா? மாதாபிதா தாரம் புத்திரர் வாஞ்சை நீங்கினவர் அன்னை தந்தைமே லவாக் கொள்வாராவெனச் சங்கைசெய்ய,

பஞ்சகங்கைகள், அடா புண்டரீகா! அன்னையும் பிதாவும் முன்னெறிதெய்வமென்ப தரியாயோ? மாதா பிதா குருதெய்வமென்னும் நான்கில் மாதாவே முதல் கண்டதெய்வமாகும், இரண்டாவது போஷணை செய்த பிதாவாகும், மூன்றாவது ஞானமார்க்க மறிவிக்கும் குருவாகும், நான்காவது மோக்ஷமளிக்குந் தெய்வமாகும், முதற்படியிலேறாமல் மூன்றாம்படியிற் பாய்வாருண்டோ? அதுபோலப் பத்துமாதஞ் சுமந்து பலவவஸ்தைகளாற் பிடிக்கப்பட்டுப் பிரசூதவேதனையால் ஸ்மரணைகெட்டுப் பெற்றுக் களித்துத் தன்னுதிரத்தை யூட்டி வளர்த்தமாதாவும், பலபாடுபட்டுத் தேகசுகத்தை விட்டுப்புதல்வனையே முதல்வனாக எண்ணித் தன்னுயிரைப்போற் பாதுகாத்து வளர்த்தபிதாவும், சுமைசுமக்கவும், எவ்வர்ன முள்ளவனாகிய உன்னுடன் நடக்கவும், இறங்குமிடங்களில் பாகஞ்செய் துடைக்கவும் செய்த கொடியபாதகனாகிய உனக்குமாதா பிதாக்களுக்குச்செய்யும் பூசையின் மகிமை தெரியுமோ? முதுமைப்பருவமுள்ள தாய் தந்தையரைக் கஷ்டத்துக் குள்ளாக்கி இடையில் வந்த மனையாட்டியைச் சுமந்துகொண்டு வந்த நீ அன்னை தந்தைகளினடிகளி னர்ச்சனையின் பலனை யறிவாயோ? அரியர பக்தர்களுக்கும் ஜீவன்முக்தர்களுக்கும் குருபக்தனென்கிற பேர்கிடைக்காமல் மாதா பிதாவைத் தோள்மே லேந்திக்கொண்டு திரிந்தவனுக்குக் குருபக்தனென்று பேர்கிடைத்த

தை நீ கேட்கவில்லையோ? சாஸ்திரங்களிற் பார்க்கவில்லையோ? ஸ்ரீரகுநாயகர் தனக்குக் குருவாகிய வசிஷ்டர் தந்தையாகிய தசரதர் முதலானவர்களுடைய வாக்கியத்தைக்கடந்து மாதா வாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்யவில்லையோ? அருந்ததி கொழுநன் கௌசிகன் முதலானவர்கள் நெருக்குண்டிருக்குஞ் சபையில் வந்த ஸ்ரீராமர் முனீஸ்வரனையும் ஞானாசாரியனையும் வணங்காமல் முன்னந் தந்தையை வணங்கிப் பிதாவின் மேன்மையைச் சபைக்குத் தெரிவிக்கவில்லையோ? ஒருவனன்றி இருவர் புணர்தல் மகா குற்றமென்றறிந்திருந்தும் மாதா வாக்கியத்தால் ஐவரும் ஓர் கன்னிகையைக் கூடியிருக்கவில்லையோ? பரஸ்திரீ கமனஞ்செய்வோனுக்குப் பரகதியில்லையெனத் தெரிந்திருந்தும் மாதா வாக்கியத்தைத் தடுக்கக்கூடாக் குறையால் சகோதர ஸ்திரீகளை வியாசர் புணரவில்லையோ? இவ்வளவு மேன்மையான மாதா பிதாக்களை நையச்செய்த வெய்யனாகிய உன்முகத்தைப் பார்க்கலாகுமோ? குரு தெய்வம் தாரம் புத்திரர் மித்திரர்களை வெவ்வேறு சம்பாதித்துக்கொள்ளலாம் மாதா பிதாவைச் சம்பாதிக்கக்கூடுமோ? கர்ப்பத்தில் வைத்துக்கொண்டு ஓர் பாதத்தை எடுத்து வைத்து நடந்ததற்குச் சதைகளைக் கொய்துக்கொய்துக் கொடுத்தாலும் நிகராகுமோ மார்மீதும் தோள்மேலும் மடிமேலும் வைத்துப் பாதுகாத்த பிதாவுக்குத் தநயன்செய்யும் கைமாறிதெனச் சாஸ்திரங்களி லுரைக்கின்றதோ? (பெற்றமனம் பித்து பிள்ளைமனங் கல்லு, கடந்தஞானியுங் கடப்பரோ மக்கள்மேற் காத) லென்னும்பழமொழிகள் புத்ரா பேக்ஷையைக்காட்டி யிருப்பதால் இவ்வளவு அன்புள்ள மாதா பிதாக்கள் மனமே நோக நீ காசியாத்திரை வந்தாலோர் பிரயோசன முண்டோ? அற்பசுகத்தைக் கொடுக்கும் சொற்பமான துணையைச் சுமந்து கொண்டு வந்த தோஷியாகிய உன்னுடன் பேசவுங்கூடுமோ? (மாதாவையொருநாளும் மறக்கவேண்டா மென்றும், தந்தைசொல் மிக்க மந்திர மில்லையென்று சொல்லும் பழமொழி மெய்யா பொய்யா மாதா பிதாக்கள் சேவையிற் சிறந்த குக்குடரிஷிக்குப் பஞ்சைகங்கை களாகிய நாங்கள் பணிவிடைசெய்வது பிரத்தியட்சமாய்ப்பார்த்த நீர்ச்சங்கை செய்யக்கூடுமோ? வென்றுரைத்துக் கொண்டே சகல பாபங்களுஞ் செய்துமுடித்து அந்தர்த்தானமாய் மறைந்தார்கள்.

அவ்வாச்சரியத்தைக் கண்ட புண்டரீக பக்தன் உடனே அவ்விடம்விட்டு நீங்கித் தந்தைதாயிடமடைந்து பாதங்களில் வந்தனஞ்செய்து காவடிகட்டித் தாய்தந்தையரை அதிலிருத்தி தோண்மேலேந்திக்கொண்டு சாமக்கிரிகைகளை மனையாள் சுமந்துகொண்டுவரப் பண்டரியையடைந்து ஒரு நாள் தங்கி மறுநாள் அப்படியே புறப்பட்டுக் குரு பக்தனிவனேயாமெனத் திரிலோகங்களும் போற்ற வாரசணாசியையடைந்து கங்கையிற் றாய்தந்தையரை ஸ்நானஞ் செய்வித்து அவர்கள் பாதநீற் றுண்டு அவர்களுக்கு செய்யவேண்டிய பணிவிடைகள் செய்து முடிந்தபின் மாதா பிதாக்களிடம் விடை பெற்றுக் கொண்டு,

குக்குடரிஷியின் ஆசிரமத்தையடைந்து அம்மகாரிஷிக்கு வந்தனம் புரிந்து அவர் மகிழ்ச்சியுடனுபதேசித்த மகா வாக்கியமர்மங்களை அறிந்துக்கொண்டு ஆனந்தங் கொண்டு அவரிடம் தனக்குற்ற சந்தேகங்களை யெல்லாம் நிவர்த்தி செய்துக்கொண்டு பூரணாபிஷேகம் பெற்றுக் கொண்டு அவரருளால் தாய் தந்தையபாற் சென்று தனக்குக்கிடைத்த பிர்மானந்தத்தின் மாட்சிமையையும் மோட்ச காட்சியையும் புகன்று, அவர்களைக் காவடியிலேந்திக்கொண்டு பண்டரியை யடைந்து தாய் தந்தையரை நாடோறு மதிகாலையிற் சந்திரபாகா நதிக்குக் கொண்டுபோய் ஸ்நானஞ்செய்வித்து பாத பூஜை முதலானவைகளும் செய்து வீட்டிற் கொண்டுபோய் ஷட்ருசிகளான பதார்த்தங்களைப் புகட்டிச் சயனிக்கச்செய்து பின்பு தான் புசித்துப் பிர்மஞான நிஷ்டையிற் செழித்திருந்தார் இப்படி யிருக்குங்காலத்தில் பண்டரபுரத்துக்கருகான கோபால வூரிலிருக்கும் சந்த்ராவளி யெனும் ஓர் உத்தமி பகவானையே விவாகம் செய்வேனன்றி மற்ற மரமசிவனாதிய ரென்னைக்குறித்துத் தவஞ்செய்தாலும் அவர்களைக் கனவிலும் நினையேனென் றுறுதிகொண்டு கிருஷ்ண பரமாத்மாவினுடைய நாமமன்றி வேறு நாமத்தை மறந்தும் நினையாமல் உக்கிரமான தபஞ்செய்துக் கொண்டு ௩0-வயது பரியந்தம் விவாகமின்றி இருக்குங் காலத்தில் அப்புண்ணியவதியைச் சோதிக்கவேண்டிப் பகவான் பரமசிவனா ருருவுடன் போய் அவ்வரிவையின் முன்னின்று, ஓ பெண்ணே! உன் தவத்துக்கு மெச்சினேன் உமக்கு வேண்டியவரத்தைக்கேளெனத் திருவாய் மலர்ந்தருள, அப்பத்தினி நிடலாக்ஷனைப்பணிந்து, ஓஸ்வாமி! பகவான் வந்து என்னை விவாகஞ் செய்யும்படியான வரமேயெனக்குத்தேவையெனத் தாழப் பார்வதி பாகன் ஓமாதரசே! பகவானைக்குறித்து இத்தனைநாள் பரியந்தந் தவஞ்செய்தது நிஷ்பிரயோசனமானது ஏனென்;ஸ்ரீகிருஷ்ணர்பவுத்தாவதாரமாய்மௌனஸ்திதியையனி

யடைந்திருக்கிறானன்றி, ருக்குமணி அவரிணை பிரியாமலி ருக்கின்றாளாதலாற் என்னை விவாகஞ் செய்துக்கொள் ளென்றுரைய அவ்வாக்கியத்தைக் கேட்ட அப்பதி விரதை மிகவும் முனிவு கொண்டவளாய் . ஒஸ்வாமி! பகவானுக்கு மாலையிட நினைத்த என்னை நீர் கோருவதுத்தமமோ ? ஒருவனுக் கைக்யமானபின் மற்றொருவனை மறந்தும் நினைக்கலாமோ ? விபசாரியைப்போன்ற அபசாரி இவ்வுலகிலுண்டோ ? பிறர் மனையாளை இச்சிப்பவர் ரட்சிக்கப்படுவார்களோ ? தாருகாவனத்து ரிஷிகளின் பத்தினிகளைக்கற்பழித்தபோ தம்மாமுனிவர்களிட்டசாபம் போதாதோ ? என்னுடைய சாபமும் பெறவேண்டுமோ? அத்திரி மகாரிஷியின் களத்திரமான அநசூயா தேவியைச்சோதிக்கப்போய்ப் பங்கமடைந்ததை மறந்து விட்டீரோ ? காமத்தால் நியமத்தை துறந்து விட்டீரோ ? வென்றுரைக்கும் வார்த்தைகளைக்கேட்ட ருத்ரரூபத்துடன் வந்த பகவான் களிப்புற்று, ஸ்ரீகிருஷ்ணபரமாத்மஸ்வரூபமாய்க் காட்சிக்கொடுத்து, ஓ பெண்ணே ! உன் கற்பைச்சோதிக்கும் நிமித்தமே மயேஸ்வரரூபத்துடன் வந்துன் மனதைக் கொதிக்கச்செய்தேன், ஓ பதிவிரதா சிரோன்மணி ! என்னைக்குறித்து நெடுநாளாய்த் தவஞ் செய்தகாரணமேதோ ? உனக்குத் தேவையானவேதோ வெனகேட்குந் தருவாயில் ருக்மணியம்மை பகவானைக் காணாமல் பலவிடங்களிற்றேடி அங்கு வந்தடைந்து தனித்துப்பேசுமிருவரையும்பார்த்துக் குரோதம்மேலிட்டுப் பகவானைப் பணியாமல் நிற்கும்போது அவ்வுத்தமி, ஆ ஆ என்னாண்டவனிடம் வந்து பேசாமலும். பணியாமலும், இந்த ருக்மணி அகமடைந்திருக்குங் காரணமேன் ஓ ராசன் புத்திரிக் கிவ்வள வகங்கார மிருக்கலாமோ ? கசுத-கோபிகாஸ்திரீகளி லொருத்தி தானேயென மதித்துத் துதிக்காமலும் தொழாமலும் எழாமலும் பகவான் கேட்ட வினவுக்குத்தரஞ் சொல்வதற்குக்கூடாமலும், இவளே னித்தருணத்தில் வந்தாளெனுங்குரோதத்தால் ஒருவார்த்தையுமாடாமல் மௌனமாயிருந்தாள் பகவானோ இவருடைய மனோபாகத்தை ஆராய்வதிற் சித்தத்தை வைத்து ருக்மணியை அழைக்காமலிருந்து விட்டார் ருக்மணியோ இவர்கள் குற்றவாளிகளானபடியினாலேயே தேள் கொட்டிய திருடனைப் போலிருக்கின்றார்க ளினி யிவர்களைப் பார்க்கக் கூடாதெனத் தீர்மானித்துத் தவஞ்செய்ய யோசித்து ரிஷியாசிரமங்களை யாசித்துத் திண்டிரவனத்திற் பிரவேசித்து அகோரமான தவஞ்செய்யத் தொடங்கினாள்.

பகவான் ருக்மணியின் பிணக்கைத்தவிர்த்து வருகிறேனென் றம்மாதைச் சம்மதப்படுத்தித் திண்டிரவனத்துக்கும் பண்டரிக்கும் சமீபத்திலோடும் சந்திரபாகா நதியிலிறங்கி அக்கரையிற்சென்று தாய்தந்தையர்க் கன்பாய்ப் பூசைசெய்யும் பூரண பிர்மக்ஞானியாகிய புண்டரீகபக்தனைக் கண்டு ஆனந்தங்கொண்டு ருக்மணியை மறந்து அசைவற்று நின்று ஓ புண்டரீகா ? தாய்தந்தையர் சேவை செய்வதற்கு நீ பொருத்தனே யில்வுலகிற் பிறந்தாய், குருபக்தனுனக்கிணை யென்றுரைக்கத்தகாது உனக்கு நீயே ஒப்பாகும் உன்னுடைய விரதத்துக்கு வந்தேன் அரியசேவை தந்தேன் சீக்கிரமுனக்குத் தேவையானவரம் நீகேட்பாயாக வெனத் திருவாய்மலர்ந்தருளியதைக்கேட்ட புண்டரீக பக்தன் பகவானை நோக்காமல் நீவிரியாரென்று வினவ, பகவான், ஓ ஒப்பில்லா வுத்தமனே ! வசுதேவருக்கும் தேவகி தேவிக்கும் மகவாய்ப் பிறந்த பகவானென்றறிந்துக்கொள்ளெனப்புண்டரீகபக்தன், ஓ அரிபரந்தாமா ! நான் நினையாதிருக்கவு மும்முடைய காட்சி தந்தீரோ ? சேற்றில் வெகு நேரமாய் நின்றுநொந்தீரோ ! இதோ இச்செங்கல்லின்மேற் சற்றே நிற்பீராயின் மாதா பிதாக்களுக்குச்செய்யும் பூசையை முடித்துத் தேவையான வரங்கேட்டுக் கொள்ளுகிறேனென்றுரைத்து, அன்னை தந்தைகட் கன்புடன் பூசை செய்துமுடிந்தபின் அவர்களைக்காவடியிலேந்திக்கொண்டு பகவானை நோக்கி, ஒஸ்வாமி ! என் தாய் தந்தையை வீட்டிற்கொண்டுபோ-யன்ன முண்பித்து வருகிறேனது பரியந்தமிங்கே யிருக்கிறேனென்கிற வரம் முன்னமளித்தனுப்புமையாவெனத்துதிக்கக் கருணாநிதியானபகவான் ஓ புண்டரீக பக்தனே ! நீ வருகிற பரியந்தம் ஓரடியும் பேர்த்து வைக்காமல் உன் வரவுக்கு எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன் சீக்கிரம் வருவாயாக வென்றுக் கியாபிக்கப் புண்டரீக பக்தன் தொழுது வீட்டிற்சென்றன்னைபப்பனுக்கன்ன முதலானவை யூட்டிப் பாராட்டி ஓ என் தாய் தந்தையே ! ஸ்ரீ அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகராகிய ஸ்ரீமந்நாராயணர் சந்த்ர பாகாநதி தீரத்தில் எழுந்தருளி யிருக்கின்றார் தேவரீர்களுத்தரவு கொடுத்தாற் போயவரிடம் தேவையான வரம் பெற்றுக் கொள்ளுகிறேனெனப் பணிய

அம்மாதாபிதா, ஓ எங்களருமை பாலகனே! யொருவன் தரிசித்து வரம் பெற்றுக்கொள்ளுதலாற் பிரயோசன மேது இவ்வுலகிலுள்ளோ ரனைவருந் தரிசித்துக் காட்சி யடையும் படியான சூட்சி செய்வாயா

கில் மாட்சிமை யடைவாயென் றதையப் புண்டரீக பக்தன் மகா பாக்கியம் தங்கள் கட்டளையின்படியே செய்வேனென் றவர்கள் தாள்களிற் றெழுது இனி விண்டுவை இப்பண்டரியிற்றானே தங்கச் செய்கிறேனென் றுன்னி வீட்டைவிட்டுப் புறப்பட்டு,

ஓ ஓ ஸ்ரீமந்நாராயணரைக் கண்ணாரக் கண்டும் ஆனந்தங்கொண்டும் இனி பெறும்படியான வரமும் வேண்டியதோவென் றுரைத்துக் கொண்டே போய்த் தந்தைசொன் மிக்க மந்திரமில்லையெனத் தூரத்தில் நின்றபடி பகவானைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து ஓ பகவானே! எனக்குத் தேவையான வரந் தாங்களிப்படியே நின்று சகலருக்குந் தரிசனந் தந்து காத்து ரட்சிப்பதே யென்றுரைத்துப் பகவானருகிற் சென்றால் வேறு வரந் தந்து மறைந்தருளுவா ரிலனாற் றந்தை தாய் வாக்குக் காணிவரும் ஆண்டவன்முன் வந்தகன்றாலபராதத்துக் குட்படவேண்டுமென் றுன்னிப் பலவாறாக வெண்ணிப் பகவானைப் பார்த்தபடி சமாதி நிஷ்டை சேர்ந்து பகிர்முகத்திலிருந்து போந்து பிர்மானந்தத்தாற் களிகூர்ந்து சகல சங்கடங்களுந் தீர்ந்து தன்னை மறந்து தேகஸ்மரணை யிறந்து கொல்லைக்குக் காவலிருந்த சடபாதரைப்போ லசைவற்றுக் கைகளைக் கூப்பிக் கொண்டு நின்றார்.

பகவானே, இதோ புண்டரீகபக்தன் வந்தான் நம் மைக்கண் டுகந்தானென் றன்பின்மேலிட்டா லவனுக் களித்தவாக்கின்படி அப்புண்டரீக பக்தன் வரவுக்கெதிர் பார்த்தபடி அசைவற நின்று புண்டரீக பக்தன் சமாதி யடையுங்கால பரியந்தம் சுயரூபத்துடன் சகலருக்குங் காட்சிகொடுத்துத் தன்னெதிரில் நின்றபடி சமாதி யடைந்த புண்டரீக பக்தனைப் புகழ்ந்து மிகவும் மகிழ்ந்து அவரைப் பார்த்தபடியே சிலா ரூபமாய் நின்றார்.

பண்டரியென்னு மூரிற் றங்கியிருப்பதால் பண்டரிநாதனென்றும், ஈட்டென்னும் செங்கல்மேல் நிற்பதால் இடோபாவென்றும், நீ வந்து வரங்கேட்டுக்கொள்ளுகிற பரியந்தம் இங்கேயே நிற்கிறேனெனப் புண்டரீக பக்தனுக்கு வரமளித்ததால் புண்டரீக வரதனென்றும்பகவானுக்கு நாமங்களேற்பட்டன.

புண்டரீக பக்தன் வரலாறு முற்றிற்று.

## நூல் வரலாறு

ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகராகிய ஸ்ரீமந்நாராயணர் வீற்றிரு கும் பூலோக வைகுந்தமாகியும் பிர்மானந்தத்தாற் றன்னை மறந்திருக்கும் ஜீவன் முக்தர்க ளுலாவு மிடமாகியும் அஷ்டாங்க யோகங்களாற் சகல சித்திகளையு மடைந்த சித்துக்கள் சஞ்சரிக்கு மூராயும் திரிமூர்த்திகளை யுபாசிக்கும் பக்தர்களும் வேதமாதிகளை ஓதியுணர்ந்த நீதிமான்களும் நிறைந்திருக்கும் நாடாகியும் துவாரகாநாத் ஜெகந்நாத் ராம்நாத் பதரிநாத் என்னும் நான்கு கயிற்றாற் கட்டியிருக்கும் மத்தியிலுள்ள கொடிஸ்தம்பத்துக்கிணையாகிய இடையிலுள்ள பண்டரிநாத் என்றுரைப்பதாகியும், சந்ததமுமெந்தத் திக்கிலும் காலப்பிர்மம் முழங்கும் பண்டரிபுரத்தில் கலியுகாதி ௪௬௬௰-ம் வருஷத்தில் இப்பூவுலகோரீடேத் திருவவதாரஞ் செய்தருளி அனேக அற்புதங்களைக் காண்பித்து டாகூர் தேசத்தி லவதாரஞ் செய்தருளிய இராமதாஸ் ஸ்வாமிகளுக்கு மவருடன் வந்த இராஜன் முதலானவர்களுக்கும் தேவர்களுக்கும் மூவர்களுக்கு மன்னமுண்பித்து அச்சுவாமிகட்கு முன் விஷ்ணுஸ்வரூபமாய்நின்று பல ஞானவாக்கியங்களைப்புகன்று ௬௭௩௰-ம் வருஷத்தில் தன்னுடன்பொந்தியோடும் வானுலகுக்கு வர ஏழுநாள் பரியந்த மனைவரையுங் கூப்பிட்டுப் பரமபதத்துக்கு வாருங்களெனக் கும்பிட்டுச் சகலரும் வராததற்காகப் பின்னிட்டு மிகவும் வியாகுலப்பட்டுப் பிராப்தியில்லையென முன்னிட்டு அழியாக் கீர்த்தியை இவ்வுலகில் நட்டு ஜெயவிட்டல் ஜெயவிட்டல் என்றுரைத்துக்கொண்டே தன்னுடன்வந்த ௨-பேருடனாகாயத்திற் போகும் துக்காரா மென்பவரைப் பார்த்த

திண்டிரவனத்தி லிருக்கும் உத்தவசித்தர் முதலானவர்களும் பிரமாவதாரரான நாபாஜி சித்தரிடம் போய் வலம் வந்து பணிந்து அவர் தாள்களிற் றங்களுடைய நயனங்களை யணிந்து துக்காராம் வானிற் போகும் விந்தையையுரைக்க, மகா யோகியான நாபாஜி சித்தர் உத்தவ சித்தர் முதலானவர்களைக் கையமர்த்தி துக்காராமுக்கு வந்தனம் புரிந்து மிகவும் பரிந்து உல்லாசத்தாற்சிரித்து மகாத்மாவெனத் தெரிந்து சந்தோஷம் புரிந்து புஷ்பங்களைச் சொரிந்து ஆனந்தங்கொண்டு விந்தையென விண்டு நீர் செய்ததே தொண்டு பாக்கியஞ் செய்தவர் பண்டு நல்லவரந் தந்தார் யிண்டு தீபனமனதைக்கொன்று பலமாதிகளை வென்று நானென்பதனையென்று சற்றுமில்லாமற்நின்று எங்கே போகிறீரின்று பேசலாகாதா நின்று அடியேன் மூடனென்று நில்லும் நில்லுமென்று அன்பான மொழிகளைப் புகன்று சந்தோஷமேலிட்டா லானந்தநிர்த்தனஞ்செய்யத் தொடங்

கினர். உத்தவசித்தர் முதலானவர்களும் அவருடன் தாண்டவஞ்செய்து நாபாஜிசித்தரைப் பலவந்தமாய் நிறுத்தி ஆசனத்தின்மேலிருத்தி, ஓ எங்கள் சத்குரு நாதனே! பெருஞானபோதனே! ஆகாயத்திற்போகு முத்தமரெவர்? எந்த லோகத்திற்குப் போகின்றார்? இந்நாள் பரியந்த மெங்கிருந்தார் சொல்லும் சுவாமி யெனத் தொழ,

நாபாஜிசித்தர் நாமின்று செய்த பாக்கியமே பாக் கியமெனச் சந்தோஷசித்தராய் அகங் குளிர்ந்து முகம் மலர்ந்து ஓ சித்தர்களே! மிகவும் பரிசுத்தர்களே இவ ருடைய பெருமையை யென்னொருவனு லுரைக்கப் போமோ? ஆதிசேஷனாலும் விரிக்கப்போமோ? தேவர்க ளாலுந் துதிக்கப்போமோ? மூவராலும் மதிக்கப்போ மோ? கூடாதாயினும் எனக்குத் தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன், அதாவது குப்த்தானஞ் சபதலோகமு மறியுமென்பதைப்போல் அதிகுப்தமாய்ப் பண்டரிபுரி யின் சமீபத்திலிருந்தவர் பிரமக்ஞானம் பூரணமாய்த் தெரிந்தவர் பண்டரிநாதன் பணிசெய்யும்படியான தபோ பலமுடையவர் துக்காரா மென்னும் பேருடையவர் வைராக்கியத்தில் வல்லவர் மிகவும் நல்லவர் ஜீவகாருண் யத்தையே விரதமாகக்கொண்டவர். பிர்மக்ஞானமே முக்கியமென விண்டவர் மனதைப் பிரமானந்தத்தில் சொக்குவித்தவர் வாக்கைச் சந்ததமு மிஷ்டதெய்வத் தைத் துதிக்க வைத்தவர் காயத்தைச் சாதுக்கள் சே வைக காளாக்கினவா நானெனுஞ் சீவத்தன்மையைத் தூளாக்கினவா இறந்த மைந்த னுயிர்பெற்றெழ விண்ட வா இரண்டு நாய்களை மாணுக்கராக்கிக் கொண்டவர் கழுதையைக் கருடனாக்கினவா கனம் வேண்டாமல் நீக்கினவர் சமுசாரத்தோடிருந்தவர் சகல மர்மங்களு மறந்தவர் அபிமானத்தை வென்றவர் ஆகாயத்திற் சென்றவர் என்றுரைக்கக் கேட்ட,

உத்தவசித்தர் முதலானவர்களும் வணங்கி, ஓ ஸ்வாமி சுகப்பிரமரிஷியைப்போ லாகாயத்திற் போகும் இவருக்குற்ற தபோபலம் இவர் முற்பிறப்பிற் செய் ததா? இப்பிறப்பிற் செய்ததா திருவாய்மலர்ந்தருளும் ஸ்வாமியென்று விண்ணப்பஞ்செய்ய விரிஞ்சாவதாரனுை நாபாஜிசித்தர் சொல்லுவார் ஓ உத்தவசித்தரே! இந்த துக்காராமென்பவர் முன்சென்மத்தில் ஸ்ரீவைகுந்தவாச ராகிய ஸ்ரீமந்நாராயணரைச் சிறு பொழுதிலிருந்து தேக வியோகமாகிற பரியந்தம் தோத்திரஞ் செய்ததன்றிப் பண்டரிநாதன் கோயிலைவிட்டு நீங்காமல் பாண்டுரங்க னுக் சன்னமூட்டின மகா பக்தனுக்கும். அல்லாமல் யோனி சம்பந்தமுடையவரென்று நவில, உத்தவசித்தர் அயோனிஜன்ம மெடுத்தவ ரெவர் மூன்றுஞ்சென்மத்தி லெந்த முனிவராயிருந்தார் சொல்லுமையா வென,

நாபாஜிசித்தர், ஓ சித்தசிகாமணியே! இவர் மூன் ருஞ் சென்மத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் பிர்மோப தேசம் பெற்றுக்கொண்ட உத்தமராகும். அவரிவ்வுலகில் ஓர் குழந்தையாகிப் பண்டரிபுரத்துக் கருகிலிருக்கும் சந்திரபாகா நதியில் மிதந்துக்கொண்டே வந்து பண்டரி நாதனை நெடுநாளாய் மிகவு மன்பாய்ப் பூசித்துக்கொண் டிருந்த தாம்ஸேட்டி யென்பவருக்குப் பிள்ளையாகி நாம் தேவென்று பேர்பெற்றுப் பாண்டுரங்கனுக் கன்னமூட்டி அனேக விசித்திரங்களைக் காட்டிக் கொடிகள் சுவர்க் கத்திலிருந்து வர, நாகேஸ்வரர் கோயிலில் நாட்டி, அனேக விசித்திரங்களைக் காட்டிப் பசுவின் கன்றை யெழுப்பி, அக்பர் பாதுஷாவை வாட்டி அங்குள் நாக தேசுவரர் கோயிலை மேற்குமுகமாகத் திரும்பச்செய்து சதகோடி கீர்த்தனைகளால் ராமாயணத்தை முடிக்க வெண்ணங்கொண்டு, பாதிகீர்த்தனைகளைப் பாடி ராமா யணத்தை முடிக்கவேண்டி இந்தத் துக்காராமாய்ப் பிற ந்து பாடி முடித்துப் பரமபதத்திலிருந்து வந்தபடியே இப்போது பொந்தியுடன் வைகுந்தத்திற்குப்போகின்று ரெனப் புகல,

உத்தவசித்தர் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் பிர்மோப தேசம் பெற்றுச் சாக்ஷாத்காரத்தை யடைந்த உத்தவர் இவ்வுலகில் குழந்தையாய் வரவேண்டிய காரணமேதோ தெரியச்சொல்லும் சுவாமியென, நாபாஜிசித்தர் உத்த வரொருவரே இவ்வுலகிலவதாரஞ் செய்ய வில்லை வால் மீகர் வியாசர் சுகர் அக்ரூரன் அருணன் தாரகன் பிர்மா விஷ்ணு ருத்திரன்-ஆதிசக்தி முதலானவர்களுமிவ்வுலகி லவ்தாரஞ் செய்துக் குலாசார தர்மத்தையும், உலகம் பிரஷ்ட மடைந்த மர்மத்தையும், சகுணத்தியானத்தை யும், பிர்மக் ஞானத்தையும், இவ்வுலகிலுள்ள மாந்தர்க ளுக்குப்போதிக்க வந்தார்களென்ன, உத்தவசித்தர் இவ் வுலகிலென்ன விபரீதம் நடந்ததென்று இவர்களெல்லா மவதாரஞ் செய்தார்களென்ன,

நாபாஜி சித்தர் இவ்வுலகில் கலிபிறந்து பரீ க்ஷித்து மகாராஜனுற்றுழ்ந்து ருத -வருஷ பரியந்த மிக் கலியுகத்தி லென ஸ்வரூபத்தைக் காட்டமாட் டேனென்று வாக்கு தத்தஞ் செய்திருந்தும் கலிகால மகத்துவத்தால் அனேகர்களுக்கு விபத்த குணங்க ளுண்டாகி ஒற்றுமையுள்ள மன மிரண்டாகித்

தீர்த்தயாத்திரை போதல், புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தல், தேவாலயங்களைப் பிரதட்சணஞ் செய்தல், திரிமூர்த்திகளின் ஸ்வரூபங்களாகிய விக்கிரகங்களை ஆராதித்தல், பெரியோர்களை நேசித்தல், மாதா பிதாக்களைப் பூசித்தல், பக்த சரித்திரங்களை வாசித்தல், மோக்ஷார்த்தத்தை ஆசித்தல், அரியர சங்கீர்த்தனங் கோஷித்தல், தன்னைமறந்த பிரமஞ்ஞானிகளைப் பூசித்தல், வேத பாராயணங்களைச் சாதித்தல் வேதாந்த வாக்கியங்களைப் போதித்தல், ஆரியர் முதலானவரைக் கண்டெழில், எதிர்கொண்டு தொழல், சாதுக்களுக்கு நீராட்டல், மலர்மாலைகளைச் சூட்டல், தூபதீபங்களைக் காட்டல், இஷ்ட பதார்த்தங்களை யூட்டல், அவர் சொல் நிலையில் மனதை நாட்டல், அதிதிகட் கன்னம் பரிமாறுதல், அடியார் சங்கத்திற் சேருதல் முதலான நற்குணங்கள் குறைந்து பெரியோர்களைத் தூஷித்தல், பேதையர்களைப் பூசித்தல், சத்தியவான்களைக் கெடுத்தல், தர்மஞ் செய்வோரைத் தடுத்தல், தாசிகட் கரும்பொருள் கொடுத்தல், தர்ம மவர்க்கே தொடுத்தல், சாந்தகர்கள் சங்கம் விடுத்தல், சண்டாளர் தம்மைபடுத்தல், சூதாடல் வாதாடல், மனைவியைக் கொண்டாடல், மாதாவுடன் வம்பாடல், சொர்ன மிகுதியாற் றுள்ளுதல், சுராபானத்தைக் கொள்ளுதல், தூஷண வார்த்தைகள் விள்ளுதல் முதலான துற்குணங்கள் நிறைந்து சரியை கிரியை யோக ஞானமென்னும் ஒருவழியிலுஞ் செல்லாமல், துரிய திருஷ்டியில் நில்லாமல், அரியரவென்றுஞ் சொல்லாமல், அஞ்ஞானமனதைக் கொல்லாமல், பரஸ்திரீகளையே யல்லாமல், குலஸ்திரீகளைப் புல்லாமல், ஒரு நற்குணமு மில்லாமல், அகமமதையை வெல்லாமல், பாபகர்மங்களையே செய்துக் கொண்டிருக்கிற காலத்தில், அக்கினிக்குச் சகாயமான காற்றைப்போல மூவர் தேவர் மற்றியாவர்மீதும் குரோதங்கொண்டு பிரமகிருஷ்டிக் கெதிர் சிருஷ்டிசெய்த விசுவாமித்திரருடைய கோரமான கோபத்தி லிருந்துதித்த கறுத்தநிறமும், பெருத்த உடலும், பருத்த உதடும், சுளித்த முகமும், சிலிர்த்த மயிரும், கடின நெஞ்சமும், கர்வமிகுதியும், பல்லிற் கறையும், சொல்லிற் குறையும், கொல்லுங் கையும், குடிலகுணமுள்ள அராபிய ரென்னுந் துடுக்கர் மிகவும் முடுக்கர், மோசல மாமுனியினால் விஸ்தாரண மடைந்து மொசல்மான்க ளென்கிற பேர்பெற்று அரசாங்கம் பெற்றுத் தேசங்களில் மதயானைகளைப்போற் சஞ்சரித்து, மறையோர்க ளென்றும் பெரியோர்களென்றும் பாராமல், தீங்குவருமென் றோராமல், முன்பின் தெரியாமல், பாபமென்றுங் குறியாமல், அதட்டி, வாயில் வந்தபடித் திட்டி, மது மாம்சங்களைப் புகட்டி, வாள்களைச்சுழற்றி, மனநடுங்க மிரட்டிப் பின் தொடர்ந்து வெட்டிக் குடிகளைக் காட்டில் விரட்டி, ஸ்திரீகளின் மாங்கல்யங்களைக் கழற்றிப் பூமியில் வீழ்த்திப் புரட்டி மானபங்கஞ் செய்துச் சிரங்களைக் கொய்து வாயில் வந்தபடி வைது, தலைமேற் கற்களைபெய்து சூரிய வம்சத்தைப் பாழாக்கிச் சந்திர வம்சத்தைக் கீழாக்கிக் காசிமுதலான புண்ணிய க்ஷேத்திரங்களிற் பசுக்களை யறுத்து மாமிசங்களை வறுத்து, நன்றாய்த்தின்று பருத்து, வேத வாக்கியங்களை மறுத்து. லாகிரியால் மிகவுஞ் சிரித்து. அட்டகாசத்துடன் கொக்கரித்துப் பிறருடைமைகளைப் பறித்துப் பாழ்நெற்றிகளை நெறித்து, விக்கிரகங்களை அபகரித்து, ஊர்களிற்கொள்ளையடித்துத் தேவாலயங்களைபொடித்து இவ்வித கோரத்தால் அரசர் நீதிகுன்றித் தர்மஞ் சற்றுமின்றி, உலகத்தைப் பாபம் மூடிக்கொண்டு மழை பொழியாமல், மந்திரம் பலிக்காமல், நாடுங் காடுஞ் சூரிய உஷ்ணத்தாலெரிந்து பொரிந்து மரிந்து, ரிஷிகளுடைய தபசுகள் பங்கப்பட்டுத் தவநிலை கெட்டு, இதுவென்ன விபரீதம்! இதுவென்ன அபவாதம்! இழந்த ராவணன் வந்தானோ? இரணிய னுயிர்பெற் றெழுந்தானோ? இறந்த சோமுகன் வந்தானோ? எமனிவ்வனத்தில் வந்தானோ? வென்று வாரணாசியி னருகிலிருக்கும் வேத வியாசர் முதலான ரிஷிகளெல்லாங் கூடிச் சொர்க்க லோகஞ்சென்று, தேவேந்திரன்பால் முறையிட்டு தேவர்களும் ரிஷிகளும் புறப்பட்டு, வைகுந்தத்தை யடைந்து தவங்குன்றினதற் கிடைந்து, அரிகரியென்ற கோஷத்துடன் நவரத்தின கசிதமான மேடையில் கோடிசூரியப் பிரகாசமான சிங்காதனத்தில் வீற்றிருக்கும், ஸ்ரீமந் நாராயணரை வலம்வந்து பணிந்து அவர்தாள்களில் நயனங்களையணிந்து, ஓ ஸ்வாமி! அகிலாண்டகோம. பிர்ம்மாண்ட நாயகா! அனுதரட்சகா! பக்தவச்சலா! பரமதயாபரா! அனந்தசயனா! கமலநயனா! கருடவாஹனா! கோபியர்மோஹனா! சங்கு சக்ரா! சதுர்புஜா! பச்சைவர்ணா! பரந்தாமா! துளசிதரா! தாமோதரா! மச்சகச்ச வராகவதாரா! ராட்சச சம்மாரா ஓ பகவான்! ஓ கர்த்தனே யென்று முறையிடும்போது,

மேகவண்ணனை மகா விஷ்ணுவானவர் கைபமர்த்தி, ஓ ரிஷிகளே! உங்களுக்கு நேரிட்ட குறையேதென்று திருவாய் மலர்ந்தருளின போது, சகலருந் தொழுது கண்ணீர் விட்டழுது ஓ புருஷோத்தமா! புண்டரீகாக்ஷா! இக்கலியுகத்தில் இகலோகத்திலுள்ள காசி-கயா-அஸ்தினபுரி-அயோத்தி முதலான புண்ணிய

ஸ்தலங்களில் கோஹத்தி-சிசுஹத்தி-பிர்மத்தி ஸ்ரீ ஹத்தி குருஹத்தி முதலான பாபங்கள் நேரிட்டு வர்ணாசிரம தர்மங்கெட்டு அந்தணர் காயத்திரி செபஞ் செய்தல், வேதமோதல், ஓமம் வளர்த்தல், சந்தியவந்தனஞ் செய்தல் முதலான காலகருமங்களைவிடுத்துத் துன்மார்க்கரை யெடுத்துப் பொருளாசையால் மற்ற வர்ணத்தாருக்குக் குற்றேவல்செய்து பொருமை மேலிட்டுழல் கின்றார்கள். க்ஷத்திரியர்களோ தன் பலப்பிரதாபத்தால் வேதியர் சாதுக்கள் முதலானவர்களிடம் பணிவிடைகள் வாங்கி அகங்காரம் மிகவுமோங்கி, அனேக ஸ்திரீகளைப்புணர்ந்து காம துரந்தரர்களாயிருந்து இராஜ நீதி விசாரணையின்றி மதமச்சரங்கள் மேலிட்டிருக்கின்றார்கள். வைசியரோ பொருளாசையால் பொய்விலைகள் பேசி அகவிலைகள் விற்று சூதும் வாதுங்கற்று கோக்களைப் புலையர்க்கு விற்பனை செய்து கொலைகளவுகள் காமக்குரு நிந்தை யென்னும் பஞ்சமாபாதகத்துக் குட்பட்டிருக்கிறார்கள். சூத்திரரோ துரைகளாய்ப் பிர்ம க்ஷத்திரியர் வாயிலைக்காக்க வைசியரிஷ்டப்படி விற்க சகலரும் வரிப்பணங்கட்டத் திட்டஞ்செய்துச் சூரர்களாய்க் காமக்குரோத லோபங்களாற் கட்டுண்டிருக்கின்றார்கள். பஞ்சமராகிய துடுக்கரோ மேற்சொன்ன நான்கு வர்ணத்தாருக்கும் அதிபதிகளாய் இஷ்டமான ஸ்திரீகளைப் புணர்ந்து மாட மாளிகையி லிருந்துக்கொண்டு குடும்பிகளை யிடும்புசெய்து தற்கொடும்பாவிகளாய் வரிப்பணம் வாங்கிமலர் மெத்தையிற் றூங்கித்தேவாலயங்களை இடித்து மடஞ் சத்திரங்களை பொடித்து கோஹத்திசெய்து சாதுக்களை சிரங்களைக்கொய்து துன்பமின்றி இன்பத்துட னிருக்கிறார்கள். இவ்வித கொரேங்களால் பாபமுலகத்தைச் சூழ்ந்துகொண்டு மழை பொழியாமல் நாடுங்காடு முலர்ந்து வனத்திலிருந் தெங்களாற் றவஞ்செய்யக்கூடாமல் மனோ சஞ்சல மிகுந்து உமதடைக்கலம் புகுந்து முறையிட்டுக்கொள்ள வந்தோமெனத்தொழுது தோத்திரஞ் செய்தார்கள்.

அதற்கு ஸ்ரீமந்நாராயணர் உலகங்களை ரட்சிக்குங் கர்த்தாவாதலால் தனக்குட்டானே யோசிக்கத்தொடங்கினர் அதாவது எப்போது அரசர் நீதிகுன்றிப்பதிவிரதத்தனங்கெடுமோ அப்போதே பாபம் மேலிடும் பாப மேலிட்டால் மழைகுன்றும், மழை குறைவதால் தவசு பங்கமாம், தவசுபங்கமாவதால் குலதர்மங் கெட்டுக் கொலையாதிகள் மேலிட்டு உலகத்தைப் பாபம் மூடிக்கொள்ளும், இதனால் ஜீவர்களுக்கு வியாதி முதலான பீடைகள் நேரிட்டு ஆயுள் குறைந்து நாஸ்தியாய்ப் போவார்களாதலா லிதைக்குறித்துப் பூர்த்தியாயோசிக்க வேண்டுமென்று ஸ்ரீகயிலாசவாசராகிய பரமசிவனைச் சந்திக்க அதுதெரிந்த பசுபதி பார்வதி சமேதராய் ரிஷப வாகன ரூடராய், விக்நேசுவரர் சுப்ரமண்யர் நந்திகேசுவரர் பிருங்கேசர் தூருவாசர் வியாக்கிரபாதர் வசிஷ்டர் அகஸ்தியர் புலஸ்தியர் மிருகண்டர் மார்க்கண்டர் புஜண்டர் முதலான ரிஷிகளும், நவகோடி சித்தர்களும், அனேகங்கோடி பூதகணங்களும் புடை சூழ வைகுந்தத்திற் கெழுந்தருளி ஸ்ரீமந் நாராயணர் முன்வர, உடனே பகவான் புளகாங்கமுடையவரா யெழுந்து ஒருவருக்கொருவர் வந்தனை வழிபாடுகள் செய்துக்கொண்டு இருவரும் சமானராய்ச் சிங்காதனங்களி லெழுந்தருளிப் பிர்மா சரஸ்வதி முதலானவர்களுக்கு மாசனமளித்து க்ஷேம வார்த்தைகள் பேசும்போது பராசர் வியாசர் சுகர் வால்மீகர் முதலானவர்களும் பரமேசுவரரை வணங்கி, ஓம் அரகரா! சடாதரா! சசிதரா! பஞ்சமுகா! பாண்டரங்கா! நீலகண்டா! நிடலாட்சா! பார்வதி சமேதா! பூதகணநாதா! சர்ப்பாபரணா! சர்வாபஹரணா! திரிசூலா! காலகாலா! சதாசிவா! மகாதேவா! ஒஸ்வாமி யெனத்துதித்துப் பரமசிவனாரிடப்பாகத்தில் வீற்றிருக்கும் ஆதிசத்தியைப் பணிந்து, ஓ அம்மணி! அந்தரி சுந்தரி-நிரந்தரி-துரந்தரி-சங்கரி-உமா மகேஸ்வரி கௌரி திரியம்பிகை - திரிநேத்திரி - நிர்மலகாத்திரி - ஓங்காளி மனோன்மணி அன்னபூரணி ஓ லோகமாதாவே யெனப் பலபல விதங்களாய்த் தோத்திரஞ் செய்து பிரம தேவரையும் சரஸ்வதியையும் மகா லட்சுமியையும் பணிந்து, அழுதகண்ணுந் தொழுதகையுமாய் நிற்க,

அப்போது பரமசிவனர் ஓரிஷீஸ்வரர்களே! உங்களுக்கு நேரிட்டகுறை யேதென்று கேட்கத் தபோதனர், ஸ்வாமி! இக்கலியுகத்தில் மானிடர்கள் நான்கு வேதங்களையும் தள்ளிவிட்டார்கள், கொலைக்குரிய வேதத்தை ஸ்திரமா நாட்டார்கள். பாப கர்மங்களுக்குட்பட்டார்கள், கோஹத்தியாற் கெட்டார்கள். முற்காலத்தி லிரணியனனவன் தானே தேவனென்று அனேக சாஸ்திரங்களை யேற்படுத்தத் தேவரும் மற்றியாவரும் தன்னையே வணங்கும்படியாகச் செய்து தானே யனேகருக்குவேண்டிய வரங்களீய்ந்து நானெனுமாங்காரத்தாலழிந்துப் போனதைப் போலக் கலியுக மனிதர்களில் மிகவுங் கற்ற சிலர் அனேக யுக்திவார்த்தைகளைச்

சேர்த்து இதுதான் கடவுளாலுண்டாக்கப்பட்ட ஆதி வேதமென்றுரைத்துத் தங்கள் மதத்திற் பிரவேசிக்கச் செய்து தாங்கள் கெட்டதன்றி மற்றவர்களையுங் கெடுத்துக்கொண்டு வருகிறார்கள். சிலர் பொருளாசையாலும் பூவைபாசையாலும் மது மாமிசங்கள் மேலிருக்குமிச்சையாலும் ஆசாரத்தை விடுத்து அனுசாரத்தை யடுத்து ஈனமதங்களிற் பிரவேசித்து மானிடர்களாலுண்டாக்கப் பட்டக் கட்டுக்கதைகளை வேதமென்று நம்பிப் புலையர்களாய் மாமிச புக்தமும் மதுபானமுஞ்செய்து வரிசையேயின்றி மாதர்களைப் புணர்ந்து அதோகதிக்காளாகயிக்கிறார்கள். ஜீவகாருண்யத்தை விரதமாகக்கொண்டு ஜீவர்கள் பதைக்க வதைக்காமல் தங்கள் பெரியோர்களிருந்த ஆசாரத்திலிருந்து நிதிபரனுப் நிருபமாகிய பரப்பிரமத்தையாவது சிருஷ்டி திதி நாசகர்த்தர்களாகிய தங்களையாவது தோத்திரஞ்செய்து மோட்சலாப மடையாமல் மூக்கறுப்புண்டவன் பலர் மூக்கையு மறுக்கத்துணிந்த கதைபோல யாதோ ராதரவில்லாப் பொய்ப்போதகர்க்குட்பட்டு வர்ணாச்சிரம தர்மங்கெட்டுப் பிரஷ்டத்துவ மடைந்தோமேயெனத் தன் மனந் திடுக்குத் திடுக்கென்று தனக்குச் சாட்சியாய் பறையறைவதுபோல் பிரத்தியட்சமாய்ச் சொல்லிக்கொண்டிருக்கவும், தான் கேட்ட குரங்கு வனத்தை யெல்லாங் கெடுத்த தென்பதைப்போலச் சங்கைகளுண்டாக்கி ஆசாரம் பூசைதவம் ஜபம் தோத்திரம் முதலான சத்காரியங்களில் வாழ் நாளைக் கழிப்பவர்களைக்கெடுத்து மதுபானமும் மாமிச புக்தமுஞ்செய்து மதத்துக்கொழுத்து லாகிரியால்வெறி கொண்டுவீணாளைக்கழிக்கும்படியாய்ச்சொல்லுகிறார்கள் பசுவைப்போலொத்த மானிடர்கள் ஈனமதங்களிற் பிரவேசித்து ஆனையைப் புசிப்பவனுக்குப் பூனையெவ்வளவு பெரியதென்பதுபோல மதுபானம் மாமிசபுக்தஞ் செய்வதிலும் மாதர்களைப் புணர்வதிலும் சிரேஷ்டர்களாய்ப் பட்டணத்தை எப்போதும் ஆளும்படியான கீர்த்திபரர்களாகிய அதிதிகட் கன்னமிடாமலும், அந்தணர்களைப் பணியாமலும், அனித்தியவாழ்வை மெய்யென்று, நித்தியவாழ்வைப்பொய்யென்றும், தந்தை தாயார் வாடவும், தாரத்தைக்கொண்டாடவும், தர்ம தானங்களைத் துறக்கவும், தயவு தாக்ஷண்ய மிறக்கவும், வாக்கினுற் சொன்னதை மாற்றவும், வாசைமொழியாற் பெரியோர்களைத் தூற்றவும், கபடக் கள்ளமும் மிஞ்சவும், கன்னிகள் மொழிகளைக்கேட்டுக்கொஞ்சவும், வீணருக்கேவல்செய்யவும், வித்தகர் தம்மை வையவும், பொய்மொழியென்றும் பேசவும், புலால் நாற்றம் மேல் வீசவும், தவசி கடம்மைத் தாழ்த்தவும், சண்டாளர் தம்மை வாழ்த்தவும், தேவாலயங்கள் குறையவும், தேவதாசிகள் வீடு நிறையவும், கோக்களை யனுதினங்கொய்யவும், கொய்து பாகங்களாய்ச்செய்யவும், குருவைக்கண்டால் நாணவும், கோதையர், தம்மைப்பேணவும், பூசையாசாரங்கள் நீங்கவும், ஆசையாய்ப் பொருளைச் சேர்க்கவும், சாதுக்கள் சங்கம் நீங்கவும், சண்டாளர் சங்கம் ஓங்கவும், இஷ்ட தெய்வங்களை யிகழவும், ஈனர்கள் தம்மைப் புகழவும் நேரிட்டதால் பாபம் மேலிட்டுத் தெரிவையர் மனம் போனபடி திரிந்து மழையில்லாமற் சகலமு மெரிந்து, எங்களுடைய தவசு பங்கமாய் உலகத்தில் நிர்வகிக்க மாட்டாமல் நாட்டில் முகங்காட்டாமல், மிகவும் நொந்தோம் தங்களிடம் முறையிட்டுக்கொள்ள வந்தோம்.

ஆதலால், உலகில் புண்ணியம் பூசை புகழும் ஓங்க திண்ணிய மனதிற் செபங்களும் ஓங்க அன்னியஸ்திரீகளை யன்னையெனப் பார்க்கத் தானந்தியானஞ் சாந்தமாய்ச் செய்பச் சாதுக்கள் சங்கம் சந்தோஷமாய்ச்செய்யத் தேவாலயங்கள் தெருவெல்லாம் நிறையத் தேவ தோத்திரங்கள் செவிகளில் நிறைய அன்புமாசாரமதிகமாயிருக்க, அன்பர் சேவடிக் கன்புசெய் திருக்கச் சத்திய மொழிகள் தழைந்தழகாகச் சகல சம்பத்துடன் சகலரும் வாழ்க, மாதமும்மாரி வளமுடன் பெய்ய, மானிடரெல்லாம் மாதவஞ்செய்யக்கருணைகூர்ந்தெங்களை யாட்கொள வேண்டுமெனப் பிரார்த்தனை செய்து வணங்கி நிற்கும்போது திரிமூர்த்திகளுமாலோசித்து ரிஷிகளை நோக்கி, ஓ தபோதனர்களே ! நாங்கள் பூலோகத்தில் காசிக்கும் அயோதிக்கும் பண்டரிபுரத்துக்கும் மத்தியிலவதாரஞ்செய்து பரமக்ஞானதுலுக்கர் மத முதலான துர்மதங்களைக் கண்டித்துத் துன்மார்க்கரைத் தண்டித்து எங்கள் திருநாமங்களை நிலை நிறுத்துங்களெனத் திருவாய்மலர்ந்தருளி மகாலட்சுமியையும் சரஸ்வதியையும்நோக்கி நீங்களிருவரும் இத்தபோதனர்களுக்குதவியா யிருங்களென்றுரைத்துச் சபைகலைந்து தங்கடங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு பகவான் கட்டளைப்படி வேதவியாசர் ஜகநாதமென்னும் ஸ்தலத்தி லவதாரஞ் செய்து ஜெயதேவென்றும், வால்மீகர் டில்லியி லவதரித்

துத் துளசிதாசென்றும், உத்தவர் பண்டரிபுரத்தில் யோனி சம்பந்தராய்ப் போய் நாமதேவென்றும் சுகர் காசியில் யோனி சம்பந்தராயவதாரஞ் செய்து கபீர்யென்றும், அக்ரூரன் மதுரா பிருந்தாவனத்தி லுற்பவித்துச் சூரதாசென்றும், அனுமார் டாகூர் தேசத்தில் ஜென்மித்து இராமதாச ஸ்வாமிகளென்றும் திருநாமம் பெற்றார்கள். இப்படியே அனேகர் அனேகதேசங்களி லவதாரஞ் செய்தார்கள். மும்மூர்த்திகளும் ஆதிசத்தியும் பண்டரிபுரத்துக்குச் சமீபமாயிருக்கும் ஆபேகாமென்னும் ஊரில் கர்ணீக பிராமணக் குலத்தில் விடோபா வென்பவர்க்கும் ருக்மா பாயிக்கும் பிள்ளைகளாய்ப்பிறந்து நிவர்த்தி சாது ஞ்ஞானேசுவரர் சோபான்தேவ் முக்தாபா யென்னுந் திருநாமம் பெற்றார்கள்.

இவர்களுடைய வரலாறுகள் அங்கங்கே அவரவர்கள் சரித்திரங்களிற் சவிஸ்தாரமாய்த் தெரிந்துக்கொள்ளலாமெனத் திருவாய் மலர்ந்தருளிய நாபாஜிசித்தரை உத்தவசித்தர் முதலானவர்களும் தோத்திரஞ்செய்து முன்னம் வேதவியாச ரிவ்வுலகிலவதரித்து என்ன திருவிளையாடல் செய்தாரோ, அதையும் மற்றவர்களுடைய சரித்திரங்களையு மாதியோடந்தமா யாங்களறியக் கருணை கூருமையா வென்று வணங்க, நாபாஜிசித்தர் அகங்குளிர்ந்து முகம் மலர்ந்து ஓ சித்தர்களே! உங்களிஷ்டப்படியே சொல்லுவேன். ஆனல் இன்று ஜெயதேவ் திவ்விய சரிதையைச் சொல்ல என்ன பாக்கியஞ் செய்தேனே வென்று புளகாங்கத்துடன் சொல்லத்தொடங்கினர்.

ஸ்ரீமந்நாராயணர் திருவடிகளே சரணம்—குருவே துணை.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீ மகா பக்த விஜயம்.

## முதலாவது

# ஜெயதேவஸ்வாமிகளின் சரித்திரம்.

### பகவான் துதி.

விருத்தம்.

திருவைகுந்தந் தனில்வாழும் தேவேகோவே தேவரெலாம்
மருவித்துதிக்குந் திருமாலே மணியேகணியா மாதவமே
பெருமைதருமெம் பெருமானே பீதாம்பரதா மோதரனே
அரியபொருளே அச்சுதனே அடியேனுன்றனடைக்கலமே.



### ஜெயதேவர் துதி.

விருத்தம்.

ஜெயதே வென்னுந் தேசிகனே திருடர் தமையாட் கொண்டவனே
மயலா வுயர்நீங் கியபதுமா வதிக்கா ருயிரை யளித்தவனே
ஜெயமீ யுன்றன் சரிதைதனைச் சீராக செயவுன் றிருவடியைத்
தயவோ டீந்தென்றனையாளச் சரணம் புகுந்தேன் சரணருளே.

முதலாவது

## ஜெயதேவர் உற்பத்தி அத்தியாயம்.

சீர்தருங் கணபதியேயென் றோர்தரம் நினைக்கும் பக்குவா பக்குவர்களி னெக்காரியங்களும் அக்கணமே முடியச் சர்வ விக்கினங்களையும் நிக்கிரகிக்கும் சுக்லாம்பரதரனான விக்னேஸ்வரன் மூலாதாரத்தினும் நோக்கற்கரிய சாக்கியாய் ஜீவன் மோட்சமடைந்தோர் வாக்கினில் நீக்கமின்றிய வாக்காளை நாக்கினிற்றரித்த எண்ணோக்கமுள்ள பிரமாவைச் சுவாதிஷ்டானத்திலும் பகிர்முகம் விட்டு அகமுகப்பட்டு அகம்மதைக் குன்றிச் சட்டகஸ்மரணையின்றிச் சுகமபமாயிருப்போர் வாசஸ்தானத்தை நீங்காத் திருமகளை வட்சஸ்தலத்திற் பட்சமுடன் றரித்த அச்சுதனை மணிபூரகத்திலும், தர்மங்களெல்லாந் தெரிந்து மர்மங்களெல்லாமறிந்து, கர்மங்களெல்லாமெரிந்து, பிர்மானந்தம் விரிந்து, தன்னை மறந்திருப்போர்க் கன்னமும் பாலு மேந்திக்கொண்டவர் பின்னிழலைப்போற்றிரியும் அன்னபூரணிக்கிடபாக மீந்த சங்கரனை அனாகதத்திலும், பிர்மானந்தவாரி கோடியில் மூழ்கி, திரிகரணத் துன்பங்கள் மாழ்கி, உன் மனியவஸ்தையி லிருப்போர்க் கேவல்செய்யும் மாதவர்மேற் றனதாக்கினையைச் செலுத்தா மயேஸ்வரனை விசுத்தியிலும் ஜாக்ரத சுவப்ன சுழுத்தி துரியமுங் கடந்து, துரியாதீத நிலையைப் பொருந்திச் சங்கல்பவிகல்பமென்னும் இராப்பகலற்று நிருவிகற்பமாயிருப்போரைப் பணியும் பத்தர்களின் சித்தத்தைச் சுத்தமாக்கும் பிரசித்தனான நித்திய சத்திய சதாசிவத்தை ஆக்னேய சக்கிரத்திலும் தரிசித்த பரிசுத்த உத்தவ சித்தர் முதலானவர்களைநோக்கி இருமணிகளையும், ஒருமணியாக்கி ஆயிரத்தெட்டிழ்தப் பங்கய மேடையில் ஒருகாலை நீட்டி, ஒருகாலை யாட்டி காலனை வாட்டி, வீணையை மீட்டி, ஓசையைக்கூட்டி, சுகாமிர்தத்தை யூட்டிய சட்சக்ரேஸ்வர ரறுவரும் மோருருவாகிய கோடிசூரியப் பிரகாசகிரணங்கள் திரணங்களாய் மக்கும்படி ஒளி விளங்கிய சுப்பிரமண்யரை பிரமரந்திரத்திற் காணுமற்கண்டு ஆனந்தங்கொண்டு அவாங்மனகோசரமாய் மூவர் தேவர் மற்றியாவராலு மறிவதற் கரியபரமாய், அபரோக்ஷமாய், அத்வைதமாய் சாக்ஷாத்காரமாய், தன்மய சின்மயமாய், நிஷ்கள புஷ்களமாயிருக்கும் அச்சுப்பிரமண்யமே தானான நாபாஜி சித்தர் சொல்லுவார்.

ஓ சீலர்களே! சற்சங்கத்துக் கனுகூலர்களே ஸ்ரீரகுநாயகர் தன் மார்பகத்திற்போட்ட மாலையிலுள்ள முத்துக்களை ஒன்றொன்றாய்க் கடித்துப் பார்த்து ஞானரசமில்லையென் றத்தாமத்தை யெறிந்துவிட்ட பூரண பிர்மக்ஞானியாகிய மாருதியின் திருவுருவை வெகு சித்திரமாய் வரைந்திருக்கும் நீட்சியான அனுமக்கொடிகளும், பிருங்கிசனைத் தன் சேட்டைக் காற்றினால் வாட்டியக்கேச னழகிய வடிவை யெழுதியிருக்கு மாட்சிமையான கருடத்துவஜங்களும், புருஷமிருகத்துக்கும் பீமனுக்குமுள்ள வழக்கைத் தீர்த்த நடுநிலைமைப் பூண்டத் தருமமே ஒருருவான உதிஷ்டிரன் முதலான அரசர்களும் நாணும்படியான நீதிகள் வாய்ந்தவர்களாற் கட்டப்பட்ட வாயுமண்டலத்தின் ஸ்பரிசத்தையும் பாபத்துக்கஞ்சி கோபித்துக் கொண்டிருக்கும் மேகசலத்தின் ஸ்நானத்தையுங் கோரியதொத்த நீண்ட கோபுரங்களும் மாபுரங்களும் மாதர் போகத்தையும் மோகத்தையும் வென்றவர்களால் வகுத்த சத்தியலோகத்தார் பார்த்தாச்சரியப்படும்படியான ஓமகுண்டங்களும் பிதுர்பிண்டங்களும் கனகாசை கனவிலுமில்லார் புதுக்கிய தேவர்கள் மகிழத்தக்க யாகசாலைகளும் பெருஞ்சோலைகளும் சொற்பனத்திலுந் தப்பிதஞ்செய்யா அற்புதமானவர்களாற் செய்த தர்மதேவதை வாஞ்சித்திருக்கும்படியான அன்னசத்திரங்களும் அதில் வன்ன சித்திரங்களும் மறந்தும் அதர்மம் செய்யாம லறமேசெய் தானந்தமடையும் புனிதர்களா லியற்றிய ரிஷிகள் சந்தோஷத்துடன் எப்பொழுதுந் தங்கி வாசஞ்செய்யும் படியான பூந்தோட்டங்களும் அதில் நீரோட்டங்களும் இதரபுருஷர்கள் நம்மைக் காணி னுசித்து மயக்கமடைவாராதலால் நமது பதிவிரதா தர்மங்கெட்டுப் பாபகர்மம் மேலிட்டு நிரையத்துக் காளாவோமென் றச்சமுற்றுப் புறம்போகாது மறைந்திருக்கும் அளகேசனுந் துதிசெய்யும் மேடைகளும் சிங்காரவீடுகளும், மேனகை யூர்வசி அரம்பை முதலானவர்களும் நாட்டியஞ் செய்யப் பின்னிட்டு இதுவென்ன முழக்கமென் றச்சமுற் றாகாயத்திலிருந்தபடி ஆவலுடன்கேட் டுளமகிழும் விதரணையான மத்தளத் தொனிகளும் வீணையினொலிகளும், பவுத்தாவதாரமாகிய பூரணானந்த நிஷ்டையிற் றிகழ்ந்து புனமகிழ்ந்து இதுவே யிருப்பிடமாகி க்ஷீரசாகரத்தை நினையாதிருப்பதென்ன பயித்தியமோ? சீக்கிரம் சேஷன்மேற் சயனிக்க வாருமென் றோங்கார சப்தத்துடன் கூவும் வாரிதியின் கோஷ்டமும், ஓ கிருஷ்ணா! இந்த நாதானந்தம் க்ஷீரசாகரத்திற் நேட்கக் கிடையாததா லிச்செகநாதத்தை எப்பொழுதும் விட்டு நீங்கா திருப்பா யென் றாசையுட னோசையாய்ப்

பாடும் பரம பாகவதர்களின் விஷ்ணுநாம சங்கீர்த்தன கோஷ்டமும் முழங்கும், நான்கு வர்ணத்தாரு மொரு மைப்பட் டன்னமுண்ணும் ஸ்தலமாகியும், புண்ணிய க்ஷேத்திரமாகியும் அழகும் புகழும் ஒங்கிய ஜகநாத மென்னும் திருநாமம் படைத்த திவ்யநகருக்குச் சமீப மாகிய பில்வகாமென்னும் ஊரிலிருப்பவர் திவ்விய திரு நாமந்தரிப்பவர் பந்தபாசங்களிற் குறைந்தவர் மந்த புத் திகளெல்லாம் மறந்தவர் இந்திரிய சேஷ்டைகளிறந் தவர் தொந்தங்களெல்லாந் துறந்தவர் நிந்தையிலிருந்து பிரிந்தவர் எந்தசாஸ்திரங்களு மறிந்தவர் இந்தவாழ் வற் பமென்றறைந்தவர் நந்தனந்தனன் பக்திநிறைந்தவர் விந் தையாம் ஸ்திதியிற் சிறந்த சிந்தைமயர்ந்தருளி னுறைந் தவர் அந்தமாம் பிர்மத்தில் மறைந்தவர் சிந்தானந்தத் திற் கரைந்தவர் அந்தணர் குலத்திற் பிறந்தவர் அல் லும் பகலுங் கல்லும் உருக நாராயணன் திருநாமங்களை பாராயணஞ் செய்யும் நாராயண சாஸ்திரியென்னும் திருநாமமுள்ள ஒர் புண்ணிய சீலர்.

விமலானந்தமே ஒருருவாகிகமலாபாயென்னும்உத் தம சித்தத்தினையுடைய பத்தினியோடும் வித்தகமாகிய இல்லறத்தில் நல்லறத்தோடிருந்து அதிதிகட் கடிக்கடி விருந்து அன்புடன் செய்து கர்மங்களைக்கொய்து சதா சாதுக்கள் சங்கமும் சத்கதாப்பிரசங்கமும் பெரியோர் கள்பால் வணக்கமும் உரியோர்கள்பா லிணக்கமும் நாவிலரிகரியெனுஞ் செபமும் நாடோறும் பிசகாமற் செய்புந்தபமும் எப்போதுங்கரத்தில்வேதமும்இசைப்ப தெல்லாஞ் சுத்தபோதமும் இல்லையென்பவர்க்கியுந்தான முந் தொல்லைவந்தாலும் முனியா நிதானமும் சஞ்சல மில்லா யோகத்தியானமும்சந்தோஷவாரியிற் படிந்திடும் மோனமும் பெற்று நித்தமு முக்தமோத்தமனாகிய ஜனர்த்தனனுக்குதனுமனர்த்தனங்களைத்தாரைவார்த்து உச்சித மனதுடையவனாய் துச்சவிச்சைகளை யெல்லாம் வெறுத்து அஞ்ஞான பாசங்களை யறுத்து சகல சாம் பிராச்சியத்துடன் பிர்மானந்தத்தைப்பெற்று நிர்விகற்ப நிலையையுற்று வாழ்கின்ற காலத்தில், கமலாபாய் தனக் கெல்லாப் பாக்கியமிருந்தும் புத்திரபாக்கிய மில்லாக் குறையால் ஸ்ரீஜகநாதரை விசுவாசித்து அன்புடன் பூசி த்து, ஓம் அரிகரி நரஹரி முரஹரி அம்புஜாட்சரியெனக் கோஷித்து, புத்திரவாஞ்சை விசேஷித்து, ஓபகவானே! சாந்தமே ஒருருவான ஓர் மைந்தனை யான் பெறும்படி யான வரந்தந்தருளல் வேண்டுமெனச் சந்ததமுஞ்சிந்த னஞ்செய்துக்கொண்டிருக்கிற காளில் ஒரு நாளிரவில்,

இலட்சுமியை வட்சஸ்தலத்திற் றரித்த பச்சைவர் ணனான அச்சுதனானவர் நாராயணசாஸ்திரியார் கனவில டைந்து, ஓ எனக்குகந்த பக்தனே! ஜீவன் முக்தனே நீயும் உன் மனைவியு மென்னை நோக்கிச் தவஞ்செய்தற் காக வானந்த மடைந்தேன் அதனாலும் மனைவிகோரிய வரமுந்தந்தேனிதனா லுன்குறையும் உன் மூதாதைகள் செய்த குறையும் நீங்குமென்றறைந்து போயினர்.

உடனே சாஸ்திரியார் விழித்து தன்னாயகியை விளித்து, ஓ பெண்ணே! என்னிருகண்ணே! என்கன வில் பகவான் வந்து உன் மனையாளிச்சித்த வரங்கொடுத் தேனாதனால் உன் குற்றமும் உன் மூதாதைகள் குற்ற மும் நீங்குமென்றோதிப்போயினர் ஓ என் குலவிளக்கே! கோதிலாவமுதே! பென்னவரத்தை பகவானிடங்கேட் டாய், அதை யிக்கணமேசொல்லும் பாவையேபூவையே யென்றுவலுடன்கேட்டார் அதற்கப்புண்ணியவதி இன்ப மொழி புகன்ற அன்பனை வணங்கி, ஓ சுவாமி! நமது குறை நீங்க ஆனந்தமோங்க ஆரணத்தின் கருத்தின்படி முத்தியளிக்கும் புத்திரனைப்பெறும் வரத்தையே வாஞ் சித்தேனெனச் சந்தோஷத்துட னுரைத்தாள் அவ் வசனத்தைக்கேட்ட அந்தணர்மிகவும்வியாகூலமடைந்து அடிபேதாய்! அறிவில்லாக்கோதாய்! (எண்ணறக்கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தி) யென் னும் பழமொழியை நிலை நாட்டினாய், பேதமைக்குணத் தையே காட்டினாய் அழியாப்பதத்தையும் பதத்தை யடையும் விதத்தையுந்தரும், பகவான் தரிசனத்தையுங் கோராமல் இகவாசையைக் கோரினாய், பலநாள் ஜக நாதரைநோக்கித் தவஞ்செய்த நீ மோட்சத்தைக்கேட்க லாகாதோ? அதனால் சஞ்சிதகர்மங்களெல்லாம் நீங்கிப் போகாதோ? இகவாசையான மகவாசைக்குட்பட்டாய், நீகெட்டாய், பகவானைக்கேட்பதுநித்தியப்பொருளையா? அநித்தப்பொருளையாசுஷணத்திரயங்களைவாஞ்சிப்போர் க்குபந்தமென்றும், மெய்ப்பொருளை யாசிப்போர்க் கின் பஞ்சொந்தமென்றும், புராணங்களில் முறையிடுவதறி யாதவளா? சீதேவியைப்பூசித்துமூதேவியைவேண்டியது போலவும் மலையைக்கெல்லிஎலியைப்பிடித்ததுபோலவும் பாதாளஞ்சனம் போட்டுப் பருத்த எலும்பைக்கண் டெடுத்தது போலவும், நெடுநாளாய்தவஞ்செய்துயுத்தத் தைக்கோரிய வாணாசுரனைப்போலவும், பேரின்பத்தை நீக்கிச் சிற்றின்பத்தைக்கோரிய குப்ஜையைப்போலவும் செய்தாய், ஓ மாதே! காளையால் பரமபதம் பெறுவோ,

மா? பரமானந்த முறுவோமா ? வெகு நாளாய் விரதமிருந்தும் வீணாய்ப்போனாயே ? நிறையத்துக் காளானாயே? என்கிற பலவார்த்தைகளாடி மனம்நைந்து வாடி பகவானைப் பாடி பரமானந்தத்தை நாடி நிஷ்டையில் வெகு நேரமிருந்து பிறகு தெளிந்து மனையாளுடன் பேசாமலிருந்தார்.

கமலாபாய், மணாளன் முன்னிற்பதற்கு நாணமடைந்து மிகவுமிடைந்துபுத்திரரைப்பெறுதவர்களுக்கு முத்தியில்லையென்றுரைக்கும் கர்ம காண்டத்தை நம்பி மர்மமறியாமற் பிரமைக் குள்ளாய்ப்போனோமே? துச்சுவிச்சையாற் பேதையானோமே? என்றனந்த வித வெண்ணங்களால் மனம் புண்ணாகி, ஸ்ரீஜக நாதரை நினைந்து கண்ணீரால் நனைந்து ஓ பகவானே! சதிபதிகளாகிய எங்கள் மூவேழிருபத்தோர் தலை முறையோரும் மோட்சமடையும் பாக்கியமளிப்பாயெனப்பணிந்து இருவருமன்னாகாரமின்றிப் பகல் முழுதுங் கழித்து இரவிற் றுயில்வராமையால் விழித்துக்கொண்டிருந்தார்கள் அப்போது பகவான் ஓரந்தணனாகவந்துஉபயருக்குத்தரிசனந்தந்து, ஓ பத்தியிற்சிறந்த உத்தமர்களே ! புத்திர பாக்கியத்தாலும் மூதாதைகட்கும் முத்தியும் விரத்தியினாலுங்களுக் கென்பத்தியும் அளித்தேனினி ஸ்நான பானஞ் செய்திருவரு மொருமித்திருங்களென்றுரைத்து அந்தர்த்தான மாயினார்.

அவ்வற்புதத்தைப்பார்த்த பாகவதன் தனக்கிருந்த மாச்சரியங்கெட்டு வாச்சரியப்பட்டு காதலியை நோக்கி கக்கசத்தைப் போக்கி, ஓ மாது சிரோமணியே ! என்னிருகண்மணியே ! உன்னாலென் குலத்தோரும் நானும் கிருதார்த்தரானோ மென்றுரைத்து முன்பினும் அன்புமேலிட் டின்புடன் கூடியிருந்தார் இப்படிசிலநாள் கழிய இலட்சுமியை வட்சஸ்தலத்திற்றரித்த அச்சுதனுத்தரவாலும், சதிபதிகளிருவருமொரு மனதாய்ச் செய்யுந் தபோபலத்தாலும், முனிவருக்குள் 'முதல்வர் பராச மகாரிஷியின் புதல்வர் வேதங்களைக் கையிற்பிடித்துக்கொண்டே பிறந்தவர் என்னுஞ் சிரஞ்சீவிகளாகிய அரிஞரிற் சிறந்தவர், பெண்ணாசை முதலானதுந் துறந்தவர், வேதவாக்கியங்களையறிந்தவர், மூவுவகத்துவேதங்களை விரித்தவர், நாவிற்றுமோதரனுமந் தரித்தவர்ஆகிய வேத வியாசர் கௌசலையின் கர்ப்பத்தையடைந்த மகாவிஷ்ணுவைப்போலவும், சுமுத்திரையின் கருவிலடைந்த ஆதிசேஷனைப்போலவும், கமலாபாயின் வயற்றிலடைந்து பிறர்குற்றத்தைநாடாப் பெரியோர்களின்வாழ்வைப் போலவும், ஜீவகாருண்யமுள்ளோர் செய்யுந்தவத்தைப் போலவும் கற்புள்ள ஸ்திரீகளுக்குண்டாகுஞ் சுபத்தைப் போலவும் மோட்சவிச்சையுள்ளோ ரன்புடன் செய்யுஞ் செபத்தைப்போலவும், பெருமை சற்றுமில்லார் குடும்பத்தைப்போலவும், விரக்தியடைந்து பூரணமான பின் திவ்வியமங்கள விக்கிரகத்தைப்போன்ற திருவுருவுடனவதாரஞ் செய்தருளினார்.

அழகிய தநயனைக்கண்ட தாயுந்தந்தையும் அன்பாய் பார்த்து மார்புடன் சேர்த்துப் பிறபுக்குருடன் கண் பெற்றதைப்போலவும், மலடிமைந்தனைப் பெற்றதைப் போலவும் தரித்திரனுக்கு க்ஷேமங்கிடைத்தாற்போலவும், ய சகனுக்கு இரா[illegible]ரீகம் கிடைத்தாற்போலவும், அரியைப்புகழ்ந்து கண்ணைக்காக்கும் இமையைப்போலவும், சன்றைக்காக்கும் கபிலையைப்போலவும், கற்பைக் காக்குங்காந்தையைப்போலவும்உயிரைக்காக்குமுடலைப் போலவும், காப்பாற்றிக் கர்த்தனைப்போற்றி தருமந்தாராளமாய்ச்செய்து தங்களுக்குற்றசங்கல்பத்தைகொய்து அனைவருக்கும் விருந்திட்டு ஜெயதேவனென்று பேரிட்டு ஐந்துவயதானதே நற்சுபதினத்தில் பலவாத்தியங்கள் முழங்க பிராமணோத்தமர்கள் சூழ உப நயனஞ்செய்து வித்தியாப்பியாசமுஞ்செய்வித்து நான்குவேதஆறுசாஸ்திரபுராண விதிகாசங்களையும் ஓதுவித்து வயதுமுதிர்ந்த பின் தங்கள் பந்துக்களில் திருந்திய செல்வமும் அருந்தவக்கல்வியும் செவ்வியதேசமும் திவ்வியயோகமும் கண்டுபோல் மொழிகளும், கெண்டையின் விழிகளும், கமல நிகர்த்தாள்களும், விமலமுள்ள தோள்களும், பதியின்பா லடக்கமும், துதியுனெடுக்கமும், பரமானந்த பக்தியும் திரமான புத்தியும், கற்புடைமானமும், விற்பனதியானமும், கருணையுள்தானமும், ஸ்மரணையொடு மோனமும், மேகத்தைப்போன்ற கூந்தலும் சந்திரனைப்போன்ற முகமும், பவளம் போன்ற வாயும், முகத்தைப்போன்ற பற்களும், மெதுவான நடையும், மெலிவான விடையும் உள்ள பத்மாவதியென்னுங் கன்னியைப்பேசி பலருக்குஞ் சந்தனம் பூசி பந்து வர்க்கத்துடன் பலருஞ்சேர்ந்து சேர்ந்து விந்தையாய் மணஞ்செய்ய மிகக்களி கூர்ந்து, அன்பாய்த் தென்பாய் அருமையாய்ப் பெருமையாய்ப் பச்சைபந்தல் பட்சமாய்ப்போட்டு உச்சிதவாழைகளுயர்ந்ததாய் நட்டு மலர்களின் தோரணம் மாவிலைத் தோரணம் பலரும் மெச்சப் பரிவாகக்கட்டி ஜெயதேவுக்குச் சீரணிபூட்டி நயபத்மாவதிக்கு நகைபல சூட்டி மணக்கோலஞ் செய்து மலர்பந்தல் கீழே

இணக்கமா யிருவரை யிருந்திடச்செய்து ஓமம் வளர்த்தி
உச்சிதம் நடத்தி நேமமனைத்தும் நேசமாய் க்ஷேம
மீவேளையிற் றெரிவையர் சூழச்செய்து க்ஷேமமாயிருவ
ருஞ் சேர்ந்தென்றும் வாழ, வேதியர் வேதகோஷ்டங்
களை யோத, கோதையர் மங்கள கோஷ்டமோத, தாள
மும் மேளமுஞ் சதிருடன் முழங்க, ஆளும் பதிபதம்
அன்புடன்வழங்க, அமரர்கள் சாக்ஷியாய் அக்கினிசாக்ஷி
யாய் குமாரன் கைகளால் கோதையின் கழுத்தில் மங்
கிலியத்தை வகையுடன் தரித்து அங்கையாற் பலரும்
அக்ஷதை தூவி ஆசிகள்செய்து அலர்மழைபெய்து மாசு
கோத்தமர்கள் மனமிகமகிழ பந்துவர்க்கத்துடன் பல
ரும் விண்டு விந்தையிதென்று மெச்சிப்புட்கொண்டு உள்
ளங்களிந்து உடலம்பூரித்து விள்ளொணுவன்பினை மேவி
யேவிபந்து வதுவை முடிந்தபின் சகலருந் தங்கடங்க
ளிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு ஜெயதேவும் பத்மாவதியும் அன்புடன் இன்
பபோகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். எப்
படியெனின், உடல்வேறாக உயிரொன்றாக வடிவிரண்
டாக மனமொன்றாக ஒருவர் மொழியை ஒருவர் தள்ளா
மல் பிரியமில்லாப் புன்மொழிகள் விள்ளாமல் இருவரு
மொன்றா யேகபோகமாய் மருவிதிருமால் மாயையிலிருந்
தும் கடினமில்லாமற் கசந்து பேசாமல் விடியுமுன்னெழு
வார், வேத மோதிடுவார், ஆதிநாராயணன் அரிநாமங்
களை ஒதியெந்நாளு முளங்களிகூர்வார், பெரியோர்க்
கேவல் பிரியமாய்ச் செய்வார், உரியோர் வந்தா லு
வகையோ டழைப்பார், சொன்னதானங்கள் சும்மாசெய்
வார், அன்னதானங்க ளன்புடன் செய்வார், அநித்ய
வாழ்வி லாசையேயென்பார், ஜெனித்ததிவ் வாஞ்சை
யாற் றெனிந்தோ மென்பார், சத்தியமானது தவமே
யென்பார், துர்ச்சனசங்கந் தொல்லையாமென்பார், சற்
ஜனசங்கஞ் சாதனந்த மென்பார், சாதுக்கள் வந்தாற்
சாந்தமாய்ப்பணிவார், போதமீந்தெமையாள் புனிதரே
யென்பார் இவ்வித நன்மொழிக ளாடிக்கொண்டு இரு
வநம் மனமொத்து மூவருந் தேவரும் முத்தரும் சித்த
ரும் யாவரும் மனமகிழ வாழ்கிறகாலத்தில்,

நாராயண சாஸ்திரியாரும் கமலாபாயும் விரக்தி
யினாலுங்களுக்கு பக்தியும், பக்தியினால் முக்தியுமுண்
டென்றுரைத்த பகவான் வாக்கியத்தை நினைந்து இனி
நமது மைந்தனுக்கோர் குறையுமில்லை கற்புள்ள பத்மா
வதி யிருப்பதால் வராது யாதொருதொல்லையுமென்று
யோசித்துப் பகவானைப்பூசித்துத் தந்தைதாயிருவருந்
தவஞ்செய நினைந்து விந்தையாம் வனந்தனில் மேவிடத்
துணிந்து தநயனைப் பார்த்துச் சாங்கமாயிருந்தால்விநய
மாய் மோட்ச நீ மேவுவாயென்று மருமகடன்னை மகிழ்ச்
சியாய் நோக்கித்தெரிவையே பதியே தெய்வமென்றோதி
அடவியிற்போய் நல்லருந்தவம் புரிந்து மடமையைத்
தவிர்ந்து மகிழ்ச்சியா யிருந்தார்கள். ஜெயதேவும் பத்மா
வதியும் தந்தைதாய் வனத்திற் சென்றதற் கயர்ந்து
நாமுஞ் சிலநாளில் வானப்பிரஸ்தத்தையே கைகொள்ள
வேண்டுமென்று உறுதி கொண்டிருந்தார்கள்.

ஜெயதேவர் உற்பத்தி அத்தியாயம்
முற்றிற்று.

---

## இரண்டாவது
## ஜெயதேவர் விரக்தி அத்தியாயம்.

கேட்டீர்களோ சித்தர்களே! பின்பு ஜெயதேவென்
னுந் தேசிகோத்தமனுந் திவ்விய பத்மாவதி யென்னுந்
தேவியும் சந்தோஷத்துடன் சகல சவுக்கியங்க ளனுப
வித்துக்கொண் டிருக்குந் தருவாயில் ஜெயதேவுக்குத்
தவத்துக் குறுதியான சீவகாருண்யமும், மோட்சத்துக்
குரிய பிரமக்ஞானமும் மேலிட்டுக் காலையிலிருந்து மாலை
மட்டும் தன்னையறிந்த பிரமக்ஞானிகளுக்கும் காயத்திரி
ஜபஞ்செய்யும் பிராமணோத்தமர்களுக்கு ஆசையோடு
யாசகஞ்செய்யும் அதிதிகட்கும் இல்லையென்னும லிருந்த
தை யெல்லாம் தயவு தாட்சண்ய மிகுந்து சாந்தமனத்து
டன் தந்து திரவியஞ்சற்றுமில்லாமல் ஆவினந்தன்னி
லோராவில்லாமல் தானியந்தன்னிற் றவிடில்லாமல் வீட்
டையும் விற்று மேலவர்கீந்து காட்டிலிருப்போர்களைப்
போலாகி மங்கிலியந்தவிர மற்றொன்றின்றி எங்கனும்
பேச விவர்செய்நன்றி கோவணமணிந்து குவலயந்தன்
னில் சாவடி சந்திரந்தன்னிற்றங்கி அச்சுதகேசவ னாதி
நாராயணன் உச்சிதநாமங்களுளத்திற் பாராயணம் க்ஷண
மறக்காமல் ஜபித்தகமகிழ்ந்து கணவனுங் காந்தையுங்
கர்த்தனைப்புகழ்ந்து குட்சி நிமித்தம் பிட்சைக்கேகி பட்ச
முள்ளோர்தரும் பண்டங்கைக்கொண்டு சதிபாற்சென்று
தையலே கொள்வாய் மதியுளோரளித்த வஸ்துவென்
றீந்து தடாகந்தன்னில் ஸ்நானமுஞ்செய்து அடாதுசெ
ய்தாலலைச்சலென் றுரைத்துப் பூசைகள்செய்து புராண
மும் படித்து மாசுகோத்தமரை வாஞ்சையாய்த்தேடி
அன்பரைக்கண்டு அடிபணிந்தேத்தி அன்புடன்மலர்களை

யணிந்து பூசித்து நாராயணன் கதை நல்லமுதென்று பாராயணஞ்செய்யும் பத்தரைப் பணிந்து அரியினுமை மன்புடனேதிப் பிரமஞானம் பெருமையென்றேதி அதிதியின் மனதை அரக்காக்கரைத்து துதிசெய்தெங்க டோன்றலே யென்று போனகஞ்செய்யப் புனிதனே வாரும், ஞான விளக்காம் நாதனேவாரும், அருளோரு ருவா மையனேவாரும், பொருளீந்தெம்மைப்புனிதனே வாரும், சுயம்பிரகாசச் சோதியேவாரும், நயந்தருங் குருவே நலமுறக்காரும், சின்மயானந்த தேவனேவாரும் தன்மயமடியேன் சார்ந்திடக்காரும், என்றத்துறவியை யின்புடன் கொணர்ந்து இன்றிங்கனமுண் டெங்களைக் காருமென்றுரைத்து ஸ்ரீ அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகராகிய ஸ்ரீமந் நாராயணன்மேல் நவமாயனேக கீர்த் தனைகளும் அஷ்டகங்களும் பாடிக்கொண்டிருக்கும் போது,

பத்மாவதியும் பதிகொண்டுவந்து கொடுத்த பண் டங்களை ஒரு நொடியிலதிமதுர பாகமாய்ச் சமைத்துப் பல விதங்களாலமைத்துப் பதியைப்பணிந்து பாதங் களில் நயனங்களை யணிந்து குருதெய்வமான கொழு நனேவாரும், சுரநரரேத்துந் தூயனேவாரும், அன்ன முண்ணுதற் கென்னப்பனேவாரும், அன்னம் புசிப்பித் ததியைக்காரும் என்றவ்வம்மணி ஏந்திடும் பொழுதில், நன்றருள் ஜெபதேவ் நாயகிதனைப்பார்த் திதமாக்கூவு மெழிலே! பொழிலே! பதுமாவதியே! பரிபூரண மதியே! அன்னமே யன்னம் அதிதிக்கிடவில்லை இன் னமேனுன்னிருள் மனங்கெடவில்லை என விசைத்து சீக்கி ரம் படைப்பாயெனவோதி அன்னமுணத் தாமதமாச்சு தென்றேதித் தரிதமா யதிதியின் தூயடிபணிந்து பிரிய மாய் நோக்கிப் பிரானேயென்று படைத்தவமுதினைப் பண்புடனூட்டி அடைக்காயிலையு மன்புடன்கொடுத்துச் சந்தனம் பூசிச் சந்தோஷம் பேசி எந்தையேயென்ற னிறைவனேயென்று பந்தமில்லாத பரமனேயென்று அந்தரமுகத்தி லமர்ந்தோயென்று வேதவாக்கியவிவரங்க ளெல்லாஞ் சோதியைக்காணுஞ் சூசனையெல்லாம் மன தைக்கொல்லு மார்க்கங்களெல்லாம் மனங்குவிந்தொடுங் கும் மார்க்கங்களெல்லாம் சுவாசமடங்கும் சூக்ஷமமுஞ் சலன சுவாசமடங்குந் துவாதச வெளியும் வந்தவர் மயங்க மாய்ந்திடவுரைத்துச் சிந்தைகள் மறந்து தருக்கு வாயிருந்து பரமானந்தன் அன்புடன் புசித்துப் பசுமரத் தாணிபோல் இன்பமாயிருந்து ஏகமா நிறைந்து துன்ப மகன்ற துரியமேதானாய்த் தன்னை மறந்து தலைவனிற் கலந்து பின்னமில்லாத பிரமமேதானாய் நினைவுங்கனவும் நாஸ்தியாய்ப்போக நனவிற் சுழுத்தியை நன்றுயடைந்து ஞானந் ததும்பி நயனநீர்பெருக ஆனந்தத் தூக்கந் தன்னிலமர்ந்து நிவத தீபந்தைப்போலவும் நிஸ்தரங்க சமுத்திரம்போலவும் பிர்மநிஷ்டையிலிருந்தார்.

பத்மாவதி பதியின் பாதங்களை மனதிற் பதித்து அதிதியினடிகளை யன்புடன் துதிக்கப் போய்வாருமென் றப்புனிதரையனுப்பி தாய் தந்தைகளைத்தா னினையாமல் பதியே! அருளாம்பதியே! பொருளாம்பதியே! துணை யாம்பதியே! புணையாம்பதியே! குருவாம்பதியே! தேவாம்பதியே! அன்பாம்பதியே! யின்பமாம் என்று துதிகொண்டு கொழுநன் பணிவிடையே தனக்குரிய நியமமாகக் காலங்கழிக்கத் தொடங்கினள். இவ்விதமா யிருவருமிருக்குங் காலத்தில் அவ்வூரிலுள்ளோர் ஜெய தேவ் சுவாமிகள் செய்யுங் கீர்த்தனைகளையும் அஷ்டகங் களையும் சேர்த்து ஓர் புத்தகமாக்கி அதை யத்தியந்த பக்தியுடன் பாராயணஞ் செய்துக்கொண்டிருந்து ஜெக நாதத்தில் திருவிழாவாகும்போது பில்வகாமிலிருக்குஞ் சிலர்போய் ஸ்ரீ ஜெகநாதருடைய திருச்சன்னிதானத் தில் அப்புஸ்தகத்தை வைத்து நவரசாலங்காரமான சுலோகங்கள் அஷ்டகங்கள் கீர்த்தனங்கள்பாடித் தோத் திரஞ் செய்யும்போது ஸ்ரீ ஜெகநாதருடைய கோயிலி னுள் அங்கிகரித்தேன் அங்கிகரித்தேன் ஆனந்தமடைந் தேன் ஆனந்தமடைந்தேன் என்கிற சப்தம் முகூர்த்த பரியந்தம் உண்டாக,

அதுகேட்ட திருநாளுக்கு வந்திருந்த சகலருஞ் சந்தோஷவாரியி லமிழ்ந்தவர்களாய் ஜெயதேவ் சுவாமி கள் திருவாய்மலர்ந்தருளிய வாக்கியங்களை வேதமென்று நம்பிச் சகலருந்துதித்து ஆனந்தமேலீட்டால் கண்ணீ ரைப்பெருக்கித் தன்னைமறந்து நடனஞ்செய்யத் தொடங் கினார்கள். அதையறிந்த அவ்வூரிறைவன் உற்சவம் நடக் கும்போதெல்லாம் நூதன கீர்த்தனங்களும் அஷ்டகங் களும்செய்து அரங்கேற்றுவோனுதலாற் றான்செய்ததை யாவரும் தோத்திரஞ் செய்யும்படியாகப்பலதரங்கொடுத் தும் அங்கிகரியா அந்தணர்களைநோக்கி முனிவுகொண்டு இதுவுஞ் ஜெகநாதருடைய தோத்திரமன்றி வேறே, இதையேன் அநுஷ்டிக்காமல் மறுக்கின்றீர்கள் ஜெய தேவ் செய்ததை மாத்திரம் ஏன் துதிக்கின்றீர்களென வற்புறுத்திக் கேட்க,

அதற்கு விப்பிரர் நீர்செய்த வாக்கியங்க ளடங்கிய புத்தகத்தைப் பகவானங்கிகரித்தால் நாங்களு மங்கிகரிக் கின்றோ மென்றிரண்டு புத்தகங்களையும் ஜெகநாத ருடைய திருப்பாதத்தண்டையில் வைத்து அரணம்மூடி

இராமுத்திரை போட்டுச் சில அந்தணர்களையுங் காவலரையும் காவல்வைத்து தங்கடங்க ளிருப்பிடஞ்சேர்ந்து மறுநாட்காலையி லனைவரு மொன்றாய்ச் சேர்ந்துவந்து பார்க்கையில் வெளியிலெறிந்திருக்கும் இராஜன் பாடிய புத்தகத்தை நோக்கிக் கவாடந்திறந்து ஜெயதேவசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய புத்தகத்தின்மேல் அங்கீகரித்தேனென் றெழுதியிருப்பதைப்பார்த்துக் கரங்களைச் சேர்த்து ஆனந்தமடைந்து வேதமென்றும் நாற்றிசையோரும் பாராயணஞ்செய்யத் தொடங்கினார்கள்.

அப்போதவ் விறைவன் வாட்டமனதுடன் வீட்டையடைந்து அன்னாகாரமின்றிப் பகலெல்லாங் கழித்துத் தன்னை மிகவும்பழித்து இரவாகியு மாயாசத்தால் விழித்துக்கொண்டே ஓ பகவானே! இரணியாக்ஷனுடைய தூஷண வார்த்தைகளையெல்லாம் பூஷணமாகக்கொண்ட புருஷோத்தமா! புண்டரீகாக்ஷா! அன்புடன் செய்த உன் தோத்திரங்களடங்கிய புத்தகத்தைக் காத்திரத்துடன் வெளியிலெறிந்து விடலாமா? என்னைச்சுடாமற் சுடலாமா? ஓ தீனபந்துவே உன்னுடைய திவ்விய திருநாமங்களும், திருவிளையாடல்களும் நிறைந்திருக்கும் நூலுமக்குக் கசப்பான காரணமேதோ? யான் செய்ததிதோ? உமக்குள்ள சூதோ? செய்யும் வாதோ? ஓ என்னுண்டவனே! கற்கண்டு ஓர்பக்கங் கைப்பும் ஓர் புறந்தித்திப்புமா யிருக்குமோ? ஓ அனாதரட்சகா! தந்தையின்மடியை ஆசித்துக் கிடைக்காத துருவனுனக்குச் செய்த உபசாரமென்ன? நான்செய்த அபசாரமென்ன? சொல்லலாகாதோ ஜெகத்துக்கெல்லாம் நாதரென்னும் பேர்பெற்ற உமக்குப் பாரபக்ஷ மிருக்கலாமோ, விகற்பபாவமுள்ள உமக்கு ஜெகநாத னென்கிற பேரிருக்கலாமோ, கோபிகா ஸ்திரீகளின் மத்தாலடிப்பட்டானந்தமடைந்த நீர் என் துதியென்னும் வாக்கம்புகளுக்கிடைந்தீரோ, சர்வம் ஒன்றே யென்று திருவாய்மலர்ந் திவ்விடத் திருந்தவாக்கைக் கடந்தீரோ, உமக்குச் சுபாவமானபேதகத்தை விட வில்லையோ, துவிதபாவங் கெடவில்லையோ, அரவணை ஆழியால் மறுத்துச் சயந்தனைக் கொன்றீரோ, அபத்தம் பேசித் துரோணரை வென்றீரே, அது யின்னம் நீங்க வில்லையோ மெய்ஞ்ஞானம் ஓங்கவில்லையோ ஓ அரிபரந்தாமா ஸ்ரீ ரகுராமா வேணுகோபாலா அருமறைகள் மூலா, வாசுதேவா, தேவதேவா, சேஷசயனா, கமலநயனா! வசுதேவபுத்ரா, பாண்டவர்கள் மித்ராவென றனந்தம் விதங்களாக நிந்தாஸ்துதி செய்து நித்திரைசெய்ய பகவான் அவ்விறைவன் சொற்பனத் தடைந்து, ஓ அரசனே நீ ஜெயதேவ்செய்த வாக்கியங்களை யோக்கியத்துடன் துதிப்பாயாயின் நீசெய்தவாக்கியங்களில் பதின்மூன்றுசுலோகங்களையங்கிகரிப்பே னென்றறைந்து மறைந்து போயினர்.

உடனே அவ்வேந்தன் விழித்துக்கொண்டு ஜெயதேவ் பகவானென்றே தீர்மானித்துத் தோத்திரஞ் செய்துக்கொண்டிருந்து அதிகாலையில் ஜெகநாதருடைய திருச்சந்நிதானத்தையடைந்து அந்தணர்களுடன் கூடிக்கொண்டத்தியந்த பக்தியுடன் ஜெயதேவ் திருவாய் மலர்ந்தருளிய பாடல்களைத் தோத்திரஞ் செய்யும்போது கபடநாடக சூஸ்த்ராவதாரியாகிய ஸ்ரீஜெகநாதர் அசரீரியாய் ஓ ராஜனே! நீ செய்த பல பாடங்களில் ஆதியிலிருக்கும் பதிமூன்று பாடல்களை அங்கிகரித்தேனென்று திருவாய் மலர்ந்தருள அவ்வாக்கியத்தைக் கேட்ட சகலரும் அந்நரபதியா லியற்றிய பதின்மூன்று பாடல்களை ஜெயதேவ் செய்த புத்தகத்திற் சேர்த்துப் பாராயணஞ் செய்யத்தொடங்கினார்கள். இவ்வளவு மகிமை பொருந்திய ஜெயதேவ் எவ்விடத்திற் றங்கியிருக்கின்றாரோ அவ்விடத்திலே அஷ்ட வயிசுவரியமும் ஆதீனம்பலவும் சிஷ்டர்கள் கூட்டமும் தெளிவுளோர் கோஷ்டமும குறைவின்றி நிறைந்திருக்கையில் இவ்வற்புதங்களைப் பலரும் புகழத்தொடங்கினார்கள்.

பத்மாவதியின் தந்தையானவர் இவர்களிருக்கும் விந்தையைக்கேட்டு சிந்தைநைந்துருகி வந்திவரிருக்கும் மகிமையை நோக்கித் துன்பத்தை நீக்கி உடலம் பொங்கி உள்ளங்கலங்கி இவர்களைக் காண என்னதவஞ்செய்தேன், இவர் மருமகனா, இவள்மகடானா, இவரே பகவான், இவரே மகவான், இவரேகனவான், இவரேதனவான் இவரைப் பார்த்தால் புத்திபத்தியும் வரும், இவளைப்பார்த்தால் சித்திமுத்தியும்வரும், இவள் ஸ்ரீதேவி, இவள் பூதேவி, இவளே கமலை, இவளே விமலை, இவளிந்திராணி, இவள் இராணியென்று பலபலவிதங்களாகத் தோத்திரஞ்செய்து தனக்கிருந்த காத்திரங் கொய்து பத்மாவதியினருகிற் சென்று, மகளேயென்று கூப்பிட்ட தந்தையினடிகளிற் பத்மாவதி சிர சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுப் பாதங்களுக்கு முத்தமிட்டு எந்தையே! என்னைப்பெற்ற தந்தையே! வெகு நாள் பொறுத்து வந்தையே என் மீதிருந்த அன்பைத் துறந்தையே? என்

ளைச் சுத்தமாய் மறைந்தையே? என்கிற பட்சமான வார்த்தைகளைப் புகன்று பயபக்தியுட னெதிரில் நின்று பல வார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கையில் ஜெயதேவ் சுவாமிகள் நிஷ்டையிலிருந்து தெளிந்து, மாமனுரைப் பார்த்துக் கரங்களைச்சேர்த்து அடிகளிற் சந்தனம் பூசி, க்ஷேம வார்த்தைகள் பேசி, உத்தமரே உந்தன் புத்திரியாலே சாதுக்கள் சேவை சாந்தமாகச்செய்தேன் இத்தரைக்குள் ஙாளின்பத்தைப் பெற்றேன், அந்தனே உந்தனுசியாலென்று அன்பான வார்த்தைக ளுரைத்து, மாமனுர் மனதைக்கரைத்து நொடியதனி லுளர்ந்தனைத் திருப்பி, உத்க்ருஷ்டமான சிற்சொருப சமாதியிலெழுந்தருளியிருந்தார்.

அப்போது பத்மாவதியின் தந்தையானவர் விந்தையீதென்று மிகவதிசயித்து வந்தனஞ்செய்து மனமிக மகிழ்ந்து, பலபல விதங்களாய்ப் புகழ்ந்து கொண்டுவந்த ஆடையாபரணங்களை யளித்து பத்மாவதியை நோக்கி விபாகூலத்தைப்போக்கிப் போய்வருகிறேனென்று புத்திமதிகளைச்சொல்லித் தன்னிருப்பிடம் போகையில் பத்மாவதி கூடவே தொடர்ந்துபோய் தந்தையை வழிவிட்டு வருவதற்குள் ஜெயதேவ் ஸ்வாமிகளின் நிஷ்டைகலைந்து வெளிப்பட்டுநடந்துவெகுதூரஞ்சென்று அவ்விடம்மனித சஞ்சார மில்லாமலும், மிருகங்களும், பரவைகளும் சஞ்சரிப்பதாயும் ஆரணியமாயும் ஆகாயத்தை யளாவிய பர்வதக்குகைக்குள் புகுந்து அங்கு உன்னிதமான வேரிடத்தி லுட்கார்ந்து பதுமாசனமிட்டுக் கண்ணைமூடி பசுமரத்தாணிபோல் பகவான் பாதத்தில் மனதைப்பதித்து இன்பமாயிருந்து ஏகமாய் நிறைந்து துன்பமகன்ற துரியமேதானுப் தன்னைமறந்து நிலவனிற் கலந்து பின்னமில்லாத பிரமமேதானுப் நினைவுங் கனவும் நாஸ்தியாய்ப் போக நனவிற்சுழுத்தியை நன்றுயடைந்து ஞானந் ததும்ப நயனனீர்பெருக, ஆனந்தத்துர்க்கந் தன்னிலமர்ந்து நிவாத திபத்தைப்போலவும், நிஸ்தரங்க சமுத்திரம்போலவும், அசைவின்றி பிர்ம நிஷ்டையிலிருந்தார், இங்கே பத்மாவதி திரும்பி இருப்பிடம் வந்து மணாளனை நாடிக் காணுமல் வாடிச் சுற்று பக்கங்களிலோடி அதிக பரபரப்போடுந் தேடிப்புதருகளில் நுழைந்து களையால் நிழ்விழுந்து ஐயோ பொழுதுபோச்சுதே எனக்கே துன்பம்வாச்சுதே? இருபுறமும் அக்கினி மூண்டெரியும் மூங்கிற் குழாய்க்குள்ளலையும் எரும்பைப்போல பலதரம் நாடுக்குங் காட்டுக்கும் அலைந்து செடிகளில் மயிர்சிக்கவும், தேன்புயன் கடிக்கவும், முட்களால் திரேகத்திலுங் கால்களிலும் உதிரம் பெருகவும், கற்களால் கண்ணீர் பெருகவும், உடல்வேர்த்துருகவும் உள்ளங்கலங்கி யுருகவும், கரடியும் புலியுமிரட்டவும், கரியுமெருமையுமதட்டவும், நடுங்கி ஒடுங்கிகுருதியாலும்கண்ணீராலும்நனைந்து கொழுநனை அடிக்கடி நினைந்து ஓ என்பிராணநாயகா! பிராண சிநேகா! சர்வசங்கபரித்தியாகா! சதானந்த போகா! நீரிப்படிமோசஞ்செய்விரென் றறியாமற்போனேனே ஆருத்துயருக்காளானேனே? யாருமற்ற அனுதியைப்போலானேனே என் தந்தையைவிட்டு எப்படிப் போனீரோ? எங்கு சென்று யெப்படியானீரோ? காமக்கடலைக் கடந்தவா, காசினித்தலங்களுக்கு நடந்தவா, மோட்ச வீட்டில்நுழைந்தவா, மோனுனந்தத்திற்றழைந்தவா, மிருகங்களின் கர்ச்சனையால் மனம் நடுங்குகின்றதே, உம்மைக்காணுக்குறையால் பிராணம் ஒடுங்குகிறதே? காரிருளால் வழியுந் தெரியவில்லையே, ஏனோதந்தாயிவ்வள்வு தொல்லையே, இன்னம் உனதுமனம் இரங்கவில்லையே, எனக்குள் அருமை தரிசனந் தரவில்லையே! மாதரச்சத்தால் மரண மடைவாரே! மணாளன்மேலிச்சையால் மிகவும் இடைவாரே, என்னை நீரிப்படி சோதிக்கலாமோ! இருளில்மறைவுற்றுப் பேதிக்கலாமோ, ஓ புருஷோத்தமா, புண்ணிய புருடா, பூதயாளா, புண்டரீகத்தாளா, ஓ என்தெய்வமே, என்னுயிரே, தனித்திவ்விருளி லும்மைத்தேடித்தேடித்திரிகிறேனே, பதறிக்கதறி வெகுநேரமாய்ப் புலம்புகிறேனே. ஏனென்றுபேசலாகாதா. இன்னமோர்சணத்தி லென்னுயிர்போகாதா, இன்னமும் நீனினைத்திருப்பதற்கிச்சையா, எளியாளுடன் பேசவும் லச்சையா என்கிற பலவார்த்தைகள் பேசிக்கொண்டே இராவெல்லாந்தேடிச் சூரியோதயமானதே மலைக்குகைகளிலும், புதருகளிலும் பர்ணசாலைகளிலும், அடர்ந்த சோலைகளிலும் பார்த்து அங்கம் வேர்த்து, ஓ மயில்களே, குயில்களே, என்மணாளனைக்கண்டீர்களா? ஓ நரிகளே! என் காவலனைப்பார்த்தீர்களா? ஓ புலிகளே! புனுகு பூனைகளே! என் கணவனிங்குவந்தாரா? ஓ காகங்களே! யூகங்களே என்னுர்வலருங்களுக்குத் தரிசனந் தந்தாரா வென்று மிருகங்களையும் பட்சிகளையும் கேட்டுக்கொண்டே வாயில்வந்த மொழிகளையெல்லாம் விண்டுக்கொண்டே பெருத்த மலையின் குகையுள்புகுந்து அங்கு பதுமாசனமிட்டுக்கண்ணைமூடி பிரம நிஷ்டையிலிருக்கும் தன் கணவனைக்கண்டு அவர் திருவடிகளில் வணங்கி முக்காலும்வலம்வந் திணங்கியிருக்க ஜெயதேவ் பிரம்மநிஷ்டை கலைந்துக் கண்ணைத்

திறந்து மனைவியைப்பார்த்து, இம்மாதிருக்குங் கோலத்தால் சிரமத்தை யுணர்ந்து தன் மனைவியுடன் காட்டைவிட்டு நாட்டை யடைந்து தங்களிருப்பிடஞ் சேர்ந்து சில வருடங்கள் கழித்துக்கொண்டிருந்தார்.

இவரிப்படியிருக்க, பத்மாவதியின் தந்தை முன்போல வந்து மகளையும் மருமகனையுங்கண்டு, ஆனந்தங்கொண்டு, அவர்களால் பல உபசாரங்களையேற்று விடைபெற்றுக்கொண்டு பத்மாவதியு முன்போல தந்தையை விழிவிடப்போனபோது நடந்த ஆச்சரியத்தையும்பிராப்தத்தின் சமர்த்தையும் ஜெயதேவர்க்குண்டான விபத்தையும் அதனாற் பத்மாவதியடைந்த துன்பத்தையும் சொல்லப் பெருந்துக்கமாயிருக்குமென்று நாபாஜி சித்தர்பின்னுஞ் சொல்லத் தொடங்கினார்.

விரக்தி அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்றாவது
## ஜெயதேவர் கைகால்கள் வெட்டுண்ட அத்தியாயம்.



பெருஞ் சித்தர்களே! பரிசுத்தர்களே! இப்பால் ஜெயதேவ சுவாமிகள் சற்று நேரம் நிஷ்டையிலிருந்து பிறகு தெளிந்து வீதியின் வழியாகப்போகையில் அயலூரிலிருந்து வந்த மிகவும் ஞானத்திற்றெளிந்த பகவத்தாசனெனும் வர்த்தகனாகிய தனவான் ஜெயதேவைப் பார்த்துக்கரங்களைச்சேர்த்து இன்று இம்மகாத்மாவைத் தரிசிக்கும் படியான காரணம் நான் செய்ததவமோ? எங்கள் மூதாதைகள் செய்த மாதவமோ! வென்றவரை வாரியெடுத்து தன்ரதத்தின்மேலிருத்திக்கொண்டு பில்வகாமிலிருந்து புறப்பட்டுக் காட்டைக்கடந்து தன்னூரை யடைந்து விட்டினுட்கொண்டுபோய்த் தானும் தன் மனைவியும் பூசித்து மிகவும் விசுவாசித்துப் பத்மாவதி தேடுவாளென்று யோசித்து குரு ஸங்கீர்த்தனங்களைக்கோஷித்து அந்தரதத்தின்மேல் சுவாமிகளை எழுந்தருளச்செய்து பத்மாவதிக்காக பல ஆடையாபரணங்களும் ஆயிரம் வராகன்களுங் கொண்டுபோய் கொடுவென்று சாரதியை எச்சரித்து சீக்கிரம் சுவாமிகளை விட்டு வாருமென்றனுப்ப,

ஜெயதேவர் வர்த்தகனை நோக்கி இவ்வுயிர்க்கொல்லியும் ஆடையாபரணங்களும் ஏன் கொடுத்தனுப்புகிறீர்கள் வேண்டாம் வேண்டாமென்று மறுக்க அவ்வியாபாரி என் தாயாகிய பத்மாவதிக்கு தருவனெ வென்றுரைத்துச் சாஷ்டாங்கமாக வந்தனஞ் செய்து சாரதியைச் சாக்கிரதை செய்ய, உடனே அவன் அந்த ரதத்தை அதி சீக்கிரமாயோட்டிக்கொண்டு காட்டின் மத்தியிற் போகையில் அவ்விரதத்தின் சத்தத்தைக் கேட்ட கள்வரோடி வந்து தனித்துப்போகும் அச்சகடத்தை நிறுத்தி, வலவனை வருத்தி, ஆபரணாதிகளைப் பறித்து, ஆங்காரத்துடன் கொக்கரித்து வாளால் வெட்டப்போகையில், சாரதி பூமியிற் குதித்தி ஓட்டமெடுக்க ஜெயதேவ் விபரீதம் நேரிட்டதென்றவ் விரதம் விட்டிழிந்து அதையும் ஓட்டிக்கொண்டு போகட்டு மென்றவரைப்பார்க்காமல் நடந்து போகையில், அவர் மகிமையையறியாச்சோரர் வீரத்துடன் தீரம் பேசிக்கொண்டவரைப் போகவிடாமல் மடக்கி வெட்டித்தள்ளி யடக்கிக் காட்டில் நடவென்று முடுக்கி; புலிமுன் பசுவைப்போலொடுக்கி, இழுத்துக்கொண்டு போகையில், ஜெயதேவ் கள்வர்க்கு வந்தனம் புரிந்து என்னிடத்தொன்று மில்லையே நானுங்களுடன் போர் புரிய வகையில்லையே! வீணே யென்னை அலங்கோலப்படுத்துகிறீர்கள் சுகந்தராக மாயிவ்விரதத்தின்மே லூர்ந்துகொண்டுங்களிருப்பிடஞ் சேருங்கள் ஏழையென்மேற் கிருபை கூறுங்களென்று பணிவாக மொழியும்போது,

அக்கிரவடர் அவரணிந்துகொண்டிருந்த வஸ்திரங்களைப் பறித்துக்கொண்டு நிர்வாணமாக்கி அடா பண்டாரை நீங்காப்பிணமே! கூசாமற் பாசாங்கு வார்த்தைகளைப்பேசாதே! திருடர்கள் முரடர்களென்றறியாயோ? எங்களிருப்பிடத்தைக்கண்டுகொள்ள மெதுவாய் நடந்துபோன உன்னெண்ணத்தை நாங்களறியோமோ? பலருக்குங்காட்டிக்கொடுத்தெங்களை வாட்டப்படுத்தச்செய்தருதைக்குரியோமோ? திருடர்களிடத்தும் திருட்டுத்தனம் நடக்குமோ? யாரை நம்பினாலும் நம்பலாம், ஆதிவருணரை நம்பப்போமோ? உன்னை யினி உயிருடன் விடப்போகிறோமோ வென, அப்புண்ணியவான் வேண்டாம் வேண்டாமெனப் பல வின்பமொழிகளால் மறுக்கவுங் கேட்காமல் இருகரங்களையும் கால்களையும் இரண்டாக துண்டித்து அவரை ஓர் பாழுங் கூபத்திற் றள்ளிச் சகடன்மேலேறிக்கொண்டுபோய்விட்டார்கள்.

பின்பு பாழுங்கிணற்றில் வீழ்ந்த பக்த சிகாமணி பரப்பிரமஞானி பரமசாதுவாகிய வேதாந்தியன் பரப்பிரமமே ஒருருவான துய்யன், என்றும் பொய்சொல்லா மெய்யன், ஏழைகட் கினிய [illegible]

மீந்த கையன், சத்தியவாக்குள்ள சாந்தன், அநேகருக்குபதேசித்த வேதாந்தன், ஜகத்திலுள்ள வடியார்களெல்லாம் புகழுஞ் சிவன், ஜன்மப்பிணிக்கயர்ந்து வரும் முமுட்சுகளுக்கனுகூலன், முனிவென்னுங்காட்டைவெட்டின முத்தன், மோகாதிகளை யெரித்தசுத்தன், பயமென்பதரியா நிஷ்காமி ஜெயதேவென்னும் சுவாமி பாழுங்கேணிலுருண்டுக்கொண்டேபோய் தலை கிழாய் விழுந்து துக்கசாகரத்திலாழ்ந்து பிராப்த மியாரையும் விடாதெனத்தெளிந்து பிராப்தாதீனமல்லவோ இத்தேகமெனத்துணிந்து பாபங்களையே முக்கியமாகச்செய்யுங் கைகால்களை வெட்டியெறிந்ததற் காயாசப்படாமற் களித்துப்புரையோரை விளித்து, ஓ புண்ணிய புருஷர்களே! யெனத்துதித்து துரிதமாயோர் கல்லைப்போட்டென்னைக்கொல்லலாகாதோ வெனக்கதித்து அவராவ மில்லாததற் காயாசமடைந்து மிகவுமிகடைந்து கைகால்க ளறுபட்ட உபத்திரவத்தாலும், முட்களும் கற்களும் தேகமெல்லாம் பொத்துக்கொண்டதாலும், உருண்டு விழும்போது தேகமெல்லா முராய்ந்து தேய்ந்து போனதினுலும், ஈக்களும் எறும்புகளும் மொய்த்துக்கொண்டதினுலும், அன்னுகாரமில்லா ஆயாசத்தாலும், உறவி முழுதும் முண்மயமாயிருந்ததினுலும், எழுதற்கு முட்காருதற்குங் கூடாமையாலும், சகிக்கக்கூடா வேதையாலும், மஹாபாதையாலும் கிடைந்தபடியேகளைந்துமிகவுமிளைத்துமூர்ச்சையடைந்து துன்பமேலீட்டாற்றெளிந்து,

ஓ ஓ இனிதேகவியோக மடையுங்காலம் நேரிட்டதிப்பொழுதே நமதிஷ்ட தெய்வமாகிய ஸ்ரீ மந்நாராயணனைத் தியானஞ்செய்து பிரம நிஷ்டையாற் றேகத்தை மறந்து விதேக கைவல்யத்தைபடைந்து மோட்சானந்தம் பெறுவோமெனத்துணிந்து பகவானை நினைந்து கண்ணீரால் நனைந்து மொண்டிக்கரங்களைக் கூப்பிட்டுக்கொண்டு பாதுகாப்பாயென விண்டு, அச்சுதா கேசவா ஆயனே அபயம், உச்சிதா நானுவுபாயனேஅபயம் புண்டரீகாக்ஷ பரிபூரணு அபயம், அண்டரேத்தும் ஆதிகாரணு அபயம், பரம புருஷாபத்ம நாபனே அபயம், திருவாழ்வுதருஞான தீபனே அபயம், சங்கு சக்கரதண்டபாணியே அபயம், பங்கமில் கோதண்டபாணியே அபயம், மாயனே யுலகுண்டவாயனே அபயம், தூயனே தூதர்கள்நேயனே அபயம், அடியார்கள்மேலதிகமித்ரா அபயம், படியுளோரேத்தும் பலபத்திரா அபயம், மச்சாவதார மணிவண்ணனே அபயம், கச்சாவதாரநல்கண்ணனே அபயம், ஜெயராம ஸ்ரீராமதேவனேஅபயம், பயனருளு மகானுபாவனே அபயம், மாதவாவைகுந்தவாசனே அபயம், யாதவராகவா ஈசனே அபயம், கேசவானுகூல திரிவிக்ரமா அபயம், யாவரும் போற்றும் பாராக்ரமா அபயம், சுரர் நரர் தொழுதேத்து முரஹரீ அபயம், அரி அரி அரி அரி நரஹரீஅபயம், பக்தவச்சல வேணுகோபாலா அபயம், முத்தியருள் முகுந்தபூபாலா அபயம், சீதாசமேத துளசிதரா அபயம், தாதாவினோத தாமோதரா அபயம், மதுசூதன கிருஷ்ண வாமனு அபயம், பதிதபாவன லோகபாலனு அபயம், பஞ்சபாண்டவர் தூதாராமனே அபயம், கெஞ்சுவோர்க்கருள் தாமனே அபயம், ரங்கநாதா நாரசிங்கனேஅபயம், துங்கபாதா தொனிசங்கனே அபயம், கரிவரத கோவிந்தகர்த்தனே அபயம், சிரமை தீர்த்தாள்வை பிரசித்தனே அபயம், பாண்டுரங்கா விஷ்ணுபகவானே அபயம், ஈண்டென்னையாளுவா யிறைவனே அபயம், துரோபதைதனைக்காத்த தேகன்றலே அபயம், விரோதமென் மீதிலேன் விமலனே அபயம், அருமறைகள் புகழாதி மூலனே அபயம் திருவருளை யீந்திடுஞ் சீலனே அபயம், வெங்கடேசுவர வேணு நாதனே அபயம், சங்கடந்தீர்க்குஞ்சக நாதனே அபயம், சுயஞானவடிவான சோதியே அபயம், நியமமெல்லாந்தரும் நீதியே அபயம்,ஜகபதிவேங்கடாசலபதீ அபயம், ரகுபதி கஜபதீ பசுபதி அபயம், பரமேசுவரா பரந்தாமனே அபயம், பரமசுகமுள பரசுராமனே அபயம், சகல பூஷண சேஷசயனனே அபயம், சர்வலோக சரண்ய சாமியே அபயம், சர்வபாப விநாசநேமியே அபயம், கம்ஸ சம்ஹாரக்காம்பீரனே அபயம், அம்ஸஸ்வரூபாவதாரனே அபயம், மாசுள்ள சிசுபால மர்த்தனு அபயம், தேசுள்ள காளிங்கனிர்த்தனு அபயம், மதமுள்ள ராவணனை மாய்த்தவா அபயம், சதிசெய் சிசுபாலனைச் சாய்த்தவா அபயம், கருடவாஹனு கருடத்துவஜனேஅபயம், இருடிகள் ஏத்துஞ் சதுர்ப்புஜனே அபயம், நாராயணுநந்த நந்தனேஅபயம், பாராயணுபக்தர்சொந்தனே அபயம், பீதாம்பரா அன்பர் பிரியனே அபயம், மாதா பிதாகுரு தெய்வமே அபயம், எழில்பிரகலாதன்மேலிஷ்டனே அபயம், தொல் வினைக் கட்டுகளறு பிரம நிஷ்டனே அபயம், சனகாதியர் தொழு சாந்தனே அபயம், சனவிபீஷணன் றெழும் வேந்தனே அபயம், களபமொழுகிய புளகமார்பனே அபயம், அளகமுள நளினியுறுமார்பனே அபயம், முனிவரனுதினமேத்து முதல்வனே அபயம், புனிததசரதராஜன் புதல்வனே அபயம், இரணியாக்கனை வென்ற எந்தயே அபயம், தருணமெனையாளென்றன் தந்தையே அபயம், அபயமென்றிவ்

விதமாகவோலமிட்டோவென்றிரைத்துகூவும் முறையா
னது பரமபதத்தில் ஆதித்தரனேக ரொளிமழுங்கும்
கிரணங்கள் வீசும் சிங்காரமண்டபத்தில் நவரத்னங்கள்
பதித்த சிம்மாசனத்தில் கருடர் காந்தருவர் கின்னரர்
கிம்புருடர் விஞ்சையர் தேவர் முனிவர்கள் சூழ வீற்றி
ருக்கும் ஸ்ரீ அகிலாண்டகோடி பிரமாண்டநாயகராகிய
ஸ்ரீ மங்காராயணருடைய திருச்செவியிற் புகுந்தமாத்தி
ரத்தில் பச்சைமேனி யெல்லாம் புழுங்கி வேர்வைகள்
சிந்தி மிகவும் பதறி ஆவெனக்கதறிக் கண்ணீரைப்பெ
ருக்கிச் சூழ்ந்திருப்போரையுமுருக்கிக் கைகளையடிக்கடி
பிசைந்து, இவ்வளவவஸ்தையும் நேரிட்டதாவென்றி
சைத்துக் கருடனையும் நினைக்காமல் தாரகனையும் விளிக்
காமல் இலக்குமியுடனும் பேசாமல் நாரதாதி முனீசு
வரர்களையும் பார்க்காமல் தன்னை மறந்து திடுக்கென்
றெழுந்து ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் மறைந்
தது.

ஆ என் பக்தனே! ஜீவன் முக்தனே! ஆ சஞ்
சீவியே! ஆ பரமபாகவதனே! பரப்பிரமஞானியே!
ஆ என்பாலனே! அன்பர்க்கனுகூலனே! நாராயணனே!
பரப்பிரம்மமெனச் சத்தியஞ்செய்தவனே! நானென்னு
மாங்காரத்தைக் கொய்தவனே! என்னை மேன்மையென்
றுரைத்தவர்க் கிகழுண்டா? என்னை யிகழ்ந்தவர்க்குப்
புகழுண்டா? எனக்கு மிப்பேர்க்கொத்த துன்பம்
வந்ததா? மனமும் நொந்ததா? இதோ வந்தேன் வந்
தேன், சுகந்தந்தேன் தந்தேன், என்றுரைத்துக்
கொண்டே துளசி மாலைகள் கழன்று விழவும், பீதாம்
பரத்தொங்கலானது பூமியிற்புரளவும், சுதரிசனம் பின்
தொடர்ந்தோடி வரவும், ஆகாயவாசிகள் பூமாரி பொழி
யவும், ருத்ரபிரமாதி ரிஷிகள் தோத்திரஞ் செய்யவும்,
அஷ்டகெஜங்களுந்தும்பிக்கைகளை ஆகாயத்திலெடுத்து
ஆரவாரிக்கவும், பூதேவி மனமகிழவும், இலக்குமி ஆச்
சரியத்தாற்றன்னை மறந்திருக்கவும், ஆதிசேஷனதிசயிக்
கவும் வாயுவேகத்திலும் அதிகமாக நடந்து யுகநாதத்
தைக்கடந்து,

ஜெய தேவஸ்வாமிகள் வீழ்ந்திருக்குங் கூபத்
தினிடமடைந்து சுகசொரூபத்துடனவரிருதயகம
லத்தினுள் ஆனந்தமெல்லாந் திரண்டோ ருருவமாய்
எழுந்தருளி ஞானக்கண்ணுக்குப் புலப்பட்டுத்
துன்பமென்ப தினி யெக்காலத்திலும் திரணமளவும்
தங்காமல் நீங்கும் படியான ஆசிர்வாதஞ் செய்
தென்னப்பனே! என்னுடைய ரூபம், சொரூபம், நிரு
பம் என்னும் மூன்றையு மிக்கணமே தரிசிப்பா யென்
றசரீயாய்த் திருவாய் மலர்ந்தருளியதைச் சிரவணஞ்
செய்யா முன்னமே ஜெயதேவர் ஞானக்கண்ணுற் றன
துள்ளத்தில் கிருஷ்ண பரமாத்ம ஸ்வரூபமாய் விளங்கும்
பகவானைக் கண்டு, ஆனந்தங்கொண்டு துன்பமிறந்து
இன்பநிறைந்து, ஆ என்னாண்டவன் வளிக்கும் வெளிக்
கும் கண்ணொளிக்கும் சமீபமாய் பூரணசந்திரனைச்
சூழ்ந்திருக்கும் அதிசீதள கிரணங்களைப்போல என்னை
யானந்தமாகச் சூழ்ந்து என்னாற் புகல்வதற்கருமையான
பரவசமளித்த தெனக் குள்ளாகவே யிருப்பதை யோரா
மல் ஆராய்ந்து பாராமல் தான் தானாகவே யிருக்கத் தா
னென்பதெதுவென் றவயவங்களைத் தானெனப் பிரமித்
துக் கேட்கும் அறிவினனைப்போலோ அநித்யசட துக்க
நிர்மல வுன்மத்தமான ஆக்கையினிடருக் காயாசப்பட்
டுத் திடஞானத்தைக் கைவிட்டு ஓலமிட்டழுதேனே!
ஆ! ஆ! பகவானென்னுளத்தமர்ந்து பத்தர்கள் போற்
றும் ரூபத்தையும் பரமயோகிகள் காணுஞ் சொரூபத்
தையும் பரப்பிரமஞானிகளைக்கியமாயிருக்கும் நிரூபத்
தையுங்காணாமல் விஷபானந்தங்களை யிச்சிக்கும்சுரோத்
ராதி இந்திரியங்களென்னும் பஞ்ச தந்திரிகளும், மன
மாதி சதுர் மந்திரிகளும், இச்சையென்னும் பலகொஞ்
சிப்பேசும் வஞ்சியர்களும் காமக்குரோதி வீரர்களும்,
சப்தாதி சூரர்களும், வாக்காதி ஏவலரும், பிராணாதி
காவலரும், வசனாதி சேனாதிபதிகளும், புகழும் சீவராஜ
னென்னும் அகங்காரி அரசுசெலுத் திதமாயிருக்கும்.
அரணாகிய இவ்வங்கத்தின் சுகத்தைக் கோரினேனே,
எல்லையற்ற பேரின்பத்தை வாஞ்சிக்காமற் சிற்றின் பத்
தையிச்சித் தெப்பொழுது மிடரையே நுகரும் மானைப்
போல துன்பத்தை யோராவாக்கு மெனக்கு ளிருக்கு
மிவ்வின்பத்துக்கு ஐக்யமா யிராமல் மறதிக் குட்பட்
டேனே! ஆ கெட்டேனே! மதியிலாமற் றன்பதியை
யிழந்தேனென்றுந் துயர்வாரியிலமிழ்ந்த தோகையைப்
போல இந்தப் பராத்பரனை நம்பாமல் நரககூபமான இத்
தனுவை வாய்மையென் றுறுதிகொண்டு அறுதிக்குள்
ளாக விருந்தேனே, அடக்கம் ஒடுக்கமுள்ள அருந்துணை
வியை யிகழ்ந்து நடை நொடியுமுள்ள நாயகியைப் புக
ழும் நரனைப்போல இந்தப் பராத்பரனைப் புகழாமல்
புகழ்ந்து மகிழாமல் தூலத்தைத் துதிக்க எண்ணி
னேனே, துயர் நண்ணினேனே யென்கிற பற்பல வாக்
கியங்களை மொழிந்து பகவானைக் கண்ட பரவசத்தா
லானந்த புஷ்பங்கள் வழிந்து தனதுளக் கண்ணின்
மையத்தில் வீற்றிருக்கும் அழகெல்லாந் திரண்டோ
ருருவாய் களிப்பெலாங் கூடிய மேனியாய்ப் புண்ணிய

வதியான தேவகியின் கர்ப்பத்திலிருந் துற்பவித்தபோது தூலமாய் நந்தன் இல்லாளாகிய அசோதையி னட்கிக ளுக்குப் பட்சமுள்ள சூட்சம பாலகனுப் புறப்பட்ட ஸ்ரீ மந்நாராயணனைப் பரப்பிரமப் பாராயணனைப் பார்த்தபடியே நிலையில் நின்று இவரல்லவோ சுமந்தவர் கோவர்த்தனக் குன்று எனப் புகன்று எவ்விதமாய்ப் புராதலமென்று உச்சிதொடங்கி உள்ளங்கால் பரியந்தம் ஊடுருவிப் பார்த்து, மனமொன்றாகச் சேர்த்து, ஒரு கோடி சூரியப் பிரகாசங்கள் மழுங்க, விகசித்த கிரீடனே கழுத்தணங்களாற் அலங்கும் குண்டலனே விசாலமான கிட்டலனே திவ்யபுண்டரம் தரித்தவனே சலஜலோசன னே பத்மதளாகார முகவசிகரனே வொளியான வாகு வலயனே புஜபல பராக்கிரமனே பீதாம்பரதரனே சுலட் சணத்தின் வாய்ந்த லக்ஷணமான இலட்சுமி வீற்றிருக் கும் வட்சஸ்தலனே வனசந்தி வனமாலிகாபரணனே திவ்ய பரிமள வலங்கிருத பூஷணனே ராதா மனோகா னே ருக்மணி மணாளனே கோபியர்களுளனே அண்ட பிண்ட பிரமாண்டங்களை உண்டுபண்ணும் விதிவீற்றி ருக்கும் பத்மநாபனே ஈரேழுலகு மோரணுவாகக்கர்ப்பத் தில் வைத்திருக்கும் பிரதாபனே சாம்பசிவனார் சடா பாரத்தில் வீற்றிருக்கும் கங்கா பவானி யுற்பத்தியான பாதனே பெஞ்ஞான போதனே வேணுநாதனே லீலா விநோதனே அவதூதனே அதீதனே அமிரோதனே நிர்சேதனே நிர்பேதனே ஐஷ்குரோதனே என்று தோத்திரம் புரிந்து மிகவும் பரிந்து சந்தேகங்களை நீக் கித் தேகஸ்மாரணையைப் போக்கி இந்திரியங்களை யடக் கிப் பகிர்முகமாகாமல் மாயாமனதை மடக்கிச் சுவாசத் தை யொடுக்கிப் பிரமரந்திரத்தில்முடக்கிச் சங்குகளின் முழக்கமும், மேகங்களின் முழக்கமும், வீணையினோசை யும், தம்பூரி னோசையும், மத்தளத் தொனியும், மகத் யாழ் தொனியும், தாளங்களின் சப்தமும், சாமாண்டல சப்தமும், பெண்டுகள் கீதமும் வண்டுகள் நாதமும், குயில்களினொலியும், மயில்களினொலியும், சமுத்திர கோஷ்டமும்சங்கின்கோஷ்டமும்,கேட்டுந்துவாதசாந்த வெளியில் ஆயிரத்தெட்டிதழ்ப் பங்கயமேடையில் கங்கா யமுனை கூடுங் கூட்டத்தில் புரிபட்டக நாடியின் முனை யான சுழிமுனையில் பலகோடி இரவிகளினொளி போல விளங்கியிருக்கும் பகவானுடைய சொரூப மான சோதி யைக்கண்டு ஆனந்தங் கொண்டு மன வெண்ணங்களை மாய்த்தது மாகுமியானங்களைத் தெய்ந்து ஈகெனு மிருட்டைக் கடந்து நல்லருளுடன் தொடர்ந்து மாயா சத்தியைப்பார்த்து ஆபாசங் களைத்தீர்த்து அறி வெனும் பொருளி லேக்யமாம் ஆனந்தத்தில் மூழ்கிச் சாயுக்கியமாய் நிலாத நீயமாய் பிரம சொரூபமாய் விளங் கியிருக்கும் பகவானுடைய நிருபமாகிய ஏகபரிபூரணத் தைக் காணுமற் கண்டு ஒன்றுந் தோணவில்லையென விண்டு,

பின்னும் பகவானைத் துதிசெய்யத் தொடங்கினர் அதெப்படியெனில், ஓ புண்டரீகாக்ஷா ! உனக்கு வந்த னம் புருஷோத்தமா ! உனக்கு வந்தனம் சகலயோக சொரூபா ! உனக்கு வந்தனம் உக்கிரமாகும் சக்கர மதைத்தரித்ததேவா ! உனக்கு வந்தனம் தவசு வேதங் கள் முதலானவற்றிற்கும் தேவதேவனுகிகோக்களுக்கும் பிரம நிஷ்டர்களுக்கும் சேசனுகி சகல உலகங்களுக்கும் ரட்சகனுகி ஸ்ரீ கிருஷ்ணனென்றும், கோவிந்தனென்றுந் திவ்யநாமங்களோடு கூடியிருக்கும் உமக்கனந்தம் வந் தனங்கள் பிரமரூபனுகி உலகங்களை சிருஷ்டித்தும் சுவ சொரூபத்தினுலே ரட்சித்தும், கல்பாந்தரத்தினில் ருத்ர ரூபியாகி சங்கரித்தும்கொண்டும், திரி மூர்த்தி சொரூபி யாகிய பிரகாசித்துக்கொண்டு மிருக்கு முமக்குவந்தனம் ஓ அச்சுதனே ! தேவ அசுர கந்தர்வ கின்னர சித்தசாத் திய பன்னக யக்ஷராக்ஷச பிசாசமநுஷ்ய பசுபட்சி ஸ்தா வர பிபீலிகாதிகள் பிருதிவி அப்புதேயுவாயுஆகாயங்கள் சத்தஸ்பரிச ரூபரசகந்தங்கள் மனம் புத்தி சித்த ஆங்கா ரங்கள் காலம் அக்ருணங்கள் இதின் பரமார்த்தமாகும் ஆத்துமா இவை யாவும் நீயே வித்தை அவ்வித்தைகள் சத்தியம் அசத்தியங்கள் பிரவிருத்தி நிவர்த்திகள் வேதோக்த சகல கருமங்கள் இவை யாவும் நீயே, ஓ பக வானே ! சகல கருமபோகங்களை அநுபவிக்கு மவனும் கரும சாதனங்களாகும் கிரியைகளும் சகலகருமபலன் களும் நீயே, ஓ மகாப்பிரபூ ! என்னிடத்திலும் அன்னி யர்களிடத்திலும் சேஷபூதங்களாகும். சகலலோகங்களி னிடத்திலும் நீ நிறைந்திருப்பது உபாதான நிமித்தகார ணரூபமாகும், ஐஸ்வரியங்களும்அனந்தஞானசக்தியாதி கல்யாண குணங்களும் நன்றாய் காணப்பட்டுக்கொண் டிருக்கின்றது. பரமயோகிகளு முன்னைத் துதிசெய் கிறார்கள், யாகசீலர்கள் நின்னை யுத்தேசித்து யாகங் கள் செய்கிறார்கள், நீயே பிதுர்ரூபமும் தேவரூப முந்தரித்து அவ்விய சவ்வியங்களைப் புசிக்கின்றாய், ஓ அச்சுதனே ! மகத கந்தாராதி தத்வங்களும், பிருதிவியாதி பூதங்களும் அதனிட மிருக்கின்ற தத் துவமாகும், ஆத்தும தத்துவமுமாகி இந்த குச்சப் பிரபஞ்சம் யாவும் எவ்விட மிருக்கின்றதோ ? எங்கி ருந் துண்டாகின்றதோ ? அதுர் சொரூப குணங்க

னிறலே பெருத்ததாகும், நினது மஹாரூபமாகி யிருக்கின்றது, சூக்குமாதி அதிக சூனியமாகி சிந்திக்கக்கூடாதாகி யிருக்கும் ரூபம் நினது பரமாத்தும சொரூபமாகி யிருக்கின்றது.

இப்படிப்பட்ட புருஷோத்தமனது மும்மக்குவந்தனம், சகலாத்துமகனே யாவத் பூதங்களினிடத்திலும் சாந்தாதி குணங்களுடன் கூடியிருக்கும் நினது அப்ராக்ருதசக்தியாகும் ஜீவசொரூபத்திற்கு நமஸ்காரஞ்செய்கிறேன், எது வாக்கும் மனதுகளுக்கு மெட்டாமலிருக்கின்றதோ, எது விசேஷங்களாலும் விசேஷிப்பதற்குக் கூடாததோ, ஞானிகளுடைய ஞானத்தினலே நிரூபிக்கக்கூடாததோ, அப்படிப்பட்ட சிலாக்கியமாகும், நினது முக்தாத்தும சொரூபத்திற்கு வந்தனம், எவனுக்கு தனக்குப் புறம்பாகும் பதார்த்த மில்லையோ, எவன் யாவத்திற்கும் அன்னியமாகி யிருக்கின்றானே, அப்படிப்பட்ட பகவானாகும் வாசுதேவனுக்கு வந்தனம் தந்தனன், கர்மாதீனமாகும் நாமரூபங்களில்லாமல் கேவல விலக்ஷண சொரூபமாகும் மஹாத்துமனுக்கு வந்தனஞ் செய்கிறேன், மேலுமவனுக்கு வந்தனஞ்செய்கின்றேன், அவனுக்கனந்தம் வந்தனஞ் செய்கின்றேன், சங்கர்ஷணாதி வியூகரூபியகுவானி வந்தனஞ் செய்கின்றேன், தேவர்களெவன் பராத்பரரூபத்தை தெரிசிக்க மாட்டாமல் மச்சகூர்மாதி அவதாரங்களினாலே அர்ச்சனை செய்துக்கொண் டிருக்கின்றார்களோ? அப்படிப்பட்ட பரமாத்துமனுக்கு வந்தனம், எவன் ருத்திராதி சகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாகி சுபாசுபங்களைப் பார்த்துக் கொண்டிருப்பனோ? அப்படிப்பட்ட சகல சாக்ஷியும் பராபரனுமாகும் ஸ்ரீமகா விஷ்ணுவுக்கு வந்தனஞ்செய்கின்றேன் அனித்தியமாகிய இப்பிரபஞ்சம் யாவும் எவனுடன் பேதமின்றி யிருக்கின்றதோ அப்படிப்பட்ட விஷ்ணுவுக்கு வந்தனஞ் செய்கின்றேன், எவனிடத்தில் நூலு வஸ்திரத்தில் கலந்திருப்பதுபோல கலந்தும், நூலினில் மணிகள் கோர்க்கப்பட்டதுபோல கோர்க்கப்பட்டிருக்கின்றதோ, அந்த மகாத்துமனுக்கு வந்தனம், சகல சாமியாகி சகல சேஷியாகுமிருக்கும் அந்த உத்தம புருஷனுக்கு வந்தனம், எவனிடத்தில் சகலமும் ஒடுங்குமோ, எவனிடமிருந்து சகலமும் சிருஷ்டிகாலத்தி லுற்பத்தியாகுமோ, எவன் சரீரியாகி சகலத்திற்கும் ஆதாரபுருஷனாக யிருக்கின்றானே அப்படிப்பட்ட சர்வ சுவாமிக்கு வந்தனஞ் செய்கின்றேன், எவன் யாவத்திற்கும் ஆத்துமாவாகி உள்ளும் புறம்புமாய் வசித்து ஞானனந்தமயனாகி நிறைந்திருப்பானோ அந்த வாசுதேவனுக்கு வந்தனம் என்று பலவாறு ஜெகதீசனை பரதேவ வாசுதேவனைப் புகழ்ந்துகொண்டாடி,

அப்பால் வெளியில் ஐக்யமாய் அத்வைதமாய் அகண்டானந்தமாய் அவாங் மனோகோசரமாய்த் தன்னை மறந்து அகம்பாவமிறந்து சதானந்தவாரியில் நிதானந் தப்பித் தானிறந்திருந்தார். கேட்டீர்களோசித்தர்களே! இவரிப்படிக் காட்டிலிருக்க நாட்டில் ஜெயதேவ சுவாமிகளின் பத்தினியாகிய பத்மாவதி பதிவிரதைகளிற் புண்ணியவதி, பாபங்களைத்தீர்க்கும் பகீரதி, பக்தர்களைக்காக்கும் பார்வதி, பரஞானந்தெரிந்தபாக்கியவதி, பரிபூரணனந்தம் நிறைந்த சந்த்ரமதி, பசித்தோர்க் கன்னமளிக் குமமுதாமிதி, பந்தபாசங்களை மாய்த்த குணவதி, சகல சாஸ்திரங்களுமறிந்த பாரதி, அழியாக் கற்புள்ள பகவதி, ஜெயதேவுக்குகந்த ரதிபதியின் வாக்கைக் கடவாத சதி, தன் தந்தையை யனுப்பிவிட்டுத் தன்னிருப்பிடஞ் சேர்ந்து தன் கணவன் மாலைமட்டும் வாராமையால் பலவிடங்களிலும் பார்த்துக் காணமல் வேர்ந்து நிஷ்டையாலெங்கு நின்றுவிட்டாரோ? நிஷ்டாலெங்குக் கட்டுப்பட்டாரோ? பசியாலெங்குபள்ளிகொண்டாரோ? பக்தர்கள் கையிற் சிக்கிக்கொண்டாரோ? அலைச்சலென்றகவாழ்வைத் துறந்துவிட்டாரோ? ஆனந்தத்தாலென்னை மறந்துவிட்டாரோ வென்று,

ஊரெல்லாந்தேடி யுளமிகவாடி மடங்களுள் ஓடுவாள் அலறிவீழ்ந்தெழுவாள் காக்கைபோல்பறந்து கால் பலங்குறைந்து அயல்வீடென்றும் அறியாநங்கை, அயலாரூ டுரையிடாமங்கை, பிள்ளைகள் தம்மையும் கேட்டுளம்நைந்தாள் பள்ளிவீடுகளிற் பார்த்தகம்நொந்தாள், என்செய்வேனென்பாள், பதியினைப் பிரிந்தேன், பாவியேனிருந்தேன், என்று பிரலாபித்துக்கொண்டு தெருக்கள்தோறும் அலையும்போது அதுதெரிந்த பத்மாவதியின் தந்தையானவர் பத்மாவதியினிடம் வந்து மிகவும் நொந்து அம்மா! நீ யொன்றுக்கு மஞ்சவேண்டாம்நான் தேடிப்பார்த் தழைத்துக்கொண்டு வருகிறேனென்றுரைத்து அவ்வம்மணியைத் தன்வீட்டுக் கனுப்பிவிட்டுத் தான் நாடுங்காடுந் தேடித்திரிந்து முகங்கரிந்துகாணமல் மிகவுமிடைந்து வீட்டையடைந்து பத்மாவதியை நோக்கி,

ஓ அம்மா பாக்கியவதி! அவரெங்கேயோ மலைக்குகைகளிற் புகுந்து தவஞ்செய்துக்கொண்டிருப்பதைப் போற் காண்கின்றது, இன்னுஞ் சிலநாளில் தானே வருவார் தரிசனந்தருவார் என்று பல விதங்களால்

தேற்றி துக்கத்தையாற்றிக் காப்பாற்றுகையில் பத்மாவதி அழுதகண்ணுந் தொழுத கையும் ஒருபொழுதுண்டும் தரையிற் புரண்டும் தலைமயிர் கோதாள், கலைகளை யோதாள், வேறுடை யுடுக்காள், மெத்தையிற் படுக்காள், மொழியாடாமல் விழிமூடாமல் துக்கம்மேலிட்டுக் கக்கசத்துக்குட்பட்டு, ஓ ஓ பகவானே! என் கணவனைப் பார்க்க எத்தனைநாள் செல்லுமோ? இப்பிறப்பிற் காண்பேனோ, காணமாட்டேனோ, எக்காட்டிற் பிரவேசித்தாரோ, அல்லது தூரநாட்டிற் போய்விட்டாரோ, இம்மலைக்குகைகளிற் றவஞ்செய்கிறரோ வென்று நாடோறும் காலையிலெழுந்து மாலைமட்டுக்கும் மலைகளிலும் மலைக்குகைகளிலும் புதருகளிலும் பார்த்துத் தேகமெல்லாம்வேர்த்துக் கற்களாலும் முட்களாலும் பாதங்கள் பிளந்து தேகமெல்லாம் பீறிட்டு ரத்தமயமாகிப் பலதரம் களைத்து நடப்பதற் கிளைத்து பகலில் காட்டிலும் இரவில் நாட்டிலுமிருந்து சொல்லொணுத் துயரக் கடலிலமிழ்ந்து பகவானைப் பஜிக்கத் தொடங்கினுள் கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜி சித்தர் சொல்லுவார்.

ஜெயதேவர் கைகால் வெட்டுண்ட அத்தியாயம்

முற்றிற்று.

நான்காவது

## ஜெயதேவர் நாட்டையடைந்த அத்தியாயம்.

இவ்விதமாகப் பத்மாவதி நாள்கழிக்கும்போது கிரவுஞ்சராஜனனவன், வேட்டையாட நாட்டைவிட்டுக் காட்டையடைந்து வேட்டையாடித் தாட்டிகவீரரோடு நாட்டை நாடிவருகையில் ஜெயதேவர் விழ்ந்திருக்கும் ஆழ்ந்த கிணற்றில் ஜலமுண்டென்று நலமுடன்சென்று எட்டிப்பார்க்கையில் மானிடவுருவாய் மதிதருங் குருவாய்த் தோன்றப்பட்டுப் பெருமூச்சுவிட்டு, ஜீவகாருண்யம் மேலிட்டு, ஐயோவென்று முறையிட்டு, வீரரைவிடுத்து வெளியிலெடுத்து, நீரெவரென்றும், நிஜஞ் சொல்லென்றும் வேந்தனனவன் வினவ, ஜெயதேவர் ஊமைபோலொன்றும் உரையாதிருக்க, இராஜன் எதிராளிகளுடன் இகல்செய்தீரோ? மதிகெட்டிந்த வகையானீரோ? துஷ்டர்களிந்தத் துன்பஞ்செய்தாரோ? கஷ்டம்வந்தும்மைக் கலந்துநொந்தீரோ? கைகால்போன காரணமேதோ? பொய்யில்லாமற் புகலவொண்ணுதோ? திருடனே! சித்தனே! தேவனே! சொல்வீர் குருடனே! முரடனே! குறையினைச் சொல்வீர்.

என்று பலதரங்கேட்கும் அண்ணல்வாக்கியத்தைக் கேட்ட ஜெயதேவர் சமாதியினின்று நீங்கிக் கண்களைத் திறந்து மன்னனே! நீரேன்வந்தெனை யெடுத்தீர். உன்னதமான வென் சமாதியை யேன்கெடுத்தீர். தேவனுமல்ல, சித்தனுமல்ல, பாவஞ்செய்யப் பத்தனுமல்லன், ஏழைப்பார்ப்பான வீனமதியோனுன், ஊழினுலிந்த உபத்திரம் நேர்ந்ததது, பக்தர்கள்போற்றும் பகவானனவர், இத்தலந்தன்னி லின்புடன்பிறந்தார், கோதிலாராமனுக்குறைபலவடைந்தார், சீதையாற் றுன்பமாஞ் சிந்தையிலடைந்தார், கங்கார் ஹத்தியாற் சகலமெல்லாந் திரிந்தார். பங்கயன் தலையிழந் தங்கநொந்திருந்தார், பிராப்த வசத்தினுற் பேதையான்நொந்தேன், தராதலத் தழி விலாச் சமாதியிலிருந்தேன் கால்கையைக் குறைத்தவன் கர்த்தனேயாகும், மால்விட்டு முன்படிவைத்து நீரேகும், சஞ்சாரசமாதிபல சஞ்சலமீய்ந்திடும், சஞ்சலமில்லாதவிச் சமாதிபருளீந்திடும், யாவரோவென்றனக் கிவ்வுதவி செய்தனர், சேவைதந் தென்றனைத் திருக்குவிற் சேர்த்தனர். கைகால் ஜீவகாருண்யம் போமல்லோ கைகளாற் பலபல கஷ்டம்வந்துறுமல்லோ, பாதங்களாலிம்சை பாவம் வந்துறுமல்லோ பாதங்களாற் பல பதிதம் வந்துறுமல்லோ, சடபரதர் காதையைச்சார்ந்து நீரறிவீரோ, சடவுடலை யறிஞர்கள் தானெனப் புகல்வரோ என்று பற்பல மொழிகள் பண்புடனுரைத்துப் பார்த்திபனுளங்கனைப் பாகுபோற்கரைத்து, நயனங்களை மூடி நல்லருளை நாடி, நிஷ்டையில்த்ருக்குவாய்த்திருஷ்டி சேர்ந்திருந்தார்.

அப்போது இறைவனுகிய சிவபக்தன் திகைத்து மிகவும் பதைத்து நம்முடைய அரசாக்ஷியிலும் இப்பேர்க்கொற்ற திங்கு நேரிட்டதல்லவா? ஆ ஆ துஷ்டர்களியாரோ, என்னுண்டவனைத் துன்பத்திலமிழ்த்தினுர்கள். சிவ சிவா! இதற்கு நானென்ன செய்வேனென்று கண்ணீர்விட்டழுது, கடவுளேயென்று தொழுது பெரியோர்க்கும் வந்ததே பழுது, பிரயோசன மில்லாதாயிற்றேயென்றழுது, மிகவும் நைந்து, அவரை வலம் வந்து, சாஷ்டாங்கமாகப் பணிந்து, அவர் நயனங்களிற் றன்நயனங்களை யணிந்து, பூமியில் விழுந்து, புரண்டெழுந்து, வாய்விட்டிரைந்து, மனம்புழுங்கவயர்ந்து, மார்பிருகத் தழுவிக் கண்ணீராற்கழுவி அருமை யீதருமையீதரகாவென்றுன், பெருமையாம் பெருமையாம் பித்தனே யென்றுன், தெளிகிலேன் தெளிகிலேன் சிவசிவா

வென்றான், எளியனென் செய்குவே னீசனே யென்றான் சங்கரா சங்கரா சாம்பவாவென்றான், மங்கைபங்காளா மழுவாளியேயென்றான், அய்யனே மெய்யனே ஆதியே யென்றான், துய்யநற்சையனே சோதியேயென்றான் தேவர்கள்பணியும் தேவனேயென்றான், ஜீவர்கள்தொழுமகா தேவனேயென்றான், திருநீறணிந்த திரிசூலனே யென்றான், அருமறைகள் புகழாதி மூலனே யென்றான் காமதகனு ரிஷபவாகனு வென்றான், ஏமமில்லாக் கங்கை மோகனுவென்றான், சோமசுந்தரமௌளிதூயனேயென்றான், நேமமுள பக்தர்கள் நேயனேயென்றான், பூதநாத பரிபூரணு வென்றான், ஆதிநாதா ஆதிகாரணுவென்றான் திரிநேத்ரனே திவ்ய சரணனே யென்றான், சரணமென் பார்பாப ஹரணனே யென்றான், சம்புசாம்பவசாக்ஷி சாந்தனேயென்றான், நாகபூஷணநந்தி கேசனே யென்றான், தியாகராயா சித்விலாசனேயென்றான், நீலகண்டா வின்ப நிர்த்தனேயென்றான், சீலதிரிபுரநாச சித்தனே யென்றான், பாண்டரங்காபரசு பாணியே யென்றான், தாண்டவா ஆண்டவா சாமியேயென்றான், அருளிலேன் செய்வதென்னருள்வா யென்றான், அயனரியுமேத்தும் களங்கனே யென்றான், இயமமருளும்ஏகலிங்கனேயென்றான், நித்யநிர்மலநிராங் காரனே யென்றான், சிவசிதம் பரதேசிகனேயென்றான், பவவினச மசானவாசனேயென்றான், அவிநாசவிசேஷவதூலனே யென்றான், சுவிசேஷ ஜததிசசுபலனே யென்றான், நித்தசுத்தவகோர நிஷ்களாவென்றான், புத்தமுதவ்யோம புஷ்களாவென்றான், அந்தமாதியிலா வனுதியே யென்றான், பந்தமறு நிஷ்டானு பூதியேயென்றான், சகலசுகமருளுபய பாதனேயென்றான், சர்வசரஜீவர்கள் சாட்சியே யென்றான் துரியபரவசமீயுஞ் சூட்சியே யென்றான் என்றிவிதத் தோத்திரம்புரிந்து மிகவும் பரிந்து ஆழுதகண்ணுந் தொழுதகையுமாய் நின்று எனதிஷ்ட தெய்வமாகிய பரமேசுவரனே என்னை யாட்கொள்ளும்பொருட்டு இவ்வுருவோ டிவ்விடத் தெழுந்தருளினர்.

ஓ ஓ மந்திரிபிரதானிகளே! நமது சத்குருசுவாமிகளைப் பார்த்தீர்களா! சந்தேகத்தைத் தீர்த்தீர்களா வென்று தண்டிகையி லேற்றிச் சத்குருவேயெனப் போற்றி நாட்டிற்கொண்டுபோய் மேடையிலிருத்தி கைகள் ரணத்தையும் கால்கள்ரணத்தையும், அவுஷதங்களினு லருமைபாகவாற்றி உலகெலாமிவரென் குருவெனத்தூற்றி எனையாளவந்தவ ரிவரென்று வாழ்த்தி இனியெனக்கோர்குறைவில்லை யென்றேத்தி உடலு முயிரும் போலும், ஊசியுநூலும்போலும்,நீரும்பாலும்போலும் வெளியும் வளிபும்போலும், வேருந்தோலும் போலும், கண்ணும்நிமையும்போலும், கடலும் ஒலியும்போலும், ஒற்றுமையோடு கால்சேவை முதலானதுஞ் செய்துக் கொண்டு வருங்காலத்தில் இராஜனுக்குத் தர்மமேலிட்டுக் கர்மங்கிழ்ப்பட்டு முத்தியைவாடி முகமிகவாடிக் குருவேயென்று குறைபலபுகன்று ஞானசாஸ்திரம் வாசித்து நல்லருளுடையோரை நேசித்து உபதேசம் பெற்றுத் தபவேஷமுற்று நிஷ்டையைக்கூடி, நேயத்தைநாடி ஒருநாள் ஜெயதேவஸ்வாமிகளை வலம்வந்து பணிந்து இவ்வாழ்க்கை வேண்டிலேனெனத் துணிந்து, ஓ ஐயனே! மிகவுந்துய்யனே! தேகமோ நீர்மேல்குமிழி, செல்வமோ நீர்மேலெழுத்து, துக்கமோ ஆழ்ந்த ஆழி, சுகமோ அளந்திடுநாழி, பந்தமாஞ் சமுசாரப்பாழில், எந்தையே நானின்னம் வீழில் துன்பங்கள் நீங்கலெக்காலம், இன்பம் நானடைவதெக்காலும், அன்னப்பால் புசித்தாலுமென்ன, ஆவின்பால் புசித்தாலுமென்ன, சரிகையுடுத்தாலு மென்ன, தவிசுமேற் படுத்தாலுமென்ன, கந்தையை யுடுத்தாலுமென்ன, கற்கள்மேற் படுத்தாலுமென்ன, கனகபூஷண மணிந்தாலும், கஸ்தூரி திலகமணிந்தாலும், நாடெலாம்பணிய வாழ்ந்தாலும், நாற்றிசையர்வந்து தாழ்ந்தாலும், மாடுபோலுழைத்து நொந்தாலும், வாசல்காத் திழிவடைந்தாலும் எல்லாமொன்றேயாம் ஆதலால் அருளான ஞானவழி கற்று, ஆனந்தவாழ்வினைப்பெற்று, உம்மைப்போலொன்றாயிருந்து இம்மைச் சுகமெல்லாந்துறந்து, வீடெலாம் போய்ப் பிட்சைவாங்கி வீதிதிண்ணையில் தங்கித்தூங்கி, உணர்வான ஒளிவிரித்தோங்கி, உம்மைப்போல் துக்கத்தைத்தாங்கி, எண்ணங்களில்லாமலோட்டி, ஏகத்தில் மனதினைநாட்டிப் பித்தனென் றயலோர்க்குக்காட்டிப் பேய்மனதை யில்லாமல்வாட்டிச் சந்தோஷவாரிதியிற் படிந்து, தன்னையறிந்து, தேகஸ்மரணையிறந்து, பிரமமாத்திரமாயிருக்கக் கருணைகூறுமையாவென்று கிரீட முதலானவைகளையு நீக்கி, இகபோக விச்சையைப் போக்கி, ஜெயதேவஸ்வாமிகளை அரைநிமை பிரியாதிருக்கும்போது ஒரு தினம் ஜெயதேவர் கருணையுடன் இராஜனை நோக்கி,

ஓ அரசனே! பிரஜைகளுக்குள் சுரசனே! இல்லறந்துறந்தா லேதுண்டுலாபம், யானெனதென திரிபவர்க்கேகுமோ கோபம், தானிறக்கவிடிற் றேனுமோ தீபம், சாதுக்கள் சேவையாற் புத்தியும் பத்தியும்வரும்

சாதுக்கள் ஆஞ்ஞையாற் சித்திமுத்தியும்வரும், சாதுக்கள் சேவை செய்தால் வரும் பாக்கியம், சாதுக்கள் சேவைசெய்தால் வரும்யோக்கியம், சாதுக்கள் சேவையால் வருமருள் சிலாக்கியம், சாதுக்கள் பக்குவாக்கருள்வர் மாவாக்கியம் ஆதலால் அரசாங்கத்தை அன்புடன் செய்து, அறத்தாற் ப்ரவமனைத்தையுங்கொய்து, என்போலில்லறத் திருந்தையே யானல், உன்போலுத்தமருலகினி லுண்டோ? ஏழையேன்மொழியா லிழிவுற லுண்டோ? கோழையேன்மொழியாற் குறைவுறலுண்டோ வென்று கிரீடமுதலானவைகளையு மழைப்பித்து உத்தமர் கைகளாற்றரிப்பித்து மௌனசமாதியிலெழுந்தருளி யிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னுஞ்சொல்லத் தொடங்கினர்,

ஜெயதேவர் நாட்டை அடைந்த அத்தியாயம் முற்றிற்று.

---

ஐந்தாவது.

## ஜெயதேவைப் பத்மாவதி தரிசித்த அத்தியாயம்.

—(-*-)—

என்னைப்போ லில்லறத்தி லிருப்பாயானல் உன்னைப் போலுத்தமருண்டோ? எனத் திருவாய் மலர்ந்தருளிய ஜெயதேவைப் பூபதி வணங்கி, ஓ ஸ்வாமி! தேவரீரைப்போ லடியேனைச் சமுசாரத்தி லிருக்கும்படியாகக் கட்டளையிட்டீரே? ஸ்வாமிகளுக்கு மனைவிகளுண்டோ வென்றுதொழ, ஜெயதேவர் உண்டென்றறைய நரபதி அவ்வம்மணியை விட்டுபிரிந்த காரணமேதென்றுபணிய ஜெயதேவர் முன்னடைடந்த வெல்லாஞ் சொல்லவேந்தன் ஐயோ! பாவியீதறியா திருந்தேன், அடியேனுக்குற்ற அபசாரந்தெரிந்தேனென்று அக்கணமே பல பல்லக்காட்களையும், பல தெரிவையர்களையும், சிங்காரமான தண்டிகையையும், திவ்யமான ஆடையாபரணங்களையும் பில்வகாமுக்கனுப்பவும், பத்மாவதியைப் பயபக்தியுடனழைத்துக்கொண்டு வரும்படியாகவும், மந்திரிகளிடமுரைத்து ஸ்வாமிகளைநோக்கி ஓ என்னுண்டவனே! பத்தர், சித்தர், பரமஞானிகள் சித்தங்கலங்கிடத் தீவினை மூண்டிடுமெனப் பெரியோர்கள் உரைக்கின்றார்களே அது மெய்மையானல் தேவரீரை இவ்விதமாய்க் கண்டித்துப் பாழுங்கிணற்றிலெறிய நினைத்தவுடனே அக்கள்வரெரிந்து பஸ்பமாய்ப் போகாமலிருந்த காரணமேதோ? தெய்விகத் தன்மைபொருந்திய தங்கட் கிவ்வித தண்டனையும் வந்த காரணமேதோ? தாங்கள் நினைத்தால் வீரமுள்ள சோரர் மனந்திடுக்கிட்டிடையாரோ? எமலோகமடையாரோ? இச்சங்கை நீங்க அனுக்கிரகம் புரியுமையாவெனத் துதிக்க, ஜெபதேவர் ஓ நித்தியானந்தத்தைக்கோரும் சத்தியவாக்குள்ள வேந்தனே! உபசாந்தனே! பிராப்தமானது மூவர் முனிவர் மற்றியாவரையும் விட்டதல்ல, அப்படியிருக்க என்னல் வெல்லக்கூடியதோ இதற்கோர் திருஷ்டாந்தமான சரித்திரமுண்டு அது வென்னவென்றால்,

திரிகாலங்களை யுணர்ந்த சித்து வித்தைகளிற்றேர்ந்து ஜீவன் முக்திப்பதத்தையடைந்த ஓர் முனீஸ்வரரிடம் மோக்ஷாபேக்ஷையுள்ள ஓர் சிஷன் அடைந்துஅவர்க்குப் பணிவிடை செய்துக்கொண்டிருந்தா னஃதெவ்விதப் பணியெனின், ஆசான்மெஞ்ஞானநிஷ்டையிலெழுந்தருளியிருந்து பகிர்முகப்பட்டுக் கண்களைத்திறந்து எவ்வஸ்துவை நினைப்பாரோ அவ்வஸ்துவை அவர் கேட்கா முன்னமே அவரெதிரில்வைத்து வந்தனஞ்செய்வா னதலாற் றேசிகனோர்நாளு மிப்பண்டம் எனக்கு வேண்டியதென்று வாய்திறந்து கெட்டதேயில்லை. எதுவேண்டுமென்று ஓர்நாளும் மாணக்கனும் வினவியதுமில்லை, இப்பேர்க்கொத்த அபூர்வ சேர்வைசெய்யும் சிஷனைச் சோதிக்கும்பொருட் டம்முனிவர் ஓர் திவசமொன்றையும் நினையாமல் அட்சிகளைத் திறந்து மௌனமாயிருந்தார் அப்போதும் முமூட்சு ஆசாரிபர் கவனிதத்தை வேறு விஷயத்தில் நன்புத்தியைச் செலுத்தியிருந்ததனலல்லவோ உணராமற்போனேம், குருவுக்கு அபராதஞ்செய்த நாமினி இவ்வாக்கையோடிருத்தல் மிகவுங் குற்றமென் றம்முனியின் பாதத்தில் வந்தனஞ்செய்து தன் சிரத்தைக் கொய்துக்கொள்ள வெத்தனிக்கையில், மாதவன் மாணக்கனை விளித்து, ஓ சிஷனே! நான் கேட்கா முன்னமே கோரியபொருளைக் கொடுத்துக் கொண்டுவந்த உன் விவேகத்துக்கு வியப்படைந்து இன்றயத்தினமொன்று முன்னாமல் கண்கள் மலர்ந்திருந்தே னிதனலேயே உனக்கொன்றும் புலப்படாமற் போயிற்று, உன்னைப்போல் பணிவிடைக் காளானவர்க ளிவ்வுலகிலியாருமிருக்கமாட்டார்கள், உன்னை மிகவும் மெச்சினேன், நீயெனக்குகந்த மாணக்கனேயாம், இனி யுனக்குபதேசிப்பதற்கியாதோர் தடையுமில்லை உனக்கென் னப்யஸ்தங்கொடுத்தேன், அறுபத்து நான்கு சித்திகளையும் ஜீவன்முத்தியின் நுட்பமான நிலையையும் போதிப்பேன், எமபாசத்தைச் சேதிப்பேன், உனக்கோர் குறையுண்டாகுமாயின் மூவரோடும் வாதிப்பேன், அண்டபிண்ட பிர

மாண்டங்களையும் பேதிப்பேன் என்று சேஷன் மஸ்தகத்
தின்பேற் றனதஸ்தத்தைத் தாக்கி மகா வாக்கியேபதே
சஞ்செய்ய யோசித்து இவனுக்கின்ன மெத்தனைநாளாயு
ளிருக்கின்றதோ வென்று ஞ்ஞானதிருஷ்டியால் நோக்கி
எழுபத்திரண்டுநாழிகையிருக்கஆச்சரியப்பட்டுமாச்சாரி
யங்கொண்டு ககன மமன குளிகையொன்றை வாயில
டைத்து சீடனையடைத்துக் கொள்ளும்படியாய்ச் செய்து
பூலோகம் புவர்லோகம் சனலோகம் தபலோகம் மகா
லோகம் என்னுமாறையுங்கடந்துசத்தியலோகமடைந்து
பிரமாவைத் தரிசித் தென்மாணாக்கனுக் கற்பாயுள் கொ
டுத்தகாரணமேதெனக்கேட்க. விரிஞ்சன் ஓ முனிசிரேஸ்
டரே! உமதுமாணாக்கனுக்கின்னம் இருபத்தாறுமுகூர்த்
தமே ஆயுளிருக்கின்றதாதலால் நானென்ன செய்யட்டு
மென்று பின்னிடைந்ததைக் கண்ட அப்புங்கவன் வை
குந்தமடைந்து நாரணனை வினவ அம்முகுந்த னிவனுக்
கின்னம்பதினாறுமுகூர்த்தமிருப்பதாலென்னாலொன்றுஞ்
செய்யக் கூடியதல்லவென முனிநாதன் கைலைக்கெழுந்
தருளி உமாபதியைக் கேட்க அக்கறைமிடற்றண்ணல்
இவனுக்கினி ஆறுமுகூர்த்தமாயுளேயிருக்கின்றதாதலினா
லென்னாலொன்றுஞ் செய்யக்கூடிய தல்லவென அவ்வடி
கள் நமது மாணாக்கனை மாய்க்குங்காலனை இப்போதே
வாட்டுவேனென்று எமபுரிக்குப்போய் எமன் வாயிலிற்
புகுத ஆறுமுகூர்த்தமானதால் பின்வரும் மாணாக்கனுக்
காயுள்முடிந்துகாவடம்பட்டுமண்டையுடைந்து ஆசிரியர்
மேல்விழுந்து மரணமடைந்தான் அதைக்கண்ட முனிநா
தன் மிகவும் முனிந்து பெருமூச்சு விடவே, அம்மூச்சில்
அக்கினிபிறந்து எமனுலகை எரிக்கத்தொடங்கிற்று.

அப்போது கூற்றுவன் பயந்து நயந்து நடுங்கி ஒடு
ங்கி ரிஷீஸ்வரனைத்தொழுது, ஓ மாதவனே! உம்முடைய
மாணாக்கன் மடிந்தது உம்மாலன்றி என்னாலல்ல எப்படி
யென்பீரேல் உமதாசிரமத்தி லிருந்துக்கொண்டே எம
னெப்படி வருவானென்று ஆசீர்வதித்திருப்பீரேல் இவ
னுயிர் நீங்குமோ? மும்மூர்த்திகளாவது தங்களுலகங்
களில் நிறுத்தி ஆசீர்வாதஞ் செய்திருப்பாராகில் என்
வாசலில்மரணமடைவானோதேசிகர்பணிவிடையிற்செழி
த்தவனாதலால் மும்மூர்த்திகளையும்தரிசித்துஎன்னைத்தரி
சிக்காமல் மரணமடைந்தான் என்னுடைய வாசலில்அவ
னுடைய பிராணன் நீங்கும்படியான விதியிருந்தபடியால்
அவ்விதி உம்மையும் திரிமூர்த்திகளையும் ஆசீர்வாதஞ்
செய்யாமற் பேதித்ததன்றி இவ்வளவுதூரம் உம்மையும்
வரும்படியாகச் செய்த பிராப்த உண்மை தெரியாமல்
என்மேல் முனிவுகொள்ளலாமோ? உமதுமாணாக்கன்மே
லுமக்குக் கருணையிருக்குமானால் உமதஸ்தத்தை அவன்
மஸ்தகத்தின்மேற் றாக்கி தீர்க்காயுளுடன் வாழ்வாயாக
வென்று ஆசீர்வதிப்பீரேலிப்போழ்தே உயிர்பெற் றெழு
வானெனப் பணியும்போது அம்முனீஸ்வரன் உண்மை
யேயென் றுங்காரந்தணிந்து ஓங்காரமுச்சரித்துச் சேஷ
னுக்காசீர்வாதஞ்செய் தெழுப்பிக்கொண்டு தன்னாசிரம
மடைந்து அறுபத்துநான்கு கலைகளையும், ராமானந்த
நிலையையும்போதித்துச் சுக சமாதியிலெழுந்தருளியிருந்
தாராதலால், ஓ மண்டலாதிபனே! பிராப்தபோகம் யா
ரையும் விடாது, வீணாய்த் துக்கத்தைக்கொடாதுஆனால்
ஈஸ்வரகடாட்சமும் பெரியோர்க ளாசீர்வாத பலமும்
திடஞானமு முள்ளவர்களுக்கு மலைபோல் வரும் வினை
பனிபோல் நீங்குமென்பதற்கையமில்லை அதெப்படியெ
னில் எனது கை கால்கள் வெட்டுண்டும் ஸ்ரீமந்நாரா
யணன் கருணாகடாட்சத்தா லெனக்கோராணுவளவுந்துன்
பந் தோன்றாமல் பிரமானந்தத்திற்சொக்கி யிருந்தேன்
எந்தெந்தநாளில் எந்தெந்தச் சுகதுக்கங்களை யனுபவிக்க
வேண்டுமோ அந்தந்த நாளில் அதுவது வந்தடையாமற்
போகாது பளுவாய் வரும்விதி சுளுவாகப் போவதற்கு
சாதுக்கள் சேவையே முக்கியமானது. ஏனெனின் திரி
மூர்த்திகளாலுந் தீர்க்காவினை சீவர் முக்தர்களாற்றீந்து
போம் முன்னம் மாந்தாதா மைந்தரில்லாக் குறையால்
வாட்டமடைந்திருக்க அதுதெரிந்த நாரதபகவானாசீர்
வசனம் புகலாமல் மும்மூர்த்திகள்பாற் சென்று கேட்க,
அவர்களும் வரமளிக்காம லவ்வரசனுக்குப் புத்ரபாக்கிய
மில்லையென்றரற்ற யாழ்வல்லோன் சிந்தாக்கிரந்தனைக்
காட்டிற்சென்று தபஞ்செய்யத் தொடங்கினர் அதை
யறிந்த ஓர் முனிவர் மாந்தாதா வீட்டையடைந்துஅவர்
மனைவி பணிந் தன்புடன் கொடுத்த நான்கு பலகாரங்
கட்கு நான்கு புத்திரர் பிறக்கக்கடவதென் றாசீர்வதித்
துத் தன்னிருப்பிடஞ்சேர்ந்தார். அம்முனிவர்வாக்கியப்
படியே மாந்தாதாவுக்குச் சதுர்மகவுண்டாகிச்சந்தோஷ
சாகரத்தி லமிழ்ந்திருந்தான். ஆதலால் மகான்களுக்குப்
பணிவிடைசெய்வோர்க்கு ஓர் காலத்தும் பழுதுண்டா
காது. அனுமார் முதலானவர்களும் சிரஞ்சீவியைப்
பெற்றது உத்தமர்களினாசீர்வாதப் பலனல்லவோ?

ஓ இராஜனே! நீயும் பெரியோர்களுக்குப்பணிசெய்
வதற்குடன்பட் டிருப்பையாயின் மேன்மையான லாபத்
தை யடைவாயென்கிற பலபடி வார்த்தைகளைப் பகரும்

போது நிருபன் மகா பாக்கியமென்று சாதுக்கள்சேவை யிற் செழித்திருந்தா னிவர்களிவ்விதமா யிங்கிருக்கை யில் மந்திரிகளா லனுப்பப்பட்ட தண்டிகையாளரும்தை யலரும் பி வகாமுக்குப் போய் ஜெயதேவ ஸ்வாமிகளின் திருநாமம் புகன்று பதிவிரதா சிரோமணியாகிய அவர் பத்தினி எத்தெருவி லிருக்கிறளெனக் கேட்டறிந்து அவ் வம்மணி யிருக்கும் வீட்டையடைந்து பத்மாவதியைப் பணிந்து நயனங்களையணிந்து, பத்மாவதியிவளெனத் துணிந்து அம்மா பாக்யவதி ஜெயதேவஸ்வாமிகளுக் குகந்த யோக்யவதி, ஸ்வாமிகள் கிரவுஞ்சராஜனிடம் க்ஷேமமாயிருக்கின்றார், அவ்வரசன் உம்மை இக்கணம் அழைத்துக்கொண்டு வரும்படியாய் எங்களை யனுப்பியி ருக்கிறபடியால் எங்களம்மணி தடைசெய்யாமல்சீக்கிரம் புறப்படுமம்மாவெனத் துதித்துநிற்கும் ஏவலாளர்வார்த் தையைக்கேட்ட பத்மாவதி உடலைவிட்டகன்றவுயிர் பின் னுமவ்வுடலில் வந்துற்றதுபோலவும், இறந்த மக்கள் எழுந்து வந்ததைப்போலவும், இஷ்டதெய்வம் தன்னை திர்பிரசன்ன மானதைப்போலவும், தரித்திரனுக் கிரா ஜரிகங்கிடைத்ததைப்போலவும்சந்தோஷமடைந்துஸ்ரீரா மனைப் பிரிந்த சிதாபிராட்டி அசோகவனத்திலுயிர்விடுந் தருணத்தில் பிரசன்னமாகி ஸ்ரீரகுநாயகன் சீர்புகன்று உயிர்விடாமல் ஜானகியைக்காத்த அனுமானைப்போல் என் பிராணநாயகனுடையி க்ஷேமமுரைத்து என்னை ரட்சித்தசீலர்களே அனுகூலர்களே இதோ பாயாசமுண் ணுங்கள்ஆயாசந்தீருங்களென்றுஉபசாரணைசெய்துாட்டித் தன்பதி விரதா தர்மத்தைக்காட்ட நளமகாராசனைப் பிரி ந்த தமயந்தி தன்பதியைக் காணும்பரியந்தம் கிழிந்த ஓர் துண்டுவஸ்திரத்தையே யணிந்துக்கொண்டிருந்து நள மகாராஜனைத் தரிசித்த பதிவிரதையைப்போல ஜெய தேவஸ்வாமிகளைப் பிரிந்ததின்முன் னுடுத்தியிருந்த ஆடையுடனேர் வருஷபரியந்த மிருந்து அப்படியே வெளிப்பட்டுப் பிராணநாயகனைப் பிரிந்தநாளேஇறவாம லிதுநாள் பரியந்தம் இவ்வாக்கையை வைத்திருந்த பாத கியாகிய தோதகி தண்டிகைமீதேறத் தகுமோவென்று தாய்தந்தையரிடம் விடைபெற்றுக்கொண்டு கர்தலனைப் பார்க்க அதிக ஆவலோடும்நடக்கத் தொடங்கினள் அப் போது காவலாட்களும் ஏவல் ஸ்திரீகளும் பலவந்தமாக யவ்வம்மணியைப் பல்லக்கிலேற்றி அதிதுரிதமாக நடக் கும்போது பத்மாவதி இத்தனை நாளாவெனைமறந் தெவ் வண்ணமிருந்தார் யான் செய்தகுறை யேதென்பாள், இத்தனைநாளா யிவ்வுடல் நீங்காதேனிருந்தேனே இறை வனே யென்பாள், பதியினைப்பிரிந்தும் பாவியேனிருந்த பண்பேதறியேன் பரனேயென்பாள், பதியினைப்பிரிந்தும் பாவையரினிதாம்பாரினிலிருந்ததாற் பயனேதென்பாள், தேசமெல்லாம் நான் தேடா தையோ வாசமாக இவ் வூரில் வாழ்ந்தேனென்பாள், நீசதியென்று நிமைபிரியாத நிர்மலன் பிரிந்த நியமமேதென்பாள், எத்தனை நாள் செலும் இறைவனைப்பார்க்க ஏவலாளர்களே இசைப் பீரென்பாள், என்றனுபக னிருந்திடூர்தானிதுவோ வெதுவோ விசைப்பீரென்பாள், என்றிங்ஙனம் புலம்பிக் கொண்டே கிரவுஞ்சராசனுடைய பட்டணத்திற்பிரவே சித்து ஜெயதேவரைப்பார்க்க மிகவுமாசித்து ஸ்வாமிகளி ருக்கும் மேடையிற்சென்று கணவன்முன்னின்று தோத் திரம் புரிந்து மிகவும்பரிந்து வலம்வந்து பணிந்து கரங் களைச் சேர்த்துக்கைகால் வெட்டுண்டிருப்பதைப் பார்த் துத்தேகமெல்லாம்வேர்த்து இதுவென்ன ஆச்சரியமெ ன்று பூமியில்விழுந்து கடகடவென்றுருண்டு பெருமூச்சு கள்விட்டு ஸ்மரணைகெட்டு மூர்ச்சையடைந்து மிகவு மிடைந்து உடனே தெளிந்து வாய்விட்டழுது பல்தரந் தொழுது யார்செய்தாரிக்குறை இறைவனே யென்றாள், பார்தனிலவ ரிருப்பார்களோ வென்றாள்.

இப்படி பத்மாவதி புகன்ற மொழியைக்கேட்ட ஜெயதேவர் திடுக்கிட்டு என்ன புன்மொழிதனை யிசைத் தனை பூவையே! என்னயாண்டவர்களை யிகழ்ந்ததேன் பாவையே! கைகுறைந்தா லென்னே? கால்குறைந்தா லென்னே? மெய்யிழந்தாலென்னே? விதியைநான் வெல் வனே? அம்பையெய்தவனைவிட் டம்பினைநோதல்போல் எம்பிரானினைவிட் டியாரைநாம் நோதலே எம்பிரான் கட்டளை யார்வெல்வர் நங்கையே! யாம் முன்னஞ்செய்த தீவினையன்றோ? மங்கையே! யாம் முன்னஞ்செய்த தீவி னை நம்மைவந்தனுகினல் நாராயணன் என்செய்வான் நவிலுவாய் கோதையே! பிணிகளுங் கவலையும் பீடையும் பிரிதலும் பிராப்தமென் நீ தெளிகுவாய் பேதையே! அரசாங்கபோகமும் அருள்ஞான யோகமும் அயனெ ழுத்தின்படியமையும் நல்லரிவையே! ஜகமாண்டபுரூரவச் சக்ரவர்த்தியு மரிச்சந்திரனும் பட்டபாடறிவையே தெரி வையே என்று பத்மாவதியின் துயர்நீங்க அரிச்சந்திரன் முதலானவருடைய சரித்திரங்களைச் சொல்லத்தொடங் கினர்.

---

## அரிச்சந்திரன் கதை.

### விருத்தம்.

சத்தியம்பொருமை தருமநல்லொழுக்கஞ்
சாந்தமுமுளவரிச் சந்த்ரன்
உத்தமநாடு நகரசாட்சி
யொருகொடி தனிலிழந்தணிய
வத்திரமிலதோர் தனையனைச்சுமந்து
மன்னர்வாழ்த் திடுமெடிநோக
அத்தமிற்றிரவு தேள்கடிக்கயர்வுற
றனல்வெயின் முட்களினடந்தே. 1

உலகெலாமாளும் புத்திரன்றன்னையு
மும்பர்வா ழுலகினைமதிக்கு
கலமதாயோங்கு பணியணிந்திருந்த
கன்மனை யாளையுநாளு
நிலமிசையன்னூட்டு வீதிகடோறும்
நீர்கொண்மி நீர்கொண்மியென்று
விலைதனைக்கூறி யந்தணன்றனக்கு
விற்றழுந்தினன் றுயர்க்கடலில். 2

ஜகமொருதரும்பா யெண்ணியீந்திட்ட
சற்குணன் கிஞ்சித்தப்பொருட்கா
இகழ்வுளபுலையற் கடிமையாயாவி
னிறைச்சியைச் சுமந்திடுகாட்டை
பகலிராக்காத்து வாயரிசியையே
பக்ஷித்துப் புலையன்சால்பிடித்துச்
செகம்புகழ்புதல்வன் றனைதனதாவித்
தேவியை நினைந்தழுதேங்கி. 3

இருக்கின்றநாளிற் சந்திரமதியு
மீவிரக்கமுமிலா மறையோன்
றருக்குணடிக்க வுடன்மிகநொந்தித்
தலைவிதி யென்றதிகாலை
சுருக்குட்னெழுந்து பூமியைத்துலக்கித்
தோட்கள்வீழ்ந் திடபணிசெய்து
மருக்கொழுந்தணிந்த மத்தகநோக
வரிபுனல்சாலமுஞ் சுமந்தாள். 4

ஆழிசூழுலகை யாளுநற்குமர
னருக்கன்வந் திடுமுனமெழுந்து
கூழினைப்புசித்துக் கரிபுலிவாழுங்
குறும்பொறை தனில்வெயிலதனி
லேழைபாலகருக் கேவல்செய்தஞ்சி
யிடர்தருங் கற்கண்மேனடந்து
தோழர்களோடு சமிதையுந்தருப்பைச்
சுமந்தயா மத்தின்முன்பாக. 5

கொண்டுவந்திடவந் தனன்மிகமுனிந்து
கொஞ்சமென் றடித்திடவயர்ந்து
மண்டிடமில்லா தாதரவில்லா
தம்மம்ம வப்பனேயென் றும்
முண்டவொங்கிடவுங் கண்டகொங்கிடவு
முளரியைத் தருப்பையைக்கட்டிக்
கொண்டுதந்திடுநா ளினிலொருநாளிற்
கொடியமாவட வயிற்றநயன். 6

தருப்பையைக்கண்டு பறித்திடாவிடினந்
தலைவன்மோ துவனெனவஞ்சித்
தருப்பையைப்பறிக்கச் சீரியேயுரகந்
தீண்டிடச் சகித்திடாதுடலம்
நெருப்புபோலெறிய நிலந்தனில்வீழ்ந்து
நெட்டுயிர்ப் பிறந்துமெய்மூர்ச்சித்
தருப்பமேமிந்ததா தரவிலாதையோ
வன்னைதந்தையை நினைந்தழுதான். 7

பஞ்சணைமீது வரும்பிலாமலரைப்
பரப்பிமேற் படுக்கவைத்திடவப்
பஞ்சணைமீது முடல்சகிக்காத
பண்புளகுமரனு நாய்பேய்
வஞ்சகப்புலிவா ழடவியிற்கற்கண்
முட்கண்மேற் புரண்டுடல்வருந்தித்
தஞ்சம்யாரின்றித் தனல்விழுபுழும்போற்
றுமமேமிகுந் துயிர்விடுத்தான் 8

ஆவிநீங்கிடவந் தனர்நகர்மேவி
யறைந்திடச் சந்திரமதியும்
ஓவியம்போலோர் நாழிகைநின்றுன்
மத்தமா யுடறனைமறந்தாள்
பாவிநானென்செய்வே னெனபதைப்பாள்
பதைத்துவீழ்ந் தழுதுமூர்ச்சிப்பாள்
ஆவிநீத்தவள்போ லரைபதமிருப்பா
ளப்பனே மடிந்தையோவென்பாள். 9

வாய்திறந்தழுதால் மறையவன்முனிவா
னென்றுதன் வாய்திறந்தாற்றுள்
செய்தனைநினைந்து மறந்துதன்வாய்விட்
டிடர்க்கடலினிற் புகுந்தழுவாள்
காய்நரிபேய்வாழ் காசமாங்கானி
னல்லுயிர் விடுத்தையோவென்பாள்
சேய்தனைக்காண மன்னவன்வந்தாற்
செப்புவதென்னெனத்துடிப்பாள். 10

### வேறு.

முகத்திலு மார்பின்மீது
வறைந்துகொண் டழுதேமுற்றத்
தகத்துள பணிகள்யாவு
மட்டியில் லாமற்செய்து
தகர்த்திடு மறையோன்பாதந்
தாழ்ந்தென்றன் றாயன்காட்டில்
தகித்திமோவான் மாண்டான்
தகனஞ்செய் திடனுன்போக. 11

விடைகொடு மெனவப்பார்ப்பான்
  வேலைபற் பலவிருக்க
அடியென்ன சொன்னாய்பைய
  லடவியின் மாண்டதாலே
தடந்தனக் குரியகள்ளி
  தருப்பைபைக் கொணர்தற்காளின்
றிடர்கஷ்ட மெனக்கல்லாம
  லென்னடி யுனக்குகஷ்டம். 12

என்னவென் னையாலீட்டி
  லிருக்கின்ற பணிகள்யாவு
முன்னமே செய்தேனென்ன
  முனிவுகொண் டடித்துவைதென்
சொர்னத்துக் கழிவுதந்த
  துன்மார்க்க பயறனக்கோ
ரன்னையு முண்டோபோகா
  தகத்தினி லிருப்பாயென்றான், 13

இருமென்ற போதேபெற்ற
  வயிறெரிகிற தென்னையா
அருணன்வந் திடுமுன்சேர்வே
  னகந்தனை யெனவவ்வம்ப
னருங்கானஞ் செலவிடையீ
  யெனவடி பணிந்துபோற்றி
இருளென்று மறியாச்சந்த்ர
  மதியிர வினிற்றனித்தே. 14

கானக நாடிச்செல்லக்
  கார்மழை குமிறிப்பெய்ய
ஆனைங் கட்டிடாம
  லநிலன்வே கமதாய்வீச
கானக முள்ளுங்கல்லுக்
  கால்களிற் றைக்கமூங்கில்
லனைலாம் பீறரத்தத்
  தாலுடனனைந்து சொந்தாள். 15

செடிகளின் மயிர்கள்சிக்கத்
  தேள்புயங் கமுங்கடிக்கப்
பிடிபலி கூவிற்கப்
  பீதியான் மனந்துடிக்க
மடிபிடி யெனப்பேய்சூழ
  மைந்தனை நினைந்துநைந்து
படியெலா மாளுந்தூய
  பாலனைத் தேடலுற்றாள். 16

மயில்குயில் கிளிகாளென்றன்
  மைந்தனைக் காண்கிலீரோ
புயங்கமே புலியேயென்றன்
  புதல்வனைக் காண்கிலீரோ
கயங்கா டிகளேயென்றன்
  கானையைக்காண்கிலீரோ
பயந்தரும் பேய்களேயென்
  பாலனைக காண்கிலீரோ. 17

திக்கொரு வருமிலாமற்
  றியங்கியே தேடித்தேடி
மைக்குழன் மாதுகானின்
  மைந்தனைக் கண்டாள்கண்டு
துக்கமே மிகுந்துசோர்ந்து
  சுதனைத்தன் மடிமேலேந்தி
துக்கத்தா லழுதியாவ
  ராற்சொல லாமென்மாதே. 18

வெகுபொழு தழுதுசோர்ந்து
  விடியுமுன் வேதியன்றன்
அகந்தனைச் சேராவிட்டால்
  அடிப்பனென் றவனுக்கஞ்சி
மகன்றனைத் தோண்மேலேந்தி
  மயானஞ்சேர்ந் தீமீது
மகனைவைத் தழலைமூட்ட
  மன்னன்கண் டோடிவந்து. 19

அடிகுடி கேடியென்றத்
  தநயனைக் காலால்வீசப்
படிபுகழ் மைந்தாவுன்னைப்
  பறையனு முதைத்தானென்று
மடிமிசை மைந்தன்றன்னை
  மதிமதி யேந்திக்கொண்டங்
கிடர்க்கடல் புகவல்வேந்த
  னென்மகன் மடிந்தானென்றே. 20

சந்திர மதியாலுற்ற
  சங்கதி யெல்லாங்கேட்டு
மைந்தன்மேல் வீழ்ந்தயர்ந்து
  மார்புட னணைந்துக்கொண்டுன்
மைந்தனை வைத்துநீபோய்
  மடிபணங் கொண்டுவந்து
தந்தபின் சுடுவாயென்ன
  சந்திரமதிநீ பார்ப்பான். 21

இடஞ்செல வழியின்மாண்ட
  விளைஞனைக் கண்டுகொந்த
மடிமிசை யேந்தலோடும்
  வந்துகா வலர்கள்சூழ்ந்து
துடிதுடித் திடவிர்த்தந்
  தோன்றக்கீழ் விழவடித்துப்
படிபுகழ் காசிமன்னன்
  பாற்கொண்டு போய்நின்றார்க்க 22

மன்னனுஞ் சிறுவன்றன்னை
  வதைத்தவ ளிவளோவென்றுக்
கன்னியைக் கொல்வாயீமங்
  காப்பவா வெனவந்நீசன்

மென்னியைப் படித்துத்தள்ளிக்
கோசல வேந்தன்கையில்
கன்னியைக் கொடுக்கவேந்தன்
காந்தையோ டிகொடுற்றே, 23

தனயனைப் பார்த்தயர்ந்துந்
வதயலைத் துணிக்கவேர்ந்தும்
தனயனோ டணியான்மாண்டான்
சதிதனை நானேவெட்ட
எனமுனம் பாவஞ்செய்தே
னென்றிடர்க் கடற்புகுந்து
மனைவியைக் குனியவைத்து
வாளினைக் கையிலேந்தி. 24

விசிடங் வரமன்வந்து
வேந்தன்கை பிடித்துக்கொண்டு
மாசிலா தவனீயென்று
மைந்தனை யெழுப்பித்தந்து
கோசலம் புரப்பாயென்று
குன்றவில் வியன்மறைந்தான்
மாசிலா தவனேகேட்பாய்
மற்றொரு காதையென்றான். 25

அரிச்சந்திரன்கதை முற்றிற்று.

---

## புரூரவ சக்கிரவர்த்தி கதை.

### சந்த விருத்தம்.

பொக்கிஷமும் விளைவும்முள நாடு
புரந்தபுரூரவமாச்
சக்கரவர்த்தயு மனைதன நாடு
மிழந்தயனுட்டிலே
மைக்குழறன்மனை யானையிழந்திரு
மகவினிலோர் மகவைப்
பக்குவமாயோ ராற்றின்கரைதனில்
வைத்தோர்பாலனையே. 1

ஆற்றங்கரையினில் வைத்திக்கரைவரு
மாதவாசனுமவ்
வாற்றாறுநீர்மேன்மேமிகவரவே
யக்கரைகாணும
லாற்றாறுநீரிலமிழ்ந்தமெழுந்து
மவனைதைகள் பலவெய்தவ்
வாற்றாறுநீருடனே வெகுதூர
மகன்றோர்கரையேறி. 2

ஏறுங்கரைதனிலுயர் வெண்பொன்னு
மிலகியபொன்னகையும்
கோறற்சமனுமுத்தாரமுந்த
கோமேதகங்கண்டே

ஏறுங்கரிபுலி வாழுங்கான
மதிலிவ்வுயிர் கொலியெவ்
வாறுபொருந்தினதென நோக்குற்றங்
குற்றான்மன்னவனே. 3

### வேறு.

மாடனெக்கேதென்று நோக்கிடிப் வள்ளலை
மாக்கள்ள னென்றடித்தக்
காடுதனிலொருகையை யொருகாலைவாங்கிக்
காவலாகல மன்னனேவ்வி
காடிழந்தேன்ப்ராண நாயகியோடெச்சமு
கலனிழந்தே னதியினிற்
பாடடைந்தேனிடர்க் கடலடைந்தேன்பராணி
காலிழந்தேன் றெய்வமே. 4

என்னகாரணமர காசிவானந்த
னேயென்றழைத்த வண்ணல்
என்னரசென்னவாழ் வெலாவிதியெனவிசைத்
திறைவனே யபயமென்றே
மன்னுறைமுடிவிலிக் குற்றபொருறருளினன்
வடிவுமனை மகவமன்றி
முன்னிழந்தவையெலாம் பெற்றதியினின்முத்தி
பெற்றின்ன முற்றனரோ 5

---

## நளச்சக்கிரவர்த்தி கதை.

### விருத்தம்.

பூவெலா மாண்டகன் னள மகா ராஜன்
பொன்னொடு மகவிழந்திப்
பூவிலுறு கன்னியர்களினிலழகு கற்புள்ள
புண்ணியசா லியுமைந்திடத்
தாயதிலலையவிட் டுத்துசி லாமற்றன்
னுருவேற தாய்தனக்குச்
சேவைசெயு மண்ணலுக் காளதாய்த் தன்புறுந்
தேற்பாக னானனரோ. 6

### வேறு.

இரவினிற்கானிற் காவலனின்றி
யேந்தினபோ தெனக்களிப்பே
அரவுவந்தணுகி விழுங்கிடும்போதி
லயர்ந்திடும் போதெனக்களிப்பே
அரவினைத் துணிந்த கிராதனைக் கற்பா
லனல் செயும் போதெனக்களிப்பே
கரிகண்மேல்வீழ்ந்த போதச்த வனத்திற்
களிப்பெனத் தமயந்திதனக்கே

அரக்குமாளிகையி லனலிட்டபோழ்து
 மமர்செயும் போதெனவின்பே
இரக்கின்றவறையோர் பாலிரந்துண்டவ்
 விருந்தபோ தென்னகல்லின்பே
எரிம்புதல்வியைமன் னவர்முன்மான
 வீனஞ்செய் போதெனவின்பே
அருப்டமியடவி தனிலுறம்போது
 மைவநத்தகன்ன கல்வின்பே. 8

மாவுரிதரித்து வனந்தனிற்செல்லும்
 போதுந்தன் மனைவியைக்காணு
திருளடவியிற்றன் றேங்கும்போது
 மிராக்கத ரமர்செயும்போதும்
அருளிலக்குமியை யடவியிற்கொடுபோ
 யதஞ்செய்து வாவென்றபோதும்
தரைதனிற்சீதை புதைந்திடும்போதந்
 தசரதன் மகற்கெனசுகமே. 9

வனந்தனிற்செலும்போ தவுணரைக்கொலும்போ
 திராவணன் வந்தெடுக்கும்போ
தனந்தனம்வெருவுங் கழலுழன்றேழ்விழும்போ
 தசோகமா வனந்தனிலழும்போ
தனந்தவதார னிராமனுத்தரவென்
 றடவியிற்கொண்டுபோய்விடும்போ
தினம்பிரியமான்போற் றனித்திடர்படும்போ
 திலக்குமிக் கெனசுகமாதே. 10

வேறு.

காடெலாமாண்டமக் கீடம்புனைந்தகன்
 னரபதிக ளுள்ளமைந்தேம்
காடிழந்தோமரி சகரிழந்தோ நல்ல
 மகவிழந்தோ மெமதுயிர்ச்
சோடிழந்தோமிடக் கடலடைந்தோங்கழற்
 றேளிழந்தோமெனமிக
வாடியிறையோனருளினலின் படைந்தனர்
 மாசிலாக் குமுதவதியே. 11

என்று, பலபேர் பட்ட பாட்டைப்பகர்ந்து பத்மாவதியின் துயரத்தையாற்றி பகவானைப்போற்றித் துரிய திருஷ்டியிற் சரியாக்கிய பிரியாதிருந்தார்.

பத்மாவதி மாறுத்தர வொன்றுஞ் சொல்லாமல் விதியினல் நமது பதிக்கிக் கெதிவந்ததென் றுன்னி, வியாகூலத்தை நண்ணி, பதியே தெய்வம், பதிமொழியேவேதம், பதிசேவையே பூசை, பதியை நினைத்தலே தியானம், பதியைப் பிரியாதிருத்தலே ஞானம், பதியுடனிறத்தலே மோட்சமென்று, பதிசேவையை நாடிப் பதிபக்தியிற்கூடிப் பதியைத் தியானஞ்செய்துகொண்டிருந்தாள். இவ்வாச்சரியங்களைப் பார்த்த இறைவன் இவரே மகாதேவன், இவரே வாசுதேவன், இவரே தேவதேவன், இவரே பிரமதேவன், இவரே அபிராணி, இவரே இந்திராணி, இவரே செல்விவாணி, இவரே கல்வி நிர்வாணி எனத்துதித்து, இருவரையும் வலம் வந்து பணிந்து, துறவியாய்ப் போகலாமென்கிற விச்சைதணிந்து, பத்மாவதியின் திருவடிகளில் தன் திருநயனங்களையணிந்து, இனி யிவர்களுக்குப் பணிசெய்தாலே மோக்ஷம், இதுவே மோட்சமடையும் சூட்சம் எனத் தீர்மானித்தன்றுமுதல் சாதுக்கள்யார்வந்தாலும் வேண்டிய உபசாரணையோடும் வைத்துக்கொண்டிருந்து வேறுதேயங்கட்குப்போக வெண்ணங்கொண்டவர்கட்களவற்ற திரவியங் கொடுத்தனுப்பி மந்திரி பிரதானிகளை நோக்கி நம்முடைய பட்டணத்தில் விஷ்ணுபக்தர்கள், சிவபக்தர்கள், பிரமக்ஞானிகள், அதிதிகள் யாவர்வந்தாலும் எனக்கரிக்கைசெய்து சேவையைத்தருவித்து என்னை உய்வித்துக் கீர்த்தியடையுங்களென் றுக்யாபித்தார்.

அப்படியே மந்திரி பிரதானிகள் நடக்கப் பிராமணர்களும், சாதுக்களும் நிறைந்து வீதிவீதியின் விஷ்ணு சங்கீர்த்தனங்களும், சிவ சங்கீர்த்தனங்களும், வேத கோஷ்டங்களும், வேதாந்த கோஷ்டங்களும் முழங்க எத்திசையிலும் ஆலய கோபுரங்களும், அனுமக்கோடிகளும், ஒன்றிலுமொன் றுயர்ந்ததாய் விளங்கிப் பசுக்கூட்டங்கள் பரவி ஸ்ரீமகாவிஷ்ணு வீற்றிருக்கும் வைகுந்தத்தைப் போலவும், பரமசிவனர் வாசஸ்தானமாகிய கயிலையைப்போலவும் பிரமதேவன் நிவாசஞ்செய்யும் சத்தியலோகத்தைப் போலவும், சொர்க்கலோகத்தைப் போலவும், அளகாபுரியைப்போலவும், பிரகாசித்து ஐம்பத்தாறு தேசங்களிலும் பிரக்யாதியாய் நான்கு திக்குகளிலும் கீர்த்திப்பிரசன்னமாகி அரிச்சந்திரன், நளன், மாந்தாதா, ரகுராஜன், தருமர் முதலானோர் செய்த அரசாட்சியைப்போலிருந்தது. கேட்டீர்களோ சித்தர்களே யென்று விரிஞ்சாவதாரரான நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்.

ஜெயதேவை பத்மாவதி தரிசித்த அத்தியாயம் முற்றிற்று.



ஆறாவது

## கள்வர் பாதாளத்தி லமிழ்ந்த அத்தியாயம்.

இப்படியிருக்குங் காலத்தில் ஜெயதேவ சுவாமிகளின் கைகால்களைக் கண்டித்துப் பாழ்கிணற்றிற் றள்ளின பாதகர்களாகிய சோரர் கிரவுஞ்சராஜன் சாதுக்

களைக்கண்டால் மிகவும் உபசாரத்துடன் தேவையான திரவியக் குவையல் தருகிறபடியால் நாமேன் இருட்டுத் தனத்தாற் சீவனஞ்செய்யவேண்டும், சாதுக்கள் வேஷந் தரித்து வேண்டிய வஸ்துக்களை வாங்கிக்கொண்டு வந்து சுகமாய் வாழ்ந்திருப்போமென்று கோஷாயி வேஷந் தரித்துக் கிரவுஞ்சராஜன் தேசத்திற் பிரவேசித்தார்கள் அவர்களைக்கண்ட காவலர்வந்தனஞ்செய்து, அரசனரண் மனைக் கழைத்துக்கொண்டுபோய் இதுதானிறைவ னிருக்குமிடம் அதோதெரியுமேடை ஜெயதேவஸ்வாமிகளின் வாசஸ்தானம், ஸ்வாமிகளின் தரிசனம் வேண்டியிருக்கு மாயின் அவ்விடத்திற் செல்லுங்களென்று சாற்றக் கரவடர் அண்ணல் மேடைக்குப்போனால் இராஜதரிசனங் கிடைக்கத் தாமஸமாவதன்றி எல்லாருக்குங்கிடைப்பது போல நமக்கும் கொஞ்சம் பொருளகப்படும். ஆதலா லிறைவனுசிரிய ரனுமதியாற்போவோமாயின் அளவற்ற பொருளகப்படுமென் றதிக ஆசை அளவற்ற மோச மென்பதறியாமல் சத்குருஸ்வாமிகளின் மேடைக்குட் பிரவேசித்தார், உடனே அங்கிருக்கும் ஏவலாளர் பணிந்து, ஓ சாதுக்களே! தடையில்லாமல் வாருங்கள், கிருபை கூருங்கள் எங்களைக்காருங்கள், ஸ்வாமிக ளிதோ வீற்றிருக்கிறார் பாருங்களென் றழைத்துக்கொண்டு போய்த் தேசிகரைநோக்கி, ஓ ஸ்வாமி யாரோ புண்ணிய புருஷர்கள் தங்கள் தரிசனத்துக் கெழுந்தருளினார்கள் அவர்களை யன்புடன் பார்த்து வேண்டிய தளித்துக் காத்து அரசனுடன் சேர்த்துக் கோரிக்கைகளைத்தீர்த்து ஆட்கொள்ளுமையாவென்று பணிய,

ஜெயதேவர் சாதுக்களைக் கண்டதே மொண்டிக் கைகளைக்கூப்பித் தெண்டனிட்டார். அப்போது தேவர் மொண்டிக் கைகளையுங் கால்களையுங்கண்டு சந்தேகங் கொண்டு, ஓஒ மோசம் வந்தது, ஆசையெல்லாம் வீணாச்சுது, நம்முயி ரின்றோடு போச்சுது. மரணகாலம்வந்து வாச்சுது, நாமே தேடிக்கொள்ளலாச்சுது என்று முன் னிட்டகாலைப் பின்னிட்டோடத் தொடங்கினார்கள். அதற்கு ஸ்வாமிகள் ஓ பரமசாதுக்களே! வந்தனம் வந்தனம், பரப்பிரமஞானிகளே! வந்தனம் வந்தனம், பரம பாகவதர்களை வந்தனம் வந்தனம், இவ்வளவுதூரம் நடந்துவந்துப் பாவியேனுக்கு தரிசனந்தந்தும் சிலநா ளிருந்துபோகாமல் பாமரன் முகத்தைப் பார்க்கொணா தென்றோ போகிறீர்கள் தயவுசெய்து சற்று நில்லுங்கள் நில்லுங்கள் உங்கள் பாததரிசனந் தாட்கொள்ளுங்கள் என்று சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட் டன்புட னழைக்கும்போது புரையோர் சற்றுந்தங்காமல் காலடி பிடரியிற் படும்படியாக ஓடத்தொடங்கினார், ஆரியர் இவர்கள் நம்மைக் கண்டித்த கரவடர்போற் றோன்றுகின்றது ஐயோ! யாதோவிச்சையா லிவணடைந்து நம் மைக்கண்ணுற் றிடைந்து பயந்தோடுகிறார்க ளினியிவர் களைப் பலவந்தமா யழைப்பித்து வேண்டிய திரவியங் களைக் கொடுத்தனுப்பலாமென்று ஏவலாளரை நோக்கி ஓ சேவகரே! என் பிராணனைக் காப்பாற்றின பரமபாகவதோத்தமர்களைப் போகவொட்டாமற்றடுத்துஅன்போ டழைத்துக்கொண்டு வந்தென் னெதிரிலிருத்திப் பாயாசத்தைப் பருகுவித்துப் பண்டு பலாதிகளை நுகருவித்து விசிறிகளைக்கொண்டுவீசி, மேனியெல்லாம் சவ்வாதுபூசி விரைவாக வேந்தன்பாலோடி வேந்தன் விரைவாயிங்கு வோடிவரும்படியாய்ச் செய்வீர்களெனத்திருவாய்மலர்ந் ததைக்கேட்ட வேவுகாரிற் சிலர் கள்ளச்சாதுக்களைப் பலவந்தமாக விழுத்துக்கொண்டுவந்து பீடங்களின்மே லிருத்தி உபசரணைசெய்துக் கொண்டிருக்கச்சிலர் இரா ஜன்பாற் போமையில் பிதா என்னமோ மோசம்வந்தது (மோசம் நாசம் கம்பளிவேஷம்) என்கிறபடி நமக்கு மரணகாலம் நேரிட்டதென்று திருடர் நெஞ்சம் திடுக்கு திடுக்கென்று துடிக்குமென்பது போலவும் விபசாரியி னுள்ளம் வெடுக்கு வெடுக்கெனத், திடுக்குறுவதைப் போலவும், கொலையாளிகளினிதயம் குடுக்கு குடுக்கென முடுக்குவதைப்போலவுந் துடித்து உதடுகளைக்கடித்துத் தாங்கள் செய்த அக்கிரமங்களை நினைத்து விசனக்கினியால் வெந்து உள்ளம் மிகவும்நொந்து உயிர் நீங்கினவர் போல் நைந்து முகவாட்ட மடைந்து நடுக்கங்கொண் டிசைத்த மொழிபோல் குறைந்து வியாகுலம் நிறைந்து கனகாசை யிறங்கி தங்களைத்தாங்கள் மறந்து மனதிற் கிலிபிறந்து காயத்தை யசைக்காமல், கண்ணிமை கொட் டாமல் பிர்மஹத்தி பிடித்தவரைப் போலவும் பேய்பிடித் தவரைப்போலவும், சர்ப்பயாகஞ் செய்தகாலத்தில் ரிஷியின் மந்திரோச்சாடன பலத்தால் ககனத்திலிந்திரன் ஸ் தம்பித்து நின்றுவிட்டதைப்போலவும், மயங்கித் தியங் கித் தேகமுருகி முகங்கருகிப் பயமென்னும் வாரிதியி லாழ்ந்து பிரமத்தி சூழ்ந்து அசைவற்றிருந்தார்கள்.

கரவடரிப்படியிருக்க, காவலர் நிருபனிடம்போய் ஓ சுவாமி! தேவரீரை நமது சத்குருஸ்வாமிகள் துரிதமா யழைத்துக்கொண்டு வரும்படியாகச் சொன்னாரென்று வணங்க, உடனேநராதிபன் கருணாநிதியாகிய கர்த்தனுக் கிவ்வெளியேன்மீ தின்றைக்குத்தான் கருணைவந்

ததோவென் றுடனே எழுந்து விசையான காற்றைப் போலவும், அம்பைப்போலவும் ஓடிவந்து சுவாமிகளை அன்பா யிஷ்டமாய்ப் போற்றி புகழ்ந்து, பொங்கிப் பூரித்து மகிழ்ந்து, அகங்குளிர்ந்து, முகம்மலர்ந்து சிர சாஷ்டாங்கமாய் வந்தனம்புரிந்து, மிகவும் பரிந்து கைக ட்டி வாய்பொத்தி, ஓ எனது சத்குருநாதனே! மெய்ஞ் ஞான போதனே அடியேனாகிய கொடியேனை அழைப் பித்த காரணமேதோ திருவாய்மலர்ந் தருளுமெனக் கேட்க, அடிகளன்னவை யன்புடன்நோக்கி, ஓ ராஜாதி ராஜனே! சிறப்புற்ற போஜனே! நீசெய்த நலமோ? உங்கள் பெரியோர்செய்த தபோபலமோ மகாபுண்ணிய வான்களான இந்தச் சாதுக்க ளிங்குவந்தார்கள் அரி தான சேவை தந்தார்கள்.

ஓ ஓ இவர்களிருக்கும் நிஷ்டாபலத்தைப் பாரும், இவர்களடிகளி லுமது தலையைச்சேரும், பீடைகளெல் லாந்தீரும், மெய்ஞ்ஞான விலாசம் மீறும், என்னவரம் வேண்டுமோ கோரும், அதிலெனக்குப் பாதிதாரும் ஆ! ஆ! இவர்கள் மெய்ஞ்ஞான தேசிகோத்தமர்களையா? யான் சொல்வார்த்தை பொய்யா? இதிற் சந்தேகமில்லை துய்யா? என்றும் பொய்சொல்லா மெய்யா? தர்மஞ்செய் யுங்கையா வெனப்புகழ்ந்து, ஓ அரசனே! பிரஜைகளுக் குள் சரசனே இவர்களுக்கு நல்ல ஆடையாபரணங்க ளளித் துமது சிங்காரமேடையிலிருத்திப் பயபக்தி யித யத்திருத்திப் பாழிற்போகும் மனதைத் திருத்திப் புண் ணியமும், புகழும் பூலோகத்தில் நிறுத்திப் பூரணதியா னத்தை விருத்தியடையும்படி செய்வாயப்பா வெனத் திருவாய் மலர்ந்தருள, அதிபதி அதிக சந்தோஷித்த னுப் காவலராற் றண்டிகைகளை யழைப்பித்து அதிற் சாதுக்களை எழுந்தருளவைத்துச் சிங்காரமானமேடையி லுட்கொண்டுபோய்ச் சிம்மாசனங்களி லெழுந்தருளச் செய்து இவர்களை தர்மந்தை பாலித்து வளர்க்குஞ் சாதுக்கள், இவர்களே மகத்வம் பொருந்திய பிரமக்ஞா னிகள், இவர்களோ பத்தி புத்தி தருஞ் சீலர்கள். இவர் களோ சித்திமுத்தியளிக்கும் அநுகூலர்கள், எனப்பலவா றுகப் புகழ்ந்து புகழ்ந்து மகிழ்ந்து ஏவலாளர்களாற் சகல உபசாரங்களையுஞ் செய்துக்கொண்டிருக்கிற காலத் தில் சஞ்சல நெஞ்சவர் ளாகிய கரவடர் தங்களுக்குள் தாங்களே முழைந்து நமக்கிவ்வித பூசனைசெய்துக் கொ ண்டு வருகிறதை யோசிக்குமளவில்வெகு மோசமாகவே யிருக்கின்றது யாதொன்றும்வேண்டாம் லோட்டமெடுப் போமென்றால் அருகில் காவலாளர் கடுங்காவல் நெருக் குண்டிருக்கின்றார்கள்.

இனி சில நாளில் நம்மை வதைப்பார்களே யன்றி விடப்போகிறதில்லை நாம் செய்த துரோகம் நம்மையே சூழ்ந்துகொண்டிருக்கின்றது. கழுவிலேற்றுவோனுக்குச் சகல சுகபோகங்களுக்கு மனுபவிக்கக் கொடுப்பதைப் போல நம்மைப் பூசித்துக்கொண்டு வருகிறார்களென்று தேள்கொட்டிய திருடனைப்போல பூசனை செய்பச்செய்ப மனோவியாகுல மிகுந்து மாறுப்பீதி மனதிற்புகுந்து உடல்வாட்டமும், மனவாட்டமுமடைந்து மிகவுந்திகி லடைந்திருந்தார்கள் இப்படி யிருக்க பார்த்திபன் சாதுக் களின் குணக்குறிகள் வேறுபட்டிருக்கக்கண்டு சந்தே கங்கொண்டு ஸ்வாமிகளிடமடைந்து, ஓ ஸ்வாமி! அருள் விலாசம் விளங்கிய ஞானிகளை முகவிலாசத்தாற் கண்ட றியலாமல்லவா? அப்படியிருக்க, இப்போது வந்திருக் கும் சாதுக்கள் சோதுக்குள்ளானவர்போல் உடல்வாடி ஓடிப்போவதற்கே நாடியிருக்கிறார்களன்றி நான் சேவை செய்யப்போனால் பீதியடைந்து என்னைப் பார்ப்பதற் கிடைந்து குற்றமுள்ளவன் பலர் முன்வர மனங்கோணு வதைப்போலவும், ஆசையுள்ளோன் நிராசையுள்ளோன் முன்னிற்க நாணுவதைப்போலவும், கற்பில்லாமங்கையர் கால்நடையைப்போலவும், கண்சைகையைப் போலவும், கொலைபாதகன் குலத்தைப்போலவும், திருடரடைந்த திகிலைப்போலவும், பலகுறிகள் வேறுபட்டுச் சற்சனர் குணங்களுக்கு மாறுபட்டுக் காணுகின்றது. ஆனால் பெரியோர்செய்கை நன்றாயறியேனாதலா லறியும்படியா கக் கிருபைகூர்ந் தருளல்வேண்டுமெனப் பிரார்த்தனை செய்ய,

ஜெயதேவர் கோமானை நோக்கி ஓ கொற்றவனே! சொல்லற்கரிய நற்றவனே! வறியேனும் பெரியோர்க ளின் குணக்குறிகளை நன்றாயறிந்தவனல்ல, ஆயினும் தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன், அதாவது பரப்ரமக் ஞானிகளாகிய ஜீவன்முக்தர்கள் ஆரம்பத்திற் சமாதிசா தனஞ் செய்யத்தொடங்கிச் சாந்தியமாகும் பரியந்தம் ஒருவரோடதிகமாகப் பேசாமலும், தேகாதிகளின்மேல் வாஞ்சைகொள்ளாமலும், கடினவார்த்தைகள் விள்ளாம லும், அதிருப்த மௌனத்தை யடைந்திருப்பார்கள், மனமடக்க அடங்காமல் நிஷ்டைக்கு மாறுபட்டதானல் பித்தனைப்போற் பிறரை வைவதாய் வாயில் வந்தபடி பிதற்றிக்கொண்டே திரிவார்கள், மனமடங்கினால் ஆனந்தமேலிட்டுப் பாடுவார்கள், பாடியாடுவார்கள், பிர மானந்தத்தையே நாடுவார்கள், பிரமத்துடனொன்றாய்க் கூடுவார்கள், மனம் பகிர்முகப்படில் வாடுவார்கள்,

அந்தர்முகத்தையேதேடுவோர்கள்தானின்னானென்றுமறியார்கள், காடுநாடென்றுந் தெரியார்கள், நன்கு தீதென்றும் குறியார்கள், துரியநாட்டத்தைப் பிரியார்கள், தேகசுகத்தைத்தேடார்கள், தேசங்கடோறு மோடார்கள், இந்திரியசுகங்கருதி வாடார்கள், இந்த்ராதி லோகங்களை நாடார்கள் தீமைகளொன்றுஞ் செய்யார்கள், தெரிவையர்போகங்களில் நையார்கள், அடிமைகடம்மையும் வையார்கள். அன்பிலாதோருயிரைக் கொய்யார்கள், பிராப்தத்தால் இல்லறத்திருந்தாலும் நாழியமுதுக்கும் நால்முழத்துண்டுக்கே இச்சைவைப்பார்கள், இவ்விச்சையையையும் மனதிலிருந்து பிரிப்பார்கள், சமுசாரம் நமக்கேனென்றுரைப்பார்கள், ஒரேமனதாய்த் துறப்பார்கள் இருந்தாலு மிருப்பார்கள், மெய்ஞ்ஞானத்தையே விரிப்பார்கள், நாற்றிசையிலும் தெரிவிப்பார்கள், பிரமமேமேலானதெனக் குறிப்பார்கள், அடியார்கடீங்குகள் விலக்கத்திரவியமும் பறிப்பார்கள், அகந்தையையடியோடு மெரிப்பார்கள், மாயவாழ்க்கை யீதெனச்சிரிப்பார்கள், மாயாவாரியிலு மனமெழாமல் மறிப்பார்கள், இன்னமனேக விதங்களாயுமிருப்பார்கள், ஏனெனின் பிரமக்ஞானிகளினனுபவத்தைத்திரிமூர்த்திகளாலும்அறியக்கூடாப்பான்மையானதால் என்னுவுரைக்கப்போமோ, ஒ பூபாலனே, உரைத்ததற்கரிய சீலனே ஏழைகட் கனுகூலனே, என்னருமைப்பாலனே, இப்போது நம்மிடம் வந்திருக்கும் பெரியோர்கள் நமது குறைகளெல்லாம் நீங்க உமக்கு நற்குணங்களோங்க இகவெண்ணெங்களெல்லாமோங்கப் பாவங்களையெல்லாம் வாங்க ஆனந்தத்திற் றூங்கச் செய்ய வந்தார்கள், இப்பேர்க்கொத்த மகானுபாவர்களைச்சஞ்சாரசமாதி செய்யாமல் இச்சையானவிடத்திற் கேகாமல் நெடுநாளாகத் திருடரைச் சிறைச்சாலையிலடைத்ததுபோலவும், விபசாரமங்கையை வெளியில்விடாததைப்போலவும், யானையைக் குழியிற் றள்ளிவைத்ததைப் போலவும், புலியைக் கூண்டிலடைத்ததைப் போலவும், மேடையில் வைத்திருப்பதால் சஞ்சாரசமாதிக்கு தடையாயிற்றென்றும், ஏகாந்தமாயிருப்பதற் கில்லாமற் போயிற்றேயென்றும், வாட்டமடைந் திருப்பார்கள்.

ஆதலால், அவர்களுக்குத்தேவையான திரவியமுதலானதுகளைக் கொடுத்தனுப்பி விடுமெனத் திருவாய்மலர்ந்தருள, ஏந்தல் ஒ ஸ்வாமி நிஷ்காமி பெரியோர்கள்தங்களுடல்மேலிருக்கும் அவாவையு மகற்றித் தன்னைமறந்திருக்குஞ் சீலர்களாயிற்றே அவர்களுக் குயிர்க்கொல்லியின்மே லிச்சையிருக்குமா திரவியவாஞ்சையுள்ளோரை ஞானிகளென்று சொல்லக்கூடுமோவென்று சங்கை செய்ய, ஜெயதேவர் ஒ கோமானே? தருமகுணத்திற் சிறந்த சீமானே! மலைகளெல்லாம் பொன்னாக்கும் வல்லமையுள்ளவராயும், சமுத்திரத்தையுண்டு கலசத்திலடைத்தவராயும், வாதாபி சீரணமியெனப் புகன்றவராயும் கும்பத்தினுதித்தவராயும், தாருகாவனத்து ரிஷிகளை வென்றவராகியும் விளங்காநின்ற அகஸ்தியமுனிவர் ஓர் பெண்ணாசையால் அரச ரனேகரிட மலைந்து திரவியத்தை சம்பாதித்தார் ஜனகர் யாகஞ்செய்து அளவற்றதிரவியமும் அனேகம் பசுக்களும் ஞானியாய் ரிஷியாயிருப்பவருக்கு கொடுப்பேனென்று பறைசாற்றிவைக்க அது தெரிந்து மைத்திரி மூடையென்னும் இரு மனைவியர்களின் வாஞ்சைநீங்க யார்க்யவர்க்கரென்பவர் பூரணக்ஞானியு மல்லாமல் ரிஷிசிரேஷ்டன் நானென்ப துண்மையல்லவோ? ஆதலால் இத்திரவியக் குவையையும் கோகூட்டமும் எனக்குத் தத்தஞ்செய்யுமென்று கையேந்தி அவ்விறைவனிடம் பெற்றுக்கொள்ளவில்லையா இவர்களிச்சித்தது மாத்திரந்தொல்லையா, யாரார் பிராப்தமெப்படி யிருக்கின்றதோ நமக்குத்தெரியுமா; யாரெதை யிச்சித்தார்களோ; அது தன்னிடமிருக்குமாயின் க்ஷணமே பட்சமுடனளிப்பவனல்லவோ? உத்தமபுருஷனெனச் சொல்லப்படும். இதற்கு திருஷ்டாந்தம் ததீசி மகாரிஷி-கர்னன்-ரகுராஜன்-அரிச்சந்திரன்முதலானவர்களேயாம் ஆதலால் இல்லையெனக்கேட்பவர்க் கில்லையெண்ணமற்கொடுத்தனுப்புவதே ஐஸ்வரியமுடைய விவேகிகட் கழகல்லாமல் க்ஞானிகளருத்தத்தை ஆசிப்பார்களாவென் றுத்தமனாகிய நீ சங்கைசெய்யலாகாது பிறர் குற்றத்தை நாடாதவர்களே பெரியோர்களென் றுரைக்கத்தகும் ஆதலின் என்வார்த்தை மறுக்காமல் இச்சாதுக்களுக்களவற்ற கனகந்தந்து அனுப்பிவிடும் ஏனெனில் பிராமணர்-யாசகர்-கவீசுவரர் சாத்திரவாசிகள் அங்கவீனர் ஏழையராகிய இவர்கட்கே தானஞ்செய்யவேண்டுமென்றும், அதிலும் தன்னையறிந்து நிஷ்டாசாதனஞ் செய்வோர்க்கு இரணிய முதலானதளித்துச் சமாதிக்குத் தடைவராம லனுகூலஞ் செய்தலே ராயசூயத்துக்கு மேன்மையான உத்தமதானமென்றும் சொல்லப்படும் பெரியோர்களுக்கோர் பிடியமுதளித்தால் பிரமானந்தத்தைக் கொடுக்குமென்புராணம் முறையிடுகின்றது ஆதலாவிச்சாதுகளுக்கு ஏமமளிப்பீரேல் தன்யனாவதற்கோர் தடையில்லை யெனச்சாற்ற மண்டலீகன் மாறுத்தரமொன்றுஞ் சொல்லாமல் ஆசிரியரடிகளிற்பணிந்து சாதுக்களிடம்போய் யானை குதிரை ஒட்

டகங்களை யழைப்பித்து அவற்றின்மேல் திரவியத்தை யேற்றிச் சாதுக்களைப்போற்றித் தண்டிகைகளில் வீற்றிருக்கச்செய்து அவர்களின் மனக்கோட்டத்தைக் கொய்துக் காவலரைநோக்கி ஒ ஏவலாளர்களே இந்தச் சாதுக்கள் எத்திசையிற்போக வெண்ணங்கொள்ளுகிறார்களோ அத்திசையிற்கொண்டுபோய் யானை முதலான திரவியத்தை இவர்களுக்கொப்பித்து வாருங்களென்றுக்கியாபிக்கலானார்.

காவலர் மகாபாக்கியமென்று பட்டணத்திலிருந்து வெளிப்பட்டுச் சாதுக்களைநோக்கி ஒஸ்வாமிகளே தாங்களெத்திசையிற் போகவேண்டுமென்று வணங்க, அதற்குக் கள்ளஞானிகள் காட்டைக்காட்ட மகாபாக்கிய மென்று காட்டிற்கொண்டுபோய்த் தாங்கள் தவஞ்செய்யுமிடமேதென்று பணியக் கரவடர்மெள்ளவும் பேசாமலிருந்ததுபோய் காட்டுக்கரசன் யானை காட்டுக்குத் திருடர் யானையென்பதுபோலக் காலாட்களைச் சட்டைசெய்யாமல் வாய்விட்டிறைந்து ஒ ஏவலாளர்களே? இவ்விடத்திலேயே நாங்களிருப்பவர்களாதலால் இங்கேயே திரவியங்களைகொட்டி யானைமுதலானதுகளையுங் கட்டிப்போய் விடுங்களென் றதட்ட அதற்குப்பணியாளர் அச்சமுற்றவர்களாய் ஒ புனிதர்களே உங்களை ஓர் வார்த்தைகேட்க விருப்பங்கொண்டோ மூத்தரவானல் விண்ணப்பஞ் செய்துக் கொள்ளுகிறோமென்று வணங்க கள்ளச்சாதுக்கள் மெள்ளப்பேசாமல் குயில் தான்பறக்கச்சக்திவருமட்டும் மௌனமாயிருந்து சக்தி வந்ததே ஓடிப்போகும் பாவனைபோல் ஒருபேச்சும் பேசாமலிருந்துபோய்ப் பாசாங்கைவிட்டுக் கூசாமல் அடா துஷ்டர்களே ஏவல்செய்யும் பிரஷ்டர்களே என்ன கேட்கவேண்டியதோ சீக்கிரங்கேளுங்களடாவென் றுரைக்கத் தொழும்பர் ஒ சீலர்களே நீங்க ளிதுநாள்பரியந்தம் மௌனமாயிருந்த தென்னகாரணம் அன்றி ஜெயதேவர் உங்களைக்கண்டவுடன் மரியாதையோடு வந்தனஞ்செய்து வைபவத்துடன் வெகுநாள் வைத்திருந்து அளவற்றதிரவியங் கொடுத்தனுப்பும்படியான காரணமேதோ உங்களை அவர் முன்னமறிந்திருப்பாரோ உங்களுக்கு மவர்க்குமுன்பேதாவது தொந்தார்த்தமுண்டோ, சற்றே கிருபைகூர்ந்து தெரியப்படுத்துங்களெனப்பணிய புதற்கவ்வசடர் (கேடுவரும் பின்னே மதிகெட்டுவரும் முன்னே) என்கிற பழமொழிப்படிதாங்களே தங்களுக்குக் கேடு தேடிக்கொள்ள ஒ சேவகரே இப்போது ஜெயதேவென்று பேர்பெற்றுக் கூசாமற் பாசாங்குபண்ணி எல்லாராலும் பணிவிடைவாங்கிக்கொள்ளும் வஞ்சகன் கடினநெஞ்சகன் இப்படியே முன்பே ரரசனிடம் தான் மகாஞானவானென்று வெகுநாள்மௌனமாயிருந்து சமயம்பார்த்துச் சிலரத்தினங்களைத் திருடிக்கொண்டு வஞ்சித்துட்போகக்கண்டு இராஜன் முனிவுகொண்டு உண்டவீட்டிற் கிரண்டகஞ்செய்த இக்கண்டகனை இரண்டாகவெட்டி அத்துண்டங்களைக் கோட்டைவாயலி னெதிரிற் கட்டிவையுங்களென்று சேவகராகிய எங்களுக்குத் திட்டஞ்செய்தான்.

அப்படியே நாங்கள் தன்னுயிரைப்போல மன்னுயிரைப்பார்க்க வெண்ணி இவனை இக்காட்டிற்கொண்டுவந்து கைகால்களை மாத்திரம் வெட்டி ஓர்பாழுங்கிணற்றில் தள்ளி இராஜன்பாற்போகப் பயப்பட்டு எல்லாவற்றினுந்தவமே மேலானதென் றுலகாசையை வெறுத்துப் பலதேசங்களிலுழன்று உங்களுடைய பட்டணத்திற்கு வந்து மேடையினுட்போக ஜெயதேவெங்கிறவர் ஒ-ஒ-நம்மைத்தண்டித்தவர்களும் கண்டித்தவர்களும் வந்து விட்டார்களே இனி நமது சூதுவெளிப்படப் போகுதென்று பலவந்தமாயழைத்துப் பல வுபசாரங்கள் செய்து தன் சூதைவெளிவிடாம லடக்கி எங்கும்போகாமல் மடக்கி இவ்வளவு திரவியங்களைக் கொடுத்தனுப்பின னென்கிற பற்பல தூஷணவார்த்தைகளுரைத்த க்ஷணத்தில் பூமி படீலெனவெடித்துக் கள்ளஞானிகளி னுள்ளங்கலங்கிப் பூமியிலமிழ்ந்த பரமலோபிகளும், மிகுந்த கோபிகளும், பத்தர்முத்தர்களை நடுங்கச்செய்தவர்களும், பதைபதைக்க ஓர் சீவன் கழுத்தைக்கொய்தவர்களும் குருவைவெறுத்தவர்களும், குருவாக்கை மறுத்தவர்களும், தெய்வத்தை யிகழ்ந்தவர்களும் தீமைகள்செய்து மகிழ்ந்தவர்களும் பிறர்மனைவியர்களை யிச்சித்தவர்களும் கோமாம்சத்தைப் பட்சித்தவர்களும் தேவாலயங்களை யிடித்தவர்களும் மடஞ்சத்திரங்களை இடித்தவர்களும் பொய்சொல்லி பிறரைக்கொல்வித்தவர்களும் ஜீவர்களை வதைத்தவர்களும், ஓர் குடியைக்கெடுக்க நினைந்த குலபாதகரும், இகவாசையா லிதரமதத்திற் பிரவேசித்த தோதகரும் இடுகின்றபேரை யிடாமற் கெடுத்தவர்களும் தவஞ்செய்வோரை தடுத்தவர்களும் குருவுபதேசத்தை மறந்தவர்களும் இயம நியமங்களைத் துறந்தவர்களும், நம்பிக்கை சொல்லிக் கொடாதவர்களும் அதிதிகட்கன்னமிடாதவர்களும், பத்தினிகளைப் பழித்தவர்களும், தூரவுதோப்புகளை யழித்தவர்களும், பிரமக்ஞானிகளை வைதவர்களும் பணிந்தவன்மே லம்பெய்தவர்களும், உத்தமர்களை தூஷித்தவர்களும், உலுத்தரைப் பூஜித்தவர்களும், குண்டினிவேலை செய்பவர்களும், கோட்சொல்லித் திரிபவர்களும்

ஏழைகளை யெதிர்த்தவர்களும், இணங்குவோர் வாடக்குதித்தவர்களும், பதிவிரதைகளை யுதைத்தவர்களும், பரத்தையரைத் துதிப்பவர்களும், பெரியோர்வரவைக்கண்டெழாதவர்களும், பிராமணர்களைத் தொழாதவர்களும், அடையும்படியான ரவ்ரவாதி நரகத்திற் பிரவேசித்தார்கள் கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

கள்வர் பாதாளத்திலமிழ்ந்த அத்தியாயம்

முற்றிற்று.

---

ஏழாவது

## ஜெயதேவர் கள்வரைக்காத்த அத்தியாயம்.

---

கொல்லாமை, மெய்மைகூறல், கல்லாமை பிறர்பொருளிச்சியாமை, இந்திரியமடக்கல் முதலான சத்குணங்களாற்செழித்த இயம நியமங்களைப் பாதுகாக்கும் சித்தர்களே; பரிசுத்தர்களே; இப்படி பூமிபடீரென்றுவெடித்து ஜெயதேவைத் தூஷித்த வேஷதாரிகள் தாத்திரியிலமிழ்ந்துபோகவே, சேவகர் கிடுகிடென நடுநடுங்கிக் கொண்டு வந்தவைகளையெல்லாம் அங்கேயே விட்டுவிட்டு தட்டுகெட்டு தடுமாறிக்கொண்டே மூலைக்கொருவராயோடி பட்டணத்தைநாடி ஒட்டமெடுத்து இராஜனையடுத்து நடந்ததைச் சொல்லப்பயப்பட்டுத் தூஷணஞ் செய்ததை நினைத்துக்கண்ணீர்விட்டு அவ்வசனங்களைச்சொல்லப் பின்னிட்டுப் பூமியிலமிழ்ந்தது சொல்லமுன்னிட்டு மற்றதைச்சொல்லத் தடைபட்டு ஊமைகளாய் நின்றார்கள் அவர்களைப்பார்த்த பார்த்திபன் மயங்கித் தயங்கி ஒ-ஒ-பெரியோர்களுக் கென்னமோ குறைநேரிட்டது போற்றோன்றுகிறதென யோசித்து ஏவளாளர்மேல்கோபித்துத் துவேஷத்துடன் சாதுக்களுக்கென்ன தீங்கடா செய்து வந்தீர்களென் றதட்டிக்கேட்கச் சேவகர் கள்ள சாதுக்களைக் காட்டிற்கொண்டுபோனதும் தாங்களவர்களை வினவியதும் சுவாமிகளை யவர்கள் தூஷித்ததும், பூமியிற் பிரவேசித்ததும்சொல்லி முறையிட்டழுதார்கள்.

அதற்கிறைவன் வந்தவர்கள் துன்மார்க்கர் அவர்க்குபகாரஞ்செய்தவ ரெவ்வளவு சன்மார்க்கர்என்னப்பலர் விதங்களாயோசித்துச் சோரரை தூஷித்துச் சுவாமிகளைப்பூசித்து அவரைப்பார்க்க ஆசித்து ஜெயதேவசுவாமிகளிடம்போய் வந்தனஞ்செய்து ஒ-என்னாண்டவனே நாமனேகநாள் வைத்துப் பூசித்தனுப்பிய பாதகர் பாதாளத்திலமிழ்ந்ததைக் கேட்டீர்களோவென்று ஆதியோடந்தமாய்ச் சகலமுமுரைத்துப் புரையோரைத் தூஷிக்கத் தொடங்கினர். அதுகேட்ட ஜெயதேவர் ராமராம பரம சாதுக்களைத் தூஷிக்கலாமோ? துவேஷிக்கப் போமா? அவர்களுரைத்த வாக்கியங்களெல்லாஞ் சத்தியமேயாம் அவ்வளவு உபகாரஞ்செய்த புண்ணியவான்களானபடியினலே பூமியிடங்கொடுத்தது மகா பதிவிரதையான சீதாபிராட்டிக் கிணையானவர்களாதலால் பிருதிவியிடங்கொடுத்துச் சமாதியடைந்தார்கள். உண்மையாயவர்களென்னைக் காத்தவர்கள்தான் ஆதலாவர்களைத்தூஷிக்கலாகாது என்னைப்போன்ற பாவிகட்குத் தலமிடங்கொடுக்குமா; துன்மார்க்கர்களுக் கிப்பேர்க்கொத்தபேர்கிடைக்குமா ஒ-இறைவனே! துஷ்டர்களையும்நிந்திக்கலாகாது துவேஷியே பாவஞ்செய்வதில் விசேஷியெனப்பெரியோர்களுரைக்கின்றார்கள். தான் நைந்தாலும் பிறரை நிந்தைசெய்யக் கூடாதென்று சாஸ்திரமுறை யிடுகின்றது ஒருவரைத் தூஷிப்பவனே உலுத்தரிற்சிறந்த மகா லுத்தனென்று சொல்லப்படும் மப்படியிருக்க இப்படிப்பேசலாமோ வந்தனஞ்செய்யத் தகுந்தவரை நிந்தைசெய்யப்போமா, மேலானவர்களைத் தூஷித்தபாவம் நம்மைவிட்டுப்போமா ஆ-ஆ என்னைக் காத்தரக்ஷித்து சாதுக்கள் தராதலத்தி லமிழ்ந்து போனார்களா அந்தோ நானிதற்கென்னசெய்யட்டுமென்று பிரலாபிக்கத் தொடங்கினர்

அப்போதண்ணல்ஜெயதேவஸ்வாமிகளுக்கிருக்கும் ஜீவகாருண்யத்தைக் குறித்து வியந்து, ஒ-சுவாமி அந்த சாதுக்கள் பாதலத்திலமிழ்ந்த விடத்தைப் பார்க்க வாஞ்சித்தேனாதலாற் தேவரீருமங்கு எழுந்தருளல் வேண்டுமென வணங்க ஆரியர் ஆ-ஆ புண்ணியவான்கள் சமாதியானவிடமே பரமபதமெனச் சொல்லத்தகும். ஆதலாலகத்தியம் அவ்விடத்தைத் தரிசிக்கவேண்டியதுதானிது காரியத்திற்காகத்தடையுண்டோ,சீக்கிரம்பிரயாணப்படுமென்று நவில அரையன் சந்தோஷசித்தனாய்ச் சதுரங்க சேனைகள்சூழத் தானும் ஸ்வாமிகளும் ரதாரூடர்களாய் கானகமடைந்து அங்குப்பூமி கிடுகிடு பாதாளமாய்ப்பிளந்திருப்பதைக்கண்டு ஆச்சரியங்கொண்டு அப்பிளப்புக்கருகில் ஜெயதேவர் வீழ்ந்திருந்த பாழுங்கிணற்றைப் பார்த்து ஐயோ பாவிகள் நமது ஸ்வாமிகளின் கால் கைகளை வெட்டின ரணபூமியே கொலைபாதகரைக்

கொள்ளைகொண்டது. ஆ ஆ நமது சுவாமிகளைச்சோரர் சூழ்ந்து கரங்கால்களைக் கண்டித்தபோது எவ்வளவுதுயரமடைந்தாரோ கிணற்றிலெரியும்போதெவ்வளவு மனமிடைந்தாரோ; எல்லா நீதிகள் தெரிந்திருந்தும் திருடரென்றறிந்தும் அன்புடன் வைத்திருந்தோமே; உபசாரத்தோடு பூசித்தோமே என்கிற பல பல எண்ணங்களோடுமிருக்கையில் ஜெயதேவர் கள்வர் பூமியிலமிழ்ந்ததற்காக மிகவுந்துக்கித்து ஓ கர்த்தனே! பரிசுத்தனே! பரமசாதுக்களைப் பாரிலமிழ்த்தலாமா; மகா பாவியே புவியிலிருத்தலாமா; நீ கருணாகரனென்பது கட்டுக்கதையே யல்லவா? இத்தனை நாளாய்ச்செய்துவந்த தவம் பாழாய்ப்போச்சே இனி யிவ்வுடலோடிருத்த லீனமான பேச்சே ரவ்ரவாதி நரகத்துக் குட்படலாச்சே சந்திர சூரியர்களிருக்கிற பரியந்தம் நகைக்கிடமான பேச்சே என்றனந்தவித வார்த்தைக ளுரைத்துக்கொண்டே தரத்தின்மேலிருந்து பூமியில்விழுந்து கடகடவென்றுருண்டு கற்களிலும் முட்களிலும் புரண்டு தேகமெல்லா முராய்ந்து தேய்ந்து ரத்தப்பிரவாகத்தில் நனைந்து மூர்ச்சையாயிருந்து உடனே தெளிந்து, ஓ பரமசாதுக்களே! பரப்பிரமஞானிகளே! நீங்களழிந்த இப்பாதலத்தில் நானும் விழுந்து உம்மைத்தரிசிக்க இதோ வந்தேன் வந்தேனென்றுருண்டுகொண்டே பிளப்புக் கருகிற்போக அதையறிந்த யிறைவன் அதி சீக்கிரமாயோடிப் பாதலத்தில் விழாமற் பிடித்துக்கொண்டு இதுவென்னவிபரீதம்! இதுவென்ன வபவாதம்! இதுவென்ன பாபம்! இதுவென்ன கோபம்! இதுவென்னகோரம்! என்று அவருடையவயிற்றிற் றன் றலையைவைத்துக்கொண்டு தாரை தாரையாய்க் கண்ணீர்வடிய அழத்தொடங்கினார். அப்போது ஜெயதேவர், ஓ-அரசனே இவ்வேளையிலென்னை மறுக்கவேண்டாமென்று தலையைத் தரையிற் பலதரம்மோதிக்கொண்டார். மத்தகத்திற் கற்கள் பொத்துக்கொண்டு ரத்தம் புறப்பட்டு, இராஜனை ரத்தமயமாக்கிவிட்டது. அப்போதிராஜன் மந்திரி பிரதானிகளைநோக்கி ஓ! சிலர்களே என்னாண்டவனை அசையாமற் பிடித்துக் கொள்ளுங்களென்று கூச்சலிட்டழத் தொடங்கினான். அப்போது மந்திரி பிரதானிகள் இதுவென்ன விபரீத காலமென்று ஜெயதேவ ஸ்வாமிகளின் தேகமும் சிரசும் அசையாமல் பிடித்துக்கொண்டார்கள். அதற்கு தேசிகர் ஓ மந்திரி பிரதானிகளே! வீணாயென்னை யேன் வியாகுலத்தி லமிழ்த்துகிறீர்கள். என்வாக்கும் என்மனமும் ஒன்றன்றி இரண்டல்ல இனி நான் பிராணனுடனிருப்பதே வபத்தம் என்றுரைத்துக் கைகால்களைத் திமிறிப் பிடுங்கிக் கொள்ள எத்தனப்பட்டு அவயவங்களிலுள்ள எலும்புகள் நறநறவென்று முறியும்படியாகச் செய்துக் கொண்டார். அதையறிந்த இராஜன் துக்கம்மேலிட்டு தனதிஷ்டதெய்வமாகிய பரமேசுவரனை நினைந்து கண்ணீரால் நனைந்து ஓ-பரமேஸ்வரா ஜகதீஸ்வரா கருணாகரா சுகசாகரா இவரிறக்கும் பாவம் என்மட்டிற்போகுமா? ஐயோ நிந்தைக்குள்ளாய்ப் போனேனே? நாட்டிலிருந்தவரைக் காட்டிற்கொண்டுவந்து கொல்லத் துணிந்தேனே! தனித்து வராமற் போனேனே இவருக்கு நானே எமனானேனே என்று பலபலவிதங்களாகப் பிரலாபித்து ஆரியரை நோக்கி ஓ சுவாமி உம்முயிர் நீங்குமுன் என்னுயிரைவிட்டுவிடுகிறேன் பாருமென் றப்பாதலத்தில் விழப்போனார். உடனே ஏவலாளர் அரசனை விழாமற் பிடித்துக்கொண்டனைவரும் இதுவென்ன கொடுமையென் றோலமிட்டழத் தொடங்கினார்கள்.

அப்போதிறைவன் தொழும்பர்மேலதிகோபங்கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு ஜெயதேவ ஸ்வாமிகள் ரத்தத்தால் நனைந்திருப்பதைப் பார்க்கத் துன்பமேலிட்டு ஓ-வென்று புலம்பத் தொடங்கினார். அப்போது ஜெயதேவர் பாவியாகிய என்னால், பரமசாதுக்கள் பாரிலமிழ்ந்துப்போனார்கள். அரசனும் உயிர்விடத் துணிந்தான். இனி இக்கொடிய தேகமிருந்தால் வெகு குற்றங்களுக்கிட முண்டாகுமென்று தலையைத் திமிறிப் பிடுங்கிக்கொண்டு பூமியில்மோதிச் சாவுக்கிணையான மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டார். அதையறிந்தபார்த்திபன் ஆரியர் மடிந்தாரென்று தீர்மானித்து ஓ-ஓ-என்னாண்டவன் மரணமடைந்தாரா இனி நானென்ன செய்யட்டும் ஓ-கர்த்தனே பரிசுத்தனே சடாதரனே கங்காதரனே நிடலாக்ஷனே நீலகண்டனே உமைபாகனே லோகநாயகனே கபால பாணியே கைலாசவாசனே சுயம்பிர காசனே எனத்துதித்து, ஆயாசமேலீட்டால் மூர்ச்சையா யடியற்ற பனைபோல் நிலத்தில் சாய்ந்துவிட்டார். அப்போது மந்திரி பிரதானிகள்முதல்சகலரும் ஓ-ஓ இராஜனும் இறந்துவிட்டார்போற் றோன்றுகிறதென்று ஜெயதேவ சுவாமிகளினருகிற்கிடத்தி கோவென்றழத்தொடங்கினார்கள். அவ்வோசையா லிராஜன் மூர்ச்சைதெளிந்து ஜெயதேவ சுவாமிகளைப்பார்த்து மார்புடன்சேர்த்து ஓ-என்சற்குருநாதனே மெய்ஞானபோதனே என்னைவிட்டுப்பிரிந்தீரோ என்னைப்பிரியவுமக்கு மனம்வந்ததோ இனியும்மை எப்பிறப்பிற் காணப்போகிறேன் ஐயோ நீர்மரித்தசங்கதி என்

தாயாகிய பத்மாவதி கேட்டால் உயிருட னிருப்பாளா அறைநிமை பொறுப்பாளா? என்ன வென்று சொல்வேன் எவ்விதமாகத் துயரத்தை யாற்றுவேன், ஆ ஆ இனி யிவ்வுடலோ டிருப்பேனு? இருந்துயிர் தரிப்பேனு? என் தாயின்முன் போவதைப் பார்க்கிலும் உமது சரணாரவிந்தத்தி னண்டையிலே மரணமடைகிறேனென்று ஜெயதேவைப் போலவே மத்தகத்தைத் தரையில் மோதிக்கொள்ளப் போனுர். உடனே மந்திரி பிரதானிகள் அரசனை யசையாமற் பிடித்துக் கொண்டார்கள், இராஜனே அந்தோ இந்தவேளையில் என்னை ஆதரிப்பார் யாருமில்லையே! ஐயோ தொல்லையே! குருவைக்கொன்ற கொடும் பாவியாகிய வெனக்கென்ன கெதியுண்டாகுமோ? இப்படி வருமென் றறியாமற் போனேனே? நரகத்துக் காளாவேனே என்று தனதிஷ்ட தெய்வமாகிய பரமேஸ்வரனைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினுர்.

## பாடல் தேவாரம் சிவதுதி.

திருவரு ளுருவேதிவ்ய தெளிவருட் குருவேயுன்றன்
சரணமே கெதியென்றெண்ணிச் சற்குரு பஜனைபண்ணிப்
பெருமையாய் வாழ்ந்திப்போது பெரும்பழிக் காளாய்நின்றேன்
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 1

அரிய்ய னமரர்போற்று மனுதியே யாதியேயுன்
கருணையாற் குறையொன்றின்றிக் காசினி புரந்திப்போது
சிரமையிற் புகுந்தேனையா செய்வதொன் றறியேன்றுய்யா
அரகர வாமதேவா வடியனைக்காக்கவாவா. 2

திரிபுரந் தனையெரித்த சிவபெரு மானேயுன்னைப்
பிரியமா நினையாதொன்றும் பிழைகளே செய்திப்போதில்
உரிமையா யுனைப்பாராட்டி யுளங்குழைந் தழைக்கின்றேனே
அரகர வாமதேவா வடியனைக்காக்கவாவா. 3

சிரந்தச முடையோனன்று தேவியைக் கேட்கவன்பா
யுரிமையோ டவனுக்கீந்த வுதாரசத் குணனேயுன்றன்
தரிசனந் தாராதின்னந் தாமதஞ் செய்யலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 4

தரமறி யாமலுன்னைச் சமரினுக் கழைத்ததிய
கருவவா ணன்றன்வாயில் காத்தகா ருண்யமூர்த்தி
அருமையோ டழைக்குமென்மே லருள்செயா திருக்கலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 5

பரமனே பரசுபாணி பத்மாசுரன் ருன்கேட்ட
வரமளித் தவன்றரத்த வாடியோ டியபூங்காலாய்
குருதுரோகியும் பிழைத்திக் குவலயத் திருக்கலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 6

மிருகண்ட ரிஷிசேய்காலன் வேதனைக் காற்ருதுன்னைப்
பிரியமாய்த் துதித்த போதே பெருவய தளித்தாட்கொண்ட
கருணையங் கடலேயென்னைக் காத்திடா திருக்கலாமோ
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 7

அருளுப மன்னியர்க்கா யமிர்தசா கரமளித்த
பெருமையென் னென்றுசொல்வேன் பிஞ்சகா பிநாகபாணி
திருவுள மிரங்காயேலென் சிரமிதோ தருவேன்மெய்யா
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா 8

சுராரரக் கருங்கடைந்த சுதைததி யினிலெழுந்த
காளமுண் டவனேநீல கண்டனே கபாலமூர்த்தி
பொருவரா தரவிலாம லுனதடைக் கலம்புகுந்தேன்
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 9

அருமறைப் பொருளேயென்ற னுவியேயடியேனிந்தத்
தரணியிற் பிறந்தடைந்த சஞ்சல மெவர்க்குச்சொல்வேன்
தருணமே யாட்கொள்ளாமற் றடைசெயி னுயிர்நில்லாது
அரகர வாமதேவா வடியனைக் காக்கவாவா. 10

என்றிவ்விதமாகத் தோத்திரஞ் செய்யும்போது கைலாச வாசராகிய பரமசிவனுர் இராஜனுடைய அலங்கோலத்தையும் ஜெயதேவ ஸ்வாமிகளின் சிவகாருண்யத்தையுந் திருவுளத்தறிந்து ரிஷபவாகன ரூடராய்ப் பார்வதி சமேதராய்த் தேவ கணங்களும் பூத கணங்களுஞ் சூழ இராஜன்பாலடைந்து ஒ என்னருமைப் பாலனே! திவ்ய குணசீலனே! உனக்கு வேண்டிய வரமேதோ அதைத் தந்தோஞ் சீக்கிரங் கேளப்பாவென்று திருவாய் மலர்ந்தருளும்போது பார்த்திபன் பரமசிவனுர் பாதத்திற் சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டெழுந்துநின்று, ஒ என் தெய்வமே! உம்மையும் பார்க்கும்படியான பாக்கியஞ் செய்தேனே? இப்பாவியின் முன்னும் பிரசன்ன மானீரோ? என்னையு மொருபொருளாக நினைத்து வந்தீரோ? அரிதான சேவையுந் தந்தீரோ? என்முன் வருவதற்கு முவந்தீரோ? உம்மை தரிசிக்கும்படியான தபமொன்றுஞ் செய்ய வில்லையே? செய்ததெல்லாந் தொல்லையே? உம்மையன்றி வேறு துணையில்லையே? நீர் வந்தும் என்னுண்டவ னுயிர்பெற்றெழுவில்லையே? நான் சத்துருநாதனைக் கொன்ற பாவியாச்சுதே? என்னுண்டவனுயிர் பிரிந்து போச்சுதே? தீராப் பழிக்காளாய் விட்டேனே? குருவைக் கொல்லவு முட்பட்டேனே? ஆ கெட்டேனே? இதற்காகவே உமக்கு முறையிட்டேனே? சீக்கிரமென் குருஸ்வாமிகளை யெழுப்பலாகாதோ? எழுப்பாவிடி லென்னுயிர் பிரிந்து போகாதோவெனப் பலபல விதங்களாகப் பிரலாபிக்கும்போது,

கங்காதரன், ஒ பாலனே ஜெயதேவ் இறந்துவிட்டாரென்ரே நினைத்தாய் எவ்வளவுகுது கபட

நாடகனுகிய பகவானிடத் திருக்கின்றதோ அவ்வளவு தந்திரம் அவர் பக்தர்களிடத்திலு மிருக்குமென் றறிந்துக் கொள்வாய், இப்போதும்முடைய ஆரியர் தன் சுவாசத்தை பிர்மாந்தரத்தி லேற்றி இத்தேகத்தின் மேல் நிராசையாகி இப்பாதலத்தி லெறிந்து விட்டுப் போகும்படியான யுக்திசெய்து பிர்மானந்தத்தி லைக்யப் பட்டிருக்கின்ருர், நீ யந்தச்சூது தெரிந்துக் கொள்ளக் கூடாமல் துக்கசாகரத்தில் மூழ்கி மரணமடைய நினைத்தாய் இனி வியாகுலப்படாதே தயிரியம் விடாதே யென்றரசனை மார்பிறுகத் தழுவிப் பல பல அன்பான வார்த்தைகளாடினுர், அப்போது பூபாலன் சிவபெருமானை நோக்கி சர்ப்பாபரணம் பூண்டு மான்மழு சூலமேந்திய கையனே ! தேகமெங்கும் விபூதி தூளிதந் தரித்த மெய்யனே ! சகல பிராணிகளையுங் காத்துரக்ஷிக்குந் துய்யனே ! அடியேனுக் குண்டாகிய இடரைத் தீர்த்து ஆட்கொள்ள வெழுந்தருளிய எனதையனே ! ஜாக்ரதை சொப்பனம் சுழுப்தி துரியம் துரியாதீத மென்னும் இவ்வைந் தவஸ்தைகளையும் சகல ஜீவர்களுக்கும் பொதுவேயாகும். இந்த ஐந்தவஸ்தைகளையும் சத்குரு நாதன் முன்னிலையில் நன்ருய் விசாரித்தறிந்து ஞான மார்க்கந் தெரிந்து அந்த ஞானத்தால், பத்தியும் சித்தியும் வைராக்கியமும் யோக்கியமும் சூக்ஷமான தியானமும் மோனமும் அணுமுதல் பிரமாண்ட பரியந்தம் பிரமமே நிறைந்திருக்கிற தென்றும், அப்பரி பூரணமாகிய பிரமத்தைவிட நானென்பது இல்லை யென்றும், என்றும் அழியாமலிருப்பது பிரம மென்றும் நானென்னும் அப்பாவத்தையும், எனதென்னும் மமபாவத்தையும் தலையெடுக்காமல் தவளையையுண்ணும் சர்ப்பத்தைப் போலப் புசித்துப் பூரண வைராக்கிய மடைவது கானற்சலத்துக் கிணையான பிரபஞ்சத்தைச் சுத்தமாய் மித்தையென்றுன்னி ஸ்திரீகள் முதலான போகங்களைக் காகங்களி னெச்சத்தைப்போ லெண்ணி மனதிற்ருேன்றும் நினைவுகளை யெல்லாம் மாய்த்துக் காம குரோத லோப மோக மதமாச்சரியங்க ளென்னும் ஆறு கள்வரையும் அடியோடு வெட்டிச் சாய்த்துப் குடும்பத்தை விர்த்தி செய்யவேண்டு மென்கிற மனேவிச்சையைத் தேய்த்து ஆனந்த சமுத்திரத்தில் கருவி கரணுதிகளைத் தோய்த்துத் தன்னையறிந்து பிரம மாத்திரமாயிருக்கும் எதார்த்த வைராக்கியத்தையு மடைந்து ஆசாரியார் மீது அதிகப் பிரியமுடையவராய் எப்போதுஞ் சாதுக்கள் கூட்டத்தை விடாமற் ருெடர்ந்து சதா காலமும் நானே பிரமமென்று மௌனம் பண்ணுபவரும், சரீர பாவனையை நீக்கிச் சங்கல்ப விகல்பங்களைப் போக்கிப் பாமரத்தைத் தூளாக்கி அகமுகத்திற் பரப் பிரமத்தை நோக்கித் தன்னைப் பிரமத்திற்கு ஐக்கியமாக்கி நிர்விகல்பராய் அகண்டானந்த நிராமயமான சத்பாவ வைராக்கியமும் அபாவ வைராக்கியமும் ஸ்தாபன வைராக்கியமும் திட வைராக்கியமும் சம்மத வைராக்கியமும் விசார வைராக்கியமும் நிர்வாண வைராக்கியமும் மகா வைராக்கியத்தையு மடைந்த எமது குருசாமிகளாகிய ஜெயதேவ ஸ்வாமிகள் கைகால்கள் வெட்டுபட்டுப் போவதற்கு முன் ஜென்மத்தி லென்ன பாவம் செய்தனரோ ? இம்மகாத்துமாவுக்கு இப்படிப்பட்ட சங்கடம் வந்து நேரிடுவதற்குக் காரணமேதோ ? அதை சங்கைதீர திருவாய் மலர்ந்தருள வேணுமென்று தொழுது நிற்கும் நரபாலனை நோக்கி கரைமிடற்றண்ணல் புன்சிரிப்புடன் சொல்லத்தொடங்கினுர்.

கேளும் அரசனே ! கர்மமான மூவரையும் தேவரையு மற்றியாவரையும் விட்டதல்ல. இந்த ஜெயதேவர் எந்த கர்மத்தை யனுட்டித்து கால் கரங்கள் வெட்டுண்டா ரெனில் முற்பிறப்பி லிவர் பராச முனிவருக்கும் பரிமள கந்திக்கும் பிறந்து வியாசரென்று பேர் பெற்று பல மதங்களை யேற்படுத்தி கட்டுபாடுசெய்து முடிவில் கங்கையிலிரங்கிக் கரங்களை உயரத்தூக்கி நாராயணனே பரனென்று மூன்றுதரஞ் சத்தியஞ் செய்தபடியால் கால்கள் ஜலத்தி லெவ்வளவு மூழ்கியிருந்ததோ அதுவரையிலும் கரங்கள் முழங்கை வரையிலும் கள்வர் வெட்டினுர்கள் மேலும் இவர் சகலசாஸ்திர சம்பன்னராக விருந்தும் ஏகமூர்த்தி திரிமூர்த்திகளானதையறிந்திருந்தும் பிரிவுசெய்யத் தகுமோ அக்கருமத்தினுலே இவர்க்கு கைகால்கள் துண்டிக்கப்பட்டார்என்று சொல்லி ஜெயதேவ் மஸ்தகத்தின்மீது தனது திவ்ய அஸ்தத்தை வைத்து, ஓ ஜெயதேவ் ! உன் கண்களைத் திரந்து அரசனைப்பார்த்து துக்கத்தை நீக்கலாகாதோ ? சூதுசெய்து பூமியில் வீழ்ந்திருப்ப தழகோ ? பிர்மக் ஞானியாகிய உம்மை யண்டின சகலரும் பிர்மானந்தத்தில் ரம்மித்திருக்கவேண்டுமே யன்றித் துக்கத்தை யடையக் கூடுமோ ? ஓ சீமானே ! வீணுயே னும்முடைய உயிரைவிடத் துணிகிறீர் வேண்டாம் சீக்கிர மெழுந்து தேவையான வரங்கேட்டுக் கொள்ளுமென்றஸ்த வஸ்தக சையோகஞ் செய்த மாத்திரத்தில் ஜெயதேவ் தேகவாதைகளும் மனேபாதைகளுந் தீர்ந்து களிகூர்ந்து நித்திரைவிட் டெழுந்தவர்போ லெழுந்து பரமேசுவரன் பாதங்களின்மேல் விழுந்து, ஓ என்னுண்டவனே ! முத்தத் தாண்டவனே கள்வரைக்

காத்திரட்சிப்பதே யெனக்குத் தேவையான வரமென்று வணங்க கைலாசபதி, ஒ ஜெயதேவ் உமது கைகால்களைக் கண்டித்தவர்களுக் கென் பதவியைக் கொடுத்தேன் இதிற் சந்தேகமில்லை, அவர்களைக் குறித் தாயாசப் படவேண்டாம். கள்வர் காசினியி லமிழ்ந்தது உன் பொறுமையாலும் உன்மனைவியிட்டசாபத்தாலுமேயாம் நீர் ஓர் தூஷணவார்த்தைச்சொல்லியிருப்பீராகில்சோரர் பாதலத்திலமிழ்ந்துப் போகமாட்டார்கள், உம்முடைய பூஷணமேயவர்களுக்கு எமபாசமாய்விட்டது அன்றுயாரார்செய்கைகளெப்படியோ அப்படியேஅவரவர்களின்ப துன்ப மடைவார்கள். அவரவர்கள் செய் கர்ம தர்மமே அவரவர்களுக்குத் துணையாயிருக்கும் உண்மை யிப்படியிருக்க உம்மால் மரணமடைந்தார்களென நினைந்துயிர் விடத் துணிந்தது விபரிதகுணமே உம்மாலல்லவோ கொடும்பாவிகளான கள்ளர்களுக் கென் பதவியைக் கொடுக்கும்படியாய் நேரிட்டதென்றுதிருவாய்மலர்ந்தருளிய பரமசிவனர் திருவடிகளில் ஜெயதேவ் வணங்கி ஓ மகாதேவா ஆதிதேவா தேவதேவா வாமதேவா மகாநுபாவா பாவியேனுடைய மஸ்தகத்தின்மேலுமது திவ்விய அஸ்தத்தை வைக்கும்படியான நற்காலமும் வந்ததோ ஒ கர்த்தனே ஆனந்த நிர்த்தனே பாரிலமிழ்ந்த பரம சாதுக்கள் உன் பதவியை யடைந்தார்களோ ஆனந்தம் ஆனந்தம் அவர்களிப்பூமியி லமிழவும் நாங்களிங்குவரவும் இறைவனும்மைத் துதிக்கவும் தேவரீர் பிரசன்னமாகவும் எங்கள் குறைகள் நீங்கவும் மெஞ்ஞானம் ஓங்கவும் நேரிட்ட சுபம் பாரிலமிழ்ந்த பரமசாதுக்களாலல்லவோ தீபருக்கு உம்முடைய பதவி கிடைக்குமோ ஆ ஆ அவர்கள் செய் பாக்கியமே பாக்கியமென்று சங்கரன் தாட்களிற்றாழ்ந்து ஆனந்த வாரியிலாழ்ந்து இஷ்டமேலீட்டாற் றன்னை மறந்து பல பல விதங்களாகத்தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

அதற்கு கருணாசாகரனுன கங்காதரன் ஜெயதேவை நோக்கி, ஒ ஜீவகாருண்ய விரதத்திற் சிறந்த ஜீவன் முத்தனே ஒ அரிபக்தனே நீர் பட்டணத்திற் பிரவேசித்த இரண்டு முகூர்த்தத்துக்குள் உமது கைகால்கள் தனக்குத்தானே வளரக்கடவது ஸ்ரீமந்நாராயணரும்தரிசனந் தரக்கடவது, பின்பு ஆனந்தமாயாதொரு குறைவுமின்றி வாழக்கடவாய் உமது பேரைச்சிந்திப்பவர்களின் தீவினைகளகலக்கடவது என்றுதிருவாய்மலர்ந்துஅரசனை நோக்கி ஒ எனன்பனே! குருவை நம்பினோர்க்குக்குறை வுண்டோ? நீ குருபக்த சிகாமணியாதலால் உனக்கோர் குறையும்நேரிடாது, சுபங்களமாகப்பிர்மானந்தவாரியில் மூழ்கிமோட்சலாபம் பெறுவாயென்றாசீர்வதித்துஅந்தர்த்தானமானர், தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்,தேவ துந்துபி தாம்தாமென்று முழங்கிற்று, ரிஷிகள் ஜெயதேவ் சாந்த குணத்தைக் குறித்து வியந்து மிகவுமகிழ்ந்து இராஜனுடைய குருபக்திக் காச்சரியப்பட்டு மாச்சரியங்கெட்டு ஜெயவிஜயீபவா வென்று வாழ்த்திமறைந்தார்கள். பின்புகிரவுஞ்சராஜன் ஜெயதேவ் ஸ்வாமிகளின் திருத்தாட் டாமரைகளிற் பணிந்து நயனங்களை யணிந்து பல ஸ்தோத்திரம்புரிந்து இனி நம்முடைய நாட்டுக்குப் போகலாம் வாரும் ஸ்வாமியென்று தேரின்பேரிலேற்றிக்கொண்டு சதுரங்க சேனைகளுஞ்சூழ அதிக சந்தோஷத்துடன் நாட்டைநாடிப் பிரயாணப் பட்டார்கள். அப்போது மந்திரி பிரதானிகள் முதல் சகலரும் ஜெயதேவைத் தன்யகுரு தன்யகுரு வென்று கொண்டாடிப் புகழ்ந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பிர்மாம்சமான நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

கள்வரைக்காத்த அத்தியாயம்
முற்றிற்று.

---

எட்டாவது

## பத்மாவதி மரித்த அத்தியாயம்.

இப்படி ஜெயதேவும் இராஜனும் சதுரங்க சேனைகள்சூழ நாட்டை நாடி வருகையில் நகரில் கிரவுஞ்சராஜன் மனைவி பத்மாவதியினிடம் போய் அன்புடன் பணிந்து, ஒ அம்மணி! ஒன்றும் அறியாத நான் ஒரு நன்மார்க்கத்தை யடையும் பொருட்டு ஞானேபதேசஞ் செய்து கருணையுடன் ஆட்கொள்ளுமம்மாவென்று தாள்களில் வணங்கும்போது, பத்மாவதி ஒ அம்மா ! பாக்கியவதி இராஜனுக்குகந்த யோக்கியவதி நானொரு ஞானமார்க்கமும் அறியேன் ஆனலெனக்குத் தெரிந்த மோட்ச மார்க்கத்தை ஒளிக்காம லுரைப்பே னது ஏதென்றால், ஸ்திரீகளுக்குப் பதியே பரமேசுவரன், பதியே ஜகதீசுவரன், பதியே முத்தியளிக்கும் நாதன், பதியே ஞானமளிக்கும் விநோதன், பதிக்குச் செய்யும் பணிவிடையே மேலான பூசை, பதிசொல் பிசகாததே பரகதியடையும் ஆசை, பதிவிரதத் தன்மையைக் காத்தலே மேலான ஞானம், பதியின் திருநாமத்தைப்

பஜிந்தலே பிர்மத்தியானம், பதியுடனிறத்தலே மோக்ஷம், பதிபிறந்த வக்சனமே தன்னுயிரை விட்டுவிடுதலே மோட்சமடையும் சூக்ஷமம், அன்றுக் கற்புள்ளவளே விற்பன முடையவ ளென்றும், கற்புடையவளே அற்புதக் குணமுடையவ ளென்றும், கற்புடையவளே முத்திக்குரியவளென்றும் கற்புடையவளே யுற்பத்தியுடையவ ளென்றும், கற்பிலாதவள் கர்த்தபத்துக் கிணையானவ ளென்றும், கற்புடையவளே காமதேனுவுக் கிணையானவ ளென்றும், கற்பழிந்தவள் கணிகைக்குக் கீழ்மையானவ ளென்றும், கற்புடையவளே கமலைக்கிணையானவ ளென்றும், கற்புடையவ ளொருதியானமும் செய்யவேண்டிய தில்லையென்றும், கற்பைக் காத்தலே பெண்மைக்குரிய சகல கிரியைகளென்றும், கற்பழிந்தவள் செய்யுஞ் சகலதர்மங்களும் கர்மங்களாய் முடியுமென்றும் கற்பே பரலோகத்தைக் காட்டு மென்றும், கற்புள்ளவளாலேயே இக்காசினி நிற்கின்ற தென்றும், கற்புள்ளவளுக்குத் திரிமூர்த்திகள் முதலானவர்கள் பயப்படுவார்க ளென்றும் பெரியோர்கள்சொல்றுவதன்றிச் சாஸ்திரங்களு மிப்படியே முறையிடுகின்றன அன்றிச் சாவித்திரியம்மை தன் கற்பால் இறந்த புருஷனை யெழுப்பினள், தமயந்தி கற்பையழிக்க வெத்தனப்பட்ட வேடனை யெரித்தாள், சந்திரமதி அக்கினியை ஜலம்போல் குளிர்ச்சி யடையும்படி செய்தாள், அன்றி ரேணுகாதேவி ஜலத்தைத் திரட்டினதும், பிருந்தை தன் புருஷன்போல்வந்த பகவான் மாயை யறிந்துக் கொண்டதும், ஜலந்தரன் திரிமூர்த்திகளை வென்றதும், அநுசூயாதேவி நாரதரளித்த இருப்புக் கடலையைப் பொரியாக்கினதும், மூவரைப்பாலராக்கினதும், ஜானகி இராவணன் தன்னைத் தீண்டாமல் மறித்ததும். நாளாங்கினி ஏழுநாள் பரியந்தம் சூரிய னுதயமாகாமற் செய்ததும், அருந்ததி மணலைப் பாகமாக்கினதும், இலக்குமி பரமசிவனார் பிர்மத்தியை நீக்கினதும். அக்கினிபகவானுடைய மோகத்தை நீக்கும் பொருட் டவன் மனைவி அருந்ததியின் ரூபமெடுக்கக் கூடாமற் றிகைத்ததும், பார்வதி பரமசிவனு ரிடப்பாகத்தைப் பெற்றதும் கற்பினு லல்லவோ? இன்னம் விரித்துச் சொல்லவோ? ஓ ராஜபத்தினி! அருந்ததி நீச்ச ஸ்திரீயா யிருந்தும் நக்ஷத்திரம் ரூபமாய்த் துலக்கமுற்ருள், அகலிகை பெண்மைக்குரிய இலட்சணங்க ளெல்லா மமைந்திருந்தும் திருப்பாற் கடலிற் பிறந்தவளா யிருந்தும் கற்பிழந்ததால் கல்லுருவாய்க் கணவன் சாபத்தை யடைந்தாள், தற்காலத்திலும் கலியாண சடங்குகளில் கற்பிழந்த அகலிகை கல்லுரு வானதால் விபசார மென்னும் அம்மியை மிதியென்றும், பதிவிரதத் தன்மையுள்ள அருந்ததி நக்ஷத்திர ரூபமாயிருப்பதால் கற்பென்னும் அருந்ததியைக் காட்டி வணங்கென்றும் சொல்லுகிறுர். கற்புள்ளவளுக்கு ஆசாரம் பூசை தியானம் நிஷ்டை முதலானதும் வேண்டியதேயில்லை. கற்பைக்காத்தலே ஆசாரம் பூசைதியானம் நிஷ்டையெனச் சொல்லப்படும். தேவகுருவான பிரகஸ்பதி பகவான் மனைவியாகிய தாரா விபசாரஞ் செய்து எல்லாராலும் நிந்திக்கப்பட்டாள். ரேணுகை ஆகாயத்திற் போகும் கார்த்தவீரியார்ச்சுனனை ஜலநிழலிற் பார்த் திப்பேர்க்கொத்த புருஷர்களு மிருக்கிறுர்களாவென் றதிசயித்த மாத்திரத்தில் கற்பழிந்து ஜலந்திரட்டக் கூடாமல் பரசுராமனுல் வெட்டுண்டாள் துரோபதை கர்னனழகைப் பார்த்ததிசயித்த குறையால் ஓர் ரிஷி புசிக்கும் பழம் அத்தருவில் ஒட்டிக்கொள்ளப் போனது கீழ்விழுந்து ஐவருக்குங் கலக்கமுண்டாக்கினது மன்றி மிகவும் நாணமடையும்படியாய்ச் செய்துவிட்டது. ஆதலால் பெண்கள் அதிசாக்கிரதையாய்க் கற்பைக் காப்பாற்றல் வேண்டும். இறந்தவர்களை யெழுப்புதலும், திரிமூர்த்திகளை வரவழைத்தலும், பூமியைத் தலைகீழாகச் செய்தலும் லேசானதாகும் கற்பைக் காத்தல் வெகு துர்லபமாகும் ஏனென்றுல் சஞ்சலமுள்ள மனதை மடக்கியடக்கும் பிர்மநிஷ்டையும் பதிவிரதைத் தனமும் சமானமென்று சொல்லத்தகும் புருஷர்களுக்கு சலனமுள்ள மனதை யடக்கும் பிர்மநிஷ்டையே மோட்சமடையும் சூக்ஷமமாகும் ஸ்திரீகளுக்கும் அச்சஞ்சல நெஞ்சகத்தைக் கிஞ்சித்தும். பிசகாமற் காத்தலே முத்தி யளிக்குஞ் சித்தியென் றெண்ணத்தகும் தபோதனர்க்கும் தன் மார்க்கமுள்ள ஸ்திரீகளெப்படி விஷமோ அப்படியே கற்புள்ள ஸ்திரீகளுக்குத் துக்குணமுள்ள புருடர்களே விஷமாகும் உத்தம புருஷர்களுக்குத் தெய்வமொன்றேயாகும் உத்தம ஸ்திரீகளுக்குக் கணவனெருவனேயாகும் ஆடவர்க்குப் பகவானே தெய்வமாகும் அரிவைக்குப்பதியே தெய்வமாகும் என்கிற பற்பல வார்த்தையைக்கேட்ட,

இராஜபத்தினி, ஓ அம்மா! தாங்கள் சொன்னபடியே கணவனுட னெதிரிட்டுப் பேசாமலும், கணவனுக்குச் சேவை செய்வதிற் கூசாமலும், கணவனே தந்தை தாயென்றும், கணவனே குரு தெய்வ மென்றும் பக்தியுடன் பணிவிடை செய்யலாம், பதிவிரதத் தன்மையையுங் காப்பாற்றலாம். பதி யிறந்தவுடனே தன் பிராணனை விடுவது வெகு பிரயாசையாகும் அப்படி யிறப்பவர்க ளிவ்வுலகி லில்லை வாக்கினுற்

சொல்வதேயன்றிச் சொன்னவண்ணம் நடப்பது மிகவும் அருமையல்லவோவென்றாள். அதற்குப் பத்மாவதி நகைத்துப் பதிவிரதையாகிய சீதாபிராட்டி நினைக்கப் பூமி படிலென்று வெடிக்கவில்லையா? கற்புள்ள சகுந்தலை நினைக்க ஆகாயவாணி பேசவில்லையா? உயிர்பிரிந்துபோதல் தொல்லையா? நாகபாசத்தா லிராமலட்சுமண ரிறந்தாரென்பதைக் கேட்டவுடனே ஜானகி தன்னுயிரைவிட வெத்தனித்து திரிச்சடையால் பிராணனை விடாமலிருக்கவில்லையா? இராவணனிறந்ததே அவன்மேல் வீழ்ந்து புலம்பி உடனே மண்டோதரி பிராணனை விட்டு விடவில்லையா? பட்சிசாதிகளு முடனே தன் பிராணனை விட்டுவிடுகின்றதே, பெண்டுகள் பதியுடனிறந்துபோகாமலிருப்பதாற் பிரயோசனமேதுண்டு. அப்படியிருப்பதாற் கரைகாணாத துன்புண்டு பதியுடனிறந்தாலின் புண்டு, அப்பதிவிரதைகளுக்கே மோட்சவீடுண்டு அன்றி, பதியிறந்தானெனக்கேட்டு முயிருடனிருப்பவளதர்மஸ்திரீ, உடன்கட்டை யேறுபவள் மத்திபஸ்திரீ உடனே உயிர்விடுபவள் உத்தம ஸ்திரீயென்று பெரியோர்களுரைக்கின்றார்கள். அன்றி, ஸ்திரீகளி லுத்தம ஸ்திரீ தன் பிராணனைவிட கணவனே மேன்மையென்று மதித்திருப்பாள், நானுமப்படியே நம்பியிருக்கின்றேனெனச் சொல்லக்கேட்ட, அரசன்றேவி அவிவேகிகளுக்குள் சிகாமணி யாதலால் பத்மாவதியை நோக்கி ஓ அம்மா யாவராலுஞ் செய்யக்கூடாத அபாரமான வார்த்தையைச்சொல்ல வந்தீரென்று தன்மேடையிற் பிரவேசித்து, ஆ ஆ இந்தப் பத்மாவதி மாத்திரம் பத்தினி மற்றவர்களெல்லாம் சித்தினிகளாலல்லவோ தோன்றப்படுகின்றது, இப்படியே முன்னொரு தரம் கணவனிறந்த ஸ்திரீயி லழுதுறலைக் கேட்டு, ஆ ஆ புருஷனிறந்து வெகுநாளாயும் துணிவோடு உயிருடனிருந்துக்கொண்டு அழுகிறதற்கும் மனம்வருமா? என்னுலிப்படியிருக்கக் கூடுமோ வென்கிற பலவார்த்தைகளாடினாள் இப்படித் தன்னைத்தானே புகழ்வதறிவீனமல்லவா? இவ்வுலகில் மணவாளன் மறித்தால் மங்கையருடன்கட்டை யேறுவார்கள், அப்படிசெய்வது மேகதேசம். அப்படியிருக்க, இந்தபத்மாவதி புருஷனிறந்ததே தன்னுயிரை விடவேண்டுமென்றும் அப்படிவிட்டவளே உத்தமஸ்திரீயென்றும் விகடமாய்ச் சொன்னாள், சொன்னபடி தன்னால் நடக்கக்கூடுமோ? ஓ தாதிகளே! நீங்கள் சொல்லுங்கள், தன்னாற் கூடாமையான காரியத்தைப் பிறருக்குச் சொல்லக்கூடுமோ, வார்த்தைகளால் வெல்லக்கூடுமா? தன்னாலெடுக்கக்கூடா பாரத்தைப் பிறரை யெடுக்கச்சொல்லும் பாவனைபோ லல்லவோயிருக்கின்றதென்று சாற்றக்கேட்ட தாதிகள் ராஜன் மெச்சினவளே ரம்பையென்பதுபோல, ஓ ராஜேஸ்வரி! உலகத்திலுடன் கட்டையேறுதலே வெகு பிரயாசை, அதிலுமிதுகலியுகம், இக்காலத்தி லுடனே உயிர்துறத்தல் கூடவே கூடாது, அப்படிவிட உயிர் தன்வசமாயிருந்தாலல்லவோ முக்காலத்திலு மிக்காரியம் நடந்திருக்கமாட்டாது. அநேக சாஸ்திரங்களைக் கற்றுக்கொண்டு பிறருக்குப் போதித்து அப்படி நடக்கச் சக்தியில்லாப் பேதையைப் போ லிருக்கின்றதென் றுபசார வார்த்தைகள் சொல்ல,

இராணி கெக்கலிகொட்டி பற்களைக்காட்டி நகைத்துப் பத்மாவதியைப்பகைத்து, ஓ பாங்கிகளே! நீங்களிக் கணம் ஓர் பட்சியைக்கொன்று அதினுதிரத்தில் ஓர் வஸ்திரத்தை நனைத்துப் பத்மாவதியினிடங்கொண்டு போய் ஜெயதேவைப் புலிகொன்றுவிட்டது இது அவருடைய வஸ்திரமென்று சொல்லுங்கள் உடனே தான் சொன்னவண்ணம் உயிரைவிட்டுவிடுகிறாளா பார்ப்போமென்றுரைக்கத் தாதிகள் திடுக்கிட்டு மதிகெட்டு, ஓ அம்மா! இதுகாரியத்தில் ஓர் வேளை பொல்லாங்கு நேரிட்டாலும் நேரிடும் இக்காரியம் செய்யாமலிருப்பதே யோக்கியமென்று மறுக்க, இராஜஸ்திரீ ஓ தாதிகளே! மகாபதிவிரதைகளான நைகை, சுமித்திரை, கௌசலை, குந்தி முதலானவர்கள் தங்கள் கணவனிறந்து முயிருடனிருக்கவில்லையா? ஸ்திரீகளுந்து புருஷன்பேரில் மிகுவிச்சை, அதிலும் ஆடையாபரணங்கள்மேல் பிரீதி, அதிலும் தன் பிராணன்மீ ததிக வாஞ்சையல்லவோ? விபரித்துச்சொல்லவோ நல்லதிந்தப் பத்மாவதி சொன்னவண்ணம் நடப்பதுமெய்யாயிருக்குமாயின் ஜெயதேவ் கால்கைகள் வெட்டுண்டு பாழுங்கிணற்றில் வீழ்ந்திருந்தபோது எப்படியிருந்து உயிருடனிருந்தாள். அப்போது பிராணனை விடாமலிருந்த காரணம் என்ன? அல்லாமல் நீங்கள் பதியிறந்தானென்னக் கேட்டதே பிராணனை விட்டவர்களைப்பார்த்ததுண்டோ? அல்லதுகேள்விப்பட்டதுண்டா? மகாலட்சுமியான சீதை இராமலட்சுமண ரிறந்தாரெனக் கேள்விப்பட்டதே அவரைப்பார்க்க வாஞ்சித்தாளன்றி உடனே பிராணனைவிடத் துணிந்தாளா? இது பொய்யான வார்த்தையல்லவா? அந்த மண்டோதரியும் இராவணன்மேல் வீழ்ந்தழுது உயிர்விட்டாளன்றி உடனேஉயிர்விட்டாளா? கேட்டவுடனுயிர்விடுவதொருவராற் கூடுமோவெனப் புகல தாதிகள் இந்த வண்ணம் நடந்ததெனக் கேள்விப்பட்டதுமில்லைப் பார்த்தது

மில்லை. ஆனால், நளாயினி சூரியோதயமாகாமற்செய்தாளென்றும், தமயந்தி வேடனைபெரித்தாளென்றும், சந்திரமதி அக்கினியிற் குதித்தாளென்றும், சாவித்திரியம்மை இறந்த புருஷனுக் குயிர்கொடுத்தாளென்றும், சீதைகணவனுடன் வனத்திற்சென்றாளென்றும் புராணங்களில் முறையிடுகிறதேயன்றிப் பதியிறந்தானெனக் கேட்டவுடன் சதியிறந்தாளென்றெப்புராணத்திலும் முறையிடவில்லை. ஆனாலும் யார் யார் எண்ணமெப்படியிருக்குமோ நம்மாலறியக்கூடுமோ முன்னமிப்படி நடந்திருந்தாலு மிருக்கலாம் இல்லவேயில்லையெனச் சொல்லவும் கூடாதென்று தொழ,

அரையன் நாயகி, ஓ தாதிகளே! ஆதிமூலப்பொருளாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் குமாரத்தியான் சுமித்திரை அவ்வாசுதேவனுடன் பிறந்தவளாகிய சுபத்திரைபெற்ற அபிமன்னனென்னும் தன் கணவனிறந்தானென்று பலர் சொல்லக்கேட்டும் தன் பிராணனைவிடாம லிருந்தாளென்றால் குட்சிநிமித்தம் பிட்சையெடுத் துண்ணும் துச்சகுணமுள்ள இப்பத்மாவதி ஜெயதேவர் இறந்துபோனாரென்று சொன்னமாத்திரத்தில் உயிர்விட்டு விடப்போகிறாளா? உயிரைவிட லேசானகாரியமா? தானிருப்பது அற்பவீரியமா? வாளாலாவது விஷங்களாலாவது, கற்களாலாவது பிராணனைவிட பெத்தனிப்பாள். அப்படிச் செய்யாமல் நீங்கள் மறுத்து என்னைக் கூப்பிடுங்களுடனே நான்வந்து ஜெயதேவ ரிறந்துபோகவில்லையென்றும் இக்காரியம் உம்மைப் பரிட்சிக்கச் செய்தோமென்று மேலான ஆடையாபரணங்க ளளித்து துயரத்தையாற்றி விடுகிறேன் கர்வத்தை மாற்றிவிடுகிறேன் சீக்கிரம் நான் சொன்னபடி செய்யுங்கள் ஓர் பட்சியின் கழுத்தைக் கொய்யுங்களென் றுரைய தாதிகள் பயந்து, ஓ அம்மா! ராஜபத்தினி! பத்மாவதி மகா பதிவிரதையெனச்சொல்லுகிறார்கள். கணவனைப்பிரிந்த நாளுடுத்தியிருந்த வஸ்திரத்துடன் வெகுநாளிருந்து அவ்வஸ்திரத்தோடும் வந்து மணாளனைக்கண்டா ளிதுவேபோதுமான சாட்சியாயிருக்கின்றது அல்லாமல் குணங் குறிகளு மப்படி காணுகின்றது, ஓர் வேளை உள்ளே பிராணனை விட்டாலும் விடுவாள், ஆதலால் இக்காரியம் செய்யாமலிருக்கிறதே நமக்குச் சிலாக்கியமாயிருக்கின்றதென்று மறுக்க அரசன்மனைவி நான் முன்னம் பத்மாவதியினிடம் போயிருக்கிறேன் நீங்கள் நான் சொன்னபடிசெய்து சீக்கிரம் வாருங்களென்றதட்டிப் பத்மாவதியிடம்போய், ஓ அம்மா! காட்டிற்போன அரசன்மீதிலும், ஜெயதேவஸ்வாமிகளின் மீதிலும் பருத்துக்கொழுத்த பெருத்த வேங்கையொன்று பாய்ந்ததாம் என்னகெதியானார்களோ! நான் போகும்போதே வேண்டாமென மறித்தேன் என்வார்த்தையைக் கேட்காமற் போனார்கள் என்ன விபரீதம் நடந்ததோ கைகால்களில்லாச் சுவாமிகளுக்கென்ன துன்பம் நேரிட்டதோ எனக்கானால் மிகவுஞ் சந்தேகமாயிருக்கின்றது. ஆனால் ஒரு தாதிகளைத் தூதுவர்கள்பா லனுப்பியிருக்கிறேன் ஒரு நொடியி லுண்மை தெரியவருமெனப் பலபல விபரீத வார்த்தைகளாடி துக்கமுகத்தைக் காட்டினாள் சத்திய வார்த்தைகளாய்ப் பாராட்டினாள் பத்மாவதியினுள்ளத்தில் துன்பத்தை நாட்டினாள் விசனாக்கினியை மூட்டினாள்.

பத்மாவதி அரசன் தேவியின் பொய்வார்த்தையை மெய்யென்று நம்பி மனங்குழம்பி ஐயோ பாவிகளாகிய நான் ஸ்வாமிகளுடன் போகாமல் அறிவீனத்தா லிங்கிருந்துவிட்டேன், முன்னமிப்படியே கேட்டேன், துன்பத்துக்குட்பட்டேன், அல்லாமல் நமது ஸ்வாமிகள் புலியென்றும் பூதமென்றும் பார்க்கமாட்டார் எல்லாமுள்ளபடி முடியுமென்று பாயும்புலிமேற் பாய்வார், நிச்சயமாயவர்மேற் புலிபாய்ந்ததாவெனப் பலதரங்கேட்டாமென்னு மிராணியின் மொழி மெய்யென நம்பி கண்ணீர் விட்டழத் தொடங்கினாள். அத்தருவாயில் தாதிகள் இராஜஸ்திரீ சொன்னவண்ணஞ் செய்து ரத்தவஸ்திரத்தைக் கையிலேந்திக்கொண்டு பத்மாவதியி னெதிரில் நின்று பத்மாவதியின் முகவிலாசத்தையும் அழகுமேனியையும் தேம்பியழுவதையும் பார்த்துக் கரங்களைச் சேர்த்து நமது ஸ்வாமிகள் மரணமடைந்தாரென் றெப்படி துணிந்து சொல்லுவோம், சொல்லி எவ்விதம் பத்மாவதியைச் கொல்லுவோம், இதனாலென்ன விபரீதம் விளையுமோ இராஜனிதை யறிந்தாலென்ன ஆக்கினை செய்வானோவென்கிற பலபல வெண்ணங்களா லொன்றுஞ்சொல்ல வாயெழாமற் பிர்மித்து அசையாச் சித்திரம்போல நின்றுக்கொண்டு இதுவென்ன விபரீதச்செய்கை செய்யத்துணிந்தோமென்று கண்ணீர் விட்டழத் தொடங்கினார்கள். அத்தருணத்தில் இராஜன் தேவி கொப்பென்றெழுந்து இதுவென்ன வஸ்திரம் ரக்தமயமாயிருக்கின்றது இந்த வஸ்திரம் ஜெயதேவசுவாமிகளணிந்துகொண்டிருந்ததாயிற்றே ஜெயதேவசுவாமிகள் மேல் புலி பாய்ந்ததெனக் கேள்விப்பட்டோமே புலி பாய்ந்ததால் சுவாமிகள் மரணமடைந்தாரோவெனச் சொல்லிக்கொண்டே சைகைசெய்தாள், இராஜஸ்திரீக்குப் பயந்த தாதிகள் சுவாமிகளைப் புலி கொன்றுவிட்டதாவெனப் பணிந்தழுதார்கள், அதுகேட்ட பத்மாவதி ஆ ஆ இது

நிச்சயமான வார்த்தையாவென ராணி நிச்சயமில்லா வார்த்தையைத் துச்சமாய்த் தாதிகள் சொல்லுவார்களா? சொல்லி யழுவார்களா? பூமியில் விழுவார்களா? நிச்சயமாகவே யிருக்குமென்றுள். அவ்வார்த்தையைக் கேட்டவுடனே,

பத்மாவதி அடியற்ற பனைபோல் பூமியில்வீழ்ந்து கடகடவென்றுருண்டு அழுதுபுரண்டு முகத்திலும் மார்பிலும் கரங்களாலறைந்துக்கொண்டு, ஓ என் பிராணநாயகா! பிராணசிநேகா! பிராணவல்லபா! ஆ புண்ணியபுருஷா! புருஷசிகாமணி! ஆவென் மனோகரா! மன்மத சொரூபாவென்கிற பற்பல வார்த்தைகளாடி முகம்வாடி தேகம்வேர்த்து மனஞ்சோர்ந்து சாவுக்கிணையான மூர்ச்சையடைந்து உடனேதெளிந்து ஆ ஆ என் பிராணநாயகா! என்னைவிட்டிறந்தபின் இனி யரை நிமை என்பிராணனிருக்குமா? ஓ பகவான்! ஓ தெய்வமே! அற்பமான புலிபடித்துக்கொல்லவும் பார்த்திருந்தாயோ, என்னைத் தனித்திருக்கச்செய்தாயோ? என் கழுத்தைக் கொய்தாயோ? ஓ என் பிராணநாயகா! நானுமிதோவந்தேன் வந்தேனென்றலரி, ஓம் அரகரா மகாதேவா! வாமதேவா! நீலகண்டா! நீரணிமுதல்வா! சாம்பவா! சங்கரா! மயானவாசா! கயிலாசவாசா! உமாபதி! பசுபதி! திரிநேத்திரா! திரிபுரதகனா! சர்வேஸ்வரா! சர்ப்பாபரணா! காலகாலா திரிசூலா! பரமேசா! ஆதிமூர்த்தி! கபாலமூர்த்தி!விஸ்வநாதா, பூதகணநாதா, சசிதாரா, சடாதரா, நந்திவாகனா, கங்கைமோகனா, தாண்டவா, ஆண்டா வென்றும், ஓம் ஹரி ஹரி, நரஹரி, முரஹரி, அம்புஜாக்ஷரி, அச்சுதா, உச்சிதா,பஞ்சாயுதா,பாண்டவர்தூதா, லட்சுமிசமேதா, லீலாவினோதா, கமலபாதா,ஆதிமத்தியாந்தரகிதா, அனுதரக்ஷகா, அகிலாண்டகோடி பிரமாண்டநாயகா, பரமானந்த முகுந்தா, வைகுந்தா, கோவிந்தா, பச்சைவண்ணா கார்வண்ணா! கமலக்கண்ணா! ஜனார்த்தனா! கருடவாகனா! ராக்ஷஸமர்த்தனா! காளிங்கமர்த்தனா! சேஷசயனா! நாராயணா! பிரமபாராயணா! வாமனா! நந்தநந்தனா! மதுசூதனா பரிபூரணா! சர்வகாரணா! வெங்கடரமணா! சங்கடஹரணா! ஸ்ரீதரா! துளசிதரா! தாமோதரா! பீதாம்பரா! மச்சகச்ச வராகவதாரா! பலபத்திரா! பரமதயாபரா! பரமேசுவரா! சங்குசக்ரா! ஸர்வேசுவரா! கருணாகரா! ராதாமனோகரா! ஸ்ரீரங்கா! பாண்டுரங்கா! லோகநாயகா! பத்மநாபா!திவ்வியசொரூபா! புண்ணிய புருஷா! புருஷோத்தமா! ஸ்ரீராமா! பரந்தாமா! நரசிம்மா! திரிவிக்ரமா! பரசுராமா! சகஸ்திரநாமா! பக்தவச்சலா! தேவானுகூலா! ஆதிமூலா! வேணுகோபாலா! மாதவா! யாதவா! ராகவா! கேசவா! வாசுதேவா! தேவதேவா! ஆதிதேவா! மஹாநுபாவா! வசுதேவசுதா! தசரதசுதா! மாயாவிலாசா! வைகுண்டவாசா! சுயம்பிரகாசா! வெங்கடேசா, ருஷீகேசா, சித்விலாசா, கஜபதி, ரகுபதி, சீதாபதி, வெங்கடாசலபதி, மாயா, ஆயா, வெண்ணெயுண்ட நேயா, அண்டர்களைத் துந்தூயா, உலகமுண்டவாயா, நானுபாயா, பக்தர்கள் சகாயா, சதுர்புஜா, கருடத்துவஜா, கோதண்டஅஸ்தா, புண்டரீகவரதா, ஓ விஷ்ணு, ஓபராத்பரா, பரமதயாளா, அரேகிருஷ்ணா, அரேகிருஷ்ணா வென்று பகவானைத் துதித்து தன் பிராணனை விட்டுவிட்டாள்.

அப்பிராணனானது சோதிப்பிரகாசமா யாகாய மார்க்கமாய்ப் போய்விட்டது. அச்சோதிபோன அதிசயத்தைக்கண்ட சாதுபிராமணர்கள் ஆச்சரியங்கொண்டு விந்தையென்றுவிண்டு பத்மாவதியின் மேடைக்கு வந்து சங்கதிதெரிந்து மயங்கி தயங்கி அங்கங்கே அசைவற்று நின்றுவிட்டார்கள், தங்கள்ஸ்மரணைகெட்டார்கள், அருகேயிருந்த ராஜஸ்ரீயும் பிரமைகொண்டு திக்குமுக்கிட்டு ஒன்றுந் தோன்றாதவளா யசைவற்று நின்றிருந்தாள். தாதிகளோ அங்கங்கே வீழ்ந்து விட்டார்கள். பின்பு அரசன்தேவி கண்கெட்டபின் சூரியநமஸ்காரஞ் செய்வதைப்போலவும், தலையிற்பட்டபின் தாழ்வதைப் போலவும் ஓ ஓ மோசம்வந்தது இதற்கு நானென்ன செய்வேன் உலகில் இப்போர்க்கொத்த உத்தமிகளுமிருக்கின்றார்களோ? ஆஆதான்திருடி அபலாரை நம்பாளென்கிறபடி நான்பாதகியாயிருந்தும் பத்தினியைக் கொன்றுவிட்டேனே சித்தினியாய் நின்றுவிட்டேனே, இராசன் செய்த தர்மங்களையெல்லாம் பாழாக்கிவிட்டேனே, நரகத்துக்காளாக்கி விட்டேனே பார்வதியைத் தின்றுவிட்டேனே, பாவியாய் நடுவீதியில் நின்றுவிட்டேனே, ஆ கெட்டேனேயென்று பலபலவிதங்களா யுரைத்து அங்கிருக்கும் பலருடைய மனதையுங் கரைத்து மிகவும் நொந்து இடராக்கினியால் வெந்து பூமிமேல் விழுந்து புரண்டெழுந்து இராசன்வந்தா லென்னசொல்லப்போகிறேனென் றலைந்து மனங்குலைந்து பலபலவிதங்களாய் நினைந்து கண்ணீரால் நனைந்து கைகளைப்பிசைந்துபூமியிலறைந்து மெய்மறந்து பெருமூச்சுகள்விட்டு மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டாள். அதையறிந்த தாதிகள் கைகால் நடுக்கமெடுத்து இராசஸ்திரீயையடுத்து கண்ணீர் விட்டழுது கடவுளேயென்று தொழுது ஐயோ வந்ததே

பழுது இதோ போய்விட்டதே பொழுது இராசன் முத லானவர்களும் வந்துவிடுவார்களே' நம்மைக் கொன்று விடுவார்களே? இரண்டுபேர்களு மிறந்து விட்டார்களே' இகலோகத்தைத் துறந்து விட்டார்களே ? இராஜனுக் கென்னசொல்லுவோம் என்ன தைரியங்கொண்டெதிர் நிற்போமெனப் பலபலவிதங்களாய்ப்பிரலாபித்து ராணி யின்மேற் கோபித்தும், பன்னீரைத்தெளித்து விசிறிக ளால் பலங்கொண்டு விசிக் கோவென் றழத்தொடங்கி னுர்கள் அப்போ திராஜஸ்திரியெழுந்து பத்மாவதியைப் புரட்டிப்பார்த்து மார்புடன் சேர்த்து ஐயோ பிராண னுண்மையாய்ப் போய்விட்டதே ? இராஜதருமங்கெட் டதே? ஸ்திரீஹத்தி மேலிட்டதே? என்னைச் சுட்டதே? இராஜனும் மரிக்கநேரிட்டதே? பட்டணத்தைப் பாவஞ் சூழ்ந்துகொண்டதே, ஸ்திரீஹத்தி பொல்லாதாச்சுதே, இனி யென் மானம்போச்சுதே நானே தேடிக்கொள்ள லாச்சுதே, திரா அபகீர்த்திவாச்சுதே, ஓ பாங்கிகளே! இனி நாமென்னசெய்யலாம், யாரைவையலாம், நான் இராஜன் வராமுன்னமே பிராணனை விட்டுவிடுகிறேன் விஷங்கொண்டுவாருங்கள் குடித்துயிர்விடுகிறேன், யினி யென்பிராணனை அரைக்கணமும் வைக்கலாகாது பாவி யின் முகத்தை யரசனுக்குக் காட்டலாகாது. இப்பாவ மென்மட்டும்போகாது இனியரைக்கணமு மிருக்கமாட் டேன்சாகாதுஎன்று தலையைத்தரையில்மோதிக்கொண் டுயிர்விடத்துணிந்தாள். தாதிகள் ராணியை யசையா மற் பிடித்துக்கொண்டு ஓ வென்றலறி யழத்தொடங்கி னுர்கள். அப்போ தங்கிருக்கும் சாதுப்பிராமணர்கள் இராஜன் மனைவியைநோக்கி, ஓ ராஜபத்தினி! பத்மா வதியை யெழுப்ப ஜெயதேவசுவாமிகளா லாகும் அவர் நினைத்தா வீதருமையோ அவர்க்கோர்பெரிதல்ல சுவாமி கள் வந்தவுடன் உள்ளபடி கள்ளமின்றி யுரைத்து அவா மனதைக்கரைத்துப் பணிவையாகில் பத்மாவதியை ஓர் கணத்திலெழுப்புவார், உன்னைத்தேற்றுவார், காப்பாற்று வார், பாவத்தை மாற்றுவார், பத்மாவதியைப் போற்று வார், உன் துயரத்தை யாற்றுவாரென்றுரைத்துத் தங் கடங்க ளிருப்பிடஞ் சேர்ந்தார்கள் பின்பு அரசன்றேவி ஒருவாறு தேறி பத்மாவதியை ஓர் அறையிலடக்கஞ் செய்து ராஜன் வரவை யெதிர்பாத்துக்கொண் டிருந் தாள், கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நா பாஜிசித்தர் சொல்லத்தொடங்கினர்.

பத்மாவதி மரித்த அத்தியாயம் முற்றிற்று.

ஒன்பதாவது

## பத்மாவதி உயிர்பெற்ற அத்தியாயம்.

இங்கு யிப்படியிருக்க நாட்டை நாடிவரும் அரசன் தேரிலிருந்துகொண்டு ஜெயதேவுடைய பெருமையைக் கொண்டாடி ஆ ஆ இன்றைக்குப் பரமசிவனர் தரிசனம் பெறும்படியான பாக்கியமேதோ, நாம் செய்தசிலாக்கிய மேதோ, இப்பிறப்பிற் செய்த தபமோ, முற்பிறப்பிற் செய்ததபமோ, ஸ்வாமிகளுக்குச் செய்த பணிவிடைப் பலமோ, நமது முன்னோர் செய்த நலமோ, சங்கரனைத் தரிசிக்கும்படியான பாக்கியம் குருஸ்வாமிகளா லல்ல வோ நேரிட்டது. பத்மாவதியின் வாக்கியமல்லவோ கள்வரைப் பாரிலமிழ்த்து விட்டது. ஸ்வாமிகள் பாழுங் கிணற்றில் விழுந்திருந்த தனலல்லவோ எந்தாய் வெகு நாள் பிரிந்திருக்க நேரிட்டது. மகா பதிவிரதையாகிய பத்மாவதியும் சாந்தமே ஒருருவான சுவாமிகளும் நமது பட்டணத்தி லெழுந்தருளி யிருக்க நாமென்னதவஞ் செய்தோமோ, ஆ ஆ நமக்குற்ற பாக்கியமே பாக்கியம், நமது பெரியோர்செய்த சிலாக்கியமே சிலாக்கியம், நம் மைப்போன்ற புண்ணியவான்கள் இவ்வுலகி லியாருமில் லையென்றே சொல்லத்தகும் காட்டில் பரமசிவனைத்தரி சித்து இனி நாட்டில் பகவானைத் தரிசிக்கும்படியான புண்ணிய மொன்றுஞ் செய்ததில்லையே, நாட்டிற் சென்றதே பகவான் தரிசனஞ் தருவாரா, ஸ்வாமி களுக்குக் கைகால்கள்வருமா, என் கண்களுக் கானந் தந்தருமா, இன்றைக்கு நாமடைந்தலாபமேலாபம், நமக்குற்ற பிரதாபமே பிரதாப மென்றுன்னிக்கொ ண்டே ஆனந்தமாய்க் குரு சங்கீர்த்தனங் களைப் பாடிக்கொண்டே ஸ்வாமிகளையும் பத்மாவதியையும் தோத்திரஞ் செய்துக்கொண்டே கேளிவிலாசத்தோ டும் மந்திரி பிரதானிகளும் ரதகஜதுரகபதாதிகளும் புடைசூழப் பட்டணத்திற் பிரவேசித்தார்கள் அப்போ துபட்டணத்திலிருக்கும் சகலரும் பத்மாவதியின் பிரா ணன் சோதிரூபமாய்ப் போனதும் இராசன் தேவி செய்த கற்பனையும் தாதிகள் செய்த கற்பனையும் நினை த்துநினைத்துப் பிரலாபித்துசெவிகளைக்கரங்களால்மூடிக் கொண்டு அரிஅரி! ராமராமா! சிவசிவா! அரகாஎன்ன பாவம், என்னகாரணம்என்னகாலம்என்னவிபரீதம்என் றுரைத்துக்கொண்டே மனமுருகி முகங்கருகி கண்ணீர் பெருகி அங்கங்கு கும்பல் கும்பலாய்க்கூடி இராசன் வர வெதிர்நாடி குசுகுசுவெனப் பேசிக்கொண்டேநின்றிருந்

தார்கள். அப்போது பட்டணத்திற் பிரவேசித்த அரை யன் நாட்டில் லட்சுமீ விலாசமில்லாமல் இருளடைந்து தேவ கோஷ்டங்களும், அரிபா சங்கீர்த்தன கோஷ்டங் களும குறைந்து அழுகுரலோசை நிறைந்து சந்தோஷ மென்பதில்லாமல் ராம ராம சிவா சிவா வென்னும் வார்த் தையல்லாமல் வேறு வார்த்தை சொல்லாமல் அரசன் முன்னில்லாமல் தங்கட்டங்கள் வீட்டினுள் புகுந்து வெளி வராமலிருப்பதை இராஜனறிந்து தேசிகரைப்பணிந்து, ஓ ஸ்வாமி! இப்பட்டணம் பாழடைந்திருக்குங் காரண மேதோ; சாதுப்பிராமணர் முதற் சகலரும் மனக்கோட் டமும் முகவாட்டமு மடைந்திருக்கவேண்டிய தென்ன பர்மமோ! அடியேனெதிரிலியாரும் வராமலிடைந்திருப்ப தென்னகர்மமோ! நமது பட்டணத்திலென்ன பாவம் நேரிட்டதோ! அல்லது அடியேன்செய்த கொடுமையே இப்பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டதோ. ஒன்றுந் தோன்ற வில்லையே! எவலால் வந்ததொல்லையோ! பட் டணத்தை யடைந்ததே பகவான் பிரசன்னமாவா ரென் றுரைத்த பரமேசுவரன் வாக்கியம் வெகு யோக்கியமா யிருக்கின்றதே என்ன காரணத்தாலோ என்னெஞ்சந் துடிக்கின்றதே யெனப் பற்பல வார்த்தைகளாடும்போது ஜெயதேவர் நீசொன்ன படியே என்மனமும் திகிலடைந்து திடுக்குதிடுக்கெனத் துடிக்கின்றது இதுகாரணத்தை யோசித்தால் உத்தமரியார்க்கோ விபத்துவந்ததுபோற் காண்கிறது சீக்கிரமிப்பிரஜைகளைக் கேளுமெனத் திரு வாய்மலர்ந்தருள மகா பாக்கியமென்றிறைவன் ரதம் விட் டிழிந்து பிரஜைகளை நோக்கி, ஓ புனிதர்களே நல்லமனி தர்களே! நமது பட்டணத்திலென்ன தீங்குநடந்ததனைத் தெரியச் சொல்லுங்களென்று வற்புறுத்திகேட்க, ஜெனங் கள் சொல்லக்கூடாக் குறையால் மௌனமாய் நின்றிருந் தார்கள் மன்னவன் பலதரங்கேட்டும் ஒன்றுஞ்சொல்லா மையால் மனந்திடுக்கிட்டு மந்திரிகளை நோக்கி இதுவென்ன விபரீதச்செய்கையோ சீக்கிரங் கொலுமண்டபத்திற்போய் விசாரியுங்களென்றுக் கியாபித்துத் தானு மதிதுரிதமாய்த் தேரை நடத்திக்கொண்டு போகும்போது மந்திரிகள் போய் விசாரித்துண்மை தெரிந்துகொண்டரையனிடம் வந்து வணங்கி, ஓ இறைவனே! இப்போது நமது பட் டணத்தில் நடந்தது தீங்கேயாகும் அதை உமது மனைவி யைக்கேட்டாலன்றிச் சவிஸ்தாரமாகத்தெரியாது, தெரிந் திருந்தாலும் யாருஞ் சொல்லமாட்டார்களென் றுரைத்த தைக்கேட்ட பூபதி கைகால்கள் நடுக்கமெடுத்துக்கொண்டு அதிதுரிதமாய் மேடையிற் பிரவேசித்து மனைவியைக் காணாமல் காவலரைக்கேட்டுப் பத்மாவதி யிருக்கும் மேடைக்குட்போய்த் தன்னாயகியி னழுகுரலைக்கேட்டு உடனே தாதிகளைக்கூப்பிட்டு என்ன சங்கதியென்றார், பாங்கிகள் நடந்த சங்கதி யாவும் கள்ளமின்றி உள்ளபடி யுரைத் தழத் தொடங்கினார்கள் இராஜனோ ஆ ஆ என் தாயான பத்மாவதியைக் கொன்று விட்டீர்களா, கொன்று தின்று விட்டீர்களா, ஆ பத்மாவதி என்னும் பார்வதிமரண மடைந்தாளா, ஓ தெய்வமே தெய்வமே! இந்தப்பழிக்கு யானென்ன செய்பட்டும் உயிரோடெப்படி யிருக்கட்டு மென்று தரையில் விழ்ந்து துக்கசாகரத்திலாழ்ந்து மெய் மறந்து மூர்ச்சையாய் விழ்ந்து விட்டார்.

அத்தருணத்திலே ஜெயதேவர் மேடையிற் பிரவே சித்து இராசன்மனைவி ஒவெனப் புலம்புவதையும் அரசன் மூர்ச்சை யடைந்திருப்பதையும் பார்த்துத்தேகமெல்லாம் வேர்த்துப் பாங்கிகளை நோக்கி இராசன்தேவிக் கென்ன குறை நேரிட்டது சொல்லுங்களெனக்கேட்கத் தாதிகள் சகல சங்கதிகளுஞ்சொல்லிப் பத்மாவதியின் பிராணன் சோதி சொரூபமாய்ப்போய் விட்டதென்றுரைந்து கரைந் தழுதார்கள், அதுகேட்ட ஜெயதேவர் பிரமித்து ஆ பத் மாவதி நானிறந்தேனெனக் கேட்டதே ஆவியை விட்டு விட்டாளா! உயிர் சோதிரூபமாய்ப் போய்விட்டதா! ஆ மரண மடைந்தாளா! இன்றுடன் பத்தினியைப்பிரிய லாச்சுதா நிச்சயமாகச் சிவன்சோதி சொரூபமாய்போச் சுதா? என்மேலிவ்வளவு பட்சமும் வைத்திருந்தாளோ! அன்பே மரணத்துக்கிடங் கொடுத்ததோ! இப்படியும் உலகில் நடந்ததுண்டோ! நடப்பது முண்டோ! ஆ ஆ நானிறந்தேனெனக் கேட்டதே எவ்விதமாகப் பதைத்தா ளோ! என்னமாயழுதாளோ! என்னன்ன நினைத்தாளோ! எவ்விதமாயுயிர் விட்டாளோ! எவ்வளவு பதைபதைப்போ டுயிர் பிரிந்துபோயிற்றோ! இவ்வளவு அன்பென்மீது வைத்திருந்தகாரணமேதோஎனக்காகஉயிர்விடப்போமே இவ்வளவு துன்பப்படலாமோவெனப்பலபலவிதங்களாய்ப் புலம்பித் தேகத்தைக் கண்ணீராலலம்பித் தயங்கி மயங்கி பெருமூச்சு விட்டிடைந்து சகிக்கக்கூடாத துன்பத்தை படைந்து மிகவு மேங்கித் துக்கமோங்கி ஓ வென்றழத் தொடங்கினர். ஜெயதேவரழுகுரலோசையைக் கேட்ட இராஜன் மூர்ச்சை தெளிந்தெழுந்து ஸ்வாமிகளின் முன் விழுந்து ஓவெனக் கூக்குரலிட்டழுது ஐயோ வந்ததே பழுது எனக்கோபதிப்தனுக் கண்களிலிருந்துநெருப்புப் பொறிகள் பறக்கப் பல்லை நறநறவெனக்கடித்து மீசை

படபடவெனத்துடிக்க அங்கமெல்லாம நடுக்க ஆர்ப்பரித்துச் சக்கிராயுதத்தைக் கையிலேந்திக்கொண்டு தன்மனைவியிருக்கு மறைக்குட் குதித்துப்பாய்ந்து கோபமேலீட்டால் தேகமெல்லாம் வேர்த்துப் பூமியிற்சாய்ந்து மறுபடியும் மூர்ச்சையாய் வீழ்ந்து விட்டார்.

அப்போதரசன்றேவி கைகால்கள் கிடுகிடென்று நடுநடுங்கத் திடுதிடென வெளிப்பட்டு ஜெயதேவசுவாமிகளைக் கட்டிக்கொண்டு வயிற்றிற்றலைவை வைத்துக்கொண்டு, ஓ தெய்வமே! ஓ கர்த்தனே! நானறியாமற் செய்த குற்றத்தைப் பொறுத்துச் சீக்கிரம் பத்மாவதியை யெழுப்பி என்னையுமிறைவனையுங் காக்கலாகாதோ? கருணைக்கண்ணாற் பார்க்கலாகாதோவெனக் கூக்குரலிட்டழத்தொடங்கினர். அவ்வழுகுரலோசையாற் பார்த்திபன் மூர்ச்சை தெளிந்து குதித்தோடி வந்து மனைவியின் தலைமயிரைப் பிடித்திழுத்து, அடி பஞ்சமா பாதகி, பார்வதியைக் கொன்ற தோதகி, கடின சித்தமுள்ள நீலி, இனி எல்லாருஞ் செய்வாரேகேலி, படுபாவி, உன்னைக் கண்டங் கண்டமாய் வெட்டிப்பிறகு மடிவேனென்று இத்தாதிகளையெல்லா மொன்றுப்சேர்த்துக் கட்டித்துண்டந் துண்டமாகவும் வெட்டி பெறிந்தல்லவோ நானும் வெட்டிக்கொண்டு மடிவேனென்று ஈனவார்த்தைகளைப் புகன்று ஜெயதேவைக்கட்டிப் பிடித்துக்கொண்டிருக்குங் கரங்களை விடுவிக்கத் தொடங்கினர். அப்போ தரசன் மனைவி ஜெயதேவைச் சர்ப்பம்போற் பின்னிக்கட்டிக்கொண்டு, ஓ என்னாண்டவனே! உமக்குக் கருணையின்னம் வரவில்லையோ, நான்செய்த தொல்லையோ? ஓ ஸ்வாமி! நானிருந்தா லியாதொரு குற்றமில்லை, யாதொரு குற்றமுஞ் செய்யா, இத்தாதிகளும் இராசனும் மரித்தல் தர்மமோ? சும்மா விருப்பதென்ன மர்மமோ? நான்செய்த கர்மமோ? தீனதயாளா! தீனபந்து! கள்வரை யாட்கொண்ட கர்த்தனே! மிகவும் பரிசுத்தனே! எல்லா வல்லமையு முள்ள சித்தனே! நாற்றிசையிலும் பேர்பெற்ற பிரசித்தனே! சீக்கிரம் பத்மாவதியை யெழுப்பலாகாதோ எழுப்பினு லெங்கள் குறைபோகாதோ வெனப் புலம்பும்போது ஜெயதேவர் இராசனை நோக்கி, ஐயா அரசனே! சற்றே நில்லும் பதரவேண்டாம் ஆத்திரக் காரருக்குப் புத்திமட்டு என்கிற பழமொழி யறியீரோ வென்றுரைத்து அரையனில்லாளை நோக்கி, ஓ அம்மணி அழவேண்டாம் நானிருக்கும்போ துங்களுக்கோர் குறையும் நேரிடாது இப்போது பத்மாவதி மடிந்தது கடவுள் செயலேயன்றி உன் பேரிலியாதொரு குற்றமில்லை ஜீவர்களெப்போது ஜென்மிக்க வேண்டுமோ, அப்போதே ஜென்மிப்பார்கள், எப்போது மரணமடைய வேண்டுமோ அப்போதே மரிப்பார்கள், அவரவர்கள் மரணமடையுங்காலம் நேரிட்டால் அதைப் பிரமாதி தேவர்களாலும், தடைசெய்யக்கூடாது, நிந்தையில்லாமல் பொந்தி போகா தென்கிறபடி வீணுயுன்மேல் நிந்தைநேரிட்ட தென்றுரைத்து இறைவனை நோக்கி அப்பாபூபாலனே! இனியுன் கோபத்தை யாற்றிப் பத்மாவதியை யடக்கஞ் செய்ய எத்தனப்படும் சக்கிராயுதத்தைக்கீழேபோட்டு விடும், இனி என் வார்த்தையைத் தள்ளாதே, தூஷணவார்த்தைகள் விள்ளாதே, வீணுய்க் கோபங் கொள்ளாதே, வெட்டி மடிகிறேனெனத் துள்ளாதே யெனச் சொல்லும் வாக்கியங்களைக்கேட்ட மன்னவன் ஓ ஸ்வாமி! நல்ல வசனங்களை யுரைத்தீர், இனியிவர்களை இரண்டு துண்டாக நறுக்கி நெருப்பாற் சுட்டெரித்த என்னுயிரையும் விட்டுவிடுகின்றேன், பின்பு எங்களைவரையும் தாங்களடக்கஞ்செய்து விடுவீரென்று கடுங்கோபங் கொண்டு கொடுஞ் சூரியென்று விண்டு பலங்கொண்டு தன் ஸ்திரீயை யிழுத்து வாளால் வெட்டப்போகையில் இராஜஸ்திரீ, ஓ ஜெயதேவ ஸ்வாமி? உபக்கபய மபயமென்றோலமிட்டுக்கூவ உடனே ஜெயதேவஸ்வாமி ஓ ராஜனே! வெட்டவேண்டாம் வேண்டாமென் றலங்கோல பயசாமாயவ்விறைவனது கரத்தைப் பிடித்துக் கொள்ள வெழுந்திருக்கையி லுடனே ஸ்ரீமந்நாராயணரருளால்கைகால்கள் வந்துவிட்டது, தனக்குக் கைகால்கள் வந்ததுமறியாமல் அதிக பரபரப்போடும் போய் ராஜனது இரண்டு கரங்களையும் பிடித்துக்கொண்டு இதுவென்ன விபரிதம்நேரிட்டதென விண்டு துக்கம் மேலிட்டு கக்க சத்துக்குட் பட்டு ஒன்றுந்தோன்றுதவராய்த் தனதிஷ்ட தெய்வமாகிய ஸ்ரீ மந்நாராயணரைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

## தசாவதாரத் தோத்திரம்.

### விருத்தம்

திருவருட் பொருளாயாதித் தேவனுய்த் தேவர்கோனுய்
அருவமாய்த் தூயவன்பர்க் கன்பனுயகண்டானந்த
சொருபமாய்த் துலங்கியெங்குஞ் சோதியாய் நிறைந்தமூர்த்தி
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 1

சுருதியைத் திருடிப்போன சோமுகவசு ரன்றன்னைத்
திரைகடற் குள்ளேமீனுய்ச் சென்றுகொன் றவனேநேமி
காருடை கமலக்கண்ணு கர்த்தனுகிய கார்வண்ணு
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங் காக்கவாவா. 2

சுரர்கடல் கடையும்போது தூயகச் சபமாய் நீமந்
தரமலையினை யாழாமற் ருங்கின தயவேதையா

முராறி யெழிலார்மெய்யா மூடன்மேன் முனிவேன்றயாய்
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 3

தரைதனைச் சுருட்டியாழ்ந்த சமுத்திரத் தொளித்திருந்த
இரணியாக் ஷனைவராக வெழிலுரு வெடுத்துக்கொன்ற
பரமனே பதுமநாபா பரஞ்சோதி யானதீபா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 4

பிரகலாதனுக்காத் தூணிற் பெருநர ஹரியாய்த்தோன்றி
இரணியன் றனைவதைத்த வீசனே நெடியமாலே
பிரமனைப் பெற்றநாத பேதையே னுனேனிதா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 5

திரமகா பலிபாதாளஞ் சேரவிவ் வுலகளந்த
சரணனே வாமனுவ தாரகெம் பீரசூரா
திருவுறுங் களபமார்பா திவ்விய துளபமார்பா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 6

அரசர்க டமையடக்கி யந்தணர் தம்மைக்காத்த
பரசுராமா கோபாலா பரந்தாமனே பூபாலா
விரிமறை தேடுமூலா வேலையிற் றுயின்றசீலா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 7

இருடிக டவஞ்செழிக்க விராவணன் றனைவதைக்கத்
தரைதனில் வந்தராமா சாஸ்விதனே சங்கராமா
முருகனுக் கிசைந்தநாமா முறையிடு மெனையாள்சோமா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 8

பிரலம்பன் முதலானோரைப் பிடித்திகல் செய்துகொன்ற
தரையும்விண் புகழுராமா ஜயபல பத்ரராமா
தரணியிற் கொடுமைசெய்தச் சண்டாள னுறவென்னைத்
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 9

திரைகட லுலகிலுற்ற தீயர்கடமை யழித்துத்
தருமாதி பரைக்காத்த சங்குசக் கரனேகிருஷ்ணா
வரைதனைச் சுமந்தசீலா வாரியிற் றுயின்றபாலா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 10

பரிபவ தாரமாகிப் பாரினை யழிக்கவென்றுங்
கரியனே கஞ்சத்தாளா கடையனேன் றன்னையாள
வுரியனே முறையோவென்று மோலங்கேட் டிருக்கலாமோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 11

என்று தசாவதாரங்களைத் தோத்திரஞ் செய்தும், பிரத்தியட்சமாகப் பகவானை நினைந்து, கண்ணீரால், நனைந்து பரமசிவமே என்னுவிப்பட்டணம் பாழடையும்படியாய் நேரிட்டதே? உமது கருணை எளியேன்மேலெள்ளளவு மில்லாமற் போச்சதே? பொல்லா வபகீர்த்திவாச்சுதே என்று புலம்பும்போது, பரமசிவனுர் சொல்லிய வாக்கியப்படியே சுவாமிகளுக்குக் கைகால்கள் வந்துவிட்டது இனி பகவானும் பிரசன்னமாவார் பத்மாதியை சுவாமிகளருகிற்கொண்டுவந்து வைத்தாலன்றி உருக்கமாய்ப் பகவானைத் துதிக்கமாட்டாரென்கிற கருத்தால் நாதிரனால் பத்மாவதியைக் கொண்டுவரச்செய்து சுவாமிகளின் முன்வைக்கவே அப்பதிவிரதையைப் பார்த்தஜெயதேவர் அனலில் வைத்த அரக்குபோற் கருகி, மிகவுமுருகி, ஓ பெண்ணே! என்னிருகண்ணே கற்பகத்தருவே பரிமளமருவே என் குலவிளக்கே தீண்டாநெருப்பே பதி பிறந்தானெனச் சொல்லக்கேட்டதே ஜீவனைவிட்ட தேவியே ஓ என்னுவியே பதிவிரதா சிரோன்மணியே என்னைப் பரலோகத்திற் பார்க்கப் போனுயோ? எனக்குற்ற அன்பத்தைத் தீர்க்கப்போனுயோ? பகவானுக்குப் பட்சத்துடன் ராதா முத்தமிடுவதுபோல் எனக்கோர் முத்த மீயலாகாதோ? என்றுயர்நீக்கிப் போகாதோ? (பாடையேறினும் பட்சமறவீர்) என்கிற பழமொழியைப் பொய்யாக்கி விட்டாயே? அது மெய்யானால் பாடையில் வைத்துக்கொண்டு போமுன் உனக்கிருக்கும் பட்சத்தைக் காட்டலாகாதோ? என் முகத்தைப் பார்க்கலாகாதோ? நான் உனக்கோர் குறையும் செய்யவில்லையே! ஓ பத்மாவதி! என்னுடன் ஓர் வார்த்தையாவது பேசலாகாதா? உன்னைவிட்டுப் பிரிந்தினி யுயிரோடிருப்பேனு? உன்மேலதி யன்புடையவனென அறியமாட்டாயோ? இன்முகத்தைக் காட்டாயோ? எனக்குக் கைகால்கள் வந்துவிட்டதை உன் கண்களாற் பார்க்கமாட்டாயோ? என் துயரத்தைத் நீக்கமாட்டாயோ? நீ பிராணன் விட்டதை நினைத்துக் கொண்டால் தனக்குத்தானே துக்கம் வருகின்றதே! மெழுகுபோல் நெஞ்சம் உருகுகின்றதே கண்ணீர் காரைதாரையாய்ப் பெருகுகின்றதே துக்கத்தை யடக்கினும் அடங்கேனென்கின்றதே நெஞ்சத்திற் றுயரம் ஆறேனென்கின்றதே உயிர்பெற் றெழுந்திருப்பாயா? என்னையு முன்னைப்போலாக்குகின்றுயா? ஐயோ வெகுநேரமாய்ப் பகவானைத் துதித்தும் அன்புடனழைத்தும் பிரசன்னமாகவில்லையே. இராஜனே தன் பத்தினியைக் கொல்ல வாளோங்கி நிற்கின்றனே, கொல்லாமலிருக்கவென்று புகல்கின்றனே தானு மடியத் துணிந்திருக்கின்றனே யென்று மனமுருகிக் கண்ணீர் பெருகிப் பின்னும் பகவானைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

## தோத்திரப்பாடல்.

கரிமுகத் தன்பத்தாழ்ந்து காதலா யழைத்ததோகல்
பிரகலா தனனிப்போது பிரியமா யழைக்கின்றனே
மருளனேன் முன்பிந்நேரம் வருதற்குத் தடையேனையா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 12

சுரர்களு மயர்ந்துமுன்னே துரிதமா யழைக்கின்றாரோ
அருமைரா பதையின்நேர மபயமிட் டழைக்கின்றானோ
கருடவாகன கோவிந்தா கடினமேன் வரமுகுந்தா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 13

அருச்சுனன் சுதர்மன்வில்லா லடிபட்டுச் சுழல்கின்றானே
உரிமையா லவனைக்காக்க வோடுகின் றீரோவென்றன்
கருமமேதடையாய்நிற்றோ கடையனேன் பொறுக்கமாட்டேன்
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 14

தருமமோ குருவமான சகாதேவன் பிணைந்திட்டானே
துரிதமாய்த் தந்தவக்ரன் துரத்துகின் றானேயென்ன
மருமமோ வழக்கமான மாயமோ மடையனேனைத்
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 15

பரமனிப்போதுபோல்வாய் பஸ்மாசுரன் றன்னை
விரவிக்காய்க்குன்றுழன்றே வேஷ்டையுற்றிருக்கின்றேனே
உரியமோகினியா யன்றேற் குதவிசெய்திடப் போனாயோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 16

குருகுல நாதாவுன்றன் கோபிகா ஸ்திரீகள்பேரை
யருமையாய்த் தீர்க்கின்றீரோ யவர்குல லோசையாலே
யருளிலேன் குருவுமோசை யணுவுங்கேட் கிலையோவந்தோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 17

தெரிவையர் மேன்மோகித்துத் தியக்கமுற் றிருக்கின்றாயோ
ஒருமையாக்கலைகள்கொண்டோர் மரத்தின்மேனிற்கின்றாயோ
அருமேரையே யெனன்பே யலக்கணுற் றிருக்கின்றேனே
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 18

உருக்கமாய் மறையோனாலே ருக்மணியழைத்திட்டாளோ
சுருக்குடன் செல்கின்றாயோ தொண்டன்முன் வரவொண்ணா
செருக்குட னழைக்கின்றேனே தீவினைபலசெய்தேனே (தோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 19

தருமமென்னளவுஞ்செய்யேன்க்ஷணமுனைநினையேன்பொல்லாக்
கருமமேமிகவுஞ்செய்திக் கவலையிற்சிக்கிக்கொண்டேன்
அரவின்மே னடித்தமாயா வருமறை தேடுந்தூயா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 20

கருணையோ சற்றுமில்லாக் கடுநெஞ்சன் வஞ்சன்றுங்காச்
சிரமையிற் புகுந்துவிட்டேன் றிக்கிலா துனைக்கூப்பிட்டேன்
துரிதமாய் வாராதின்னஞ் சோதனைச் செய்யலாமோ
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 21

அருமோனார் தேனேயென்ற னன்புரு வானகோவே
பெருமையோ டிருந்தேனன்றிப் பீடையால் னொந்தேனிக்கத்
தருணமே வரலாகாதா சந்தோஷந் தரலாகாதா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா. 22

அருமையா யென்னைக்காக்கு மருதெய்வ நீயுண்டேயென்
பெருமையை மதிக்காதென்று முவகையோ டிருந்திப்போது
நிருடன்போல் விழிக்கின்றேனே சிந்தைநைந்திருக்கின்றேனே
தெருள்ஜெக நாததேவா சீக்கிரம் காக்கவாவா 23

கருணைத்தெய் வமேநீயானுற் கடியனுன் னடிமையானுல்
தரணிபன் பார்க்ராதா சமேதனாய்த் துன்பந்தீர்க்கத்
தருணமே வரலாமையா தடைசெயி னுயிர்போமையா
தெருள்ஜெக நாததேவா சீக்கிரங்காக்கவாவா 24

என்று தன்னிஷ்ட தெய்வமாகிய ஸ்ரீமந்நாராயண
னைத் தோத்திரஞ் செய்துருகியும், பகவான் வாராமையால்
சாதாம்பாளிடந் தன் மனதை தூதாக வனுப்பி ஏநாதா
முன்னம் பகவான் ராமாவதாரஞ் செய்து பிதுர்வாக்கிய
பரிபாலன நிமித்த வனம் போகையில் சித்திரகூடத்தில்
நின்னுடன் தம்பி யுனது தொடையின்மீது ஸ்ரீராமர் சிரசை
வைத்துநித்திரைசெய்கிறபோது ஜெயந்தனனவன்காக்கை
யுருவமெடுத்து அங்கிருந்த ஓர் மரத்தின்மீ திருக்கையில்
நினது கச்சை தளர்ந்து கொங்கை வெளிதோன்றக்கண்ட
காகாசுரனானவன் அதனை யாதோ ஒரு கனியென்றுன்னி
விரைவில் மரத்தைவிட்டு பறந்துவந்து தன் மூக்கினால்
கொங்கையைக்குத்தி உதிரம் பெருகுவதைக் கண்டு கனி
யல்லவென்றுக் கடுகி முன்போலப் பறந்தம்மரத்தின்மீதி
ருக்க அப்போது கொங்கையிலிருந்து உதிரமானதுசிறிய
கால்வாயிலிருந்து பெருகுவதைப்போல உதிரம் பெருகிப்
பூமியில் விழுந்து பாவுகிறபோது பகவானை எழுப்பினால்
நித்திரை பங்கமாகுமென்று கருதி நீ யிருக்க உதிரமா
னது ஸ்ரீராமர் முதுகிற்பட்டு உடனே நித்திரை தெளிந்
துப்பார்த்து இப்படிக்குச் செய்தவர்களாரென்று நின்னை
வினவியபோது உலகமாதாவும் யாவரையும் புத்திரரைப்
போல பாவித்து ரட்சிக்கும் தயாளகுணமுடைய தாயா
னதால் ஸ்ரீராமருக் குண்டாகிய கோபத்தைப்பறிந்து வாக்
கினா லிவன்தானென்று சொன்னால் சங்கரித்து விடுவா
ரென்றுன்னிக் கையினாற் சைகை யாகக் காகாசுரனைக்
காட்டின தாயே உடனே ஸ்ரீராமர் வில்லும் அம்பும் சமீ
பத்தி லில்லாமையால் அருகிலிருக்கும் புல்லைக் கிள்ளி
அதற்கு மந்திரத்தை உச்சரித்து காகாசுரன்மீது விட்
டார் அப்புல்லஸ்திரமானது ஸ்ரீராமர் கையிலிருந்து விடு
பட்டு காகாசுரனை விடாது துரத்த அவன் தச திக்குகளி
லும் சென்று அங்கங்குள்ள தேவதைகளைச் சரணம் புகு
ந்தும் ஒருவராகிலும் தன்னை யாதரியாக் குறையால் அக்
காகாசுரன் திரும்பிவந்து நின் திருவடியில் அபயமபய
மென்று சரணாகதியடைய சுதந்தரமில்லாத நீ மனங்
கரைந்து புத்திரவாச்சல்ய மதிகரித்து நின் திருவடியில்
விழுந்துகிடந்த காகாசுரனைத் திருப்பி ஸ்ரீராமர் திரு
வடிகளில் வீழ்த்தி யாட்கொண்ட என்னம்மணி
உன்மேலிருக்கும் மோகத்தால் ஸ்ரீ கிருஷ்ணபகவா

பூமியில் வீழ்ந்து புரண்டுக்கொண்டிருக்கிறார் சீக்கிரம் நீபோயவரைத் தேற்றி ஜெயதேவிட மழைத்துக்கொண்டு வாவெனப் பாடும்போது பகவான் இனி யென்னென்னவிதமாய்ப் பாடுவானோ வென்று பரமபதத்திலிருந்தருண்டுகொண்டே ஜெயதேவிடம் வந்தமாத்திரத்தில் ககனத்திலிருந்து தேவர்கள் புஷ்பமாரியைச் சலசலவென்று பொழிந்தார்கள்.






பகவான் பிராமண ரூபமாய்வந்து சுயரூபத்தைக் காட்டின அத்தியாயம்.

விருத்தம்.

அன்பர்தம் மமுதேசோதி யருமறைப் பொருளேதேவ
ரின்புர வமுதளித்த யெழிலுறு வமைந்ததேனே
நின்புகழ் பகரநீச நெறியிலா வேழையாகு
மென்றர மாமோவெங்கு மேகமாம் நெடியமாலே.

தும்புரு நாரதர் தம்புருவீணையைமீட்டிப் பாடினார்கள், ரம்பாஸ்திரீகள் நடனமாடினார்கள், எங்கும் தேவர்கள், எங்கும் ரிஷிகள், எங்குந் சித்தர்கள், எங்கெங்கும் பத்தர்கள் பரவிநிற்பதை யறிந்த ராதாவுமங்கு வந்து காட்சிகொடுக்க உடனே இராஜன் தன் கையிலிருந்த சந்திராயுதத்தைக் கீழேபோட்டு விட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானையும், ராதாம்பாளையும், சகல தேவரிஷிகளும் வணங்கிநிற்க, அப்போது ஜெயதேவர் பகவானைக் கண்டு ஆனந்தங்கொண்டு பலபல விதங்களாகத் தோத்திரஞ்செய்து சிரசாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்து நிற்கப் பகவான் ஜெயதேவைத் தழுவி, ஓ புண்ணியவானே! என்னைவருந்தி நினைத்த காரணமேதோ? என்னவரம் வேண்டுமோ கேளும் தருகிறேனெனத் திருவாய்மலர்ந்தருள ஜெயதேவர், ஓ ஸ்வாமி! புண்டரீகாக்ஷா! புருஷோத்தமா! புண்ணிய புருஷா! தீனதயாளா! தீனபந்து ஓ பகவான்! ஓ தெய்வமே! இப்பாவியேன் தேவரீரைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தும் வேறே வரமுங் கேட்கவேண்டி யிருக்கின்றதோ கொடியேனாகிய அடியேனை என்னகாரணத்தைக் குறித்தும்மை நினைக்கச் செய்தீரோ அதை முடித்திவ்விறைவனையு மென்னையுமாட்கொள்ளும் சுவாமியென்று தாள்களில் வீழ்ந்தார். அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் ஜெயதேவை மார்புடனணைத்துக்கொண்டு, ஓ சீலனே! உன்னாலாகாத காரியமென்னாலாமோ? நீ நினைத்தால் பத்மாவதி உயிர்பெற்றெழாளோ? நானென்னு மாங்காரத்தைக் காட்டக்கூடாதென்றல்லவோ என்னை இவ்வளவு வருந்தியழைத்தாய், ஓ ஜீவகாருண்ணியத்திற் சிறந்தவனே! ஆசாபாசங்களைத் துறந்தவனே, சாந்தரூபனே! பிர்மானந்த நித்திரையில் ரமித்தவனே! உன் மனையாளாகிய பத்மாவதியையெழுப்பி விடட்டுமா? அல்லதிந்த ராஜனுக்குச் சிரஞ்சீவிபட்டங் கொடுக்கட்டுமா வெனத் திருவாய் மலர்ந் தருளும்போது அரசன் பகவான் பாதத்தில் சிரசாஷ்டாங்கமாய் வந்தனஞ்செய்து, ஓ சுவாமி! என் தாயாகிய பத்மாவதியை எழுப்பித்தருவதே எல்லா பாக்கியமுந் தந்ததற்குச் சமானமாகுமெனப் பணியும்போது மாயாவிலாசனாகிய பகவான் பத்மாவதியை நோக்கி, ஓ

அம்மணீ பத்மாவதி நான் வந்தும் நித்திரை செய்ய லாமோ? சீக்கிரமெழுந்து வரலாகாதோவெனத் திரு வாய் மலர்ந்தபோது அப்பகவானுடைய திருவாயிலிருந் தொரு சோதிபுறப்பட்டுப் பத்மாவதியின் திவ்யதேகத் தில் தங்கினமாத்திரத்தில் பத்மாவதி நித்திரைவிட் டெழுந்தவள்போ லெழுந்து ஆ என் பிராணநாயகா வென்று தன்னுயகனைக் காண அவாக்கொண்டு கைகால் கள் வந்து பிரமானந்த முகவிலாசத்துடனிற்கும் கண வனைக்கண்டு ஆனந்தங்கொண்டு பலதரம் வலம் வந்து பணிந்து பாதங்களில் தனதிருநயனங்களை பகவானையும் ராதாம்பாளையும் போற்றிப் புகழ்ந்து பொங்கிப் பூரித்து மகிழ்ந்து சகல தேவரிஷிகளையும் வணங்கி மிகவுமிணங்கி ஜெயதேவர் பின்பக்கமாய் நின்றாள்.

அப்போது பகவான் ஜெயதேவர் பத்மாவதி கிரவுஞ் சராஜனையும் பார்த்து நீங்கள் மூவரும் பிரமக்ஞானம் பெற்று பிரமானந்தத்தை யுற்றுச் சுகசீவிகளாய் வாழ்ந் திருக்கக் கடவீர்களென் றாசீர்வதித்து ஜெயதேவை நோக்கி, ஓ மஹானுபாவனே, ஜெயதேவனே, நீ கற்ற கல்வியையும் பிரமக்கியானத்தையும் உன்மட்டில் மறைத் திருப்ப தழகல்லவே உலகோபகாரமாய் பக்திமார்க்கத் தையும், முக்தி மார்க்கத்தையும் சேர்த்துச் சில சாஸ்தி ரங்களை யேற்படுத்தி ஜீவர்களுக்குப்போதித்து என் பத வியை யடையக்கடவாயெனத் திருவாய் மலர்ந்தருளிச் சகல தேவரிஷிகளுடன் அந்தர்த்தானமானார் தேவர்கள் பூமாரிபொழிந்தார்கள், ரிஷிகள் ஜெயவிஜயீபாவென்று ஆசிர்வதித்தார்கள், பின்பு இராசன் பத்மாவதியை வலம் வந்து பணிந்து, அம்மா என்னை யீன்றதாயே பகவான் தரிசனமியாருக்குக் கிடைக்கும், உம்மது கிருபையாலல் லவோ தரிசித்துக் கிருதார்த்தனானேன். தங்களுடைய கிருபை யில்லாவிட்டால் முழு மூடனுக்கும் நாரதாதி களின் சேவை கிடைக்குமா? ஓ பரமேசுவரி, ஜகதீசுவரி யெனத்தொழுது, ஓ லோகமாதாவே உம்மை வஞ்சனை செய்து சர்ப்பனையாற்கொன்ற கொடும்பாவியாகிய என் மனைவியை என்ன செய்யலாஞ் சொல்லுமம்மாவென்று வணங்க பத்மாவதி, ஐயா ராஜனே, உன் மனைவியினு லல்லவோ நமது ஸ்வாமிகளுக்குக் கால்கைகள் வந்தன, பகவான் தரிசனந்தந்தது என்றுரைத்து அரசன் தேவியை யருகிலழைத்து ஆலிங்கனஞ் செய்துக்கொ ண்டு பல பல உபசார வார்த்தைகளுரைத்து அத்தியந்த பிரீதியுட னனுசரித்தாள், பின்பு இறைவன் ஜெயதேவ சுவாமிகளின் திருவடிகளிற் றொழுது, ஓ சுவாமி! இத் திருவடிகளை இத்தனைநாளாய் எங்கு மறைத்துவைத்தி ருந்தீரோ? அனுயாசமாய் வளர்ந்த காரணமேதோ? ஓ என்னுண்டவனே! நீரே வாமதேவன், நீரே வாசுதே வன், நீரே பிரமதேவன், நீரே ஆதிதேவன், நீரே தேவ தேவன், நீரே மஹானுபாவன் என்று சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து கண்ணுடன் சேர்த்துப் பலதரம் முத்தமிட்டு ஸ்மரணைகெட்டு ஆனந்தவாரியிற் படிந்தி ருந்தான்.

ஜெயதேவ் இராஜனைவாரியெடுத்து மார்புடனணைத் துக்கொண்டு பல அன்பான வார்த்தைகள் விண்டு இரா ஜன் றேவியை விளித்துப் பல உபசாரவார்த்தைகளுரை த்து இராஜனை முன்பிலும் அன்பாய் பார்க்கச்சொல்லி பல ஆசிகள் கூறி இதுகளையெல்லாம் ஓர் சொற்பனம் போல் நினைத்து உத்க்ருஷ்டமான சிற்சொரூப சமாதியி லெழுந்தருளியிருந்தார். பின்பு இறைவன் ஆசான் கட் டளைப்படியே அரசாங்கஞ்செய்துக் கொண்டிருந்தான். இப்படி சிலநாள்கழிய ஒருநாள் ஜெயதேவ் பகவான் பக்தவிலாசத்தையும் பரப்பிரமக்ஞானத்தையுந் தொ குத்து நூதனமாகச் சாஸ்திரங்களைச் செய்யும்படியாய்க் கட்டளையிட்டதை நினைத்துப் பகவானுடைய லீலையும் பிரமக்ஞானமும் பூரணமாய் நிறைந்திருப்பது பாகவத மேயாம் அதை விஸ்தீரண மாகச்செய்வதே நலமாயிருக் கின்றது ஏனெனின் பகவான் பிரதாபமும் லீலையும் பக்தி யும் பிரமக்ஞானமும் பிரமக்ஞானிகளுடைய சரிதையும் பகவானுடைய அவதாரங்களும் வருமென்று தேவ பாஷையில் வெகு சித்திரமாகப் பாடிக்கொண்டிருந்தார் கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜி சித்தர் சொல்லத்தொடங்கினர்.

பத்மாவதி உயிர்பெற்ற அத்தியாயம்

முற்றிற்று.

---

பத்தாவது

## ஜெயதேவர் பாடிய பாகவதத்தைப் பகவான் பிராமண ரூபமாய்வந்து வாசித்துச் சுயரூபத்தைக் காட்டின அத்தியாயம்.

ஜெயதேவர் பாகவதத்தைப்பாடிமுடித்து ஒருநாள் அரசன்முதல் சகல சாதுபிராமணர்களும் சூழ்ந்திருக்

குஞ் சபைக்குக் கொண்டுபோனர் சுவாமிகள் வரவை யறிந்த இறைவன் உடனே சிம்மாசனம்விட்டு பாதங் களில் விழுந்து ஒ சுவாமி தேவரீர் திருவடிகள் நோக அடியேன் சபைக் கெழுந்தருளும்படியான காரணமே தோ? தாங்கள் கொலுமண்டபத்துக்குவர நான் செய்த பாக்கியமேதோ? அடியேனை யழைப்பித்தால் வரமாட் டேனேவென்று பலபல வார்த்தைகள் பட்சத்துடனு ரைக்கும்போது ஜெயதேவர், ஐயா அரசனே, நமதிஷ்ட தெய்வமாகிய ஸ்ரீபகவான் திருவாய் மலர்ந்தபடி நூதன மாயோர் கிரந்த மேற்படுத்தினேன். அதை பலருங் கேட்கும்படியான இடமிதுவேயாமென்று வந்தேன் இக் கிரந்தத்தை ஒதும்படியான மறையோனிச் சபையிலியா ராவ திருக்கின்றனவென் றையுந்தருவாயில் பகவான் ஓர் பிராமண ரூபந்தரித்து இராஜன் சபையையடைந்து ஓ இராஜேசுவரா, நீ சுகஜீவியாய் வாழ்ந்திருக்கக்கடவா யென் றாசீர்வதித்த அந்தணரை இறைவன் வணங்கி, ஒ சுவாமி, தேவரீ ரெத்தேசத்திலிருந்து எழுந்தருளினர் அடியேனிடம் வந்த காரணமென்ன தேவரீருக்குத் தேவையானதென்ன? சீக்கிரந் திருவாய் மலர்ந்தருளு மென் றஞ்சலியஸ்தனுய் நிற்கப்பகவான், ஓ அரசனே, நானிருப்பது கோகுல பிருந்தாவனம் பிறந்தமுதல் இந் நாள் பரியந்தம் கிரந்தபாஷையை வாசித்துச் சகல சாஸ் திரார்த்தங்களுமறிந்து வியாகரண முதலானவைகளிற் றேர்ந்து பண்டிதர்களிற் பரமேஷ்டியெனப் பேர்பெற்று நமக்கு மிகரான வித்வாமிசர்களில் வுலகிலியா ராவதிருக் கிறார்களா இல்லையாவெனப் பலதேசங்களி லுழன்று ஜெகநாதத்தையடைந்து உமது பட்டணத்தில் ஜெயதே வென்கிற மகாபண்டித னிருக்கிறானெனக் கேள்விப்பட்ட வரைக்காண இங்கு வந்தேனென் றுரைக்கும்போது ஜெயதேவர் அதிசீக்கிரமா யெழுந்து அப்பிராமண ருடைய திருவடிகளிற் பணிந்து, ஒ சுவாமி, அடியேன் பண்டிதனல்ல உமது பாதசேவைக்குகந்தப் பணியாள னென்று பரிவாகவுரைக்க மாயப்பிராமணன் நீதானு? ஜெயதேவ் நீதானு? விஷயபோகத்தைத்தரும் மனைவிக் குயிர்வர அஷ்டபதிகங்கள் பாடினவன் நீதானு? பந்த பாசங்களைக் கொய்தவன் நீதானு? மனைவி மரிக்க மேல் விழுந்து புலம்பினவன் கண்ணீராலவள் தேகத்தை யலம் பினவன் முக்கால் மூடனை முழுமூடன் கொண்டாடின தைப்போலக் கல்வியறிவில்லா இவ்விறைவன் முதலான வர்களுனக்குச் சுவாமிகளென்றும், பிரமக் ஞானியென் றும் பிரசண்ட வித்துவானென்றும் பேர்கொடுத்த மாத் திரத்தில் பண்டிதனுப் விட்டாயோ? இதோ உன் வித்வ திறத்தையும் வாக்கின் தரத்தையும் ஓர் க்ஷணத்திலறிகி றேன் பாரென்று முடுக்கானவார்த்தைக ளாடும்போது ஜெயதேவ், ஒ சுவாமி! அடியேன் ஹரிஓம் என்கிற வாக் கியத்தினர்த்தமே தெரியாதவன், வியாகரணமாதிகள் சற்றுமறியாதவன், யானைக்கிணையான உம்முடன் பூனைக் கிணையான வடியேன் பேசவல்லனே? ஒன்றுமறியா இம்மூடனைத் தாங்களொரு பொருளாய் நினைக்காமலுங் கிருபைகூர்ந் தாட்கொள்ளுமையாவென் றவர்தாள்களில் வீழ்ந்தார். பகவான் மிகவுங் குரோதங்கொண்டு, அடா ஜெயதேவ்! கார்த்திகேயன் பிர்மாவையெதிர்த்து அகார உகாரமென்னும் திரியாட்சரங்களடங்கிய பிரணவாக்ஷ ரத்தின் அர்த்தத்தைக்கேட்டு அதற்கர்த்தஞ் செய்வதற் குக் கூடாமற் றிகைக்கும் அவ்வேதாவைச் சிறைச்சா லையி லடைத்துத் தந்தைக் கவ்வோங்காரத்தி னிரகசி யத்தை யுபதேசித்துத் தகப்பன்சாமியென்று பேர்பெற் றதுபோல என்னை ஹரிஓம் என்கிற மூலமந்திரத்தினர்த் தத்தி னிரகசியத்தைச் சங்கோசமாகக்கேட்டு என்னை வென்று இவ்வுலகத்துக் கரசனுக யுக்திசெய்தாயோ? ஹரிஓம் என்கிற வாக்கியத்தி னர்த்தந்தெரிந்தால் வேதா கம சாஸ்திரங்களை ஓதவேண்டுமோ? ஹரிஓம் என்கிற வாக்கியத்தி னர்த்தந்தெரிந்தவனை ஒருவரால் வெல்லக் கூடுமோ? எதிர்த்துத்தரஞ் சொல்லக்கூடுமோ? அப் ப்பா ஆரம்பத்திலேயே சூட்டாமற் சூட்டினுப், உன் பராக்கிரமத்தைக் காட்டாமற் காட்டினுப், என்னை வாட் டாமல் வாட்டினுப், இப்படியே அநேக வித்துவாமிசர் களை இப்பட்டினத்திற் றங்காமலோட்டினுப், நானே பண்டிதனென்று நிலைநாட்டினுய், என்னையும் மூடர்களி லொருவனுகக் கூட்டினுய், ஹரிஓம் என்கிற வாக்கியத் தால் மாட்டினுய், எனக்குக் கோபாக்கினியை மூட்டி னுய் உன் பெருமையைப் பாராட்டினுய், ஏதோ என் னைச் செயிக்கிறேனெனக் கைதட்டித்தா, இல்லாவிடி லுன் தலையைவெட்டித்தா வென்று மீசையை முறுக்கிக் கோபத்தைப் பெருக்கித் தோள்களைக்குலுக்கி ஜெயதேவ் மார்புடன் மார்பைச்சேர்த்துக் கரந்தைப்பிடித்திர்த்து ஆர்ப்பரித்து அட்டகாசஞ் செய்தார்.

ஜெயதேவ் இதென்ன வல்லடி வழக்காயிருக்கின் றது நாம் ஹரிஓம் என்பதே அறியேனென்றுரைத்தால் விபரீத கியாபகங் கொண்டார், பல வார்த்தைகள் விண் டார், மௌனங் கலகநாஸ்தி யென்பதைப்போலினி நாம் மௌனமாயிருப்பதே நல்லஸ்திதியென்று எட்ட நின்று கைகளைக் கூப்பிக்கொண்டு பேசாமலிருந்தார், பகவான்

ஓ ஜெயதேவ் ! கூசாமற் பாசாங்கு செய்கின்றுயோ துன் மார்க்கனைக்கண்டால் தூரமாய் நிற்கவேண்டுமென்கிற பாவனையின்படியே என்னை எல்லோருந் துன்மார்க்க னென்றறிந்து கொள்ள வல்லவோ நீ தூரமாய்ப்போய் நிற்கின்றுய் இந்தச் சூதுகளாற்றுன என்னை வெல்கின் றுய் நீ தூரமாய்ப்போனாலும் என்னை வெல்பவனானாலும் உன்னைப்பரிட்சை செய்யாமலும் வாயில்வந்தபடி வையா மலும் நான்போகவே மாட்டேன் என்றவரருகிற்சென்று முழுப்கால்மேலுட்கார்ந்து ஹரி ஓம் என்கிற வாக்கியத் தினர்த்தத்தை நானறியாதவனென்றே எண்ணினை தர்க் கம் பண்ணினை ஹரிஓம் என்னும் வாக்கியத்தின் மர்மத் தை நீ பிரமைகொள்ளும்படி யுரைக்கிறேன் பார் என்று சபையை நோக்கி நீங்களனைவோருங் கேளுங்கள் அதா வது பக்தர்கள் பாபங்களை அரிக்கப்பட்ட பகவானுக்கே ஹரியென்று சொல்லப்படும். அப்பகவானே பிரணவ ஸ்வரூபி என்றுஞ் சொல்லப்படும். பிரணவமென்பது அகார உகார மகாரமென்னுந் திரியாக்ஷரங்கள் கூடிய ஓங்காரமென் றுரைக்கத்தகும் இதினர்த்தம் பூரண பிரமஞானிகளுக்கன்றி மற்றவர்களுக்குத் தெரியாது. பிரமமே ஓங்காரமென்று வேதங்கள் முறையிடுகின்றன பிரணவத்தினிரகசியந் தெரியாதவர்கள் சகலவேதாகம சாஸ்திரார்த்தங்க ளறிந்தவர்களானாலும் ஒன்றும் அறி யாதவர்களேயாம், பிரணவத்தின் மர்மமறியாதவர்கள் பிரமைக் குள்ளானவர்களேயாம். பூரணபிரமஞானி யாகிச் சாக்ஷாத்கார தசையடைந்த சத்குரு கிருபையா லன்றிப் பிரணவவர்த்தந்தெரிதல் வெகு துர்லபம், வே தாகம சாஸ்திரங்களெல்லாம் ஓங்காரத்தி னுதாரத்தினு லேயே பிரகாசிக்கின்றது. வேதத்தினுடைய சாரம் பிர ணவ மென்றே யுறைக்கத்தகும், சர்வ சிருஷ்டிக்கு மாதாரமாயும் ஆதேயமாயு மிருக்கின்றது, மூலாக்ஷர மென்றே சொல்லப்படும் பிரணவத்தின் மர்மமறிந்தவ னே சுஞானியாகும், அறியாதவனே அஞ்ஞானியாகும் சகலமந்திரங்களுக்கு முயிராகின்ற மூலாக்ஷரத்தின் மர்மமறியாமற்செய்யும் தபம் செபம் யோகம் தியானம் வேதாத்தியயனம் வேதாந்தசிரவணம் மனன நிதித்தி யாசனம்சமாதி சாக்ஷாத்காரமும் வீண்முயற்சியாய் முடி யும் ஓங்கார சமுத்திரமாகும், வேதாகமங்கள நுரைக ளாகும், பலபல வித்தைகள் பதார்த்தங்களும் ஓங்காரம் லவணமுமாயிருக்கின்றது. ஓங்காரத்தினி ரசசியந்தெ ரிந்தவர்களே பூதபவிஷ்ய வர்த்தமானமென்னும் திரிகா லங்களையறிந்த பிரமஞானிகளென்றுரைக்கலாம். பிர ணவார்த்த சோதனையினுலே அஞ்ஞானம் சந்தேகம் விப ரீதம் சாஸ்திரவாதனை லோகவாதனை தேகவாதனை முத லானவைகளும் நிவாரணமாய் திடப்பிரக்ஞையுண்டாக வேண்டும் அஷ்டாக்ஷரத்துக்கும் பஞ்சாக்ஷரத்துக்கும் ஸ்திரமான வலிமையுண்டாக்குவது பிரணவமேயாம் விருக்ஷங்களுக் சகலமும், ஸ்திரிகளுக்கு கற்பும் புரு ஷர்களுக்கு விவேகமும், மேடைகளுக் கஸ்திவாரமும் எப்படி ஆதாரமாயிருக்கின்றதோ அப்படியே சமஸ்தமந் திரங்களுக்கும் ஆதாரமாயிருப்பது பிரணவமேயாம், தானும் பிரமம் ஜகத்தும் பிரமமென்னும் திடமெவ னுக்கு வந்ததோ அவனே பிரணவத்தி னுறுதியார்த்த மறிந்தவனும், புத்திவந்தனென்றும், யுக்திசாலியென் றும், விற்பன்னனென்றும் முமுட்சுவென்றும் சிரேஷ்ட னென்றும் பண்டிதனென்றும் பக்தனென்றும் முக்த னென்றும், சித்தனென்றும் சுத்தனென்றும் பிரண வார்த்த மறிந்தவனையே சொல்லவேண்டும். பிரண வபாவ மறிந்தவனொருவனே பிரமத்திலே ஏகீக பாவமாயிருப்பான் மற்றவர்கள் மாயையிற் சிக்கின வர்களாம், பிராணவானுபவ மறிந்தவனே பிராந்தி ரகிதனென்றும் பிராமணனென்றும் அறியாதவனே பிராந்தி சகிதனென்றும் ஸ்பவசனென்றும் சொல் லப்படும் பாலுக்குள் வெண்ணெய் போலவும் எள்ளுக்கு ளெண்ணெய்போலவும் பரிபூரணமாயிருக்கும் பரப்பிர மத்துக்கு லௌகிகபாவமாயிராது வெதிருக்தமா யிருப் பதே பிரமஹத்தி யென்றும் பெரியோர்களுரைப்பார் கள் மாதா பிதாக்களுக் கைக்யமாயிராமல் மாறுபட்ட தங்யன் பராதியானதுபோலப் பரப்பிரமத்துக்கு ஐக்ய மாய் நானென்பதறுத அகங்காரக்கிரந்தியுள்ள வப்ரா திக்கு விபரீதகுணங்களுண்டாகிப் பிரமத்துக்குத் தவிரா விரோதியாய் மூவர்தேவர் முனிவர்களுக்கும் விரோதி யாய் குரோதமோ குருவாயிருக்கும் ஜீவனே தானுகிஜரா மரணத்தாங்கக் கணங்களிருக்கும் பவசாகரத்துளோர் திரணமாய் வீழ்ந்து கரையேறுவதற்கோர் துறைகா ணுமல் கற்பாந்தகாலங்கள் பல கடந்தாலும் தனக்கு சலனமுந்துன்பமும் நீங்காமல் மேற்படி தாங்கங்களெத் தெத் திசையிற் றுவுகின்றனவோ அந்தத்திசைகளி லுழன்றலைந்து நிலைகலைந்து இன்பங்குலைந்து யாதொன் றுந் தோன்றுமல் அலைந்து அந்தகாரத்திலமிழ்ந் திருப் பான் அன்றி மாயையென்னும் கன்னிகை விளையாடுவதற் கோர் பந்தாய்நைந்து மிகவுநொந்து சிந்தாகிரந்தயைப்பந் தத்தாற் பிணிக்கப்பட்டு ஞானஸ்மரணை கெட்டு மோ க்ஷமார்க்கம் விட்டுத் தொன்றுதொட்டு பிரம்மப்பிரளயபரி யந்தம் சுழல்காற்றி லகப்பட்ட இலவம் பஞ்சுபோலவும்,

சூழ்ந்தெரியும் வன்னியின் மத்தியிலுற்ற பன்னசம் போலவும், இருபுறமு மெரியும் குழாயினுள்ளிருக்கும் எறும்பு போலவும் உழன் றுழன்று அலக்கணுற்று இடரடைந்து இறுதியில் நிரைபத்துக் காளாவான், ஓ சபையோர்களே! மூன்றரை மாத்திரையான வோங்கா ரத்தி னம்சமான அகாரம் சாக்ராவஸ்தை யென்றும் பிர்மதேவனென்றும் சொல்லப்படும். உகாரம் சொப்ன வஸ்தை யென்றும் விஷ்ணு வென்றும் ஸ்திதி யென்றும் பிந்து வென்றும் எ;ஈர்வேத மென்றும் சொர்க்கலோக மென்றும் புத்தி யென்றும் சொல்லப்படும். மகாரம் சுழுப்தி யவஸ்தை யென்றும் ருத்திர னென்றும் சம் ஹார மென்றும் களாயென்றும் சாமவேத மென்றும் பாதாளலோக மென்றும் அகங்காரமென்றும் சொல்லப் படும். அர்த்த மாத்திரையோ துரியாவஸ்தை யென் றும் ஆதிசத்தி யென்றும் க்ஞான மென்றும், சாக்ஷி அதர்வணவேத மென்றும் மோக்ஷலோக மென்றும் சித்த மென்றும் சொல்லப்படும். அன்றி, ஓங்காரத் தைப் பிண்டம் அண்டம் பிர்மாண்ட மென்றும், இச்சா சக்தி கிரியாசக்தி ஞானசக்தியென்றும், சத்வ ரஜதமோ குணங்க ளென்றும், இடாபிங்கலர் சூழும் நாடியென் றும் கங்கா யமுனா சரஸ்வதி யென்றும், மனம் வாக்கு காய மென்றும், வானீ லக்ஷ்மி பவானி யென்றும், ஆதி மத்யாந்த மென்றும், மாதா பிதா குரு வென்றும் ஆகாய சஞ்சித பிராப்த மென்றும், ஆதிபாத்மீகமாதி பௌதீக ஆதி தெய்வீக மென்றும், சந்திர சூரியாக்கினி யென்றும் சொல்லப்படும். அல்லாமல் மனசு எப்பதி லேம்-என்னுந் தமோகுணமும், ந-என்னும் ரஜோகுண மும், சு-என்னும் சாத்வீக குணமும் அடங்கியிருக்கின் றது. இதனால் கூகூ-தத்துவங்களாகிய ஒவ்வொன்றில் திரியாக்ஷராதிபதிகளாகிய. திரிமூர்த்திகளு மிருந்து தங்கள் தொழிலே இயற்றுவார்கள் திரிமூர்த்திகளுக் காதாரமான திரியாக்ஷரங்க ளில்லாதவஸ்து எவ்வுலகத் திலும் எக்காலத்திலு மில்லை யென்றே சொல்லத்தகும். அல்லாமல் அகாரம் ஸ்தூலதேக மென்றும், உகா ரம் சூட்சுமதேக மென்றும், மகாரம் காரணதேக மென் றும், அர்த்தமாத்ரா மகாகாரணதேக மென்றும் சொல் லத்தகும் மூன்று தேகங்களுக்குஞ் சாக்ஷியான மகா காரணமே பிரத்யகாத்மா வென்றும், ஆனந்த மென் றும், அனாதிகாரண மென்றும், அசியென்னும் ஐக்ய பாவத்தை யளிப்ப தென்றும், நித்ய சத்ய வஸ்து வென் றும், நிர்வாண பதமென்றும், சஞ்சுத்த யோகீசுவரர்க ளுரைப்பார்கள். துரிய ராணியோடுங் கூடிச் சுகித் திருக்கும் ஆத்மராமனைத் துரியாதீத னென்றும், பர மாத்மா வென்றும், பராத்பர மென்றும், பரிபூரண னென்றும், பரமேசுவர னென்றும் சொல்லுவார்கள். பகவா னென்றும் சொல்லுவார்கள்.

ஆனாற் றுரியராணியோ ஆனந்தமென்றும், ஆனந் தத்தை யனுபவிப்பனே ஆத்ம ராமனென்று முறைக்கத் தகும். அர்த்த மாத்திரையான மாயையுடன் மற்ற அர்த்த மாத்திரையாய் அவாங் மனோகோசரமா யிருக் கும் பிர்மங்கூடி பலப்படாமலே வோங்காரத்துக்கிடங் கொடுத் திருக்கின்றது. நிர்சப்தமான பிரமத்திலிருந்து வோங்கார முண்டாயிற்று அதிற் சப்தமும் பதமும் வாக்கும் வார்த்தையும் சுலோகமும் வேதாகமும் உண் டாயிற்று. வேதாகமங்கள் வாச்சியார்த்த மென்றும், வோங்காரம் லட்சியார்த்த மென்றும், பெரியோர்க ளுரைப்பார்கள் வாச்சா ஞானிக்கு லக்ஷியார்த்தந் தெரியாததுபோல ஜாக்ர ஸ்வப்ன சுழுப்தி யனுபவ முரைக்கவே சென்று துரியானுபவ முணர்தலரிதுர்லப மென்றுஞ் சொல்ல வேண்டும். அகாரத்தில் நரரும் உகாரத்திற் சுரரும், மகாரத்தில் ராட்சதரும் அர்த்த மாத்திரையில் ஞானிகளும் உற்பத்தியானார்க ளென்று வேதத்தில் முறையிடுகின்றது. திரிமூர்த்திக ளாகுத லரிதல்ல. பிர்மக்ஞானியாதலே அரிதென் றுரைக்கத் தகும். அன்றி, வோங்காரம் சகுண பிர்மமாகவும் நிர் குணப் பிர்மமாகவு மிருக்கின்றது. எப்படியெனில் ஓம் நமோ நாராயணாய ஓம் நமசிவாயா வென்னும் சகுண பிர்மமான பிரதான மந்தரங்களுக் காதியிலிருக்கின்றது வோங்காரமேயாம் வோங்காரத்தை யுச்சரிப்பவன் திரி மூர்த்திகளேயும் ஆதிசத்தியையும் பரப்பிர் மத்தையும் நினைத்ததாகும். நிர்க்குணமர்மமான அம்ஸோஹம் என் னும் அஜபாமந்திரமே அர்ச்சுனா நீ ஜெபிக்கத்தகுந்ததெ ன்று பகவானும் சிவோஹம் என்னும் அத்வைத மந்திர மே ஸ்ரீராமா நீஜெபிக்கத் தகுந்ததென்று வசிஷ்ட பக வானும் போதித்த மகாவாக்கியங்களில் வோங்காரமே ஆதாரமாயிருக்கப் பிரணவத்தின் மகிமையை ஒருவராற் சொல்லக்கூடியதோ! ஓ-ஜெயதேவ வோமென்னும்பிரண வத்தினர்த்த மின்னஞ் சொல்லப்புகின் ஓ அது வென் னும் பிர்மமே அம் நானென்றும் நிர்குணப்பிர்மைக்யத் தைக் காட்டும் அத்வைத பாவமாயிருக்கின்றது எல்லா வற்றிற்கும் வோங்காரமே பிரதானமென்றறிந்துக்கொள் சரீரத்துக்குப் பிரதானமான மஸ்தகமே பிரமாணமாயி ருக்கிறது எப்படியெனில் ஆதியில் பிரமாவான பரப்பிர்

மத்திலிருந்து முதல் முதல் ஓங்கார முண்டாகிறபடியால் நாமும் ஓங்காரத்தையே ஆரம்பத்தி லுண்டாக்க வேண்டுமென்று ஓங்கார ஸ்வரூபமாய் மஸ்தகத்தை யுண்டாக்கிக் களிப்புற்றுப் பின்பல் வவயங்களைச் சிருஷ்டித்தான் ஓ ஜெயதேவ் ஓங்காரத்தின் மர்மம் இன்னம் விரித்துரைக்கவேண்டுமோ! நானுரைத்ததற் கதிகமான யுக்தியுடனுரைக்குஞ் சக்தியுனக்கிருந்தாற் சொல்லு என்னைவெல்லு வென்று மல்லுசெய்யும் பூசுரனை ஜெயதேவ் வணங்கி இணங்கி ஓ-ஸ்வாமி சூரியனுக்குமுன் கச்சோதம் போலவும் சந்திரனுக்குமுன் சாலியைப்போலவும் அருந்ததிக்குமுன் அகலிகையைப் போலவும் சமுத்திரத்துக்குமுன் புற்புதம்போலவும், மேகத்துக்குமுன் திவலையைப்போலவும் கற்புள்ளவளுக்குமுன் கணிகையைப் போலவும் இருக்குமென்னைத் தேவரீ ரொருபொருளாக நினைத்துக் களைத்துத் தர்க்கஞ்செய்ய யோசிக்கலாமோ இதோ அடியேன் கற்றகல்வியென்று தான்செய்த பாகவதத்தை அவர் கரத்திற்கொடுத்து இதை அங்கீகரியும் சுவாமியெனத்தொழுது அடக்க ஒடுக்கத்துடன் நிற்கும் போது அதை மாயாமறையோன் வாசித்துப் பார்த்து ஜெயதேவ் கரத்தைப்பிடித்தீர்த்து இதுமுன்னோர் செய்ததாயிருக்க நான்செய்தேனென் றெப்படி யுரைக்கின்றாய் இவ்விதச் சூதுகளாற்றானே சாதுவென்று பேரெடுத்தாயென்று கலகலவென்று நகைக்கும்போது இராஜன் ஓ சுவாமி இதுபுராதனராற் செய்யப்பட்டதல்ல எனது சத்குரு சுவாமிகளே செய்ததென் றுறுதிகூறப் பகவான் அடா ஜெயதேவ் நீ இது நூதனமாகச்செய்த நூலா நல்லது நீ இதைப் பார்த்துக்கொண்டேவா முதியோர் செய்ததை நான் சொல்லிக்கொண்டே வருகிறே னென்று அவர்கரத்தி லப்பாகவதத்தை யளித்து தன் திருவாக்கினாற் சொல்லத்தொடங்கினார்.

அவர் வாக்கிலிருந்து புறப்படும் சுலோகங்களேதான்செய்த பாகவதத்தில் வரிசையா யிருக்கப்பார்த்துக் கரங்களைச் சேர்த்துப் பிரமித்துக் கம்பித்து ஜெயதேவ் ஒன்றுந் தோன்றாதவரா யசைவற்று நின்றிருந்தார் அப்போது ஜெயதேவ சுவாமிகளின் திருவாக்கினாற் செய்த நவரசாலங்கார அதிமதுரமான திவ்விய சுலோகங்களைச் சொல்லிக்கொண்டேவந்த பகவானானவர் அவ்வாக்கியங்களிற் றன்னைப் புகழ்ந்து துதித்திருக்கும் அர்த்த சாரத்தில் தன் மனதைச்செலுத்தி ஆனந்த பரவசத்தாற் றன்னைமறந்து சற்றுநேர மசைவற்றுநின்றார் உடனே மாயாரூபம் நீங்கிச் சுயரூபஞ் சகலருக்குங் காணப்பட்ட தன்றிப் பிர்மருத்திராதி தேவர்களுக்குஞ் சந்தோஷ முண்டாகியது இதனால் என்று மடையாவின்படைந்த தேவர்கள் ஆகாயத்தி லிருந்தபடி சலசல வெனப் பூமாரியும் பொன்மாரியும் பொழிந்து களிப்புற்றார்கள் தேவ துந்துமி தாம்தமென முழங்கிற்று தும்புருநாரதர் தம் புருவீணையை மீட்டிக்கொண்டே இராஜசபையில் வந்துநின்றார்கள். ரிஷிசித்தர்களு மங்கடைந்து கானராகங்களைப் பாடும்போது பகவான் தன்னைமறந்து தான் முன்போலவே பிராமணனாயிருக்கிறதாகவே மதித்து ஜெயதேவ் பாடிய பாகவத சுலோகங்களைத் துதிக்கத் துதிக்க இன்பமேலிட்டுத் தம்புரு வீணையினொலிக்குஞ் சரியாய்ப்பாடி ஆவேசமேறினவர்போ லானந்த நிர்த்தனஞ் செய்யத் தொடங்கினார் தாத்திரியசைத்தாற் சகலமு மசைவது போலப் பகவானுடன் சகலரும் ஆனந்தத் தாண்டவஞ் செய்யத் தொடங்கினார்கள்.

இப்படி நான்குஜாம பரியந்தம் ஜெயதேவ் முதலானவர்களுந் தன்னைமறந்து இன்பநடனம் புரியும்போது பரமசிவனார் பார்வதி சமேதராய் ரிஷபவாகன ரூடராய் அச்சபைக்கெழுந்தருளி பகவானிருகரங்களையும் பிடித்துக் கொண்டு ஓ-ஜனார்த்தனா காளிங்க நிர்த்தனா ராக்ஷஸமர்த்தனா என்னுடைய மைத்துனா உம்முடையமாயையை நீரேயறியாமல் தன்னை மறந்து இன்பம் நிறைந்து தன்னைத்தானே தோத்திரஞ் செய்துக்கொண்டு இப்படி ஆனந்தத்தாண்டவம் புரியலாமோ உம்முடைய கபடத்தை ஒருவராலறியப்போமோ வென்கிற பற்பல பக்ஷவார்த்தைகளாடித் துதிக்கும்போது பக்தவச்சலனாகிய பகவான் கண்களைத்திறந்து தன்சுயரூபந் தனக்கு வந்ததற்காக வாச்சரியப்பட்டுச் சுலோகங்களைச் சொல்வதை விட்டு ஜெயதேவரைப்பார்த்து மார்புடன்சேர்த்து ஓ-மாதவனே பந்தபாசங்க ளில்லாதவனே உம்முடைய திருவாக்கினாற்செய்த பாகவதத்தை முதல் முதல் நானேவாசித்தாரங்கேற்ற வெண்ணங்கொண்டு ஓர் பூசுரனாய் வந்தேன் வாசித்தென்னை மறந்தேன் அரிதான, சேவைதந்தேன், மிகவுமுவந்தேன் ஆதலாற் பழய பாகவதம் முழுதும்வாசிக்கும் பலனும் நீர்செய்த பாகவதத்திலுள்ள ஒரத்தியாயம் ஓதும்பலனுஞ் சரியாயிருக்கக் கடவதென் றந்தர்த்தானமாய் மறைந்தருளினர். உடனே பரமசிவனார்முதலானவர்களும் பல ஆசிகள்கூறி ஜெயவிஜயபவாவென்று அந்தரத்தில் மறைந்தார்கள் கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னுஞ் சொல்லத்தொடங்கினார்.

*பகவான் பிராமண ரூபமாய்வந்து தரிசனந்தந்த பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.*

---

## ஜெயதேவ் செய்த மூப்பது அஷ்டகங்களைக் கெங்கையில் விடுத்துப் பரீக்ஷித்த அத்தியாயம்.

---

நாபாஜிசித்தர் சித்தர்களை நோக்கி சொல்லுவார் ஓ சிலர்களே சத்சங்கத்துக் கனுகூலர்களே இப்படி பகவான் மாராவன்பினையளித்து அந்தர்த்தானமாய் மறைந்துபோனபின் ஜெயதேவ் சுவாமி களிக்கடலி லமிழ்ந்தவராய் பகவான் லீலையை அஷ்டகத்தில் அலங்கரித்துப் பாடும்போது ராதாவின் திருவடி பகவான் திருமுடியிலணிந்துக்கொண்டாரென்கிறசொல் தனக்குத்தானே வருவதைக்குறித் தாயாசமடைந்தவராய் வேறு அஷ்டகஞ் செய்ய அதிலு மப்படியேவர இப்படி இருபத்தைந்து அஷ்டகங்கள்செய்ய அதிலு மப்படியே வர இப்படி அதை வெளிப்படுத்துவதற் கச்சமுற்றவராய் மறைத்து வைத்து இப்படி எந்த நூல்களிலாவது பாடியிருக்கின்றதா, ஆராயவேண்டுமென்றும் பெரியோர்களைக் கேட்டறிய வேண்டுமென்றும் அபிப்பிராயங்கொண்டு யாத்திரைசெய்யப் புறப்பட்டார் அதையறிந்த பத்மாவதியும் இராஜனும் கூடவே தொடர்ந்து போகையில் மந்திரிபிரதானிகள் ஜெயதேவ் சுவாமிகளைமறித்து ஓ சுவாமி ரதகஜதுரக நரவாகனங்கள் வேண்டியதிருக்கக் கால்நடையாய்ப் பிரயாணப்பட்டுப் போகலாமோ வென் றுரைக்க ஜெயதேவ் பிரதானிகளை நோக்கிப் புண்ணிய ஸ்தலத்துக்கும் தீர்த்தங்களுக்கும் பெரியோர்கள் தரிசனத்துக்கும் கால்நடையாய்ப் போனலன்றிப் பலனடையக்கூடாது, ஏனெனில் ஓர்வாக்கியத்தால் சொர்க்காதி போகங்களையெல்லாங்கொடுக்கும் உத்தமர்கள் பாதசாரியாய்ப் பலவிடங்களிற் றிரிந்துக் கொண்டிருக்க நானவர்களிலும் மேன்மையானவனே அற்பமான அரசனிடமே மாந்தர்கள் அடக்க ஒடுக்கத்துடன் கால்கள் கடுக்க நடந்துபோவாராயின் மகாத்துமாக்களின் தரிசனத்துக்குப்போகும் நான் ரதசாரதியாய்ப் போகலாமோ வென் றுரைத்துச் சகலபோகங்களையும் வெறுத்து ஏகாந்தியாய்ப் போகும்போது இராசன் மந்திரிகளை நோக்கி நீங்கள் நமது பட்டினத்தைப் பாதுகாத்துக் கொண்டிருங்கள் நான் சுவாமிகளுடன் போய் வருகிறேனென் றுரைக்கப்பிரதானிகள் பஞ்சிபோன்ற பாதங்கள்நோக எப்படி நடந்துபோவீர்களென்று வாட்டமடைய மன்னன் கஷ்டப்படாமல் சுகமும் நஷ்டமில்லாமல் லாபமும் நிஷ்டை சாதிக்காமலின்பமும் கிடைக்கவேமாட்டாது யாத்திரைபலன் வேண்டின சுவாமிகளின் திருவாக்கின்படியே பாதசாரியாய் நடந்தே போகவேண்டும் ஏனெனின் ஓர்காலத்தில் தர்மர் துரோபதையுடன் சந்தோஷமாய் வார்த்தையாடிக் கொண் டிருப்பதைப்பார்த்த அருச்சுனன் அபராதியானேனென் றவ்வபசாரம் நீங்க யாத்திரைசெய்தது பாதசாரியாயல்லவோ பலராமருக்குக் கிருஷ்ண பரமாத்மா செய்த சூதால்கோஹத்தி பாதகமேலிட்டு அது நீங்கப் பாதசாரியாய் யாத்திரைசெய்தது பொய்யா மெய்யா! எனதிஷ்ட தெய்வமாகிய ஸ்ரீகைலாசவாசகர் தனக்குற்ற பிரமத்திநீங்க இப்பூவுலகிற் சஞ்சரித்தது கால் நடையாயல்லவோ ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீராமாவதாரத்தில்காட்டிற் சென்றது கால்நடையா யல்லவோ ஓ மதிமந்திரிகளே! மகாதேவன் வாசுதேவன் நளன் அரிச்சந்திரன் முதலானவர்கள் கால்கள் கடுக்கக் கற்கள் முட்கள்மேல் நடந்திருக்க நான் நடக்கக்கூடாதோ? ஐசுவரியம் நீர்மேலெழுத் தல்லவோ? விரித்துச்சொல்லவோ வென்று மறுத்து இராஜரீகத்தை வெறுத்துப் போகையில் அவர் மனையாளும் கூடவேதொடர்ந்து பலதேசங்களிற் றிரிந்தும் ஜெயதேவை விடாமற்றொடர்ந்து வரும்போது ஜெயதேவ் தன்னுடன்வரும் மூவருடைய கஷ்டத்துக் கிரக்கமுற்றவராய் வாரணாசியையடைந்து காசிவிஸ்வநாதனைத்தரிசித்து அங்கிருக்கும் பெரியோர்களின்பாதங்களைப் பரிசித்து ஓர் மடத்திற் பிரவேசித்து தனக்குற்றசந்தேகநிவர்த்தியாகாததைக் குறித்து வாட்டத்துடன் நித்திரை செய்யும்போது பரமசிவனர் அவர் கனவிலடைந்து ஓ ஜெயதேவ் என்பேரில் ஐந்துஅஷ்டகங்கள் செய்வாயாயினுனக்குற்ற சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறேனென் றுரைந்து மறைந்துபோனர்.

உடனே ஜெயதேவ் விழித்து மிகவுங்களித்து உதயமாவதற்குள் காசிவிசுவநாதர்மீது ஐந்து அஷ்டகங்கள் செய்தார் உடனே காசிவிசுவநாதர் ஓர் பண்டிதனைப் பல மாணுக்கர்சூழ ஜெயதே விருக்கும் மடத்திற்பிரவேசித்து ஓர் பிராம்மணனிடம் சந்தேகநிவர்த்தி சூடாரபண்டிதர் வந்தாரென்றுரைத்துவா வென்றனுப்பினர் அப்பூசுரன் ஜெயதேவிடம்போய் ஓ-ஸ்வாமி சந்தேக நிவர்த்தி சூடாரபண்டிதருமது தரிசனத்துக்கு வந்திருக்கிறர் சீக்கிரம் வாருமையா வென்றுறைய அதுகேட்ட ஜெயதேவ் உதயமாகாததற்கு முன்பே எந்தப் பண்டிதர் வந்தார் அல்லது மகாதேவரே இவ்வுருவோடு வந்தாரோ வென்றதிதுரிதமாய்ப்போய் அப்பண்டிதர் பாதங்களிற் சிரசாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்ய அவரும் வந்தனஞ் செய்து ஜெயதேவ் சயனித்த இடத்திற்சென்று புத்தக மூட்

டையை யவிழ்த்துப் பசவான்பேரிற் பாடிய இருபத்தைந்து அஷ்டகங்களை யெடுத்துக்கொண்டு அவ்வாரணசியிலுள்ள பண்டிதர்களை யெல்லாம் விளித்து அஷ்டகங்களை வாசித்துக் காண்பித்து ஓ-பண்டிதர்களே வேதத்தின் சிரத்தின்மேற் பகவான் பாதங்க ளிருக்கின்றதென ப்பல சாஸ்திரங்கள் முறையிட இந்தஜெயதேவ் பகவான் முடிமேல் ராதாவினடிக ளிருக்கின்றதெனப்பாடி யிருக்கின்றார் இது உங்களுக்குச் சம்மதமா யிருக்கின்றதாவெனப் பண்டிதர்கள் சி-சி இப்படி மூடனும் பாடமாட்டானென்றறைய அவ்வாக்கியத்தைக் கேட்ட ஜெய தேவர் அம்பலக்கூத்தன் சொர்ப்பனத்தில் வந்து நம்மை அம்பலத்தில் வைத்துவிட்டானென நாணமடைந்து ஓ-பண்டிதர்களே! நான் மறதியாய்ப் பாடிவிட்டேன் க்ஷமியுங்களெனச் சந்தேக நிவர்த்தி குடாரபண்டிதர் பற்களைக் காட்டிக் கெக்கலிகொட்டி நகைத்து அடா ஜெயதேவ் மறந்து பாடினு லோரஷ்டகத்திலிருக்கும் இருபத்தைந்து அஷ்டகங்களிலு மிருக்குமா அல்லாமல் மறைந்து மாதாவை மனையாளென் றுரைக்கக்கூடுமோ? நீதானு ஜெயதேவென்னுங் கவீசுவரன் உன் கவி மற்றெந்த தேசத்தில் சிரேஷ்டமடைந்தாலும் இக்காசியில்சிரேஷ்டமடையுமா முக்கால்மூடனை முழுமூடன் கொண்டாடுவதைப் போலக் கல்வியறியாதவர்களியாரோ உனக்குஜெயதேவ் கவியென்கிற பேர்கொடுத்தார்கள், என்கிற பற்பலவார்த்தைகளாடி ஓ-பண்டிதர்களே இந்த ஜெயதேவ் வியாசர் பாடிய பாகவதத்துக் கிழிவுவர வேறு பாகவதத்தைப் பாடினாலும் பகவானு லரங்கேற்றினும் இவைகளெல்லாம் பொய்யாகவேயிருக்கும் அப்படிப்பாடி யிருந்தாலும் அதிலெத்தனைப் பிழைகளிருக்கின்றனவோ எல்லா மிந்த அஷ்டகங்களைக் கங்கையில்விட்டு எதிர்கொண்டேறுவதன்றி கங்கையும் அங்கிகரித்தேனென் றுரைக்காவிட்டால் அப்பாகவகத்தையு மிக்கங்கையிலேயே விட்டு விடலாமென் றுரைக்கப் பண்டிதர்கள் இதுவேசரியென சம்மதித்துச் சீக்கிரஞ் சங்கையில் அஷ்டகங்களை விடுமென்றார்ப்பரித்தார்கள்.

அப்போது பரமசிவனர் ஜெயதேவுடைய சந்தேகஞ் சிக்கிரம் நிவாரணமாம் பொருட்டு அஷ்டகங்களைக் கையிலேந்திக் கொண்டு ஓ-கங்காபவானி உன தமணாளன்மீது பாடியிருக்கும் ஐந்து அஷ்டகங்களிலும் பகவான்மீதுபாடியிருக்கும் இருபத்தைந்து அஷ்டகங்களிலும் பகவான்மீது பாடியிருக்கும் இருபத்தைந்து அஷ்டகங்களிலும் ஓர் தப்பிதமில்லாம லிருக்கின்றது. சத்தியமானல் உனக்குள் விடு மிவைகளை உன் திவ்ய அஸ்தங்களாலெடுத் தென்னிடம் தாருமென்று பாகிரதியில்விட்டார். உடனே அந்த ஐந்தஷ்டகங்களும் கங்கையில் ஸ்நானஞ் செய்து எதிர்கொண்டேறிப் போகையில் கங்காதேவி நமது மணாளன் சடைமுடியைவிட்டு நீங்கி வெகுநாளாயிற்று இன்றைக்கவரைப்பார்க்கும்படியாயும் அஸ்தத்துடன் மதஸ்தத்தைச் சேர்க்கும்படியாயும் இன்று நேரிட்டதிந்த அஷ்டகங்களா லல்லவோ வெனக் களிப்புற்றுச் சுயரூபத்துடன் சகலருக்குங் காட்சிகொடுத்து ஓ-சந்தேகநிவர்த்தி குடார பண்டிதரே அக்ஷரம் வார்த்தையை சீர்முதலானவைகளிற் குறைவில்லாமற் சிறப்புற்றோங்கிய அஷ்டகங்க ளிந்தாருமென் றெல்லாவற்றையு மொரேதரமெடுத்துக் கொடுத்தாள். தமது நாயகர் மறைந்து போவாரென்றும் நெடுநாளாய்ப்பிரிந்த கணவனைப் பலதரம் பரிசிக்கவேண்டுமென்னுங் கருத்தா லொவ்வொரு பத்திரத்தை எடுத்து இரண்டு கரங்களாலும் சந்தேகநிவர்த்தி குடாரபண்டிதர் கரத்திற்கொடுத்துச் சிவ அஷ்டகங்களைந்தும் எனக்குரியதென் றெடுத்துக் கொண்டேனென் றறைந்தாள் அதற்குச் சந்தேகநிவர்த்தி குடார பண்டிதர் ஓ கங்காதேவி பகவான்முடிமேல் ராதாவினடிகளிருக்கின்றதாவெனப் பாகிரதி எனக்குஞ் சம்மதம் மூவர் தேவர் மற்றியாவருக்குஞ் சம்மதமா யிருக்கிறதென்றாள் அதற்கப்பண்டிதர் ஓ-பாகீரதி நீ சிவன் முடிமேலென்றும் அடிகள்வைத் திருப்பவளாதலால் சம்மதித்தாயெனக்குச் சம்மதமில்லையென்று ராதாவினடிகள் பகவான்முடிமே லிருக்கின்றனவெனப் பாடியிருக்கும் இருபத்தைந்து அடிகள் வறைந்திருக்கும் இருபத்தைந்து பத்திரங்களைக் கோபித்தவர்போல் வீசியெறிந்தார் உடனே பகவான் ராதாசமேதனாய்க் கருடவாகன ரூடராய்ச் சகலரும்பார்க்க அந்தரத்தில்நின்று இவ்விருபத்தைந்து பத்திரங்களு மெனக்குரியது மற்றவைகளெல்லா முமக்குரியதென்று கங்கையில்விழாமற் தாங்கிக்கொண்டார். உடனே சந்தேக நிவர்த்தி குடார பண்டிதர் ரிஷபவாகனரூடராய்ப் பார்வதி சமேதராய்க் காட்சிக் கொடுத்தார். அப்போது ஜெயதேவ் ஸ்வாமிகள் பகவானைகண்டு துதி செய்யத்தொடங்கினர்.

எப்படியெனில் அந்தியமில்லாததும் தாண்டக்கூடாததும் காமக்குரோத மோகாதி திமிங்கிலாதிகளால் பயங்கரமாகும் நதியுமாகிய சம்சாரக்கடலைத் தாண்டுவதற்கு ஓடமாகிய அதற்கு சீமை பூமியாகி யிருப்பவனும் உபதேச பரம்பரைகளா லறியப்படத் தகுந்தவனும்

அனந்த சக்தியுக்தனும், தேசகால வஸ்துக்களினுல் கா ணக்கூடாதவனும், உண்மைநாமப் பிரபாவங்களினுலே கர்மயோகஞ் சாதிப்பவர்களுக்கு பலப்பிரதான சக்தி கொடுக்கும்படியானவனும், பிரமாதி சகல ஆத்மகோடி களுக்கும் மேலானவனும், நிரதிசயானந்தரூபனும். பிர மாதிகளைப்போல காலவசியனுகாமல் சகல சக்தியுக்த ளுகி நித்தியமாகி தேஜோமயமாகிப் பிரகாசிக்கும் திவ் வியமங்கள விக்கிரகத்துடன்கூடி ஆனந்த சொரூபியாகி யிருக்குமவனும், பிரதானத்திற்கு சீமைபூமியாகி தேவ வைதிகங்களைப் பரிபாலிக்குமவனுகி, பிரதானமும் ஜீவ னும் பிரளயகாலத்தில் லயிக்கும் ஸ்தானமாகி சகலத் திற்கும் மேலானவனென்றும் சொல்லத்தகுந்தகாரணத் துவ சேஷத்வயுக்தனுகிய ஆகாசாதி விபுதிரவியங்களில் நிறைந்தவனுகி யிருக்கும் ஸ்ரீ விஷ்ணுதேவா! ஜெகத் திற்குக் காரணமாகும் விராடபுருஷனும், அவனுக்குக் காரணமாகும் ஆங்காரமும், அதற்குக் காரணமாகும் மஹத்தத்வமும் அதற்குக் காரணமாகும், பிரகிருதியு மாகி இத்தத்துவங்களினுடைய முக்கிய காரணங்களாகி காரிய காரணரூபமாக அகப்பட்டிருக்கும் சுபாவங்களும் அனந்தங்களுமாகும் ஞானபல ஐஸ்வரிய சக்திரூபசுசில வாற்சல்லிய சௌரிய தைரியாதி சகலகல்யாண குணங்க ளுக்கு இருப்பிடமானவனுகி கிரியா சொரூபங்களினுல் கர்த்ரு சொரூபங்களினுலும் சேதனுசேதனங்கள் யா வையும் ரட்சிக்கிறீர். வேதங்களுக்கதிபதியும் வேதவே தாந்த வெத்தியனும் வேதவேதாந்த சாஸ்திர சொரூப னும் நீயேயன்றி வேறல்ல. சாஸ்திரத்திற் குட்பட்டவ னென்றும், விவேகமதிகரிக்குமென்றும் சொல்லப்படும். இரண்டுவித ஞானங்களும் வேதாத்யயனனுகும் பிர மனும் சுருதி அத்தியயனராகும் மனுவாதிகளும் நீயே பாரபக்ஷங்கள் முதலான தோஷங்களை விட்டவனும் ஜெ னனமில்லாதவனுகி நித்தியனுகும் பரப்பிரமமும் நீயே அப்படிப்பட்டநீ பக்தர்களைப் பரிபாலிக்கும் பொருட்டு அந்தரவீதியில் நாராயண ரூபியாகிப் பிரகாசிக்கின்றாய் ஆகையாலுன்னைசேவித்துசிந்தித்து சரணுகதியடைந்தவ னுகிய என் விஷயத்தில் நற்கிரியாயோகங்களுக்குக் கெடு தியாகும் ராகத்வேஷ லோபமோகாதி துர்க்குணங்கள் சாந்தமாகவேண்டும் என்று பிரம்பாரத்துதி ஜெபித்து நின்றூர். அத்தருணத்தில் மாணுக்கரெல்லாம் ரிஷீஸ்வ ரர்களாய் விட்டார்கள், தேவர்கள் பூமாரிபொழிந்தார் கள், ரம்பையர் நடனமாடினுர்கள், அப்போது பகவான் தன் கரத்திலிருக்கும் இருபத்தைந்து பத்திரங்க ளையும் ஜெபதேவ் கரத்திலளித்து, ஒ ஜெபதேவ்! என் னுடைய மர்மம் உனக்கொருவனுக்குத் தெரியுமன்றி மற்றவர்களா லறிந்துக்கொள்ளுதல் லேசானதோ? நடந் ததையே பாடினுயாதலால் நீர் பாடிய பாகவதத்தையும் அஷ்டகங்களையு மன்புட னனுதினம் பாராயணஞ் செய் வோர்களினிருதயத்தில்வாசமாயிருக்கமனமுவந்தேனிது நிச்சயமென்றறைந்து மறைந்தார் பரமசிவனுர், ஒ ஜெய தேவ்! நீசெய்த சிவாஷ்டகங்களையும் உன் சரித்திரத்தை யும் சிரவணஞ் செய்வோர்களுக் கஷ்டயிசுவரியமுங்கொ டுக்க விருப்பமுற்றே னிது சத்தியமென்றுரைத்து மறைந்தார் தேவரிஷிகள் ஜெயதேவாவென் றன்புட னுரைப்போர்களுக்கு ஜெயமுண்டாகக்கடவதென் ருசீர் வாதம் செய்து தங்கடங்க ளிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு அவ்வாரணுசியிலுள்ள பண்டிதர்களெல் லாம் ஜெயதேவைப் பகவானென்றே தீர்மானித்துப் சகல உபசாரத்துடன் பூசித்துக்கொண்டு வந்தார்கள். ஜெயதேவ் வாசுதேவனையும் மகாதேவனையும் தரிசித்த சந்தோஷத்தாலும் தபமேலீட்டாலும் பகவானைப் பல வாறுகத் துதித்தபடியாலும் நிர்மல மனதுடையவராகிப் பேசுதலும் நடத்தலுங் குறைந்து மனதிலானந்தம் நிறைந்து தன்னைமறந்து திக்கு தேசாதிகளிறந்து பித் தன் உன்மத்தன் சுபாவத்தையடைந்து காடென்று நா டென்று பாராமல் நடந்து ஓர்வேளை சோதிசொரூபமா கவும் ஓர்வேளை அபரூபமாகவும்ஓர்வேளைப்பகவானுருவ மாகவும் பலர் கண்களுக்கு புலப்பட்டுலாவிக் கொண்டி ருக்குங்காலத்தில் பத்மாவதி இராஜனை நோக்கி, ஒ பூபா லனே! ஒதுதற்கரிய சீலனே! ஸ்வாமிகள் தேகஸ்மரணை யின்றிச் சாக்ஷாத்காரத்தை யடைந்திருக்கிறூர் இனி நம் முடன் பேசுவதுந் துர்லபமேயாதலால் நீர்உமது தேசத் திற்சென்று நீதியுடன் அரசாங்கஞ் செய்துக்கொண் டிருமென்றுரைக்கக் கிரவுஞ்சராசன் அவ்வுத்தமியின் பாதங்களிற்பணிந்து, ஒ என் தாயே! கக்கினது பாயாச மானுலும் நக்குவாருண்டோ? அதுபோல அற்பமான ராஜாங்கத்தின்மேல் நிராசையாய் அநித்திய வாழ்வைச் சொர்ப்பனத்திலும் நினையாமல் அற்புதமான மோக்ஷ வாழ்வைக்கோரிய வென்னைஅகற்றலாமோ! தந்தைதாய் தாரம் புத்திரர் மித்திரர்களாதி யரசனும் நித்தியானந் தத்தை யடையப்போமோ? அநித்திய மலபாண்ட தே கத்தைச் சத்தியமென்று நம்பினோர்க்கல்லவோ இராஜ போகம் வேண்டியது. மோக்ஷாபேக்ஷை யுள்ளோர்கள் அற்பமான விஷயபோகங்களைப் பரமென நம்புவார் களோ? நம்பி வெம்புவார்களோ? ஒ மாதாவே! நித்தியா

நித்தியவஸ்து விவேகமறிந்தவர்கள் அநித்யதேகசுகத்தைத்தேடுவார்களோ? இகலோகத்தை நாடுவார்களோ? இகபரயோக விரகமுள்ளவர்கள் சுரலோகாபேக்ஷை கொள்ளுவார்களோ? சத்குரு சேவையைத் தள்ளுவார்களோ? சமாதிநிஷ்டை சம்பத்தியுடையோர்கள் மனதெண்ணப்படி நடப்பார்களோ ? குருவாக்கினையைக் கடப்பார்களோ விஷய வஸ்துக்களைத் தொடுவார்களோ, வைராக்கியத்தை விடுவார்களோ, ஆசிரியரைப் பிரிவார்களோ முனிவு கொள்ள வறிவார்களோ ? சற்சங்கத்தை நீங்குவார்களோ, சன்மசாகரத்துக் குட்பட்டேங்குவார்களோ, முமூட்சுத்வ பாவமறிந்தவர்கள் மோகாந்தகாரத்தில்மூழ்குவார்களோ, ஏகாந்தியாகாமல் வாழ்வார்களோ ஓ என்னன்னையே என்னையும் போகச்சொன்னையே என்றவ் வம்மணியின் றிருவடிகளிற் பணிந்தெழுந்து ஜெயதேவஸ்வாமிகளின் தாள்களின்மேல் வீழ்ந்து, ஓவென்றழத் தொடங்கினர். ஜெயதேவர் அவ்வரசன்மீ திருக்கு மன்பின்மேலீட்டா லுனக்கென்னகுறை நேரிட்டதெனக் கருணையுடன்கேட்டார். இராஜன் பணிந்துரைக்கலானன் கேட்டீர்களோ சித்தர்களேயெனப் பின்னுஞ் சொல்லுவார்.

அஷ்டகங்களை அரங்கேற்றிய அத்தியாயம்

முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

பிரமோபதேச அத்தியாயம்.

---

நாபாஜிசித்தர், ஓ சித்தர்களே! கேளுங்களென்று சொல்லத்தொடங்கினர். கிரவுஞ்ச ராஜனனவன் ஜெயதேவஸ்வாமிகளின் றிருவடிகளிற்பணிந்து, ஓம் நமோ சத்குரு பராத்பரா! சர்வவ்யாபகநிர்விகார ஆனந்தமளிக்குஞ் சர்வேசுவரா! அடியேனை யாட்கொள்ளும் கருணசாகரா உம்முடைய கிருபை ஆகாமியமேசெய்யும் மோகாந்தகாரன் மேல்வருமோ, வந்தாற் பாவனைப் போகமாட்டேனை ஓ அனுதிகாரணு! சர்வபரிபூரணு! எனக்கு வேண்டியது பிரமக்ஞானமேயாதலால் ஆத்மானுபவத்தையே சொல்லி யாட்கொள்ளும்படியா யும்மை மிகவும் வேண்டுகிறேன், ஓ தீனபந்துவே! தினேதினே என்னுயுளந்தகனுக் கிரையாய்ப் போகின்றது ஓடத்திலேறிச் செல்லுமவர்க்கு ஆறும் சுடுமென்கிறபழமொழிப்படியே ஓர் பிரேதத்தைச் சுமந்துகொண்டுபோகுமித்தூலத்தை யோர்நாளொருவர் சுமக்கநேரிடும், ஒரு நிமையிலோ, ஒரு மாத்திரையிலோ, ஒரு விகடிகையிலோ, ஒருசடிகையிலோ, ஒரு முகூர்த்தத்திலோ, ஒரு ஜாமத்திலோ, ஒரு காலையிலோ, ஒரு மாலையிலோ, ஒரு அல்லிலோ, ஒரு எல்லிலோ, ஒரு தினத்திலோ, ஒரு வாரத்திலோ, ஒரு பட்சத்திலோ, ஒரு மாதத்திலோ, ஒரு ருதுவிலோ, ஒரு அயனத்திலோ, ஓராண்டிலோ, தசாண்டிலோ, கனவிலோ, நனவிலோ,காட்டிலோ,நாட்டிலோ,இடியாலோ, கடியாலோ, புலியாலோ, கிலியாலோ, வலியாலோ நலியாலோ, கிடக்கும்போதோ,நடக்கும்போதோ,புசிக்கும்போதோ, வசிக்கும்போதோ, இந்தப்பிராணன்நீங்குமேயல்லது ஸ்திரமல்ல, வெட்டவெளியில் வைத்த விளக்கைப்போலவும், பழுத்த வலையைப்போலவும், கனியைப்போலவும், நீர்மேற் குமிழியைப்போலவும், எழுத்தைப்போலவும், சுழல் காற்றைப்போலவும், பம்பரத்தைப்போலவும், மின்னலைப்போலவும், அறுகுநுனி பனியைப்போலவும், ஒத்த ஆவியை நம்பிப் பாவியாய்போனேன் நிச்சயமில்லா இம்மலவுடலைமெய்யென்று நம்பிப்பொய்யனுப்போனேன் நாயும் நரியும் பேயுங்கழுகும் பிடுங்கித்தின்னும் இப்பிணத்துக்கு மணஞ்செய்து பேதையாய்ப்போனேன். பிரத்தியட்ச நரகமான இத்தனுவுக்குச் சுகங்கொடுத்துப் பலருக்கும் மகவாய்ப் பிறந்தேன் கோதுமையுங் குறுதியென்பும் நரம்புஞ்சதையும் பொருந்திய இவ்வூனை நானென் றஞ்ஞானியாய்ப்போனேன் லவணஞ்சலமல்லவென்றும், பாண்டம்மண்ணல்லவென்றும் ஆபரணம் பொன்னல்லவென்றும், ஆயுதம் இரும்பல்லவென்றும் சொல்வாருண்டா? அதைப்போலவே தேகம நித்தியமென்றும் பிரபஞ்சம் மயேந்திர ஜாலமென்றும் சொல்வதேமெய்யன்றிப் பொய்யென்றுபிதற்றும்பேதையரைப்போலக் கோதுக்குள்ளானேன். மெஞ்ஞான சாதனத்துக்குரிய அரிதானவாயுளை வீணுப் போக்கலமகோ? காலனெப்போதிவ் வாயுள்முடியுமென்றுகாத்துக்கொண்டிருக்கிருன் சூரியனென்னும் நாழியா லாயுளென்னுந் திவசங்களையுண்டு முடிவிற் றன்னையு முண்ணுமெமனுக்குத் தப்பி யிவ்வுலகி லியாருமிருக்கவில்லை. குலைபழுத்தவுடனடியோடும் வெட்டித்தள்ளும் வாழைக்கிணை யான யிவ்வேழ்மை யாக்கையைக் கோழை புத்தியால் மாழைபால் வைத்திருப்பது நலனே? பூராஜரீகம் முதலான வியாபாரத்தாலும் தேகேந்திரிய மனோவிகாரங்களாலும் தேகவாதையாலும் மனோவாதையாலும் சஞ்சலமே மிகுதியாய் வளர்த்துக் கொண்டு வருகின்

றது, பொன்னாசை பெண்ணாசை மண்ணாசையென்னும் ஈஷணத்திரியங்களால் கட்டுண்டு வெட்டுண்டு தட்டு கெட்டுத்தடுமாறித்தலைதெரியாமல்தலைகீழாய்விழுந்துதறி தலையாய்ப் போயினேன். ஒரு நாளும் மும்மைப்போலா னந்தமா யிருந்தறியேன் அஞ்ஞானந்த காரத்தாலும் துன்மார்க்க ருறவாலும் மனோவிச்சையாலும் பஞ்சேந் திரிய வாசையிற் சிக்கிச்சொக்கிச் சம்சாரமென்னும் சாகரத்தி லாழ்ந்தும் தாழ்ந்தும் விழுந்தும் எழுந்தும் அவிந்தும் கரையேறுதற்கோர் துறைகாணமல் வெகுநா ளாயழுதுக்கொண்டிருக்கின்றேன் பந்தமென்னும் பா சத்தாற்கட்டுப்பட்டேன். மோக்ஷார்த்தத்தையே மறந்து விட்டேன் ஆகெட்டேன் அநித்தியமானஅவ்வித வாசை யால் நித்தியத்தைத்தேடாமல் நாசமாய்ப்போனேன் சந்தோஷமோ அணுவளவுமில்லை அனுபவிப்பதோ அள வற்றதொல்லை. ஆனந்தத்தருமநிலையோ தெரியவில்லை நிலைபிரிவதற் கெனைப்போன்றவர்க்கு மிகவுந்தொல்லை. பஞ்சவறிவுள்ள மானிடனாய்ப்பிறந்தும் பூமிக்குப் பார மான மிருகத்துக்கிணையானேன், மிருகமாவதோர் காரி யத்திற்குதவும் நானோ ஒன்றுக்கு முதவாப் பிணமா னேன் மரணமோ புலியைப்போல் பயங்காட்டிக்கொ ண்டு முன்னிற்கின்றது மரணத்தை நினைத்துக் கொண் டாலோ கிடுகிடென்று நெஞ்சம் நடுநடுங்குகின்றது பிறக் கும்போதுள்ள துன்பத்தைவிட இறக்கும்போதாயிரம்பங் கதிகமான துன்பமிருக்கு மென்பதற்கோர் சந்தேகமே யில்லை. இது கவனத்தில் வந்தாலோ இருதயம்பிளந்துப் போகின்றது. பிரமக்ஞான மில்லாதார்க்குச் சனன மரணத் துன்பமொழியாதென் றனேக சாஸ்திரங்கள் முறையிடுகின்றது புருஷஜென்மமாய் நரபதியாய்மெய்ஞ் ஞானத்தை யறியும் விவேகியாய்ப் பிறந்தும் அகண்டா னந்தத்தைத் தரும்படியான கருணாநிதியாகிய உம்மைச் சரணாகதியடைந்தும் பவத்தைநீக்குஞ் சிவத்தையடை யும் மார்க்கந் தெரிந்துக் கொள்ளாமற் போனால் இனி யெப்பிறப்பில் மெய்ப்பொருளைச்சேர்ந்து இப்பிறவிகளை நீக்கிக்கொள்ளப்போகிறேன் ஓ ஸ்வாமி! நிஷ்காமிசிசுவுக் குத்தாயும் விருட்சங்களுக்குச் சலமும், பத்தர்களுக்குத் தெய்வமும்,ஜீவர்களுக்குணவும், பிரஜை களுக்கிராசனும் தரித்திரர்களுக்குப்பிரபுவும், பகலுக்குச்சூரியனும், ராத் திரிக்குச்சந்திரனும்,தர்மத்துக்குச்சாந்தமும்வீரனுக்குத் தைரியமும் வேந்தனுக்குப் படையும், சதிக்குப் பதியும், பதிக்குச்சதியும்தபத்துக்குவைராக்கியமும்திடத்துக்குச் சிரவணமும், சன்மபாசத்துக்கு நிராசையும், ஸ்திரீகளுக் குக்கற்பும், புருஷர்களுக்குக் கல்வியும், கல்விக்குச் சீவகாருண்யமும், மந்திரிகட்கு உத்தியும், வியாபாரி கட்குத் திரவியமும், உலகத்துக்கு மழையும் துணையா யிருந்து விளக்குவதைப்போல் அடியேனுக்குத் தாங் களே துணையாயிருந்து காக்கவேண்டுமன்றி வேறுவழி யில்லை ஏனெனின், அனேக சாஸ்திரங்களைவாசித்தும், இஷ்டதேவதையைப் பூசித்தும், பெரியோர்களை நேசித் தும், அன்பால் விசுவாசித்தும், வறியன்போல் யாசித் தும், பேரின்பத்தையே ஆசித்தும் ஒரு நிமையானாலும் சஞ்சலமற் றானந்தமாயிருந்தறியேன் ஆதலால் பிர்மமே ஒருருவான தேவரீரே என்னை யானந்தக்கடலில் ரமித் திருக்கச் செய்யவேண்டுமென்று கண்ணீர் விட்டழுது பலதரந்தொழுது பயபக்தியுடன் நிற்கும்போது கருணா நிதியான ஜெயதேவ் சுவாமிகள் இவனதி தீவரப்பக்குவ முடையோ னென்றறிந்து மார்புடனணைத்துக்கொண்டு, ஓ வேந்தனே! உபசாந்தனே! சக்கரையெனச் சொல்வ தால் மதுரந்தோன்றுமா? அன்னமென் றுரைப்பதால் பசி நீங்குமா ? பாகீரதியென்றறைவதாற் பாபநிவாரண மாகுமா? தீபமென்றிசைப்பதா லிருணீங்குமா? கிரியா பக்தியால் நானற்றுப்போகுமா? வேதாந்தமென்றிசைப் பதால் சகல சந்தேகங்களும் நிவர்த்தியாகுமா? மந்திர மென்றோதலால் சித்தியுண்டாகுமா? அவுஷதமெனச் சொல்வதால் பிணிநீங்குமா குருவெனப்பகர்வதால் கிரு பையுண்டாகுமா? தெய்வமெனச் செப்புதலா லன்புண் டாகுமா? அதைப்போலவே வாசக்ஞானத்தா லானந்த முண்டாகுமா? ஓ ராஜசிரேஷ்டனே! மோட்சாபேக்ஷை யுள்ளவனுக்கு முன்னம் வைராக்கியமல்லாக்ஞானம் நிஷ் பிரயோசனமாய் முடியும் ஆனால் வைராக்கியங்களும னேகவிதமுண்டு, அதேதெனின் சாஸ்திரங்களைக் கேட் கும்போது மாத்திரம் அப்படியிருக்கவேண்டும் பாபஞ் செய்யவேகூடாது புண்யமே செய்யவேண்டி பகவானைத் தியானிக்கவேண்டுமென்று நினைப்பது, புராண வைராக் கியம் பிரேதத்தைக் கொண்டுபோகும்போது மாத்திரம் என்னவாழ்வு, என்ன சுகம், என்ன சம்சாரம் எல்லாம் நிஷ்பிரயோசனம் பிரபஞ்சம் இந்திரஜாலத்துக் கிணையா னதுஎன்று நினைப்பது மசானவைராக்கியம், வேதனைப் பொறுக்கமாட்டாமல் இனி புருஷனைப் புணரவே கூடா தென்றுறுதியாய் நிச்சயஞ் செய்துக்கொள்ளும் ஸ்திரீ யைப்போலக் குடும்பத்தி லோர் சங்கடம் வருங்காலத் தில் இகபோகங்களில் துன்பமேயன்றி இன்பமணுவளவு மில்லையாதலால் இவ்வாழ்வைநீக்கிப் பேரின்பத்தையடை

ய வேண்டுமென்று நிச்சயித்துக் கொள்வது பிரகூத வாக்கியம். சம்சாரத்தில் கலகம் நேரிட இனி யிவர்களு டன் கூடியிருப்பது கூடவே கூடாதென் றயல்நாட்டை யடைந்து கோபமேலீட்டால் தனியனா யிருப்பது சலன வைராக்கியம் அக்கிரமஞ்செய்த இவர்களைவெட்டி இர ண்டு துண்டாக்க வேண்டுமென்கிற குரோதங்கொண்டு தன் பிரதிக்கினையை முடித்துச் சன்யாசியாய்ப் போவது மூடவைராக்கியம் எச்சையான பதார்த்தங்களைப்புசித்து போகபாக்கியங்களி லமிழ்ந்து சோம்பலின்றி இரவும்பக லுமுழன்று எதிர்த்தவர்களை வென்று யாதொன்றுக்கு மஞ்சாதவனாய்க் கர்வமடைந்திருப்பது இராக்ஷஸ வை ராக்கியம். பரமசிவன் தன்னையடைந்த பிர்மஹத்தியை விஷ்ணுவாலகற்றிக் கொண்டதால் நாராயணனே ஆதி தெய்வமென்றும் திருமாலும், பிரமாவும் அடிமுடியைத் தேடிக் காணாததால் பரமசிவனே ஆதிதெய்வமென்றும், எங்களுடைய சமயத்திற் பிரவேசித்துக் காரணகுரு வைத் தொழுதவர்களுக்கே மோக்ஷமுண்டென்று தேவ தைகளை தூஷிப்பது, மதவைராக்கியம்,காரணகுருவைத் தேடி அவரருளால் தனதெதார்த்த ஸ்வரூபத்தையும் பிரமத்தையு முணராமல் காரியகுருக்கள் போதிக்கும் நானென்பது விர்த்தியடையும் நிலைகளில் நம்பிக்கை வைத்திருப்பது அஞ்ஞான வைராக்கியம் அநித்திய மல பாண்டதேகத்தை என்றைக்கு மழியாமல் வைக்கும் பொருட்டுக் காயகற்பங்களைப்புசித்துப் பிராணவாயுவை யடக்கி நாதாந்தவசமாகிச் சோதியைத் தரிசித்து முடி வில் சூனியபாவத்தையடைவது அடவைராக்கியம், வே தாந்தசாஸ்திரங்களைச் சத்குரு முன்னிலையில் விசாரித் துப் பிரபஞ்சம் நித்தியமென்றும் தான் நித்தியமென் றும் பிர்மமே தானென்றும் எல்லாம் பிர்மமென்றும் திடப்பிரக்ஞையால் ஆனந்த வசமாகும் ஞானநிஷ்டை யைச் சாதிக்காம லிருமாந்திருப்பது அபலவைராக்கியம் என்றும் இன்னம்பல அஞ்ஞான வைராக்கியங்களிருக் கின்றது இதனாற் கற்பகாலங்களிலு மானந்தமடையக் கூடாது. ஏனெனின், நானென்னும் மதமானது மதத் தையே தருமன்றி இதத்தையும் சமமதத்தையும் ஒரு நாளுந்தராது. ஞானியானவன் ரணக்களத்தில் தன்னை யெதிர்த்தவ னெவனானுமவனை யெதிர்த்துச் செயம் பெறும் அதிசூரனைப்போலவும், நியாய சபையில் உற் றோர் மற்றோர் எளியோர் வலியோரென்கிற பாரபக்ஷம் பார்க்காமற் றீர்க்கும் சத்திய நியாயாதிபதியைப் போல வும், சகலரும் சம்மதிக்கும் சம்மதமான ஞானமார்க்கத் தைக் கண்டிப்பாயுரைக்க வேண்டுமன்றி பக்தியில் சகல ருக்குஞ் சமமாகப் படையாது அநீதனைப்போலவும், ஈ யெறும்பு முதலான ஜீவர்களிடத்துச் சமபாவம்பார்க் காத அஞ்ஞானியைப்போலவும், தன்மக்கள் பிறர்மக்க ளென்று சிசுக்களிடத்திற் றுவிதபாவமாய்ப் பார்க்கும் லுத்தனைப்போலவும், பிறர்மானம் தன்மானமென்று நினையாப் பாவியைப்போலவும், தன் சிவனைப்போலவே அந்நிய ஜீவர்களைப் பார்க்கா அசடனைப்போலவும், பூஷ ணைக்கு மகிழ்ந்து தூஷணைக்குக் காதுகொடா அவிவே கியைப்போலவும், மனதிலொன்றும் வாக்கிலொன்றுமா யிருக்கும் குரோதியைப்போலவும், சைவமேமுக்கியமெ ன்றும் வைஷ்ணவமே பிரதானமென்றும் சொல்லக்கூ டாது ஏனெனின், ஆயிரம் ஞானிகளின்மார்க்கம் ஆயிர விதங்களாயிருக்கும் ஜாக்கிர சொப்பன சுழுத்தி துரியம் துரியாதீதமென்னும் ஐந்தவஸ்தைகளும் சகல ஜீவர் களுக்கும் பொதுவா யிருக்கின்றது.

இவ்வவஸ்தைக ளைந்தையும் சத்குரு முன்னிலையில் நன்றாய் விசாரித்தறிந்தா லொழிய ஞானமார்க்கந் தெரி யாது, ஞானமில்லாதவர்க்கு நானென்பதற்றுப் போ காது, நானென்ப தற்றுப்போவதே ஞானமென்றுரைக் கத்தகும். ஞானமில்லாப் பத்தியும் சித்தியும் ஞானமில் லா வைராக்கியமும் யோக்கியமும் சூக்ஷமில்லாத் தியா னமும் மோனமும் ஓர் பிரயோசனமுங் கொடுக்காது மோக்ஷமென்பதை லேசிலடைவதற்கு ஞானவைராக்கி யங்கள் முக்கியமாய் வேண்டும். அதாவது அணுமுதல் பிரமாண்ட பரியந்தம் பிரமமே நிறைந்திருக்கிறதென் றும், பரிபூரணமாகிய பரப்பிர்மத்தைவிட நானென்பது வேறில்லையே இல்லையென்றும், என்றும் இருப்பது பிரம மென்றும், நானென்னும் அகம்பாவத்தையும் எனதென் னும் மமபாவத்தையும் தலையெடுக்காமல் தவளையை யுண்ணும் சர்ப்பத்தைப்போலப் புசித்துவிடுவது பூரண வைராக்கியம், கானற்சலத்துக்கிணையான பிரபஞ்சத்தை சுத்தமாய் மித்தையென்றுன்னி ஸ்திரீயாதி போகங் களைக் காகந்தி னெச்சத்தைப்போலெண்ணி மனதில் வருகிற நினைப்புகளையெல்லாம் மாய்த்துக்காமகுரோதிக ளென்னும் கள்வரை அடியோடும் வெட்டிச் சாய்த்துக் குடும்பத்தை விர்த்திசெய்ய வேண்டுமென்கிற ஜீவேச் சையைத் தேய்த்து ஆனந்த சமுத்திரத்தில் கருவிகரணா திகளைத் தோய்த்துத் தன்னையறிந்து பிர்ம்ம மாத்திரமா யிருப்பது எதார்த்த வைராக்கியம், ஆசாரியர்மேலதிகப் பிரீதியுடையவனாய் எப்போதுஞ் சாதுக்கள் கூட்டத்தை விடாமலனுசரித்துச் சந்ததம் தான் பிர்ம்மமென்று மன

னம் பண்ணி சரீரபாவனையை நீக்கிச் சங்கல்ப விகல்பங்களைப் போக்கி பாமரத்தைத் தூளாக்கி அகமுகத்திற் பரப்பிரமத்தை நோக்கித் தன்னைப்பிர்மத்துக்குள்ளாக்கி நிர்விகல்பனாய் அகண்டானந்த நிராமயமான சாட்சியாயிருப்பது சத்பாவ வைராக்கியம் கர்மங்களெல்லாம் குணங்களாற் பிரவாத்திக்கின்றது நானே குணாதீதன் கர்மபக்தி யோகங்களாலோர் பிரயோசனமுமில்லையென்று நீரேதுவாய் ஒன்றையுங் கேட்கா வாக்கு மௌனமும் ஒன்றையும் நினையா மௌனமும் ஒன்றையுமிச்சிக்கா ஜீவமௌனமும் பெற்றுச் சமாதி நிஷ்டாபரனாயத்வைதமாயிருப்பது அபாவவைராக்கியம், எல்லாவற்றையுஞ் சொற்பனமாய் நினைத்துச் சுகதுக்கநிதனாய் த்விதியுக்த சந்துஷ்டனாய் நானீயென்னுந் துவிதபாவமில்லாதவனாய்த் தானே தானாய்ப் பிரபஞ்ச வெத்தனத்தைத் தள்ளி பிரவபிக்ய வெத்தனமே மேலிட்டுச் சொப்பனத்திலும் இஃபோகங்களை நினையாமலிருப்பது ஸ்தாபன வைராக்கியம் சுக துக்கமயமான சரீரம் பிராப்தாதீதமென்றும், பிராப்தப்பயனே சுகதுக்கமென்றும் தேகபோஷணையையும் தேகபீதியையும் விடுத்து விதி நிஷேதங்களைத் தள்ளித் துக்கமும் சுகமும்வந்தாற் சமமாய்ப் பாதுகாத்துச் சகல சந்தோஷங்களையும் பேர்த்துத் துரிய திருஷ்டியை மேவியிருப்பது திடவைராக்கியப் பிராப்தமென்னும் ஆசனத்தின்மீ துறுதியாயிருந்துக் கொண்டு ஞானக்கினியால் அஞ்ஞான ஆபரண விக்ஷேபாதிகளைப் பஸ்பமாக்கிக் காலபயத்தை நினைக்காமல் பித்தன் உன்மத்தன் சிசு இராஜன் சுபாவத்தை யடைந்து நிர்த்தொந்தனாயிருப்பது விச்சிரம வைராக்கியம் ஆலஸ்யம் நித்திரை நிந்தஸ்துதியை விட்டுத் தேகஸ்மரணை கெட்டு அகண்ட சிரவண மன்னங்களாற் பூர்த்தியடைந்து பரமாத்மாவி லைக்யமாய் மவுனமாயிருப்பது சம்மத வைராக்கியம். பேரிடி விழுந்தாலும் பயப்படாமல் நான் விநாசன் அவிசேஷன் அதுலன் அசலன் அனுமயன் பரிபூரணன் ஆதலால் எனக்கு மரணமேது ஜனனமேது பாவமேது புண்ணியமேது நரகமேது மோக்ஷமேது எனக்குள்ளாகவே இப்பிரபஞ்சம் முழுமித்தையாயுதித் தொடுங்குகின்றதென்று நிற்சலனமாயிருப்பது விசார வைராக்கியம். யாதொரு வியாகுலமுமில்லாமல் பிர்மம் ஜர்வ சனவனுதி அதற்கே துபாதியென்று நிர்ப்பந்த நிர்ச்சிந்தனாய் அயிக்கிய சுபுத்தியுடையவனாய்ப் பிரமம் நிர்விகாரம் நமக்கேது விகாரம் என்று கமலநாபரூபத்தைக் கெடுத்துச் சுயம்புவாய்ச் சாவகாசமாய் ஒரே நிதானமாய் நிவாத தீபம்போலவும், நிஸ்தரங்க சமுத்திரம்போலவும் இருப்பது நிர்வாண வைராக்கியம் என்றனேக ஞான வைராக்கியங்கள் சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்றன. இது ஞானயுக்தி வைராக்கியம் இதனால் வஸ்துலாப பாக்கியம் வஸ்துலாபத்தால் வரும் சிலாக்கியம். தரும் மேலான யோக்கியம் யோக்கியர்க்குரைக்கத் தகுந்தது மகா வாக்கியம் மேற்சொன்ன ஞான வைராக்கியங்களன்றி மற்ற வைராக்கியங்கள் விட்டடம் நம் உத்தண்ட கல்பநம் என்றும் சொல்லப்படும் எதெது மனோவாக்குக் கோசரமாயிருக்கின்றதோ அதுகளெல்லாம் கற்பிதமென்றே நினைக்கவேண்டும். மனோ வாக்குக் கோசரமாய் வேதாதீதமாய் மூவரும் தேவரும் மற்றியாவரும் போற்றும் பொருளான தெதுவோ முகபாவத்தைக் கொடுக்கும் வஸ்தெதுவோ அதுவே சத்யக்ஞானனந்த நித்ய நிர்மலமாயிருக்கும்.

பிரப்பிர்மமென்றும், பரப்பிர்மமே ஆதிதெய்வமென்றும், இதில் ஐக்யப்பட்டவர்க்கேஆனந்தமென்றும் ஆனந்தமே மோக்ஷமென்றும் சொல்லப்படும். சந்திர கிரணத்தைப் புசித்துத் திருப்தியாகும் சகோர பட்சியைப்போல ஞானரசனையான பிர்மானந்தத்தைப் புசித்துத் துரிய பூமியில் வசித்து நானென்பது நசித்துத் தேகேந்திரியங்கள் முசிந்து பரப்பிர்மத்தி லைக்யப்பட்டு இளைப்பாற்றியிருத்தலும் எழுதலும் மறந்து பிர்மானந்தம் நிறைந்து நடத்தலும் பேசலுங் குறைந்து தேக பிமானத்தையுந் துறந்து சொஸ்தனாய்ச் சகோரபட்சிக் குணவாகியும் எங்கும் சீதள பிரகாசமாய் நிறைந்திருக்கும் சந்திரனைப்போல உனக்குள்ளே குளிர்ச்சியடைந்து அந்தக்கரணாதிகளுக்குஞ் சீதளத்தைத் தந்து குறையாமல் பரிபூரண ஸ்வரூபமாகிப் பிரபஞ்ச மயமாகாமல் அதிருப்தனாயிருப்பாயாப்பாவென்ற பரமாசாரியராகிய ஜெயதேவ சுவாமிகளின் திவ்விய திருவருடாட் டாமரைகளிற் பணிந்து, இருகண்களையு மணிந்து இவரே பரமேசுவரனெனத் துணிந்து நானென்னு மகங்காரந் தணிந்து, ஓ என் சத்குருராயனே! மதுரமொழிகளை யுரைக்கும் வாயனே! இவ்வுலகிலுள்ளசகலருமேற்றுந்தாயனே! என்னைப்போன்ற எளியோர்களுக்கு மிகவும் நேயனே! இப்படிக்குப் பதார்த்தமாய்ச் சன்னல் பின்னலாய் திருவாய் மலர்ந்தருளினால் முழுமூடனாகிய அடியேன் தெரிந்துகொள்வதெப்படி யென்று இராஜன் பிரார்த்திக்க, அதற்கு ஜெயதேவ சுவாமிகள் சொல்லுகிறார், ஓ அரசனே! பிரஜைகளுக்குள் ஸரஸனே! பிரமானந்தத்தை விரும்பினவன் முன்னம் சகுணமாகிய திரி மூர்த்திகளை யாவது நிர்க்குணமாகிய பரப்பிர்மத்தையாவது அன்பாயுபாசிக்கவேண்டும். இதனால் அக்கினியில் வீழ்ந்த சருகைப்போலச் சகல ஆகாமிய பாபங்களும் பஸ்பமாய்ப் புண்ணியம் மேலிடும்.

இப்புண்ணிய மேலீட்டால் அநித்தியமாகிய சம்சாரம் துன்பமாய்த் தோன்றுவதன்றி நித்தியமான மோக்ஷமார்க்கத்தைக் காட்டும். சத்குரு தரிசனங் கிடைக்கும். அந்தச் சத்குரு நாதனுக் அன்புடன் பணிவிடை செய்வதால் பெருங் காற்றுற் சிதறிப்போகும் மேகத்தைப்போலச் சஞ்சித கர்மங்களெல்லாஞ் சிதறுண்டு போகும். இதனு லதிக சந்தோஷமுண்டாகும்பின்பாசாரிய ருபதேசிக்கும் மகா வாக்கியத்தை ஏகாந்த ஸ்தானத்திலிருந்து தைலதாரைபோற் றியானிக்கவேண்டும் இதனுற் காற்றில்லா விடத்துள்ள தீபத்தைப் போலச் சகல சஞ்சலங்களும் நீங்கி ஏகாக்ரசித்த முண்டாகும் பிறகு சத்குரு முன்னிலையில் தேகத்தையும் இதிலிருக்கும் துவாரங்களையு மிதனுளுலாவும் சுவாசத்தையு மிதினிலிருந் ததிக்கு மந்தக்கரணங்களையு மிவைகளை யெல்லாம் நானென்றிருக்குஞ் ஜீவனையு மிதனுக் காதாரமான சுத்த சூன்னியமாகிய அஞ்ஞானத்தையும் ஜாக்ராவஸ்தையில் கருவிகளின் சேஷ்டையையுஞ் சொப்பனத்தில் மனக்கூத்தையும் சுழுப்தியிற் சூனியத்தையு மறிந்து கொண்டிருக்கும் சாட்சியாகிய தானும் இப்படியே சுராசரங்களிலுஞ் சாக்ஷியாயிருக்குஞ் சர்வ சாக்ஷியாகிய பிரமமும் ஒன்றேயெனக் காட்டும் மகாவாக்கியார்த்த சிரவணஞ் செய்யவேண்டும். இதனுற் சூரியோதயத்தால் நீங்கு மிருளைப்போ லஞ்ஞானம் நீங்கிப்போம். பின்பு தேகம் நித்தியம், நாம் நித்தியம், இந்திரியங்கள் துக்கமயம், நாமானந்தமயம், அந்தக்கரணஞ் சலன சுபாவம், நாம் நிர்சலன சுபாவம், வாயு தேகத்துக்காதாரம், நாம் சமஸ்தத்துக்காதாரம், ஜீவன் நானெனு மபாவம், நாம் நானென்றபாவம், அஞ்ஞானம் சுத்த சூன்யம், நாம் அகண்ட பரிபூரணமென்று மண்கேத்தின் கண்டத்தைப் போலவும், சிசுக்களினுச்சியைப்போலவும், மானிடர்களிருதயத்தைப போலவும் சமாதானம் பண்ணவேண்டும். இதனுல் தீர்ப்பானபின் வாதியின் சந்தேகமற்றது போலச் சகல சந்தேகங்களுந் தலையெடுக்காமற் சாகும் பிறகுதேகாதிகள் நாமல்லாததால் நமக்குத் தர்மாதர்ம பந்த மோட்ச ஜராமரணங்கள் முக்காலத்திலு மில்லை. பல துளிகளுங் கூடி வெள்ளமானது போலச் சகல சாட்சிகளின் கூட்டமே சர்வ சாட்சியாகிய பிரமமென்றும், பிரமமே சாக்ஷிஸ்வரூபமாகியநானென்றும் ஜனனமில்லா வெனக்கு மரணமேதென்றும், ரூபமில்லாவெனக்கு விகாரமேதென்றும், சங்கல்பமில்லா வெனக்கு விகல்பமேதென்றும், மரணமில்லா வெனக்குப் பயமேதென்றும், எங்கும் பரிபூரணமாயிருக்கும் எனக்குத் தேசமேதென்றும்,முக்காலத்திலுமோரியல்பாயிருக்கும் எனக்குக் காலமேதென்றும், என்றைக்கு மழியாமலிருக்குமென்பால் முன்னும் பின்னு மித்தையான இந்திரஜாலவித்தையைப்போன்ற இப்பிரபஞ்சம் முழுமித்தையென்றும் என்றுமழியாதிருக்கும் பிரமமே நானென்பதற்குச் சந்தேகமே யில்லையெனத் திடமாய் நிதித்தாசனத்தாற் றெளிக.

இதனுல் தீபமேற்றியபின் சர்ப்பபயம் நீங்கிப் பழுதையென்று காலாற்றள்ளி விடுவதுபோலப் பிரபஞ்சம் மெய்யென்றும், தேகர்தானென்றும், பந்தமோட்சங்களுண்டென்றும் நினைக்கச்செய்யும் விபரீத பாவனையொழிந்துபோம் பிறகு தேகமிருந்தாலென்ன, மரித்தா லென்ன காட்டிலிருந்தாலும் நாட்டிலிருந்தாலும் பிராப்தாதீனமான இத்தூலம் சுகத்தையும் துக்கத்தையும் அநுபவித்தே நீக்கவேண்டு மென்றும் பலதர மிச்சித்து நினைத்தாலும் வராது வரவே வராது பலதரம் வேண்டா மென்று நிக்கிரகித்தாலும் போகாது போகவேபோகாதென்றும் நிரேதுவாய் சகல இச்சைகளுமற்று புற்றினுள்ளிருந்து புறப்படும் ஈசலைப்போல் உள்ளத்தி லிருந்துதிக்கும் சங்கல்பங்களை இந்திரியங்களின் வழியாய்ச் செல்லாமல் மீனையுண்ணுங் கொக்கைப்போலுண்டு இச்சையென்னும் மடுவிலிருக்கும் நினைப்பென்னும் மச்சங்களையெல்லாம் நாசஞ்செய்து இச்சையின் வழியால் மனதைச்செல்லாமல் நிக்கிரகித்து நிஸ்தாங்க சமுத்திரத்தைப்போ லசைவற்றுக் கூடஸ்தம் பிரமமாத்திரமாயிருப்பது சமாதியென்று சொல்லப்படும். இதனுற் கழுத்திியிலுண்டாகுஞ் சுகத்தைப்போலக்கன் டானந்த முண்டாகும். இப்போக்கொத்த எல்லையில்லாச் சுகானந்தக்கடலிற்படிந்து தன்னைமறந்து தலைவனிற்கலந்து திக்குதேசாதிகளிறந்து திருக்ப ஸ்வரூபத்திற் கறைந்த எங்கணும் நிறைந்து முகபாவத்தை யடைந்து தானின்னனென்றுந் தெரியாமல் சுத்தா சுத்தத்தையுங் குறியாமல்பேசுவது முண்ணுவதும் சொர்ப்பனத்திற் கண்டுங் காணுத காட்சிபோலுணர்ந்து முணராமல் பேயன் பித்தன் உன்மத்தன் சிசுவைப்போலாகி அரிஹராதிகள் பிரத்தியட்ச மானுலும் மாயாமயனென்றறிந்து தலைபரிவதுந் தெரியா ஆனந்தாவேசம் மேலிட்டு ஜாக்கிரசுழுப்தியின் நிலைமைமேவி பிரமமாத்திரமாயிருப்பது சாக்ஷாத்காரம் இதனுற்கற்புள்ள கன்னிகைக்குச் சாயுச்சியங் கிடைப்பதுபோலச் சாலோகசாமீப சாரூப சாயுச்சியமென்னும் நாலு பதங்களுக்கப்பாற்பட்ட ஐந்தாம்பதமாகிய ஆனந்த மாத்திரமான கைவல்லியங்கிடைக்கும். ஆதலாற் சகலபற்றுக்களுமற்ற இராஜனே சிறப்புற்ற போஜனே பிர்ம்மமே இஷ்டதெய்வமென்றும் தெய்வமே சதகுருவென்றும் குரு சேவை

யே சகலகிரியைகளென்றும் குருவுபதேசமே வேதமென்றும் வேதமுடிவே வேதாந்தமென்றும் வேதாந்தசிரவணமே மோக்ஷமார்க்கமென்றும் மோக்ஷேச்சையே தபோபலமென்றும் தபோபலமே மனனமென்றும் மனனமே நித்தியாசனமென்றும் நித்தியாசனமே சமாதி நிஷ்டையென்றும் நிஷ்டையே சாக்ஷாத்காரமென்றும் சாக்ஷாத்காரமே பிர்மமென்றும், பிர்மமே ஆனந்தமென்றும் ஆனந்தமே முக்தியென்றும் நிச்சயமா யறிந்துக்கொள்ள வேண்டுமென்று பின்னுஞ்சொல்லத்தொடங்கினர்.

ஓ நரபதியே முக்கியமாகப் பரமாசாரியர் மீதும் இஷ்ட தேவதையின்மீதும் சிரவணர்த்தங்களின் மீதும் சிரத்தை பூர்ணமாயிருக்க வேண்டும் பரமாசாரியர் மீதிருக்கும் சிரத்தையானது பரமக்ஞானத்தைக்கொடுக்கும் இஷ்டதேவதை மீதிருக்கும் சிரத்தை பாபவிமோசனமாக்கும் சிரவணர்த்த சிரத்தை யல்லாதவனுக்கு ஞானம் லபிக்கமாட்டாது எப்படி ருதுவாகாக்கன்னிகைக்கு கர்ப்பந்தரிக்காதோ அப்படியே சிரத்தை யில்லாதவனுக்கு ஞானர்த்தம் மனதிற்றரிக்காது சிரத்தையே ருது உபதேசமே பிந்துஞானமே கர்ப்பம் ஆனந்தமே சிசு வென்றுரைக்கத்தகும். குரு கிருபையில்லாவிட்டால் சிரவணாதிகள் பலிக்கமாட்டாது. தன்னை மறக்கிற பரியந்தம்மேற்சொன்ன மூன்றினிடத்திலும் சிரத்தை பூரணமா யிருப்பவனுக்கே பிர்மானந்த முதயமாகும் எப்போது ஆசாரியருடைய பரிபூரணக்கிருபைபெறுவானோ அப்போதே உதயமாகும் ஞானப்பிரகாசம் அற்றுப்போகும் அஞ்ஞானபாசம்விஸ்தரிக்கும்ஆத்மவிலாசம் இருக்காதுசிந்தனம் லவலேசம் சஞ்சித கர்மங்களாய்ப்போகும் நாசம் தன்னை மறக்கச்செய்து விடுமப்பா பிர்மோபதேசம் சகலபற்றுக்களு மற்றுப்போகும்படிச் செய்யும்பார் சாதுக்கள் நேசம் இவ்வளவு மேன்மையானதுபார் குரு விசுவாசம் ஓ இறைவனே தேகம் சேதனம் மூடசடம் நீ நித்திய சுக்ஞானசேதனம் தேகம் கண்ட ரூபநாமம் நீ அகண்டபரிபூரண நிரூப நிர்நாமம் தேகம் விகாரபலதுக்கம் நீ நிர்விகார நிர்மலானந்தம் முத்தனுன வுனக்கேனினி தேகாபிமானம் உன்னுடைய ரூபமென்றைக்கு மொரேநிதானம் உன்னை யிப்படியார் செய்யப்போகிறார்கள் சமாதானம் உன்னுடைய ரூபமியாராலுஞ் சொல்லுதற்கரிய மோனம் இதுவே வேதமுடிவான யதார்த்தக்ஞானம் மற்றவைகளெல்லாம் மூடக்ஞானம் முகபாவத்தை யடைந்திருப்பதே பிர்மத்தியானம் தற்சுதந்தர மற்றிருப்பதே ஆசாரியருக் களிக்குந்தானம் நானென்ப தற்றவர்க்குமுண்டோ ஈனம் நானற்ற பிர்மத்தியானியோ மூவர்க்குஞ் சமானம் நானற்ற பேர்க்குண்டு நாரதாதிகளின் சன்மானம் ஓ மன்னனே தேகத்தை நடப்பித்து பிராணனை நடப்பித்து ஜீவன், ஜீவனைவிளங்கச்செய்வது ஆத்மக்கியானம் ஆதலால் தேகாதிகளை நானல்லவென்றே இருக்கவேண்டும் பிராப்தாதீனமான இத்தேகத்தைக்குறித் தனக்கக்கரை யென்ன தேகாபிமானத்தை இன்றுடன் விட்டுவிடு உன்னை நீயே நன்று பாராய்ந்துப்பார் தனக்குளாராய் பவர்க்கே எல்லையற்ற ஆனந்தமுண்டாகும் தேகாதிகளை அசைவற நிறுத்தினவனுக்கு நித்திரானந்தம் வந்தடைவதுபோல் துரிய திருஷ்டியைமேவிப் பரமமாத்திரமா யிருப்பவர்க்கே ஆனந்தோதயமாகும் நித்திரையானது தன்னைமறக்கச்செய்வதுபோல ஆனந்தநித்திரை உன்னை மறக்கச்செய்யும் நீ முக்காலத்திலும் முக்தனுகவேயிருக்கின்றாய் இனிமேற்சங்கைசெய்வாயானாற்பந்தத்துக்குட்பட்டுப்போவாய் திரிகுணங்களும் திரிகுணசேஷ்டைகளும் பஞ்சபூதங்களும் பஞ்சகர்த்தர்களும் மாயையால் நிர்மாணிக்கப்பட்டது மாயையோ மித்தையால் நிர்மாணிக்கப்பட்டது நீயோ சர்வசாட்சி இவைகளையெல்லாஞ் சாட்சியாயிருந்தறிகிற உனக்கு மாயையும் த்ரிகுணங்களும் பஞ்சபூதவிகாரங்களும் ஒருகாலத்திலுமில்லை நீ பிருதிவி, யப்பு வன்னி, வாயு, வாகாசங்களிலும் நிறைந்திருக்கும் பிர்மமேயாம். இவ்வித வைக்கிய வித்விதானுபலத்தினாலே நானென்னுஞ் சீவபாவ மொழிந்துபோ மென்கிற பற்பல வேதாந்த ரகசியங்களுரைத்தது ஓ-பூபதியே இந்த அனுபவமே நான்குவேதத்திலும் வசிஷ்ட சங்கிதை, சூதசங்கிதை, பகவத்கீதை, ஆத்மகீதை, ராத்மகீதை, உத்தரகீதை, ரிபுகீதை, குருகீதை, பாண்டவகீதை, பிரமகீதை, அஷ்டவக்கிற கீதையிலும், வேதவியாசருரைத்த பதினெட்டுப்புராணங்களில் தச்சிபுராணங்களிலும் நான்கு விஷ்ணுபுராணங்களிலும் உபய மர்ம புராணங்களிலும், சூரியபுராணம், அக்கினிப் புராணங்களிலும், கணபதி புராணம், சக்தி புராணம் முதலான புராதன புராணங்களிலும் சொல்லியிருக்கிறதை தப்பென்று மதபேதத்தால் திரஸ்கரிப்பவர்களுக்கு ரௌரவாதி நரகமே பிராப்தியாகுமென்றறைந்து இராஜன்முதலனைவரும் நம்பும் பொருட்டு ஸ்ரீ காசிவிஸ்வநாதர் சன்னிதானத்தின் முன் சென்று முன்னம் ஏகம் நாராயணம் துவிதம் நாஸ்தியெனச் சத்தியம் செய்ததுபோலவே ஏகம் பிர்மம் துவிதம் நாஸ்தியெனச் சத்தியஞ்செய்தது போலவே ஏகம் பிர்மம் துவிதம் நாஸ்தியெனச் சத்தியஞ்செய்தமாத்திரத்தில் ஸ்ரீகாசிவிசுவநாதரும்விசாலாட்சியம்மையும்திருக்கோயிலிலிருந்து பலரும் பார்க்க வெளிப்பட்டு இதுவே வேதமுடிவான யதார்த்தமென் றறைந்து ஜெயதேவருக்குபல ஆசீர்வசனங்கள்புகன்று அந்தர்த்தானமானர்.







விருத்தம்.

என்னுளே விளங்கியெங்கு மேகமாய் நின்றசோதி
நின்னுளே யடங்குமிந்த நீணிலத் துயிர்கட்கெல்லா
மன்னையா யப்பனுகி யருந்தெய்வங் குருவுமான
நின்னையான் சரணடைந்தே னீசனே நேமிகையா.

உடனே பகவான் கருடவாகன ரூடராப் லட்சுமி சமேதரா யங்கெழுந்தருளி ஜெயதேவை ஆலிங்கனஞ் செய்து இதுவே இதுவே என்வாக்கினுலுரைத்த பகவத்கிதா பிரமாணம் இதுவே சத்தியம் இதுவேநித்திய மென்றறைந்து மறைந்துபோனர் அப்போது நாரதாதிமுநீசுவரர்களெல்லா மங்கெழுந்தருளி இதுவே வியாசருவாரத்த பாகவதத்தி னந்தரங்கமென் றுரைத்து ஜெயதேவ் மீது புஷ்பங்களையிறைத்து ஜெய ஜெயவென் றறைந்து கொண்டே மறைந்தார்கள். பின்பு இராஜனும் ஜெயதேவும் மற்றவர்களும் வாரணாசியிலிருக்கும் பண்டிதர்களிடம் விடைபெற்றுக்கொண்டு தங்கள் நாட்டைபடைந்து பிர்மநிஷ்டையி லெழுந்தருளி ஆனந்தமா யிருந்தார்கள். ஓ-சித்தர்களே இன்னம் ஜெயதேவர் சரித்திரம் மத்தியில் வருகிறபடியால் முடிவுபெற வில்லையென்று நாபாஜி சித்தர் திருவாய்மலர்ந்தருள உத்தவசித்தர் முதலானவர்களும் பணிந்து ஆ! ஆ! என்ன ஆனந்தமான கதையைச்சொன்னீ ரிச்சரிதையைக் கேட்டுக் களிப்படையாதவர்களுமுண்டோ வென்கிற பற்பல வார்த்தைகளாடி உத்தவசித்தர் நாபாஜி சித்தரைவணங்கி ஓ-மாதவனே ஜெயதேவ ஸ்வாமிகள் கைகால்கள் வெட்டுண்ட காரணமேதோ தெரியச்சொல்ல வேண்டுமெனப் பணிவாகக் கேட்க நாபாஜிசித்தர் துக்காராம் சரித்திரத்தில் இதன் விபரம் வருகிறதெனச் சித்தர்கள் வணங்கிச் ஓ-சுவாமி உண்மையான பிரமக்கியானந் தெரியாமல் சிலர் விஷ்ணுவே பரதெய்வமென்றும் சிலர் பரமசிவமே ஆதிதெய்வமென்று மூறைக்குங் காரணமேதென்று பணிய அதற்கு நாபாஜிசித்தர் சொல்லுவார் முக்குணங்களில் சாந்தகுணம் முதன்மையாதலால் சாந்தகுணனை விஷ்ணுவே பரப்பிரமமென்றும் பஞ்சபூதங்களில் பிருதிவியம்ஸனை பிர்மாவிலும் ஜலாமஸ்ஸன் விஷ்ணுவிலும் தெய்வாம்ஸமான பரமசிவமே மேன்மை யானதால் ருத்திரனே பிரமமென்றும் சொல்லப்பட்ட தானுலும் விஷ்ணுவே பிர்ம்மசொரூபப் பரமசிவன் பிர்ம்மமென்றும்சொல்லுங்காரணம் சாந்தகுணத்திற் பிரதிபலித்த பரப்பிரமமே விஷ்ணுவென்றும் தமோகுணத்திற்பிரதிபலித்த பரப்பிரமமே சதாசிவமென்றும் வேதாந்தங்கள்முறையிடுவதால் இருவரையும் பிர்மமென்றே சொல்லத்தகும்.

ஆகையால் இச்சந்தேகங்கள் இனியுரைக்கும் கபீர்தாஸ் முதலானவர்களுடைய சரித்திரங்களாலேயே நிவாரணமாகுமெனத் திருவாய்மலர்ந்து இனி உங்களாசீர்

மங்களுக் கெழுந்தருளுங்களென விடைகொடுத் தனுப் பிப் பிர்மானந்தத்திற் படிந்திருந்தார். இந்தச் ஜெயதே வர் சரித்திரத்தை அன்புடன் அனுதினம் பாராயணஞ் செய்வோர்களும் சிரவணஞ் செய்வோர்களும் வாச்தே வன் மகாதேவன் கருணையும் பிரமக்ஞானமும் சாந்த குணமும் அஷ்ட ஐசுவரியமும் பெற்று சுபமங்களத் துடன் வாழ்வார்கள்.

பிரமோபதேச அத்தியாயம்

முற்றிற்று.

## சிவபக்தர்வாக்கியம்.

அஞ்சலென்றகரதலமுங் கணபணகங்கணமும்
அரைக்கிசைந்த புலியுடையு மப்புலிச்செஞ்சடையும்
நஞ்சமுண்டமணிமிடறு முன்னூலுமார்பும்
நலந்திகழ்வெண்ணீற்றொளியு மறிமான்மழுவும்
கஞ்சமலர்ச்சேவடியுங் கருணைமொழிமுகமும்
காமனையன்றெரித்ததிருக் கண்களொருமூன்றும்
பஞ்சடிசிற்றிடைமடந்தை யொப்பனைபாகனுமாய்ப்
பால்வண்ணனுளத்திருக்கப் பயமுண்டோவெமக்கே.

## என்றுரைத்த பதிக்கவர் சதியுரைத்த வாக்கியம்.

ஆக்கையெனும்புழுக்குரம்பை யணைந்தழியாப்பொருளை
அருளொளியைப் பராபரத்துக் கப்புறமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்கு மிடமறநின்றிலங்கும்
நிறைந்து நின்றபெருவெளியை நினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தத் தவக்குறைகண்மூடிக்கும
பழவடியார்க்கருளுதவும் பசுந்துணர்கற்பகத்தை
வாக்குமனவிகற்பத்துக் களவுபடாவொன்றை
மாசற்றபெருவெளியை மனவெளியிலடைப்பாம்.

## வாழி சந்த விருத்தம்.

பூமிமுதலைம்பூதம் பூரணமாய்வாழ்க
பொறிகளைந்துநெறியிலகும் புண்ணியர்கள்வாழ்க
நாமிங்குதுதிசெய்ஜெய தேவர்புகழ்வாழ்க
நற்சரிதையைச்சொல்லு நாபாஜிவாழ்க
நேமிபுகழ்மாரிமுத்துப் பிர்மம்வாழ்க
நீடுமிச்சரிதைதனக் குதவினர்கள்வாழ்க
ஆமிந்தசதுர்வேத சித்தாந்தசபையோ
டருள்வாக்குவேங்கட தாசனும்வாழ்க.

ஜெயதேவஸ்வாமிகளின் சரித்திரம்

முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீ பாண்டுரங்க விட்டலாய நம:

# ஸ்ரீ மகாபக்த விஜயம்.

## இரண்டாவது

# கபீர்தாஸ் சரித்திரம்.

துதி கவி.

தாயாரகட்டிற் பிறக்காதோன் தரையினம்போ லிறக்காதோன்
மாயாவிலாசந் தனைக்கடந்தோன் மனையாடன்னை யயலானுக்
காயாசமிலா தடியர்க்கா வளித்தோன் றனுசன் றலையரிந்தோன்
தூயோன் கபீரானந்தனை நாந்தொழுது வினைக்கு விடைகொடுப்பாம்.







முதலாவது

## கபீர் உற்பத்தி அத்தியாயம்.

திருமால் சக்கரத்தைப்போ லிவ்வுலகைச் சூழ்ந்திருக்கும் திரைகள் வீசும் கடலிலிருந்து சூரியோதயமானதும் உத்தவசித்தர் முதலானவர்களும் திவ்வியமான சந்த்ரபாகாநதியில்ஸ்நானஞ்செய்து ஜபதபங்களை முடித்துக்கொண்டு கபீர்தாஸ் முதலான பிர்மஞ்ஞானிகளது சரித்திரங்களை வடமொழியிற்செய்து அதனாலிவ்வுலகிலுள்ள மானிடர்களை ஈடேற்றும் பிரமாம்ஸனை திரிகாலங்களை உணர்ந்த நாபாஜிசித்தரிடம்போ யவருடைய திருவருட் கமலக்கழல்களுக் கனந்தம் வந்தனந்தந்து, ஒ மாதவனே! சுகாவதாரமான கபீர்தாஸ் சரிதையைத் திருவாய் மலர்ந்தருளி எங்களைப் புனிதராக்குமையா வென்று வணங்கி நிற்க,

நாபாஜிசித்தர் அகமுமுகமுமலர்ந்து சகஸ்த்ரார மான ஆக்னேய சக்கரத்தில் வளியையேற்றி ஒளியைப் போற்றி ஒளியும் திரிசியமென்றகற்றி பரவெளியாகி ஆனந்தமாத்திரமா யிருக்கும் சித்தர்களே! எனக்குகந்த பத்தர்களே! மூவரையுந் தேவரையும் மற்றியாவரையும் விழுங்கிபுமிழா மாயையைக்கடந்த சுகப்பிர்மரிஷியி னவதாரத்தைக்கேட் டுளங்களியாதவரு முண்டோ? ஓ தன்யர்களே, மிகவுங்கண்டர்களே, தேகமென்னு மரணபூமியில் விஷயங்களென்கிற பதாதிகளையும், இந்திரியங்களென்கிற வீரர்களையும், அந்தக் கரணங்களென்கிற சேனுதிபதியையும், எண்ணங்களென்கிற துரகங்களையும், மதமச்சரங்களென்கிறகரிகளையும் மானபிமானங்களென்கிற ரதங்களையும், இச்சையென்கிற சாரதிகளையும், ஜீவத்வமென்கிற அரசனையும், ஞானமென்னும் பாணத்தைத்தொடுத்து, கண்ட துண்டங்க ளாகும்படி விடுத்து தன்னெதிரில் வராமற்கெடுத்து, ஆனந்தத்தை யடுத்து ஆத்மாமாத்திரமாயிருக்கும் முத்தர்களும் பாசமென்கிற நாட்டைவிட்டு ஆசையென்கிற வீட்டைச்சுட்டு காமமென்கிற ஸ்திரீயை நீங்கி நிஷ்காமமென்கிற ஸ்திரீயுடனேங்கி நீந்தலென்கிற மார்க்கத்திற்சென்று ஏகாந்தமென்கிற வனத்தினில் கூடஸ்தபிர்மமேதானுகி தேகாதிகளுக்குக் கோளுதியிருக்கும் சுத்தர்களும் வாழுமிடமாகிய சகலரும் புகழும்படியான கங்காதீரமாகிய காசி தேசத்திலிருப்பவர், பாவிகளை மிகவும் வெறுப்பவர், சஞ்சலமனதை யறுப்பவர், மேல்விழ்ந்தடிக்கப்பொறுப்பவர் நித்தியசத்தி நிர்விகார நிராங்கார வஸ்துவாகிய பரப்பிர்மத்தை பரிசுத்த மனதுடன் ஐந்துவேளையு மிடையரு அன்புடன் தியானஞ்செய்பவர் * மோசலமா முனிவராலேற்படுத்திய துலுக்கர் குலத்திலுற்பவித்தவர் தமாலென்னும் பேருடையவர் விசாலமான வீடுடையவர், தான் ஜீவ இம்சைசெய்யும் துடுக்கர் குலத்தி லுற்பவித்திருந்தும் தன்னுயிர்போல் மன்னுயிரைப் பார்க்கவெண்ணி எந்நேரமுங் கடவுளைப் பஜனைபண்ணி நமது ஜீவனம் ஜீவ இம்சையில்லாமல் எத்தொழிலால் நடக்குமென்று யோசித்து, வஸ்திரம் நெய்யுந் தொழிலிலே நலமென்றுலோசித்து நன்றாய் நெய்வோருடன் நேசித்து யாவர்க்கு மிது நல்லதொழிலென் றுபதேசித்து வேறு தொழில்களைத் தூஷித்து நல்லயோசனை வந்ததெனச் சந்தோஷித்து பீதாம்பரம் நெய்வோரைப் பூஷித்துப் பரம்பிரம்ம சங்கீர்த்தனங்களைக் கோஷித்து நாணயமாய் நெய்புந் தொழிலைக் கற்றுக்கொண்டு தனது நாயகியையும் செய்யும்படியாய் விண்டு கொல்லாவிரதமே நல்ல விரதமென்று ஞானவழியிற்சென்று அஞ்ஞான மனதைக்கொன்று கடவுளே நமக்குத் துணையென்று நாமென்னு மாங்காரத்தை வென்று பழவர்க்கங்களை மென்று அன்னம் பருப்பே தின்று சாதுக்கள் சங்கமேநன்று மற்றவர்களுறவு நன்றன்று எல்லா சமயத்துக்கும் தெய்வம் வொன்று எனப்புகன்று இல்லறத்தில் நல்லறத்துடனிருந்து சாதுகளுக்கடிக்கடி விருந்து அன்பாய்ச்செய்து அகம்பாவத்தைக்கொய்து ஏழைகள்மேற் கருணைமழை பெய்து ஏழைகளை வருத்துவோரை வைது நெய்யுந் தொழிலால் திரவியஞ் சேகரித்து, லோபகுணத்தைத் திரஸ்கரித்து, சதாகாலமுஞ் சாதுக்கள் பணிவிடை செய்துகொண்டிருக்கிற தருணத்தில்,

ஓர் மகாத்மா இவர்கள் செய்யும் பணிவிடைக் குகந்து இவர்களுக் கெல்லாப் பாக்கியமிருந்தும் புத்திரபாக்கிய மில்லாக்குறையால் சற்றுத் தாழ்வடைந்திருக்கிறார்களென் றன்பின் மிகுதியால் தமால் மனைவியாகிய ஜிஜ்ஜாபீயை நோக்கி, ஓ அம்மா புண்ணியவதி! உனக்கு முப்பத்திரண்டு லட்சணங்களும் ஈஸ்வர பக்தியும் பிர்மக்ஞானமுமுள்ள ஓர் புத்திரன் கிடைக்கக் கடவனென்ருசீர்வதித்துத் தன்னிருப்பிடம்போக ஜிஜ்ஜாபீபி மிகவும் மனமகிழ்ந்து பெரியோரைப்புகழ்ந்து தன்பதியிடம் வந்து வந்தனந்தந்து ஓ சுவாமி! யாரோ ஓர் மகாத்மா எனக்குப் புத்திரசந்தான முண்டாகும்படி ஆசிர்வதித்துப்போனர் அவர் வாக்கியப்படியே நமக்குப் புத்திரபாக்கிய முண்டாகுமாவென்று கேட்க அதற்குத் தமால் பெருநகைபுரிந்து ஓ பெண்ணே! என்னிருகண்ணே! உனக்கெவ்வன பருவங்கடந்து விருத்தாப்பிய பருவம் கடந்து வருகின்றது இனி யுனக்குப் பிள்ளை பிறக்குமா, உனக்குற்ற எண்ணமிறக்குமா? அப்படி குழந்தை பிறந்தாலும் குழவியால் மோக்ஷமடைவோமா? ஆனந்தம் பெறுவோமா? பாவங்கள் நசித்துப்போமா? இகவெண்ணங்களிறந்துபோமா? இல்லையே—நீ நினைத்திருப்பது தொல்லையே? நாணமின்றி யுதைத்தாயிச் சொல்லையே? நீ மோக்ஷமடைகிறவளல்லையே? அடி பாவையே பூவையே நமக்குரிய மைந்தன் கொல்லாவிரதமே யாதலால் ஜீவகாருண்யத்தைக் கடைபிடித்தொழுகவென்றுரைக்க,

அதற்கு ஜிஜ்ஜாபீபி ஓ என்பிராணவல்லபா! தெய்வவாக்குப் பொய்த்தாலும் பெரியோர்கள் வாக்குப் பொய்க்காதே? பொய்த்தால் பெரியோர்களென்று சொல்லலாகாதே! அப்படியிருக்க நீரிப்படி சொல்லலாகுமாவெனப்புகல, அதற்குத்தமால் அடிமானே! இன்பந்தருந் தேனே, பெரியோர்கள் வாக்கும் வேதவாக்கும் மண்

* மோசலமா முனிவரா லேற்பட்டவர்களே மொசல்மான்கள்.

ஞானை பொன்னாசை மகவாசை முதலானதுந் துறக்க வேண்டுமெனச் சொல்லியிருக்க பிள்ளை பிள்ளையென்று பிதற்றுகிறாய் பெரியோ ராசிர்வாதஞ் செய்தாலும் நமக்குப் பிள்ளை பிறக்கவே பிறக்காது போ போ (பேதமைபென்பது மாதர்க் கணிகலம்) என்னுஞ்சொல்லி, நிலைநிறுத்தினையென்று நவில, அதற்கு ஜிஜ்ஜாபீபி ஓ என் பிராணநாயகா, எனக்காசிசெய்த பெரியோர் வாக்கியப்படி நமக்குப் பிள்ளைப்பேறுகிடக்கும் நடவாக்காரியமும் நல்லோரால் நடக்கும். ஏனெனில் முன்னம் ஓர் பெரியோரால் ஒரூர் தலைகீழாழ்ப் போனதும் (மன்சூரென்றும்) புண்ணியவானழைக்க சூரியனோர் பர்வதத்திலிறங்கினதும் இறந்துபோனகுழவி யுயிர்பெற் றெழுந்ததும் உண்மையல்லவா? சாதுக்கள் மகிமையை விரித்துச் சொல்லவா வென்றுரைய அதற்கு தமால் அடி கோதையே, அறிவில்லாப்பேதையே, இகவாசை நீத்தவர்களே புனிதர் மற்றவர்க ளீனமனிதர் என்றுரணத்தில் முறையிடுவதறிந்தும் இகவாசையான மகவாசையைக்கோறினை வேத வாக்கியத்துக்குமீறினை மலையைக்கெல்லி எலியைப் பிடிப்பதுபோல, நெடுநாளாய் என்னுடன்கூடிகடவுளைத் தியானஞ்செய்தும், இகவெண்ணங்களைக் கொய்தும், துச்சமான இச்சைக்குட்பட்டாய் மகாத்து மாக்கள்பால் கேட்டுக்கொள்வது அநித்தியப் பொருளையா? நித்தியப் பொருளையா? (எண்ணறக்கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தி) என்கிற பழமொழி யுன்னிடத்திற் பிரத்தியக்ஷமாய்க் கண்டேன். சீ சீ புத்திரவாஞ்சையை யிக்கண மகற்றிவிடென்றுரைத்து தனக்குரிய தொழிற் செய்யப்பட்டு நூலையேந்திக்கொண்டு கெங்கைகரையிற்சென்று பட்டு நூலின் சிக்கை வாங்கிக்கொண்டிருக்கையில்,

பிள்ளை பேற்றுக்காக அனேகர் கங்கையில் ஸ்நானஞ்செய்து பாகீரதியை நோக்கி, ஓ கங்காபவானி! எங்களுக்கு மகப்பேறுண்டாகும்படியாய் வரமளிப்பாயென்று தோத்திரஞ் செய்கிறதைக்கேட்ட தமாலாச்சரியப்பட்டு ஆஹா குழந்தைகளுக்காக எவ்வளவு க்ஷ்டப்படுகிறார்கள், மகவாசை மகா பெரிதென்றே சொல்லவேண்டுமா இதனாலேயே நமது மனைவி வெகுநேரந் தர்க்கஞ் செய்தாள். க்ஷணபங்கமான இம்மலவுடலைமெய்யென்று நம்பி இழிவான குழவியாசையால் குழம்பும் ஜீவர்களினஞ்ஞானத்தை குழைந்தமந்தபுத்தியை எந்தவிதத்தினாலும்போக்குவதரிதல்லவா? ஓதெய்வமேமோகாந்தகாரக் குகையிற் சிக்கியிருக்கும் ஜிஜ்ஜாபீபியுன்றிருவடியடைவதெப்படி? என்னகாரணத்தாலவளுக்குப் புத்திரபாக்கியமில்லாமற் செய்தாய்? குழப்பமுள்ள மனைவியாளுடன் கூடி வாழ்கிறதைப்பார்க்கிலும் செழிப்புள்ள அடவியிற் போய் தியானஞ்செய்வதே யுத்தமமல்லவா? என்றனந்தம் விதங்களா யோசித்துக் கொண்டிருக்கையில்,

கையிலிருந்த பட்டுநூல் நழுவி கங்கையிலடித்துக் கொண்டு போயிற்று. அதுதெரிந்த தமால், அடா! நம்முடைய பேய்த்தனம் பட்டுநூ லிழந்துவிடச் செய்தது புத்திரனா லென்னபேற்றைப் பெறப்போகிறாள். புத்திரர் பிறப்பது மிருப்பது மிறப்பதுந் துன்பமேயன்றி இன்பமில்லவேயில்லை அஞ்ஞானிகள் கோறும் நித்தியப் பொருளை மெஞ்ஞானிகள் வெட்கமின்றி வேண்டுவார்களா அன்பாய் மகவைத் தீண்டுவார்களா பன்றியுடன் சேர்ந்த கன்றுங் கெட்டதுபோல் பாமரரைப்பார்த்து வைராக்கியத்தைத் தோற்று வட்டிக்காசைப்பட்டு முதலிழந்ததுபோல் பாலன் யோசனைபாற் பட்டுநூலை யிழந்தேன், வீணெண்ணத்தாற்குழைந்தேன் இப்பட்டுநூலால் ஐம்பது பகிரிகளுக் கன்னமிடலாமே, பிரம்மானந்தத்துட்படலாமே என்கிற யெண்ணத்துடன் நூலைக் கண்டெடுக்க கங்கையோரமாய்ப்பார்த்துக்கொண்டே மனித சஞ்சாரமில்லாக் காட்டிற்பிரவேசித்து, ஆஹாஇதென்ன பேரையாற் பேருற்றதுபோ லிருக்கின்றது அற்பமான பட்டுநூலாசையாற் கால்கள் நோவநடந்தேன் கானகத்தை யடைந்தேன், ஆயாசத்தாலிடைந்தேன், வேத வாக்கியத்தைக் கடந்தேன், சீ சீ காட்டையடைந்த நாமினி நாட்டையடைவது மாசையே மனக்குறையுள்ள மாதுடன் கூடிவாழ்கிறதைவிட வனத்திலிருந் தரிதானதவஞ் செய்கிறதே உத்தமமென்றுஅங்கிருக்குமோர் பர்னசாலையில் பிரவேசித்து மெய்ப்பொருளை யாசித்து இரு கண்களையும்மூடி பரப்பிர்மத்தைநாடி பலசங்கீர்த்தனங்களைப் பாடி கடவுளுக்குவாடி தபஞ்செய்யத் தொடங்கினர்.

கேட்டீர்களோ சித்தர்களே, தமாலிப்படி யுத்குருஷ்டமான தபத்திலிருக்கும்போது வைகுந்தத்தில் ஸ்ரீமந்நாராயணர் சுகப்பிரம்ம ரிஷியை நோக்கி, ஓ மாயாதீதனே, தனைமறந்த அவதூதனே, நாமனைவரும் யோசித்தபடியே நீ இந்தக்ஷணம் புண்ணிய க்ஷேத்திரமான வாரணாசியிற்போய் ஜீவகாருண்யத்தையே விரதமாகப் பூண்டு நெய்யுந்தொழிலாற் சீவனஞ்செய்யும் மிகவும் புண்ணியவானான தமால் மனைவியின் கர்ப்பத்திற்றங்கி ரிஷிபிண்டத்தைப்போல் ஓர்முகூர்த்தத்திற்குள்காசினியிலுள்ளோ ராச்சரியப்படும்படியாயும் அவதாரஞ் செய்வாயென்றுக்யாபிக்க, அதற்கு சுகர் பகவானைப்பணிந்து, ஓ என்னாண்டவனே, என்னைத் தூர்க்கந்தமான கர்ப்பத்

திலிறங்கி ஜென்மித்து மயங்கி மாயையிற்சிக்கி வாட்டத் தாற் சொக்கி இஷ்ட தெய்வமாகிய உம்மையும் அகமம தையை மாற்றும் பிர்மக்ஞானத்தையும் மறந்து அஞ் ஞானம் நிறைந்து தேருருளையைப்போல் பலஜென்மங்க ளெடுத்துழலும்படியாய் யுக்தி செய்தீரோ ? உமதாசிர் வாதத்தா லடியேனுமுமது மாயையைச் சற்றறிந்தவனே உலகிலுள்ள ஜீவர்களை இரட்சிக்கும்படியான கருணை யுமக்குப் பூரணமாயிருக்குமாயி னுமது மாயை யென் னுந் திரையைச் சற்றே நீக்குவீராகி லக்கணமே சகல ஜீவர்களும் பிர்மக்ஞானத்தால் மோட்ச மடைவார்கள் மத்தியிலிப்படி செய்பக்கூடாதென்று லடியேனுக்குத் தரவுகொடு மிக்கணமே யிவ்வுருவுட னகிலத்திற்போய்ச் சகலருக்குஞ் சாந்தகுணரான உம்முடைய திவ்ய திரு நாமங்களின் மகிமையையும் மமதகங்காரத்தை மாற்றும் பிர்மக்ஞானத்தையும் போதித்து வருகிறேனென்று வணங்கும்போது,

பகவான் சுகயோகியை நோக்கி, ஓ மாதவனே! எந் தெந்த யுகத்தி லெந்தெந்த விதமாகயுலகத்தை ரட்சிக்க வேணுமோ அந்தந்தயுகத்தில் அந்தந்தபடி யவதரித்து, இரட்சிக்காமல் உன்னெண்ணப்படி செய்தால் விபரீதத் துக்கிடமுண்டாகும். அன்றி, நீ இவ்வுருவோ டகிலத் திற்சென்றால் வித்தியா சம்பந்தமுள்ள சிலர்கள் நித்தி யத்தையே கோருவதன்றி பட்சிமுகத்தோடு நிர்வாணி யாயிருக்கு முன்னைப் பரியாசமே செய்வார்கள். மேலும் கலியுகதர்மத்தை நீ யறிந்தவனேயன்றி அறியாதவ னல்ல, மூவர் தேவர் முனிவருருவங்களான விக்கிரகங் களை நீக்க இரசிக்கும்படியான துடுக்கர் உம்மை முடுக் காமலெளிதில் விடமாட்டார்களாதலா லென்வாக்கியப் படி நடந்துக்கொள்வதே யுத்தமமென்றும் திருவாய் மலர்ந்தருள அதற்கு சுகர் ஓ பகவானே! என்னுயிர் நீங் கினு முதரத்தில் மாத்திரம் பிரவேசிக்க மாட்டேனெ ன்று சாற்ற, அதற்கு ஸ்ரீமந்நாராயணர் ஓ சுகமுனியே நான் வாமனவதாரத்திலும், பரசுராம, ஸ்ரீராம, கிருஷ் ணாவதாரத்திலும் ஓரோர் புண்ணியவதி கர்பத்திலிருந் தவதரித்தது நீ யறிந்ததுதானே, அல்லாம லிப்போது நானும் அரனயனுதிசத்தியும் ஓர் புண்ணியவதியின்கர்ப் பத்திலிருந் தவதாரஞ்செய்ய யோசித்திருக்கிறோ மிதி லுனக்குச் சந்தேகமிருக்குமாகில் அவர்களையுங் கேட்டுத் தெரிந்துக்கொள்ளுமென்று அம்மூவரும்வரும்படியாய்ச் சிந்திக்க, உடனே சிவனயனம்பிகையும் வைகுந்தத்திற் கெழுந்தருளி பகவானிடம் க்ஷேமவார்த்தைகள் பேசிய பின் சுகரைநோக்கி, ஓ புண்ணியவானே! ஈண்டிவ்வாண் டவன் புகன்ற வாக்கியப்படியே நாங்களோர் கன்னியி னகட்டிலிருந்தவதரிப்பது சதயமெனப்புகல, அதற்குச் சுகர் மூவரையும் வணங்கி, ஓ யான்தொழுந் தெய்வங் களே! நீங்கள் மாயாவிளையாட் டுடையவர்களாதலால் துர் கந்தமான கர்ப்பத்திற் பிரவேசித்தாலும் சேற்றிலுற்ற பூச்சியைப்போல நிர்மலமாகவே யிருப்பீர்களன்றி சர் வக்ஞமுள்ள தேவரீர்களெப்படி உற்பவித்தாலு முற்ப விக்கலாம் கிஞ்சிற்று வறிவுள்ள அடியேன் மாயையினுட் பட்டபின் மாயையைச்செயிக்க வல்லமையிராது முன்ன மோராம்பையை யனுப்பி பரிசோதித்ததின்னும் மறந்து போகவில்லையென்றுதொழ அதற்குப் பகவான் ஓ சுக முனியே! நீர் சிறு குழவியாய் கங்கையிற் பிரவேசித்து காட்டிற் றவஞ்செய்யும் தமாலுக்குக் குழவியாய்ப்போம் நாங்களு மவதாரஞ்செய்கிறோமென்றுக்யாபிக்க, அதற்கு அரிதாஸனாகிய சுகர், ஓ பகவானேஅடியேன் கான்முளை யா யுலகிற்சென்று பிரமக்ஞானத்தையே முக்கியமாய் ஸ்தாபிக்கட்டுமா உமது திருநாமத்தையே ஸ்தாபிக்கட்டு மாவென்று வணங்க, அதற்கு மூவரும் பவானியும், ஓ முனீஸ்வரனே, நிர்க்குணமான பரப்பிர்மத்தைத் தியா னஞ்செய்தும் துலுக்கரை சகுணத்தால் வெல்லக்கூடா தாதலா லவர்களை நிர்க்குணத்திலேயே வென்றுசகுணத் தையும் நிர்க்குணத்தையு முலகத்தில் ஸ்தாபித்து ஜீவர் களை ரட்சியுமென்று கூற.

அதற்கு சுகர் நிர்க்குணமென்பதுயெது அதனை யடியேனுக்குச் சவிஸ்தாரமாகத் தெரியச்சொல்லவேணு மென்று பணிய பகவான் முதலானோரும் சொல்லுவத ற்கு யோசனை செய்யும்போது பகவான் மற்றவர்களு டைய கருத்தையுணர்ந்துசுகரைநோக்கி, ஐயா சுகமுனி வரே! நிர்க்குணத் தியானமென்ப தெப்படியெனில், நிர் மல, நிர்விகற்ப, நிரஞ்சன, நிராதார, நிரூப, நிஷ்களங்க, நிர்ப்பேத, நிர்ச்சேத, நிர்நாம, நிஷ்காம, நிர்க்குண, நிரா ங்கார வஸ்துவாகிய பரம்பிரமத்திலக்கியமாயிருப்பதே நிர்க்குணம். அப்பரப்பிர்மம் பொன்னைப்போலவும் மண் ணைப்போலவும்பஞ்சைப்போலவும்அயத்தைப்போலவும் கல்லைப்போலவும் சொர்னத்தைப்போலவும் நிரூபமாகி யும் பிரமப்பிரளயத்தி லழியாததாயும் எங்கும் நிறைந் திருப்பதே பிர்மமாகும். அப்பிரம மில்லாவிட்டால் மாயையேது அத்திரிகுணப் பிரதி பிம்பரான திரிமூர்த் திகளேது, ஒருவருமேயில்லை, மேலும் அகண்டம், அக ண்டசகனம், அசலம், அனந்தம், அபரமேயம், சின்ம யம், தேசோமயம், சித்விலாசம், நித்தியம், சத்தியம், நிஷ்களானந்தம், பரப்பிர்மம், பரமேஸ்வரம், சயம், துரி யம், துரியாதீதம், விஸ்வம், பூரணம், விசுவாததம், விம

லம், விசேஷம், வேதாதீதம், சுபம், சுப்தரம், சுயம்பிரகாசமும் பொருந்தியதெதுவோ அதுவே சத்தியக்ஞானனந்த நித்திய நிர்மலமாயிருக்கும் பரப்பிரம்மமென்றும் அப்பரப்பிரமமே ஆதிதெய்வமென்றும் இதிலைக்கியப்பட்டவர்க்கே ஆனந்தமென்றும் ஆனந்தமே மோட்சமென்றும் சொல்லப்படும். சந்திர கிரணத்தைப்புசித்து திருப்தியாகும் சகோரபட்சியைப்போல ஞானரசனையான பிர்மானந்தத்தைப் புசித்து துரியபூமியில் வசித்து நானென்பது நசித்துத் தேகேந்திரியங்கள்முசித்து பரப்பிரமத்திலைக்கியப்பட்டு இளைப்பாற்றி யிருத்தலும் எழுதலும் மறந்து பிரம்மானந்தம் நிறைந்து நடத்தலும் பேசலுங் குறைந்து தேகாபிமானத்தையுந் துறந்து சொஸ்தனுய் சகோரபட்சிக் குணவாகியும் எங்கும் சீதள பிரகாசமாய் நிறைந்திருக்கும் சந்திரனைப்போல உனக்குள்ளே குளிர்ச்சி யடைந்து அந்தக்கரணாதிகளுக்குஞ் சீதளத்தைத்தந்து குறையாமல் பரிபூரண சொரூபமாகிப் பிரபஞ்சமய மாகாமல் அதிருப்தமாயிருப்பதே நிர்க்குணத்தியானமென்றுரைத்தபகவானைப்பணிந்து சுகர்மகாபாக்கியமென்று முப்பத்திரண்டு லக்ஷணங்களும் வாய்ந்த சிறுகுழந்தையுருவாகிபாகீரதியிற் பிரவேசிக்கையில் அம்மதலையைப்பார்த்த அரனயனாதி சத்தியும் மயங்கி நின்றார்கள். மாயாவிலாசனான பகவானச்சிசுவை வரநதியிற் பலதரமமிழ்த்தி பிர்மிக்கும்படியாய் செய்ய அப்போதக்குழவி சானவியிற் பலதரமமிழ்ந்தும் எழுந்தும் திக்குமுக்கிட்டு தட்டுகெட்டு பீதிமேலிட்டு தம் ஸ்மரணைகெட்டு முற்பிறப்பை மறந்துவிட்டு காகாவென்று கூக்குரலிட்டு பெருமூச்சு விட்டுக்கொண்டே மந்தாக்கினியி லடித்துக்கொண்டே போகையில் பகவான் தமால் மனதிற் பிரவேசித்து புத்திர வாஞ்சையை யுண்டாக்கினர்.

உடனே தபங்கலைந்து குழந்தையினழுகுரலைக் கேட்ட தமா லிதேது இச்சுரநதியில் குழந்தையினழுகுரல் கேட்கின்றதென் றதிசீக்கிரமாய்த் திரிபதகையினருகிற் சென்று கோடிசூரியப்பிரகாசமான பாலகனைக் கண்டு ஆனந்தங்கொண்டு ஆச்சரியமெய்தி விண்டு ஜிஜ்ஜாபீபி தவஞ்செய்தவளே பண்டு பென்று சொல்லிக்கொண்டு மனமிரங்கி மந்தாகினியிலிறங்கி வாரியெடுத்து மார்புடனணைந்து சுரநதிபேறி சுதன்நகைமீறி அப்பனே மகனே, அழகான முகனே, ஒப்பிலாதவனே, ஒளிருமாதவனே. செப்புதற்கரிய செல்வமே, நலமே, இப்புவியேந்து மெழிலே, பொழிலே. துப்புளவடிவே, தூய்மறைமுடிவே, செப்பமே, திருவே, திவ்யவுருவே, சுப்பிரமணியே, சுரர்சிகாமணியே, எப்படி நதியிலிறவாமலிருந்தாய் எப்படி மிதந்தீண் டென்னிடம் வந்தாய், எனக்குன் சேவையை நீதந்தாய், எனக்கானந்தமீந்த வென்மைந்தாவென்று (கடந்தஞானியுங் கடப்பரோமக்கண்மேற்காத) லென்பதைப்போல புதல்வனை யேந்திக்கொண்டு நலம் நாடினவனுக் கமிர்தமும் சிப்பியைத் தேடுவோனுக்கு முத்தும், வேசியைத் தேடுவோனுக்குப் பதிவிரதையும், பிட்சைக்கேகுவோனுக்கு ராஜரீகமும், எட்டியைத் தேடுவோனுக்குக் கற்பகமும், சூதாடுவோனுக்குப்புராணமும் துன்மார்க்கரைத் தேடுவோனுக்குச் சன்மார்க்கரும், கல்லைத்தேட ரத்தினமும், கழுதையைத்தேடக் குதிரையும், பைசாசைப்பூசிக்கக்கடவுளும், உலகவியாபாரத்தை நாடக் கடவுள் தியானமும் லபித்ததுபோலபட்டுநூலைத் தேடிவரத் தபமும், தபத்தாற் சுபமுங் கிடைத்த பாக்கியமே பாக்கியமென்று பலவிதங்களாயோசித்து மனையாளிடம்போக ஆசித்து, ஓ அல்லா பிஸ்மல்லா, ஓ கர்த்தனே, பரிசுத்தனே, தெய்வமே கைம்மாறென்ன செய்வமே என்றனந்தம் விதங்களாய் தோத்திரஞ் செய்துக் கொண்டே காட்டைக்கடந்து நாட்டையடைந்து வீட்டினுட்புகுந்து மிகவும் மகிழ்ந்து மனைவியை நோக்கி வாட்டத்தைப்போக்கிக் காதலைத்தந்து கடவுளைப் புகழ்ந்து அடி பெண்ணே, என்னிருகண்ணே, இத்தோன்றலை யாரோ கங்கையில் விடுத்தார்கள் நமக்குக் கொடுத்தார்கள் உன் துன்பத்தைக் கெடுத்தார்கள் என் தபத்தைத் தடுத்தார்கள் ஓ மானே, இன்பந்தருந்தேனே, முப்பத்திரண்டி லட்சணங்களும் வாய்ந்த புத்திரசிகாமணி நமக்குக்கிடைத்தது சிலாக்கியமே, நாம் செய்த பாக்கியமேதோ, நீயிருந்த யோக்கியமேதோ, பெரியோருரைத்த சத்தியவாக்கியமீதோ, குழந்தையின்மேற் சுகந்த வாசனைவீசும் கோலத்தைப்பார், நமக்குண்டான அநுகூலத்தைப்பார் என்று துள்ளிக் கூத்தாடினர், சங்கீதம் பாடினர், தெருக்களிலோடினர், கடவுள் தயவை நாடினர், இவரிப்படிச் சந்தோஷமேலிட்டுக் கான்முளை யகப்பட்ட விந்தையையும் கற்போன்றிருந் தொரு நொடியிலுருகின சிந்தையையும் பலர்பாலுஞ் சொல்லிக்கொண்டே திரிகையில்,

ஜிஜ்ஜாபீபி பெரியோர் வாக்கியப்படியே கிடைத்த அழகான பிள்ளையைப்பார்த்த சந்தோஷத்தாற் றன்னை மறந்து ஆனந்தம் நிறைந்து துன்பமிறந்து அளவற்ற ஆசைபிறந்து அன்பார்ந்த நெஞ்சுடன் அருஞ்சுதனை மார்பிலணைத்துக் கொண்டாள் உடனேபகவானருளால் பால்சுரந்து வடிந்தது. வழியவே குழந்தையைத்தான் பெற்றதாகவே மோகமாகி பாலூட்டி, நீராட்டி, பாராட்டி, ஆலங்காட்டி, மைதீட்டி, ஆபரணப்பூட்டி, தொட்டி

வில் மாட்டி, ஓசைகூட்டி, தாலாட்டி, ஏணையாட்டி தன் பங்கனைபோட்டி, கண்களைநாட்டி என் கண்ணுட்டி, நீ மேட்டானமேட்டி, மற்றவர்கள் தோட்டி என்றருமை யாய் வளர்த்து அருங்கொழுந்துபோற் றளிர்த்து களிப் பென்னுங் கடலிற்படிந்து ஒன்றுந் தோன்றுதவளா யிருந்தாள்.

தமாலோ தசரதன் ஸ்ரீராமன் பிறந்தபோதும் வசு தேவன் ஸ்ரீகிருஷ்ணபகவான் ஜன்மித்தபோதும் அடை ந்த சந்தோஷத்தைப்போ லுடலமிருக்க விருக்கப் பூரித் து உச்சாகமிகுந்து வீட்டினுட் புகுந்து குழந்தையின் மேல் அபீர்வாசனை வீசுதலால் * கபீரென்று பேரிட்டு பந்துக்களுக்கு விருந்திட்டு அதிதிகட்கு கன்ன மன்புடன ளித்து சதிபதி தங்களிற்றனே களித்துமிகவும் அருமை யாய் வளர்த்துவருங் காலத்தில் முன்னம் சுரருலகில் தே வேந்திரன்முன் சுகப்பிர்மரிஷியைப் பங்கஞ்செய்து வரு கிறேனென்று பிரதிக்கினைசெய்து சுகராசிரமத்தை ய டைந் தவருடைய பேரழகைக்கண்டு அதிமோகங் கொ ண்டு தயங்கி மயங்கி அவரை வெல்வதற்குத் தன்னுலா காமல் தேவர்முன்போக நாணமுற்ற அரம்பையானவள் தன்னிச்சையை நிறைவேற்றிக் கொள்ளும் பொருட்டுக் கபீர் வளருங் குலத்தில் தானுமவதரித்து கண்டோர் மயங்கும்படியான மின்னற்கொடி்பா லழகுடன் வளர் ந்து வருங்காலத்தில் அக்கன்னிகையைப் பார்த்த தமா லுஞ் ஜிஜ்ஜாபீபியும் நமது மைந்தனுக்குகந்த ரதி யிவ ளேயாமென் றம்மாதின் தாய் தந்தையரை வாஞ்சையா ய் விசுவாசித்து மிகவும் நேசித்து திரவியமுதல் வஸ்திரா பரணங்களளித்து சம்பந்திகள் மிகவும் களித்து பலவந் தமாய்ப் பேசும்படியாய்ச் செய்து ஓர்நாள் செல்வனைசிங் காரித்து அழகைக்கண்டு பூரித்து சம்பந்தியின் மனைக்க ழைத்துக்கொண்டுபோய் ஓ-புனிதர்களே உங்களுடைய சுந்தரியை நமது மைந்தனுகிய இச்சுந்தரனுக்கு மணஞ் செய்ய வாக்களிக்கின்றீர்களா வென்று கேழ்க்க கபீரழ கைக்கண்ட அவர்களுள்ளங் களிகூர்ந்து நமது கன்னி கைக்கிவனே தகுந்த மணாளனெனத்தேர்ந்து வேறொரு வர்க் களிக்கலாமென்கிற சந்தேகந்தீர்ந்து உங்கள் தனு சனுக்கெங்கள் வனிதையே மனைவியென ஒற்றுமையுட ன்சேர்ந்து உற்றோர் மற்றோருடனே நிச்சயதாம்பூலமும் மாற்றிச் சந்தோஷசாகரத்தி லமிழ்ந்திருந்தார்கள் கேட் டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் காபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

* கபீர் உற்பத்தியைச் சிலர் வேறுவிதமாய்க் கூறு கிறார்கள் ஆனால் இதில் குறித்தபடியே முன்னோர் செய் த நூலிலிருக்கிறது.



இரண்டாவது
கபீர் சுன்னத்து செய்கிறதை மறுத்த
அத்தியாயம்.

கேளும் காலனுக் கித்தலத்தை ஒப்பிக்காத சிலர் களே இப்படி சுகவாரிதியி லமிழ்ந்திருந்த தமாலுஞ் ஜிஜ் ஜாபீபியும் குலமுறைத் தர்மப்படி கபீருக்குச் சுன்னத் துசெய்ய யோசித்து ஓர் நன்னளில் காஜி முதலான சக லரையு மழைப்பித்துச் செய்யவேண்டிய கிரியைகளெல் லாஞ் செய்து முடித்தபின்,

காஜி:—கபீருக்குச் சுன்னத்துச் செய்யு மென்று மஞ்சிகனுக் காக்யாபிக்க,

கபீர்:—காஜியை நோக்கி இதென்ன விபரீதச்சடங் கினைச்செய்ய யோசித்தீரென்று வினவ,

குலகுரு:—நமது மரபிற் செய்யவேண்டிய கொள் கையென,

கபீர்:—இச்சடங்கு ஆண்பிள்ளைக்கு மாத்திரமோ பெண்பிள்ளைக்குங்கூடவுண்டோவென

ஆசான்:—ஆண் பிள்ளைக்கே செய்ய வேண்டிய தென.

கபீர்:— இதனாலடையும் பயனேதென,

ஆரியன்:—இதனாற் பரிசுத்தமாகின்றனென,

கபீர்:—இதனு லாண்பிள்ளைதான் பரிசுத்தமாகின் றனென பெண்பிள்ளைகளோ வென,

தேசிகன்:—மந்திரோப தேசத்தாற் சுத்தமாக வே ண்டுமென,

கபீர்:—மந்திரோப தேசத்தாலடவன் கிருதார்த் தனுக மாட்டானேவென,

உபதேசி:—புருடர்க்கு அனுக்கிரகமுஞ் சுன்னத் துஞ்செய்யவேண்டுமென் றுதியிலிருந்து நமதுபெரியோ ர்களுக்கு கடவுள் விதித்திருக்கிறபடியாலகத்தியம் செய் துக்கொள்ள வேண்டுமென,

கபீர் கடவுளிட்ட கட்டளையாயிருக்குமாயின் கட்டளையிட்டது முதற்கொண்டு அசத்தமானதைச் சிருஷ்டிக்கவேமாட்டார் நாளது வரையிற் சிருஷ்டித்துக்கொண்டே வருகிறபடியா லாண்டவனிப்படி விதித்திருக்கமாட்டாரென்கிற கருத்தைப் பிரத்திபட்சமாய்க் காட்டுகின்றதென,

காஜி:—நமக்கு முதன்மை யாசாரியனான இப்ராயிம் பயம்பர் காலத்தில் கடவுளுத்தரவு செய்திருக்க இல்லையென உனக்குள்ள குழந்தைப் பருவமல்லவா ?

கபீர்:—இப்ராயிம் என்பவன் கடவுள்மேற் சத்தியஞ் செய்ததைக் காப்பாற்றும் லற்பமான விஷயானந்தத்தை யிச்சித்துக் கடந்தபடியா லிவ்வாக்கினை யவனுக்குக் கிடைத்ததேயன்றி கடவுளிட்ட கட்டளையல்லவென

காரியகுரு:—(நம்ருத் அரசன்) அக்கிரமா யவருக்காக்கினை கொடுத்தானேயன்றி பயம்பர் யாதொருகுற்றமுஞ் செய்தவரல்லவென,

கபீர்:—இப்ராயிம் சாராவென்னும் இளையமனையாள்மேற் கொண்ட மோகத்தால் அவளைப் பார்த்துன்னுத்தரவுக் கெதிருத்தரஞ் சொல்லேனென்று கடவுள்மேற் சத்தியஞ் செய்துகொடுத்து மூத்தமனைவியான ஆஜராவென்பவள் மகாபதிவிரதையா யிருப்பதன்றிக் கர்ப்பவதியா யிருப்பதறிந்தும் கடினநெஞ்சை யுடையவனா யிளையாளிட்ட கட்டளையைக் கடவாமல் மனிதசஞ்சாரமில்லாத ஆரண்யத்திற் கொண்டுபோய் விட்டுவந்த பின்பு கடவுளருளால் ஆஜராவென்பவட் கொரு தீங்குமின்றி புத்திரனுற்பத்தியா யசாங்கமுங் கிடைக்கவே அதைக் கேள்விப்பட்ட இப்ராயிம் ஆஜராவிடம் போக அது தெரிந்த சாரா மறுத் தனேக மாக்கினைமொழிகள். புகலவும் கேட்காமற் போனதால் சாராவும் அரசனும் போய் அந்தப் பயம்பரை அவமானப் படுத்தினர்கள் இதன் விபரம் சவிஸ்தாரமாய் உங்கள் சரித்திரங்களில் வரைந்திருக்கின்ற தன்றோவென, காஜி, நம்ருத் என்னும் அரசனுலெங்கள் ஆசானுக்கு நடந்தது முதற்கொண்டு மற்றெல்லோரையும் இப்படியே செய்துகொள்ளும்படியாய் கடவுள் கட்டளையிட்டதினால் அவர் மதபைச்சார்ந்த நங்குலத்தோர் அசுத்தமானவைகளை களைந்துகொண்டு வருகின்றார்களென, கபீர் இப்ராயிம் இரண்டாவது மனைவியான சாராவின் மைந்தனாகிய இஸாக்கென்பவனே மறுத்திருக்க நானெப்படி சம்மதிக்கக்கூடுமென, காஜி, அந்த இஸாக்கென்பவன் பைசாசத்தின் வார்த்தைக் குட்பட்டு இபிலிஷ் ஆய்ப்போனன் இவனைப்போலவே நீயும் ஆகவெண்ணங் கொண்டாயோவென கபீர் இஸாக்கென்பவன் ஓர் மதத்துக்குக்காரண குருவானவனன்றோவென காஜி * இஸாமதத்தோருக்கு ஞானந்தவிர மற்ற பிரம்மதியானம் முதலானவைகளில் சமானமானவராயிருந்தும், சுன்னத்து செய்துக் கொள்ளாமையால் இழிவுள்ளவரானார்களென கபீர் ஞானமில்லாதவர்கள் தியான முதலானவைகள் செய்வதால் ஓர் பிரயோசனமுண்டு. அதெப்படியெனின், விழியில்லாதவன் வழியறியாததுபோல் ஞானக்கண் துலங்காதவர் அஞ்ஞானந்தகாரக் கூபத்தி லமிழ்ந்திருப்பார்கள். இது உண்மைதான் இப்பேர்க்கொத்த ஞானமார்க்கம் அறிந்துக்கொள்வதற்கு அனுகூலஞ் செய்யாமல் சுன்னத்து செய்யவந்த காரணமேனென காஜி வரன்முறை தர்மப்படி செய்துகொள்வதேயன்றி இதனால் ஓர் பிரயோசனமில்லையென கபீர் பிரயோசனமில்லாக் காரியத்துக்கு நானொருகாலத்து முட்படமாட்டேன் இதை க்ஷமித்து ஞானமார்க்கத்தைப் போதியுமையாவென காஜி கபீர் பேசும் சாதுரிய வசனங்களைக்கேட் டதிசயித்து அறியாச் சிறுகுழந்தையாகிய உனக்குஷரீகத்என்றால்சரிதை தரீகத் என்றால் கிரிகை அகீதத் என்றால் யோகம் என்னும் மூன்றுமார்க்கத்திற் றேர்ந்தவனன்றோ மாரீபத் என்றால் ஞானமென்னும் மார்க்கத்தை அநுசரிக்க வேண்டும்.

இப்போதுரைத்த முதற்படியான ஷரீகத்என்பதே அறியாச் சிறு குழந்தையாகிய நீ இறுதியான மாரீபத் மார்க்கத்தைக் கேட்கின்றாய், இதைச் சொன்னதினால் நீயடையும் பயனேதென கபீர் ஜனனமரணம்அஞ்ஞானவகங்காரமும் துன்பமும் சிற்றின்பமும் ஆசாபாசமும் மிருத்தியுபயமும் அபஜயமுமின்றி அகண்ட பரிபூரண சச்சிதானந்த நித்ய நிர்மல சொரூப சாக்ஷாத்கார சுயம்பிரகாசமாய் விளங்கும் பிரமத்தை புணர்ந்து சதாகாலமும் ஆனந்தவாரியில் சூழ்கியிருக்கலாமென காஜி அப்பப்பா சமஸ்த தர்மங்களறிந்த இச்சிறுவன் நாமென்ன சொன்னபோதிலும் சுன்னத்து செய்துகொள்ள மாட்டான். நான் என்னிருப்பிடத்துக்குப் போகிறேன் நீ பெற்ற தந்தையாதலால் சுன்னத்து செய்துக்கொள்ளும்படியாய் சம்மதிக்கச்செய்து என்னை யழைப்பியுமென்று கூட்டங்கலைந்து தங்கள் தங்கள் இருப்பிடமடைந்துகபீர் பேசிய வார்த்தைகளை உன்னி யுன்னி ஆச்சரியப்படத் தொடங்கினார்கள். இங்கே தமாலும் ஜிஜ்ஜாபீபியும்

* இலாக்கை ஈஜிக்கென்றும், இவர் மதம் கிறிஸ்து மதமென்றும் சொல்லப்படும்.

கபீரை நோக்கி, அப்பா ஒப்பிலாமகனே! அறியாக்குழந்தையாகிய நீகாஜீ முதலான நமதுமரபுக்குச் சிறந்தபெரியோர்களோ டெதிர்த்துப் பேசலாமா? குல தர்மத்தை வெறுக்கலாமாவென, கபீர் ஓ என் தாய்தந்தையே! மோக்ஷமடையும் மார்க்கத்தைத் தவிர வேறு காரியங்களுக்கு நானுடன்படவேமாட்டேன். இது நிச்சயமென்று நம்புவீர்களென, தமால் கோபித்து அடா துஷ்டப் பயலே! தாய் தந்தை உற்றோ மற்றோர்களின் வாக்கியத்தைத் தள்ளிய உன்னை இப்போதே கொல்லுகிறேனென்று கோபக்குறிகாட்ட கபீர் தந்தையின் கோபத்துக்குப் பயந்து வெளியிலோடிப்போய் ஓரிடத்தில் மறைந்திருக்க ஜிஜ்ஜாபீபி மகன்மீதிருக்கும் அன்பினால் பலவிடங்களிற்றேடிக் கண்டுபிடித்து வீட்டுக்கழைத்துக் கொண்டுவந்து பல புத்திகளைச் சொல்லியும் கேட்காத கபீர்மேற்கோபித்து இவ்வளவு கஷ்ட கல்விகளெல்லாம் பேசும் நீ வேலைசெய்தாலொழிய உனக்கு அன்னமிடுகிறதில்லையென்று ஓர் தரியிலுள்ள பட்டுநூலால் வஸ்திரத்தை நெய்யடாவென்று வைதடித்து வஸ்திரம் நெய்யும்படியாய்ச்செய்தான். கேட்டீர்களோ சித்தர்களே! அந்த இப்ராயிம் பசம்பர் உற்பத்தி வெகு விநோதமானது அதைப் பின்னுலுரைப்பேன் அவர் கடவுளருளால் இவ்வுலகிலவதாரஞ் செய்தது அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தைப் போதிக்கவேயாம். பேயுகைமானது அவரது மகிமையறியாமல் சாராவென்னும் கொடிய ஸ்திரீயின் வார்த்தைக் குட்பட்டு அவருக்கு சுன்னத்து முதலானதும் செய்வது வெகு அக்கிரமம், அவரும் சத்தியத்துக்குட்பட்டு அவ்வாக்கினைக் குட்பட்டாரே யொழிய நினைத்தால் நம்ருத் அரசன் முதலானவர்களையும் பஸ்பமாக்கிவிடுவார். உத்தமர்க்கும் ஒவ்வொருகாலத்தில் ஓர் தீங்குநேரிடும், வினையின் காரணத்தையே நோகவேண்டும் இவர் மகிமையை பின்னுல் வரும் இவ்கடஷா சரித்திரத்தில் புலப்படக்காணலாம் என்றுரைத்து பிர்ம்மாவதாரரான நாபாஜிசித்தர் கபீர் சரிதையைச் சொல்லத் தொடங்கினர்.





# மூன்றுவது
# பிராமணரூபமாய்வந்த பகவானுக்கு கபீர் வஸ்திரதானஞ்செய்த அத்தியாயம்.



**விருத்தம்.**

ஐயனே பருஞ்சிறிய னென்முன்றோன்றி யடையொணு வானந்த மிகவேதந்தத்
துய்யனே தேவர்முதற் றிசைமுகனுஞ் சங்கரனுங் தேடிக்காணு
மெய்யனே மெய்ஞ்ஞான போதமேவு மேதினியிற் றெண்டருளங் தங்குஞ்சக்ரக்
சையனே கோதண்ட ராமாநின்றன் கழற்கருத வரமளித்துக் காப்பாய்கோனே.

காயமென்னும் வீட்டில் அஞ்ஞான மென்னும் இருளைமாற்றி ஞானமென்னும் விளக்கேற்றி மோனமாயிருக்கும் சித்தர்களே! பரிசுத்தர்களே! சிசுக்களினுச்சி மண்டூகத்தின் கண்டம மானிடர்களிதய விபசார மங்கையின் நெஞ்சம் தொம்மானுள்ளம்போல சதாகாலமும் பிரமத்தை தியானஞ்செய்யும் கபீரைத் தறி நெய்யச்செய்தது எப்படி யிருக்கிறதென்றால், பதிவிரதையை வேசையுடனும், யோக்கியனை நிந்தகனோடும், ஜீவகாருண்யனைக் கொலையாளியோடும் சந்திரனை ராகு கேதுவோடும் ஞானியை அஞ்ஞானியோடும் சர்ப்பத்தைக் கருடனுடனும், பசுவைப் புலியுடனும், காமக்கன்னியை நபும்ஸகனுடனும், தேவர்களைஇராக்கதருடனும் சேர்த்தாப்போலவு மிருக்கிறது.

இப்படிக் குழந்தை மனதுடைய மகா புண்ணியவானான கபீர் கடவுளைத் தியானஞ்செய்து கொண்டே ஒரு முழ வஸ்திரம்நெய்து பிரமஞ்ஞான மேலீட்டால் தன்னை மறந்திருந்தா ரப்போது பகவான் மாயமாய்வந்து கபீருக்குப்பதில் ஒருமுழம்நெய்வார் * அதற்குள் ஜிஜாபீபி வந்து கண்களை மூடிக்கொண்டு தியானத்தி லிருக்கும் கபீரை அதட்டி அடா கபீர் வஸ்திரம் நெய்யச்சொன்னால் சொஸ்தமாய் தூங்குகிறாயா காலையி லிருந்து மாலை பரியந்தம் இரண்டு முழந்தானா நெய்தாய்? சஷ்டகல்விகளெல்லாம் பேசுமுனக் கிதுமாத்திரந் தெரியாமற்போனதென்ன நல்ல நிந்தக்ஷண மிதையறுத் தெடுத்துக் கொண்டுபோய் கடையில் விக்கிரயஞ் செய்துவந்தாலொழிய உனக்கென்ன மகப்படாதென் றுரைத்து வீட்டுக்குட் சென்றாள். பின்பு கபீர் தறியிலிருக்கு மிரண்டுமுழத் துண்டை தறித்தெடுத்துக் கொண்டுபோய் கடையின் தெருமத்தியில் நின்றுக்கொண்டு வஸ்திரத்தை விரித்துக்காட்டி, ஓ-புண்ணியவான்களே! புண்ணியவதிகளே இந்தப் பீதாம்பரத்தை வாங்கிக் கொள்ளுங்களென்று பலதரஞ் சொல்லிக்கொண் டக்கடைத்தெருவிற் றிரிந்த தெப்படியிருந்ததென்றால், சக்ராதிபதியாகிய புரூரவச் சக்கரவர்த்தி வீரகுமாரனுடைய! மாதாதா விறகையும், அரிச்சந்திரமகாராஜன் மனையாளையும் மகனையும் விலைகூறியதைப் போலிருந்தது. அல்லாமல் பலவந்தமாயணையவரும் ரம்மியமில்லா ஸ்திரீ புருஷாளைப்போலவும் பலவந்தமாய் விக்கிரயப்படுத்தும் வஸ்துக்களைப்போலவும் இருந்தது.

இப்படி பலவந்தமாய் விலைகூறும் கபீர்கரத்திலிருக்கும் வஸ்திரத்தைப்பார்த்த சிலர் அடடா இதென்னவலையைப்போ லங்குலத்துக் கோரோரிழை நெய்திருக் கின்றது எவன்நெய்தானென்ன பரிகாசஞ்செய்துப் போகையில் பகவான்மாயையாலதை வாங்கவருஞ்சிலர்கண்ணுக்கு மேன்மையான விலையுள்ளதாய்தோன்றப்பட்டு இதையெங்களால் வாங்கத் தகுந்ததோவென்று போய்விட்டார்கள். ஏனெனின் பகவான் கைகளால் நெய்த வஸ்திரத்திற்கு மொருவரால் விலைமதிக்கக்கூடுமோ, ஓ-சித்தர்களே கபீர் சூரியனஸ்தமனமாகும் பரியந்தமிருந்தும் யாவரும் வாங்காமையா லிப்பீதாம்பரத்தை இனிமேலியார் வாங்கப்போகிறார்க ளென்று வஸ்திரத்தை மடித்து கக்கத்திலடக்கிக்கொண்டு வீட்டைநோக்கிப் போகையில் பகவானோரேழைப் பிராமணராய் கபீர்முன்வந்து வெடுக்கென்றுதுண்டைப் பிடிங்கிக்கொண் டோடத் தொடங்கினர். உடனே கபீர் அடா திருட்டுப்பிராமணா முரட்டுப் பிராமணா கோபிகாஸ்திரீகளின் வஸ்திரங்களை யபகரித்துக் கொண் டோடிப்போன திருட்டு கிருஷ்ணனைப்போல நாணயமான பீதாம்பரத்தைத் திருடிக்கொண்டாபோடு கிறாயென்று சொல்லிக்கொண்டே பிராமணனைவிடாமற் றொடர்ந்தோடி மடியைப்பிடித்துக்கொண் டசையாமல் நிறுத்தி மிகவும் வருத்தி அருமையான பீதாம்பரத்தைத் தாவென்று பிடுங்கத்தொடங்கினர்.

அப்போது மாயாப்பிராமணரதைவிரித்துப்பலருக்கும் காண்பித்து ஓ-ஜனங்களே இந்த வலைத்துணி அருமையான பீதாம்பரமாம்இப்போர்க்கொத்தவஸ்திரத்தை

* இப்படிபகவான் கபீரை நினையாமுன்னமேவந்து அவர் வேலைக்குதவியான காரணம் சுகப்பிர்ம்ம ரிஷிக்கு முன் வாக்குக்கொடுத்தலினாலேயாம். இவ்வளவு உபசரணை பகவான்செய்வது ஏதுக்கெனில் மாயாதீதனான சுகரை மாயையிலழுத்தலேயாம், விஷயபோகமறியா சுகரை தேவர்களாலனுப்பப்பட்ட ரம்பை பலவிதத்திலுஞ்செயிக்கமுடியாமல் அச்சுகரை தந்திரத்தால் வெல்ல வெண்ணி ரம்பை சுகர் ஆசிரமத்தினருகில் தபவேஷத்துடன் உக்கிரமான தவம்செய்துக்கொண் டிருக்கையில் இச்சுதறியா சுகர் ஓர் முனிவனென்றே உன்னி அருகிற்சென்று, ஓ தபயோகியே! வெகுநாளாய் எதைநாடி இவ்வித உக்கிரமான தவஞ்செய்கிறீரென்று வினவ ரம்பை முனிந்தவள்போல் அந்த இன்பத்தை விக்கினஞ் செய்தபடியால் நீ நிந்தக்ஷணம் நான்கோரிய வரமளிக்காவிட்டால் என்சாபம் பெறுவீரென சுகர் நீர் கோரிய தளித்தேன் சேளுமென, உடனே ஸ்திரீரூபந்தரித்த ரம்பையைப் பார்த்து பிர்மித்து நல்லது கலியுகத்தில் உன்னிச்சை நிறைவேற்றுவேனென் றுரைத்தபடி கபீரா பவதரித்து இரண்டு மகவைப்பெற்றார்.

எங்கேயாவது பார்த்ததுண்டாவெனப் பருந்து இரண்டாய்க்கிழித்துவிட்டார். அதற்குக் கபீர் பிராமணரை நோக்கி சாந்தத்தைநீக்கி ஓ பிராமணா நீ வேதமோதும் விப்பிரனுயிருந்தும் மகா விஷ்ணுவின் மார்பிலணிந்துக் கொண்டிருக்கும் பச்சைபீதாம்பரத்துக்குச்சமானமான விலையில்லாப் பீதாம்பரத்தைக் கிழித்து விட்டாயே, நீ கெட்டாயே, ஊராருடைமைக்குப் பேயாய்பறக்கும்பிராமணர்களைப்படைத்தபிர்மதேவன் எமனைப்படைத்தது நிஷ்பிரயோசனமென்றுகூரைத்து வஸ்திரத்தைப் பிடுங்கிக்கொண்டார். அப்போதுமாயாபிராமணர் அடாகெளனத்துக்கு முதவா விக்கந்தையைத் தாமோதரனணிந்துக்கொண்டிருக்கும் பீதாம்பரத்துக்கு மேலானதென்றுரைத்தது எப்படியிருக்கிறதென்றால் லோபியைப் பாபியும், வேசையை விபசாரியும், கொலையாளி வேட்டையையும் இச்சையுள்ளோன் சம்சாரத்தையும் காமமிகுந்தோன் ஸ்திரீயையும், லுத்தன் தன்வல்லமையையும் புகழ்கிறதைப்போ லிருக்கின்றதென்றுரைத்துப் பெருநகை புரிந்து பலரும் பரியாசஞ்செய்து கெக்கலிகொட்டிநகைக்கும்படியாய்ச் செய்தார்.

அதற்கு கபீர் பதிவிரதைக்கழகும் குணவானுக் கைஸ்வரியமும் தர்மிக்குத் தபமும் ஜீவகாருண்ணியனுக்கு விரதமும் சாந்தகுணனுக்கு ஜபமும் நிராசையுள்ளோனுக்கு சன்யாசமும் குலஸ்திரீகளுக்குக் காவலும் ஆத்மஞானிக்குத் தியானமும் மனோசுத்தி யுள்ளவர்க் காசாரமும் இல்லாதிருந்தாலும் மேன்மையே யடைவதுபோல இவ்வஸ்திரம் வலையைப்போன்றதா யிருந்தாலும் பட்டுநூலால் செய்திருப்பதால் மேன்மையானதாகவே யிருக்கின்றதன்றி பச்சைவர்னனை அச்சுத னணியத்தக்கதேயாமென் றுரைத்து வீட்டைநோக்கிப் போகையில் மாயாபிராமணர் மறித்து நானிதைவாங்கிக் கொள்ளுகிறேன் விலையென்ன சொல்லடாவென்று கேட்க, கபீர் எனக்கிதன்விலை தெரியாது நாலுபேருரைப்பதே விலையென்றுசொல்லபிராமணர் பலரையுங்கூப்பிட்டு ஓ-புண்ணியவான்களே இந்த வலைக்கந்தைக்கென்னவிலை கொடுக்கலாஞ் சொல்லுங்களென்றுகேட்க, வழிபோக்கரிலொருவ னிதற்கு ஒருபணமென்றும் மற்றொருவன் ஒருவராகனென்றும் இன்னமொருவன் பத்து வராகனென்றும், ஒருவர்த்தகன் நூறுவராகனென்றுஞ் சொன்னார்கள். அதற்கு மாயாபிராமணர் ஒரு கவடிவலையும் பெறுத பட்டுநூல் சிக்காய் வாங்கக்கூடாமல் வஸ்திரமாய் விரித்துக் கொண்டு வந்தவிக் கந்தைக்கோர் விலைசெப்பாது பத்து வராகன் நூறுவராகனென்று பரியாசஞ் செய்கிறீர்களென்றுரைத்துக் கபீரைநோக்கி ஓ-கபீர் ஓர் கவடிக்கும்பெறுத விவ்வலைத்துணிக் கிவ்வளவுவிலை கொடுத்துவிடுகிறேன் நீ-இன்றையதினம் இராசன் முகத்தையோ நரிமுகத்தையோ பதிவிரதையின் முகத்தையோ பக்தன் முகத்தையோ பார்த்துவந்தாயென் றுரைத்தும் ஆயிரம்பொத்தலாயிருக்கும் பொத்தைக்கந்தையி லரிதானசொத்தாய் முடித்துவைத்திருக்கும் இரண்டு சொத்தைக் கவடிகளையவிழ்த்தெடுத்து மெத்த விலையெனப் பதைத்துரைத்துக் கொண்டே கபீர் கரத்திற்கொடுத் தித்தனைவிலை யிப்பொத்தைக்கந்தைக்கு வாங்குவ துத்தமமல்லவென்றார். கபீர் தன்கையிற்கொடுத்த இரண்டு வெள்வரிகளையும் பார்த்த கபீர் ஓ-ஜனங்களே இந்தப்பிராமணன் கூடியமட்டுக்குங் கெட்டிக்காரன்று னிவன் மிகவும் பிரயாசத்துடன் கொடுத்த மேன்மையான விலையைப்பார்த்தீர்களா சந்தேசுத்தைத் தீர்த்தீர்களா வென் றப்பலகரைகளை வீசியெறிந்தார்.

உடனே யம்மறையோன் அடா துஷ்டப்பயலே பிரஷ்டப்பயலே எங்கள் மூதாதைகள் சம்பாதித்த ஆஸ்தியை நாஸ்திசெய்யவா யோசித்தாய் இனி யெவ்வளவு பொருளைத்தா ளுசித்தாய் இதற்கா பிராமணோத்தமாவென்று பூசித்தாய் வீண் வழக்கை வளர்க்கவா நேசித்தாய் அடடா சாலக்கிராமத்தையும் லிங்கவுருவத்தையும் மாணிக்கத்தையும், வைடூரியத்தையும் அரியாஸனத்தையும், இந்த க்ஷேமத்தையும் எறிந்துவிடத் தக்கதோ வென்றதை யெடுத்துக்கொண்டுவந்து அடா கபீர் இக்கவடிகளாலுன்னையு முன்தாதை மூதாதைகளையும் மூவுலகையும் விலைக்குவாங்குவேன் குபேரனுக்கும் மேலாயோங்குவேன், அண்டபிண்ட பிர்மாண்டங்களையுந் தாங்குவேன் எனக்குற்ற தரித்திரத்தைவிட்டு நீங்குவே னிதன்மகிமையை பேய்ப்பயலே நீ யறியத்தக்கதோ முழுத்தேங்காய் நாய்க்கெட்டாததுபோல கிடைப்பதற்கரிய பொருளை யெறிந்துவிட்டாயென்று சொல்லிப் பலதரங் காட்டிக்காட்டிமறைக்க! கபீர் இப்பீதாம்பரத்துக் குன்னையுமுன்னப்பனையும் விற்றாலும் விலைபோதாது போபோவென்றுசொல்லி இருவரும் வழக்காடும்போது அங்கு நிற்கும் பலரும் ஒருவரைப்பார்த் தொருவர் சொல்லிக்கொள்ளும் வார்த்தைகளாவது செவிடனுங் குருடனுங் கூத்தைப்பார்க்கவும் பதிவிரதையும் பரத்தையும் திருநாளைப்பார்க்கவும் கர்மியுந் தர்மியும் பெருமாளைப் பார்க்கவும் விருத்தனும் பாலனும் யுத்தஞ்செய்யவும் மௌனனுங் கலகனும் புராணங்கேட்கவும் கோளனுங் கொடியனும் நியாயந்தீர்க்கவும், திருடனும்பேராசைக்காரனும் வியாபாரஞ்செய்யவும் பாபியும் லோபியும் விபசாரஞ

செய்யவும் குடியனும் வெறியனுங் கூத்தாடவும் பித்தனும் உன்மத்தனுந் தர்க்கஞ்செய்யவும் பாப்பானும் பறங்கியும் பஞ்சாயத்துப்பேசவும் நேரிட்டதைப்போல் இவனிந்த பொந்தக்கந்தைக்கு விலைகூறுவதும் அவனிரண்டு சொத்தைக் கவடிகளைகாட்டி மறைப்பதுமா யிருக்கிறதென்று கெக்கலிகொட்டி நகைத்து ஓ-பயித்தியம் மேலிட்ட பார்ப்பானே சயித்தியம்மேலிட்ட பஞ்சமனே உன்னுடைய சண்டிபெருதுக் கிணையான கந்தைக்கு நொண்டிக்குதிரைக் கிணையான சொத்தக்கவடிகளே போதுமானவிலையென்றுரைத்துத் தவரவர்களனுவலைப் பார்த்துக் கொண்டகன்றார்கள்.

பின்பு பிராமணர் கபீரைநோக்கி ஓ கபீர் மேன்மையான காட்சிக் கவடிகளைக்கொடுக்கும் மாட்சிமையான யெனக்கு இத்தாக்ஷியான கந்தையைக் கொடுக்காமல் பிரஷ்ட சாக்ஷியைப்போல குளறிக் குளறிப் பேசலாமாவென்று சொல்ல கபீர் பல்லில்லா வாயுள்ள நீயேதேதோ வாயில்வந்தபடி வெகுநேரமா யுளறிக்கொண்டிருக்கின்று யிப்பீதாம்பரத்துக்குத் தகுந்த விலைபெறுமற்கொடுத்தா லென் தாயார் வாயில்வந்தபடி வைவாள் சித்ரவதைசெய்வாள் போ-போ பேராசையுள்ள பேயனே ஏமாத்தவந்த வாயனே யென்று நவில பிராமணர் பின்னுமச்சொத்தக் கவடிகளைக் காண்பித் திதைவாங்கிக்கொண்டதைத் தரலாகாதோவென கபீர் புழுத்துப்போன வலகுகளுக்காக மடியைத்தருவேன் குக்ஷிநிறையப் பிக்ஷையகப்படாதவன் லக்ஷாதிபதியைச் சம்பந்தஞ்செய்ய யோசித்ததைப்போல் எங்கேயோ வீழ்ந்திருந்த கவடிகளைக் கொண்டுவந்து கொடுத் தேமாத்திப் போகவந்தீர் நீர் வாங்கிக்கொண்டது போதும் வந்தவழியைப் பார்த்துக் கொண்டேகுமென் றுரைக்க மாயா பிராமணர் இக்கவடிகளிரண்டன்றி வேறொரு பொருளு மெனக்கில்லை இவ்வேழைப் பிராமணன்மேற் கிருபைகூர்ந்து தருமார்த்தமாய்ப் பாதிவஸ்திரந் தருவீரானல் கோகுல பிருந்தாவனத்திற் றிருநாளாகும்போது பெருமாளுக் கணிகிறேனிதனுலுமக்குப் புண்ணியமும் புகழு முண்டாவதன்றி எச்சிலைக்கொடுத்த சவரியும் பிடியவல் கொடுத்த குசேலனும் பெற்றபேற்றைப் பெறுவீரென்றுரைக்க கபீர் இப்பீதாம்பரம் பெருமாளுக்கே யணியத்தக்கதா யிருந்தாலும் யான் தகுந்த விலைவாங்காமற் றருமார்த்த மாய்க் கொடுத்தால் என் தாயுந் தந்தையும் வைய அடிப்பார்கள் உயிரை முடிப்பார்க ளாதலால் மன்னியுமையா வென்று வணங்க.

பிராமணர் ஓ மகானுபாவா சத்தியநாவா நீ தருமகுணத்திற் சிறந்தவனென்று பலருஞ்சொல்ல கேள்விப்பட்டதன்றி முகமும் அகமும் குறியுங் குணமு மப்படியே தோன்றுகின்ற தல்லாமல் நீ யிக்காசியிற் சிலநாளிற் றருமக்கொடியை நடுவாய் (விளையும்பயிர் முளையிற்றெரியும்) என்கிற பழமொழி பழுதாகாது ஓ-தருமப்பிரபுவே பெண்டு பிள்ளை பண்டம் பதார்த்தம் நாடு நகர் தாய்தந்தை உற்றோர் மற்றோர் ஆனைசேனை முதலானதுங் கூடவருந் துணையல்லவே தர்மம் அனேக ஜன்மங்களுக்குத் துணையாயிருந்து காப்பாற்றுமல்லவா? உனக்கும் விரித்துச்சொல்லவா தர்மந் தலைகாக்குமென்னும் பழமொழி பொய்யா மிரு துய்யா தர்மஞ்செய்யுங் கையா வென்று மிகவும் வேண்டிக்கொண்டார். அதற்கு கபீர் இந்தத் துண்டுவஸ்திரத்தை கொடுக்கலாமென்றால், இப்போதே தாய்வந்து விடுவாளே வந்து துன்பந் தந்து விடுவாளே? இதற்கென்ன செய்யலாமென்கிற எண்ணத்தினற் கொடுக்க மனம் வராமலும் இல்லையென்றுரைக்க வாயெழாமலும் மௌனமாய் நின்றார்.

பகவான் ஓ கபீர் ஜீவர்களுக்குத் தருமமன்றிவேறு துணையில்லையே மௌனமா யிருப்பது தொல்லையே நீ தருமகுண முடையவனல்லையே, அடடா இந்தயேழைப் பிராமணன் முகத்தைப்பார்க்கலாகாதோ, பார்த்தாலுனக்கு லாபமுண்டாகாதோ பாபங்களெல்லாம் பஸ்பமாய்ப்போகாதோ, லோபகுணம் நசித்துப் போகாதோ, ஓ தருமஸ்வரூபனே திவ்விய சொரூபனே லோபியைப்போன்ற பாபியில்லை யென்கிற பழமொழி யறிவாயே, அறிந்தென்னுசி பெறுவாயே முற்காலத்தில் தருமார்த்தமாய் மரமசிவனர் கொல்லும் விஷத்தைக் குடிக்க வில்லையா பத்மாசூரன் கேட்ட வரமளித் தவன் துரத்த வோடிப் பதுங்கவில்லையா, வாணசூரனுடைய வாயலைக் காக்கவில்லையா? கும்பகர்னனும் திரிசூலமளிக்கவில்லையா; ராவணனுக்குத் தன்மனைவியை யீயவில்லையா, அர்ச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரங் கொடுக்கவில்லையா, மார்க்கண்டனுக்கென்றும் பதினறுவய தருளவில்லையா, மன்மதன் பஸ்பமாயெரிந்து போகவில்லையா, ததீசிமகாரிஷி தன் முதுகெலும்பைத் தரவில்லையா, மாபலி பாதாளத்திலமிழ்ந்து போகவில்லையா, சிபிச்சக்கரவர்த்தி தன்சரீரத்தை யறுத்தளிக்கவில்லையா, ரகுராஜன் தன்னரசாங்கத்துடன் மனைவிகளையும் நல்கவில்லையா, கர்னன் தன்னுயிரைக்காக்கும் கவசகுண்டலங்களை யீயவில்லையா தருமராஜர் தன்னுடன் வந்தசுனங்களைச் சுரலோகத்துக்குக் கொண்டுபோகவில்லையா, அர்ச்சுனன்ஓர் கந்தர்வனைக்காக்க கிருஷ்ணனேடு போராட வில்லையா, இலட்சுமி பரமசிவனுக் குற்ற பிர

மத்தியைத் தானேற்றுக் கொள்ள வில்லையா? கலைக் கோட்டுமுனி தசரதனுக்குற்ற புத்திர வாஞ்சையைத் தீர்க்கவில்லையா? தசரதன் தேவர்களைக் காக்கவில்லையா புரூரவச்சக்கிரவர்த்தி தேவகன்னிகையை விடுவிக்கவில்லையா? கிருஷ்ணன் பஞ்சபாண்டவர்களுக்குத் தூதாக வில்லையா? அவர்களுக்குச் சாரத்தியஞ் செய்யவில்லையா தூருவாசருக் கேவல்செய்ய வில்லையா? மாடுபோலிரதத்தை யிழுக்கவில்லையா? கோவர்த்தனகிரியைக் கொடையாக வெடுக்கவில்லையா? குசேலனுக்கு அஷ்டயிஸ்வரியமுங்கொடுத் தடிமையாய்ப்போக எண்ணங்கொள்ளவில்லையா? அமசத்துவஜன் தன்னுடலை நடுபாதியா யறுத்தியவில்லையா? பாண்டியன் தன் தலையையருத்து காவேரி நதியிற் போடவில்லையா? நீமோத்திர மித்தூசை யளிப்பது தொல்லையா? இதற்குத்தரஞ் சொல்லையா? சற்றே என்மு னில்லையாவென்று கூவிக் கதறியுரைத்த வாக்கியங்களைக் கேட்ட,

கபீர் மனந்துலங்கி மிகவுங் கலங்கி இவருடைய தொனியான குரலுக்கிணையான இனிய வஸ்திவ்வுலகத்திலில்லவே யில்லை. ஆஹா தர்மத்தின் கிமித்தியம் எவ்வளவு திருஷ்டாந்திரங்கள் சொன்னர் எத்தனை புண்ய புருஷர்களுடைய திருநாமங்களைப் புகன்றார். ஆ ஹா! அந்த மாபலி பகவான் கேட்ட மூன்றடி மண்கொடுத்து ஸ்ரீமந்நாராயணருடைய திவ்விபதிருவடி தன் சிரமுடியாகக்கொண்டு அழியாச் சிரஞ்சீவிப் பட்டமும்பெற்றார் தேவகுருவான பிர ஸ்பதிக்குத் தெரியாத சஞ்சீவி மந்திரம் பெற்ற சுக்கிரன் தர்மஞ் செய்கிறதைத் தடுக்கப் போய் ஒரு சண்ணிழந்து லோபியென்று பேர்பெற்றான் இவ்வளவு இழிவான லோபகுணத்தை விடாமல் கேட்போர்க்குக் கொடாமல் யாதொரு லாபமும் பெறாதவனுவேனே? இல்லறத்துக்குத் தருமமும், துறவறத்துக்குத் தபமும், ஸ்திரீகளுக்குக் கற்பும், புருஷர்களுக்கு ஞானமும் முக்கியமென்பது மெய்யல்லவா? வியாபாரம் செய்யப் புறப்பட்ட நாமில்லறவா னென்பதற்கோர் தடையுண்டோ? இனி யில்லறத்துக்குத் துணையான தர்மத்தை என்னுயிருள்ள மட்டும் மறப்பேனு? யார் வந்தாலும் வெறுப்பேனு? பசியென்றால் பொறுப்பேனு? பொறுத் துயிருட னிருப்பேனு என்ற பற்பல யோசனையோடுங் கூடின மனதுடன் வழக்கப்படி பிஸ்மில்லாவென்று கொடுக்கப்போனர்.

அதற்கு மாயாமறையோர், அடா நீச்சா! இதுவே தப்பேச்சா! தபத்துக்கும் ஜபத்துக்கும் இகத்துக்கும் பரத்துக்குந் துணையான ஜீவகாருண்யத்தைநிக்கிரகித்து உயிர்களை வதைசெய்துண்ணும்படியான கொடிய வார்த்தையை எழுதியிருக்கும் கட்டுக்கதையான ஓர் புத்தகத்திலுள்ள ஏதோ ஓர் நாமத்தைச் சொல்லிக் கொடுக்க வந்தாய்? ஐயையோ! யாரோ பிராணப்பிள்ளையென்றல்லவோ நினைத்தேன். உத்தமனென்று மதித்தேன் பிரபுவேயென்று துதித்தேன். சந்தோஷத்தாற் குதித்தேன். சீலனென மனதிற்பதித்தேன் என்று கபீர் தலையை நாலுதிக்கிலுந் திருப்பித் திருப்பிப்பார்த்து அடா உன்னெற்றியிற் சகல மங்களமும் நிறைந்த திருநாமமணிந்திருக்கின்ற தென்றல்லவோ யிருந்தேன். பஸ்பமும் அணியாப் பாழ்முகனே துடுக்கர் மகனே விஷ்ணுவாம்ஸமான திருநாமமாவது சிவாம்ஸமான பஸ்பமாவது அணியாதிருக்கிற அறிவீனனே! பிருதிவி யம்ஸமான இத்தேகம் பிருதிவியேயாய்ப் போகுமென்று பலரும் அறியக் காட்டும்படியான திருநாமத்தையும் இந்தலலாட ஸ்தானத்தில் பரஞ்சோதி யிப்படியே இருக்கின்றதைப் பாருங்களென்று அனைவர்க்கும் அறிவுணர்த்துந் திருமணியையும் இன்றைக்கே யணிந்துக்கொள். தர்மமே உயிர்க்குத்துணையென்று துணிந்துக்கொள். துடுக்கரை வெல்லவந்த அடிக்கடி நினைந்துக்கொள். மனதே உன்னெண்ணப்படி நடக்கமாட்டானென்று கனைத்துக் கொள். திருநாமம் பகவானுடைய திருவடிகளென்றறிந்துக்கொள். பரஞ்சோதியே பரப்பிர்மமென்று தெரிந்துக்கொள். பரமாத்துமாவை யுனக்குள்ளாகவே யுணர்ந்துக்கொள். பிரம்மானந்தமே மேலானவின்பமென யுணர்ந்துக்கொள். எப்போதும் ஸ்ரீராமநாமத்தை துதித்துக் கொள். இவ்வுலகங் கானற்சலமென்று மதித்துக்கொள். எந்த வஸ்துவைக்கொடுந்தாலுஞ் சீதாராமென்று துதித்துக்கொடு வென்றச் சீரையை வாங்கிக்கொண்டார்.

இவ்வாக்கியங்களைக்கேட்ட கபீர் கருடனைக்கண்ட சர்ப்பத்தைப்போற் கலங்கி சகுண நிர்க்குணங்களில் நிர்க்குணமே யதிகமாயிருக்க, இவர் சகுணத்தையே மேன்மையாகப் பேசுகின்றார். ஆனல் யிதினுண்மையை நன்றாயறிந்துக்கொள்ள வேண்டுமென்று மறையவரை நோக்கி, ஓ பிராமணோத்தமரே! நிரூபமாயிருக்குங் கடவுளை இப்பேர்க்கொத்ததென்று சொல்லக்கூடாக் குறையால் பிர்மமென்றும் அனித்தியத்தைக் குறித்து நித்தியமென்றும் மலத்தைக்குறித்து நிர்மலமென்றும் குணத்தைக்குறித்து நிர்க்குணமென்றும் ஆங்காரத்தைக் குறித்து நிராங்காரமென்றும் நிர்நாமமான பரப்பிர்மத்துக்கு அனேக கற்பநாமங்கள் வேதத்திற் சொல்லுவதன்றி நிர்க்குணத்தையே மேன்மையாகப் பேசுகின்றது. நீர் அதை விடுத்து வேதவாக்கியத்தைத்தடுத்து சகுணமான

சீதாராமென்னுந் திருநாமத்தை மேன்மைப்படுத்திச்
சொல்லுங் காரணத்தைச் சவிஸ்தாரமாய்த் தெரியச்
சொல்லுமையர்வென்று கேட்க, அதற்குமாயாபிராமண
ரிந்தக் கபீரை முன்னஞ் சகுணத்தியானத்தினுற் பரி
சுத்தனுக்கி பின்பு பிரமக்ஞானத்தை யுணர்த்தவேண்டு
மென்கிற தாத்பரியத்தால் தர்க்கஞ்செய்யாமல் குதர்க்க
மாய்ப் பேசத் தொடங்கினர்.

அதெப்படியென்றால், ஓ சித்தர்களே! பகவான்கபீ
ரை நோக்கி, ஓ கபீர், சுத்தசூன்பமாய்ப் பரவெளியான
பரப்பிர்மம், வாக்குக்கும் மனதுக்கு மெட்டாதென்
றுரைத்த நீ வாக்கையும் மனதையும் மவுனமாக்காமல்
சஞ்சல மனதை ஞானேந்திரியங்களிற் செலுத்தி கர்
மேந்திரியமான வாக்கின் விவகாரமாடிக்கொண்டு தே
கேந்திரிய கரணஜீவனே நானென்றும், இவ்வலைத்துணி
முதலான வஸ்துக்க ளென்னதென்றும் பிர்மைகொண்
டுழலும் நீ அகமமதையற்று ஆத்மஸ்வரூபமே தானென்
றிருக்கும் பிர்மக்ஞானிக ளேத்தும் வாங்கமனோகோசர
மான பரப்பிர்மத்தை நினைத்தாற் பிரயோசனமேதுண்டு
தன்னையறிந்த பிர்மக்ஞானி யொரு கர்மஞ்செய்யக்கூடு
மா? ஓ அறிவில்லாதவனே! மண்ணின்மேல் மரக்கல
மோடுமா? காவலின்றி கட்டுப்பட்டவளே காந்தையன்
றிக் காவலாற் கட்டுப்பட்டவள் கற்புள்ளவளாவாளா?
சத் கதிக்காகத் தருமஞ் செய்பவனே சத் புருஷனன்றி
டம்பத்துக்காகச் செய்பவன் சத்புருஷனுவானு? தன்னை
யன்னியர் புகழ்வதே கீர்த்தியன்றி தன்னைத்தானே புக
ழ்ந்துக்கொள்வது கீர்த்தியாகுமா? ஒருவனுக்குத் தா
னைக்யமா யிருத்தலே வந்தனமன்றி கள்ளக் கும்பிடுவந்
தனமாகுமா? அதுபோல எங்கணும் பரிபூரணமாயிருக்
கும் பரப்பிர்மத்துக்கு ஐக்கியமாயிருப்பதே வந்தன
மன்றி வேறுபட்டு தியானிப்பது வணக்கமாகுமா? நீ
தான் தெரியச் சொல்லென்றுரைக்க, கபீர் ஓ பழமறை
யுணர்ந்த பார்ப்பானே! சகல சந்தேகங்களையுந் தீர்ப்
பானே! உடல் பொரு ளாவி என்னும் மூன்றையுந் தா
னென்று நினைக்கு மதத்தைச் சிகிச்சைசெய்து நிஷ்கிரிய
வஸ்துவாகிய பரப்பிர்மத்துக்கு ஐக்கியமாயிருப்பதே
உத்தமதானமென்றும் சத்தாதி வசனுதிகளை யடக்கி
அகங்காரமனதை மடக்கி நிராங்காரவஸ்துவாகிய பரப்
பிர்மத்துக்குள் ஐக்கியமாயிருப்பதே சாந்த நிதானமென்
றும் பிபீலிகாதி பிரமபரியந்தம் பரப்பிர்மமே நிறைந்
திருக்கிறதென்றும் அதில் நானென்னும் அகம்பாவ மே
தென்றும் பரிபூரண வஸ்துவாயிருப்பதே பிர்மத்தியான
மென்றும் நானென்னு மகங்காரத்தோடு கூடி யாதொரு
கிரியையுஞ் செய்யாமல் தானே வந்தகாரியங்களைப் பற்ற
ரச்செய்து அகம்பாவத்தையடியோடு மில்லாமல்கொய்து
சிதாகாசமாத்திரமாயிருப்பதே பிர்மக்ஞான மென்னும்
சாட்டிய நித்திரையில் நசித்திருந்ததுபோல் பிர்ம நிஷ்
டையில் மனம் நசித்து நசித்து பிர்மாநந்தாவேசம்மே
லிட்டு தன்னை மறந்திருப்பதே மகா மௌனமென்றும்
சொல்லலாமிந்த ஞானத்தையுமதிடங்கேட்கவில்லை சீதா
ராமென்று சொல்லச்சொன்ன காரணமேதோ அதை
தெரியப்படுத்துமையாவென்று தர்க்கிக்க,

மாயாபிராமணர் ஓ அறிவில்லாதவனே! யான்
சொல்லும் மர்மமறியாமல் கத்தரிக்காய்க்கு கால்கை
முளைத்தாப்போல பிஞ்சில் பழுத்து ராகத்தை யிழுத்து
தானம் நிதானத்தியானம் கியானம் மோனமென்றுளரு
கிறாய் உன்னையு முன்னப்பனையுங் கண்ணனையுங் கண்
ணப்பனையும் விழுங்கியுமிழாமல் தனக்குளோ ரணுப்
போல் வைத்திருக்கும் பிரமத்துக்கு நீ வேறுபட்டிருந்
தாலல்லவோ பிரமத்தை நினைக்கத்தகும் அடா மூடா!
சமுத்திரத்தையன்றி துளிவேறுகுமா அக்கினியன்றி
பொறி வேறுகுமா, பிர்மமன்றி நீ வேறுமா தானுகவும்
வானுகவும் பரிபூரணமாகவும் இருக்கும் பிர்மத்தைத்
தனக்கன்னியமாக்கி தியானிப்பது அஞ்ஞானமாமெய்ஞ்
ஞானமா குஞ்ஞானமா விஞ்ஞானமாமுக்கால் மூடனைக்
கொண்டாடும் முழுமூடனுக்கிணையான முட்டாளே!
ரூபமே தானென்றிருக்கும் நிரூபமுள்ள பகவானையே
நினைக்கவேண்டும் ஏனெனில் நிரூபமாய் நிர்ச்சலனமாயி
ருக்கும் பிர்மத்தாற் பிரபஞ்சமுண்டாச்சுதா? மாயா
சுரூபனன பகவானுற் பிரபஞ்சமுண்டாச்சுதா? சீக்கி
ரஞ்சொல்லடா வென்று தலைமேலோர் குட்டு குட்டினர்
அதற்கு கபீர் ஓ வேதாந்தந்தெரிந்த விப்பிரனே மறு
மாசிலாசுப்பிரனே நிரூபமாகிய பரப்பிரமம் நிர்ச்சலமா
யிருப்பதால் அஃதொன்றையும் நிர்மாணிக்கமாட்டாது.
மாயாசொரூபமான பகவானுலேயே நிர்மாணிக்கப்பட்ட
தாலும் காரணமான பரப்பிர்மத்தைத்தியானஞ் செய்
யாமல் காரியமான விஷ்ணுவை நினைப்பதாற் பிரயோ
சனமேதுண்டு நானற்ற பிர்மக்ஞானி மௌனமாயிருக்க
வேண்டியது சகஜந்தான் நானென்பதருதவர் நிஷ்கள
மான பரப்பிரம்மத்தைத்தியானிக்கலாமென்று பலசாஸ்
திரங்களும் முறையிடுகின்றதே நீர் மாத்திரம் வேண்டா
மென்று சொல்லுங்காரணமேதென்று நவில,

மாயாவிலாசனன பகவான் ஓ கபீர் சர்வம்பிர்மமய
மாயின் தானங்கொடுப்பவன் யார்? வாங்குபவன் யார்?
மோட்சமென்பதேது? மோட்சமடைகிறவன்யார்? ஆன
ந்தமென்பதேது? ஆனந்தத்தை யனுபவிப்பவன் யார்?

ஆசான் யார் மாணுக்கன் யார் இகபரமென்பதேது இக பர சவுக்கியங் கொடுப்பவன் யார் ஜனனமரணமேது ஜனன மரணத் துன்பத்தை யனுபவிப்பவன் யார் பிர பஞ்சமேது பிரபஞ்சத்தைச் சிருஷ்டிப்பவன் யார் சிரு ஷ்டி ஸ்திதி யேது ரட்சிப்பவன் யார் ஸ்திதி நாசமேது சங்கரிப்பவன் யார் ஜாக்ர ஸ்வப்பனமேது இதைக் கற் பிப்பவன் யார் சவப்பன சுழுப்தியேது விகற்பப்படுத்து கிறவன் யார் தாய் தந்தையேது பிறந்தவன் யார் நீயென் பதும் நானென்பதும் யேது மாயையென்பதேது பிர்ம மென்பதுதானேதென்று வகுப்பற்றுப்போம் இப்பேர் க்கொத்த பிர்மக்ஞானந் தெரிந்தவன்தானே இந்தக் கந்தையைக்கொடுத்தால் தாயார் வந்துவிடுவாளே துன் பத்தைத் தந்துவிடுவாளே என்று வெகுநேரங் கொடுக் காமல் பின்னிட்டாய் வாய்ஞானம் பேசுவதற்கு மாத்தி ரம் முன்னிட்டாய் வாச்சாக்ஞானம் பேச்சாமீனம் என் கிறதறியாயோ யானுரைக்கு மிரகசியத்தைக் குறியா யோ எதுகாலபரியந்த மொருவனுக்கு ஜாக்ராவஸ்தை யிற் சுழுப்திநிலை வராதோ அதுபரியந்தம் நீ நானென் கிற விவகாரந் தொடர்ந்தேயிருக்கும் அன்றி ஊமை பேசுவானு பதிவிரதை யொருவரோடு பரியாசஞ் செய் வாளா புண்ணியவான் பிரண்டு பேசுவானு சுழுப்திநிலை யுள்ளவன் ஒன்றைத் தியானஞ்செய்வானு செய்யமாட் டானுதலால் அத்துவித பாவந்தெரிந்து நீ பிர்மத்தைத் துவிதப்படித்தி தியானிக்கலாகாது எவனொருவன் அபி ன்னத்தைப் பின்னப்படுத்துவானே அவன் முன்னம் பிர்மத்துக்கு வேருகவேண்டும் இப்படி வேருக இருப்ப வனுக்கு அபின்ன பாவங் கூடவே கூடாது. அபின்ன மான பிர்மமே தானுனவன் பின்னபாவஞ் செய்யக் கூடாது பின்னப்பட்டிருப்பவ னத்துவிதத்தைப் பேச லாகாது.

ஏனெனின் பரத்தை பத்மினியாகமாட்டாள் பத் மினி பரத்தையாகமாட்டாள் அதுபோலவே அத்துவித பாவமறிந்த உனக்கு துவிதபாவமேன் துவிதபாவமுள்ள வனுக்கு அத்துவித பாவமேன் இதுகளின் மர்மம் நன் ருயறிந்துக் கொள்வதற்கு நீ சிறுபையன் பாச்சிசோச்சி யென்பவன் வேதங்களை யோதாதவன் தர்க்கஞ் செய்யப் போதாதவன் சின்னஞ் சிறுபிள்ளை பேசுவதெல்லாஞ் சொள்ளை அறிவில்லா வெள்ளை கொஞ்சிப் பேசுங் கிள்ளை நீயாவாயா யென்போ லாண்பிள்ளையென்று பல வார்த்தைகள் புகன்று மீசையை முறுக்கிக் கோபத்தை பெருக்கி அடா கபீர்! நா நீ யென்னும் பாவமுடன்அபி மானமுமுள்ள நீ பிஸ்மில்லாவென்னும்மொழியின் மர்ம மறியாமற்சொன்னுய் யாவரும்முன்னஞ்சகுணத்தியான த்திற்றேர்ந்து இகபரங்களனித்திய மென்றறிந்தெல்லா ஆசையுந்தீர்ந்து தேகாபிமானங் களிலிருந்து பேர்ந்து நிர்க்குணத்தியானத்தைக் கைகொள்ளவேண்டும் அப்ப படிக்கின்றி நின்றபடி படுத்து தலையையுடைத்துக்கொள் வதுபோல ஒன்று மறியாச்சிறுவனுகிய நீ ஆதியிலேயே நிர்க்குணத்தைத் தியானித்து இகபரத்துக்கு முதவாப் பிரஷ்டனுக வேண்டாம் சிறு குழந்தைகள்மணலால்வீடு கட்டி விளையாடுவதற்கிணையான வாசாக்ஞானம் பேச வேண்டாம் பேசினுலப்படியே யிருக்கவேண்டாமா அப் படி யிருக்காமல் வாய்ஞானத்தாலென்னை வெல்ல வந் தாயே இதற்குத்தரஞ்சொல்லக் கூசிநொந்தாயே யாத லால் இன்றுடன் நிர்க்குணபாவத்தை விட்டு நாரதாதி ரிஷீஸ்வரர்களெல்லாம் எந்த திருநாமத்தைத் தோத்தி ரஞ் செய்கிருர்களோ எவனுடைய அருளால் நிர்க்குண ஞானத்தை யடைந்தார்களோ எதனுற்சகலபாவங்களும் நசித்துப்போகுமோ அந்தத் திருநாமத்தை யாரிடத்தி லாவ துபதேசம் பெற்றுக்கொண்டு அதை நெடு நாள் தியானஞ்செய்து பரிசுத்த மனதுடையவனுகிப் பின்பு நிர்க்குணத்திற் பிரவேசிக்கலாமப்படிக் கன்றி நிர்க்கு ணத்தால் திரிமூர்த்திகளையும் நிக்கிரகித்த தாருகாவன ரிஷிகளைப்போல பங்கப்பட்டுப் போகவேண்டாமென்று பயமுறுத்தி கபீர் மனதை சகுணத்தில் ஸ்திரமாய் நிறு த்திப் போய்வருகிறேனென்று மாயாமறையோன் மாய மாய் மறைந்துபோனுர்.

கேட்டீர்களோ சித்தர்களே! இப்படி பலவந்தமா யாண்டுகொண்டு பகவான் மறைந்தபின் கபீர் யோசிக் கின்றுர். நாம் தியானத்தைக் குறித்துக்கேட்க ஞானத் தைப் பேசிப்போனு ரப்படிப்பேசிப்போனுலும் முதற் படியில் கால்வைத்தேருமல் மூன்றும்படியிற் பாய்ந்து நிலத்திற்சாய்ந்து தலையை யுடைத்துக்கொள்வது போல சரிகை கிரிகையோகமென்னும் மூன்றையுங்கடந்தபிரம தியானத்தையும் பேசினபடி நடக்கக்கூடாமல் இத்தூசி யின்மேலாசையாய் மோசம் போனேனே வாசாக்ஞா னம் அறியா மாந்தரை வெல்வதற்குறிதாகும் அறிந்த அநுபவிகளின்பா லோர் வார்த்தையும் பேசுவதற்குத வாது அன்றி பேச்சின்படி நிற்கப்பெருமுச்சிவரும் ஓதின படி சாதனஞ் செய்யாதவன் பேதையரிலும் அதிபேதை யென்பதற்கோரையமேயில்லை சகுணத்தைக்கடந்த நிர்க் குணத்தைப்பேசின நாம் நிர்க்குணத்தில் நிற்பது வெகு அரிதாகவே தோன்றுகின்றது. ஏனெனின் ரூபமுள்ள சகுணத்திலேயே நிலைக்காத மனம் நிர்க்குணத்தில் நிற் பது மிகவுந்துர்ப்பலந்தான் ஆனுலும் மோக்ஷ இச்சை யுள்ளவர்க்கு யெந்தத்தியானஞ்செய்யவேண்டுமோ நமக்

குத் தெரியவேயில்லை, இதைப்பரிசுத்தமான ஓராசான் பால் கேட்டுத்தெரிந்துக்கொள்ளும் பரியந்தம் இப்போ துரைத்துபோன பிராமணருடைய வாக்கியத்தையே நம் பியிருக்கலாமென்று பகவானை அத்தியந்த பக்தியுடன் தியானஞ்செய்துக்கொண்டேயிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜி சித்தர்சொல்லத் தொடங்கினர்.

பிராமணரூபமாய்வந்த பகவானுக்கு கபீர்

வஸ்திரதானஞ்செய்த அத்தியாயம்

முற்றிற்று.

---

நான்காவது

## கபீருக்கு பகவான் பகீரிரூபமாய்வந்து நிஜதரிசனம் கொடுத்த அத்தியாயம்

---

மர்மரந்திரத்திற் சுவாசத்தையேற்றி ஜீவர்களையை போற்றி நாதாந்தவசமாயிருக்குந் தன்யர்களே! மிகவுங் கண்யர்களே! புண்ணியவானுன கபீர் இந்தக்கதையின் மேல் வாஞ்சையாயிருந்த நாம் வாசாக்ஞானியென்பதற் கோர் சந்தேகமேயில்லை வந்தவருரைத்துப் போனதே உண்மையான சொல் யென்று பசுமரத்தாணிபோற் பக வத்தியானத்திற் பதிந்திருக்கையி லிவரை பரிசோதிக்க வேணுமென பகவானேர் பகீரிவடிவுகொண்டு கபீர்பக்க லடைந்து ஓ புண்யவானே! நீ மிகவுந்தயாளகுணமுடை யவனெனப் பலருஞ் சொல்லக் கேள்விப்பட்டு மெள்ள வராமல் துள்ளிவந்தேன். எனக்கோவஸ்திரமில்லை உமது கையிலிருக்கும் வஸ்திரத்தைக் கொடுத் தெனக்குள்ள தாரித்திரத்தைப் போக்கலாகாதா? உமதஞ் ஞானமடி யோடும் வெந்து நீறுகாதா? பாபங்களெல்லாந் தலையெ க்காமற் சாகாதா? லோபகுணம் குறைந்துபோகாதா? ஓ தருமஸ்வரூபனே? திவ்வியமான கியாபனே? லோபி யைப்போன்ற பாபியும் விபசாரியைப்போன்ற அபசாரி யும் இவ்வுலகிலில்லை யென்பதுண்மையல்லவா? உமக்கு விரித்துச்சொல்லவா! புருஷனுக்குப் புண்ணியமும் காந் தைக்குக் கற்புமன்றி வேறு துணையுண்டா! நான்சொல் லும் வார்த்தையிற் பழுதுண்டா! உம்மை லோபகுண த்தி லமிழ்த்தியதுண்டா? அல்லது வேறே யெண்ணங் கொண்டா வென்கிற பற்பல வார்த்தைகளாடும்போது கபீர் ஓ முற்றுந்துறந்த பகீரியே! இல்லையென்று கேட் கும் பிகாரியே! நீராசைகொண்டது இந்த வஸ்திரத்தின் மீதுதானே இந்தாரும் ஜெயசீதாராமென் றுரைத்துக் கொடுக்கப்போனர்.

அதுகேட்ட மாயா பகீரி மிகவுங் கோபங்கொண்ட வர்போல் அடா துர்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! நித்ய நிர்மல நிர்விகற்ப நிரஞ்சன நிராதார நிரூப நிஷ் களங்க நிர்ச்சங்க நிர்ச்சேத நிர்நாம நிஷ்காம நிர்க்குண நிராங்கார வஸ்துவாகிய பரப்பிர்மமே ஆதிதெய்வமெ னத் தெரிந்திருந்தும் சீதாராம் ஜெயராமென்றூர் மனி தன் பேரைப் புகழ்ந்துகொடுக்கவந்தாய் நிரூபமான கட வுளை விடுத்து வேதவாக்கியத்தைத் தடுத்து ரூபமுள்ள தெய்வத்தை நினைக்கலாமா எங்கனும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் சச்சிதானந்தக் கடவுளை மறக்கலாமா என்றுங்கேட்காத வார்த்தைச்சொன்னுப் இனியுன்னரு கிலும் நிற்கக்கூடாதென் றுரைத்துப் போகும்போது கபீர் ஓ ஸ்வாமி! உமக்கு தத்தஞ் செய்ததை வாங்கிக் கொண்டுபோகாமல் என்னை அபராதியாக்கிப் போக லாமா? இதனுலியான்நரகத்துக்கேகலாமா? ஒருவருக்கு தத்தஞ்செய்த வஸ்துவை வைத்துக்கொண்டு கொடுக் காதவனை எமதூதர்கள் தண்டாலடித்து மூடக்காமற் போவார்களா வாக்கைக்கொடுத் தொருபோக்கைக் கா ட்டுவோர்கள் நீதியுள்ளவர்களா வார்களா ஞானறியாக் குழந்தையென்றறிந்தும் பகவா னணியத்தகுந்த இந்தப் பீதாம்பரத்தின்மே லிச்சைகொண்டும் வாங்காமற்போ வது நியாயமா என்னை லுத்தனுக்கிப் போவது சகாயமா அறிவில்லாக் குழந்தையின்மே லன்புகூர்ந்து வஸ்திரத் தைத வாங்கிக்கொண்டு போமையாவென்று மிகவும் வே ண்டிக்கொள்ளும்போது மாயாபகீரி கபீரை நோக்கிப் போ போ வேதவிரோதமான வார்த்தையைச் சொன்ன உன்னிடத்தில் ஒரு கவடி வாங்கினுலும் பாபம் வந்து நேரிடுமென் றுரைக்க,

கபீர் ஓ சுவாமி! ஞானறியாக் குழந்தையன்றிஞான மார்க்கம் நன்றுயறியே னுனுலும் அக்கினியா லுருகி நிரூபமாயிருக்கிற நெய்யும் குளிரா லுரைந்து ரூபமாய்த் தெரியும் நெய்யும் வேருகுமா? அன்றி நிரூபமாயிருக்கிற ஆபரணமும் நிரூபமாயிருக்கிற பஞ்சும் ரூபமாயிருக்கிற வஸ்திரமும் நிரூபமாயிருக்கிற வர்னமும் ரூபமாயிருக் கிற சித்திரமும் நிரூபமாயிருக்கிற பர்வதமும் ரூபமா யிருக்கிற விக்கிரகமும் நிரூபமாயிருக்கிற இரும்பும் ரூப

மாயிருக்கிற ஆயுதமும் நிரூபமாயிருக்கிற மண்ணும் ரூபமாயிருக்கிற பாத்திரமும் நிரூபமாயிருக்கிற ஜலமும் ரூபமாயிருக்கிற லவனமும் வேறாகாதுபோல் நிரூபமாயிருக்கிற பிர்மமும் ரூபமாயிருக்கிற பகவானும் வேறென்று சொல்லக்கூடாது. அன்றி நிரூபமாயிருக்கிற பிர்மத்திலும் ரூபமாயிருக்கும் பகவானே மேன்மையென்று சொல்லத்தகுமாதலால் அந்தபரந்தாமனுடைய திவ்விய திருநாமத்தையே யாதொரு காரியத்துக்குஞ் சிந்தனஞ்செய்ய வேண்டுமென்றுரைக்க. மாயா பகிரி ஓ கபீர்! ஆசானுக்கு மாணாக்கனுபதேசஞ் செய்கிறதைப் போல சொல்லவந்தாய் யதார்த்தவஸ்து பொன்னா ஆபரணமா, மண்ணா, பாத்திரமா, பஞ்சா, வஸ்திரமா, அயமா, ஆயுதமா, கல்லா, விக்கிரகமா, ஸ்வர்னமா, சித்திரமா, நிரூபமா, ரூபமா சொல்லும் பிள்ளாயென்று கேட்க.

கபீர் ஓ பெரியோரே! எனக்குத்தரஞ் சொல்லச் சிறியோரே! நீர் நன்முய்த் தெரிந்தவராயிருந்தும் அறிவில்லாக்குழந்தையாகிய அடியேனை ஏமாத்துகிறீர் எதார்த்தவஸ்து நிரூபமாகிய பரப்பிர்மமே யானாலும் அதுவே ஆலாங்கட்டியைப்போல் ரூபமாகிப் பகவானென்கிற பேர்பெற்று இவ்வுலகத்தை ரட்சிக்கின்றார். அன்று சூரியனுக்குக் கிரணமும், சந்திரனுஞ் சீதளமும், அக்கினியும் உஷ்ணமும், தீபமும் பிரகாசமும், ஜலமும் ருசியும், தனமுங் கனமும் சாபமும் கோபமும், கோபமும் பாபமும், ஆசையும் பாசமும், இச்சையுஞ் சென்மமும், சென்மமும் கர்மமும், கர்மமுந் தேகமும், தேகமும் நரகமும், நரகமும் துக்கமும், தானமுந் தயவும் நிதானமும் சாந்தமும், ஜபமுந் தியானமும், ஞானமும் மோனமும், நிஷ்டையும்நானென்பதும், அஞ்ஞானமென்பதும் மாயையும் பிரபஞ்சமும், நிராசையுஞ் சன்யாசமும், பொறுமையுந் தவமும், ஜீவகாருண்யமும் விரதமும், குருவுந் தெய்வமும், தெய்மும் பிர்மமும், பிர்மமும், ஆனந்தமும், ஆனந்தமும் மோட்சமும் வேறாயிருந்தாலல்லவோ பகவானும் பரப்பிர்மமும் வேறென்று சொல்லக்கூடும். அன்றியும் ரூபமாகிய தேகாதிகளே நானென்றிருக்கும் நாமரூபமாகிய பகவானையே தியானிக்கத் தகுந்ததென் றுரைக்க,

அதற்கு பகிரி ஓ கபீர்! பிர்மப்பிரளயத்தி லழுந்திபோகும் ரூபத்தையும் க்ஷணபங்கதேகத்தையும் சத்தியமென்று நம்பலாகுமா? சகுணத்தியானத்தால் சனனமரணத் துன்பமொழிந்து போகுமா? விஷத்தை அமிர்தமென்று நினைக்கு மறிவீனரைப்போல வெகு கோமாய்க் குதர்க்கஞ் செய்கிறாய் விஷத்தைக் குடித்திறப்பதைப் பார்க்கிலும் அமுர்தத்தையுண் டழியாமலிருப்பதுத்தமமானதைப்போல அநித்திய தெய்வத்தை நம்பி அதோகதி யடையாமல் நித்தியானந்தத்தை யடையடாவென பலதரஞ்சொல்லியுங் கேட்காத உன் மூடத்தனத்துக்கு நானென்ன செய்யட்டுமென்றுரைக்க,

கபீர் ஓ சாதுவே! மரணத்தைத்தரும் பாம்பின் விஷம் மாணிக்கமானதுபோல சாந்தகுணத்திற் பிரதிபலித்த பிர்மமாகிய ரூபமுள்ள பகவான் பிரமானந்தத் தோடஷ்ட அயிஸ்வரியமுந் தரும் ஆண்டவனா யிருக்கின்றா ரவரையென்றும் மறக்கவேகூடாது அன்றி பிர்மப்பிரளயத்தி லெல்லாஞ் சூனியமாகும்போது சீவர்களுஞ் சூனியமே! சீவர்களை ரட்சிக்குந் திருமாலின் திருவுருவுஞ் சூனியமே! ஆனாலும் சுழுப்தி யவஸ்தையி லிருக்குமிருளிலும் ஜாக்ராவஸ்தையிலுள்ள கரணங்களே மேலானதுபோல நிரூபமாயிருக்கிற பரப்பிர்மத்திலும் பக்தர்கள் நினைத்த வண்ணமான ரூபமெடுத் திரட்சிக்கும் பகவானே முக்கியவானென்றுரைக்க, மாயா பகிரி அடா முட்டாளே! பிர்மமில்லாவிட்டால் மாயையேது திரிகுணங்களேது திரிகுணப்பிரதி பிம்பரான திரிமூர்த்திகளேது நிச்சயந்தெரியாமலே குளறுகிறாய் பிர்மத்தையேயுறுதியாய் நம்பியிரும் பிள்ளாயென்றுரைக்க, கபீர் ஓ முழுதுணர்வோரே! பகவான் ஜலரூபமாய் வருவிக்காவிட்டால் பிரபஞ்சமேது சர்வசராசர ஜீவர்களேது பிர்மமென்று நினைக்கிறவர்களேது, நீரேது, நானேது ஆதலால் ஜலரூபமான நாராயணனை ஒருவர் மறக்கத் தகுந்ததோ? ரட்சிப்பவனைவிட மேலான தெய்வம் ஒன்றுண்டோ? போம்போம் என்னவார்த்தையைப்பேசுகிறீரென்று நவில,

பகிரி ஓ கபீர்! திரிமூர்த்திகளையும் மாயையும் பிரபஞ்சத்தையும் சுவப்பனகாட்சிபோலவும் சுத்தகாரசிதம்போலவும் நச்சு சர்ப்பம்போலவும் முழுதும்மித்தையென்றும் பிரம்மமே சத்தியமென்றும் சொல்லும் வேதாந்தத்தை விடுத்து பிரம்மமே பகவானென்றும், பகவானே நித்திய தெய்வமென்றும் வாயில்வந்தபடி பேசுகிறாய், நிரூபமாயிருக்கிற பரப்பிரம்மத்துக்குச் சலனமுண்டா சலனமில்லா வஸ்துவை பகவானாகிபிரபஞ்சத்தை ரட்சிப்பது யெப்படியாகும் சூரியனிலிருட்டும், ஆனந்தத்திற் றுக்கமும், பிரியத்தில் கோபமும், ஆகாயத்தில் ரூபமும் பதிவிரதைக்குச் சலனமும் உண்டாயிருந்தாலல்லவோ நிரூபமாகிய பரப்பிர்மத்திலிருந்து ரூபமாகிய பகவானுண்டாவார், அன்றி நிராங்கார வஸ்துவாகிய

பரப்பிரம்மம் ஆங்காரவஸ்துவாகிய விஷ்ணுவெப்படியா கும் உனக்கிந்த பயித்தியம் எத்தனை நாளாய்ப் பிடித்தி ருக்கிறதென்று நகைக்க, கபீர் ஒ விருத்தரே! ஆகாயத் திற் சுழல்காற்றும், சுத்தசூன்யமாகிய சுழுப்தியிலிருந்து நினைவும் ரூபமில்லாச் சுக்ல சுரோணிதத்தில் ரூபமும் அண்டத்திலில்லா நானுவித தோகையின் வர்னமும் வித் திலில்லாச் சுகந்தம் புஷ்பத்திலும் விருட்சத்திலில்லா மதுரம் கனியிலும் எப்படி தனக்குத்தானே யுண்டாயி ற்றோ அப்படியே நிர்ச்சலன வஸ்துவினின்றும் தனக்குத் தானே சலனமுள்ள பகவானுண்டாகி இவ்வளவு விசித் திரங்களைச்செய்தார். அல்லாமல் பகவானொருவனில்லா மற் போனல் மாயையேது பஞ்சபூதங்களேது பஞ்சவர் ணங்களேது, பிரபஞ்சமேது, மோட்சமும் நரகமும், ஆனந்தமும் துக்கமும், புண்ணியமும் பாவமும், குரு வும் சிஷனும், தொழுதலும் துதிப்பதுமேது, அசரசர ஜீவர்களேது, நீரேது நானேது தர்மமேது தானமேது போபோ மூகபாவத்தைப்பேசும் முதுமையனே என்று உரைக்க,

மாயாபகிரி ஒ கபீர்! தருமமேது தானமேதென்று நான்கேட்டவஸ்திரத்தைக் கொடுக்கமாட்டீரோவென்று கேட்க, கபீர் நீர் துணிந்து என்னுயிரைக் கேட்கினும் தருவேன், இந்த வஸ்திரம் பெரிதோவென்று கொடுத்து இனியும்மிருப்பிடம் போய்ச்சேருமென்று புகல, மாயா பகிரி வஸ்திரத்தை வாங்கிக்கொண்டு ஒதனவானே! கன வானே! உனக்கின்னம் ஆத்மஞானந்தெரியவில்லை ஏனெ னில் கர்மத்திலும் பக்தியிலும் வைராக்கியம் மேன்மை வைராக்கியத்திலும் ஞானம் மேன்மையென்று வேதத் தில் முறையிட அதைத்தள்ளி பக்தியையே பிரதான மாகச்சொல்வது அறியாமையாகுமென் றுரைக்க கபீர் ஒ வாசாமுறைபேசும் வாயனே! மேல்கிழக்கு முபாய னே! முன்பு பக்தியிற்றேறி பின்பு வைராக்கியத்தைக் கைக்கொண்டு பிரபஞ்சத்துக்கு வேறாகி ஞானசாதனஞ் செய்யவேண்டும் அப்படிக்கின்றி முதற்படியிலிருந்தே றாமல் மூன்றும்படியிற்றுண்டி முகத்தை யுடைத்துக் கொள்ளுகிறதைப்போல் பாலியனுகிய நானிப்போதே ஞானமார்க்கத்திற் பிரவேசித்தால் பிரயோசன மேது ண்டு? ஆதலால் முன்னம் பக்தி முதிர்ச்சியினுற் பக்த வச்சலனுகிய பகவானை என் கண்குளிரப்பார்த்து அவ னுடைய திருவடிகளிலென் திருக்கண்களையுஞ் சேர்த்து மனதையுகு ஞானந்தகாரக் கூபத்தில் விழாமல் சாத்து சகல சந்தேகங்களையும் பேர்த்து. நிர்க்குண தியானபர னுகிப் பந்தபாசங்களைக்கழித்து ஞானநிஷ்டையிற்செழி த்து ஆனந்தபேலிட்டாற் நகைழுத்து அகமமதையா லழி யாமற் பிழைத்து தன்னை மறந்த ஆரூடஞ்ஞானி யாவே னென்று சொல்ல,

மாயாபகிரி ஆஹா! க்ஷணபங்கமான இந்தத்தேகத் தை நித்தியமென்றல்லவோ இவ்வளவு எண்ணங்கொ ண்டிருக்கின்ரு பொருவேளை உன்னிஷ்டப்படி பகவான் முடித்தாலும் முடிப்பார், புண்ணியவானுன நீ நினைத்த படியே முடியட்டும் ஆனாலும் நிர்ச்சலனமாயிருக்கும் பரப்பிரம்மத்திலிருந்து பகவானுண்டானதும் பகவா னல் பிரபஞ்சமுண்டானது மெப்படியோ அதைச்சற் றே தெரியச் சொல்லுமப்பா வென்றுகேட்க, கபீர் ஒ மூதுணர்வோரே! இப்பேர்க்கொத்ததென்று மனதினல் நினைக்கவும் வாக்கினுற் சொல்லவுங்கூடாததான பரப் பிரம்மத்திலிருந் துண்டானது சுழுப்திக் கிணையான அவ்வியக்த மென்கிற மூலப்பிரகிருதி யென்றும் அதி லிருந்துண்டானது முக்குணங்களென்றும் திரிகுணங்க ளில் முதன்மையான சாத்வீகத்திற் பிரதிபலித்த பிர் மமே பகவானென்றும் சொல்லப்படும். அப்பகவானல் பிர்மாவுண்டாகி அவனு லிவ்வெழுவகைத் தோற்றங்க ளான சராசரங்களும் அண்டபிண்ட பிர்மாண்டங்களும் உண்டாயிற்று.

நிரூபமா யிருக்கும்போது பிர்மமென்றும்ரூபமான போது விஷ்ணுவென்றும் அப்பகவானுக்கே சொல்லப் படும். விஷ்ணு பரப்பிரம சுரூபமென்று வேதத்தில் முறையிடுகின்றது ஆதலால் விஷ்ணுவையே ஆதிதெய்வ மென்று நம்பவேண்டும். அல்லாமல் பகவானவர் முதல்முதல் ஜலரூபமாய்ப் பிரகாசித்தார். அதனுலேயே நாராயணன் என்கிற பேர் உண்டாயிற்று (பகவான் பா தத்திலிருந்து கங்கையுண்டாச்சு தென்பதின் தாற்பரி யம் ஜலரூப னென்பதாம்) அன்று ஜலம் வருஷித்ததே எங்கும் பச்சையாய் விளங்குகிறபடியால் பச்சைவர்ண னென்றும், மேகமாய்வருஷித்தது ஆதலால்மேகமேனிய னென்றும், சமஸ்த சுபமங்களங்களும் அவர் நினைத்த மாத்திரத்தி லுண்டாகின்றதால் அவருடைய இருதய மான மார்பகத்தில் சுபங்கள் விளங்கிய மஹாலட்சுமி வீற்றிருக்கிறளென்றும், ஜலரூபமான அந்த மகானுபா வர் பூமியைச்சக்கரம்போற் சூழ்ந்திருக்கிறபடியால் அவ ருடைய ஆயுதஞ்சக்கரமென்றும், எப்போதுந் தொனிக் கும் வாரிதியிலிருந்து சமஸ்தங்களுக்கு மாதாரமாகிய அகார, உகார, மகார மென்னும் திரியாக்ஷரங்களுங் கூடிய பிரணவாக்ஷரமே யுச்சரிக்கிறபடியால் சங்கை யுடையவனென்றும், ஜலத்தின்மத்தியி லிப்பூமியுண்டா

னதால் பூமியே பிர்மாவென்றும் பிருதிவிக்கு நான்குதிக்குகளிருக்கின்றபடியால் சதுர்முகமென்றும் இப்புவியே சிருஷடிக்காதி காரணமாதலால் சிருஷ்டிக்கர்த்தாவென்றும், இப்புவி தன்வல்லமையினுலந்தரத்தி லிருப்பதால் தன் சக்தியான ஆதிசேஷன் முடியின்மேலிருக்கிறதென்றும், சக்தியே தனக்காதாரமானதால் ஆதிசேஷன்மேல் சயனிப்பவனென்றும் அக்கினியின்மே ஜலரூமனுனவிஷ்ணுவிருப்பவனென்றும் ஜாலம்ஸ விஷ்ணுவால் அக்கினியம்ஸனுன பரமசிவன் தாபத்தை நீக்கிக்கொண் டிருப்பதைப்பற்றி ருத்ரப்பிரியனென்றும் சமஸ்த ருசிகளுக்கும் ஆதாரமான ஜலமயனுனதால் க்ஷீரசாகரனென்றும் பக்தர்களுக்கு வேண்டிய வரங்களித்ததால் வரதனென்றும், எங்கும் வியாபித்திருப்பதால் விஷ்ணுவென்றும், அழியாமலிருப்பதா லச்சுதனென்றும் பாபங்களை அரிப்பதாலரியென்றும் அண்டர்களிருதயத்தி லெப்போதும் ரமிப்பதால் ராமனென்றும் விளையாட்டா யிச்சகத்தை யுண்டாக்கினதால் லீலாவினுேதனென்றும் சமஸ்தவஸ்துக்களிலும் ஒட்டியும் ஒட்டாம லிருப்பதால் கபடநாடகனென்றும் தன்னை நம்பினுேர்க் கழியாப்பதமீதலால் வைகுந்தநாதனென்றும் இதுவே அவருடைய ரூபமென் றுணர்ந்துக்கொள்ளக் கூடாததால் பிர்மமென்றும் பக்தப்பிரியனுதலால் பகவானென்றும் சமஸ்தலோகங்களுக்கு மதிபதியாதலால் ஜகன்னுதனென்றும் அடியார்களுக்கடிமை செய்பவனுதலாற் பக்தவச்சலனென்றும் நித்துரை வருவதும் நீங்குவதும் முதலான தன்மாயை யாராலுமறியக் கூடாமற்செய்பவனுதலால் மாயனென்றும் காணுதற்கரியவனுதலாற் பராத்பரனென்றும்நாரதாதி ரிஷிஸ்பரர்களாற் றுதிக்கப்பட்டவனுதலால் ருஷிகேசவனென்றும் மிகவுந் தபஞ்செய்வோர்கள் முன் பிரசன்னமாகிறவனுதலால் மாதவனென்றும் சமஸ்தத்துக்கு மாதாரபுருஷனுதலால் ஆதிமூலமென்றும் சமஸ்தலோகளும் ஜலாம்ஸத்தாலுண்டாவதால் சர்வசிருஷ்டியென்றும் சமஸ்தலோகங்களுஞ் சலத்தாள் ரட்சிக்கப்படுகிறதால் சர்வஸ்திதியென்றும் சமஸ்தமும் ஜலமென்னுந் தன்னிலடங்கிப்போவதால் சர்வசம்மாரனென்றும் தசாவதாரங்களால் இவ்வுலகில் துஷ்டனிக்கிரகம் சிஷ்டபரிபாலனஞ் செய்தும் செய்பவதானுலால் மச்ச கச்ச வராம நாரசிங்க வாமன பரசுராம ஸ்ரீராம பலபத்ர ராமகிருஷ்ண கற்கியென்றும் பலபேர்கள் துதிப்பதாலும் வேதத்தாலும் முறையிடுகின்ற இப்பேர்க்கொத்த பகவானைக் கனவிலும் மறக்கத்தகுந்ததோ, மறக்காமல் சிந்திப்பவர்களுக்கோ ரிடையூறுமுண்டோ பகவானைப் புகழாத வேதாகமசாத்திரங்களுமுண்டோ! ஓ பகீரியே! பிர்மம் பிர்மமென்று பலதரம் பிதற்றுகிறீரே! அந்தப் பிர்மத்துக்குப் பேச்சுண்டா! மூச்சுண்டா! இல்லை ஆதலாலினி யென்னுடன் குதர்க்கஞ் செய்யாமல் வாயில்வந்தபடி வையாமல் என்னுறுதியைக் கொய்யாமல் என்மனம் வேருகும்படியான சொல்லம்புகளெய்யாமல் உமதிருப்பிடத்துக்குப்போய்ச் சேருமையாவென்று நவில,

மாயா பகிரி இன்னஞ் சோதிக்கவெண்ணி சபாசு சபாசு நல்வார்த்தைகளைச் சொன்னுய் அகண்டம், அகண்டாகண்டம், அசலம், ஆனந்தம், அப்ரமேயம், சின்மயம், தேஜோமயம், சித்விலாசம், நித்யம், சத்யம், நிஷ்களானந்தம், பரப்பிர்மம், பரமேஸ்வரம், சுயம், துரியம், துரியாதீதம், விஸ்வம், பூரணம், விஸ்வாதீதம், விமலம், விசேஷம், வேதாதீதம், சுபம், சுந்தரம், சுயம்பிரகாசம் என்கிற நிஷ்களங்க நாமங்களுடைய நிராங்காரவஸ்துவாகிய பரப்பிர்மத்தை விடுத்து ஆங்காரத்துடன் அவுணர்களையெல்லாங் கொன்ற அரியென்பனை ஆங்காரத்தால் தோத்திரஞ் செய்துக்கொண்டே வந்தாய் நிச்சயமறியா அறிவீனனே! விதை முன்னதா? விருட்சம் முன்னதா? தந்தை முன்னவனு? தனயன் முன்னவனு? ஆண்டவன் முன்னவனு? அடிமைமுன்னவனு, தமையன் முன்னவனு, தம்பி முன்னவனு, சொல்லும் பிள்ளாயென்று அதட்டிக்கேட்க,

கபீர் ஓ பிகாரி! பனங்காட்டுநரி ஸலஸலவென்பதற்குப் பயப்படுமா? பதிவிரதை மன்மதபாணத்துக்கிடங்கொடுப்பாளா? வீரன் எதிரிக்கு முதுருகாட்டி யோடுவானு? பேரிபத்தை யாசித்தோன் விஷயானந்தத்திலமிழ்வானு? திடநிச்சய முள்ளவன் துக்கத்தால் வாடுவானு? தைரியசாலி அவதைரித்துக் குட்படுவானு, படான், அதுபோல வாய்ஞானம் பேசுமும்மை நனெரு பொருளாய் மதிப்பேனு, ரூபத்தில் நிலைக்காதமனம் நிரூபத்தில் நிலைக்குமா, ஆகாயத்தி லேணிவைத்தேறக் கூடுமா, விருக்ஷமில்லாமல் விதையென்கிற பேருண்டாகுமா, தனயன் பிறக்காமல் தந்தையென்கிற பெயருண்டாகுமா, தம்பியில்லாமல் தமையனென்கிற பேருண்டாகுமா, உண்டாகாததலால் அடிமையாகிபனைக்குஆண்டவனே துணை, அடிமைத்தனமில்லா உமக்கு ஆண்டவனே யில்லை. நிர்ச்சலன வஸ்துவாகிய பிர்மத்தைத் தியானித்தால் அந்தப் பரப்பிரமம் அசையுமா, பேசுமா, காட்சி கொடுக்குமா, திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை, தாசனுக்குச் சாமியேதுணை, அடிமைக் காண்ட

வனே துணை, பக்தனுக்குப் பகவானே துணை, நானுக்கு நாராயணனே துணை அன்றி ஆதிமூலமேயென்று கூப்பிட்ட கஜேந்திரனைக்காத்து ரட்சித்தது பகவானு பரப்பிரம்மமா, பிரகலாதனைக்காக்கத் தூணிலிருந்து புறப்பட்ட நரசிம்மம் பகவானு பிரம்மமா, துரோபதையின் துகிலுரியும்போது காத்தது துளசிதானு, சுயம்பிர்மமா, ஒ பகீரி! நாராயணனே சகலரையுங் காத்தவராதலால் நாராயணனை நம்பினவனுக்கு நரகமில்லை துளசிதானைத் தொழுபவனுக்குத் துக்கமில்லை, விஷ்ணுவன்றி எனக்கு வேறு தெய்வமில்லை ஸ்ரீராம நாம மன்றி நான் வேறுநினைப்பதில்லை, சரணமென்பவர்க்கு மரணமில்லை, பதிவிரதை தன்னுயிர் நீங்கினும் பரபுருஷருக்கிடங்கொடுப்பதில்லை, பக்தனுகிய நான் பகவானையன்றி வேறுதெய்வத்தை வணங்க உடன்படுவதில்லை ஆதலால் விருதாவாய் வெகுநேரமாய் வளவள சளபுளசளவென்றேன் ஏசுகின்றீர் உண்மைதெரியாம லேன் பேசுகிறீர் வீணுக் கைகளை வீசுகிறீர் தகுந்த உத்தரந்] சொல்லக்கூசுகிறீ ரினிபேசினது போதும் எழுந்து போமையாவென்று சொல்ல,

மாயா பகீரி ஒ கபீர் ! நிரூபமான பரப்பிரம்மத்தைத் துதிக்கும் துலுக்கவம்சத்திற் பிறந்தும் குணத்தைக் கைக்கொண்டு மகம்மது மதத்தைக் கண்டிப்பது இராக்கதர் வம்சத்திற் பிறந்த விபீஷணனைப்போல் இருக்கின்றதென்று உரைக்க, கபீ ஒ பகீரி! நான்பிரகலாதனன் நீர் விபீஷணன், ஆதலால் விபீஷணன் தன் வம்ஸத்தை நாசஞ்செய்தாப்போல நீரும் உம்முடைய குலத்தை நாசஞ்செய்யும், நான் பிரகலாதனைப்போல் இரட்சிக்கிறேனென்று நவில, பகீரி ஒ கபீர்! நீ குலத்தோரை ரட்சிப்பது சகுனியைப் போலவே யிருக்கிறதெனப்புகல கபீர், ஒ பெரியோரே, நான் சகுனியல்ல தோலுண்டு சுழியுண்டு குற்றமுண்டு ஆக்கினையுமுண்டென நசலனின்ற விதுரனைப்போ லிருக்கிறேன் நீரே ஸ்திரமான சகுனியாம். துலுக்கவமிசததை நாசஞ்செய்யக் கங்கணங் கட்டிக்கொண்டு நீண்டகுல்லாவும்,நீண்ட அங்கியும் போட்டுக்கொண்டிருக்கிறீரெனப் புகல பகீரியாகியபகவான் ஆஹாஹா! சந்தோஷம் சந்தோஷம் என்ன வார்த்தையைச் சொன்னுய், சபாசு சபாசுவென்று நகைத்து துஷ்டர்களையும் பிரஷ்டர்களையும் சிக்ஷைசெய்யவே கங்கணங் கட்டிக்கொண்டிக்கும் என் சாமார்த்தியத்தை இன்னஞ் சற்றுநேரத்திற் காட்டுகிறேன் பம்பரப்போ லாட்டுகிறேன் நல்ல -தாகட்டும் சற்றேபொழுதும் போகட்டும் உன்னை யிந்தப் பிரம்பால் பதைக்கப் பதைக்க அடிக்காமலும் முழங்கையா லிடிக்காமலும் வாயில்வந்தபடி திட்டாமலும் தலைமேற் குட்டாமலும் விடப்போகிறேனு பார் பேய்ப்பயலே என்று வைதுக்கொண்டே அவ்விடம்விட்டுப் போகையில் கபீர் பகவானைநம்பினோர்கள் பகவான்களன்றி வுன்னைப் போன்ற பிகாரியான பகீரியல்ல போம் போம்வீண்வார்த்தைகள் பேசவேண்டாமென்று சொல்ல மாயாபகீரி அடா கபீர் போபோவென்று என்னை மிரட்டுகிருயா இப்போதே உன் தாயாரிடம் பலவந்தமாய் வஸ்திரத்தைக் கொடுத்துவிட்டதும் சொந்தமதத்தைத் தூஷித்ததும் சகலருந் தொழும்படியான என்னை யபேட்சித்ததுஞ்சொல்லி இப்போதே அழைத்துக்கொண்டுவந்து உன்னை யுதைக்கும்படியாகவும் சிதைக்கும்படியாகவுஞ் செய்கிறேனென்று மிகவும் கோபத்துடன் தமால் வீட்டைநோக்கிப்போகத் தொடங்கினர்.

கபீர் அடா இவனென்ன வம்புசெய்யத் தென்புள்ளவனு யிருக்கிருன் குலத்தளவேயாகுங் குணமென்பதைப்போலவும் ஜீவகாருண்ய மில்லாத தீயர் துறவிகளானுலும் தன் துர்க்குணம் விடாமென்பதைபபோலவும்-இந்தத் துடுக்கன் வெகுமூடுகாகப் போகிருன் ஒருவேளை நமது மாதா வஸ்திரங்கொடுத்து விட்டதைக் கேட்டால் கொல்லாமலும் ஈனவார்த்தைகள் சொல்லாமலும் உதைக்காமலும் சிதைக்காமலும் விடுவாளோவென் றேடோடியும்போய் அந்தப் பகீரியின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு என் தாயினிடத்தி லிவ்வார்த்தையைச் சொல்லி என்னைக்கொல்லாமல் கிருபைசெய்யு மையாவென்று மிகவும் பரிதாபத்துடன் வேண்டிக்கொள்ள, பகீரி,அடா போடாபோ இந்தட்சணம்போ யுன்தாயிடஞ் சொல்லாமலும், உன்னைக் கொல்லாமலும் அரை நாழிகையும் பொறுக்கமாட்டேனென் றெட்டியுதைத்து ஜிஜ்ஜாபீபியிடத்திற்குப்போய்விட்டார்.

பின்பு கபீர் யோசிக்கின்றார் ஊர்ச்சண்டை கண் குளிர்ச்சியென்பது போலவும் தேளுக்கதிகாரங் கொடுத்தால் நாழிக்கொருதரங் கொட்டுமென்பது போலவும் செய்தார் அன்றி உறிப்பணம் போய் தெருச்சண்டையிழுத்த தென்பதுபோலவும் சணப்பன் வீட்டுக் கோழி தானே மாட்டிக்கொண்டது போலவும், மல்லார்ந்தபடி உமிழ்ந்து மார்பெலா மெச்சிலாக்கிக் கொண்டதுபோலவும் நமக்குநேரிட்டது பகீரிசெய்யு மாகாத்தியங் கெட்டது இனியென்ன செய்யலாமென்று பலவிதங்களாயோசித்து ஒன்றுந்தோன்றுமல் ஓர் பாழ் வீட்டிற்குட்போய் பதுங்கிக்கொண்டு பகவானே இந்த வேளையில் துணையாயிருந்து காக்கவேண்டுமென்று, ஸ்ரீமந்நாராய

ணருடைய திவ்விய திருநாமங்களை தோத்திரஞ்செய்துக் கொண்டேயிருந்தார் இப்படியிருக்க பகவானுகிய பகிரி கபீர்கொடுத்த துண்டு வஸ்திரத்தைக் கரத்திலேந்திக் கொண்டே ஜிஜ்ஜாபீபியினிடம்போய் வஸ்திரத்தைகாண்பித்து ஒ-அம்மா பாக்கியவதி உனது குமாரனுகிய கபீர் விக்கிரயஞ்செய்யக் கொண்டுபோன இந்தவஸ்திரத்தைப் பலவந்தமா யோர் பிராமணனுக்குத் தானஞ் செய்யப் போகும்போது எனக்குக் கொடு மென்று வேண்டிக் கொண்டேன் கொடுக்காமலிரண்டாய்க் கிழித்து அப்பிராமணனுக்கும்எனக்கும்கொடுத்தான்பாதிவஸ்திரம்வேண்டாமென்று மறுத்ததற்கு பலவந்தமாய்க் கொடுத்து நீ ரிக்கணம் என்தாயாரிடம்போய் கேட்டால் உனக்குத் தேவையான பெரிய வஸ்திரங்கொடுப்பாளென்றும்நான் சொன்னதாய்ச் சொல்லவேண்டாமென்றும் உம்முடன் வந்தால் நானே யழைத்துக்கொண்டு வந்ததாய் நினைப்பாளென்றும் நீர் வருகிறபரியந்த மிங்கேயேயிருக்கிறேனென்றும் சொல்லி ஓர் பாழ்வீட்டில் பதுங்கிக் கொண்டிருக்கிறான் சிறு குழந்தையாயிருந்து மிவ்வளவு தருமகுணமிருக்கின்றதே ஒ அம்மணி நீ என் குறைநீங்க ஓர் வஸ்திரம் தாருமம்மாவென்றுகேட்க ஜிஜ்ஜாபீபி அப்படியே கொடுக்கிறேன்.

கபீ ரெவ்விடத்திற் பதுங்கிக்கொண் டிருக்கிறான் காட்டவாருமையாவென் றழைக்க பகிரி வாருமம்மா காட்டுகிறேனென்று அவ்வம்மணியை யழைத்துக்கொண்டு கபீர் தியானஞ் செய்துக்கொண்டிருக்கும பாழ்வீட்டிற் பிரவேசித்து இதோ பார்த்திரா உம்மைப் பார்த்ததே கண்களை மூடிக்கொண்டான் சிறு பையனுயிருந்துங் கெட்ட திருடனுயிருக்கின்முன் ஓர்வேளை எந்தப் பக்கமாயோடிப்போனாலும் போய்விடுவானுதலால் நானந்தப்பக்கமாய் வருகிறேன் நீரிந்தப் பக்கத்திலிருந்து நுழைந்துப் பிடித்துக்கொள்ளுமென் றுரைத்து தானப்பக்கமாய்ப் போய் ஒ கபீ ருன்தாயார் வந்துவிட்டாள் சீக்கிர மிப் பக்கமாயோடிப்போவென் றுரைக்க கபீர் பெருங்கோபங்கொண்டு வருந் தாயைக்கண்டு பகிரி நிற்கும்பக்கமாயோடத்தொடங்கினுர் உடனே மாயாபகிரி கபீர் தலைமேற்குட்டி கையைநீட்டி எட்டி குடுமியைப் பிடித்துக்கொண்டு இதோ வோடுகிறான் வோடுகிறானென்று கூக்குரலிட்டார் கபீர் பூனைக்குத்தோழனுப் பாலுக்குக் காவலானதுபோலவுக் திருடனுக்கு இடங்காட்டி விளக்கைப் பிடிப்பது போலவும் செய்வதுமக்குத்தகாது என்தாயார் அருகில் வராமுன்னமே விட்டு விடு மையாவென்று வேண்டிக்கொண்டார்.

மாயாபகிரி அடேபோடா திருட்டுப்பயலே உன்னையிந்தமட்டில் விடப்போகிறேனே வென்றுரைத்துச் சீக்கிரம் வாருமம்மாவென்று கூப்பிட்டார் ஜிஜ்ஜாபீபிவந்து கபீர் கரத்தைப் பிடித்துக்கொண்டு அடா துஷ்டா வஸ்திரத்தை ஏன் கொடுத்துவிட்டாயென் றடிக்கப்போகையில் மாயாபகிரி இந்தத்திருடனை இக்களாசத்தா லடியுமம்மாவென்று தன்கரத்திலிருக்கும் பிரம்பைக்கொடுக்க ஜிஜ்ஜாபீபி அப்பிரம்பா லிரண்டடி ஆங்காரத்தா லோங்கி வாங்கிவிட்டாள்.

அப்போது ஈயெறும்பு முதலான சகல ஜீவராசிகளும் அசரமான கல் மரம் முதலானதுகளும் ஏனென்று சொல்லும்படியான பூரண நிலையைப்பெற்ற சுகாவதாரனை கபீரானவர் அடிகளைப் பொறுக்க மாட்டாமல் அரேராம் அரேராம் என்று மிகவுந்துடித்தார் இப்படித் துடிக்கும்படியா யடித்த இரண்டடிகளும் கபீர்மேற்படாமல் பகிரியாய்வந்த பகவான்மேற்பட்டு மிகவுந்துடிதுடித்ததனுற் றன்மாயத்தைவிடுத்து அடப்பாவெனப்புகன்று சுயரூபத்துடன் நின்று கபீரை வாரியெடுத்து மார்புடனணைத்துகண்ணீரைப்பெருக்கிஜிஜ்ஜாபீபியின் மனதையும் உருக்கினர். உடனே அவ்வம்மணி ஆ என்மகனே அழகானமுகனே உன்னைக் கோபத்தாலடித்து விட்டேனே ஆ கெட்டேனே யென்றலறி கபீரை யேந்திக்கொண்டருகியழும் ஜிஜ்ஜாபீபி மணிமகுடகுண்டல வாகுவலய சங்குசக்கரதுளபத்தார் மார்பதக்கத்துடன் விளங்கும்ஸ்ரீமந் நாராயணரைக்கண்டு ஆனந்தங்கொண்டு ஒன்றுந்தோன்றுதவளாய் பிரமைபிடித்தவர்போ லசைவற்று தன்னை மறந்திருந்தாள். அப்போது பகவான் ஜிஜ்ஜாபீபியின் கரத்திலிருக்கும் குழந்தைப் பருவமுடைய கபீரைத் தன் கரத்தி லேந்திக்கொண்டு யோசிக்கின்முர்.

முன்னம் மாபலியைச் சோதிக்கப்போ யனேகநாளவன் வாயலைக்காக்கும். காவற்காரனு யிருந்தபோதும் அத்திரி மகாரிஷியின் களத்திரமான அநுசூயா தேவியைச்சோதிக்கப்போ யவள் கற்பின் மகிமையாற் புத்திரனு யிருந்தபோதும், மதுகைடவர்கள் இரணியன் இரணியாட்சகன் இராவணன் முதலானவர்களோடு யுத்தஞ் செய்தபோதும், பாணமெடுக்காமற் பாரதயுத்தத்திற் சாரத்தியஞ் செய்தபோதும், தர்மர் அஸ்வமேதயாகத்தில் தாமரைத் துவஜன் கக்கத்திலிடுக்கிக் கசக்கும்போதும், தந்தவக்ரன் துரத்தும்போதும், சிசுபாலன் வாணசூரன் நரகாசூரனுடன் போர்புரியும்போதும், இவ்வளவு சங்கடம் நாமடைந்ததில்லை. இந்தக்கபீரைச் சோதிக்கப்போய் யிரண்டடி பட்டு பொருக்கமாட்டாமல் நமது

மாயத்தை விடுக்கும்படியாய் நேரிட்ட தாச்சரியம் அம்மம்மா சலந்தரனுருக்கொண்டுபோய் பிருந்தையி னழகைக்கண்டு மோகமாகி மாயாரூபம் நீங்கி சுயரூபத்துடன் நின்றதைப்போலல்லவோநேரிட்டது. ஆஹா நமது வல்லசுமையான மாயத்தை நீக்கின அடிகளைத் தாங்க கபீராற் கூடுமோவென் றன்பின் மேலிட்டா லடா என் கண்மணியே! சிகாமணியே உன் தாயாரடித்த அடிகளாற் பொருக்கமாட்டாமல் பதைத்தாயோ? ஸ்ரீராம நாமத்தைத்துதித்தாயோ? என்னை யழைத்தாயோ? அடிகளுக்குத்தப்பிப்பிழைத்தாயோ வென்கிற பற்பல வார்த்தைகளாடி யுருகும்போது, ஜிஜாபீபி பகவான் திருவடிகளிற் பணிந்து நயனங்களையணிந்து ஓ என்னுண்டவனே! உம்மைக்காணும்பொருட் டனேகர் ஊணுறக்கமின்றி தபஞ் செய்கிறார்களே அவர்களுக்கேன் உம்முடைய அரிதான தரிசனந்தரவில்லை. ஓ. அரிபரந்தாமனே! சகஸ்த்ரநாமனே! அனேகருன் திருநாமத்தை மறக்காமல் சந்ததஞ் சிந்தனஞ்செய் தன்புடன் வந்தனஞ் செய்து இகபோகங்களை வெறுத்து இழிவான எண்ணங்களைமறுத்துப் பசிதாகங்களுக்குப் பொறுத்து குடிலக் குணங்களை யறுத்து உம்மைக்காணத் தேடிதேடி பலசங்கீர்த்தனங்களைப் பாடிப்பாடி ஆயாசம் மேலீட்டா யடர்ந்திருக்கிறார்களே அவர்களுக்கேன் உம்முடைய தரிசனந்தரவில்லை. ஓ தெய்வமே! உம்முடைய லீலாவினோதங்களைப் புகலும் பரமபக்தர்களைத் தேடிப்பிடித்து அவர்களுக்குற்ற குறைகளை முடித்து சதாகாலமுஞ் சேவை செய்துக்கொண்டும் உம்முடைய திருவிளையாடல்களை அன்பாய்க்கேட்டுக் கொண்டனேகரிருக்கிறார்களே அவர்களுக்கேன் உம்முடைய தரிசனந்தரவில்லை.

ஓ புருஷோத்தமா! புண்டரீகாக்ஷா! இல்லறைத்திருந்தும்முடைய தரிசனம்பெற லரிதென் றதிதிகளால் யாதொரு பற்று மின்றி முற்றுந்துறந்தோராகி உன்னுமை பஜனானந்தத்தா லுடலப்பூரித்து மயிர்க்குச்செறிந்து ஆனந்தகீர்த்தனஞ் செய்துக்கொண்டிருக்கிறார்கள் அவர்களுக்கேன் உம்முடைய தரிசனந்தரவில்லை. ஓ மகானுபாவா தேவாதிதேவா! காட்டிலிருந்தால் நாட்டத்துக்கு குறைவென்று காட்டை யடைந்து இந்திரியங்களையடக்கி காலையடக்கி மேல்மூலத்தில் முடுக்கி அதோமுகமாகாமலொடுக்கி கோடிசூரியப் பிரகாசத்தைக்கண்டு நாதானந்தங் கொண்டு அமிர்தபானத்தை யுண்டு அரிதான சேவை தரவாவிண்டு என்கிற எண்ணங்கொண்டிருக்கும் பேர்களுக்கேன் உம்முடைய தரிசனந்தரவில்லை. ஓ பகவானே! தேகேந்திரியாதிகளை நியதிசெய்து மனக்கோட்டத்தைக்கொய்து சாட்சியாய் ஸ்வரூபமாகி பரமாத்மாவிலைக்கியப்பட்ட பிரமக்ஞானிக ளும்முடைய காட்சிக்காக மாட்சிமையான நிஷ்டை சாதித்துக்கொண்டிருக்கிறார்களே அவர்களுக்கேன் உம்முடைய தரிசனந்தரவில்லை. ஓ மகானுபாவனே தேவாதிதேவனே! நீர் தானே ரட்சிக்குங்கர்த்தர், நீர்தானே வேதமுடிவிலிருக்குஞ் சித்தர், நீர்தானே ஸ்ரீமந்நாராயணர், நீர்தானே பிரம்பாராயணர் மணிகர்ணிகையில் வீழ்ந்த குண்டலமும் முடையது தானே மக்காவிலிருப்பது உம்முடையபாதந் தானே மாபலி சிரத்திற் பதித்தபாதம் இதுதானே, ஓ தீனபந்துவே! உம்மைத் தரிசிக்கும்படியான பாக்கியமேதோ நான் செய்த சிலாக்கியமேதோ. ஓ பராத்பரா! பரமேஸ்வரா! ஜகதீஸ்பரா! கருணாசாகரா! மனோகரா! சங்குசக்ரா! தாமோதரா! பீதாம்பரதரா! துளசீதரா! வெங்கடேஸ்பரா! கமலநேத்ரா! சத்குணபாத்ரா! தேவர்கள் தோத்ரா! திவ்வியமானகாத்ரா! ராவண சம்ஹாரா! தசரதகுமாரா! நவனீதசோரா! அகண்டகெம்பீரா! வீராதிவீரா! நிராங்காரா! சொல்வதற்கரியதீரா! சுபமங்களாகாரா! மூலபலத்தைவென்றசூரா! அரிவதற்கரிய அபாராவென்று பற்பல விதங்களாய்த் தோத்திரஞ் செய்தேத்தும்போது,

பகவான் ஜிஜாபீபியைக்கருணையுடன் நோக்கி, ஓ பாக்கியவதி! இப்போதுனக்குப்பயந்தோடி எனக்கடிகள்வாங்கிக்கொடுத்த புண்ணியபுருஷனை யாரென்று நினைத்தாய், எனக்கருமையான பக்தனும் ஜீவன் முக்தனுமென் திருக்கண்ணினுண் மணியாடு பாவைபோன்றனையும் எனதாவிக்கருந்துணைவனையும் என்னைமறக்காதவனையும் என்றும் இறக்காதவனையும் எனக்குளைக்யமாயிருப்பவனையும் என்னை விழுங்கினவனையும் இருக்கும் பிர்மரிஷியென்று நினைப்பாயாக. இதற்குக் காட்சியான சாட்சி வேண்டியிருப்பதால், நீ கோபத்தாலோங்கி வாங்கின இரண்டடிகளு முன்மைந்தன் முதுகிற்பட்டதா பாரென்று திருவாய்மலர்ந்தருள, ஜிஜாபீபி கபீர் முதுகைப்பார்த்த தி வில்லையென்றுரைக்க பகவானென்முதுகிற்பாரென்று காட்ட கடவுள் புரத்திலிரண்டடிகளும் பட்டு பழுத்த தழும்புகளா லெழும்பியிருக்கக் கண்டு முகத்தின்மே லறைந்துக்கொண்டு மிகவுங் கதறி தேகமெல்லாம் பதறி வாயுலர்ந்து பெருமூச்செறிந்து மூர்ச்சையாய் விழுந்து வாய் விட்டழுது பலதரந்தொழுது ஐயோ வந்ததே பழுது என்று பிரலாபித்து தெய்வமே வீராதிவீரனாகிய இரணியாக்ஷனும் சூராதி சூரனாகிய இராவணனும், இந்திரனைச்ஜெயித்த இந்திரசித்தன் முதலானவர்களும் பிரயோகித்த பாணங்களும், சூலங்களும் பிண்டிப்பாலங்களும் தண்டாயுதங்களும், படாத மேனி

யில் இக்கொடிய பாவியடித்த இரண்டடிகளும்பட்டுதோ என்குலத்தை சுட்டதோ ஒவைகுந்தநாதா லீலாவினோதா! உம்மையுமடியாளடிக்கப்போமா அடித்தினியுயிருடனிருக்கலாமாவென்று தன் மத்தகத்தைப் பூமியிற் பலதரம் மோதிக்கொண்டு சாவுக்கிணையான மூர்ச்சையாய் வீழ்ந்துவிட்டாஐ.

கேட்டீர்களோ சித்தர்களே இப்படி மூர்ச்சையாய் வீழ்ந்த ஜிஜாபீபியை பக்தவச்சலனுகியபகவான் தனது திவ்விய அஸ்தங்களாற்றடவி ஆதரணைசெய்து கருணைமழைபெய்து மூர்ச்சையைத் தெளிவித்து ஒ புனித வதியே! ம சிலாமதியே! வீணுயென் உன் பிராணனை விடத் துணிந்தாய் நீ நல்ல உத்தமியென் றல்லவோ என் பத்தனை உன்பாலொப்பித்தேன் உனக்குப் பாலுமுண்டாக் குவித்தேன். முதுகைகாட்டி நானேகபீரென்று மெய்ப்பித்தேன் உன்னுடன் கணவனையு முய்வித்தேன் ஆதலானின்றுட னிந்தத்தூயனை எனக்குகந்தநேயனை நானுகப் பாவித்து அன்பாகச் சேவித்துப்பாதுகாப்பீராஞல் என் பதவியைப் பெறுவீர்க ளகண்டானந்தவாழ்வை யுறுவீர்கள் என்று திருவாய்மலர்ந்தருளி கபீரைநோக்கி ஒ அபிர்வாசனைவிசுங் கபீர்தாசனே! உன்னுடைய ஸ்திரமான தியானத்தைக்கலக்கி ஓடிப்போகாமல் மடக்கி அடிகள் வாங்கிக்கொடுத்ததற்காக என்மேற் கோபஞ்செய்யாதே வாயில்வந்தபடி வையாதே சகாதேவனைப்போற் கட்டாதே அரவானைப் போலே தட்டாதே பிருகு ரிஷியைப் போற் சாபங்கொடுக்காதே தந்தவக்ரனைப்போல் முடுக்காதே தாமரைத்துவசனைப்போ லடக்காதே தசமுகனைப்போல் மடக்காதேயென்று பற்பலவிதங்களாய் வேண்டிக்கொள்ளும்போது கபீர் பகவானுடைய பாசாங்கு வார்த்தைகளைக்கேட்டு உள்ளமுருகி அன்புபெருகி கரங்களைச்சேர்த்து சந்தேகங்களைப்போர்த்து பாதத்தில் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து ஒ-சுவாமி என் தாயாரடித்த அடிகளென்மேற்படாமல் தாங்கிக் கொண்டாலும் தாய் கைநோகாதோ நீர் நினைத்தால் களாசம்வெந்து நீருகாதோ ஏழைக்காக ஏழைப்பக்கிரியாய்ப் புறப்பட்டீரோ நான் பொறுக்க மாட்டேனென் றடிகளும் பட்டீரோ உமது மாயையும்விட்டீரோ உமதஸ்தங்களால் என்னையுந் தொட்டீரோ ஒ-என்னுண்டவனே நீர் பக்கிரியாய் வந்தீரென் றறியாமற்போனேனே தர்க்கித் தபசாரனேனே வாயில்வந்தபடி வைதேனே அடிகளும் படும்படி செய்தேனே பிகாரியென்றறைந்தேனே கோபங் கொதித் திறைந்தேனே ஒ! கர்த்தனே பரிசுத்தனே! நானியற்றிய குற்றங்களை குற்றவமாகக்கொண்டு காத்தாள்வாயா அன்பர்கள் சகாயா! பிர்மக்ஞானிகள் நேயா,கபடநாடகனுகியமாயா நானுவித உபாயா! வெண்ணெயுண்ட வாயா! சகலருந் தொழுந்தூயா! கோபாலரைக்காத்த ஆயா! நிரூபமாகிய ஆகாயா! நீலமேகச்சாயா! கௌசலையீன்றசேயா! பச்சைவர்ணமுள்ள காயா! அகிலாண்டகோடி பிர்மாண்டநாயகா! ஒ பரந்தாயகா! ஒ விஷ்ணு! ஒ பகவான்! நீர் எளியேனை வஸ்திரங் கேட்கக்கூடுமோ வென் றனந்தங் விதங்களாகத் துதித்து ஆனந்தம் மேலீட்டாற் குதித்து நின்று தயவுமுற்றிலும் இப்படியே இருக்கும்படி வரந் தாருமையா சங்குசக்கரக் கையாவென்று வணங்கும் போது.

பகவான் ஒ!என்னப்பனே நீ நினைக்காவிட்டாலும் உன்னிழல்போ லுன்னைப் பிரியாமலிருக்கும் என்னைப் பிர்மானந்த மேலீட்டால் நீ மறக்காமலிருக்க வேண்டுமையாவென் றறைய கபீர் நிர்க்குணமே முக்கியமென்று திருவாய்மலர்ந்தருளிய பகவானை வணங்கி இணங்கி ஒ சுவாமி சுவப்னத்திலுமுன்னை மறப்பேனு மறந்திவ்வாக்கையோடிருப்பேனு உம்முடைய திருநாமத்தைத் துறப்பேனே துறந்தினிமேலும் பிறப்பேனே ஒ என்னுண்டவனே உம்முடைய தியானம் மேன்மையானதோ பிர்மக்ஞானம் மேன்மையானதோ உண்மையையுரைத்தென்னையாட்கொள்ளும் சுவாமியென்று சிரசாஷ்டாங்கமாய் வந்தனஞ்செய்ய பகவான் ஒ கபீர் இதைக்குறித்து யானென்றுஞ் சொல்லமாட்டேன் ஏனெனில் சகலருக்கும் பொதுவான வேதாகமபுராணங்களில் பக்தி வைராக்கிய ஞானமென்னும் மூன்றையும் அவரவர்கள் பக்குவத்துக்கேற்றபடி யுரைக்கின்றதன்றி தேகமே தானென்றிருப்பவன் கர்மக்கிரியைகள் செய்யவேண்டும்.

ஜீவனே தானென்றிருப்பவன் பக்திமார்க்கமான தவத்தைக் கைக்கொள்ளவேண்டும் ஆத்மாவே தானென்றிருப்பவன் பரமாத்மாவில் ஐக்கியப்பட்டு தேகஸ்மரணைவிட்டு மௌன சமாதியையடைந்து நான் நீ யென்னும் துவிதபாவனையைக் கடந்து துரிய திருஷ்டியைமேவி யிருக்கவேண்டும். உன்மணி யவஸ்தையடைந்த பிர்மக்ஞானிகள் மேன்மையான பிர்மக்ஞானத்தினுலும் நிர்க்குணத் தியானத்தினுலும் நிரூபமாயிருக்கும் பரம்பிர்மமாகிய என்னைப்பூசித்து ஐந்தாம் பதவியாகிய கைவல்யத்தையே ஆசித்து ஜீவன்முத்தர்களாயிருந்து இறுதியில் விவேக கைவல்யத்தை யடைவார்கள் மற்றவர் கர்ம பக்தியினூற் சகுணமாகிய என்னைச் சந்தோஷிப்பித்து பரமபதமடைவார்கள். சிலருக்கு ஞானமே சுலபமாயிருக்கும். சிலருக்கு பக்தியே சுலபமா யிருக்கும் ஆனல்

பிர்மக்ஞானம் அனந்த ஜென்மங்களில் என்னைப்பூசித்த வர்களுக்கே கிடைக்கும் ஆனந்தமாத்திரமா யிருக்கும் மௌன நிஷ்டையி லிருப்பதெளிதல்ல திரிவுலகத்தரி லொரு ஞானியென்று சாஸ்திரங்களில் மூறையிடுகின் றது கர்மபக்தி ஞானமென்னு மூன்றும் பிஞ்சு காய்கனி யைப்போன்றதேயாம். முன்னஞ் சத்கருமங்களால் என் னைச் சந்தோஷப்படுத்தி பக்தியினு லென்னருட் பிரசா தம்பெற்று அவ்வருள் விலாசத்தால் அநிருட்சுமமாயிரு க்கும் என்னை அந்தரங்கத்தில் க்ஞான சட்சுவாலறிந்து சகல சந்தோஷங்களையுங் களைந்து நிர்க்குணத் தியான பரனுகிய ஆனந்தசாகரத்தி லமிழ்ந்து சத்யக்ஞானனந்த மாய்த் தழைந்து தன்னைமறந்து திக்குதிசாதிகள் இழ ந்து ஆரூடக் ஞானியாகவேண்டும் அப்படிக்கின்றிவாசா க்ஞானத்தால் அகம் பிர்மம் என்கிற பாவத்தை யடை ந்து தேகாதிகளில் வாஞ்சைவைத்து கர்மபக்தியு மில்லா மல் மேன்மையான பிர்ம்மானந்த லாபமுமில்லாமல் பிர ஷ்டர்களா யனந்த சன்மங்களெடுத்துழலும் அஞ்ஞானி களுக் கென்னருட் பிரகாசம் பிர்மகற்பங்களிலுங் கிடை க்கமாட்டாது. அன்றி முன்சொன்ன மூன்றுக்குஞ் ஜீவ காருண்ய விரதமே துணையாயிருக்கவேண்டும்.

அஹிம்ஸா பரமோதர்மமென்று சுருதியிலுமுரை க்கின்றது தன்னுயிரைப்போல மன்னுயிரைப் பார்க்கும் தவமே மேலானலாபத்தைக் கொடுக்கும் நிக்ஷேபமா யிருக்கின்றது சம்பாவமுள்ளவனே எல்லாரிலும் அதி சீக்கிரமா யென்னை அந்தர்முகத்தில் நிர்க்குணமாகவும் பகிர் முகத்தில் சகுணமாகவும்தரிசிப்பான் ஊனக்கண் களுக்கு ரூபமாகவும் ஞானக்கண்களுக் கரூபமாகவுந் தோன்றப்பட்டு அகண்டானந்தத்தைத் தருபவன்நானே யாம் ஞானக்கண் துலங்காத அஞ்ஞானிக ளானுலும் அன்புடன் என்னைத் தியானிப்பார்களாகில் உடனேபிர சன்னமாகி அசண்ட சாம்பிராச்சியத்தைக் கொடுப்பே ன் என்னை நம்பினவர்கள்பால் வெளி வளியைப்பார்க் கிலும் சமீபமாயிருப்பேன் பக்திமார்க்கத்தி லிருப்பவர் களை குழந்தைகளைக் காப்பாற்றுந் தாயைப்போலப் பா துகாப்பேன் வைராக்கியமான யோகமார்க்கத்தி லிருப் பவர்களைப் பலவிதங்களாய்ச் சோதித்து சினேக பாவ மாப்பார்ப்பேன் ஞானமார்க்கத்திலிருப்பவர்களை என க்குச் சமானமானவர்களைப்போல பாவிப்பேன் பக்தி மார்க்கத்தி லிருப்பவர் குழந்தைகளாகும் வைராக்கிய முதலான அஷ்டயோகங்களி லிருப்பவர்கள் எவ்வனபு ருஷர்களாகும் க்ஞானமார்க்கத்தி லிருப்பவர்கள் விர்த் தாப்பியர்களாகும். குழந்தைகளுக்கும் விர்த்தர்களுக் கும் நானென்பது குறைந்திருப்பதுபோல பக்தர்களுக் கும் க்ஞானிகளுக்கும் அகம்பாவம் குறைந் திருக்கும் வைராக்கியத்துடன் அடயோகங்களைச் சாதிப்பவர்களு க்கு நானென்பது மிகுதியாயிருக்கும் அதினுலே அவர் கள் என்னுல் மிகவுஞ் சோதிக்கப்படுவார்கள் பக்தர்கள் என்னையே நம்பி எல்லாவற்றிற்கும் பகவானே துணை யென்று அகம்பாவமடையாமற் சந்ததமென் பாராயண த்தால் நாட்களைக்கழிப்பார்கள் க்ஞானிகள் பிராப்தா தீனமான இத்தனுவுக்குச் சுகம்வ்ந்தாலும் சந்தோஷமு ம்வாட்டமும் அடையாம லெல்லாமுள்ளபடி முடியு மெ ன்று மௌனநாட்டத்தை யடைந்து யாதொன்றிற்கும் அகம்பாவங் கொள்ளாமல் நிராங்கார வஸ்துவில் லயப் பட்டிருப்பார்கள் பக்தர்களுக்கு முக்கியமான தன்பே யாம் சித்தர்களுக்கு முக்கியமானது வைராக்கியமேயாம் முத்தர்களுக்கு முக்கியமானது மௌனமேயாம் அன் பில்லாத பக்தியும் வைராக்கியமில்லாத யோகமும் சாந் தமில்லாத க்ஞானமும் நிஷ்பலமென்று சொல்லப்படும் எல்லா தர்மங்களையும் நாசஞ்செய்வது நானெனு மகங் காரமும் எனதென்னு மமகாரமும் ஜீவஹிம்ஸையேயாம் சுபத்தை விர்த்திக்கச்செய்தது நிராங்காரமும் அமோக மும் அஹிம்ஸையேயாம் ஆதலால் கர்மபக்திஞானமென் னும் மூன்றி லெதன்மே லிச்சையோ அதையே உறுதி யாய் நம்பவேண்டுமானுலும் குழந்தைப்பர்வமுள்ள உன க்கு தாசத்வமான பக்திமார்க்கம் லபிக்குமானுற் சகல சாஸ்திரார்த்தங்களையு மறிந்த ஓ ராசானைத்தேடிக் கண் டுண்மையைத்தெரிந்துக் கொள்ளப்பாவென்று சொல்லி மாயமாய் மறைந்துபோனுர்.

பின்பு கபீர் கன்றைப்பிரிந்த காராம்பசுவைப்போ லவும் கலையைப்பிரிந்த மானைப்போலவும் பதியையிழந்த பதிவிரதையைப்போலவும் படியை யிழந்த பார்த்திபனை ப்போலவும் பணத்தைப் பறிகொடுத்த பார்ப்பானைப் போலவும் தனயனையிழந்த தாயைப்போலவும் கண்ணிழ ந்தவனைப்போலவும் கற்பழிந்தவளைப் போலவும் பரதவி த்து ஓ-பகவானே எனக்கோறுருதி கூறுமல் மறைந்து போகலாமா நான் சந்தேகத்தோ டிருக்கலாமா ஓராசா னையும் தேடலாமா உமதிட மன்றி மற்றொருவர்பால் நான் உபதேசம் பெற்றுக்கொள்ள போமா இப்படியும் நீர் விள்ளப்போமா பகையாளியைப்போற் றள்ளப்போ மா ஓ-பரந்தாமா துளபத்தாமா பரசுராமா ஸ்ரீராமா சக ஸ்திரநாமா சுதாமா மேகஸ்யாமா திரிவிக்கிரமா புஜபல பராக்கிரமா தேசிகோத்தமா புருஷோத்தமா புண்ணிய புருஷா புண்டரிக நயனு சேஷசயனுவென்று தோத்

திரம் செய்துகொண்டே தாரை தாரையாய்க் கண்ணீ ரொழுக அழுது புலம்பும்பொழுது, ஜிஜ்ஜாபீபி பகவா னைத் துதித்து கபீரை மார்புடனணைத்து அடாயென் மகனே! அழகானமுகனே! உன் பக்தியைக் கலைத்துவிட் டேனே, கோபத்துக்குட்பட்டேனே, ஆ கெட்டேனே, அடா யென் புதல்வா! பக்தியில் முதல்வா! உன்னாலல்ல வோ பகவானை தரிசித்தேன், பாதங்களைப் பரிசித்தேன், மோக்ஷமார்க்கத்தை யனுசரித்தேன், பின்புன்னை யுப சரித்தேன், சகல பாக்கியமும் பெற்றேன், பிரமஞான மும் கற்றேன் என்கிற பற்பல வார்த்தைகளைவிண்டு கபீரை ஏந்திக்கொண்டு துரிதமாய் நடந்து வீட்டைய டைந்து கணவனைச் சூழ்ந்து பலதரம் தாழ்ந்து கபீரு டைய பெருமையையும், கடவுள் காட்சியி னருமையை யும் உரைத்து கணவன் மனதைக்கரைத்து அனலிலிட்ட மெழுகுபோல் கரைந்தழத்தொடங்கினாள்.

அப்போது தமால் ஆ பெண்ணே! என்னிரு கண் ணே! ஆண்டவனைக்கண்டாயா? ஆனந்தங்கொண்டாயா? நீ செய்த பாக்கியமேதோ, நான் செய்த அபாக்கியமே தோ, நீயிழைத்ததவமேதோ நானிழைத்த அவமேதோ, நீயிருந்த ஆசாரமேதோ நானிருந்த அனுசாரமேதோ வென்கிற பற்பல வார்த்தைகளைப் புகன்று, கபீரை நோக்கி, அடா என் கண்மணியே! சிகாமணியே! உன் தாய்க்கு தரிசனந்தந்தகடவுள் எனக்கு தரிசனந்தரமாட் டாரா? நீவேண்டியழைத்தால் வரமாட்டாரா? பகவானை யழைப்பிக்க உன்னாலாகாதா? அழைப்பித்தா லென் குறைகளெல்லாம் போகாதா? அஞ்ஞானம் நீங்காதா? மெஞ்ஞானம் ஓங்காதா? நான் மாத்திரம் கொடியபாவி யானேனே? நரகத்துக்குள்ளாகும் ஆவியானேனே? ஓ பகவானே! நானென்னகுறை செய்தேன், ஓ வாசுதேவா தேவாதிதேவா, ஆதிதேவா, மகானுபாவா, மாதவா, யாதவா, ராகவா, கேசவா, வசுதேவ புதல்வா, யாவர்க்கு முதல்வா வென் றனந்தம் விதங்களாய்த் துதித்து கபீ ரைப் பகவானென்றே மதித்து ஸ்திரமாய் மனதிற் பதித்து மகவென்னு மெண்ணத்தைச் சிதைத்து மிகவும் வாஞ்சையாய்ப் பாதுகாத்துவந்தார்கள் ஜிஜ்ஜாபீபியோ இந்தக் கபீரே ஸ்ரீமந் நாராயணரென்று உறுதியாய் நம்பி நாடோறும் பூசித்துக்கொண்டே வந்தாள கேட்டீர்க ளோ சித்தர்களே யென்று விரிஞ்சாவதாரரான நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினார்.

கபீருக்கு பகவான் பகிரி ரூபமாய்வந்து நிஜ
தரிசனங்கொடுத்த அத்தியாயம்
முற்றிற்று.

---



ஐந்தாவது

## கபீர்தாஸ் ராமானந்த சுவாமிகளின் பணி விடைக்காரர்களால் அடிபட்ட அத்தியாயம்.

ஓ சித்தர்களே! ஜீவன் முக்தர்களே! இவ்விதமாகத் தமாலும், ஜிஜ்ஜாபீபியும் கபீரைத் தங்களுயிரைப்போ லவே பாதுகாத்து வருகிறநாளில் ஒருநாள் கபீர்தாஸ் பகவான் குருமுகத்தா லுண்மையை யறிந்துக்கொள் ளென்று திருவாய் மலர்ந்தருளியதை நினைத்துக்கொ ண்டு சிந்திக்கத்தொடங்கினார். அதாவது இத்தாத்திரி யில் கணவனில்லாக் கன்னியும், கர்த்தனைப்பணியாச் சென்னியும் திலகமணியா நெற்றியும், தெளிவில்லாத புத்தியும், அன்பில்லாத பத்தியும், அகத்திலில்லாச் சுத் தியும், ஜீவகாருண்யமில்லாத தவமும், சிந்தையி லூன் றாத ஜபமும், ஆறில்லாதவூரும், அரசனில்லாப் பாரும், ஞானமில்லாக் கல்வியும், மானமில்லாச் செல்வமும், பக் தியில்லாப் பூசையும், பணத்தின்மேல் மிகவாசையும், போர்செய்யும் வீடும், புனிதரில்லாநாடும், நீதியில்லா அரசும், நிழலைத்தரா அரசும் பிரியமில்லா மோகமும், பிணியாற்சூழ்ந்த தேகமும், தர்மஞ்செய்யாக் கையும், சாந்தரைப்பணியா மெய்யும், ஜலமில்லா ஏரியும், சர்ச் சனரைச்சேர்க்கா வோரியும், மலைபோற்பொழியும்மாரி யும், மணாளனைவையும் நாரியும், விபசாரஞ்செய்யும்மங் கையும், வீட்டிற்றங்கா நங்கையும், என்றுந்தீராச் சங் கையும், எளியோரைமோதும் அங்கையும், சங்கம் நீங் காத் துறவும், சந்துருஷ்டியில்லா அறமும், குண்டுணி வேலையாற் ஜீவிப்பதும், குருவை மனிதனைப் பாவிப்ப தும், கொடியோர்செய்த சத்கர்மமும், குருவுபதேச மில்லாச் சென்மமும் தாழ்வடைவதுபோல குருவுப தேசமில்லா நாமும் தாழ்வடைவோ மல்லவா? ஓ தெய் வமே! எனக்குற்ற சங்கைகள் யெப்போது நீங்கும் பிர்மானந்த மெக்காலத்தி லோங்கும் என்று தனக்கிருக் கும் சங்கையை நிவர்த்திசெய்துகொள்ளும் பொருட்டு ஆசானைத்தேடப் புறப்பட்டு காசிதேசமெல்லாந் திரிந்து அகப்படாமையால் முகங்கரிந்து ராமானந்த ஸ்வாமிக ளின் மேன்மையைக் கேள்விப்பட்டு, இனி கிருதார்த்த னானேனெனச் சந்தோஷப்பட்டு ராமானந்தசுவாமிகளே நமக்காசானெனத் தீர்மானித்து,

இவரே நாம் வணங்கத் தகுந்தவரெனத் தியானித்
து, அனேக மாணுக்கர் பணிபவராயும், அருந்துளபத்
தாரணிபவராயும், அடியார்களை யாட்கொள்ளும் ஆண்
டவராயும், அஹிம்ஸாவிரதம் பூண்டவராயும், உபரதிதிட
த்தில் மிகுந்தவராயும், உபசரணைசெய்யத் தகுந்தவரா
யும்,ஞானக்கொடியை நட்டவராயும், நாரியர்போகத்தை
விட்டவராயும், அகங்காரத்தைக் கொன்றவராயும், அபி
மானத்லை வென்றவராயும், எனதென்னு மாசையைக்
கிழித்தவராயும், இருளனுகாம லழித்தவராயும், பிர்ம
தேசத்தில் விழித்தவராயும், பேதமையோரைப்பழித்த
வராயும், மகாவாக்கியங் களறிந்தவராயும், மர்மங்களெல்
லாம் தெரிந்தவராயும் விளங்காநின்ற ராமானந்த சுவாமி
களை மனதிற் பூசித்து உபதேசம் பெற்றுக் கொள்ளலா
மென்கிற எண்ணம் மீறி குருஸ்வாமிகளின் தரிசனத்
தைக்கோறி அடியார்கள் நெருக்கத்தா லுள்ளே போவ
தற்கு வேசாரி மாலைபட்டு மிருந்தும் கூடாமற்றமொறி
சமையம் நேரிடும் நேரிடுமென் றேமாறி ஸ்வாமிகளைக்
காணுமற்போனேமேயென நொந்து நாளைக் கதிகாலை
யில்வந்து காணலாமென வீட்டையடைந்து மறுநாளதி
காலையிலெழுந்து அடியார்கள் வருவதற்கு முன்பேகாண
லாமென்று சற்றிருட்டா யிருக்கும்போதே மடத்துட்
பிரவேசித்தார்.

அப்போது ராமானந்த ஸ்வாமிகளின் பணிவிடைக்
காரர்களாகிய அந்தணர்கள் கபீரைப்பார்த்து அடா
துலுக்கப்பயலே ! இராத்திரியிலிங்கு திருடவாவந்தாய்?
நாங்கள் விழித்திருக்கிறே மென்றோ நொந்தாய், இங்
கே முரடரன்றி குருடரில்லையே நீ நினைத்து வந்தது
தொல்லையே, இனி உள்ளே வரவேண்டாம் சீக்கிரம்
வெளியே போவென்று பதட்டத்துடன் தட்டினார்கள்.
கபீர், ஐயா! பிராமணுத்தமர்களே உள்ளே வருவதற்கு
முன்பே சள்ளென்றேன் விழுகிறீர்கள். சாந்தகுண
முள்ள வேதாந்திகளாகிய உங்களுக்கு இவ்வளவு கோப
மிருக்கலாமா? சங்கதி தெரிந்துக்கொள்ளாமல் வெறுக்க
லாமா? அன்புடன் வந்தவர்களை மறுக்கலாமா? வீணுய்
கோபத்தைப் பெருக்கலாமா ? கடினவாளால் நருக்க
லாமாவென்று பரிவுடன் பலதரம் வந்தனம் செய்தார்.

அதற்கந்த மறையோர் கபீரைநோக்கி அடேபோ
டா முழுமூடா, உன் வின்னுன வார்த்தைக ளிங்கு
நடக்காது, உள்ளே விடுவோமா நாயை மடக்காது என்
று மிகவுங்கோபித்துப் போவென்கிற வாக்கியத்தையே
ஸ்தாபித்து அதிகாலையில் நீச்சனுகிய உன் முகத்தைக்
காட்டாதே, போகாமலெங்களை வாட்டாதே சஷ்ட
கல்வி செல்லமாட்டாதே. கொல்லுங்கைகளை நீட்டா
தே கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமும், ஔவை
யாருக் கரசாங்க விசாரணையும் கோசாயிக்குக்கூத்தாடும்
வித்தையும், சாதுக்களுக்குச் சமர்செய்யும் யுத்தியும்,
விபசாரிக்கு மேன்மையான பக்தியும், கொடியனுக்குக்
கூர்மையுள்ள புத்தியும் ஏன்? அதுபோல குலைசெய்யும்
குணயீனத் துலுக்க வம்சத்திற்பிறந்த துடுக்கனுனவுனக்
கிவ்வளவு முடுக்கான வார்த்தைகளேன் அல்லாமல் ஜீவ
காருண்யமுள்ள பிராமணர்களிடத்தி லுனக்கென்ன
காரியம் அடியார்கள் வருகிற வேளையுமாச்சுது நீ வந்
தும் வெகு நேரமாய்ப்போச்சுது வீணுயேன் துன்பத்
துக் குள்ளாகிறு யென்று கோபக்குறி காட்டினார்கள்.

அதற்கு கபீர், ஓ அந்தணர்களே! உங்களுக்கு பல
தரம் வந்தனம் செய்கிறேன். உங்கள் கிருபையா லுய்கி
றேன் கோபஞ் செய்யாதீர்கள் வாயில் வந்தபடி வையா
தீர்கள் அடியேனுகிய கொடியேன் பரமானந்தஸ்வரூபிக
ளாகிய ராமானந்த ஸ்வாமிகளின் சொத்தைத் திருட
வந்தேனென்று புண்ணிய புருடர்களாகிய நீங்களறைந்
தீர்களே, மிகவும் இறைந்தீர்களே, அடியே னெங்கே
யாவது களவு செய்ததுண்டா, அப்படி யாராவது சொ
ன்னதுண்டா, நீங்கள் கேள்விப் பட்டதுண்டா, அல்லது
வேறெண்ணங்கொண்டா, விப்பிரர்களாயிருந்தும் தப்பு
வார்த்தைகள் சொல்லலாமா, என்னைக் கொல்லாமற்
கொல்லலாமா, அவயவப்பழுதும் குலப்பழுதும் பாரா
மல் குணத்தைநன்று யோராமல் குணவானென்றும்
குற்ற முள்ளவனென்றும் செப்பலாமா, ஒருவர் சொன்
னுலு மொப்பலாமா, நீங்களறியாத தொன்றுண்டா,
அடியேன் சொல்வதிற் பிசகுண்டா, ஆனுல் பெரியோர்க
ளென்னசொன்னுலும் சிறியோர்கள் பொறுக்கவேண்டி
யதே அடியேன் வெகுநாளாய் ஸ்வாமிகளின் திவ்ய திரு
வுருவைத் தரிசனம் செய்ய வேண்டுமென்கிற எண்ணங்
கொண்டு நேற்றுக்காலையிலிருந்து மாலைமட்டுக்குங் காத்
திருந்தும் அடியார்கள் நெருக்கத்தா லுள்ளே வருவதற்
குக் கூடாமல் நேற்றைப்போலவே இன்றும் வாடாமல்
அதிகாலையில் சந்தடியில்லாம லிருக்குமென்று வந்தேன்.
வந்து ஸ்வாமிகளைக் காணுமல் நொந்தேன் ஆதலால்
மகானுபாவர்களாகிய நீங்களனைவோருஞ் சேர்ந்து மிக
வும் கருணைகூர்ந்து கோழையேனுகிய இந்த ஏழையை
ஸ்வாமிகளின் தரிசனஞ் செய்யும்படியாய்ச் செய்தா
லுங்களுக்கு வெகு சுகிர்தமுண்டென்று பரிதாப முகத்
துடன் புகன்று மிகவும் விண்ணப்பஞ் செய்துக்கொண்
டார். அதற்கு மறையோர் கற்களைப்போன்றபற்களைக்
காட்டி கெக்கலிகொட்டி நகைத்துபதைத்து அடாமூடா

வனவேடா! முடவன்கொம்புத்தேனுக் காசைப்பட்டாற் கிட்டுமா, தென்னங்காயை பூமியிலிருந் தெட்டினு லெட்டுமா? சிறிய கன்றுக்குட்டியானது புலியை முட்டுமா? பழிபாவத்துக் கஞ்சாமற் சேகரிக்க பொருளொருவனுக் கெட்டுமா? அதுபோல உன் வார்த்தைகள் சுவாமிகள் முன் நடக்கவே நடக்காது. சுவாமிகள் தரிசனம்கிடைக் கவே கிடைக்காது நீ பெங்கே சுவாமிகளெங்கே மேட் டான மேட்டிகளும் நன்றுய்த்தேறின கோஷ்டிகளும் வெகு நாளாய்க் காத்திருந்தும் வருவார் வருவாரென்று பார்த்திருந்தும் அவர் தரிசன மகப்படவில்லை நீ நினை த்து வந்தது மிகவுந்தொல்லை. நீ என்ன அவர் தரிசனம் பெறுகிறதென்ன ஜானுண்டு பயலாயிருந்தும் சஷ்டகல் விகளெல்லாம் பேசவந்தாய் எங்களைக் காணவே கூசி னொந்தாய் சேசே ஒடிப்போவென் றடிக்கவந்தார்கள்.

அதற்கு கபீர் ஓ மாதவர்களே! பிரக்கியாதியர்க ளே! உங்கள் கைகளா லடியேனடிபட என்ன பாக்கியம் செய்தேன் ஏதுதவம் செய்தேன் எவ்வளவு யோக்கிய னுனேன். எவ்வளவு சிலாக்கியனுனேனென்று வணங்கி இணங்கி ஒ சுவாமிகளே! மகாவிஷ்ணுவின் தரிசனத்தை காணுந் துவாரபாலகரைப் போலவும் பரமேஸ்பரருடை ய காட்சியைப்பார்க்கும் நந்திகேஸ்பரரைப் போலவும், நாடோறும் ஸ்ரீ சத்குரு ஸ்வாமிகளின் தரிசனம்பெற்று மோட்சமார்க்கங்கற்று கோப லோப தாப சோப பாப சாப ரகிதர்களாய் பிர்மானந்தத்துக்குச் சகிதர்களாய் விளக்கமுற்றிருக்கும் நல்லவர்களே! தபத்தில் வல்லவர் களே சுவாமிகளின் சேவையைக்கோரிய ஏழையேனுகிய கோழையே னெண்ணத்தை முன்னம் முடித்து பின்புங் கள் கரங்களாலடித்து துரத்திவிடக் கோருகிறே னென் றவர்கள் தாட்களில் வீழ்ந் தாட்கொள்ள வேண்டு மென்று பிரார்த்தித்தார். அதற்கந்தக் கொடியமறைக் கோடியோரடா கபீர்! ஸ்வாமிகளின் சேவையால் உனக் கென்ன லாபம்வரும், என்ன சுகந்தரும், யாதுகாரணத் தால் சுவாமிகளின் மாட்சிமையான காட்சியைக் கோரி னுய் வாதுசெய்ய மீறினுய் உன் கருத்தை வெளிப்படுத் தென் றதட்டிக் கேட்டார்கள். அதற்குக்கபீர் ஓ புண் ணிய புருஷர்களே! அடியேன் சுவாமிகளிட முபதேசம் பெற்றுக்கொள்வதற் காசித்திருக்கின்றேனுதலால் நீங்க ளெல்லோரு மிவ்வெளியேனைக் குறித்து அன்புடன் விரி த்து சுவாமிகளுக்குறைத்து மெழுகைப்போல விருதயத் தைக் கரைத்து எனக்கனுக்கிரகம் செய்யும்படியாய்க் கருணை கூறுங்களென்று சிரசாஷ்டாங்கமாய் வந்தனஞ் செய்தார். அதற் காதிவருணர் தரித்திரன் இராஜபோஜ னத்தையும், கர்மி தேவாமிர்தத்தையும் காமி சன்யாசத் தையும், லோபி சொர்க்கத்தையும், விபசாரி மோட்சத் தையும், அகங்காரி ஞானத்தையும், மிலேசன பிராம ணத் துவத்தையும் கோரினதைப்போ லிருக்கின்றது. நீ பசுவைக்கொல்லும் பாமரனுயிருக்க உனக்கு சுவாமிக ளுபதேசம் செய்வாரா? அஞ்ஞானத்தைக் கொய்வாரா? கருணைமழைபெய்வாரா? பிரஷ்டராய்நைவாரா? அடடா செல்வத்தில் மிக்க புவிராஜர்களும் கல்வியிற் செழித்த கவிராஜர்களும், தவத்திற்சிறந்த புனிதர்களும், தர்மத்தி ற்றழைத்த மனிதர்களும் வல்லமையுள்ள சித்தர்களும் மறுமாசில்லாச் சுத்தர்களும் சுவாமிகளிடமுபதேசம்பெ ற்றுக்கொள்ள வேண்டுமென் றனேக நாளா யலைகிறார்க ளவர்கட்கே யனுக்கிரகஞ் செய்யாத தேசிகர் துடுக்கனு கியவுனக் குபதேசஞ்செய்வாரா ஒருபோதும் செய்யமா ட்டார் இதோ அடியார்களும் வந்துவிட்டார்த ளவர்களை ஒர்வேளை தொடப்போகிறுய் தொட்டு துக்கப்படப்போ கிறுய் சீக்கிரம் வெளியிற் போபோவென் றறைந்துமிகவு மிறைந்து பேசத்தொடங்கினுர்கள்.

அதற்கு கபீர் ஓ-வேள்வியாளர்களே அடியார்கள் வந்தாலென்ன நானொரு பக்கமாய் நின்றிருந்து சுவாமி களின் திருவுருவத்தைப் பார்த்துப் போய்விடுகின்றே னென் றொருப்க்கமாய் ஒதுங்கினின்றூர். அதற்கு வேதி யர் முனிவுடன் அடா பிரஷ்டப்பயலே துஷ்டப்பயலே எட்டப்போடாவென் றுரைத்தால் மட்டிக் குணத்தால் கிட்டவே யிருக்கிறுய் ஒருவேளை உன்னைத் தொட்டுக் கொண்டால் பிரஷ்டப்பட்டுப் பின்னும் ஸ்நானஞ் செய் துவரவேண்டும். பிராயச்சித்தம் பெறவேண்டும் நல்லத னத்தாற் சொல்லுகிறதைக்கேளும் இல்லாவிட்டாற் கல கம் மூளுமென்று ஒருகோலினுற் றள்ளத்தொடங்கினர் கள். அதற்கு கபீர் ஓ-இருபிறப் பாளர்களே மாட்டை யோட்டுவதுபோல மனிதனுகிய என்னை ஒட்டவந்தீர்கள் ஆயாசந்தந்தீர்கள் அடியார்களைத்தொடாம லொதுங்கி யிருக்கிறே னொருவேளை யென்னைத் தொட்டுக் கொண் டாலுங் கெட்டுப்போவதென்ன நானும் ஸ்நானஞ் செய் துபரிசுத்தமாகவே வந்திருக்கிறே னிவ்வளவக்கிரமஞ்செ ய்வ துங்களுக்கடாது அன்றி மடம் எல்லாருக்கும் பொ துவானயிடம் நீங்களே உரியவர்க ளென்பது கூடாது இனியென்னருகில் வராமலுங்கள் வீட்டிலிருங்கள்நீங்கள் செய்தசகாட்டம் போதும்போதுமென் றுரைத்து ஒர்சார் பில் நின்றிருந்தார்.

அப்போதந்த பொறுமையுள்ள பூசுரர்கள மிகவும் வெகுண்டு பெருங்கோபங்கொண்டு தூஷணவார்த்தை கள்விண்டு அடா மூர்க்கனாயே ஆசாரமில்லாத பேயே

உனக்கிவ்வளவு வாயேன் நல்லமாட்டுக் கொருசூடு நற்பெண்மருக் கொருவார்த்தையென்கிற பழமொழி யறியாயோ எங்கள் வல்லமையைக்குறிபாயோ வாயாலதட்டியும் போகாதமாட்டை தடியாற்றட்டி ஓட்டவேண்டும் தட்டியும் போகாதகந்தியை அடித்தே ஓட்டவேண்டும் அதுபோல மாட்டுக்குங் கீழ்மையான எருமைமாட்டுக் கிணையானவனுதலாற் பலதாஞ் சொல்லியுங் கோலாற் றள்ளியும் போகாம லிருக்கின்றாய் திருடனுக்கு முரடனே குருவென்பது போலவும், துஷ்டப்பிள்ளைக் கூரார் புத்திசொல்வா ரென்பதுபோலவும் தலையிற் பட்டாற் றுழ்வாரென்பதைப்போலவும் உன்னை யித்தடியாலடித்தாலொழிய போகமாட்டா யென் றோங்கி யடிக்க வந்தார்கள்.

அதற்கு கபீர் ஓங்கின தண்டத்தைப் பறித்துக்கொண்டு ஓ-சிவகாருண்யமில்லாத் தீயர்களே மெய்ஞ்ஞானமில்லாப் பேயர்களே நாய்போற்குலைக்கும் வாயர்களே நன்று தீதறியா வழியாயர்களே தேளுக்கதிகாரங் கொடுத்தால் நாழிக்கொருதரங் கொட்டுமென்னும் பழமொழிப்படி செய்தீர்கள் ஆனல் துஷ்டர்களை சிக்ஷை செய்வதே நியாயமென்றபடி இந்தத் தடியாலடித்து உங்களுயிரைமுடித்து அனைவரையுங் கொன்றுவிடுவேன், ஒரு கணத்தில் வென்றுவிடுவேன் மித்திரன் வரவைத் தெரிவிக்க சுத்தத்தினடிகளுக்கு முத்தமிட்ட பரிசுத்தனைப்போல் ஸ்வாமிகளின் பணிவிடைக் காரர்களென்று பணிய நேரிட்டது நீங்கள்செய்யு மக்கிரமம் மிகவுங் கெட்டது என்று பலநீதிவாக்கியங்களைப் புகன் றத்தடியைத்தெருவிலெறிந்துவிட்டு ஸ்வாமிகளிருக்குக் திசையை நோக்கித் தெண்டனிட்டு சத்குருநாதனுடைய வரவுக் கெதிர்பார்த்துக் கொண்டிருந்தார் அறுதொழிலாளர் கோலைத் தெருவிலெறிந்த கபீர்மேல் விழுந்து துள்ளிக் குதித்தெழுந்து உதட்டைமடித்து ரத்தம் புறப்படக்கடித்து தன்னைபறியாமற் றடித்து ஈனவார்த்தைகள் படித்து அடியடியென்றடித்து முழங்கைகளாலிடித்து தங்கள் வைராக்யங்களை முடித்து அவயவங்களை நெருங்கப்பிடித்து சசக்கிக்கசக்கி தேகமெல்லாம் இளைக்கவும் நிற்கக் கூடாமல் களைக்கவும்செய்து மடத்துக்குள்தங்காமலோட்டி விட்டார்கள்.

பின்பு கபீர் இவர்கள் சிஷ்டர்களென்றும் நமக்கிஷ்டர்களென்றும் உள்ளேபோய் மானநஷ்ட மடைந்தோம் துஷ்டர்கள் கைகளாலிடிந்தோம் சிறுவனுகிய நாமினி ஸ்வாமிகளைப் பார்ப்பதரிதே சந்தனமரத்தருகிற் சர்ப்பமும் தாழைபின்பால் முட்களும் தர்மங்களிடம் லோபியும் சந்திரனிடம் களங்கமும் புருஷருக்கு அவிவேகமும் ஸ்ரீகளுக்கு விபசாரமும் மாம்மனைக்கோர் வன்குரங்கும் இருந்தெப்படி நஷ்டத்தைத் தருகின்றதோ அப்படியே சத்குருநாதனிடமும் மூர்க்கரிருந்து நஷ்டத்தைக் கொடுத்தார்களென்று பற்பல யோசனைகளோடு நின்றிருந்து அனேக வடியார்க ளுள்ளே போகிறதைப் பார்த்து அவர்களுக்குக் கரங்களைச்சேர்த்து தேக நோயைப்பாராமல் பணிவிடையாளர்களால் வதங்குஞ் சோராமல் தொண்டர்கள் கூட்டத்தில் நுழைந்து உள்ளே வந்து விட்டோமெனத் தழைத்து மடத்துட் பிரவேசித்து குருசங்கீர்த்தனங்களைக் கோஷித்து சந்தோஷமுடத்துடனே ஸ்வாமிகளின் வரவுக் கெதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அதுதெரிந்த துவேஷமுள்ள தொழு குலத்தோர் அதிகரோஷத்துடன் கபீருடைய மென்னியைப் பிடித்துத்தள்ளி நகங்களாற் கீறிக்கிள்ளி ஏண்டா குதிக்கிறாய் துள்ளி எங்கட்கு நீயொருசுள்ளி நறுக்கனீருள்ளமுள்ளி ஒடிக்கப் பாலுள்ளகள்ளி எதிர்க்க நீ யாவாய்யா தென்னி ஓடிப்போடா தொள்ளியென்று வெளியிலோட்டி வேணமட்டும்மாட்டி பராக்கிரமங்களைக்காட்டி நாம் சமர்த்தரென்று பாராட்டி சிறுகுருவியின்மேற் பிரமாஸ்திரம் போட்டதுபோலவும் அபிமன்னனைச் சூழ்ந்துகொண்ட கௌரவரைப்போலவும் அனுமாரைச் சூழ்ந்துக்கொண்ட அவுணரைப்போலவும் இளையபெருமாளைச் சூழ்ந்துக்கொண்ட நாகபாசத்தைப்போலவும் சூழ்ந்துக்கொண்டாளுக்கொரடியாக படித்தோட்டிவிட்டார்கள் அப்போது பரிசுத்தரான கபீர் ஓ சத்குருநாதனே மெஞ்ஞான போதனே உமக்கபயம் உமது தரிசனஞ்செய்ய வந்த அடியேனை இந்தத் துஷ்டப்பிராமணர்களடித்து நஷ்டப்படுத்துகிறார்கள் எனக்காருந்திக்கில்லையா என் று முறையோ முறையென்றோலமிட்டழத் தொடங்கினர்.

அவ்வோசையைக்கேட்ட ராமாநந்த ஸ்வாமிகள் உடனே வெளியிலோடிவந்து கபீரைப்பார்த்து நொந்து ஐயோ இந்தச்சிறுகுழந்தையை உதிரம்வடிய யாரடா அடித்தவர்கள் யாரடா மடித்தவர்கள் எனச் சீற்றத்துடன் கேட்டார். அதுகேட்ட மறையோர் ஓ சுவாமி இவன் துலுக்கவம்ஸத்திற் பிறந்த துடுக்கனு நீச்சன் முடுக்கான பேச்சன் பசுவைத்தின்னும் பறையன் கபடே நிறைந்தவாயன் அரியானைத் தூஷிக்கும் வாயன் அல்லாவைப் பூஷிப்போர் சேயன் மேல்கிழாக்கும் விகடன் வினையமர்செய்யக் கசடன் கர்வமிகுந்த கசடன்

களங்கமுள்ள கபடன் தங்களிட முபதேசம் பெற்றுக் கொள்ள வந்தாலும் ஆசாரியரின்றி நொந்தானும் நாங்கள் தேவரீருடைய மேன்மை விரித்துப் பலவிதங்களா யுரைத்த உனக்குபதேசஞ் செய்யுமாட்டார் தபவேஷந் தரமாட்டார், என்பதாயறைந்து பலதரமிறைந்து வெளியிற் போகச்சொன்னால் கேட்காமல் ஸ்நானஞ் செய்து பரிசுத்தமாயிருக்கும் எங்கள்மேல் விழுந்து முட்டிக்கால் மேல் உட்கார்ந்தெழுந்து, அவமரியாதைசெய்து வாயில்வந்தபடிவைது இந்தமடம் பொதுவானயிடம் உங்களுக்குகென்னசொந்தம் என்றனந்தம்தொந்தம் செய்தபடியால் வைது தடியால் அடித்து வெளியிற்றள்ளிவிட்டோம் ஈனவார்த்தைக்கேட்கவு முட்பட்டோம் தேவரீருக் கிஷ்டமிருந்தால் இந்தத்துஷ்டனை நீச்சப் பிரஷ்டனை சிஷியனுக்கிக்கொண்டு அனுக்கிரகம் புரியுமையா வென்றுவிண்டு மௌனமாய் நின்றார்கள்.

அவ்வசனங்களைக்கேட்ட ராமாநந்தஸ்வாமிகளுக்கு முகங்கருகி கோபம்பெருகி கோவைக்கொல்லுங் கொடியனுக்கா நானுபதேசஞ் செய்யவேண்டும் சபாஷ் நல்ல வார்த்தையைச் சொன்னீர்கள் பக்குவருக்கன்றி அபக்குவருக்குபதேசஞ்செய்யு மாசானும் அனுக்கிரகம்பெற்றுக்கொள்ளு மாணக்கனும் இரு நரகடைவதற்கோரிடையூறுண்டா? சுரபினிறைச்சியைப் புசிப்போர் சொர்க்கமடைவதுண்டா மந்திரமென்பது கிள்ளுக் கீரையா உபதேசஞ் செய்தலோவரையா? அனுக்கிரகம் பெற்றுக் கொள்பவன் இகபரபோக விராகனுய் மோகத்தின் மேலதிகாரனுய் வேதமோதிய விவேகனுய் சர்வசங்க சரித்தியாகனுய் ஆசான்மேன் மிகுமோகனுய் அஷ்டயிஸ்வரிய முள்ளயோகனுய் சாந்தகுணத்திற் சிறந்தவனுய் தாமசாதிகளற்றவனு யிருக்கவேண்டும் அப்படிக்கில்லா அற்ப சாதியிலுற்பவித்த சொற்பக்குணமுடைய இந்தத்துச்சனுக்கா நானுபதேசிப்பே னிவனை நம்முடைய மடத்துக்குள் விட்டவர்களையும் உள்ளேவரப் பார்த்திருந்த துட்டர் கட்டர்களையும் உதைக்கிறேன் வதைக்கச் சிதைக்கிறேன் என்று சாந்தத்தை நீக்கி கபீரை நோக்கி அடா துடுக்கா வெகுமுடுக்கா என்னிடமனுக்கிரகம் பெற்றுக் கொள்ளவும் மோக்ஷமார்க்கம் கற்றுக்கொள்ளவும் வந்தாயா? மடத்துக்குள் நுழைந்தாயா? இதுதானுனக்குத் தகுதியான தீட்சை உனக்கியெ எனக்குள்ள அபேட்சையென்று ஈனவார்த்தைகளைப்புகன்று கற்களை மாறிமாறி வீசி கர்கிபுண்டநாய் சீ-சீ யென்றுமிகவும் ஏசி நீ எனக்கொருதாசி நீ பெறுவாயென்னுசி சமுசாரத்தை ரோசிவாராதவனைச் சேர்ப்பானு உபதேசி சண்டாளனுக்குரைப்பானு சன்யாசி கோஹத்திக்காரனுவானு பரதேசி யானுற்பொறுக்குமா காசி புண்ணிய க்ஷேத்திர மல்லவா வாரணசி துடுக்கரிடப்போய் நேசி காஜிகளிடம் போயாசி வித்தியாசாலையிற்போய் வாசி எனக்குநந்தமானுக்சன் நீயோவாயா யோசி அவமரியாதைச்செய்ய வந்தாயோ தோஷி அடா அற்பசந்தோஷி அந்தணர்களோடெதிர்த்த சுவேஷி அறுந்துவிடச் சொல்லட்டுமா நாசி எனப் பற்பலவார்த்தைகள்பேசி பிராமணர்களை நோக்கி இக்கணமே இவனை நீக்கி விடுங்களென்றறைந்து மிகவுமிறைந்து மடத்துட் போகும்போது, கபீர் திடுதிடென்றோடி ராமானந்த ஸ்வாமிகளை நாடி சேவடிகளில்விழுந்து முத்தமிட்டெழுந்து ஆய்ந்தோரடித்த அடிகளைக் கட்டி ஓ பரமேட்டி! ஓ கர்த்தனே! பரிசுத்தனே! ஜீவன் முத்தனே! அழியாசித்தனே! அன்பர்தொழு மத்தனே! முடிவான அர்த்தனே! அஞ்ஞான அர்த்தனே! கெடாத புத்தனே! வல்லமையுள்ள சித்தனே! ஞானுசித்தனே! ஆனந்தசொரூபனே! சுயம்பிரகாசதீபனே! சத்சீடருக்குபதேசிக்கும் கியாபனே! மூவுலகேத்தும் பிரதாபனே! ஆனந்தலாபனே! துர்க்குணங்களை யகற்றுந் தூயனே! அழகுள்ளரூபனே! அகண்டமாகிய நிரூபனே என்று பற்பலவிதங்களாய்த் தோத்திரஞ் செய்தேத்தி கண்மலர்களைச்சாத்தி யாருந்துதிக்குங்கீர்த்தி வகித்த சத்குருமூர்த்தி பந்தத்திலகப்பட்டு தொந்தறைக்குட்பட்டு சிந்தாக்கினியாற் றகிக்கப்பட்டு இந்தவேளையில் விடுபட்டு எந்தையேயென்று உந்தனையடைந்தால் மைந்தனைப் பாதுகாக்காமல் மந்தபுத்தி யுடையோனென நிந்தை செய்யலாகுமா இப்படியு மும்முடைய மனது நோகுமாவென்றுரைக்கும்போது ராமானந்த ஸ்வாமிகள் என்னடாகத் தரிக்காய்க்குக் கால்கைமுளைத்தாப்போல் பிஞ்சிலேபழுத்து ராகத்தையிழுத்து அத்தனே, புத்தனே, முத்தனே, சித்தனே யென்று உளறுகிறாய் வாயில் வந்தபடி குளறுகிறாய்.

நீ யென்ன உன்வயதென்ன உன்வர்னமென்ன உன் கண்யமென்ன மயிருள்ளவள் வாரிமுடிப்பது போலவும் வாயுள்ளவன் பாடுவதுபோலவும் சஷ்ட கல்வியைக்காட்டவா வந்தாய் துஷ்டகைகளை நீட்டவா வந்தாய், வெகு நேரமாய்க் கூச்சலில்லாமற் பேசும் நீச்சப்பயலே இனி யரைக்கணந் தங்காது ஓடிப்போடா முழுமூடா, குடிகேடா, வனவேடா, நீயா உபதேசம் பெற்றுக் கொள்ளுகிறவன், குருவேயென்று விள்ளுகிறவன் ஓ - வேதியர்களே! இந்தத்துலுக்கநாயை அறிவில்லாத பேயை துஷ்டகுணமுள்ள சேவை உதிரம் புசிக்கும் ஈயை அடித்துத்

துரத்தி விடுங்களென்றுரைத்து மடத்துட் போயினர். உடனே மேற்குலத்தோர் (வல்லான் வகுத்ததே வாய்க்காலென்னும்) பழமொழிப்படி கண்களை யுருட்டி திடுக்கிடமிரட்டி புழுதிபடிபப்புரட்டி தங்காமல் விரட்டி இந்த மடம் பொதுவானயிடம் என்றுரைத்த உன்வாயைப்பிளந்து மணிக்குடலெடுத்து பருந்துகளுக்கு விருந்திடப் போகிறோம் இனியாவது பேசாமலோடிப்போவென்று கூசாமல் வைதுக்கொண் டிருந்தார்கள் அவமானப்பட்டோடும் கபீரோ அவதூதர்கள் எமதூதர்களானாற்போல இந்த முப்புரிநூலோர் தூளியென்றால் கீர்த்தூளியென்பவர்போ லிருக்கிறார்கள்.

அந்தோ! ஸ்வாமிகளைத் தரிசித்தும், பாதங்களைப் பரிசித்தும் அன்பாய்த்தோத்திரஞ் செய்யாமற்போனேமே? வீணாய் துன்பத்திற்குள்ளானோமே நாம் செய்த கர்மமென்னமோ? அல்லது நமது பக்திபின்னமோ (கற்பகத்தைச் சார்ந்தோர்க்கும் காஞ்சிரங்கா ஈந்ததென்னும்) பழமொழிப்படி நேரிட்டது. தேகமெல்லாம் ரத்தம்பீரிட்டது அடடா இனி நாமென்னசெய்வோம் யாரைவைவோம் என்றிடைந்து வீட்டையடைந்து பரபுருஷனை நாடிய பாபஸ்திரீ காவலிலகப்பட்டது போலவும் பதியிறந்தானென்று செப்பக்கேட்ட பதிவிரதையைப் போலவும் யுத்தத்தி லபஜெயமடைந்த வீரனைப்போலவும் மனையாள் விபசாரஞ் செய்தாளெனக்கேட்ட சூரனைப்போலவும் துக்கம்மேலிட்டு கக்கசத்துக் குட்பட்டு தந்தைதாயுடன் பேசாமலிருக்கும் குமாரனைப் பார்த்த தமால் அடாமகனே அழகான முகனே உனக்கேனிக் குறை வந்தது அடிகளால் தேகம் நைந்தது யாருன்னையிப்படி யடித்தார்கள் உயிர் நீங்கும்படி மடித்தார்கள்சீக்கிரஞ் சொல்லடா சொல்லடாவெனப் பலதரங்கேட்டுப் பேசாமலிருக்கும் தநுசனை வாரியெடுத்து மடிமேல்வைத்துக்கொண்டு சரீரம் முழுதுங் காயமாயிருக்கக் கண்டு ஓ வென்றலறி மிகவுங்கதறி உடலம்பதறி வாய்மொழிகள்குளறி அடா என்னருமை மைந்தா உயிரினுஞ் சொந்தா யாரிடமடிபட்டு நொந்தாய் எப்படி நடந்துவந்தாய் உன்னையடித்தவர்களின் கழுத்தைக்கடித்து இப்போதே வானுலகடையச் செய்கிறேன் துண்டந் துண்டங்களாய்க் கொய்கிறேன் காட்டடா வென் றார்ப்பரிக்கும்போது ஜிஜ்ஜாபீபி ஐயோவென்று புலம்பி மகனைத் தண்ணீராலலம்பி அடா வென்கண்மணியே சிகாமணியே உன்னை யென்னறியாமையா லிரண்டடியடிக்க உன்மேற்படாமல் நாராயணர் மேற்பட்டதே மாயாரூபத்தை நீக்கி விட்டதே இப்போதிந்த அடிகளெப்படிப்பட்டது நீ பேசாமலிருப்பது மிகவுங்கெட்டது உன்னையாரிப்படி அலங்கோலஞ்செய்தார்களோ அவர்களை இக்கணங்காட்டுவாகாட்டுவா வென் றிழுக்கத் தொடங்கினாள்.

அதற்கு கபீர் ஓ என்தாய்தந்தையே! சொல்லக் கேளுங்களோர் விந்தையே கஷ்டப்படாமல்லாபங்கிடைக்குமா? சிஷ்டனாகாம லுபதேசங்கிடைக்குமா கஷ்டப் படாமல் சுகமுண்டாகுமா நிஷ்டை சாதிக்காமல் நித்தியானந்த முண்டாகுமா அதுபோல ராமானந்த சுவாமிகளிடமுபதேசம் பெற்றுக்கொள்ளப்போ யவருடைய ஏவலாளர்களா லிச்சிட்டையடைந்தே னென்று நவின்ற மாத்திரத்தில் தாய்தந்தை அனேகத் துடுக்கரைச்சேர்த்துக்கொண்டு தூஷணவார்த்தைகளை விண்டு ராமானந்த ஸ்வாமிகளிடம் போகப்புறப்பட்டதையறிந்தகபீர் தாய் தந்தையர்க்கும் வந்த வுறவாளிகளுக்கும் வந்தனம் புரிந்து மிகவும் பரிந்து, ஓ புண்ணியவான்களே ராமானந்த ஸ்வாமிகளின் பணிவிடைக்காரர்களா லடிபட்ட வெனக்குற்ற பாக்கியமும் நானடையப்போகிற சிலாக்கியமும் பகவான்செய்த ஆசீர்வாத வாக்கியமும் இதுநாள் பரியந்தம் நானிருந்த யோக்கியமும் இராமானந்த ஸ்வாமிகளால் பிரகாசிக்க விருக்க நீங்களேன் இதை மறுக்க வந்தீர்கள்.

எனக்கேனிடர் தந்தீர்கள் வீணாயேன் நொந்தீர்கள் கோபாக்கினியில் வெந்தீர்கள் (ஆத்திரக்காரருக்குப்புத்திமட்டு) என்கிற பழமொழிப்படி செய்தீர்களென்றுரைக்க துலுக்கர் அடா கபீர் நீ மஹம்மது மதஸ்தனாயிருந்தும் பிராமணனிடமா யுபதேசம் பெற்றுக் கொள்ளப்போகிறாய் (அடாதகாரியஞ்செய்தாற் படாதபாடு படவேண்டும்) என்கிற பழமொழிப்படி யுனக்கு நேரிட்டது இதரமதத்திற் பிரவேசிக்க வெண்ணங்கொண்ட வுன்னைக்கடவுளே தண்டித்தார். அதை நினையாமற்றண்டித்தார் மறையோர்மே லியாதொரு குற்றமுமில்லை நீயே தேடிக் கொண்டாய் தொல்லை, உன் தலைமேலேன் போடாமற் போனார்கள் பெரிய கல்லை, உன்னையிரண்டு துண்டாகயேன் வெட்டவில்லை உடைக்காமற் போனார்களே பல்லை எங்கள் செவியாற் கேட்கவும் நேரிட்டதே இப்போது இச்சொல்லை நீ மோக்ஷமடைகிறவனல்லை பதிவிரதை கடந்து போவாளா தன்னெல்லை புலி புசிக்குமா புல்லை என்னும வார்த்தைகளாடி இவனுக்கா யேன் வந்தோமோடி என்று தங்கடங்க ளிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு தமாலும் ஜிஜ்ஜாபீபியும் கபீரை ஆதரணை செய்து ராமானந்த ஸ்வாமிகளை வைது கண்ணீர் விட்

டழுது கடவுளே யென்று தொழுது எங்களுக்கும் வரு மா பழுது இனி யெப்படி போகும் பொழுது என்று புலம்பும் தாய்தந்தையரைப் பார்த்து கபீர் கரங்களைச் சேர்த்து துக்கத்தையாற்றி இனிய வார்த்தைகளாலேத் தி எனக்குக் கடவுள் துணையாயிருப்பா ரெனப்போற்றி பற்பல வார்த்தைகளாலேமாற்றி அன்னமுண்டு தாய் தந்தையர்க்குத் தொண்டு அன்பாய் செய்துக்கொண்டு உல்லாசமாய் விளையாடிக் கொண்டிருந்தார். கேட்டீர் களோ சித்தர்களே யென்று பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

கபீர் ராமானந்தசுவாமிகளின் பணிவிடைக்காரர்களா லடிபட்ட அத்தியாயம்

முற்றிற்று.

---

ஆறுவது

## கபீர் ராமானந்த ஸ்வாமிகளி ஞசீர்வாதம் பெற்ற அத்தியாயம்.

இப்படி கபீர் சிலநாள்கழித்துவீணுள் அழிவதைக் குறித்துத் தன்னைத்தானே பழித்து ராமானந்தசுவாமி களை நினைந்து கண்ணீரால் நனைந்து ஐயோ வீணுக நாட்கள் கழிந்துபோகின்றதே! முபற்சியாலாகாக் காரி யமுமாகின்றதே யாதொரு வித்தையு மாசானின்றி பலிக்காதே ஆரியர்மே லுத்தரர்க்கு மனஞ் சலிக்காதே ராமானந்த ஸ்வாமிகளே ஆசானெனத் தீர்மானித்தபின் வேறுசானைத் தேடக்கூடுமோ? மற்றொருவர்பால் நாடக் கூடுமா? இப்படி செய்வதுத்தம் புருஷருக்கழகல்லவே! நல்லோர் செய்யும் காரியமல்லவே! தேகம் நீர்மேற்குமி ழியாயிற்றே வீணுய் நாட்கள் கழிந்துபோயிற்றே நாட் கள் கழிவதற் கவிவேகிகள் சந்தோஷமடைவார்கள். விவேகிகள் பெருமூச்சுவிட் டிடைவார்கள். மானிடப் பிறப்பெடுக்க முற்பிறப்பி லென்ன தவஞ் செய்தோமோ பசு பட்சி புலி பூனை நாய் பேய் நரி கரி அரி பரி புழு பூண்டு ஈ யெறும்பு மச்சம் மான் மறை மாடு முதலான தன்றி பிறவிக் கடலைக்கடக்கும் மனுஷப் பிறப்பெடுத்து துன்மார்க்கங்களை படித்து மந்த புத்தியினல் தந்தை தாய் பெண்டு பிள்ளை நாடு நகர் சொந்தமென நினைந்து பந்தத்தில் நுழைபலாகுமா இதனுற் பிறவிப்பிணிவெந்து போகுமா எம்மார்க்கத்தா லின்பலேலைபி யூனப்படலாம். எவ்விதத்தா லஞ்ஞான குணங்களை விடலாம். மோட்ச மென்னும் நகரிற் புகுக சரியை கிரியை யோகம் ஞான மெனுஞ் சதுர்நெறிகளிருக்கின்றனவேசரிகையைச்செய் யலாமெனின் எங்குமிருக்குங் கடவுளெனக் குள்ளும் புறம்பிலு மிருப்பாரல்லவோ இல்லையென்றறையும் மொ ழிகள் நல்லவோ தனக்கு ளாதியையறியச்சத்குருவேண் டுமே கிரியை யியற்றுவோமெனின் சகல பிராணி கட்கு மூட்டியுறக்கி உபசரிக்குங் கர்த்தனுக்கு நாமெவ்வித பூசை செய்யல்வேண்டுமோ அதை யுணர்தற்கு மாரியர் வேண்டுமே யோகம் புரிவோமெனின் விசுவாசநிசுவாசங் களை யொடுக்கி பிர்மாந்திரத்தில் முடுக்கி நாதத்தைக் கேட்டு சோதியைத் தரிசிப்போமெனின் அதுவும்வித்யா ரம்பந்தமாகவே யிருக்கின்றதே இதைச் சோதித்தறியவு மடிகள்வேண்டுமே ஞானசாதனஞ் செய்வோ மெனின் தானே பிர்மம், பிர்மமே தானென்கிற அத்துவித பாவத் தையே யுணர்த்துகின்றதே,

தான் பிர்மமென்கிற சப்தார்த்தத்தின் மர்மந்தெரி தற்பொருட்டு காரணகுரு வேண்டுமே கர்மகாண்டப் படி நடப்போர்க்கே முக்தியுண்டென்று சிலரும் பக்தி மார்க்கத்திற் செல்பவர்க்கே பரமபத முண்டென்றும், சிலரும் ஞானநிஷ்டையைச் சாதிப்பவர்க்கே கைவல்யங் கிடைக்குமென்று சிலரும் நவில்கின்றூர்க ளெதை மேன் மையானதென் றுணரலாம். இதற்கும் ஆசிரியர் வேண் டுமே கர்மானுஷ்டானங்களைத் தவறுமற் செய்பவர்க்கு சத்தியலோகமும், விஷ்ணுவைத் தொழுபவர்க்கு வை குந்தமும், சிவனைநாடித் தபஞ் செய்வோர்களுக்குக் கைலேயும், அத்வைத பாவத்திலிருப்பவர்க்கு மோட்ச மும் கிடைக்குமென் றறையு மிப்பதவிகளி லெஃது மேன்மைபானதோ ஆனந்தமயமா யிருப்ப தெதுவோ இதை யுணர்த்துதற்குந் தேசிகன் வேண்டுமே குருவில் லாத வித்தையும், கொழுநனில்லாத மங்கையும் அபல மென் றுரைக்கின்றூர்களே இதற்கென்னசெய்யலாமென் கிற எண்ணமே மேலிட்டு மிக ஆயாசப்பட்டு முடிவான அர்த்தத்தை நாளைக் காலையிற்போய் ராமானந்த ஸ்வாமி களைக் கேட்டறியலாமெனயோசித்து எப்போதிரவுவொ ழியுமென்றுசித்து மனதா லிராமானந்த ஸ்வாமிகளைப் பூசித்து இவரே நமக் காரியரென விசுவாசித்து குரு சங்கீர்த்தனங்களைக் கோஷித்து உடனே மடத்தினரு கிற் பிரவேசித்து ஸ்வாமிகளி னேவலாளரைப் பூஷித்து

தன்னைத்தானே தூஷித்து மடத்தினுள் வேதாந்தங்களை யோதிக்கொண்டிருப்பதைக் கேட்டு ஆனந்தக் கண்ணீர் சொரிய நிற்குந் தருவாயில் ராமானந்த சுவாமிகள் சேவல் கூவும் வேளையில் பல மாணாக்கருடன் கங்கா ஸ்நானஞ்செய்யப் புறப்பட்டதைக் கபீர் கண்டு ஆனந்தங்கொண்டு சுவாமிகளைச் சூழ்ந்து இருப்போரைத்தாழ்ந்து ஆரியர் கழல்களில் வீழ்ந்து இன்பவேலையி லாழ்ந்து பலதரங் கும்பிட்டு பண்புடன் முத்தமிட்டு சுவாமியென முறையிட்டு துன்பத்திலிருந்து விடுபட்டு ஸ்மாணை கெட்டு காயத்தை யசைக்காமற் றன்னை மறந்திருந்தார் அப்போது ராமானந்தஸ்வாமிகள் தாழ்ந்தவன் யாரடா? பாதங்களை விடடா எழுந்திருடா மிகவும் முரடா தன்னை பரியாக்குருடா இரவில்வந்த திருடா சுகஜீவியாய் வாழ்ந்திருடாவென் றாசீர்வாதஞ் செய்தார்.

அதுகேட்ட கபீர் களிக்கடலிற் குளித்தவராய் ஓ சுவாமி இன்றைக்கல்லவோ உமதாசீர்வசனம் பெற்றேன். மோட்சமார்க்கம் கற்றேன் பந்த பாசங்களற்றேன். பிரமானந்த வாழ்வையுற்றேன் ஓ என் சத்குரு நாதனே ஜெகநாதனே! வேதனே! வேதாதீதனே! மெய்ஞ்ஞான போதனே! பந்தமில்லவதூதனே! லீலாவினோதனே! கமலம்போன்ற பாதனே! பரிசுத்தமான நீதனே! நவநீதனே! விர்ச்சேதனே! நிஷ்குரோதனே! நிர்போதனே! நிர்வாதனே! துரியாதீதனே என்று பற்பலவிதங்களாய்த் தோத்திரஞ் செய்யும்போது ராமானந்தஸ்வாமிகள் ஏவலாளரை நோக்கி இந்தப் பாலன்யார் நீங்களறிவீர்களா வென்று வினவ மறையோர் கபீரென்றறிந்து முகங்கரிந்து மிகவுமெரிந்த கோபம் விரிந்து ஓஹோ ஸ்வாமிகள் முன் வந்திருந்த நீச்சாதியனுக்குக் கூச்சமின்றி ஆசீர்வாதஞ்செய்தார், கருணைமழை பெய்தார் தம்முடைய விரதத்தைக்கொய்தார் நாமெச்சும் பொருட்டங்காள் வைதார் இதற்கென்ன செய்யலாம் யாரை வையலாம், இந்தத்துஷ்டப்பையனுற் பிரஷ்டர்களானோம் களிட்டமுய்ப்போனோம் என்று தங்கடங்கள் வாயைத் திறந்து ஆவெனப்பறந்து பேயைப்போல் பிதற்றும்போது ஸ்வாமிகட்குச் சாந்தமிறந்து முனிவுபிறந்து மிகவும் நிறைந்து ஓசையாயிறைந்து எட்டப்போடாவென் றறைந்து கபீரைக் கன்னத்திலறைந்து ஓ விப்பிரரே நிசியில்வந்த இத்திருடனை பாதங்களைவிடாதமுரடனை நையஅடித்து எலும்புகளை யொடித்து ஓட்டிவிடுங்களென் றுரைத்து ஸ்நானத்துக்கெழுந்தருள தொழுகுலத்தோர் கபீரைக் கபிற்முற் பிணித்து வாயிற்றாசைத் திணித்து அஸ்திகள்முறிய அடித்து தங்கள் வைராக்கியத்தை முடித்து இக்கள்வனை சூரியோதயமானதே இராசன்பா லனுப்பலாமென் று தொழுவத்தில்மாட்டி பராக்கிரமங்களைக்காட்டி ஸ்நானஞ்செய்யப்போனார்கள்.

அப்போது கபீர் தேகநோவுக் காற்ற மாட்டாமல் பகவானைநினைந்து கண்ணீரால் நனைந்து ஓம் ஹரி ஹரி! நரஹரி! முரஹரி! அம்புஜாக்ஷரி! பத்மநாபா! பரமபுருஷா! பக்தவச்சலா! வேணுகோபாலா! தேவானுகூலா! ஆதிமூலா! சத்தசீலா! தேவகிதநயா! தசரததநயா! கௌசலைபுத்ரா! முனிவர்கள்மித்ரா! புண்ணியக்ஷேத்ரா ஆனந்தபாத்ரா! மாயாவிலாசா! வைகுண்டவாசா! சுயம்பிரகாசா! அன்பர்கள்நேசா! ருஷிகேசா பாபவினாசா! ஓ விஷ்ணு ஓ-பகவான் ராமானந்த ஸ்வாமிகட் கடியேன் மீதிவ்வளவு வெறுப்பேன் அருவருப்பேன் நானென்ன கொடுமைசெய்தேன் யாரைவைதேன் வீணாய் நாட்களைப்போக்கலாமா ஸ்வாமிகளுக் கென்மேலிருக்கும் கோபமா சகல சந்தேகங்களுந் தலையெடுக்காமற் சாகுமா நானிவ்வளவிடுற வுமக்குச்சாகமா இதென்னகுற்றமோ கமா அனுபவிக்கவேண்டிய போகமாவென் றனந்தம் விதங்களாய்ப் பிரலாபித்து ஓ தெய்வமேயென்று அழுது தொழுது தலையெடுப்பதற்குமுன் தொண்டர்கள் சகாயனை விண்டுவானவர் கபீர் மஸ்தகத்தின்மேற் றமதஸ்தங்களைவைத் தாசிகள்கூறி கட்டையவிழ்த்து வாரிமடிமேலேந்திக்கொண்டு பயம் வேண்டாமென்று விண்டு ஓ-கபீர்தாசனே எனக்குகந்த நேசனே ராமானந்த சுவாமிகளின். தொண்டர்களாகிய லண்டர்கள் கையாலடிபட்டாயோ தயிரியம் விட்டாயோ எனக்கு முறையிட்டாயோ சிறைக் குடன்பட்டாயோ வென்று ஆகமெல்லாந் தடவி கண்ணீர் துடைத்து தோண்மே லேந்திக்கொண் டரைக்கணத்திற் றமால்முன் விடுத்து தன்னையாரும்பார்க்காமல் மாயையாற்றடுத்து அந்தரத்தில் மறைந்தார்.

கபீர் பகவான் தன்னிமித்தம்வந்து அரிதான சேவைதந்து செய்த உபசாரத்தையும் வீட்டிற்கொண்டு வந்து விட்ட உபகாரத்தையும் நினைத்து கண்ணீரால் ஆக்கையை நனைத்து ஓ சீதாசமேதா லீலாவினோதா என்னோடோர் வசனம் பேசலாகாதா பேசினல் எனக்குற்றகுறைகளெல்லாம் போகாதா பாவங்களெல்லாம் பொடி சூரணமாய் வெந்து நீறாகாதா சந்தேகக்கடலைக் காட்டாமற் சாகாதா வென்று புலம்புகிறதைக் கேட்டதமால் அடா பென்சுதனே அரியவற்புதனே பகவான் இங்கு வந்தாரா பட்சமாய்ச் சேவை தந்தாரா ஆண்டவனைக் கண்டாயா ஆனந்தம் கொண்டாயா அரிபை யின்று பார்த்தாயா? ஆயாசத்தைத் தீர்த்தாயா?

மாதவனைப் பணிந்தாயா? மலரடிகளையணிந்தாயா? அடியேன் பார்க்கலாகாதோ? அடியேன் செய்த தீதேதோ? மாயன் செய்யும் வகையேதோ? வறியேன் பாவத்தொகையேதோ? தெரிந்தும் நிரூபம் ஆனரோ? தியங்கச் செய்து போனரோ? அடியேன் பாவியானேனே? அவலமாகிப் போனேனே? வந்துபார்க்கக் குறையேதோ? மகனே முன் செய்த குறையீதோ? சேயே நீ செய்த தவமேதோ? கருணைக்கண்ணுற் பாரேனே? கவலைகளெல்லாந் தீரேனே வென்றனந்தம் வார்த்தைகளாடி பல சங்கீர்த்தனங்களைப்பாடி மகனைவாரியெடுத்துமார்போடணைத்து அங்கமெல்லாந் தழும்புகளா யிருக்கப்பார்த்து ஆகமெல்லாம் வேர்த்து, அடா என் பாலனே! அரிதான சீலனே! தேகமெல்லாங் காயமாயிருக்குங் காரணமேன் பேசாமலிருக்குங் கொள்கையேன் என்று பலதரங் கேட்குந் தந்தைக் குண்மையுரைத்தால் முன்போல் விபரீதமுண்டாகுமென் றொன்றும் பேசாமலிருக்கும் கபீரைப் பார்த்த ஜிஜ்ஜாபீபி அடிகளின் வடுவையும் பாசத்தாற் பிணித்த குறியையுங்கண்டு ஆயாசங்கொண்டு, அடா என் மைந்தா! ஆருயிரினுஞ்சொந்தா! எங்களையேனிழந்தாய் எவனிவ்வடிபட்டு நொந்தாய் எப்படி நடந்துவந்தாய் இடரனலா லேன்னொந்தாய் எங்களுக்கே னிடர் தந்தாய் என்றலரும்போதும் பேசாப்பிள்ளையை கொஞ்சுங் கிள்ளையை தமா லாதரணை செய்து அடித்தவர்களை வைது புறம்போகாமற் கைது செய்து வைத்திருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

கபீர் ராமானந்த ஸ்வாமிகளின் ஆசீர்வாதம்

பெற்ற அத்தியாயம்

முற்றிற்று.

---

ஏழாவது

## கபீர் ராமானந்த ஸ்வாமிகளிட

## முபதேசம் பெற்றுக்கொண்ட அத்தியாயம்.

இப்படி சிலநாள் கழிய, தாய் தந்தையர் துக்கம் வொழிய கர்மமெல்லாந் தன்னை விட்டுக்கழிய கபீருக்கானந்தக்கண்ணீர்வழிய பகவான் கருணைமழைபொழிய அஞ்ஞான மடியோடும் வெந்தழிய வொருநாளிரவில் கபீர் விழித்து மந்தப்புத்தியை மாய்க்கிழித்து ராமானந்த ஸ்வாமிகளிடமோர் மொழியாவது கேட்டுக்கொள்ளவேண்டு மிதற்கென்ன உபாயஞ் செய்யலாமென்றனந்தம் விதங்களாயோசித்து ஆதித்தனைப்போற் பிரகாசித்து அறிவுள்ளவர்க்கறிய தொண்டர் முயற்சியுடையாரிகழ்ச்சியடைவதுண்டா திக்கற்றவனுக்குத் தெய்வமே துணையல்லவா? தெய்வத்தை நம்பினோர்க்குத் தீங்கணுகா தல்லவா? இன்றைக்கிதுநாள் பரியந்தமானபடி யானுலுமாகட்டும், அல்லதிவ்வுயிர் பிரிந்து போனலும் போகட்டும், ஸ்வாமிகளின் மனம் கோபாக்கினியால்வெந்தாலும் வேகட்டும், ஏவலாள ருதைத்துக்கொண்டு செத்தாலுஞ் சாகட்டும், இக்கணமே ஸ்வாமிகளிடம்போ யவரருள் வாக்கிலிருந் தெம்மொழி புறப்படுகின்றதோ அதையே பிரம்மோபதேசமாய்க் கொள்வோமென்று மடத்தினருகிற்சென் றுல்லாசமடைந்து உட்போவதற்கிடைந்து, புறத்தில்நின்றபடி ஸ்வாமிகளின் வாய்மொழியின்மேற் கவனம் வைத்துக்கொண்டு சேவல் கூவும் பரியந்தங் காத்திருந்து மாரியரோருரையும் பேசாமையாலினி ஸ்வாமிகள் ஸ்நானத்துக் கெழுந்தருளுவார். நாம் கட்டத்தின் படிக்கட்டில் படுத்துக்கொள்வோம் தேசிகர் தமது திருவடியை நமது சிரத்தின்மேல் வைத்து விடுவார் ஏதாவதோர் மொழியுஞ் சொல்லிவிடுவா ரின்றைக்குப் பெறும்படியான பாக்கிய மிதுவேயாமெனத் துணிந்து, கங்கையினருகிற்சென்று மணி கர்ணிகை கட்டத்தின் படியின்மேல் படுத்துக்கொண்டிருக்கையில் ராமானந்த ஸ்வாமிகள் ஸ்நானஞ்செய்யப் புறப்பட்டு மணிகர்ணிகையி னுருகணத்தின்மே லிறங்குகையிற் கபீரவரிறங்குவதற்கு நேராய்ச் சயனித்துக்கொள்ள படிகள் தெரியாமற் கபீர் மஸ்தகத்தில் மிதியடியைவைத் தழுத்தமாயூன்றி விட்டார். கபீர் அந்தோவென்று கூக்குரலிட்டழத் தொடங்கினர். ஸ்வாமிகளறியாமற் குழந்தையை மிதியடியால் மிதித்து விட்டோமேயென்று கபீரைத் தன் திருவஸ்தங்களாலுந்தடவி தாம் தாம் ராம் ராம் என்றுரைத்து மற்றச் சோபானங்களிலிறங்கி பகிரதியில் ஸ்நானஞ்செய்து மடத்துட் பிரவேசித்தார்.

கபீர் இன்றைக்கு நாம் செய்த பாக்கியமே பாக்கியம், நமது பெரியோர்செய்த சிலாக்கியமே சிலாக்கியம், நாம் கோரிவந்ததை பகவானே முடித்தார். அன்றுமறையவனல் வந்தருளியதையே இன்றெம காண்டவனுமுரைத்தார் வேதமுடிவான தாரகமந்திரமிதுவேயாகும்.

இதனாலேயே சகலபாபங்களும் நசித்துப்போகும், எதை யும் நம்பினால் வீடுண்டு, நம்பாதார்க்குக் கேடுண்டு, பர மேசன் பார்வதிக்கும் நாரதர், வால்மீகர், பரத்துவாச ருக்கும், பாராசர் வேதவியாசருக்கும், வியாசர் சுகப்பிர்ம ரிஷிக்கும் சொல்லிய மந்திரமிதுவே யல்லவா, அன்றி அனேக ரிஷீஸ்வரர்களெல்லா மிதைத்தியானித்தே பரம பத மடைந்தார்களல்லவா? இதைபன்றி மேலான வாக் கிய முண்டாயில்லை இல்லையெனச் சந்தோஷ சாகரத் தமிழ்ந்தவராய்ச் சானவியில் மூழ்கி, ஈரவஸ்திரமுடன் வீட்டையடைந்து தாய் தந்தையர்க்கு வந்தனந்தந்து, ஓ யென்னன்னையே! அத்தனே ! இன்றைக்கு ராமானந்த ஸ்வாமிகளிட முபதேசம் பெற்றுக்கொண்டேன்மோட்ச மார்க்கங் கற்றுக்கொண்டேன்.

ஆதலாலின்றுட னவருடைய முத்திரையைத் தரித் துக் கொள்ளுகிறேன் நீங்களு மணிந்துக் கொள்ளுங்க ளென் றுரைத்து, பட்டவஸ்திர மணிந்து ராமானந்த ஸ்வாமிகளிடுந் திலகத்தை நெற்றியிற்றீட்டி ஆரியர் பாதங்களில் மனதை நாட்டி துளசிமாலைகளைப் புனைந்து குரு சுவாமிகளுக்கு பூமாலைகளையும் பூசைக்குரிய வஸ் துக்களையு மேந்திக்கொண்டு ஜெயராம் சீதாராமென்று தியானஞ் செய்துக்கொண்டே மடத்தினுட்பிரவேசித்து குரு சங்கீர்த்தனங்களைக் கோஷித்து அடியார்க ளனைவ ருக்கும் சிரசாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டு கோமா னிருக்குங் கோயிலை நோக்கிக் கும்பிட்டு தொண்டர்க ளுடன் தானேர் தொண்டனாய்ச் சேர்ந்து களி கூர்ந்து ஸ்ரீராமநாமத்தை ஜபமாலையால் ஜபித்துக்கொண்டிருப்ப தைப்பார்த்த தாசர் ஆச்சரியமா யடா இதென்ன விபரீ தமா யிருக்கின்றது.

துலுக்கன் சுவாமிகளின் திலகமணிந்து நம்முட னொத்து வீற்றிருக்கின்று னிவனுக்காரிய ரனுக்கிரகஞ் செய்தாராக்கு மிது தெரிந்துகொள்ள வேண்டுமென் றிரைவன் தொழும்பரை விளித்து கபீரிருக்குங் கோலத் தைக்காண்பிக்க, அந்தணர்அடடா இந்தத்துஷ்டப்பயல் நம்மை பிரஷ்டராக்க வேண்டுமென்கிற நிஷ்டை பூண் டிருக்கிறதுபோற் காண்கின்ற திக்கனிஷ்டனை இரண்டு துண்டமாய்க் கண்டித்தாலன்றி கமதண்டையில் வராம லிரானென் றுரப்பரித்துக் கபீர்மேற் பாய்ந்து, அடா ! நீச்சா, கோவைக்கொல்லும் மிலேச்சா, அன்பர்கள் மத் தியி லின்புடன் வந்து அசுசியாக்கி விட்டாயே, நீ கெட் டாயே யென் றுளுக்கோர் குட்டுகுட்டி திடுக்கிடமிரட்டி எங்களை யேளனமா செய்ய வந்தாய் சுவாமிகளின் தில கத்தை யேனணிந்தாய் துளபமணிகளை யேன்புனைந்தாய் நீயேன்செய்ய நினைந்தாயென்று வற்புறுத்திக் கேட்கும் போது கபீர் ஓ பிராமணோத்தமர்களே! வீணாயென்னை யேனிழுத்து அடித்து அலங்கோலஞ் செய்கிறீர்கள். வேண்டாம் வேண்டாம் இன்று வைகறையில் சுவாமிக ளெனக் கனுக்கிரகஞ் செய்தாட்கொண்டாரிதிலுங்களுக் கைய மிருக்குமாயின் தேசிகரை வினவித் தெரிந்துக் கொள்ளுங்களென்று சாற்ற, தொழுகுலத்தோர் கபீரை யிழுத்துக்கொண்டுபோய் ஆரியர்முன்னிறுத்தி ஓசுவாமி! தேவரீ ரின்றுகாலையிலிந்த துடுக்கனுக்குபதேசஞ் செய்தீ ராமே நிச்சயமாவென்று வினவ, தீர்த்தன் மிகவு முனி ந்து கபீர்மேல் மிதியடியை வீசியெறிந்தா ரப்பாதுகம் கபீர் லலாடத்திற்பட்டுதிரம்பெருகச் செய்ததற்கு கபீ ரிடருறுமல் ஆனந்தவாரியி லமிழ்ந்தவனு யாசிரியரை நோக்கி,

ஓ என்னாண்டவனே ! உமது பாதுகை இவ்வேழை யேன் நெற்றியிற்பட நானென்ன நோன்பிழைத்தேனோ என்னைப்போன்ற பாக்கிய மிவ்வன்பர்களி லியாரும் பெற்றிருக்கமாட்டார்க ளெனக்குற்ற சிலாக்கியமே சிலாக்கிய மிவ்வெளியேன் மீதிவ்வளவு கருணை இன்று வந்த காரணமேதோ ஓ எனதையனே! மிகவுந்துய்யனே அழகானகையனே! ஆட்கொண்ட மெய்யனே! வீடளிக் குஞ் செய்யனே ! நான்தொழு மீசனே ! பரமேசனே ! ஜகதீசனே ! குணவாசனே ! மிருகேச நிமலேசனே ! என்று தோத்திரஞ் செய்யும்போது ராமானந்த சுவாமி கட்குச் சற்றே மனதிரங்கி, அடா கும்பிடுங்கள்ளா ! உனக்கு நான் அனுக்கிரகஞ் செய்ததாகச் சொன்னுபா மே எப்போதென்னிடத் துபதேசம்பெற்றுக்கொண்டா ய் சொல்லடாவென்ற கேட்க, கபீர் ஓ சுவாமி ! இன்று வைகறையில் தேவரீர் ஸ்நானஞ் செய்யப் போகையில் மணிகர்ணிகை கட்டத்தின் சோபானத்திற் படுத்திருந்த என் மத்தகத்தின்மே லுமதுத்தம பாதத்தைவைத்தழுத் தமாயூன்றி உபதேசிக்க வில்லையா? சுவாமிகட்குக் கவன மில்லையா ? இதற்குள் மறந்து விட்டீரோ் வென்று சிர சாஷ்டாங்கமாய் தெண்டனிட்டெழுந்து நின்று தோத் திரஞ் செய்யும் பாடல்.

பகவான் துணை.

பூமாதினையானும் புரந்தரபிரமனரனும்
நாமாதுமையாளும் நகையோடுமனுதினமும்
ராமாவெனத்துதிப்பா ரதைநாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (1)

திமாரிபடிந்தோர் ஜெபஞ்செய்யுந்திருநாமம்
தோமேமமுமேவர் றவிர்துறவோர்துதிநாமம்
ராமாவெனுநாமமதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (2)

நேமாதிகளில்லாவத நீதன்மிகுகுரோதன்
மாமாமையிலுழலும் வான்மீகமுனிநாதன்
ராமாவெனத்தேர்ந்தானதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (3)

ஆமார்கடல்சூழும்புவி யாண்டதசரதனுர்
மாமோகமுமருண்மாதவர் வாட்டங்களுநீத்த
சீமான்றிருநாமந்தனை தியேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (4)

காமாதிகளோங்கிக் ககனத்தோர்க்கிடரீந்து
தாமேபதிபாயன்றுறு தசகண்டனைவென்ற
தாமோதரனுமந்தனை தமியேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (5)

கோமேதமுநரமேதமுங் குரைமேதமுமுடிப்போர்
மாமேவிபதபமுஞ்செய வல்லோர்மிகநல்லோர்
ராமாவெனவுரைப்போரதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (6)

போமேபவமரணம்பிணி யுரையும்மருட்டிரையும்
போமேமனக்கோட்டம்புவி நாட்டப்பலவாட்டம்
ராமாவெனவுரைத்தாலதை நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (7)

பூமிதினிற்சுகமா யுறுவாயென்றுபுகன்றே
தேமார்குமுதப்பாதமுஞ் ஜெபமிதியடியும்
ராமாவெனும்பொருளுங்கொடு நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (8)

பாமாலைகள்புனைசாநதி கட்டப்படியடியில்
தாமேயடைந்தென்மத்தக மேற்றுட்களைவைத்தினி
ராமாவெனவுரைப்பாயென நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதரியேனே. (9)

பூமான்களும்வானோர்களு மறியும்பொருட்டாக
சீமானுமதடிபாதுக மென்சென்னியிற்றுக்கி
நாமேகுருவெனக்காட்டியிந் நாயேற்கருள்செய்தென்
ஏமாதிகடவிர்த்தாட்கொண்ட தயவேதறியேனே. (10)

என்றிவ்விதமாய்த் தோத்திரஞ் செய்துருகும் கபீர் மேல் ராமானந்த சுவாமிகள் மிகவுங் கருணைகூர்ந்து அடாமோசஞ்செய்தாயே நீதானு படுத்திருந்தவன் நீசெய்ய வேண்டுமென்றே செய்தாய் ஆனாலுங் குற்றமில்லை. முடிந்துபோன கருமத்தைக் குறித்து யோசிப்பதாற் பிரயோசனமில்லை யென்று அந்தணரை நோக்கி ஓ சிஷ்ர்களே! இவன்சொல்வது உண்மையேயாதலால் இன்றுமுதலிவனை உம்முளொருவனுப் சேர்த்துக்கொண்டு பாதுகாத்து வருவீர்களாவெனத் திருவாய்மலர்ந்தருள மறையோர் குரோதங்கொண்டு ஓ எங்களாண்டவனே தெரியாமல் யாரோவென்று வழக்கமான வார்த்தையைச்சொன்னீர் இதனுல் இந்நீசனுமக்கு மாணுக்கனுய்விட்டானு பார்ப்பார் பறையனைச் சேர்த்துக் கொள்ளுவார்களா? சிஷனென்றும் விள்ளுவார்களா இவ்வண்ண மிவ்வுலகிலெங்கேயாவது நடந்ததுண்டா நடப்பதுமுண்டா? இத்துடுக்கனைச் சேர்த்துக்கொள்வதால் நமக்கு அபகீர்த்தியுண்டாகுமேயன்றி புகழுண்டாகவே யுண்டாகா தாதலால் இவனைநமது மடத்துக்குள்வராமல் நீக்கிவைப்பதே யோக்கியமென்றுரைக்க ஸ்வாமிகளுங்களின் இஷ்டப்படியே செய்யுங்களென் றுரைத்தார்.

கபீரைநோக்கி அடா கள்வா? சூதுசெய் தென்னிடந்தாரகமந்திரத்தைக் கேட்டுக்கொண்ட காரணத்தால் நீ மறைவாயிருத்தலே நன்மை இராவிட்டால் வருந்தின்மை நாளையே டிம்மார்க்கமாய் மறந்தும் வரவேண்டாமென்றனுப்பிவிட்டு சகலரையும்பார்த்து ஓ சாது பிராமணர்களே இவன் சிறுகுழந்தையா யிருந்தும் பக்தி விசுவாசம் பரிபூரணமா யிருப்பதுமன்றி சதுர் வேதங்களையுணர்ந்த சதுர்முகனைப்போலவே பேசுகின்றான் இவ்வளவு துன்பத்துக்குடன்பட் டென்னிட மனுக்கிரகஞ்செய்துக்கொண்டவர்கள் யாருமில்லை இவன் முற்பிறப்பில் யாதோ குற்றஞ் சற்று செய்திருப்பான் அதனலேயே மிலேச்சர் வம்சத்திற் பிறந்தானுனுலுங் குணமே சிரேஷ்ட மிழிவான குலத்தோரான வால்மீகர் முதலானவர்களும் மகாரிஷிகளாகவில்லையா? இச்சிறுவனுடைய குணங்குறி நடைநொடி பாவனைகளை யோசிக்குமளவில் மிகவும்விந்தையாகவிருக்கின்றதன்றியோரவதாரப்புருஷனைப்போலத் தோன்றப்படுகின்ற திராக்கதர் குலத்தில் உற்பவித்த விபீஷணன் பிரகலாதனன் மாபலி முதலானேர்கள் மகாபக்தர்ளான தெல்லா மறிந்ததுதானே பகவானுடைய லீலையை யொருவராற் சொல்லக்கூடிய தல்லவென் றனந்தம் வார்த்தைகளாடி ஸ்ரீ மந்நாராயணருடைய தியானத்தில் எழுந்தருளியிருந்தார். பின்பு கபீர்

தன்விட்டை யடைந்து தாய் தந்தையர்க்கு நடந்த வர்த்தமானங்களை நவின்று சந்ததமுந் தாரக மந்திரத்தைச் சிந்தனஞ் செய்துக்கொண்டு காலையிலெழுந்து சானவியிற்படிந்து ராமானந்த சுவாமிகளின் திலகமணிந்துதுளபத்தாமங்களைப் புனைந்து ஸ்ரீ மந்நாராயணருடைய திவ்விய திருநாமங்களையெல்லாங் கோர்த்து பல கீர்த்தனையாகப்பாடி பலருக்கும் சிரித்துரைத்துக்கொண் டிருந்தார் கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னும் சொல்லத்தொடங்கினர்.

கபீர் ராமானந்த ஸ்வாமிகளிட

முபதேசம் பெற்றுக்கொண்ட அத்தியாயம்

முற்றிற்று.

---

எட்டாவது

## கபீர் துலுக்கமதத்தைக் கண்டித்த அத்தியாயம்.

இப்படி கபீர் இருக்கையிற் றுலுக்கரெல்லாமொன்றுப்சேர்ந்து தமாலையும் ஜிஜ்ஜாபீபியையும் விளித்து நீங்கள் துலுக்கரா யிருந்தும் இந்துக்களைப்போல நாராயணா ஸ்ரீராமாவென்று கூச்சலிட்டுக்கொண் டெங்கள் சேருவிலிருப்பது தகுதியல்ல இக்கணம் இவ்விடத்தைவிட்டு பேருங்கள் இந்துக்கள் வீதியிற் சேருங்களெனக் கடுகடுத் தறைகிறதைக்கேட்ட கபீர் துடுக்கரை நோக்கி நீங்களுரைத்தால் நாங்கள் போவோமா? ராம் ரயிம் ஒன்றென்றறியா வுங்களுடன் வாதுசெய்வோமோ வென துலுக்கருள் மிகவுங்கற்ற காஜி கபீரைப்பார்த்து கரத்தைப்பிடித்தீர்த்து ராம் ரயிம் ஒன்றென்பதெப்படி ராம்மென்பவன் தசரதனென்னுமோர் மனிதன் புத்திரனும் ரயிம் என்பது ஜனன மரணமில்லா நிரூபமாகியகடவுளாகும். உண்மையறியா உன்னுடன் பேசுவதாலொரு பயனுமில்லையென கபீர் ஒ சற்று மறிவில்லாக் காஜியே நித்திய நிர்மல சொரூபமாகிய பரப்பிர்மத்தி னமஸத்தைப்பெற்று லோகங்களை ரட்சிக்குஞ் சர்த்தாவாகிய மஹா விஷ்ணுவுக்குசிஷ்டபரிபாலனந் துஷ்டநிக்கிரகஞ் செய்வதே தொழிலாதலால் துஷ்டனுகிய இராவணனைச் சம்ஹாரஞ்செய்ய தசரதராஜனுக்குப் புத்திரனுயவதரித்தார். அவரை மானிடரென் றெந்தமதி கொண்டறைந்தாயென, காஜி அடா பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லவேண்டு மப்படிக்கின்றி கடவுள் வேறு உலகங்களை இரக்ஷிக்குங் கர்த்தா வெறென்று நீயொருவன் சொல்லவே கேட்டேனுதலால் வேதமேயில்லா இந்து மதத்திற் பிரவேசித்த உனக்குண்மைநெறி யெங்ஙனந் தெரியப்போகின்ற தெட்டியுடன் சேர்ந்த இலவுந் தீப்பட்டதுபோ லிந்துக்களுடன் சேர்ந்த நீ நரகத்துக்கேயாளாக வேண்டுமென, கபீர் ஏன் வாயில் வந்தபடி பிதற்றுகிறீர். நிரூபமாகிய பரப்பிர்மமே ஆதிதெய்வ மானுலும் அதிலிருந்துண்டான பகவானுலேயே மானிடர் முதலான சமஸ்த லோகங்களு முண்டாயிற்று ஆனதால் ஆதியிலிருந்து சகலரும் திரிமூர்த்திகள் ரூபமான விக்கிரகங்களைப் பணிந்துக்கொண்டே வந்தார்கள். அதை மத்தியில் நிக்கிரகித்த இப்பிராயீம முதலானவர்களுக்குக் கொடிய ஆக்கினை கடவுளே கிடைக்கும்படியாய்ச் செய்த தபத்தமோ, அன்றி ஆதியில் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவனு லுண்டாக்கப்பட்ட வேதங்களே மெய்யானதன்றி நடுவாந்தரத்திற் பிறந்த மஹம்மது என்னும் ஓர் மானிடனு லுண்டாக்கப்பட்ட வேதத்தை மெய்யென்ன நம்பக்கூடுமோ? இதுதெரியாதா நீ என்னுடன் வம்புசெய்யக் கூடுமோவென, காஜி நிரூபமான கடவுள் நினைத்த மாத்திரத்திலுண்டான இவ்வுலகத்தை ரூபமுள்ள பிர்மாவாற் செய்யப்பட்டதென் றுரைத்த உன் மூடத்தனத்தை எப்படி தெரிவிப்பேனன்றி எங்கள் சத்குருநாதனுகிய மஹம்மதுக்கு கடவுளுத்தாரப்படி தேவ தூதர்களால் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட வாக்கியங்களே சத்திய வேதமாகுமதிலுள்ள நுட்பார்த்தங்க ளுன்னைப்போன்ற லுத்தர்களுக்குத் தெரியப்போகின்றதா வென்று நகைக்க,

கபீர் கடவுளுக்குநினைப்பிருந்தால் மரப்புமுண்டே இப்படி சங்கற்ப விகற்ப முள்ளவர்க்கு தேகமுமுண்டாயிருக்குமே தேகத்துக்கோர் ரூபமுமுண்டே நிரூபத்துக்கு ரூபமேது நிர்ச்சங்கல்பத்துக்கு சங்கல்பமேது நிர்விகற்பத்துக்கு விகற்பமேது நிர்ச்சலனத்துக்குச் சலனமுள்ள தொழிலேது சலனமில்லாமற் சகமுண்டாகுமா ரூபமில்லாமல் நினைப்புண்டாகுமா நீ சொல்வ தாகாயத்திற் கப்பலோடுகிறதென்றும், அந்தரத்தில் மரங்களிருக்கிறதென்றும், வெளிக்குச் சலமுண்டென்றும் வளிக்கு ரூபமுன்டென்று சொல்வதுபோ லல்லவோ யிருக்கி

ன்ற தன்றி சங்கல்ப விகல்பமில்லா நிருவிகற்பராகிய கடவுளுக்கு ரூபமில்லாமலிருக்க தேவதூதர்களுக்கு வாக்கியங்களை எவ்விதமா யெழுதிக்கொடுத்தார் எள்ளுக்குளெண்ணெய்போலவும் பாலுக்குள் வெண்ணெய்போலவும் எங்கும் பரிபூரணமாயிருக்கும் பரப்பிரமம் எவ்விடத்தி லிருந்து தூதர்களுக்கு மஹம்மதிடம் போவென்று கட்டளையிட்டார் மஹம்ம திருக்குமிடத்திற் பரப்பிரமமில்லாமற் போச்சுதா வடிவும் வாக்குமில்லாதவர் கொண்டுபோவென் றெப்படி யறைந்தார் ஆகாயத்திலிருந்தனுப்பப் பூமியிலில்லாதவரோ கடவுள் கருணையுடனேற்படுத்திய வாக்கியங்களான வேதத்தில் ஜீவயிம்ஸை செய்யும்படியான வாக்கியமிருக்குமோ இவ்வாக்கியங்களிற் சிலதை இப்பிராயீம்பயம்பர் குமாரரில் ஒருவனுகிய இஸாக்கென்பவன் தள்ளக்கூடுமோ சத்திய வேதமல்லவென்று விள்ளக்கூடுமோ? துலுக்க வம்மிசத்துக்காதித்துணையான இப்பிராயீம்பயம்ப ரென்பவர் பலவாறு விரித்துரைத்தும் இஸாக்கென்பவன் சொந்தக் குமாரனு யிருந்தும் பொய்வார்த்தைகளா லென்னை யேமாத்த வேண்டாமென்று தந்தையை பட்டணத்தைவிட்டகற்றக்கூடுமோ ஓ காஜி? உலகத்தில் தங்கள் தங்கள் பேர்விளங்கும் பொருட்டு ஓரோர் மதத்தை யேற்படுத்தி அதற்குத் தகுதியான வாக்கியங்களை யெல்லாஞ்சேர்த்து வேதமென்று நாமமிட்டு தன்னைச்சகலருந் தொழும்படியா யதில்வரைந்து இதுவே சத்தியவேதமென்றும் இதுவே தேவனுடைய கட்டளையென்று முரைத்து மானிடர்களை எந்தவழியாலும் நிற்காமல் செத்தார்களன்றி மோக்ஷமார்க்கத்தை கற்பிக்கவில்லை.

இந்த மதபேதங்களால் மலமே விருத்தியாகின்றதே யல்லாமல் சம்மதமான சாந்தகுணம் பிறக்கப் போகிறதேயில்லை மோக்ஷமடைபவன் மானிடனைத் தொழுவானேன் தொழுது அழுவானேன் ஜீவகாருண்யத்தைக் கைக்கொண்டு கடவுளை நோக்கித் தவஞ்செய்யாமற்கொலைபாதகத்துக் குட்பட்டு மாயையாற் பங்கப் பட்டு அதோ கதிக்காளாகுங் காரியங்களைச்செய்தா லாண்டவனருளை யுகமுடிவினு மடைவதற்குக் கூடுமோ வென காஜி சச்சிதானந்த கடவுளைவிடுத்து மும்மூர்த்திகளைத் தியானிப்பது மூடமல்லவாவென, கபீர் மஹம்மது வென்னும் ஓர் மானிடனைப் பணிகிறதைவிட மும்மூர்த்திகளைப்பணிவது மூடமல்லவென காஜி ரட்சகர்த்தனுகிய விஷ்ணு தானேவந்து ராவணனைக் கொல்ல லாகாதோ மானிடப் பிறப்பெடுக்குங் காரணமேதோவென கபீர் தேவர் மூவராற் சாகாவரம் பெற்றதற்காக மானிடனுயவதாரஞ்செய்ய நேரிட்டதென காஜி ரட்சகன் சம்ஹாரஞ்செய்யக்கூடுமோவென கபீர் ரட்சகனுகிய இராஜன் துஷ்டர்களை நிக்கிரகஞ் செய்கிறதைப்போல துஷ்டனுன இராக்கதனைக்கொல்ல நேரிட்டதென,

காஜி சிரேஷ்டமான இவ்வாக்கையின்மேன் மண்ணைக் குழைத்தணிவது மடமை யல்லவாவென, கபீர் அனித்தியமான இச்சரீர மெத்தனைநாள் இருந்தாலும் மண்ணேயாய்ப் போகுமென்று மிதை நம்பாதீர்களென்று மும்மைப்போ லொத்தவர்க் கறிவுணர்த்து மடையாளமானது மடமையைத் தவிர்க்குமேயல்லாது மடமையைக் கொடுக்காதென காஜி ஆனாலுங் கல்லைக்கும்பிடுவத்றிவீனமல்லவோவென, கபீர் எங்குநிறைந்திருக்கும் பரப்பிரமம் கல்லிலுமிருக்கிறுர் இக்கடத்துக்குள் ளிருக்கிறுரென்றும் அபக்குவர்க்கு ரூபமுள்ள திரிமூர்த்திகளை புறம்பில் ஊனக்கண்ணுற் பார்த்துப்பணியவும் பக்குவர்க்கு நிரூபமாகிய பரப்பிர்மத்தை அகத்தில் ஞான சட்சுவாலறிந்து தொழவும் விதித்திருப்ப தறிவீன மல்ல அசன் உஸன் என்பவர்கள்செய்த அக்கிரமத்தைத்தேவர்கள் பொறுக்கமாட்டாம லவர்களைக் கண்டிக்கத் தேடுகையில் தடாகத்தில் மூழ்கியிறந்த அவர்களின் கரங்களை வைத்துப் பூசிக்கும் மானிடர்களே அறிவீனரென காஜி உங்கள் வேதத்தில் ஆதிமனிதன் யாரென் றுரைக்கின்றதென கபீர் பிர்மாவால் மனுவும் மனுவால் மானிடருமுண்டாக்கப் பட்டாரென காஜி அதற்கு திருஷ்டாந்தமேதென கபீர் மனுவாலுண்டானதால் மானிடரென்றும்மானிடர்க்குரைத்த நீதிகளை மனுநீதியென்றும்சொல்லப்படுகிறதே திர்ஷ்டாந்தமென காஜி கடவுளாலுண்டாக்கப்பட்ட ஆதாரமே ஆதிமனுஷனன்றி மனுவல்லவென,

கபீர் கடவுளுக்கு ரூபமேயில்லையென் றுரைக்கும் நீ கடவுள் ஆதாமைச் சிருஷ்டித்தாரென்பது சாஸ்திர விரோதமா யிருந்ததன்றி அனேக சங்கைகட்கு மிடங்கொடுக்கிறது பூதத்தா லுண்டாக்கப்பட்ட பாவையே ஆதாரூபமென்றும் அந்த ஒவியத்துக்கு கடவுள் ஊதினுரென்றும் ஆதாம் கடவுள் கட்டளையை மீறினுரென்றும் பூதம் கடவுளுக்கு விரோதமாயிருக்கிற தென்றும் தன் கட்டளையைக் கடந்த ஆதாமை வானுலகத்தி லிருந்து தள்ளிவிட்டாரென்றும் கடவுள் வாக்கியத்துக்குப் பூதம் மாறு பட்டதென்று முரைக்குஞ் சொற்களெல்லாம் குற்றமாகவும் அபத்தமாகவுமே யிருக்கின்ற தெப்படியென்றுல் கடவுளெந்தயிடத்தில் எந்த வுருவாயிருக்

தார் ஆவியையெப்படி ஊதினுர் எந்தவுலகத்தி லிருந்து தள்ளினுர் எல்லா வல்லமையுள்ள கடவுளின் கட்டளை யை மானிடன் தவிர்ந்ததென்ன அற்பமான ஒரு பூதம் கடவுளையெதிர்த்ததென்ன அவருரைக்குமாறுபட்டதெ ன்ன திரிகாலங்களையு முணர்ந்த கடவுள் பின்னடப்ப தறியாமற்போனதென்ன பூதத்தை அழிக்காம லிருந்த தென்ன பூதத்தால் கெட்டவர்களுக்கெல்லாம் நரகத்தை யுண்டாக்கினதென்ன நிருபமாகிய கடவுள் எவ்வுலகிலி ருக்கிறுர் மோட்சமென்ப தெந்தலோகத்தி லிருக்கின்ற து நரகமெவ்வுலகி லிருக்கிறதென காஜி ஓ கபீர் நீபேசு வதெல்லா மகடவிகட வார்த்தைகளா யிருக்கின்ற தெப் படியெனில் மோட்சமும் நரகமுமில்லையென் றுரைக்க லாமோவென கபீர் மறுஜென்மமெடுக்காமற் போவதே மோட்சம் ஜென்மமெடுப்பதே நரகமென காஜி நகைத் து ஓ கபீர் கறந்தபால் முலையிற் பிரவேசிக்குமா கடை வெண்ணெய் மோரிற்புகுமா கழிந்தநாள் பின்னும் வரு மா காய்ந்தயிரும்புண்டநீர் கக்குமா இறந்துபோய் பஞ் சபூதமயமாய்ப் போனபின் பிறக்கக்கூடுமோவென,

கபீர் க்ஷணசிருஷ்டிப் பிரளயம் தினசிருஷ்டிப்பிர ளயம் தேகசிருஷ்டிப் பிரளயம் ஜீவசிருஷ்டிப் பிரளயம் பிரம்மசிருஷ்டிப் பிரளயமென ஐந்திருக்க நீர் ஒன்றுவ தில்லையென் றுரைக்கக்கூடுமோவென காஜி இந்த ஐந்தி ன் விபரமேதென கபீர் க்ஷணசிருஷ்டிப் பிரளயமாவது நினைத்தலு மறத்தலுமாம் தினசிருஷ்டிப் பிரளயமாவது ஜாக்ராவஸ்தையுஞ் சுழுத்தியுமாம் தேகசிருஷ்டிப் பிரள யமாவது ஜன்மித்தலும் மரித்தலுமாம் ஜீவசிருஷ்டிப் பிரளயமாவது தேகத்திற் பிரவேசித்தலும் நீங்குதலு மாம் பிரம்சிருஷ்டிப் பிரளயமாவது அண்டரண்டங்களு ண்டாதலும் ஒடுங்குதலுமாவென காஜி நீ சொன்ன தெ ல்லாஞ் சரியேயானுலும் ஜீவர்மரித்தபின் ஜென்மித்த லென்பது மாத்திரங் கூடவே கூடாதென கபீர் ஜீவனு க்கு ஜனனமரணமில்லை தேகத்துக்கே ஜனனமரண மெ ன்ன காஜி மரித்ததேகம் பின்னுஞ் செனிக்குமாவென கபீர் மரித்த தேகமே ஜெனிக்குமென்பது கூடாது வி னையின்படியே ஜீவர்களுக்கு சரீரமுண்டாகுமென காஜி சிவர்கள்செய்த கர்மப்படி நிரையமாவது மோட்சமாவ தடைய வேண்டியதே காரணமன்றி அடிக்கடி ஜென்மித் தலென்பது கூடாதென,

கபீர் மோட்சமடைந்தவர்கடான் சுகத்திலிருக்கட் டும் நரகத்தை யடைந்தவர்க்கு விமோசன மெப்போ தென காஜி எப்போதுந் துன்பத்தையே நுகரவேண்டு மென கபீர் சற்று தீங்குசெய்தார்க் கென்னகெதியென அவர்கட்கு மக்கதியேயென கபீர் இப்படியுரைப்பதுசா ஸ்திர சித்தாந்தமா வுன்னுடைய புத்தியோவென காஜி எங்கள் வேதத்திலிப்படியே யுரைக்கின்றதென கபீர் நகைத்து இது நல்ல நியாயமாயிருக்கின்றது சற்று வினை செய்பவனுக்குத் தகுந்ததெண்டனை கொடுத்தாட் கொ ள்ளாம லெக்காலமும் நரகத்திற் றள்ளுவதென் றுரைக் கலாமோ ஓ காஜி நான் சொல்லும் வார்த்தையைக் கே ளும் அதாவது தேகத்தையன்றி வேறு நரகமில்லை தேக த்தையன்றி வேறுமுக்தியில்லை நிச்சயமார்க்க மிதுவே யாமென் காஜி மரித்தபி னுற்பவிப்பதற்குக்காரணத்தை க்காட்டு வாயோவென கபீர் உற்பவிக்கும்போதே குஷ் டவியாதி முதலான வியாதிகளுடன் பவ மெடுப்பதே காரணமென காஜி தாய்தந்தையின் சுக்ல சுரோணித குற்றத்தால் வந்த குறையேயன்றி முன்செய்வினையென் பது கூடாதென,

கபீர் முன் யாதொரு தீங்குஞ்செய்யாச் சிவனுக்கு தாய் தந்தையரால் நூதனமா யேனிடர்வரும் நோயாளி கள் கர்ப்பத்திற் றங்கவேண்டிய காரணமேன் ரணங்கள் நெருக்குண்ட அன்னை பிதாவுக்கோர் பிணியுமில்லாப் பிள்ளை பிறப்பதேனென காஜி இப்படி ஜனித்தல் ஜக தீஸ்பரனுடைய செயலென கபீர் யாதொரு குற்றமுஞ் செய்யாக் குழவியின் ஜீவர்க ளதிக பாவங்களைச்செய்வா ர்களென்றும் இப்படி ஒரு சிவனுக் கிடர்தந்தால் பலசீ வர்கள் பாவஞ் செய்யாம லிருக்கிறுர்களா கருணை நிதி யான கடவுள் ஓர் கிர்த்தியஞ் செய்வாராகி லது பழுதா குமா? அன்றி குற்றமில்லாதவனைத் தண்டிக்கும் இரா ஜனையே தூஷிப்பதற் கிடமுண்டா யிருக்கின்றதேயென காஜி எங்கள்வேதத்தில் அடிக்கடிஜென்மிப்பதில்லைகடை சிநாளில் சகலரையும் கடவுளானவரெழுப்பி பாவிகளை யெல்லா மொருபக்கமும் புண்ணியவான்களை எல்லா மோர்பாலும் நிறுத்தி நரகமோட்சங் கொடுப்பா ரென் றுரைக்கின்றதேயென கபீர் மனிதனு லேற்படுத்தியபுஸ் தகத்திலிப்படியன்றி இனி யெப்படித்தான் சொல்லும் இப்படியாக அனேகக் கட்டுக்கதைகளின் புஸ்தகங்களிற் சொல்லி யிருக்கின்றதுகளை மெய்யானவேதமென்று நம் பி பிரஷ்டர்களானுர்களென் றறைந்து நல்லது பாபிகளு க்கு நரகமும் புண்ணியவான்களுக்கு சொர்க்கமும் என் றுரைக்கு முங்கள் வேதத்தில் ஜன்மித் தைந்தாறு வய தில் மரிக்கும் குழவிகளுக் கென்னகெடுதியென் றுரைக் கின்றதென காஜி அவர்களுக் கொன்றுமில்லையென,

கபீர் நரக சொர்க்கத்துக் குதவாச் சிருஷ்டி ஈஸ்வரன் செய்வாரோவென காஜி சகல சீவர்களுக்கும் தங்களுக்கு மரணமுண்டென் றறியவும் பயந்து நல்வழியில் நடக்கவும் அநித்திய வஸ்துக்களை அபேட்சிக்காம லிருக்கவும் செய்யுஞ் சிருஷ்டியென, கபீர் மனிதர் பிறக்கும் போதும் இருக்கும்போதும் இறக்கும் போதும் துன்பமாயிற்றே, முன்வினையே யில்லையெனின் பிறந்து மரிக்குங் குழவி இடையிலனேகப் பிணிகளாற் றுன்பமடைந்து மரிக்குமாயின் கான்முளையடைந்த துன்பதோஷம் யார்மேற் சுமத்துகிறதென, காஜி இது ஈஸ்வரனுடைய லீலை யாதலால் ஆர்மீதுஞ் சுமத்தக் கூடாதென, கபீர் அப்படியானால் நாமும் விளையாட்டா யனேகருக்குத் துன்பத்தைக் கொடுத்து லீலையென் றுரைப்போமென, காஜி குழந்தைகட்கு அபமிர்த்தியும் கொடிய வியாதியும் வருவதேனெனின் தந்தை தாய் செய் கர்மம் சந்திக்காமென் றுரைக்கக் கூடாதோவென,

கபீர் முறுவல் காட்டி தாய் தந்தை செய் கர்மம் சந்திக் குண்டாகுமாயின் பாபிகட்கு புண்ணியவானே னுற்பவிக்கிறான் புண்ணிய வான்களுக்குத் துஷ்டனேன் ஜன்மிக்கிறான் பிரத்தியட்சப் பிரமாணமாய் தந்தை ஏவலாளனும் சுதன் தாளகர்த்தனு மிருக்குங் காரணமேன், அவர்கள்செய்த கர்ம மவரவர்களே அனுபவிக்க வேண்டுமென்றி ஒருவர்செய்த கர்ம தர்மம் ஒருவரையடையாது. ஒருவனுக்குச் சென்மித்த மைந்தர் நால்வரிலொருவன் ஜாரசோரனாகவும், ஒருவன் விவேகனாகவும், ஒருவன் மந்தபுத்தி யுடையவனாகவும், ஒருவன் பிணியாளனாகவு மிருக்குங் காரணமேன் ? ஒருவன் தனசம்பன்னனாகவும், ஒருவன் தரித்திரனாகவும், ஒருவன் பார்ப்பதற் கருவருப்புள்ள அங்கவீனனாகவும், ஒருவனழகுள்ளவனாகவும் மாறுபட்டிருப்பதேன் ? ஒ காஜி ! அவரவர்கள் முன் செய் வினைப்படியே நடக்கின்றதன்றி ஈஸ்வரன் செய்யும் லீலையல்ல.

ஏகசொருபனான கடவுளுக் கொருபோதும் பட்சபாதமிராது. ஜீவர்கள் துன்பமடைதலவருடைய லீலையென்றுரைப்ப தவிவேகமேயாம். ஆதியில் பிர்மாவானவர் மனுவைச் சிருஷ்டித்து அம்மனுவின் முன்னிலையில் மனுஷரை யுண்டாக்க மனுநீதிப்படி நடப்போர்க்கும் மறுஜென்ம மில்லையென்று மற்றவர்களுக்கு மானிடஜென்மமுங் கிடைத்த லரிதென்று முரைத்த வாக்கியப்படி சிலர் மனுநீதியை யனுசரித்து தேகாதிக ளனித்தியமென் றறிந்து நித்தியமான பொருளைத்தேடி உச்சிதமாதவத்தை நாடி அத்தபோ பலத்தால் ஞானக்கண் துலங்கி காரணங்களின் சேஷ்டையாற் கலங்கி, பிர்மானந்தத்தை ஆசித்து பெரியோர்களை நேசித்து அவர்களருளால் சகவாரிதியிலாழ்ந்து தொடர் பவச் சமுத்திரத்தைதாண்டி மோட்ச மடைவார்கள்.

அனேகர் மனுநீதியை நிக்கிரகித்து விஷயாதி போகங்களை இச்சித்து ராகத்துவேஷங்களாற் கட்டுப்பட்டு ஜீவகாருண்ய முதலான நோன்புகளைப் பாதுகாக்காமல் விட்டு அனித்திய மலபாண்ட தேகத்தை மெய்யென் றிருமாந்து அலக்கணிற் றூக்கையை வளர்க்க இதர ஜீவர்களை இம்சைசெய்து அப்பாவங்களாற் பீடிக்கப்பட்டு அவமிர்த்தியுவுக் காளாகி நால்வகை யோனியிற் ஜெனித்து மாயாமோக சாகரத்தைக் கடந்தேறுவதற்கோர் துறைகாணாமல் மயங்கித் தயங்கி மானிடவாக்கையும் பெறுவதற் கரிதாகி குறிக்கி யோனிகளிலுழன் றலைந்து சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவனுக்கு மிடர் கொடுத்தார்கள். முக்கியமான சத்திய வசனமாவது ஜீவர்களெதைக் கோருவார்களோ அதையே ஜகதீசுவரன் கொடுக்க ஆதியில் வாக்கையளித்தார். மனுஷ ஜென்மத்துக் குறுதியான மோட்ச வாழ்வைக் கோரா மானிடரவிவேகத்தைக் குறித்து வாட்டமடைந்து அவித்தியா சம்பந்தமுள்ள ஜீவர்களி னிச்சையின்படியே விஷயானந்த போகத்தையே விரும்பியுழலும் மிருகாதி ஜென்மங்க ளெடுக்கும்படியாய்ச் செய்தார்.

ஜகதீஸ்வரனுடைய அருட் பிரசாதம் பெறாமல் மாயா வாழ்க்கையிற் சிக்கிச்சொக்கி மலத்தைமணமென் றுசித்ததுபோல மாதராதி போகங்களையே மேன்மேலுமபேட்சித்து மாயாந்தகாரக் குகையில் வீழ்ந்து துக்க சாகரத்திலாழ்ந்து மரண ஜனன வினையாற் பிணிக்கப்பட்டார்களே யன்றி, ஆண்டவனுடைய பட்ச பாதஞ் சற்று மில்லவேயில்லை. ஒரு தந்தைக்குப்பிறந்த பிள்ளைகளி லொருவனைச் சுமந்து செல்லவும் ஒருவனை ஊர்ந்து போகவும் செய்ய தந்தைக்கு மனம் வருமா ? துஷ்டப் பிள்ளைகளைச் சிஷ்டைசெய்து சிரேஷ்ட மைந்தர்களுக்கின்ப மளிக்குந் தாதையைப்போலவே பரமேஸ்வரன் எவரெவர்கள் கர்ம தர்மங்க ளெவ்வண்ணமா யிருக்கின்றனவோ அவ்வண்ணமான தேகாதி போகங்களைக் கொடுக்கின்றார் நிரேதுவாகஜீவர்களுக்குஜனனமரணாதி துன்பங்களைக் கொடுப்பாரா நன்றாயோசித்துப் பார்ப்பீரென்றுசாற்ற காஜிதந்தைதாய்கூடும்வேளை எப்படியோ அப்படியே முடியுமென, கபீர் நல்ல வேளையில் கூடும் போது தரிப்பதும் தீயவேளையிற் புணரும்போது தரிப்பதுமே காரணமாகும்.

அதெப்படி யென்பீரோ நல்வினை முற்பிறப்பிற் செய்திருப்பவன் நல்ல வேளையிலேயே தரிப்பான் தீவினை செய்திருப்பவன் தீயவேளையிலேயே கர்ப்பத்திற்றரிப்பானல்லாமல் கர்மிகளுக்கு பிறந்தவன் கர்மியாகவே யிருப்பானெனி னிது தந்தை தாயின் குற்றமல்லவா அப்படி யிருக்க மைந்தனைத் தண்டிப்பானேன் அப்படி தண்டிக்கக் கூடாதாயின் இந்த மைந்தனைப்பெற்ற அன்னையத்தனையுஞ் சிக்ஷை செய்யக் கூடாதேதெனின் அவர்களை யீன்ற தந்தைதாய்க் குற்றத்தால் வந்தவர்களாதலாலவர்களையும் கோபிக்கலாகா திறுதியிலவர்களை யீன்ற மூதாதைகளையுந் தண்டிக்கக்கூடாமல் இருக்குந் தண்டனையே யில்லாமற் போய்விடு மிப்படி விவேகிகள் சங்கை செய்வாரோ வென்றுரைத்து, ஓ காஜி! அவரவர்கள் முன் ஜென்மத்தில் செய்த நல்வினை தீவினையின் காரணம் தண்டிகையைச் சுமப்பவர்களையும் ஊர்ந்துச் செல்பவனையும் இராஜரீகஞ் செய்பவனையும் ஏவலாளர்களாயிருப்பவர்களையும் காட்சிப் பிரமாணமாய்க்கண்டு சந்தேக நிவர்த்திசெய்து கொள்ளுவது மன்றிப் பொதுவான கடவுளுக்கு இராஜன் செய்த நலமென்ன மற்றவர்கள் செய்த கொடுமையென்ன பட்ச பாதகமுள்ள ஈஸ்வரனுக்கு பரிபூரண னென்றும் கருணாநிதியென்றும் சொல்லக் கூடுமோ அகமுகமுள்ள ஞானிகட் கருபமாகவும் பகிர்முகமுள்ள பக்தர்களுக்கு ரூபமாகவும் தோன்றுபவ னொருவனேயன்றி பலரல்ல ஆதலால் நீங்களும் ரூபமுள்ள பகவானை அகத்தியந் தொழுதவ ருசியைப் பெறுவீர்களென, காஜி ரூபத்தைத் தொழுபவனுக்கு ரவுரவாதி நரகமென்றும் கடவுளுக்கு ரூபமுண்டென்பவனை உடனே இரண்டு துண்டாக்க வேண்டுமென்று மெங்கள் வேதத்திற் சொல்லியிருக்கின்றதே யென,

கபீர் இப்பிராயிம் பயம்ப ருற்பத்தியாகாமுன் இவ்வுலகிலுள்ள சமஸ்த மாந்தர்களும் மும்மூர்த்திகளின் சொரூபங்களைப் பணியவில்லையோ வென, காஜி அவிவேகத்தாற் பணிந்தார்கள். இப்பிராயிம் பயம்பர் கடவுளுத்தாரப்படி யவதரித்து அதைக் கண்டித்து கடவுளையே தியானிக்கும்படியாகச் செய்தாரென, கபீர் அந்த இப்பிராயிம் தந்தையானவர் விக்கிரகங்களையே செய்து அதை விக்கிரயப்படுத்தி அவ்விக்கிரகங்களை அன்புடன் பூசிக்கும்படியாய்ப் போதித்துக்கொண் டிருந்தவர்க்குப் பிள்ளையாய்ப் பிறந்த இப்பிராமென்பவன் தந்தை மனம் நோக விக்கிரக பூசையை நிக்கிரகித்து அப்பட்டினத்திலுள்ளோர்களா லடிபட்டு வேறு தேசத்துக் கோட்டமெடுத்து அத்தேசத்திற் சிறந்த ஓர் பட்டினத்திற் பிரவேசித்து தான் குருபரம்பரையி லுற்பவித்தவனு யிருந்தும் இராஜன் புத்திரி தனக்கும் புத்திரி யென்றுரைக்கும் நீதியைத்துறந்து அந்நகருக் கிறைவனுடைய மகளாகிய ஆஜரா வென்பவளைக் கரவடமாய்க் கவர்ந்து கள்வனாய் மறுதேசத்திற்கோடி அப்பட்டினத் தரசன் புத்திரியான சாராவைமணந் தவள்மீதிருக்கும் மோகத்தால் அவள் சொற்படி பூரண கர்ப்பவதியாயிருக்கும் தன்னை நம்பிவந்தஆஜராவென்பவளைக் காட்டிற்கொண்டு போய் விடுத்து அப்பாவத்தாற் சூழப்பட்டு பின்பவ் வாஜராவிருக்குஞ் சவுக்கியத்தை யாசித்து சாராவுக்குச் செய்துகொடுத்த சத்தியத்தைக் கடந்து ஆஜராவைக் கூடி தலையும் முகமும் குறியும் மொட்டை யடிக்கப்பட்டு மேன்மைகெட்டு ஆஜராவுக்குப் பிறந்த இஸ்மாயிலொரு வழியாகவும் சாராவுக்குப்பிறந்த இஸாக் ஒரு மார்க்கத்திற் செல்லவும் பிரஷ்ட தவத்தையடைந்து இரண்டு மதங்களாகப் பிரிந்து நம்ருத்ராஜா முதலானவர்களாற் றுரத்தப்பட்டு காட்டைவிட்டு காட்டையடைந்து தீவாந்தரங்களிற் சென்று அங்கிருக்கும் மிருகத்துக்கிணையான கிராதகர்களுக்குக் குருக்களாகி மூக்கறுப்பட்டவன்பலர் மூக்கையு மறுக்கத்துணிந்த கதைபோல அனேக மாந்தர்களைக் கெடுத்து ஜீவகாருண்யத்தோ டிருப்பவர்களைத் தடுத்து பாவம் பரவச்செய்து யுக்தி வார்த்தைகளால் புத்தகங்களை சேர்த்து குரானென்றும் சத்திய வேதமென்றும் பேரிட்டு,

இஸ்மாயில் இஸாக் என்னு மிருவரும் எங்கள் வேதமே சத்தியமென்று முங்கள் வேத மசத்தியமென்றுந் தர்க்கித்து குதர்க்க வார்த்தைகளாடி அம்மதத்தைநிலைப்படுத்துவதற்குத் தங்களாலாகாமல் மரிக்கும்போது தங்களை யண்டினவர்களுக் குபதேசித்து நரகத்திற் பிரவேசித்தார்கள் பின்பப் புத்தகங்களிரண்டையும் ஆதியிலிருந்த நீதியுள்ளோர் ஒருவிதமா யிருக்கக்கண்டு சமுத்திரத்திலெறிந்துவிட அன்றுமுதல் உங்களிலேயே தர்க்கம் விழுந்து உங்கள்வேதம் சமுத்திரத்தி லெறியப்பட்டதென்றும் உங்கள் வேதமே சமுத்திரத்தில் மூழ்கிப் போச்சுதென்றும் குதர்க்கங்களாடி இந்துக்களால் நீக்கப்பட்ட நீச்சர் மிலேச்சரென்னு மிருவரும் மறுபடி அவ்விந்துமதத்திற் பிரவேசிக்கக் கூடாமல் முன் மாதிரி மிருகங்களைப்போல் பாலை வனங்களிலலைந்து திரிந்த இஸ்மாயிலைச் சார்ந்த நீச்சர் மாத்திரம் ஆஜராயிருந்த இடத்தை முக்கியஸ்தானமாக்கி மக்காவென்று பேரிட்டு இறுதியிலுண்டான மஹம்மதுவா லேற்படுத்திய புத்தகத்தை வேதமென்றும் மஹம்மதுவே குரு வென்றும் நம்பி இப்பிராயிமுக்குண்டான ஆக்கினைக் குட்பட்டார்கள். நீங்களு மதுவே வழியானீர்கள் மற்ற இஸாக்

கைச் சார்ந்தவர்களாகிய மிலேச்சர்களே தெய்வமென்றறைந்து கொடிய ஆக்கினைக்குட்பட்ட ஏசுவென்னும் ஓர் மானிடனைக் குருவெனநம்பி அவனுடைய சரித்திரங்களையே வேதமென்று உறுதிகொண்டலைகிறார்கள் இப்படி யலையவேண்டுங் காரணம் விக்கிரகத்தை நிக்கிரகித்த இப்பிராயிமாவால் வந்ததாம் நடுவாந்தரத்தில் வழிதப்பிப் பிசகினோர்க்கும் மத்தியிலுண்டான புத்தகங்களும் வித்தையிலும் புத்தியிலும் சித்தி வித்தையிலுஞ் சற்றுச் சிறந்தவர்களும் வேதங்களாகவும் குருக்களாகவும் இருக்கவேண்டியது முறைமையே யன்றி சற்றும் பிசகில்லை ஏனெனில் மஹம்மதுவுக்கும் ஏசுவுக்கும் முன்னிருந்தவர்களுக்கெல்லாம் குருவாரோ வேதமேதோ அதையுங் களாலறியக் கூடியதுமல்ல சொன்னால் நம்பத்தக்கதுமல்ல முன்னமே குற்றவாளிகளென் றகப்பட்டவர்கட்குப் போதிக்கவுங்கூடாது கொலைஞனுக்குக் கொலைமறுத்தலைக் கூறினாற் குற்றமாகவே யிருக்குமன்றி அனுசாரனுக்கு ஆசாரத்தையும் விபசாரிக்கு கற்பின் மேன்மையும் விரித்துரைத்தால் கசப்பாகவே யிருப்பதன்றி போதிப்பவர்க் காயாசமே பிரயோசனமாகுமென் றுரைக்கக்கேட்ட துலுக்கரெல்லாம் மிகவும் ஆக்கிரமகுரோதர்களாய் கபீரை வெட்டென்றுங் குத்தென்றும் நெருங்கி வரக்கண்ட கபீர் ஓ துலுக்கரே முன்பு பிரகலாத னெங்கும் அரியே நிறைந்திருக்கிறானென்று சொல்லக் கேட்ட இரணியன் இந்தத்தூணிலுமிருப்பானோ வென்றறைந்தத்தூணிலிருந்து வெளிப்பட்ட பகவானா லிறந்ததுபோலுங்களுக்கும் நேரிடும்போ லிருக்கிறதென துலுக்கர் ஏதோ அந்த அரியையழைப்பியும் பார்ப்போ மென்று கற்களையுங் கட்டைகளையு மேந்திக்கொண்டு நிற்க,

கபீர் காஜியைநோக்கி ஓ காஜி இவர்களெல்லா முனக்கு ஐக்யமானவராதலால் நீ யொருவரே என்னருகில்வந்து பரீட்சை செய்யவேண்டிய மனமுடையவரானாற் பரிட்சித்துப்பாரும் ஏதோ கைகொட்டித் தாரும் என்று ஓர் துளபமணியைப் பிரயோகித்தா ரது அக்கினிச்சுவாலையா யெரிந்து வரக்கண்ட துலுக்கரெல்லாம் மூலைக்கொருவரா யோட்டமெடுத்து இனி இந்த துஷ்டனிருக்கு மிடத்தில் நாமிருக்கவே கூடாதெனத் தங்கடங்கள் விடுகளைப் பிரித்துக்கொண்டு வேரிடம்போய் தமால்வீட்டைத் தனியாக்கி கபீர் மகாமந்திரவாதி யெனத் தீர்மானித்து கபீரைக்கண்டாற் பயந்து நயந்து நடுங்கி ஒடுங்கி இருந்தார்கள் பின்பு கபீர் ஆனந்தமாய் ராமமந்திரத்தைத் தியானஞ்செய்துக்கொண்டு வீட்டைச் சூழ்ந்த நிலத்தில் துளபத்தோட்டமொன் றேற்படுத்தி நாள் கழிக்கத் தொடங்கினார் கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லலாயினர்.

கபீர் துலுக்கமதத்தைக் கண்டித்த அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஒன்பதாவது

## கபீர் கோரக்கரை வென்ற அத்தியாயம்.

---

இவ்விதமாய் கபீர் சுவாசம் புறம் வருகையிலும் அகத்திற் செல்லுகையிலும் ராமநாமமென்னுந் தாரகமந்திரத்தை மனனஞ்செய்துக்கொண்டு ராமானந்த ஸ்வாமிகளின் பணிவிடைக் காளாவதென்றென்று வாட்டமுற்றிருக்குங்காலத்தில் மச்சேந்திர நாதருடையமாணாக்கனாகிய கோரக்க நாதனென்பவன் சத்திநாதர் சதேகநாதர், ஆதிநாதர், அனாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர் கடேந்திர நாதரென்னும் எண்மருடன் தானுமொரு சித்தனென்கிற பேர்பெற்று நவசித்தர்களென்னும் சூரியனுக்குமுன் நக்ஷத்திரங்களுக்கிணையான தபசிகள் பிரகாசமடைவார்களோ வென்கிற அகமேலிட்டு, அனிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிரகாமியம், ஈஸத்துவம், வசித்துவமென்னும் அஷ்டசித்திகளையு மோர்விளையாடலாய் நினைத்து நீண்ட ஆயுளைப்படைத்து நாட்டிலுங் காட்டிலு முலாவி அனேகரிஷீஸ்வரர்களையெல்லாம் பங்கப்படுத்தி தனக்கு ஐக்கியமாக்கிக்கொண்டு காசியை யடைந்து ராமானந்த ஸ்வாமிகளின் மேன்மையைக் கேள்விப்பட்டு மடத்தினருகிற்சென்று மடத்தின் விசாலத்தையும் அதுவிருக்கும் உன்னதத்தையும் வேதகோஷ்டத்தையும் விஷ்ணு சங்கீர்த்தனங்களையுங் கேட்டாச்சரிய மாச்சரியமுங்கொண்டு மடத்தின் வாயிலினெதிரிற் சூலத்தைநட்டு அதின் நுனியில் வஸ்திரத்தைவிரித்து நிராதாரமான அவ்வஸ்திரத்தின்மேல் வீற்றிருந்து அடா ராமாநந்தா? ஆலையில்லாவூரி லிலுப்பைப்பூ சக்கரை யென்பதுபோ லென்றும் அறியா அந்தணர்களைச் சேர்த்துக்கொண்டு ஆசாரியனென்னும் பேர்பெற்று மடத்துக்குள் ளென்ன செய்கிறாயென்றார்.

உன்னுடைய தபோபலத்தை இப்போதே காண் பித்தாலாச்சுது இல்லாவிடில் நீயும் இம்மடமும் பஸ்ப மாய்ப் போகச்செய்கிறேன்பார் கற்றறி மோழையாகிய நீயுமனேகருக் காசானுயாமே உன்னுடைய தேசிகத் தனத்தையும் நீ ஜெபிக்கும் மந்திரத்தின் கனத்தையு மறிய நீயாவதுன் சிஷர்களாவது வெளிப்பட்டென்னைப் போலே சூலத்தின்மே லிருந்துக்கொண்டு ஜெபஞ் செய் யவாருங்கள் இல்லாவிடில் எமலோகத்தைச்சேருங்களெ ன்று மிகவும் ஆக்ரோஷத்துடன் அட்டகாசமிட்டுக்கொ ண்டனந்தமுறை இரைச்சலுடன் கூப்பிடுகிறதைகேட்ட ராமானந்த ஸ்வாமிகளின் ஏவலாளராகிய மறையோரும் மாணுக்கரும் அதிககோபதீப்தர்களா யெரிந்து ஆரடா ஸ்வாமிகளைப் பேரிட் டழைப்பவனுன்னை யிப்போதே எமலோக தரிசனத்துக் கனுப்புகிறோமென் று அடங்கா க்கோபத்தால் வீறிடும் யானையைப்போலவும் கர்ச்சிக் கும் சிங்கத்தைப்போலவும் புலியைப்போலவும் பராக்கி ரம வார்த்தைகளாடிக்கொண்டு மடத்துள்ளிருந்து வெ ளிப்பட்டு சூலத்தின்மீதிருக்கும் கோரக்கநாதனைப் பார் த்து வேர்த்து பிரமித்து கம்பித்து அடங்கி ஒடுங்கி பய ந்து நயந்து ஸ்வாமி நீ விரியாரென் றுவினவ அதுகேட்ட கோரக்கன் முனிவுடன் அடடா பிராமணப் பயல்களே? சாதுவென்று பேரெடுத்தவர்களுடன் வாதுசெய்துதோ த்தவர்களைச் சிறைச்சாலையி லடைத்துவைக்குங் கோரப் பற்களையுடைய வியாக்ரம பராக்ரமகோரக்கசித்தனென் றறியீர்களோ? உங்களாவியை கொள்ளைகொள்ளும் எம னெனக் குறியீர்களோ அந்த ராமானந்த னென்பவனெ ங்கே ஒதுங்கிப் பதுங்கிக்கொண் டிருக்கிறு னவனையென் முன் வரச்சொல்லுங்கள்.

ஓடாமற் சற்று நில்லுங்களெனத் தன் பெருங்கு ரலைத் திறந்தோசையுடன் அதட்டும்போது அந்தணர்புலி யைப்பார்த்து கிலிபடைந்த பசுக்கூட்டத்தைப் போற் சிதறி அலக்கணுற் றோட்டமெடுத்து ராமாநந்த ஸ்வாமி களை யடுத்து பராக்கிரமங்களைவிடுத்து யாவரையும்வெளி யிற் போகாமற்றடுத்த ஓ சுவாமி கோரக்கனென்னுமிரா க்கதன் வந்துவிட்டான் நமக்குத் துன்பத்தைத் தந்து விட்டான் இனி யென்னசெய்வலா மெவ்விடத்திற் பதுங் கலாமென்று மூலைவீடுகளைத் தேடுகையில் ராமானந்த சுவாமிகள் கிடுகிடென நடுநடுங்கி கருடனைக்கண்ட சர்ப் பத்தைப்போ லடங்கி தெரிமாவைக்கண்ட யானையைப் போ லொடுங்கி அப்பப்பா அந்தக்கோரக்கன் பொல்லா தவனுயிற்றே நம்முடைய பெருமை இன்றுட னழிந்து போயிற்றே யென் றுதிவருணரைநோக்கி ஓ விப்பிரர்க ளே இப்போது நாம் செய்யுமுபாயமென்ன சாற்றுங்க ளென்னைக் காப்பாற்றுங்களென்று வாயுலர்ந்து நாத்தடு மாறி மனந்திடுக்கிட்டு பீதிமேலிட்டு வாயில் வந்தபடி பிதற்றத்தொடங்கினர்.

அப்போது வேதியர் ஓ! சுவாமி தேவரீரே அச்சத் தாலச்சைவிட்டு கொச்சைமக்கள்போற் குளறிப் பேசும் போது நாங்களவனை வெல்லவல்லவர்களா வெல்லமேன் மையுள்ளவர்களா இக்கணம் பின்மார்க்கமா யனைவரும் வோட்டமெடுப்பதே மேன்மை இல்லாவிட்டால் வருந் தீமையென் றுரைக்க அதற்கு ராமானந்த ஸ்வாமிகள் ஓ! தொழுகுலத் தோரே தபோ பலத்தோரே இத்தருணத் தில் உங்களுக்குள்ள திராணிகளைக் காட்டக் கூடாதோ மந்திரோச் சாடனங்களால் மாட்டக் கூடாதோ! மார ணபேதத்தால் வாட்டக்கூடாதோ கோரக்கனை இக்கண ம்வோட்டக் கூடாதோவென்று வினவ அதற்குப் பார்ப் பார் ஓ-ஓ-சேனைக்கெல்லாந் தலைவனுன உத்தரனென்ப வன் வீட்டில் பெண்டுகளுக்குமுன் பராக்கிரமங்களைக் காட்டி யுத்தமுனையில் கௌரவருடைய ஆரவாரத்தைப் பார்த்து அச்சமுற்றோட்டமெடுக்க நினைத்ததுபோல நீ ரிதுகால்வரையி லெனக்கு நிகரான ஆசிரிய ரில்லையென் றனைவரையு மவமதித்திருந்து இக் கோரக்கனுக்குப் பய ந்திங்குமங்குமாயோடிப் பதுங்குகிறீர் வயிற்றைவளர்க்க வந்த எங்களைக்காட்டி கொடுக்கிறீர் இனி யரைக்கணமு மிம்மடத்தி லிருக்கமாட்டோமென் றோடிப்போக எத் தனிக்கையில்,

ஸ்வாமிகள் ஓ-விப்பிரர்களே நீங்களெல்லாம் மே லுக்குப் பக்தாளென்று காட்டி நல்லோரியாருந் தங்கா மலோட்டி தபத்தில் வல்லவர்களெனப் பாராட்டி இது நாள் பரியந்தமென்னைச் சீராட்டி இப்போ வெளுத்தபற் களைக்காட்டி வியாகுலத்தாலென்னை வாட்டி வோட்ட மெடுக்கவா நினைத்தீர்கள் யுத்தமுனையி லிராஜனை விடுத் தோடிப்போகும் இழிவான பேடிகளைப்போல என்னைக் காட்டிக்கொடுத் தோட்டமெடுப்பது நீதியா பிரக்கியா தியா இப்படி செய்தால் அனைவரும் நிந்தைசெய்ய மாட் டார்களா! நகைக்கிடமாக்கி வாட்டார்களா, யுத்தமு னையிற் புறங்கொடுத்து வோடிப்போகிறதைப் பார்க்கி லும் எதிர்த்து மரித்தல் புகழல்லவா துன்பம் வருங்கா லத்திற் றுறவியாகிறதைவிட துன்பத்தையே நுகர்தல் தூய்மையல்லவா ஓ-யெனக்குரிய அன்பர்களே மிகவும் நண்பர்களே சாட்சிக்காரன் காலில் விழுகிறதை விட சண்டைக்காரனைச் சமாதானஞ்செய்துக்சொள்ளல் சள் ளையற்றதுபோல இந்தக் கோரக்கனை ஜெயிக்க வல்ல

மையில்லா நாமனைவரும் சரணாகதியாவோஞ் சரண மென்பவருக்கு மரணமில்லையென்று சாஸ்திரமும்முறை யிடுகின்றதே நீங்களறியாதது மல்லவே ?

ஓ மனோநிடமில்லாச்சிஷர்களே! வேசிக்கிணையான வேஷர்களே ! ஓடிப்போதல் நன்மையல்ல, நன்மையல்ல வென்று மறுக்கவும் நீ வளர்ப்போர் கேட்காமல் போமையா இம்மடத்துடன் நாங்களனைவோரும் பஸ்பமாய்ப் போகுங்காலம் நேரிட்டது உமக்கென்ன கெட்டது நீரு மெங்கள் மொழியைக்கடவாமல் ஓடிப்போகு மெங்களை மடக்காமல் கூடவே வந்துவிடும் இன்றேனுமதாக்கை வெந்துவிடும். வீணாய் மரணகாலம் வந்துவிடும் சமஸ்த மும் பகையாளிக்குத் தந்துவிடும். என்றறைந் திறைந் துக்கொண்டே புற்றினிலிருந்து புறப்படும் ஈசலைப் போல் மடத்தின் பின்வழியாய்ப் புறப்பட்டு நாலு பக்க முஞ் சிதறுண் டோட்டமெடுத்துத் தனிமடமாக்கி விட் டார்கள்.

அந்தணர்க்குள்ள அச்சத்தைக் காட்டிவிட்டார்கள் பின்பு ராமானந்த ஸ்வாமிகள் பிரம்மாண்டமான மடத் திற் றனித்திருக்க வெறுவலுற்று ஆஹா ஆபத்துக்குத வாப் புத்திரனும் மித்திரனும் கஷ்டமறியாக் களத்திர மும், கலந்தவரும் பகையாளிகளெனத் தீர்மானிப்பது போல தன் மாணாக்கரை யெண்ணி பலவாராலோசனை பண்ணி இனி கோரக்கநாதனை நண்ணி பூசிப்போமென் றுன்னி மடத்தைச்சூழ்ந்திருக்கும்மாந்தர்களைப்பார்த்து தேகமெல்லாம் வேர்த்து கரங்களைச்சேர்த்து கடவுளுக் குத் தேகாவியைத் தாரைவார்த்து கர்த்தனே காவெனத் தொழுது கண்ணீர்பெருக அழுது எனக்கும் வரலாமா பழுது யாருமில்லையா கழுது என்றச்சப்பட்டு உணர்வு கெட்டு துக்கம்மேலிட்டு கக்கசத்துக்குட்பட்டு கோரக் கனுக்குப் பயப்பட்டு பலபல எண்ண மிட்டுக்கொண் டிருக்குந் தறுவாயில், கோரக்கர் வந்ததும் ராமானந்த ஸ்வாமிகள் பயந்ததும் மாணாக்கரோடினதும் ஸ்வாமிகள் வாடினதும் பகவானை நாடினதும் பிரஜைகளங்கு கூடின துங் கேள்விப்பட்ட கபீர் பட்டுநூற்பந்துகள் கையுடன் ராமானந்த ஸ்வாமிகளைத்தேடி காலடி புட்டத்திற் படும் படியாயோடி ஸ்வாமிகளைநாடி கோரக்கனென்பவன் பேடி நீரேன் நைந்தீர்வாடி உனக்காயாசம் வரச்செய்யும் ஜீவர்களையும் தேவர்களையும் மூவர்களையும் மற்றியாவர் களையும் வெல்லுவேன் எதிர்த்தாற்கொல்லுவேன் என் றுற்பரித்து சிரித்து அந்தணரைத் தூஷித்து ஆரியரைப் பூஷித்து ஆதித்தனைபோற் பிரகாசித்து கோரக்கன் மேற் றுவேஷித்து தேசிகர் பாதங்களிற்பணிந்து திவ் விய வட்சிகளைபணிந்து சற்றே கோபந்தணிந்து எழுந்து கரங்களைக் கூப்பிக்கொண்டு நின்று ஓ என்னாண்டவனே ஆனந்தத்தாண்டவனே ! ஏனழுகிறீர் யாரைத் தொழு கிறீர் இந்தக் கோரக்கனென்பவ னெமக்கெம்மாத்திரம் என்னைச் செயிக்க அவனப்பனாலு மாகாததாம், அடி யேன் சொல்லும் வார்த்தை ஸ்திரம், உமக்கேனிவ்வளவு உபத்திரம், என் தலைமேற் கருணையுடன் வைப்பீருமது கரம், அவன் கழுத்தைக் கொய்யத் தாரகநாமமே அரம், இப்பொழுதே கொய்துவிடுகிறே னவன் சிரம், உமதரு ளா லடியேற்கிருக்கிறதவ்வளவு உரம், சிவன் நகைக்க எரிந்ததையா முப்புரம், நீர் நினைத்தாற் சேர்வா னிவ னெமபுரம், கோரக்கனைக்கொல்லச் சீக்கிரந்தாரும்வரம், தேவரீரழுதால் போகாதோ நமது பரம், காற்றினாற் சலிப்பதுமுண்டோ அப்பரம் என்கிற வார்த்தைக ளாடும்போது,

ராமானந்த ஸ்வாமிகள் அடடா! நீயேனிந்த வேளை யில்வந்து தொந்தரவு செய்கிறாய் அரம் பரம் சிரம் கரம் வரம் என்றுளருகிறாய் கோரக்க னெம்மாத்திரமெனக் குளறுகிறாய் வெளிப்பட்டேதேனும் வம்புசெய்யப்போகி றாய் யானைக்குமுன் பூனை நிற்குமா? அரிமாவை யானை வெல்லுமா, செங்கோலுக்குமுன் சங்கீதஞ் செல்லுமா, புலியை புழு கொல்லுமா, அந்தக் கோரக்கன் எரிந்து பொரிந்து முகங்கரிந்து கோபம்விரிந்து வந்திருக்கிறான் அதனை நானே சமாதானஞ் செய்யவேண்டும் எல்லோரு முய்யவேண்டும். நல்ல தனத்தாற் பொல்லாங்கு நேரி டாது வந்தனம் புரிவர் சந்ததம் வாழ்வார் சாந்தம் மே லான ஆபரணமாகும், உபாயத்தாலாகிற காரியம் பராக் கிரமத்தாலாகாது, சரணமென்பவர்க்கு மரணமேயில்லை. அபயமென்பவ ரபஜெயமடையார்களாதலா லிவ்விடத்தி லியாதொரு சந்தடிசெய்யாம லுன்னிருப்பிடத்துக்குப் போ, ஏனெனின் எட்டியுடன்சேர்ந்த இலவுந்தீப்பட்ட துபோ லுன்னாலெனக்கு மிடர்வரும் மலை முழுங்குவோ னுக்கு கதவோ ரப்பளம்போ லஷ்டசித்தியில் மிகுந்த கோரக்கன்முன் நாமோர் கீடகமேயாகும்.

நரி சந்தைக்குப் போனதுபோல நீ கோரக்கன் கண்முன் போகவேண்டாம் கும்பிடத்தகுந்த குருவோடு வம்புசெய்யலாகாது வந்தனஞ் செய்யத்தகுந்தவரை நிந் தைசெய்யப்போகாது நீ கொடிய வம்புக்காரனா யிருக்கி றாய் எறும்பு வீழ்ந்தாற் காயம்படாது யானை வீழ்ந்தால் மிகவுமிடரும், இழிவுள்ளவர்க்கு ஈனமுமில்லை மானமு மில்லை. அதுபோல் நீ இழிவுக்கும் அழிவுக்கும் பயப்

படாக கடின நெஞ்சுடையவனு யிருக்கின்றாய் இதை யறிந்தார் அக்கோரக்கன் மடத்துடன் பஸ்பமாக்கி விடுவான் தன்கொடியை நடுவான் உன்வேலையைப் பார்த்துக்கொண்டு போவென்றும் திருவாய் மலர்ந்தருளும்போது,

கபீர் ஸ்வாமிகளின் திருவடிகளிற் சிரசாஷ்டாங்கமாய் விழ்ந்து பலதரந்தாழ்ந்து ஓ ஸ்வாமி தங்களுக்குப் பிரதம சிஷ்யனுகிய நானிருக்கும்போது இந்தக் கோரக்கனைச் சொற்பமாயென்னுமல் சமானமாக நினைக்கலாமா பணியப்போமோ! இன்னுஞ் சற்றுநேரத்தில் இக்காசியிலுள்ளோர் சிரிக்கவும் கோரக்கனுடைய வஸ்துக்களைப்பறிக்கவும் சகலரு மவனுடன் வாதுசெய்து மரிக்கவும் அவனகந்தையை யில்லாமற் பிரிக்கவும் அவனுக்குள்ளுயின் றோலையுரிக்கவும் எலும்புகளையெல்லா மொருங்கேமுறிக்கவும் பஸ்பமாய்ப்போக எரிக்கவும், தேவரீர் நாமதேயத்தைக் கேட்டாலவன் நெஞ்சங்கரிக்கவும் அவன்றோல் தசை குடரெங்கனுந் தெரிக்கவும் செய்யத்தங்களடியேனிருக்கவும் தேவரீரவனை ஒரற்பமாகவுஞ்சொற்பமாகவு மென்னுமல் விற்பனசாலியென்று குப்புறவிழப்போகிறீர். வேண்டாம் வேண்டாம் அடியேன் வார்த்தை சத்தியமென்று நம்பும் என்னுல் வராதோர் வம்பும் என்றடிகளைத்தழுவி கண்ணீராற் கழுவி ஓ வெனதையனே மிகவுந்துய்யனே அழிவில்லாமெய்யனே அழகானகையனே எனத் தோத்திரம் புரியும்போது ராமானந்த சுவாமிகள் கடுங்கோபமடைந்து துன்பம் மேலிட்டிடைந்து அடா யென்னைக் கெடுக்கவந்த துடுக்கப் பயலே நீ இவ்வேளையி லெங்கிருந்துவந்தாய் எனக்கிடரேன் தந்தாய் கோரக்கனுக்கிருக்குஞ் சாமர்த்தியத்தில் ஆயிரத்திலோர்பங்கு இவ்வுலகில் யார்க்கு மில்லவே யில்லைகேளடா பென்சொல்லை நீ யிங்குவந்ததேதொல்லை உனை வேண்டிக்கொள்ளவில்லை நீ யெனக் குகந்தவனே யல்லை உன் தலைமேற் போடட்டுமா கல்லை உடைக்கிறேன் பாருன் பல்லை நீ சும்மாய்ப் போகிறவனுகக் காணவில்லை குருடனுற் காக்கக்கூடுமோ கொல்லை என்று கடுகடுத்துப்பேசியுங் கேட்காத கபீரைப்பார்த்து கரங்களைச் சேர்த்து அடப்பா உனக்கு வந்தனமாவது செய்கிறேன் இவ்விடம்விட்டுப்பேரும் உன்னிருப்பிடத்தைச்சேறு வீணுயென்னுடன் சண்டைசெய்யாதே கழுத்தைக் கொய்யாதே அந்தக் கோரக்கசித்தன் அயோனி சம்பந்தன் ஈசனுடனெதிர்த்தவன் நவசித்தர்களிலும் மேலானவன் அஷ்டசித்திகளிலுந் தேர்ந்தவன் என்றுரைக்கும்போது,

கபீர் ராமானந்த ஸ்வாமிகளைச் சூழ்ந்து பலதரம் தாழ்ந்து பாதங்களின்மேல் வீழ்ந்து கோரக்கனைத் துக்கஸாகரத்தி லாழ்ந்துபோகச் செய்கிறேன் இப்போதே கண்டங்கண்டமாய்க் கொய்கிறேனென்று வெளிப்பட்டு ஜனநெருக்கத்தா லரைபட்டு கோரக்கனருகே சென்று எதிர்த்துநின்று அடா கோரக்கா உன்னுடைய கரடி வித்தைகளெல்லாம் எனது சத்குரு நாதனுகிய ராமானந்த சுவாமிகளின் முன் செல்லாது சிம்மத்தை யானை வெல்லாது நீ வந்தவேலை பொல்லாது சீக்கிரமோடிப்போ நில்லாது உன்னுடைய சித்து வித்தைகளைக் காட்டவா வந்தாய் வீண்சம்பத்தை நீட்டவாவந்தாய் யாரையிங்கே ஆட்டவந்தாய் கலகமா மூட்டவந்தாய் நீ யென்ன உன்திராணியென்ன என்னையறியாயோ உன்னை வெல்பவனெனக் குறியாயோ வென்றுரைக்கும்போது கோரக்கன் ஆரடா அவன் பினத்துகிறவன் தபோநிதிகளுக்கெல்லா மதிபதியான கோரக்கனை யறிவாயோ என்னையெதிர்த்து மிவ்வுலகி லுயிருடனுறுவாயோ முகத்தைக் காட்டாமலொளிந்து பேசுவானேன் பேசி யேசுவானேன், சீக்கிரமென்முன் வருகிறாயா? சாபம் பெறுகிறாயா வென் றிறைச்சலிட்டுப் பேசும் கோரக்கனை,

கபீர் நோக்கி அடா மூடா குடிகேடா நீ என்னெதிரில் வாடா நீ யெனக்கொரு சோடா நான் ராமானந்தசுவாமிகளின் சிஷனுக்கும் உன்னைப்போன்ற மூடர்களைக் கிழாக்கும் எதிர்த்துப் பேசுவோரைப் பாழாக்கும் சிதலைப்போலுன்னைத் தேய்க்கும் இவ்வுலகி லில்லாமல் நீக்கும் எமலோகத்திற் சேர்க்கும் தபசிகளின் துயரத்தைத்தீர்க்கும் ராமானந்த ஸ்வாமிகட்குக் கரங்களைச் சேர்க்கும் உன்னையோர் கொசுவாய்ப் பார்க்கும் அபயமென்றவரைக் கார்க்கும் கபீரென்பவனே நான் பினத்துகிறாயேன் என்றுரைக்கும் மொழிகள் நாராசங்களைப்போற் செவியிற்புகுந்த மாத்திரத்தில் கோரக்கன் கோபதீப்தனு யெரிந்துவிழுந்து உதட்டை மடித்து பற்களை நறநற வெனக்கடித்து ஈனவார்த்தைகளைப் படித்து இக்காசியைப் பஸ்பமாக யெரித்து விடுகிறேனென்று ஆர்ப்பரிக்கும்போது பிரஜைகளெல்லாம் கபீர்மே லெரிந்து விழுந்து அடா கபீர் தான்கெட்ட குரங்கு வனத்தையெல்லாங் கெடுத்ததுபோலே நீ நாசமாவதன்றி இக்காசிதேசத்தை நாசமாக்கவா யோசித்தாய் ஒளிந்து பேசுவானேன் கரங்களை வீசுவானேன் எதிரில்நின்று கற்ற கவியைக் காட்டடாவென்று தலைமேற் குட்டி அதட்டி கோரக்கநாதனுக் கெதிரில் நிறுத்தி இவன்தான் உம்முடன் அதிக பிரசங்கமாய்ப் பேசினவ னெனக்

காட்ட, கோரக்கன் அடா நீதானா செய்தாய் இவ்வளவு குறும்பு, சற்றே என் பக்கமாய்த் திரும்பு, நீ யெனக் கோர் துரும்பு, நசுக்கச் சிறிய பெறும்பு, மெல்லுங் கரும்பு, பறக்குந் துரும்பு, மல்லிகையி னரும்பு நீ யாவாயா எனக்கிணையான பிரும்பு என்றரற்ற,

கபீர் அடா துன்மார்க்கா ! அறிவில்லா மூர்க்கா ! சாந்தர்களியாருஞ் சேர்க்கா ! அருட்கண்ணாற்பார்க்கா! தஞ்ஞானத்தைத் தீர்க்கா ! தகங்காரத்தைப் போக்கா ! தெப்படியானும் சாது சீக்கிரமாக ஒது யாருடன் செய்ய வந்தாய் வாது, என்பால் நடக்காதுன் சூது, இப்படி செய்த வுனக்குத் தீது, நீயறிவில்லா மாது, ராமானந்த ஸ்வாமிகளனுப்ப வந்த தூது, உனைக்கொண்டு போகிறே னெமலோகத்துக் கிப்போது உனைக் கொல்வதாற் றப் பேது இனி நீ தப்பிப்போகும் வகையேது, சூலத்தால் மோதினாலும் மோது ஒன்று முன்னாலாகாது, இவ்வள வகங்காரமாகாது, ராமானந்தஸ்வாமிகள்சாபம் வீணாய்ப் போகாது, இனி நீ தப்புவதில்லை சாகாது என்றறைந் ததைக் கேட்ட ராமானந்த ஸ்வாமிகள் அடா துலுக்கப் பயலே ! நானெப்போதடா சாபமிட்டேன் வீணாய்க் கோரக்க நாதருக்குக் கோப மூட்டுகிறாய் சகலரையும் வாட்டுகிறாய் அறி வீனத்தைக் காட்டுகிறாய் அடிக்கடி கைகளை நீட்டுகிறாய் என் றுரைத்துக் கொண்டே வெளிப்பட்டு கோரக்க நாதருக்குத் தெண்டனிடப் போகையில்,

கபீர் ஓ ஸ்வாமி! எனக்கு மாணாக்கனாகிய இந்தக் கோரக்கனுக்கு நீர் வந்தனஞ் செய்யக்கூடுமா வென்று மறுக்க ராமானந்த சுவாமிகள் மிகவும் முனிவுகொண்டு கபீரை எட்டி யுதைத்து ஒகோ பாவி வீணாய்க் கலகம் மூட்ட நினைத்தாயே வந்தனம் புரிகிறதைத் தடுத்தாயே என்று நவிலும்போது, கபீர் ராமானந்த ஸ்வாமிகளின் திருவடிகளில் வந்தனஞ்செய்து கோரக்கனிருக்கும் சூலத்தி லறைந்து கீழ் விழும்படியாய்ச் செய்து தன் கையிலிருக்கும் பட்டு நூற்பந்தின் மேனுனியைப் பூமி யிற் றங்கவைத்து பந்தை ஆகாயத்தி லெறிந்து ஜே ராமானந்த ஸ்வாமி என்று கீழ்மே லாதாரமில்லா நூல் வழியா யேறி ஆகாயத்திற் சென்று நூலின் முனைமேல் நின்று அடா கோரக்கா கீழே யென்னசெய்கிறாய்யாரை வைகிறாய் இப்போதே என்னால் நைகிறாய் என்னைவெல்ல உனக்குத் திராணி இருக்குமாயின் எனக்கு நேரில்வந் துட்காரு என்னைச்சோதித்துப்பாரும்வாதித்துப்பாரும் எதோ கைகொட்டித் தாரும் சீக்கிரமாக வாரும் எனக் கும் கோபம்மீறும் உன் பிராணன் எமனுலகைச் சேரும் ராமானந்த ஸ்வாமிகளி னாசிர்வாதப் பலனைப் பாரும் அவரடிகளி லுனது தலையைச் சேரும் என்னவரம் வேண்டுமோ கோரும் இல்லாவிடி லிடர்வந்து நேரும் இப்போதே எல்லாருஞ் செய்வார் தாறுமாறும் உன் சமர்த்தைக் காட்டினது போதும் உனக் குதவியார் வருபவரில்லை ஸ்வாமி களன்றி யாருமில்லைக் காப்பாரும் என்று சொல்கிறதைக்கேட்ட.

கோரக்கன் தனக்கவ்வளவு சத்தியிருந்தும் அஷ்ட சித்திகள் தெரிந்தும் கபீர்செய்த ஆச்சரியத்தைக் கண்டு மாச்சரியங்கொண்டு வெட்கி சுட்கி வேறுவிதத்தா லிக் கபீரை வெல்லவேண்டுமென் றேசித்து ஓ கபீர் ஆகா யத்திற் றனித்துப் பிரசங்கஞ் செய்வதாற் றேப்பு கெலி ப்பு யாரறியப் போகிறார்கள் கீழேவந்துன் சமர்த்தைக் காட்டென்றுரைக்க கபீர் மேல் வருவதற்குச் சக்தியில் லாமல் கீழேவரச் சொல்கின்றாயோ நல்ல தப்படியே யாகட்டுமென் றிரங்கி வந்து ஸ்வாமிகட்குவந்தனந்தந்து அஞ்சலியஸ்தனாய் நிற்க, கோரக்கன் அடாகபீர் என்னை வெல்லுதற் குன்னாற் கூடுமோவென்று ராமானந்த ஸ்வாமிகளின் ரூபமெடுத்து நிற்க, அதையறிந்த சகல ருந்திடுக்கிட்டு இதேதிரண்டு ராமானந்த ஸ்வாமிகளிருக் கின்றாரென வதிசயமாய் பார்க்கையில், ராமானந்த ஸ்வாமிகள் பயவாழியி லாழ்ந் திந்த கோரக்கனென்ன விபரீதஞ் செய்வானோ இன்று என்னென்ன துன்பப் படப் போகின்றதோ இவனை வெல்லச் சிறுவனாகிய கபீராலாகுமா ஆகாதே நாமின்றோடு நசித்துப் போகும் படியாய் நேரிட்டதே இனி யென்ன செய்வேன் ஓ கர்த் தனே! ஓ பகவானே ! இந்தக் கோரக்கனை வெல்லும் படியான வலிமையை இக்கபீருக் களித்து என்னையு மிக் காசியையும் இரட்சியும் ஸ்வாமி யென்று தோத்தி ரஞ் செய்துக்கொண்டிருக்கையில் கபீருக்கு அளவற்ற தைரியமும் வலிமையும் முன்விட எண்மடங் கதிகப் பட்டு சத்குரு நாதனுக்குத் தெண்டனிட்டு ராமானந்த ஸ்வாமிகளைப்போல ரூபமெடுத்து நிற்கும் கோரக்கனை நோக்கி, அடா கோரக்கா ! என்னுடைய உருவைச் சற்றே பாரென்று மச்சேந்தர நாதரூப மெடுத்து நிற்க கோரக்கன் அடா கபீர் ! நீ தொழுந் தெய்வமாகிய விஷ்ணுவே நானாயிருக்க என்னை யுன்னால் வெல்லக் கூடாதென்று பகவானுருவுடன் நின்று உன்னையு முன் னாசானையு மிச்சக்கரத்தால் துண்டந் துண்டமாய்க் கண் டித்து விடுகிறேனென் றார்ப்பரித் தட்டகாசஞ் செய்கை யில் கபீர் அடா கோரக்கா ! உன் மாயாவித்தைகளைக் காட்டாதே யென் றரனுருவாய் நீயேத்தும் ருத்திரனே நானென் றறியென்று உற்று நோக்கி இப் பாசுபதாஸ்தி

ரத்தா லுன்னைக் கண்டங் கண்டமாய்த் துண்டித்து விடுகிறே னென் னண்டையில் வாவென் றறையும் போது கோரக்கன் சிங்கரூபமாய்க் கர்ச்சிக்கையில் கபீர் யாளிரூபமாய்ச் சிங்கத்தினருகேற் செல்ல கோரக்கன் அக்கினிச் சுவாலையைவீசி யாரு மருகில் நிற்க வொட்டா மல் நாலு திக்கையுந் திருதிகென் றெறிக்க கபீர் மேக ரூபமா யானைத் துதிக்கைபோ லக்கினியைத் தலை யெடுக்க வொட்டாம லவித்து கோடி சூரியரைப்போற் பிரகாசித்து கோரக்கனைச் சூழ்ந்துக்கொண்டு கிரணங் களால் வாட்டும்போது,

கோரக்கன் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள சக்தி யற்று பரதவித்து ஓ ராமானந்த ஸ்வாமி! எமக் கபய மபயமென்று முறையிடக் கேட்ட பிரஜைகளும் ராமா னந்த சுவாமிகளும் ஓஓ கபீரே முறையிடுகிறு னெனத் தீர்மானித்து ஓஓ இனி இக்காசிதேசம் பஸ்பமாகும் காலம் நேரிட்டதெனத் தத்தளிக்கும்போது கபீர் நானே ஜெயித்தேன் ஜெத்தேனென்று சுவாலையைக் குறைத்து அடா கோரக்கா இப்போ தென்ன உரைக்கின்றனை யென்று வினவ கோரக்கனயர்ந்து ராமானந்த ஸ்வாமி களி னருகிற்சென் றெனைக் காப்பாற்றுமையா வென்று வணங்க கபீர் தன் சுயரூபத்துடன் தேசிகரருகிற்போய் சிரசாஷ்டாங்கமாய்த் தெண்டனிட்டெழுந்து, ஓ ஸ்வாமி தேவரீர் கட்டளை யிட்டா லிக்கண மிக்கோரக்கனை பஸ்பமா யெரித்து விடுகிறேனென்று சாற்ற கோரக் கன் மடத்துட் பிரவேசித் தென்னை வேறு விதத்தில் வென்று லொழிய ஜெய முன்னதல்லவென்று நவில கபீர் இனி எவ்வித தர்க்கஞ் செய்யலாமென் றறைய அப்போது ராமானந்த ஸ்வாமிகள் கபீரைக்கிட்டி இரு கரங்களாலுங் கட்டி யணைத்துக்கொண்டு சுகஜீவியாய் வாழக்கடவாயென்று விண்டு எங்க ளனைவோரை காத் திரட்சித்ததற் கென்ன கைம்மாறு செய்யப்போகிறோ மெனப் புகழ்ந்து குருவை நம்பின பெரியோர்கட் கரு மையான காரியமு மிருக்கின்றதா ? உனதரிதான தவத் தை யறியாமல் கோரக்கனை வெல்லுவா யென்று குறியா மல் துன்பத்திலிருந்து பிரியாமல் அகோ தெரியாமல் இடர்வாரியி லமிழ்ந்திருந்தே னென்று பல பல வார்த் தைக ளாடும்போது,

காசிதேசத்திலுள்ள சகலரும் கபீர் செய்தது விந் தையென் றறைந்து ஜெய ஜெய கபீர் கபீரென்றிரைந்து புஷ்பங்களைச் சொரிந்து மிகவும் பரிந்து பல விதங்க ளாய்க் கொண்டாடி ஆனந்த கீர்த்தனங்களைப் பாடி கோரக்கனைத் திட்டவும் பலருஞ் சூழ்ந் ததட்டவும் தொடங்கினார்கள். அப்போது ராமானந்த ஸ்வாமிகள் அனைவரையும் விலக்கி இருவரையும் மடத்துட்கொண்டு போய் ஓ கோரக்கநாதரே! மிகவும் விநோதரே! இந்தக் கபீரென் சொந்த மாணாக்கனாகும் உம்மாலிவனை வெல் லக் கூடுமானு லெவ்விஷயத்திலுந் தர்க்கஞ் செய்யலா மெனத்திருவாய்மலர்ந்தருள, கோரக்கன்கபீரைநோக்கி உனக்கு வயதென்னவென, கபீர் அனேகங்கோடி பிர்ம தேவர்களும் அளவற்ற விஷ்ணுக்களும் கோடி கோடி ருத்திரர்களும் என்முன் னிறந்து விட்டார்க ளாதலால் என்னுயுட் பிரமாணத்தை உன்னால் அறியக் கூடுமோ வென,

கோரக்கன் அனேகந்தர மிக்காசிக்கு வந்தேன் நீ யெங்கிருந்தா யென, கபீர் உன்னை நீயே யறியாமல் மற தியா யிருக்க என்னை நீ யறியக்கூடுமா ? சத்யக்ஞானா னந்த சொரூபமாகிய பரமாத்மாவே நானாகும், இம் மாட்சியான சூட்சும மறியா நீ தாட்சி யடையாமல் மோட்ச மடைவாயோ வன்றி இம்மலவுடலை நானென் றிருமாந் தனேகநாள் வைத்திருப்பதாற் பெரியவ னானை யோவென, கோரக்கன் என்று மிவ்வாக்கை யழியாமல் வைத்திருக்கும் வித்தையே பிரமவித்தை மற்ற வித் தைகளெல்லாஞ் சொத்தையும் வித்தையு மல்லவோ ஆதலாலிச் சரீரத்தை எத்தனை நாளாய்ச் சித்திசெய்து வைத்திருக்கின்றாயென, கபீர் நகைத்து பிறந்தவர்க்கே இறந்துபோந் தன்மையுண்டு பிறக்காதவர்கள் இறத்த லுண்டோ எக்காலத்திலும் ஜன்ம மில்லா வெனக்கு மாணமேது, மரண மில்லாத வெனக்கு உற்பவமேது, இம்மொழியின் இரகசியத்தை யறிந்தவர்களுக்கே பிரம வித்தை தெரியுமல்லாது மற்றவர்களா லுணர்தற் கரி தென, கோரக்கன் ஆக்கையை அழியாமல் வைத்திருப் பதே பிரமவித்தை யல்லாமல் வேறு வித்தை பிரம வித் தைக ளாகமாட்டா தன்றி பிரத்தியட்சமா யுற்பவித் திருக்கும் நீ ஜென்மிக்க வில்லையென்ப தபத்தமல்லவோ வென,

கபீர் பிர்ம்மத்தை யுணர்தலே பிரமவித்தையெனச் சொல்லப்படுங் காபத்தைக் காத்தலே அவித்தை யென் றுரைக்கப்படும் பிரம்மமாத்திரமாயிருப்பவனுக்குஜனன மரணந் திரிகாலங்களிலுமில்லை இதை யஞ்ஞானிகளா லறியக்கூடிய தல்லவென கோரக்கன் யோகதாரணையா லிக்காயசித்தி செய்து நெடுநாள் பிர்மநிஷ்டா சாதனஞ் செய்தாலல்லவோ பிரமமாகலாம் அனித்தியதேகத்தால் மோட்சசாதனஞ் செய்யக்கூடுமோ பிர்மமாகக்கூடுமோ வாசாக்ஞானத்தால் நான் பிர்மமென்றறைவதால் பிர்ம மிவனைப் போவானோ பிர்மக்ஞானிகளாற் சித்திகளைக்

காட்டக் கூடுமோவென கபீர் மலவுடல் முக்காலங்களிலும் நித்யமேபிர்மம் எப்போதும் நித்தியமேயாம் தேகம் மூன்றுகாலங்களிலுந் தானல்லவேயாம் பிரமந் திரிகாலங்களிலுந் தானேயாம் தேகாதிகளைத் தானெனப் பிரமித்தல் மாயா சம்பந்தமாகும் பரப்பிர்மமே தானெனத்தெளிதல் பிர்மானந்தமாகும் பரப்பிர்மத்தை நோக்கித் தவஞ்செய்வோர்க்கே அனேகசித்திகள் விளங்குமாயின் பிர்மமே தானாயிருப்பவர்கள்பால் சித்திகளுண்டாகாமற்போகுமா ஆனால் அகமமதையற்றவர்க ளொருவல்லமையுங் காட்டமாட்டார்கள் அவர்களகமுகப்பட்டானந்த மாத்திரமாயிருந்தாலும் அவர்களறியாமலே யநேகசித்திகள் விளங்கு மிதையொருவருல் வகுத்துரைக்கக் கூடியதோவென கோரக்கன் யோகதாரணையின்றி பிர்மக்ஞானியாதல் வெகு துர்லபம் பிர்மமாவது லேசானதோவென,

கபீர் குருமுகமானவன்றே பிர்மமென் றுணர்ந்துகொண்டு மௌனமாயிருத்தலே பிர்மமாயிருக்கும் வகையன்றி வேறுசாதனைசெய்யக் காரணமில்லையென கோரக்கன் குருமுகத்தால் தான் பிர்மமென் றுபதேசஞ்செய்துக்கொண்டதால் பிர்மமாய்ப் போவானோவென கபீர் குருமுகமாகாமுன்னும் பிரமமேயாம் ஆனபின்னும் பிரமமேயாம் இத்தேகமிருந்தும் பிரேதமேயாம் மரித்தும் பிரேதமேயாம் எங்ஙனமெனின் பூமியை வெட்டுதற்கு முன்னும் ஆகாயமிருந்தது வெட்டினபின்னு மாகாயமேயிருந்ததன்றி அகழ்ந்தபின் ககனமுண்டாயிற் றென்பாருண்டா அன்றி பாத்திரமுடையாம லிருக்கும்போதும் மண்ணேயாம் நொறுக்கினபின்னும் மண்ணேயாம்இதையொருவர் சொல்லவேண்டுமோ பிரம சொரூபமானதன்னை இதுவென்றறிவித்தலே அனுக்கிரகமாகும் பிரமமே நானென்பதெதாஸ்து வென்றுணர்ந்து கொள்ளுதலே பிரமஞானமாகும் இதிற் சந்தேகஞ் சற்றுமில்லையென கோரக்கன் தான் பிர்மமென்றறிந்து கொள்வதாற் பிரயோசனமேதென கபீர் தான் பிர்மமென்றறிந்துகொள்வதால் மரணமுண்டென்கிற காலபயமும் சமுசார சாகரத்தால் வருகிற அபஜயமும் சித்திகளால்வருகிற நயமும் ஜெபமுண்டென்கிற பயமும் நரகவேதனையென்கிற சமஸ்தகுறைகளும் மனோவிகற்பங்களும் மானபிமானங்களும் காமக்குரோதாதி சேஷ்டைகளும் யோகதாரணை முதலான வேஷ்டைகளு மில்லாமல் மௌனமாய் ஆனந்தசாகரமாய் களித்திருப்பதே பயனென கோரக்கன் என்னைக்கு மித்தேகத்தை யழியாமல் வைத்திருப்பதாற் பிரயோசன மில்லையோவென,

கபீர் மலவுடலை மரிக்காமல் வைத்திருப்பதா லிந்தனு மோட்சமடையப் போகின்றதா அன்றி பிர்மாதி தேவர்களுக்கு மாயுட்பிரமாண மிருக்கையில் நீ செய்யோகத்தா லாக்கை மண்ணுகாமலிருக்குமா ஞானமில்லாயோகத்தாலோர் பிரயோசனமு மில்லவே யில்லையென கோரக்கன் யோகப்பயிற்சியால் சரமண்டலமாதி நாதங்களைக்கேட்டு உல்லாசமடைந்து சோதியைக் கண்டு உடலம் பூரித்து நாதாந்தவசமா யிருப்பதன்றி கூடுவிட்டுக் கூடுபாய்தல் முதலான அஷ்டசித்திகளைப் பெற்று ஆனந்தமா யிருக்கலாமேயென,



## அதற்கு கபீர் சொல்லும் பாடல்.



நாதகீதவோசைகேட்டு நாதனுநீகவிலுவாய்
சோதிதன்னைபேதமின்றி தூயதென்றறிபவன்
ஏதமின்றியார்கொனீ யிசைந்திடென்றுரைக்கவப்
போதமுற்றமாதவர்க்குப் புன்மையாகுமியோகமே 1

நாதநாதங்கேட்குநாத னவிலினிதிரண்டலோ
சோதிசோதிதன்னையறியுஞ் சோதியீதிரண்டலோ
பேதமாயிதிபேத் போதமாவதெங்ஙனிச்
சூதறிந்துகொள்ளுவாயெ னச்சொல்லிப்பின்மாதவன் 2

உலகமித்தையாயினுலக மெச்சும்வித்தைகற்பதேன்
உலகமித்தையாயினுலக மேவல்செய்யநினைவதேன்
உலகமித்தையாயினுலக வாழ்வைவேண்டிவாடலேன்
உலகமித்தையாயினுடல மழிவுறாதயோகமேன் 3

கூடுவிட்டுகூடுபாயின் விட்டக்கூடுபோன்றதக்
கூடலாதுவேறதோர் கூறுபிராணநீங்கியோர்
கூடுவிட்டுகூடுசேர்வ தன்றிகூடெடுத்திடா
வீடுசேர்வதுள்ளதோ விளம்பிடென்றுகூறினன். 4

மருந்தையுண்டுநோய்கடம்மை மாய்ப்பரிச்சகந்தனில்
மருந்தையுண்டுநோயைவேண்டு வார்கள்போலநீயேனோ
பெருந்தவங்கள்செய்துதேக பிணியைமாய்ப்பர்மா தவர்
பெருந்தவங்கள்செய்துதேக பிணிவளர்க்கவேண்டினுய்

அருந்தவங்கள்செய்வருலக மாள்வதற்குமானிடர்போல்
அருந்தவங்கள்செய்துவறுமை யடையவேண்டினோர்கள்
அருந்தவங்கள்செய்வர்நா னெனுமகந்தைநீங்கிட
அருந்தவங்கள்செய்துநீ யகந்தைவேண்டியலைகிறாய் 6

வேறு.

ஞானமின்றியவில்லறமருண் ஞானமின்றியதுறவரம்
ஞானமின்றியகல்வியுமுயர் ஞானமின்றியசெல்வமும்
ஞானமின்றியசரிதையும்மிகு ஞானமின்றியகிரியையும்
ஞானமின்றியவஷ்டசித்தியும் ஞாயமாவன்னியாயமே

ஞானமின்றியயோகமும்பர ஞானமின்றியபாகமும்
ஞானமின்றியதியாகமுஞ்சுய ஞானமின்றியபுந்தியும்
ஞானமின்றியஞானமுஞ்சுசி ஞானமின்றியதியானமும்
ஞானமின்றியநற்றவங்களும் ஞாயமாவன்னியாயமே.

ஞானமின்றியபுத்தியுமெழில் ஞானமின்றியபக்தியும்
ஞானமின்றியசித்தியுஞ்சுக ஞானமின்றியவித்தையும்
ஞானமின்றியசுத்தியுஞ்சுய ஞானமின்றியமுத்தியும்
ஞானமின்றியநற்செயங்களும் ஞாயமாவன்னியாயமே.

ஞானமின்றியசிரவணந்தெருள் ஞானமின்றியமனனமும்
ஞானமின்றியதெளிவுடன்முடிஞானமின்றியநிஷ்டையும்
ஞானமின்றியமோனமுஞ்சுடர் ஞானமின்றியவானமும்
ஞானமின்றியசாத்திரங்களும் ஞாயமாவன்னியாயமே

என்றிவ்வண்ணமா யுரைத்து ஓகோரக்க நாதரே பிர்மக்ஞானிகள் சர்வம் பிர்மமயமாய்ப்பார்த்து தம்மை யறிந்தவர்கட்கே கரங்களைச்சேர்த்து அகம்பாவம் வரா மற்காத்து சர்வசந்தேகங்களையும் போக்கி சின்மயமாய்த் தேஜோமயமாய் சித்களானந்தமாயிருப்பார்க ளென்றி தேகமே மேலானதென குமாரசுவாமிகளுடன் அத்திரி ஆங்கிரசன், சிருங்கி, பிருங்கி, மார்க்கண்டன்,வசிஷ்டன் புலஸ்தியன் முதலான முனிவர்களிற்சிறந்த அகஸ்திய முனிவர் பன்னிரெண்டாண்டு வாதித்து ஞானமே முக்தியமானதென்றறிந்தார் அன்றி ஓர் காலத்தில் பிர்மதேவன் தன நாயுளுக்கிணையானவ ரிவ்வுலகத்தில் யாரு மில் லையென் றிருமாப்புற் றரியின் பக்கலடைந் தெனக்குநிகரான ஆயுட்பெற்றவர்க ளிருக்கிறார்களோ வெனக்கேட்க பகவான் குஞ்சிறிப்புடனறைந்த கவி.

வேறு.

உலகஞ்படைத்திடுவோயாதலா லுனதாயுளுக்கணியி லை, பலயுகங்களி.யுறுவையுன்னுயர் பராக்ரமங்கனென் றெருவனும், சொலுவதாலொரு பயனிலேயுனைப்போன் றமேலோரிருப்பிடம், கலமதாகநாம் போய்வினவவந்நா தருன் புகழ்கூறுவார். 1

என்னவே பிரமனன்னதேசெயவு மெண்ணினன் கலுபூன்மேலரி, அன்னமேற்பிரம னார்ந்துபோயருள் விலாசரோமரிஷிதன்னையே, முன்னமேத்தவம் முனிவிழித்தரியை முந்தியேத்திநல் லயனையும், பின்னையேத்தி நீர் வந்தகாட்சிநற் பிரமவின்பினைத்தந்ததே. 2

என்றுமாமுனியைநோக்கி மாதவன் இன்பவீட்டினையடைந்தவர், உன்னதாயுளின் அளவிவற்குரைத் தருளுவாயெனவுமம்முனி, என்னதாயுளோர் பிரமன்மாய்ந்திடிலென துரோமமொன்றென்னகந், தன்னைவிட்டுதிர்ந்திடு மிவ்வண்ணமே தமியனுக்கைக் கேசங்களே. 3

கோடிமூன்றரை யுதிரமூன்றரைக் கோடிபிர்மரும் மாண்டபின், நாடியேயுனைத் தொழுதுமோக்ஷநா னண்ணுவேனெனவிண்டவும், கோடிபிரமரு மாளுமட்டுமுன் கூடியிருத்தலுக்கோர்சிறு, வீடுகட்டிடா தேனெனச்சொல மேன்மைமாதவ னோதுவான். 4

வீடுகட்டியிவ்வுடலைக்காப்பதேவிசிதமாயினேனதை யவிக், கூடுநீர்க்குமி ழாமிதற்கொரு கூடுவேண்டுவதோவுனை, நாடினோர்களில் வாக்கைமேனகை நண்ணுவார்களோபலயுகம், கூடியிருப்பதா லென்னமேன்மையோ கூறுவீர்தயவொடாளுவீர். 5

ஆளுவீரெனும் மாமுனிக்கருள் வாக்கியம்பல விபம்பிமா, வேளைதந்தரு ளாயனூர்முனி விடைகொடுத்தருளென்னவெந், நாளிலுன்றனைக் காண்பனோவென னநந்திடந்தெழின் முனிபெரு, மானையேத்திநற் றாளில்விழ்ந்துபின் மாயனுக்குவிடைதந்தனன். 6

தந்ததேயரியு மயனுடனருடஷ்டகோண ரிஷிவாழ்ந்திடும், விந்தையானதா மேவவேகல மேன்மைமாதவன் புளகமாய்த், தந்தையுமகனும் வந்தவாச்சரிய மென்னமோதமிய னறிகிலேன், பந்தநீக்தெனை யாளுமெந்தையுன் பாதமேகதி யென்றனன். 7

பாவயேசெயும் பண்பினேனுனைப் பார்க்கவென் செய்தேன்பாக்கியம், தேவரீரெனை யுன்னுவீரெனிற் றேவர்லோகநாவருவனே, பாவியேனிடந் தேவரீர்வரும் பண்பியாதியா னறிவதற், காவலாகினே னையனேயதையருள் செய்வாயெனக் கண்ணனும். 8

உன்னதாயுளினளவையானறிந்திடவுரைத்திடென் றேருதலே, என்னதாயுளின் முடிவுமீயறியாததோவுரைப்

பேனினி, என்னதாயுளோ வென்னகர்தனிலேயிருந்திடு மஷ்டகூன், அன்னதானதோ நிமிருறும்பொழு தாயு ளென்றனுக்கந்தமே. (9)

பெத்தக்கூனுனக்கெவண நீங்கிடும் புகலெனச் சொல்லினுன்றனற், புத்திரர்பலர் யாழ்குமாரெனின் போகும்ரோமரிஷிதன்னுயிர், சத்தரோமருற்பவமெடுத் திடிற் றமியனே னுனதுகருணையால், சுத்தபிர்மவுருவா யிருப்பனெனத் தாயமாயனிவை சொல்லுவான். (10)

பெரியவாயுனைப் படைத்தவாவிரு பேதவேதையை யுடைத்தவா, பிரமமோருருவானவாவருட் பேறெனும் பொருளானவா, சருமமாகு மித்தேகமோடுநீர் தரணி தன்னிலுற்றிடுமள, வொருமையாகவோர் பர்னசாலையி லுகந்திருத்தியென் றோதவே (11)

நீரின்மேலெழுத்தாகு மிவ்வுடல னித்யமென்றிதற் கிதமதாய்ப், பாரின்மீதிலோர் பர்னசாலையைப் பண்ண வேபடிய னெண்ணினல், நீரெலாவுயிரைக் காத்திடுங் கடனிச்சய மிலாதாகுமே, தாரமார்பனேமேக வண்ண னே சங்குசக்ரனே யென்றுபின். (12)

உடலைநானென வுன்னியேயிதை யொருமையோடு நான்காத்திடின், மடமைநீங்குமோ வென்னதாயுளோர் மாதரையேலது பெரியதோ, சடமதாகு மிவ்வாக்கை நானெனச் சாற்றினேபிரம நானெனத், திடமதாயிருப் பானென்றோதிய தீக்கையைமறப் பாக்குமே. (13)

நானெனுமக முடையபேர்க்கிரு ணரகமின்றியருள் வாய்க்குமோ, தீனரேத்திடு ஞானவாதவா தேவதேவ மிருமாதவக், ஞானமென்பதிற் குரையகந்தனை நாஸ்தி செய்த லென்றோதின, யானதா வுடற்கிடமியற்றி லேனை யனேவென வுரைத்தனன். (14)

உரைத்திடுமிக-வாயுளுள்ளமா முனிவனுக்குபசார மாம், பரத்தைமேவிடும் மோனவார்த்தைகள் பலவுரைத் தரிமுனிவனே, இருத்தியிவ்விடம் போவநாமென விசை க்கமாமுனியு மின்னமோர், தரத்திலுங்களைக் காண்ப தென்றெனச் சரணமாயிரஞ் செய்தனன், (15)

சரணமாயிரஞ் செய்தபின்னர்போ மென்றுசாற்ற வேமாயவன், கரணமற்றவா புரணமற்றவா காட்சிபெற் றருடாட்சியா, பரணமற்றவாமரணமற்றவாபத்தியொடு நற்சித்தியா, பரணமுற்றவா யிங்கிருத்தியே லென்றுதம் பதஞ் சேர்ந்தரோ. (16)

சேர்ந்துகாரண னயனைநோக்கினன் றேவதேவ னென்றுங்களி, கூர்ந்தெனக்கினை யாயுள்ளபேர் கூறி னில்லையென்றோதினுய், தேர்ந்துஞானமுற் றதுவுமின்ற ருள் சேர்ந்ததுமடியார்களே, சார்ந்துமின்பமுற் றதுவுநீ முனஞ் செய்தபோபல மென்றனன். (17)

வேறு.

நானெனு மகங்காரத்தாற் பரனிலை நண்ணினர்யார்
நானெனு மகங்காரத்தா லின்பினை நண்ணினர்யார்
நானெனு மகங்காரத்தா னரகத்தை யடைந்தாரன்றி
நானெனு மகங்காரத்தா னல்லுணாவடைந்தாருண்டோ

அகமதைவிடுவாயென்றே யரிசொலவயனுந்தாழ்ந்தென்
னகமதைநீக்கியாண்ட வண்ணலேநின்னுற்றாய
புகழுடனருளும்பெற்றேன் புராதனர்சேவைபெற்றேன்
இகபரத்திச்சைபற்றே னின்பவீடடைந்தேனென்றான்.

ஆதலாற்கோரக்காநீ யகந்தையழித்துஞான
மாதபோதனரைப்போற்றி மகிழ்வுடனிருத்தியென்று
போதனைசெய்டப்பின்னும் புகலுவன்சித்தநாதன்
நீதிநீரெனக்குறைத்த னியாயமன்றெனவிசைப்பான்

ஓ கபீர் அட்சரலட்சணமுதல் அவஸ்தைப்பிரயோ கம் ஈறாக ஆகிய 64-கலைக்ஞானங்களை அறிந்த என்முன் சின்னஞ்சிறுவனுகிய நீ அண்டத்தைக்குஞ்சி யேளனம் செய்வதுபோ லேதேதோ சொல்ல ஆரம்பித்தாய் இது பிரமாவை யெதிர்த்த பிராமணனைப்போ லிருக் கின்ற தென்றாற்ற, கபீர் ஓ கோரக்கனே அறுபத்து நான்கு சித்திகளிற்றேர்ந்த சித்தனென்றுன்மத்தமடைய வேண்டாம். ஏனெனி லுன்னைப்போன்ற சகலவித்தை களிலுந்தேர்ந்த நவகோடி சித்தர்களிருப்பதன்றி பிர்ம சிருஷ்டிக் கெதிர் சிருஷ்டிசெய்யும் அனேக ரிஷீஸ்வரர் களு மிருக்கிறார்களிதை நீ நன்றுயறிந்தவனே முற்காலத் தில் சற்று விஸ்வாமித்திர ரகங்கொண்டதாற் றேவசபை க்குவரத் தடைபட்டு நெடுநாள் தலைமறைவாயிருக்க நேரிட்டது அன்றி பிர்மா சிருஷ்டி கர்த்தனுயிருந்தும் குற்றஞ்செய்ததா லோர்தலை வெட்டுண்டு அதைச்சிருஷ் டித்துக்கொள்ளத் தன்னலாகாமற் றாழ்வடைந்தானுதை லாற் பிர்மாதி தேவர்களாயினுங் குற்றஞ் செய்வாராயின் ஜகதீஸ்வரனுடைய ஆக்கினைக் குள்ளாகவேண்டும். குறை செய்யாதோர்க்கென்றும் பயமில்லை. இது வுண்மையான தால் நீ மகாசித்தனென் றகம்மேலிட்டு தபோதனர் களைப் பங்கப்படுத்திக் கொண்டுவந்த காரணத்தால் குற்

றத்துக்குட்பட்டாயிதனிவர்த்தியாம்பொருட்டெங்களா சானுக்குப் பனிரெண்டாண்டு பணிவிடை செய்துக் கொண் டிருவென்றுரைப்பதைக்கேட்ட ராமானந்த ஸ்வாமிகள் கபீரைநோக்கி, அப்பா கபீர் நல்லோருக்கு நெல்லெத்தனை ஈனச்சொல்லே மேலான தண்டனையாம் அப்படியிருக்க இப்படி சொல்லலாமா வென்றறைந்த தைக்கேட்ட கோரக்கன் நல்லதாகட்டும் இக்கபீரைச் சிலகாலில் விசாரித்துக் கொள்ளுவேனென்று மாயமாய் மறைந்து தன்னிருப்பிடஞ் சேர்ந்து, கபீரை வெல்ல வேண்டுமென்னும் காஞ்சனையால் மகா வுக்கிரமான தபஞ்செய்யத் தொடங்கினன். இங்கே ராமானந்தஸ்வாமிகள் கோரக்நாதன் கபீருக்கச்சமுற்றுமறைந்துபோனு னவனை ஓர் கடிகையிற் செயித்த கபீர் நமக்கு மாணக் கனுயிருக்க என்னதவஞ் செய்தேமோ எது பாக்கியஞ் செய்தேமோவென்று கபீரைப் பலதர மாலிங்கனஞ் செய்துகொண் டென் கண்மணியே உன்னுலல்லவோ கொடிய கோரக்கனைச் செயித்தேன் ஆசானென்னும் பெயரையும் வகித்தேன். உன் பெருமை யறியாதிகழ்ந்த என்னறிவீனத்தை க்ஷமித்துக்கொள்ள வேண்டுமென் றிரந்து கூறும்போது, கபீர் தேசிகரினடிகளிற் றன் முடியைச்சாய்த்து ஓ என்சத்குருநாதனே மெய்ஞ்ஞான போதனே வும்முடைய ஆசிர்வாதபலத்தாற் கோரக்கனை வென்றதன்றி இவ்வேழைக் குழந்தையால் வெல்லக் கூடுமோ உமது மகிமையை நீரறியாமலென்னைப் புகழ் தல் நீதியாகுமா? ஓ எனையாட்கொண்ட தெய்வமே முற்றிலுமென்னை இரட்சித்தருள வேண்டுமெனத் தொழுதேத்தும்போது, ராமானந்தஸ்வாமிகள்சந்தோஷசாக ரத்தில் மூழ்கினவராய் கபீர் தாய் தந்தையை யழைப்பித்து கபீரகப்பட்டதுமுதற் சகலமுங் கேட்டறிந்து மகாத்மாவெனத்தெரிந்து ஓதமால் நீசெய்த பாக்கியமே பாக்கியம் உன் மைந்தனுடையயோக்கியமேயோக்கியம் நான் செய்த சிலாக்கியமே சிலாக்கியம் இவன் வாய் மொழிகளே மகா வாக்கியம் ஆஹா; பன்றி பல குட்டிகள் போட்டதாற் பிரயோசனமென்ன யானையின் குட்டி யொன்றே போதும் பல நட்சத்திரங்களாற் பிரகாச முண்டாகாது ஒரு சந்திரனுலேயே பிரகாசமுண்டாகும் அதுபோல் உலகத்திலனேக மைந்தர்களைப் பெறுகிற தைப் பார்க்கிலும் இப்பேர்க்கொத்த ஒரு குழவியாற் சகல லாபங்களையும் பெறலாமெனப் புகழ்ந்து மிகவும் மனமகிழ்ந்து ஓர் கிமைநேரமுங் கபீரை மறவாமலிருந் தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் நாபாஜி சித்தர் சொல்லத் தொடங்கினர்.

கபீர் கோரக்கனைவென்ற அத்தியாயம்
முற்றிற்று.

பத்தாவது
## கபீர் விவாக அத்தியாயம்.

இப்பால் தமாலுஞ் ஜிஜ்ஜாபீபியும் ராமானந்தசுவாமிகளின் திருவடிகளிற் பணிந்து விடைபெற்றுக். கொண்டு கபீரைநோக்கி அப்பா புத்திர சிகாமணி வீட்டுக்கு வந் தெங்களைப் புனிதராக்கக் கடவாயென்று நவில, கபீர் ராமானந்த ஸ்வாமிகளின் திருவடிகளிற் பணிந்து, அடியேனுக்கென்ன கட்டளையென்று அஞ்சலியஸ்தனுய் நிற்க, ஸ்வாமிகள் காலைமாலைவந்து தரிசனந்தந்து போமென்று திருவாய் மலர்ந்தருள, கபீர் நாம் செய்த பாக்கியமே பாக்கியமென்று சிரசாஷ்டாங்கமாய் வந்தனம் புரிந்து மிகவும் பரிந்து தந்தை தாயுடன்போயாசாரியர் கட்டளைப்படி அந்திசந்தி வந்து தேசிகரைத்தாழ்ந்து பல சங்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டு நாள் கழிக்கத் தொடங்கினர். பின்பு கபீர் பதினறு வயதையடையவே பகவான்கபீருக்குரம்பாவதாரமான சுந்தராவை பாணிக்கிரகணம் செய்யவெண்டுமென்றுன்னி ஒருநாள் தமால் கனவில்லடைந்து ஓ தமால் உனது மைந்தனுக்கு மணஞ் செய்யப் பேசின் சுந்தராவென்னும் பெண்ணின் தாய் தந்தையரை நேசித்து கலியாண காரியத்தை சீக்கிரம் முடிப்பாயென் றறைந்து மறைந்துபோக உடனே தமால்விழித்து தன் நாயகியை விளித்து அடிபெண்ணே நமது கான்முளைக்கு வேட்டல் செய்யும்படியாகக் கடவுளென் கனவில்வந் துரைத்தாராதலால் முன் நமது தனுசனுக்குத் தங்கள் புத்திரியை யளிக்கின்றேமென வாக்கைக் கொடுத்தவர்கள்பாற் போய்க்கேட்டவர்க ளபிப்பிராயமறிந்து வாவென்றுரைக்க, ஜிஜ்ஜாபீபி மகா பாக்கியமென்று வைகறையி லெழுந்துபோய் சம்பந்தியின் வீட்டை யடைந்து க்ஷேமவார்த்தைக ளாடினபின் பெண்ணைக்குறித்துப்பேச, அவர்கள் சுன்னத்துசெய்து கொள்ளாப் பிரஷ்டனுக்குக் கொடுப்பதில்லை யென்று மறுக்க,

ஜிஜ்ஜாபீபி அதற்குத்தரஞ் சொல்லக்கூடாக் குறையால் வாட்டத்துடன் தன் வீட்டையடைந்து தொழுனனைத்தொழுது சம்பந்திகளின் வாய்மையை யுரைக்கக்கேட்ட தமால் வேஷ்டைமேலிட் டினியென்ன செய்யலா மெல்லாவற்றிற்கும் பகவானே முன்னின்று முடிப்பிக்க வேண்டுமென்று ஆகுலத்துடன் நாட்களைக் கழிக்கத்தொடங்கினர். பின்பு ரம்பாவதாரமான சுந்தரா

வின் தந்தைதாய் பருவமடைந்த நமது பெண்ணை யார்க்காவது வதுவைசெய்துக் கொடுக்க வேண்டுமென் றுன்னி கன்னியைக்கேட்கும் பலபேர்க்குள் ஒருவனுக்குக் கொடுக்கச் சம்மதித்து மங்கலத்துக்குரிய சகல சாமக்கிரிகைகளையுஞ் சேகரஞ்செய்யத் தொடங்கினர்க ளன்றி இரவு பகவானேர் பகிரியாய் அவர்களின் கனவிலடைந்து மாதை கபீருக்கின்றி மற்றவர்க் களிப்பீரே லுமது வம்மிசம் நாசமாய்ப் போகுமென்றுரைத்துமறைய உடனே சதிபதிகளிருவருந் துயிலொழிந்து தங்கள் கண்டகனவை ஒருவரோடொருவ ருரைத்து சாவி அச்சமுற்றதிகாலைபிற் றன்னினத்தோரைக் கூவித் தாங்கள்கண்ட சொற்பனத்தைப் புகல இனத்தோர் கடவுள்வந் துங்கள் சொற்பனத்திற் கபீருக்களிக்கச் சாதித்தாலும் நமது மரபுக்கோர் குறைவரச் செய்பலாகாதென்று மறுக்க அவ்வசனங்களைக்கேட்ட சுந்தரா மிகவும் முனிவுடன் சொல்லும் மொழிகளானது முன்னம் கபீருக் கென்னை மனைவியாக வாக்கை யளித்து மற்றொருவனுக்கு மணஞ்செய்பக் கருதுவது மஹா குற்றமாகும் அன்றி அக்கபீரைநீக்கி மற்றொருவரை நான் விவாகஞ்செய்ய மாட்டேனெனெனின் கபீரை நமக்குக் கணவனெனத் தீர்மானித்த நான் வேறு புருடனை மணஞ்செய்ய ஆசிப்பேனாகில் பெண்தன்மைக்குரிய கற்பழிந்து நிறைபத்துக் குள்ளாவேன் பதிவிரதையிற்சிறந்த சதியானவ ளொருவனைபதியெனத் தீர்மானித்து பின்பனுமானித்து வேறொருவனைக் கருதுவாளா கருதுபவள் கற்புள்ளவளாவாளா இவனே நமக்குகந்த மணாளனெனச்சிந்தித்து வந்தித்து வேறெண்ணங் கொள்வாளாகில் வேசைக்குங் கீழ்மையான விபசாரியிலு மபசாரியிலு மபசாரியென்றே சொல்லவேண்டுமென்று நவில்கிறதைக்கேட்ட சகலரு மாச்சரியங்கொண் டிப்பெண் பருவமடைந் தோராண்டாகவில்லை இப்போதே சதியென்றும் பதியென்றும் வாஞ்சை யுடன் பேசுகிறா ளிதை நன்றுயோசிக்கையில் விபரீதமாக விருக்கின்றதென் றுரையும்போது அக்கன்னிகை இனத்தோரைநோக்கி ஓ-புனிதர்களே ஒருவனை மணவாளனென் றுன்னிப் பின்பொருவனை நண்ணின மங்கையி னங்கையினும் சலபானஞ் செய்பவேகூடாது ஏனெனில்இவனே நமக்குக் கணவனெனப்பாவித்து மனதாரச் சேவித்து தன்னுக்கையை யவனுக்குத் தாரைவார்த்து ஐக்யமான பின் மற்றொருவனை வாஞ்சிப்பாளாகி லவனை நான்கறிவுள்ளமிருகங்களி லிழிவான கர்த்தபமென்றே உன்னவேண்டும் ஐந்தறிவுள்ள மனித ஜென்மமெனப் புகலத் தகாது பத்மினி தன்னுயிர் நீங்கினுமொரு புருஷனையன்றி மறு புருஷனைவாஞ்சிக்காள் கனவிலுங் கடிசெயாளினையாளுத்தமிக்கோர் புருஷனேயாம் சித்தினிக்குப் பல புருஷர்களேயாம் இனி பலவாறு நான்செப்புதலாற் பயனின்று முடிவு அக்கபீரையன்றி வேறு புருஷனை என்னுயுள்பரியந்த மிச்சிப்பதேயில்லை இது சத்தியவசனமாகும் கபீரைவிட மற்றுமுள்ள மாந்தர்களெல்லாம் எனக்குத் தந்தைகளுஞ் சகோதரர்களுமாகவேண்டுமாதலால் அக்கபீருக்கே என்னை மன்றல் செய்யவேண்டும்.

கபீரே எனக்குப் பதியன்றி வேறுகதி யில்லையென்றியம்ப இனத்தோர் ஓ சுந்தரா தாய் தந்தையரும் உற்றோரும்மற்றோருஞ் சேர்ந்து யாருக்கு மணஞ்செய்கிறார்களோ அவனையே காவலனெனப் பாவிக்க வேண்டுமேயல்லது நீயா யோர்புருடனைக் கருதுவது மகா குற்றமாயிற்றே உன்னால் பந்துக்களின் மானம் போயிற்றே இனியிப்படி பேசாமல் பெண்மைக்குரிய நாணத்துட னிருப்பாயெவ விளம்ப சுந்தரா எப்போதென் தாய்தந்தைகபீருக்கு என்னை வேட்டல்செய்ய வாக்கை யளித்தாரோ அன்றே நானவருக்குரிய மனைவியாய் விட்டேன் ஆனபின் சொட்டேன் மன மணமே மணமன்றி இனமணத்தாலோர் பிரயோசனமுமில்லை பத்தினிக்கோர் பதியாம் இப்பண்புளாளே நற்சதியாம் கபீரைக் கோருவதென் விதியாம் விதியின்படி நடப்பதே மதியாம் ஆதலால் நீங்களென்விரதத்தைக் கெடுக்காதீர்கள் கெடுத்தெனக்கிடர் கொடுக்காதீர்கள் என்கிற வார்த்தைக ளாடும்போது இனத்தோர் ஓ-ஓ அக்கபீர் இவளழகுக்கா மோகித் தேதோ வித்தையைப் பிரயோகித்ததுபோற் றோன்றுகின்றதினி இவள்யார் மொழியையும் கேட்கமாட்டாள் தாய் தந்தையரையும் பார்க்கமாட்டாளென்றறைந்தவள் தாய் தந்தையரை நோக்கி இவளை வெகு பத்திரமாய் காக்க வேண்டுமென் றுரைத்துத் தங்கள் வீட்டை யடைந்தார்கள் பின்பச் சுந்தராவின் தந்தை தாய் புத்திரியைநோக்கி அடி சுந்தரா நீ யென்ன உன் வயதென்ன உன் விவேகமென்ன நமது வர்னத்திற்கு விகற்பமாய் நடக்கும் இத்துமதத்தைச் சார்ந்தவனை வாஞ்சித்தாய் உன் வசனம் கேட்கும் பலருக்கும் நகைக்கிடமாய்விட்டது எங்களுக்கிருந்த பெருமைபோய்விட்டது உன்னெண்ண மிகவும் கெட்டது இனத்தோர் மனதைச்சுட்டது அடி துர்மார்க்கி பெண்மைக்குரிய நாணத்தைநீக்கி வாயில்வந்தபடி பிதற்றுகின்றாய் ஈனவார்த்தைகளும் புகன்றாய்வேசியாய் புறப்பட்டாய் நீ கெட்டாய் இனி இவ்வார்த்தைகளைக் கூசாமல் பேசுவையாகில் இரண்டு துண்டாகவெட்டிவிடுவோம் வாயில்வந்தபடி திட்டிவிடுவோம் என்றதட்டி ஓரறையிலடைத்துக் காவல்வைத்தார்கள்.

பின்பந்த சுந்தரா பகவானைநோக்கித் தவஞ்செய்ய
த்தொடங்கினுள். இப்படி சிலநாள் கழிய, ஒருநாள் பக
வானெர் பகீரி வடிவாய் பலமாணுக்கர்சூழ சுந்தராவின்
வீட்டையடைந் தவள் தங்லைதபணிய ஆசீர்வதித் தெங்க
ளுக் குன்னுல் விருந்துசெய்யக் கூடுமோவென் அதற்
கவன் தடையின்றி அனைவருமே வீட்டிலுண்டு களிப்பு
டன் போசலாமென மாயாபகீரி ஆ-ஆ இவ்வாரணுசி
யில் நமது குலத்தில் சிறந்த தர்மப்பிரபு தமாலொருவ
னே யிருக்கிறுனென நினைத்திருந்தே னவனைவிட நீ மே
லானவனு யிருக்கின்று யவனுக்கு சம்பந்தியான உன்பா
லும் நற்குணமிருப்பதற் கையமில்லையென அவ்வார்த்
தையைக்கேட்ட சம்பந்தி நானப்பிரஷ்டனுக் கெப்படி
சம்பந்தியாவே னினி யவன் நாமத்தை என் வீட்டிலிரு
ந்துவெளிப்படும் வரையில் சொல்லாதீர்கள் கவனம் வை
த்துக்கொள்ளுமென பகீரி தமால் மிகவும் சிரேஷ்டனு
யிருக்க பிரஷ்டனென்றே னுரைத்தீரென சம்பந்திநமது
குலமுறை தர்மத்தைக்கடந்து சுன்னத்துச் செய்துக்
கொள்ளாக் கபீரெண்ணப்படி நடந்து இந்து மதத்தை
யடைந்து குலத்தோர்பால் வருவதற்கிடைந்து இருப்ப
வன் பிரஷ்டனல்லவோ வென பகீரி தமாலிடம் நாங்க
ளனைவரு மைந்தாறுண்டுக்கு முன்போயிருந்தோ மப்
போழ்தவ னெங்களைவேண்டி வருந்திடப் புசிக்குந்தறு
வாயி லோர் பகீரிவந்து தமால் புத்திரன் சுன்னத்து செ
ய்துக்கொள்ளா மிலேச்சனுயிருக்கின்று னிவன் வீட்டி
லன்னமுண்ணத் தகாதென்று மறுக்க நாங்களும் நிச்ச
யந்தானென் றுண்ணுதெழுந்த தருணத்திற் கபீருடனே
சுன்னத்து செய்துக்கொண் டெங்களுக் கன்னமூட்டினு
ன் பின்பு நாங்களனைவருங் கபீரைநோக்கி நீ இந்துக்க
ளைப்போல் திருமணியணிந்துக் கொள்ள தகாதென்று
ரைக்க அன்றுடன் திலகமு மணியாமல் சந்தனமணிந்து
அரிநாராயணுவெனத் தியானிக்காம லல்லாவையேதியா
னித்துக் கொண்டிருக்கிறு னிதை நீ ரறியமாட்டீரோ
இனியேன் கபீருக்குப் புத்திரியைத் தாமாட்டீரோ?
வென்றனந்தம் பகீரிகளைக் கொண்டவன் மனதைக்கரை
த்து இனியவார்த்தைகளுரைத்து கபீருக்களிக்கும் படி
யாய்ச்செய்து அவனுக்குற்ற சந்தேகங்களைக் கொய்து
துலுக்கரையும் காஜி மௌலியையும் வரவழைத்து அவ
ர்களுக்குமுன் னுரைத்தவண்ண முரைத்து உங்களனை
வோருக்குஞ் சுந்தராவைக் கபீருக்குக்கொடுத்து வேட்
டல்செய்ய சம்மதிதானே வெனக்கேட்டு மௌலிமுன்
னிந்துமதத்தைச்சார்ந்து இப்போது நம்முடன் சேர்ந்து
பெண்கேட்டால் கொடுக்கலாமாவென பகீரி இந்துமதத்
தைவிடுத்து நம்மதத்தை யடுத்து வெகுநாளாயிற்றேயெ
ன, மௌலி அவன் சுன்னத்து செய்துக்கொண்ட துன்
மைதானுவென பகீரி சுன்னத் சுன்னத்தென்று பலதரங்
கேட்கின்றீர் நங்குலத்துக் காதியான ஆதாமுக்குச் சுன்
னத்து செய்ததுண்டோவென மௌலி ஆதாமுக்கில்லா
விடினு மவர் பின்னுண்டான இப்ராயீம் பயம்பர்காலத்
திலிருந்து நம்பரம்பரைக் குண்டாச்சுதல்லவோ வென
பகீரி, ஷாம், காபூல், பகார, அரப, பஞ்சாப், டில்லி,
ரூம்முதலான சப்தநகரங்களிற் சிறந்த நமது சக்ரவர்த்
தியின் ஸ்தானமான ரூமநகருக் கிறைவனுகச் செய்யும்
அரையர்களெல்லா மங்கலனுடைய பரிசங்கொள்ளாமல்
சுன்னத்துஞ் செய்துக்கொள்ளாமல் சிம்மாசன மேறி
சகலர்மீது மாக்கினைசெலுத்த வில்லையோ நம்முடைய
மர்மத்தை நாம் வெளிப்படுத்தல் தர்மமோ இப்ராயீம்
பயம்பர் இளைய மனைவிக்குச் செய்துகொடுத்த வாக்கை
க்கடந்தபடியா லிவ்வாக்கினைக்கு நாமனைவோரு முட்ப
ட்டு நடக்கும்படியாய் நேரிட்ட தப்படியே கபீரு முட்
பட்டான் இனியவனுக்குச் சுந்தராவை விவாகஞ் செய்
கிறதை மறுத்து தமாலை வருத்துவது தகாதென,
மௌலி, தாய்தந்தையர் நிச்சயிக்காமுன்ன மொருவனை
யிச்சிப்பவள் மணத்துக்குவர வெங்களுக் கிஷ்டமில்லவே
யில்லையென,

பகீரி நமது பரம்பரைக்கு முதல்வனுன இஸ்மாயி
ல் பயம்பர் மாதாவாகிய ஆஜராவென்னு முத்தமி தன்
தாய்தந்தை உற்றோர் மற்றோரும் மறுத்துக் கேட்காமல்
இப்பிராயீம் பயம்பரை தன்னெண்ணப்படி இச்சித்தவர்
பின்னேகவில்லையா? அப்படிசெய்ததா லாஜராவை நாம்
வெறுக்கலாமோ? அன்றி நமக்குப் பூர்வ தாயாதிகளா
ன இசாக் பயம்பர் பரம்பரையோ ரிக்காலத்திலும்
ஸ்திரீ யெவனை யிச்சிக்கின்றுளோ அவனுக்கே மணஞ்
செய்துக் கொடுக்கவேண்டுமென்று விதித்திருக்கிறுர்க
ளல்லவோ அன்றி, ஓராடவனை யிச்சித்தவட்கு வேறொ
ருபுருஷனை மணஞ்செய்தல் மகா குற்றமல்லவோ சகல
மும் தெரிந்த உமக்கும் விரித்துச் சொல்லவோ வென்
றனேக நீதிவாக்கியங்களை யுரைத்து எல்லோரையும்
மாயையால் மயக்கி சம்மதிக்கச்செய்து சந்தேகங்களைக்
கொய்து மன்றல்செய்யும் நாள் நாளைக்கெனத் தீர்மானி
த்து தன்னுடன்வந்த பகீரிகளை அவ்விடம்விட்டுத் தான்
பேர்ந்து தமால் வீட்டைச்சேர்ந்து தமாலைக்கூவி அவன்
வணங்க இணங்கி, ஓ தமால் நீங்கள் கபீருக்கு வேட்
டல்செய்யக்கேட்ட சுந்தராவுக்கு நாளைக்கு வதுவையா
மதற்குங்களை இன்றைக்கே வரும்படியாய்ச் சொன்னர்
கள் நானச் சுந்தராவுக்கு பெரிய தந்தையாக வேண்டு

மென்று நவிலக்கேட்டு தமாலும் ஜிஜாபீயும் மிகவும் வாட்டமுற் றையையோ அந்த சுந்தரவதியை வேறொருவனுக்களித்தால் நமது மைந்தனுக்குகந்த ரதியகப்படுவதரிதென்று கண்ணீரொழுக அழும்போது மாயாவினோதனை பகவான் ஓ தமால் சுபக்காரியத்துக் கழைத்தால் ஏனழுகிறீர் பிர்ம்மா நினைத்தால் ஆயுளுக்குக் குறைவில்லாததுபோல நானினைத்தால்அப்பெண்ணை உமததனுசனுக்கே கொடுப்பிப்பேன் அப்படி கொடுப்பித்தா லெனக்கென்ன கொடுக்கிறீரென அவ்வாக்கியத்தைக் கேட்ட தமால் மிகவுஞ் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவனுகப் பெண்ணை எங்கள் கான்முளைக் களிப்பீரே லென்னுயுள் பரியந்தம் முகக்கேவல்செய்கிறே னீதுறுதிவசன மென்றியம்ப மாயா துலுக்க னீதுண்மையாயி னின்றுடன் விஷ்ணு நாமத்தை துதியாம லிருங்களென அவ்வசனத்தைக்கேட்ட கபீர் அத்துலுக்கனை நோக்கி அப்பெண்ணும் வேண்டாம் உங்கள் சம்பந்தமும் வேண்டாம் போ போவென் றிசைக்க, நாராயணனுகிய பகிரி முன்னம்வாக்கையளித்து பின்போர் போக்கைக் காட்டுவோர் படுபோக்கிரிகளல்லவா உனக்கே அப்பெண்ணைக் கொடுப்பிப்பேன் என்வாக்கை மெய்ப்பிப்பேன் நீங்க ளெனக்கின்றுட னேவல் செய்யவேண்டுமென கபீர் என் தந்தை வாக்களித்தபடி ஏவல் செய்வோமல்லது ஸ்ரீ ராமநாமத்தைத் துதிக்காம லிருக்கமாட்டோமென பகிரி நிருபமான பரப்பிரம்மத்தைவிட்டு ஓர் மனிதன்பேரையுன்னிக் கேட்டு நிறைபத்துக் காளாவதழகோவென கபீர் என்னுண்டவனை மனிதனென் றிப்போ துரைத்ததுபோலினியுரைப்பையாயி னுன் மென்னியைக்கடித் துதிரங் குடிப்பேனென மாயாதாரி தன்மனைவியை இராக்கதனெடுத்துப்போக சீதா சீதாவென்றடவியி லலைந்து திரிந்த அறிவில்லா மானிடனை தெய்வமென நம்ப லறிவீனமல்லவோ உள்ளதைச் சொன்னால் சள்ளென்று விழுவதழகோவென கபீர் அம்மொழியைக்கேட் டதிக கோபதிப்தனுக பெரிங் தப்பகிரியின்மேல் வீழ்ந் தடா இனியரைக்கண மீண்டிருப்பையாயி னெமலோக தரிசனத்துக் கேகுவாயென கபடநாடகனுகிய பகவான் அடா பிரஷ்டப்பயலே துஷ்டப்பயலே நான் சுபத்தைச்செய்யநினைத்தால் விபத்துசெய்யவந்தா யச்சுந்தராவினுடன் கூடச் சுகமனுபவிப்பது நானு நீயா அடாபேயா வென்றேசிப் பேசத் தொடங்கினர்.

கபீர் அச்சுந்தராவையுந் தீண்டே னவட்கா யுன்னையும்வேண்டேனினி வம்புசெய்யாம லுன்னிருப்பிடஞ் சேரென, அவ்வேஷதாரி, அச்சுந்தராவை நீ மிகவும் வேண்டவும் அவட்கா யென்னடிகளைத் தீண்டவும் செய்கிறேன் பாரென கபீர் குலுங்கநகைத்து ஆஹாயென்ன ஆச்சரியமான வார்த்தையைப் புகன்றாயவளைத் தீண்டேனென்று மவட்காயுன்னை வேண்டேனென்று முறுதிகூறல் வேண்டுமோவென அச்சுதன் பேசப் பேசப் பிழையென்பது போல இவனச்சுந்தராவைத் தீண்டேனென்று சத்தியஞ் செய்தாலுஞ் செய்வா னிவனெண்ணத்தை ஒருவரால் மாற்றக்கூடியதல்ல இவனை அங்கு கொண்டு போகும்படியான சூட்சிசெய்ய வேண்டுமென்றுயோசித்து நாரதரை நினைத்து ஓ யாழ்வல்லோனே! நீயும் பரமபாகவதர்களும் ராமானந்த ஸ்வாமிகளும் மாணுக்கருமாய் வாருங்களென அப்படியே அவர்கள் சூரியனஸ்தமனமாகுஞ்சமயத்தில் ராமானந்த ஸ்வாமிகளின்வடிவுடன் பலமாணுக்கர்சூழ தமால்வீட்டையடைந்து ஓ கபீர் ஓ கபீரெனக்கூவ உடனே சத்குரு ஸ்வாமிகளின் குரலைக்கேட்ட கபீர் திடுக்கென்றோடிவந்து ஸ்வாமிகளின் திருவடிகளிற்பணிந்து நாங்க ளின்றுசெய்த பாக்கியமே பாக்கியமென்று இல்லிற்கொண்டுபோ யுபசாரஞ்செய்யத்தொடங்கின ரப்போது ராமானந்தஸ்வாமிகளின் தமாலைநோக்கி நாளைய உதயத்திலுமது மைந்தனுக்கு விவாகமெனக் கேட்ட நீங்களேன் இப்படி திருக்கின்றீர்களென, தமால் மணப்பெண்ணின் பெரிய தந்தைவந் திக்கபீருக் கப்பெண்ணை மன்றல் செய்யப்பேசி அவமரியாதை யடைந்து நிற்கின்றானினி அவ்வனிதை கிடைத்தலரிதென ராமானந்தஸ்வாமிகள் முன்னங் கொடுப்பதாக வாக்களித்து பின் யெப்படி மறுக்கின்றார்களென்னுடன் வாரும் நானேபேசி முடிப்பிக்கின்றேனென, தமாலிச்சாதுக்கள் கூட்டத்துட னங்குசென்று லவமரியாதை நேரிடுமென ஸ்வாமிகளப்படியாவென்று பகிரி வேடங்களைப்பூண்டு வாரணசியிராசனை அழைப்பித்து கபீருக்கே அப்பெண்ணை மணம்செய்விக்கிறே னென்றோர் சிஷனை இராஜன்பாலனுப்ப உடனே பகவான் மாயையால் வாரணசியினிறைவன் போலாகி பல தாளமேளங்கள் தாம் தாமென்றுமுழங்க தமால் வீட்டையடைந்து சமஸ்த சம்பிரமத்துடன் ராமானந்த ஸ்வாமிகளைக் கண்டு வணங்கி நிற்க,

மாயா ராமானந்த ஸ்வாமிகள் மாயா இறைவனை நோக்கி எனக்குகந்த மாணுக்கனுகிய கபீரை நாமனைவோரும்அழைத்துக்கொண்டுபோய்விவாகஞ்செய்துவரலாமென்று கபீரை மணக்கோலஞ்செய்து அனேக துலுக்கர் சூழப்பட்டு சுந்தராவின் வீட்டையடைந்துஅங்கிருக்கும் சகலருக்கும் தங்களுக்கு மரியாதைசெய்துவணங்க இதோ இராஜன் வந்துவிட்டானென் றிணங்க சுந்த

ராவைச் சிங்காரித்து இருவர்க்குஞ் செய்யவேண்டியசட
ங்குகளெல்லாஞ்செய்து சூரியோதயமானவுடன் விவாக
த்தைமுடித்து தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு தமால் களிப்படைந்து சுந்தராவை யழைத்
துக்கொண்டு தன் வீடுசேர்ந்து சகல பந்து ஜனங்களுக்
கும் விருந்துசெய்து ஆனந்தமாயிருந்தார் இவரிப்படி
யிருக்க கபீர் ராமானந்த ஸ்வாமிகளின் தரிசனத்துக்கெ
ன்றும் போவதுபோ லன்றும்போக அப்போது சுந்தரா
கபீரைவணங்கி ஓ ஸ்வாமி ராமானந்த ஸ்வாமிகளின் தரி
சனஞ்செய்ய வெகுநாளாய் வாஞ்சித்திருக்கிறேன் இன்
றைக்கவருடைய தரிசனந்தருவித் தென்னைக் காக்கவே
ண்டுமெனப்பணிய அவ் வாக்கியத்தைக் கேட்ட கபீர்
புளகாங்கிதமடைந்து ஓ சுந்தரா நீ துலுக்கவம்மிசத்திற்
பிறந்தவளாயிருந்தும் ராமானந்த ஸ்வாமிகளின் தரிசன
த்தைக்கோரினை உனக்கவர்மீது பக்திவந்ததைக்குறித்து
வெகு சந்தோஷமடைந்தேன் ஆனால் என்னுடன் கூடி
யிருக்கின்றவளாகில் என்வாக்குக்குமறுவாக்குறைக்காம
லிரு இதுவே உன்பா லியான் கேட்டுக்கொள்ளும் வாக்
கு இதை உன்னுயிருள்ள பரியந்தம் காப்பாற்றக் கூடு
வோவென,

சுந்தரா ஓ ஸ்வாமி பதிவாக்கைமறுத்த சதிக்கு நற்
கதியுண்டா பதிவிரதையின் வாக்கிரண்டா பதிவார்த்
தையை மறுத்தவருமுண்டா இப்படி கேட்ட தமக்கை
யங்கொண்டா? பதிமொழியின்படி நடக்கா தவளுமொரு
பெண்டா பதிவாக்கைக் கடக்காமல் இராவணன் பின்
பார்வதிபோனளெனச் சாஸ்திரங்களில் முறையிடுகிற
தைக் கேள்விப்பட்ட நான் உமது வாக்கைக் கடப்பே
னே பதிவிரதைபல்ல வென்கிற பேரை யெடுப்பேனே
ஓ என் பிராணநாயகா? ஸ்ரீ அகிலாண்டகோடி பிரமா
ண்டநாயகராகிய ஸ்ரீ ரகுநாதர் ஒரு தரமின்றி இருதரம்
சொல்லும் அக்கினியிற்குளித்து வாவென் றுரைத்த
சீதாபிராட்டி கோதண்ட அஸ்தனைத்துதித்து அக்கினிக்
குண்டத்திற்குதித்து அக்கினிதேவனையெரித்துதிரிலோ
கங்களிலுந் தன்கீர்த்தியை விரித்துக்காட்டியதைச் சிரவ
ணஞ்செய்த அடியாளுமது வாக்கைமறுப்பேனே மறுத்
திவ்வுலகி லிருப்பேனே ஓ பிராணவல்லபா! பதிவார்த்
தையைக்கடக்கா சதியே பதிவிரதையன்றி கடந்தவள்
பதிவிரதையாவாளா கணவன் வாக்கியத்தைக் கடந்த
காந்தை கற்பழிந்தவளன்றி கணிகைக்குங் கீழ்மையான
வளென்றே யுரைக்கத்தகும் என்கிற பற்பலவாக்கியங்க
ளுரைக்கக்கேட்ட கபீர் சந்தோஷ சாகரத்தி லழுந்தவ
ராய் ஓ-சுந்தரா நீ நல்ல பத்தினியென்றே மணஞ்செய்ய
ஒத்துக்கொண்டேன் சாதுக்கள் சேவையிற் சிறந்த உத்
தமியே என்று சற்குரு நாதனைப்பணியவாவென் றன்
புடனழைத்துக்கொண் டின்புடன்போய் ராமா னந்தஸ்
வாமிகளின் திருவடிகளிற்பணிந்து நயனங்களையணிந்து
பயபக்தியுடனிற்க சுந்தரா ஸ்வாமிகளின் திருவடிகளி
ற் சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு பலதரம் முத்த
மிட்டு இவரே பகவானென நினைந்து கண்ணீரா லவர்பா
தங்களை நனைத்து வெகுநேர மடிகளைத்தழுவினபடி கிட
க்கையில் ராமானந்தசுவாமிக ளதிசயித்து எழுந்திருக்கக்
கடவா யம்மாவென் றுரைத்து கபீரைநோக்கி ஓ-புனித
னே சூரியாஸ்தமானவேளையி லியாருடைய ஸ்திரீயை
யழைத்துக்கொண் டிங்கடைந்தா யெனக்கேட்க கபீர் ஓ
சுவாமி தாங்களே நேற்று மாலையில் மாணுக்கருடனெழு
ந்தருளி வந்து இக்கன்னியை எனக்கு மணம் செய்து
வைத்து மறியாதவர்போல்கேட்குங்காரண மேதோவெ
ன்று வணங்க.

ஸ்வாமிகள் ஆச்சரியப்பட்டவராய் ஓ கபீர் நானு
னக்கு வதுவையானது மறியேன் இம்மங்கை உன் மனை
வியென்றுந் தெரியேனென கபீர் ஓ சுவாமி தேவரீர்
திருக்கூட்டத்தோ டெழுந்தருளினதுமன்றி இராஜனையு
மழைப்பித்து இன்று காலையிற்றானே வேட்டல் செய்தீர்
இதற்குள் மறந்துவிட்டீரோவென்று பணிய சுவாமிகள்
ஓ-அபத்திகனே நானின்பால் வரவுமில்லை இராஜனைவிளி
க்கவுமில்லை வதுவைசெய்து முடிக்கவு மில்லையென்றறை
ந்து சுந்தராவைநோக்கி ஓ-அம்மா பாக்கியவதி நானுங்
கள் விவாகத்துக்கு வந்தேனோ நீ என்னைப் பார்த்தாயா
நிச்சயவார்த்தையைச் சொல்லுமென அதற்கந்தஉத்தமி
தன் கணவனை வணங்கி ஓ-சுவாமி நமது சத்குருநாதன்
நிச்சயத்தைக் கேட்கின்றாரே சொல்லட்டுமோவென கபீர்
சதிக்குப்பதியே தெய்வம் பதிக்குப் பரமாசாரியரே தெ
ய்வம் ஆதலால் சத்குருமுன்னிலையி லசத்தியம்பேசுவோ
ர் சண்டாளராதலா லுண்மையையே யுரைப்பா யென
சுந்தரா ஸ்வாமிகளைத் தொழுது ஓ சுவாமி ஓர் பகீரிபல
மாணுக்கருடன் வந்துகலியாணத்தை முடித்தார்கள்அப்
போது இராஜனும்வந்திருந்தா னீதுண்மை வசனமென்
றுசொல்ல கபீர் பகீரியாய் பலமாணுக்கருடனெழுந்தரு
ளினவரே நீர் என்னுயிர் நீங்கினுமசத்தியம் பேசமாட்
டேனெனத்தொழ ராமானந்த ஸ்வாமிகள் ஓ கபீர் இப்
பெண்ணிருக்கு மழகைக்குறித் தாசைப்பட்டு விவாகஞ்
செய்துக்கொண்ட மோகத்தா லல்லவோ தன்னைமறந்து
பொய்மொழிபேசத் தொடங்கினான் ஆரம்பத்திலே இப்
படியான நீ சமுசாரஞ் சிலநாள் செய்வையாயின் பல

துர்க்குணங்கள் நிறைந்து அபகீர்த்திக்குள் ளாவாயென் றறையும்போது, கபடநாடகனுகிய பகவான் ராமானந்த ஸ்வாமிகளின் முன்னெழுந்தருளி காட்சிகொடுத்து ஒ ராமானந்தா! நானே உன்னுருகொண் டென் பக்தனு க்கு மணஞ்செய்து வைத்தே னீதுண்மையென்றறைந்து தன் திவ்ய அஸ்தங்களால் கபீருக்கும் சுந்தராவுக்கும் பூமாலைகள்சூட்டி தனக்கிருக்கு மன்பை வெளிப்படக் காட்டி கபீரென் கண்மணிக் கிணையானவனெனப்பாரா ட்டி ஜகதீஸ்வரனுகிய பரமேட்டி அந்தரத்தில்மறைந்தார் அவ்வற்புதத்தைக் கண்ட ராமானந்த சுவாமிகள் களிக் கடலி லமிழ்ந்தவராய் ஓ ஓ ஸ்ரீமந் நாராயணரை இன்று காணும்படியான பாக்கியமென்ன செய்தேனே ஒ-என் ஆண்டவனே உன்னருமைப் பக்தன் வார்த்தையைமெய் ப்பிக்க வந்தாயோ அரிதானசேவை தந்தாயோ கண்ணு ரக்கண்டும் ஆனந்தங்கொண்டும் அன்புடன் துதிக்காமற் போனேனே வாயில்லா வூமையானேனே எனப் பற்பல வார்த்தைகளாடி சங்கீர்த்தனங்களைப்பாடி கபீரை ஆலி ங்கனஞ்செய்துக்கொண்டு தனயன் நீயேயெனவிண்டு ஒ அரிபக்தனே ஜீவன்முக்தனே நீயசத்தியனென் றுரைத் தவென்மேல் முனிவுகொள்ளாதே உண்மை யறியா தவ னெனத் தள்ளாதே என்று பணிவாக உரைக்க கபீர் அவரம்புயவடிகளில் வணங்கி ஒ யென்னுண்டவனே உம் முடைய பாதமேகதியென்று நம்பியிருக்குமென்னை இப் படி துதிக்கலாமோவென்று கரைந்தழுது பகவான் கரு ணையை நினைத்து ஒன்றுந் தோன்றாதவரா யிருந்தார், அப்போது சுந்தரா ஒருநாளும் பார்க்காப் பெருமாளைப் பார்த்த நமது பாக்கியமே பாக்கியம் நமது கணவனு டைய யோக்கியமே யோக்கியம் இந்த சுவாமிகளின் வா க்கியமே வாக்கியம் நாமின்றடைந்த சிலாக்கியமே சிலா க்கியமெனத் தன்னைமறந்துநின்றாள் இப்படி நிற்கும் சதி பதிகளை ஆரியராசீர்வதித்து நாடோறு முங்க ளிருவரு டைய தரிசனந் தரல்வேண்டுமென விடைகொடுத்தனுப் பினர் கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித் தர் பின்னுஞ் சொல்லுவார்.

கபீர் விவாக அத்தியாயம்

முற்றிற்று.

---

பதினோராவது

## கபீர் பசுவின் கன்றைக் கொல்லாமல் மறுத்த அத்தியாயம்.

---

ஆக்கத்திற் சிறந்தவரும் ஊக்கத்தில் நிறைந்தவ ரும் ஏக்கமுந் தூக்கமும் நீங்கினவரும் நீக்கமு நோக்க மும் ஒங்கினவரும் வாழுமிடமாகிய வாரணாசியென்னுங் காசிப்பட்டணத்தில் ஜீவவதை செய்கிறதை விலக்கி சக லருக்கும் மெஞ்ஞானத்தைத் துலக்கி அஞ்ஞானிகளின் மனதைக்கலக்கி பிர்மத்தி லொன்றுபட்டிருக்கும் நிலைக் குபலவந்தமா யனேகரை வரும்படியாகச் செய்து பந்த பாசங்களைக்கொய்து அகமென்னும்வியாக்ரமமேலம்பெ ய்துஅயிம்ஸையான வஸ்திரம்நெய்து சகலசீவர்கள்மீதுங் கருணை மழைபெய்து நட்சத்திரங்களிற் சிறந்த சந்திரனை ப்போலவும் பசுக்களிற் சிறந்த காமதேனுவைப் போல வும் விருட்சங்களிற் சிறந்த கற்பகத்தைப்போலவும் மாந் தரிற்சிறந்த தருமவானைப்போலவும் ஸ்திரீகளிற் சிறந்த கற்புள்ளவளைப்போலவும் விரதத்திற்சிறந்த ஜீவகாருண் யத்தைப் போலவும் பூசையிற் சிறந்த மானசபூசையை ப்போலவும் விவேகத்திற்சிறந்த சாந்தத்தைப் போலவும் பிரம்மக்ஞானிகளிற் சிறந்த கபீரானவர் தனக்கு மண மானபின் தன்சிறிய தந்தையானவர் தன் மாதா பிதா மனையாள் முதலானோரையும் விருந்துக்கழைத்து தன் னைக்கூப்பிடாக் குறையால் மிகவும்வாடி தாய் தந்தை யரைநாடி கூப்பிட்டுக் கொண்டேயோடி தெருக்களெல் லாமோடி விஷ்ணுசங்கீர்த்தனங்களைப்பாடி சிறியதந்தை செய்ததுமேடி என்றெழுந்தெழுந்து கூத்தாடி சிறிய தந்தையின் வீட்டினுட்புகுந்து என்னையேன் விளிக்கவி ல்லையென்றறைந்து அங்கு கூட்டமாயிருக்கக்கண்டு ஆச் சரியமேதென்றவர் கொண்டு கணத்துட் புகுந்து நின்று அனியாயமீதெனப் புகன்று நிற்கவே பசுவின்கன்று நா லுபேர் பிடிக்கநின்று கண்ணீரொழுக நின்று இவர்கள் நம்மைக்கொன்று பல்லாற்கடித்து மென்று ருசி ருசியெ னவேதின்று இன்புறுவர்கள் இதுநன்று வீணுய்ப்போ தல் நன்றன்று நமக்குத்துணையாமொன்று நாமறியாமல் தொன்றுசெய்த தீவினையாமொன்று இதற்குச் சாக்ஷி யோர்குன்று இனி நான் மனதைவென்று சேரலாஞ் சிற் சுகமருளென் னுஞ் சொற்களைப்புகன்று பகவத் ஸ்மரணை யோடு நிற்பதையும் துடுக்கர்யெல்லாஞ் சூழ்ந்துநிற்பதை

யும் கபீர்பார்த்து தேகமெல்லாம் வேர்த்து கோதனத்தை மார்புடன்சேர்த்து அபபந்தங்தேனெனப் பேர்த்து கொல்வதழகல்லவென ஈர்த்து தன்னுயிரதற்குத் தாரை வார்த்து உயிர்பெற் றுய்வாயெனக்காத்து இபிலீஷ்தனக்குத் தோர்த்து ஓடிப்போகின்றதை நோக்கி துலுக்கரைக் கொலைக்குள்ளாக்க ஜீவகாருண்ய விரதத்தை நீக்கி மோட்சமார்க்கத்தைப்போக்கி உன்வசத்தி லானோரைப் பாழாக்கி ஈடேறுமற் கிழாக்கி நரகஞ்சேர்வதற்காளாக்கி செய்தாய் இம்ஸையே சாக்கி ஆதலாலுனை யிப்போது தூக்கி இவ்வனலிற்போட்டுக் கரியாக்கி விடுவேன் யாரென் றோங்கி முகம்மீதோரறை வாங்கிவிடவே இபிலீஷேங்கி உயிர் போனதுபோற் றேங்கி, உம்மாலென்னுயிர் நீங்கிப்போதல் நன்றோ அருட்சீலனே! அகட்டிற் பிறக்காப்பாலனே! கருணைக்கடற்கோர் மூலனே! சகல ஜீவர்களுக்கு மனுகூலனே துடுக்கரை வெல்லுங்கோலனே எனக்குக்காலனே திரிசூலனேகதிர் வேலனே பரிபாலனே என்று தோத்திரம் புரிந்து மிகவும்பரிந்து அருவா யிருந்ததோ குருவாகி ஓ அருட்சொரூபதர்மமே! ஓ சுகபரப்பிரமமே! இது நீ யறியா மர்மமே இது முன்செய்த கர்மமேயென்று தன்னாந் தன்னை யிழுத்து தாடிகளெல்லாம் பழுத்துநிற்போரே இதன் கழுத்து அறுப்பீரது முன்கொழுத்து செய்துகொண்டதெழுத்து அதனுற்படிமீதழுத்து காஜீ கடவுளை வழுத்துவென்பதைக்கேட்ட துடுக்கர் சொல்லு முன்சொல்லும் முடுக்கர் அங்கே வந்துரைக்கும்பூதத்தின்முகத்தில்கொட்டில்லாமல் நீண்ட சொக்காயும் நீண்ட குல்லாயும் வெளுத்தமுகமும் வெளுத்தநரையும் பல்லிற்கரையும் சொல்லிற்குறையும் உள்ளவனு யிருக்கவும்,

மொசல்மான்கள் தன் குலத்திலுற்பவித்த மூத்தக் கிழவனெனத் தீர்மானித்து நிற்போரிற் றமால்மாத்திரமனுமானித்து குலத்தோரைப் பார்த்து கரங்களை சேர்த்து ஓ அன்பர்களே எனக்குகந்த நண்பர்களே இவ்விருத்தன் யாதோ விபரீத பூதத்தைப்போற் காண்கின்றது ஆதலாற் கிஞ்சிற் றடியேன்மேற் கருணைகூர்ந் திக்கன்றுக்குட்டியைக் கொல்லாம லிருங்களென்று வேண்ட அதற்கக் கிழவன் நகைத்து தமாலைப்பகைத்து ஓ தமால் நீ துலுக்கனுயிருந்தும் சகலமுந் தெரிந்தும் அல்லா செய்கிறதை வெறுக்கிறுய் குரான் மொழியை மறுக்கின்றுய் சகல ஜீவர்களையும் மனித ருபயோகத்திற்காகவே கடவுள் படைத்தார் அதி லாடு மாடு முதலாகியதைப் புசிக்கவே உண்டாக்கினர் இப்படி கடவுளாலனுப்பப்பட்ட வேதத்தில் முறையிடுகின்றது இதோ இக்காஜியும் மௌலியும் ஆதிவேதமான குரானைத் தீர்க்கமாய் வாசித்து சகல மார்க்கத்திலுந் தேர்ந்திருக்கின்றார்கள் இவர்களை விட நீயுமுன் சுதனு மோதினவர்களோ வேதத்தி னிரகசியத்தை யறியா வுங்களுடன் வாதுசெய்வீதற் கிவர்களேபோதும் நீங்க ளகடவிகடஞ் செய்கிறீர்க ளெப்போதும் என்று நவில்கிறதைக்கேட்ட கபீர் ஓ மாயாபூதமே நீ யுரைப்ப தபவாதமே உன்னை நம்பினோர்க்கபராதமே செய்ததெல்லாம் நீதமே நல்லோர்க்கு மிகவும் பேதமே விரோதமே வெகுசேதமே மிகு குரோதமே மருட் போதமே என்னையா வெருவச்செய்ய வந்தா கலியே நீ யின்றைக்கானுய் பலியே ஞானப்பூசையுண்ணெலியே துடுக்கருக்கெல்லாம் புலியே இப்போ துனக்கு நான் புலியே சற்றுமுன் அடைந்தாய் கிலியே என்முன் செல்லாதுன் வலியே கொலைஞரைக் கொள்ளைகொண்ட நலியே ஆணும் பெண்ணுமல்லவா அலியே என்றக் கன்றை நோக்கி இடர்வேண்டாமெனப் போக்கி வசுமஸ்தகத்தின்மேற் தன தஸ்தத்தைத்தாக்கி கொற்றிக்குச் சுகமுண்டாக்கி மார்புடனணைத்துக் கொண்டு ராமராமாவென விண்டு என்ன கர்மஞ்செய்தாய் பண்டு ஆனுலும் பகவானை அண்டு பயமில்லை யென்வாக்கல்ல ரெண்டு காசியில் நட்டிருக்கின்றேனீண்டு இந்த இபிலீஷெனக்கோர் பெண்டு வெட்டுதற்குத் துரும்பின் துண்டு உனக்குச் செய்யச்சொல்லுகிறேன் தொண்டு அயிம்ஸாவிரதம் கொண்டு இருக்கையாற் கொல்லுமித்தண்டு என்றங்கிருக்கு மோர்கோலையெடுத்து வீசினர் சுவ்வகரென்று பேசினர் கன்றுக்குச் சந்தனம்பூசினர் நானெனல் நமக்கேனெனக் கூசினர் அப்போதந்த தடியானது சரேலென் றெழும்பி வருவதா லிபிலீஷ்மனம்குழும்பி மௌலியின் பின்னுலோடி நீங்களெல்லாங்கூடி கொடுத்துவிட்டீர் தாடி ஆதலாலினீர்பேடி ஆகாவிடி னீண்டோடி தடியைப் பிடியுங்கள் நாடித் தமால் கபீரைக்கொண்டாடி இவ்விதஞ் செய்தானெனவாடி குரான் சுலோகங்களைப்பாடி அலால் செய்வார்த்தைகளாடி கொலைசெய்வோர்களைத்தேடி அதி சீக்கிரமா யோடிப்போய்விடவே மொசல்மான்க ளெல்லாங் கோபதீப்தர்களா யெரிந்து பொரிந்து கபீரைப்பார்த்துக்கரத்தைப்பிடித்திர்த்து அடா கபீர் எங்குலத்தி லுற்பவித்தவிருத்தனை வருத்தப்படுத்தி ஏனேட்டி விட்டாய் நீ கெட்டாய் கோதனத்தை அலால்செய்வதைத் தடுத்தாய் அனைவரு முண்பதைக் கெடுத்தாய் சுயமதத்தை விடுத்தாய் இந்துமதத்தை யடுத்தாய் எங்களைவெல்லவோ சலந்தொடுத்தாய் அநேக துன்பங்களைக் கொடுத்தாய் நீ இங்கேன்வந்தாய் வம்பேன்தந்தாய் என்று முடுக்கிச் சகலருமடக்கி வாயில் வந்தபடி பிதற்றத் தொடங்கினர்கள் அதற்குக் கபீர் ஓகொலைஞரே? ஜீவகாருண்ணியமில்லா

வல்லுரே! ஓர் சீவனைப் பதைக்க வதைக்கலாமா உயிர் நீங்கச் சிதைக்கலாமா பஞ்சமாபாதகத்தில் முந்தினது கொலையல்லவா பலதரம் சொல்லவா கொலைபாதக மொன்று செய்பவன் களவு கட்காம குருநிந்தையுஞ் செய்தவனுமே ஜீவகாருண்யத்தால் மோட்சமடையலாமே ஜீவ யிம்சை செய்பவருக்கு முத்தியில்லையெனல் சத்தியமா? அசத்தியமா ஐயையோ ஓ-தேறித்தெளிந்த மௌலியே! கல்வியில்வல்ல காஜியே நீங்களாவது போதிக்கலாகாதா உமக்கருளுண்டாகாதா! ஓர் பிராணியைக் கொல்வதுஞ் சந்தோஷமா வெனப் பல பரிதாப வார்த்தைகளாடும் போது மௌலி எங்கள் வேதத்தில் விதித்திருக்கிறபடி அலால்செய்வதை கன்றின் கழுத்தைக் கொய்வதைமறுத்த லுனக்குத் தகவேதகாது ஜீவகாருண்ய மொழிகளெங்கள் செவியிற் புகவேபுகாது ஏனெனின் பசுவினுதிரஞ் சுண்டுதலாலுண்டாகும் பாலையுண்போர் தசையைப் புசிக்கலாகாதோவென கபீர் தாயின்பாலை யுண்ணுஞ் சகலரு மவ்வன்னையின் மேதையையு முண்ணலாமோவென மௌலி மானிடருக்கும் மிருகங்களுக்கும் பேதமில்லையா அன்றி மாந்தருக்காகவே படைத்த மிருகங்களைக் கொல்வதாற் பழுதில்லவே யில்லையென, கபீர் சகல ஜீவர்களையு மேகக்கண்ணுற்பார்க்கும் ஜகதீசுவரன் பாரபட்சமாய்ப் பார்ப்பாரா பாரபட்சமாய்க் காப்பாரா மிருகங்களுக் கிருக்கின்ற விவேகம் மானிடர்களுக் கிருக்கின்றதா, அதை வொருவரா லறிந்துக்கொள்ளத் தக்கதா நம்மைப்போல் மிருகம் யுத்தியுஞ் சத்தியுங்காட்டுமாயின் நம்மாற் கொல்லக்கூடுமோ கொல்லென்று சொல்லக்கூடுமா கோவாலல்லவோ பலதானியங்களும் வெகுமானியங்களும்பெறலாம் பால் தயிர் நெய் முசர் முதலானதுண்டு சுகமுறலாம் சகாயஞ் செய்வதைக் கோறல் நலமோ வதைத்தால் யமக்குற்றபலமோ அல்ல தாணவ பலமோ பாவஞ்செய்தலுஞ் சலமோ அலால் செய்தலே குதமே ஆச்சரியம் தன்னுயிரைப்போல் மன்னுயிரைப் பார்க்கத் தேவையில்லையா ஜீவகாருண்யம் மேலான தவமல்லவா இதற்குத்தகுதியான யுத்திரஞ் சொல்லையா சொல்லி யென்னை வெல்லையா வென நிக்கோதனத்தைக் கொல்லையாவென மௌலி கடவுளைத்துதித் துயிர்வதை செய்வதாற் பாபமில்லையென கபீர் மனோவாக்குக் காயமென்னுந் திரிகரண சுத்தியோடுங்கூடிக் கடவுளைத்துதிக்கவேண்டுமே யல்லது கொலைபாதகஞ் செய்யும் போதுன்னால் மிகவு மபராதமென மௌலி கடவுளைத் தியானித்தலால் செய்ததே புசிப்பதற்கு யோக்கியமான தன்றி மற்றது கூடாதென கபீர் நாற்காலிருகாலுள்ள ஜீவர்களை அலால்செய்ததா லதின் கர்ப்பத்துக்குற்ற குட்டியும் முட்டையு பலாலானதல்லவே யதைப் புசிப்பதேனென மௌலி கருவிலுருங் கொற்றியையு மண்டத்தையு மலால் செய்யக் கடவுள் விதிக்கவில்லையேயென,

கபீர் நிருபமாய் நிஷ்களமாயிருக்குங் கருணாகரக் கடவுள் ஓர் பிராணியைப் பதைபதைக்கசிதைத்துவதைக்கும்படி கட்டளைக்கொடுப்பாரா கொடுத்துக் கருணாநிதியென்கிற தன்பேரைக் கொடுப்பாரா கொலை செய்தோர் நரகத்திற் புகுவதைத் தடுப்பாரா ஜீவரட்சணையை விடுப்பாரா கொல்லக் கட்டளை யிட்டவர்களுக்குக் கருணாகரனென்கிற பேர்கூடுமோ? அவராக்கினைக்குட் படுவதாடும் மாடுமா ஓ காஜி! நான் சொல்லுவதைக் கேளும் அதாவது ஜலம் அசரஜீவன்களுக்கும் சாஜீவன் சரஜீவர்களுக்காகாரமாகப் பகவான் செய்திருக்க அதை விடுத்ததோகதிக் காளாக்குங் கொலைசெய்துண்ணக் கட்டளையிட்டாரென் றுரைக்கும்மொழி விபரீதமாயிருப்பதன்றி மிகவு மபராதத்துக்கும் ரவுரவாதி நரகத்தை யடைவதற்கு மிடமாயிருக்கின்றதே யென மௌலி கடவுள் கொலைசெய்யும் கொடிய மிருகங்களை உண்டாக்கின காரணமேதென கபீர் தன்தாயை புணருமிருகத்தின் செய்கையைச் சாத்திரத்திற் பேசக்கூடுமோவென மௌலி ஜீவனெல்லாவற்றிற்கு முண்டோயென கபீர் சரவசரங்களிற் பேதமில்லையோவென மௌலிஜாலமெல்லாம் ஜீவமயமாயிருக்கின்றதேயென கபீர் ஈதன்மையாயி னலால் செய்யுங் காரணமேதென மௌலி கொலைசெயல் கொடிய பாபமாயி னிந்துக்கள் பலியிடுவது பாபமல்லவோவென கபீர் பாமரர்களிஷ்டகாமியார்த்த நிமித்தம் துஷ்டதேவதைகட்குப் பலியிடுகின்றார்கள். அதுவும் கொடியர் செய்யுங் கொடுங்காரியமே அவர்கட்கு நரகமே பிராப்தியாகுமென, மௌலி தேவதைகளிலும் இரண்டுவிதமுண்டோவென,

கபீர் பிரமருத்திராதியர் சிரேஷ்ட தேவதைகளென்றும் காளி வராகி சத்திகள் துஷ்டதேவதைகளென்று சொல்லப்படுமதில் துஷ்டதேவதைகளைப்போல சிரேஷ்டதேவதைகள் பலியைக்கோராமல் தூபதீப நைவேத்தியங்களாற் சந்தோஷப் படுகின்றார்களென மௌலி அஸ்வமேதாதியாகங்களிற் கொன்ற பிராணியி னவிர்ப்பாகத்தை விஷ்ணு முதலானவர்கள் இச்சிக்க வில்லையோவென கபீர் பிரமம்-தெய்வம்-பூதம்-பிதுர்-மானுஷ மென்றைந்து யாகமுண் டதில் வேதமோதல் பிரமயாகம் ஓமம் வளர்த்தல் தெய்வயாகம் பலியிடல் பூதயாகம் தர்ப்பணமுடித்தல்பிதுர்யாகம் இரப்போர்க்குணவுமுத

லிப விதல் மனுஷயாகமென் ருதிவேதத்தில் முறை யிடு கின்றதனுல் பலியேற்றுக்கொள்ளுதல் பூதத்தின் கொள் கையாம் பிரம்மாதி தேவர்கள் மந்திரோச்சாடங்களால் மரித்த ஜீவனை அக்கினிஷ்டோமங்களாற் பஸ்பமாக்கி அப்பூதியையும் மற்ற வஸ்துக்களையு மவிர்ப்பாக மாகக் கொண்டு பின்னு பச்சீவனை மந்திரபலத்தா லெழுப்ப வேண்டு மின்றே லதற்கு மேலான பதவியைக் கொடுக்க வேண்டும். கொல்லவும் எழுப்பவும் வல்லவர்கள் பூதயா கஞ்செய்யவேண்டும் யாகமந்திரஞ் செபிக்கும் பூசுரன் அவ்யாகமுடியும் பரியந்தம் நித்திராகாரமின்றி யிருக்க வேண்டுமென்றும் பூதயாகம் காமியார்த்தத்தின் நிமித்த மே யென்றும் மதுமாமிசத்தின்மே லிச்சையுள்ளோர்க் கே உரியதென்றும் இதற்குடன்படுவோர் மாயாசம்பந்த முடையவர்களே யென்றும் இதை எவ்வளவுசிறப்புடன் செய்தாலும் சாகினி டாகினி முதலான பூதங்கள் களிப் படையும் பூதயாகமே யென்றும் சொல்லும் வேதத்தின் கருத்து பலியிடும் யாகத்தை விலக்கியதன்றி செய்யச் சொல்லவில்லையே உங்கள் குரானிலோ மாயா ரகிதமாய் நிருபமாய் நிர்பேதமாயிருக்கும் பரப்பிர்மத்தை தியானி த்துயிர்வதைசெய்தால் பாபமில்லையென்று மிது கடவுள் கட்டளையென்று முரைக்கின்றதே அவை மெய்யென்று நம்பி நம்பி பேதமையுடைய மானிடர்கள் கொல்லும் புழுவையைப்போல் நாளொன்றுக் கனேகங் கோஹத் திசெய்து நிரையத்துக் காளாயிருக்கிறுர்களே! இந்துக் கள் சகஸதிர வருஷங்களிலோர் யாகஞ்செய்த லரிதா யிருக்கின்றதே நீங்களரைநாழிகையிற் சகஸ்திர கோக்க ளைக் கொல்லுகிறீர்களே அன்றுப்பசுவைத்தானு வதை செய்துண்ணவேண்டும் கோமேதமாதி யாகங்களைச்செய் வோர்க்கு மாயா சம்மந்தமான லோகங்களின் பிராப்தி யேயல்லது மோட்ச மில்லையென்றும் சுரபியானது பயிர் தின்றல் முதலாகிய திங்கு செய்யுமாயின் அதை வாயா லதட்டி ஓட்டவேண்டு மென்றும் கையாற்றட்டி ஓட்டக் கூடாதென்றும்,

ஓர்வேளை தட்டியோட்டுவதா லொரு ரோமமுதிரு மாயி னதனுல் நிரையத்துக்காளாக வேண்டு மென்றும் ஆதிவேதத்தில்முறையிடுவதேஅல்லாமல் அசரமானவித் தையையே புசிக்கவேண்டாமென் ருதாமுக்குத் திருவா ய்மலர்ந்த கருணாலயன் அலால் செய்யுங்களென்றும் செ ப்புமபோதென்னைத் துதியுங்களென்றும் துதித்ததால் பாபமுமக் கில்லையென்றும் உரைத்திருப்பாரா! வாயில் லா யேழை மிருகங்களை வெறுப்பாரா கொலைபாதகமொ ருவரைவிட்டு நீங்குமா அதிலும் கோகத்தி கொடியநரக த்தி லமிழ்த்தாமல்விடுமா ஐயையோ உங்கள் குரானில் இவ்வநீதத்தைச் சொல்லியிருப்ப தன்றி இசாக்கென்பவ னுக்குரிய வேதத்தில் நிர்க்குணமாய் நிர்மலமாய். நிராங் காரமாயிருக்கும் பராபரத்துக்கு மிருகங்களைப் பலியிட வேண்டுமென்றும் அப்படி பலியிடுவதால் மாந்தர்களின் பாபவிமோசனமாய்ப் பரிசுத்த மாவார்களென்றும் இது தேவனுடைய கட்டளையென்றும் சொல்லியிருக்கின்றதே அனியாயம் அனியாயம் மிருகங்கள் பயன்படுவதென்ன மனுஷர் பரிசுத்தமாவ தென்ன அந்தோ இதை மெய் யென்றும் தேவனுடைய கட்டளையென்றும் நம்பலாமா நம்புவோர் மோட்சமடையப்போமா பூதமேற்றுக் கொ ள்ளும் பலியை கருணாசாகரனை பரமேசுவர னேற்றுக் கொள்ளுவாரா மிகவும் பரிசுத்தமான பரப்பிரமக் கடவு ள் மிகவும் அசுத்தமான உதிரத்தை யிச்சிப்பாரா கொலை செய்யும் கொடிய பாவிகளை ரட்சிப்பாரா அன்றி கொ லைசெய்யவும் பலியிடவும் உண்டாக்கிய கட்டளை தீனத யாபரனை பரமேஸ்வரனிட்ட கட்டளையா ஆதாமைக் கெடுத்த பைசாசத்தின் கட்டளையா மாமிசேச்சையுள்ள மாந்தர்க ளெழுதிவைத்த கட்டளையா நன்று யோசிக்கு மிடத்துக் கொடியமூதேவிக் குணமுள்ள பூதத்தினுடை ய மாயைக்குட்பட்ட மனிதர்வரைந்த கட்டளையாகவே யிருக்குமிதிற் சந்தேகமேயில்லை அப்படிக் கையமிருக்கு மாயின் சொல்லும் மௌலியென,

அதற்கு மௌலி கடவுளிட்ட கட்டளையே யன்றி மற்றவர்களின் கற்பனையேயல்ல இக்கட்டளை இப்பிரா யிம் பயம்பர் காலத்திலேயே உண்டாயிற் றிதற்கனேக திருஷ்டாந்தங்கள் குரானிற் சொல்லி யிருக்கிறதென கபீர் இக்கொடியகட்டளை இப்ராயிம்காலத்திலுண்டான துன்மையேயா எப்படியெனின் ஆஜாரவின் குமாரனு கிய இப்ராயிம் ஆட்டைப்பலிகொடுத்துத் தன்னைச்சேர் ந்தவர்களுக்கூட்டிப் பிரஷ்டர்களாக்கினுனதை இஸ்மாயி லினிமே லெப்போழ்து மிப்பலி தன்மதத்தோர் கடவுளு க்குக் கொடுக்கும்படியா யந்தரங்கமாய்ப் போதித்து வந் தா னதாவது கடவுளைத்துதித்து ஒருயிரை வதைத்தால் கடவுளுக்குப் பலியானதேயன்றி வீணுகவில்லை எப்படி யென்றுல் சகலரும்கேட்க ஓ கடவுளே உனக்குப் பலி கொடுக்கிறே னென்றுரைத்தலும் ஒருவருங்கேட்காமல் கடவுளை தியானித்தறுத்தலும் ஓரர்த்தமின்றி உயர்வல்ல எப்போது ஜகதீசுவரனுடைய திருநாமத்தைவழுத்தி வ தைசெய்தானே அது ஈசுரவனுக்கே அர்ப்பனமாயிற்று இதைமெய்யென்றுறுதிப்படுத்த இஸாக்கா லுண்டாகிய வேதமே போதுமான சாட்சியா யிருக்கின்றது அதே

தென்றால், இப்பிராயிம் இளைய மனைவியாகிய சாரா
வென்பவள் தன்னுயிர்போல் பாதுகாத்து வளர்ந்த பசு
வின் கன்றைப் பலிகொடுத்து இஸாக் கென்பவனைப்
பெற்றாள். அவன் வயது பேவிட்டு சிலருக்கு அரசனு
கித் தன் தாய் கொடுத்தபடி தன்னைச் சார்ந்தவர்கள்
அனைவரையுங் கடவுளுக்குப் பலியிடும்படியாகக் கற்பித்
தா னன்றுமுத லவர்கள் பலியிடத் தொடங்கினார்கள்.
இசாக்கென்பவன் பகிரங்கமாய் பலியிடும்படியாகக் கட்
டளையிட்டான். சகலருமறிய விபசாரம் செய்பவளைப்
பார்க்கிலும் ரகசியமாய் விபசாரஞ்செய்பவள் மிகவும்
குற்றத்துக் குட்பட்டவளாவா ளதுபோல் அந்தரங்க
மாகப் பலியிடுமுங்களுக் கதிகாக்கினை கிட்டாமற்
போகாது. இவ்விதகுற்றங்களுக் காளாக்கிவிட்டது ஆதா
மைக்கெடுத்த மாயாபூதமேயாம். துஷ்டர்களிஷ்ட காமி
யார்த்தமாகக் கனிஷ்ட தேவதைகளுக்கிடும் பலியைச்
சிரேஷ்டமான மாயாதீத பரப்பிரமத்துக்கிடல் மாயாசம்
பந்தமின்றி ஞானசம்பந்த மல்லவேயல்ல எங்ஙனமெ
னின் எள்ளுக்குளெண்ணெய்போலவும், பாலுக்குள் வெ
ண்ணெய் போலவும் பரிபூர்ணமாய் நிறைந்திருக்கும்
நிரூப நிராங்கார நிர்விகார நிர்மல நிரதிசயானந்த கடவு
ளுக்குப் பலியிடல் கொடிய செய்கையல்லவா? பலதரஞ்
சொல்லவா? உங்கள் தாயாதிகளான இசாக் மதத்தோர்
பராபரமான பரிசுத்த பரமேசுவனுக் கோரோர் காலத்
தில் நரபலியு மிடுகிறார்களதுவே பூதத்தின் செய்கையெ
னக்காட்டப் போதுமான சாட்சியாயிருக்கின்றது. துஷ்
டதேவதைகளுக்குப் பலியிடவும் கடவுளுக்குப் பலியிட
வும் நேரிட்டகாரணம் நரகம்புகவும் பலர்வேண்டியதைக்
குறித்தேயாம் (நோன்பென்பது கொன்று தின்னாமை)
பரமாத்மா ஸர்வஜீவாத்மா அயிம்ஸா பரமோதர்மா தன்
னுயிரைப்போல் மன்னுயிரைப்பார்த்தாலே தவம் என்
கிற வாக்கியங்களை நன்றாயோசித்துப்பாரும், குரானில்
நான்காம் வகுப்பை வாசித்துப்பாரு மென்றுரைத்து,
ஓ மௌலி! கொலை செய்வோருக்குக் கொடிய நரகமெ
ன்பதற்கு மாட்சிமையான சாட்சி கொடுக்கிறேன் பாரு
மென் றக்கன்றின் மஸ்தகத்தின்மேற் றனதஸ்தத்தை
வைத்து, ஓ கொற்றியே! கொலை செய்வோர்களுக்கு
கொடிய நரகம் பிராப்திபாதல் சத்தியமா சொல்வாயெ
னத் திருவாய்மலர்ந்தருள,

அக் கோதனமானது கபீ ரூபய பாதங்களின்மேற்
றன் தலையைச்சாய்ந்து வந்தனஞ்செய்து கண்ணீர் விட்
டழுது ஓ ஸ்வாமி! என்னுடைய சரித்திரத்தைச் சற்றே
கருணைகூர்ந்து கேட்டருள்வீரேல் தேவரீர் விறுவுக்குப்
போதுமான சாட்சியாகும் நரகமென்பது வேறிடத்தி
லில்லை தசை என்பு நரம்பு தோல்மயிர் மச்சை மலஜலம
மீளை முதலானவைகளும் நிறைந்திருக்கும் இத்தேகமே
நரகமென்னப்படும் இதற்குற்ற குன்மம் குஷ்டம் க்ஷயம்
வாதவிரோதம் முதலான கொடிய ரணவியாதிகளே எம
தண்டனையெனச் சொல்லப்படும் ஈதுமக்குத் தெரிந்த
தே இனி என் வரலாற்றைச்சொல்லவெகு ஆச்சரியமும்
பெருந்துக்கமுமாயிருக்கும் அதாவது நான் முற்பிறப்
பில் மிகவுங் கற்றறிந்த பிராமணனுகும் நானோர்காலத்தி
ல் இமோர்பர்வதத்தின் சமீபமாக ஓர் காரியார்த்தமாய்
போகையி லங்குசில மாந்தர்களோர் மானைக் கொன்று
அதின் தசைகளை வதிர்ந்து பங்கிட்டுக் கொண்டிருந்த
தைக்கண்ட வென் கண்களின்வழியாய் மாயா சம்பந்த
மான மனம் வெளிப்பட்டந்த அரிணத்தினுன்மே லிச்
சைகொண்டு என்னைப்போகவிடாமல் நிறுத்தி விட்டது
பின்பம் மனதை எதிர்த்து நான் சொன்ன வாக்கியங்க
ளாவன ஓ மாயாமனதே உன் தேகத்தின்மே லுனக்கெ
வ்வளவு இச்சையோ அப்படியே சகல ஜீவர்களுக்கு மிச்
சையிருக்குமல்லவா அது பதைக்கக் கொன்று தின்று
பருத்துப் பெருத்துக்கொழுத்து இவ்வுலகி லெத்தனைநா
ளிருக்கப்போகிறாய் புல்லைப்புசித்து வளர்ந்தபிராணியை
யறுத்துன்பதா லுனக்கு நிறையமன்றி பிணிகளாற்சூழ
ப்பட்டு வாதபித்த சிலேட்டுமங்க ளென்கிற காலன்
எமன் தூதனென்பவர்க் கைக்யமாய்த் தாழப்போகிறாய்
ஓர் சிவன் மேதை தனக்குற்ற ஓர் புண்ணுக்கிணையான
தென்றுன் கண்ணுற்பார்த்து மஞ்ஞான சம்மந்தத்தால்
வாஞ்சித்தாய்,

ஐயோ கொல்பவர்க் கொருபங்கு முண்பவர்க் கெ
ண்பங்கு பாபமென்றுரைக்கும் வேதங்களை யோதியிருந்
தும் மதுமாமிசங்களை மறந்தும் நினையாமலிருப்பதே பி
ராமணாசாரமென்றறிந்து மடமைக்குணத்தால் மாங்கி
ஷத்தை இச்சித்தபோதே பட்சித்தாயே அந்தோ! ஒரு
நாளன்றி மறுநாள் புசிக்கத்தகாத புழுக்கள் நெளிந்த
புலாலைப் புசிப்போர்மீது புங்கவன் பூரணகடாட்சம்வரு
மோ ஓ பேதமை மனதே யானைத்துதிக்கைபோல் நெய்
சொரிந்து கோடி ராஜசூயயாகம் செய்வதிலும் ஓ ருயி
ரைக்கொன்று தின்னாதிருக்கும் சீவகாருண்ய விரதம்
மேலானதல்லவோ வென்னு மிவ்வீதி நீதிகளைப் பலவா
றோதி என் மதிக்குப் போதித்துக்கொண் டிருக்கையில்
அதைக்கேட்ட சாரங்கத்தின் தசையைப்பங்கிட்டுக்கொ
ண்டிருந்த மிலேச்சருக்கு மேன்மையான சீவகாருண்ய
ம்பிறந்து ஐயோ அறியாமையா லரிணத்தைக் கொன்று
பாவத்துக்காளானோமே இழிப்ப யெவ்விதத்தால் நீக்கிக்

கொள்ளப் போகிறோமென் றவக்கனுற்றயர்ந்து பெருமூச்சுவிட்டு என்னை நோக்கி ஓ பிராமணோத்தமா நீ யிச்சித்த மேதையை நீயே பெற்றுக்கொள்ளென் றென்மேலெறிந்து தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள் பின்பு நான் என்மேலெறிந்த மாமிசங்களைப் பார்ப்பதற் கசங்கியமுமச்சமுற்றவனாய்க் கண்களைமூடிக்கொண்டு நிற்கையில் அங்கொரு கலைமான்வந்து பிரலாபித்துத் தன் பிணையைக்கொன்றவன் நானேயெனத் தீர்மானித்துக் கூர்மையான கொம்பாலென்னைக் குத்திவீழ்த்திக் கதறிக் கொண்டே போய்விட்டது பின்பு நானெழுந்து நடக்கச்சக்தியற்றவனா யம்மலையருகில் நகர்ந்துக் கொண்டேபோய் ஓர் குகையிற் றங்கியிருக்க அர்த்தராத்திரியிலோர் தவயோகி அக்குகைக்குள்ளிருந்து வெளிப்பட் டென்னுடைய தேகமெல்லா முதிரமயமா யிருப்பதைப்பார்த் தருகில் வந்தென்னை யாதரணைசெய்து நீயாரிவ்விதத்துன்பமென் வந்ததென்று வினவ,

ஓ சுவாமி நான் வேதபாராயணஞ்செய்யும் வேதியன் என் வரலாறிவ்விதமென மேல் நடந்தயாவுஞ் சொல்லவே அத்தபோதனன் மறையோனாயிருந்து மாங்கிசத்தை இச்சித்தாயா நீ யிக்குகையிலிருந்தா லெனக்கும் பாபம்வந்து நேரிடுமெனத் தன் சூலத்தாற் குத்தித்தூரமாயெறிந்துவிட்டான் பின்பு ஓர் முட்புதரில் வீழ்ந்தநான் கதறியழுது ஓ சுவாமி யான்செய்த தீவினைதீரவும் சீக்கிரமென்பிராணன் நீங்கவும் கருணைபுரியுமையாவென்று தோத்திரஞ் செய்யும்போது அக்கருணா சாகரனான முனிசிரேஷ்டன் யாது காரணத்தாலோ அதி சீக்கிரமாக வென்னருகி லோடிவந்து ஓ பிராமணோத்தமா யான் செய்த குற்றத்தை மன்னியும் தவத்துக்கு சீவகாருண்யமே விரதமெனத் தெரிந்திருந்தும் உன் தீவினையானதெனக்கு முனிவு வரும்படியாகச் செய்தது உனக் குற்ற பாபத்தி லெனக்குப் பாதிவந் தடைந்தது அதை நீக்கிக் கொள்ளும் பொருட்டுக் கங்காதீரத்திற் றவஞ் செய்யப் போகின்றேன் உனக்கேதாவ துபதேசஞ் செய்வேனாகில் மற்றப் பாதிபாவமும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாகுமினி உன்பா லரைக்கணமுந் தங்கேனென்று ஓ காசி விசுவநாதா பூதநாதா வென் றுரைத்துக்கொண்டே வாரணாசியைநோக்கி ஓடத்தொடங்கினர் உடனே என் பிராணனும் அக்காசி நாதனைத் தியானித்துக் கொண்டே உடலைவிட்டு நீங்கிக் காசியையடைந்து புண்ணிய ஜென்மமான கோவின்கற்பத்திற் பிரவேசித்து 10 மாதங்கள் பரியந்தம் விஸ்வநாதனைப் பூசித்துப் பின்பு இப்பூவுலகிற்பிறந்து யாதும் மறந்து மாமிசத்தை இச்சித்த குற்றத்தால் இத்துடுக்கர் கையிலகப்பட்டுக் கக்கசத்துக்குட்பட்டு நிற்குந்தறுவாயில் பிரமமே ஒருருவான நீர் வர உம்மைத் தெரிசித்துப் பூர்வக்ஞானம் பிறந்து கண்ணீர்விட்டழுதேன் கடவுளையுந் தொழுதேன் பின்புமது அஸ்தமென் மஸ்தகத்தின்மேல் வைக்கவே எல்லாப் பாபங்களும் நீங்கிப் பரிசவேதியால் நவலோகங்கள்களங்கம் நீங்கிப் பசும்பொன் னானதுபோலப் புண்ணியவானானேன்.

ஓ பரமபுருஷா! பரமசொரூபா! என்மேல் உமக்குக் கருணைவந்த காரணம் முற்பிறப்பில் பிராணன் நீங்குங் காலத்தில், தவயோகியின் தெரிசனங் கண்டபலனல்லவோ இனி நான் மோட்ச வாழ்வைப் பெற்றேன் பாசபந்தங்களற்றேன். ஓ சுகயோகியே! ஆனந்த போகியே! ஜீவகாருண்யத்தைக் கைவிடாதே, ஜீவஹிம்சை செய்வோர்களைத் தொடாதே, காருண்ய மில்லார்க்குன் பாதங்கொடாதே, காருண்யமில்லாக் கையேதுக் கென்றெடாதே என்கிற வாக்கியங்களை யுரைத்து மாயமாக மறைந்து பரமபதத்தை யடைந்தது. கேட்டீர்களோ சித்தர்களே! இவ்விதமாகக் கோதனம் மறைந்தபின் அங்கு நிற்கும் பலரும் கபீரும் கன்றுக்குண்டான பாக்கியத்தைக் குறித்தானந்த பரவசராய் தன்னை மறந்து சற்றுநேர மிருந்து, பின்பு தெளிந்து தோத்திரஞ்செய்யு மௌலி முதலானவர்களை நோக்கி, ஓ சீலர்களே! கொற்றியுரைத்த வாக்கியங்களைக் கேட்டீர்களோ, சீவகாருண்யத்தைக்குறித்து முற்காலத்திலோர் விசித்ரமான கதை நடந்திருக்கின்றது. அதாவது நேபாள நகரத்துக் கருகாயிராநின்ற ஓர் பட்டணத்துக் கிறைவனும அமைச்சனும் தன்னகருக் கிருகாத தூரத்திலிருக்கும் ஓர் பத்திரகாளியின் கோயிலுக்கிரவில் இருஜாமங் கழிந்தபின் இருவரும்போய்க் காளியைப் பூசித்துக் தங்கள் இஷ்டகாமியார்த்தத்தை முடிப்பிக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்துக்கொண்டே வந்தார்கள். இப்படிப் பனிரெண்டு வருஷங்கள் கழிய, ஒருதினம் பத்ரகாளி நராதிபன்முன் பிரசன்னமா யிக்கணத்தி லெனக்கோர் நரபலி கொடுப்பையாகி லுன்னிஷ்டகாமியார்த்த முடியுமென்று நவில, அரசனமைச்சனை நோக்கி, ஓ மதிமந்திரி! இதற்கென்ன செய்யலாமென அமாத்தியன் நாம் நகரிற் போய்க்கொண்டு வருவதற்குள் சூரியோதயமாகும். தடையின்றி என்னைப் பலிகொடுத் துமதிஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளுமெனப் பார்த்திபன் நாமிருவரல்லோ சுக மனுபவிக்கப் பனிரெண்டு வருஷமாய்ப் பூசித்துவந்தோம். அப்படியிருக்க நீர் இப்படிச் சொல்வது தகாது. வேறு மனிதனையே தேடவேண்டுமெனத் துணைவன் நாமிருவரன்றி வேறு மனிதரி

ல்லே யென்ன செய்யலாமென்னப் பூபதி அர்ச்சகனை செய்யு மந்தணனிருக்கிற வனவனைப் பலியிடுவோமெனத்துணியன் ஸ்ரீ ஹத்தியிலும் சிசுவத்தி கொடியது சிசுவத்தியிலும் கோஹத்திகெட்டது, இதனிலும் குருஹத்தி தீயது இதனிலும் பிர்மஹத்தி பொல்லாதென் றுரைக்கும் நீதிநூலைக் கற்றறிந்த நாம் பிர்மஹத்திக் குட்படலாமோவென நரேந்திரன் நீர் சொல்லுவது நிச்சயமாகிலும் விருத்தப் பிராமணனைக் கொல்வதால் வரும்பாபம் அவன் தன்யனுக்கு நமக்குக்கிடைக்கும் வரத்திற் பாதி கொடுப்பதால் விமோசன மாகாதோவென ஏனதியனர்ச்சகனை விளித்து இராஜன் கருத்தையறிவித்தனன் வேதிய னரசனு மமைச்சனு மொன்றுனபின் நம்மொழி நடப்பதரிதென் றென்று முரைக்காதிருந்தனன் நிருபன் ஓ பூசுரனே எங்கள் மொழிக்கிணங்குவையாயி னுன்து தனயனுக் கென்னிராச்சியத்திற் பாதி கொடுப்பதன்றி இப்போது பெரும் வரத்திற் பாதிகொடுக்கின்றேன் மறுக்கவேண்டாமென ஆதிவருண னினி. நமக்குமுடிவு காலம் வந்தாயினும் நெடுநாளாயன்புடன் பூசித்துவருமென்னைத்தானு இக்காளி பலிகொள்ள வேண்டுமென்றுன்னிக் கோயிலிற் பிரவேசித்துக் கோபமேலீட்டால் காளியின் கன்னத்திலறைந்து அடீ சாமுண்டீ சண்டிகை காளி வேதாளி திரிசூலி மிஞ்ஞீலி ஏழாண்டிலிருந் தெழுபதாண்டுவரையிற் பூசித்த என்னைத்தானு பலிகொள்ள ஆசித்தாய் நீயு முன்கோயிலும் பாழாய்ப்போகவென்றிறைந்தறையும்போது,

அம்மறையோன்முன் காளி பிரசன்னமாகி ஓ விப்பிரனே நீ முற்பிறப்பில் சூத்திரனுயிருந் துன்னிஷ்ட காமியார்த்தமா யிரண்டாடுகளைக் கொண்டுவந் தென் முன்னிருத்தி வாளாலிரண்டையு மொரேவெட்டாய் வெட்டி மடித்தா யவ்விரண்டு மிவ்வூருக் கரசனும் அமைச்சனுமாகி இப்போதுன்னை வெட்டத் துணிந்தார்க ளவர்களிருவரு மேககாலத்தி லுன்னைப் பலிகொடுக்காவிடில் லின்னமோர் ஜென்மமெடுத்துப் பலியாகவேண்டியதாய் நேரிடு மதினாலேயே நீ எனக்குப் பலியானுய் வீணாய்க் கோபஞ்செய்யாதே யென்றுரைத்து மறைந் தெதாவுருவாய் நின்றுளுடனே அப் முப்புரிநூலோன் ஆலயத்திலிருந்து வெளிப்பட்டு அரசனமைச்சனை நோக்கி நீங்களிருவரும் ஏககாலத்தி லென்னை வெட்டுகிறே னென்று வாக்கைக்கொடுத்தால் உங்களிஷ்டத்துக் குட்படுகிறேனென அமைச்சனை நோக்கி ஓ சுவாமி அருண மிரண்டு மாசனு மமைச்சனுமானதும் அவைகளை வெட்டினவனந்தணனுப் பிறந்ததும் எழுவயதிலிருந் தெழுபதுவயதுமட்டும் பூசித்தும் கொலைபாதகம் விடாமலவ்வாட்டின் பிறப்பான நம்மிருவராற் பலிக்குட்படும்படியாய் நேரிட்டதே ஐந்தறிவுள்ள மறையோனை மாரணஞ் செய்யும் பாவம் நம்மை எக்கதியிற் கொண்டுபோய் விடுமோநமக் குவரமும்வேண்டாம் வாழ்வும் வேண்டாமென் றுரைப் பதைக்கேட்ட அதிபன் நம்மா லிம்மறையோன் மரணமிப்போ தாகாம லினி யோர்காலத்தி லாவானுதலாற் றுணிந்து வெட்டலே நலம். பின்பிவ்வேதியன் நம்மைக் கொல்லாமற் செய்துக்கொள்ளு முபாய முரைக்கின்றேனென் றமைச்சனைச் சம்மதிக்கச்செய்து வேதபாரகனை இருவரு மொரேவெட்டாய்வெட்டிக் காளியைத் துதித் தார்களுடனே திரிசூலி பிரசன்னமாகி என்னவரம் வேண்டுங்கேளென்று நவில அண்ணல் எனக்கிவ்வந்தணனை யெழுப்ப வரந்தாரும் என் மந்திரிக் கிஷ்டகாமியார்த்தத்தைத் தாருமென்று பணியவே அதிபனுடைய யுக்தியைக்குறித் தம்மா தங்கி மிகவுஞ் சந்தோஷமுற்று இரண்டு வரமுந்தந்தே னினியோர் வரங்கேளென பூபாலன் வணங்கி ஓ! அம்மணி எங்கள் மூவர்க்கும் மோட்சபாக்கியம் கொடுப்பாயென அக்கங்காளி அப்படியே கொடுத்தே னின்றுட னிம்மந்திரத்தைத் தியானஞ் செய்துக் கொண்டு வாருங்களென் றோர் மந்திரத்தையுபதேசித்து மறையோனையு மெழுப்பிமறைந்தாள். பின்பம்மூவருங் களிக்கடலி லமிழ்ந்து தம் நகரையடைந்து தமது பட்டணத்தில் யாராவது ஜீவயிம்சை செய்வார்களாகில் அவர்களை வீரமாகாளிக்குப் பலியிடுவேனென்று பறையறைவித்து ஜீவகாருண்ய விரதத்தைக் கைக்கொண்டு மூவருமொத்திருந் திறுதியில் மோட்சவீட்டை யடைந்தார்களாதலால் ஜீவகாருண்யமே மேலானவிரதமென் றுரைக்கத்தகும். அன்றி ஜடபரதர் சீவகாருண்யத் தாலேயே பிர்மானந்தத்தை அடைந்தாரெனத் தமால் அதெப்படியெனக் கபீர் ஜடபரதர் காதையைச் சொல்லத் தொடங்கினர்.

பாடல்.

முன்னமோர்காலந்தன்னில் முனிவுகொண்டையோதிய
மன்னவன்சிவிகைதாங்கு மாசடபரதன்றன்னைத்
தன்னகவலியான்மேன்மேற் றவிலாதடிக்கும்போழ்தில்
தன்னையுந்தலைவர்தன்னைத் தரிசித்தோனுதலாலே 1

சடப்ரதஸொன் னூந்தூயோந்றண்டிகைசுமந்துகொண்டே
அடிபலமிகவும்பட்டே யங்கமேலேசைவிட்டே
முடியுடைமன்னன்மீது முனிவிலா துறவிகடம்
மடியுமாயிடினென்செய்வே னென்றவன்மயங்கிநின்றுன்.

மயங்கியோர்சிவனேனு மாழ்குறுதிருக்கவெண்ணித்
தயங்கியபுழுங்கியந்தச் சற்குணனற்றுனகி

முபக்கியாரடித்தபோழ்தும் முடியினையறிந்தபோதும்
நயக்கொடாச்சிவயிம்சை நாயினேன்செய்வதுண்டோ.

தன்னுயிர்போலயிந்தச் சகந்தனிலிருக்குமெல்லா
மன்னுயிர் தன்னைநோக்கி மாதவமுயல்வதன்றி
இன்னலீயெனதாகத்தின்யிச்சைவைத்தசையுமாவி(ஞன்
தன்னைமாய்த்தென்பெறற்கென் றருட்சடபரதன்சொன்

சொன்னமினருளிலாத்தீத் தோன்றலுமச்சமாகித்
தன்னையாய்ந்தறிவையுற்ற சாந்தனென்றவனையேத்தி
என்னைநீர்முனியாவண்ண மெனக்கொருவரமேதந்துன்
பொன்னருட்பாதப்போற்றும் போதமீயெனவேதாயோங்

யம்பையிக்கொலையாற்ஆய வானவராகினுமிவ்
வம்புவிதன்னின்மாள்வாரா தலாலருள்கைக்கொண்டு,னை
தம்பிக்கொலையையென்றுந்தவிர்த்திடென்றுரைத்துதன்
நம்பினபேரைக்கொல்வோர் நரகத்திலமிழ்வரென்றான்.

தன்னைச்சிற்றுறவிதீண்டி னக்கணமதனைக்கொல்வார்
தன்னகநொந்ததைப்போற் சகலமுநோகுமென்றே
உன்னியேநோக்கமாட்டா ருலகத்தின்மாந்தரந்தோ
என்னவாறடைவார்முத்தி யிறைவனேசொல்லக்கேளே

சிவகாருண்யமின்றிச் சீவனைவதைத்தபேர்கள்
பாவநீக்குவதுமில்லை பரத்துவமடைதலில்லை
சீவனைவதைத்தையோதன் றேகத்தைக்காத்தலாலே
ஆவதொன்றுளதோவிந்த வாக்கையாலென்றுரைத்தே.

திமிரினையகற்றித்தன்னை தெளிவித்தும்போவென்றேத
திமிர்சக்ரவர்த்தியென்னு நிருபன்றாழ்ந்தகலப்பின்னர்
அமைவுளவுளத்தனான வருட்சடபரதன்பிரம
நமைவிடவேறேவென்னு நாட்டத்திலிருந்தான்றானே.

ஆரண்யந்தன்னிற்சென்று மறையன்றண்டிகைசுமந்தும்
காருண்யமில்லாமன்னன் கையினாற்படைக்கநொந்தும்
காருண்யந்தனைவிடாமற் காத்தனனகனிவிர் (றான்
காருண்யந்தன்னைக்கொண்டே கதிபெறவேண்டுமென்.

அயன்றலையறுத்தான்று னலைந்தனன்பலநாண்முன்னே
பயன்றவன்வாலிதன்னைப் பதுங்கிருந்தம்பாற்கொன்ற
நயந்தருமிராமர்தன்னை நன்கதாமறுஜென்மத்தில்
ஜெயமுளவேடனாகிக் கிருஷ்ணனைச்செயித்திட்டானே

குருபத்தன்றனையபோந்தி மன்னவன்செகுத்தலாலே
அரியவென்மைந்தாமைந்தா வென்றனுருயிரிழந்தான்
அரிணமாப்புணருந்திவ்ய வமுதந்திமுனியைக்கொன்றே
உரியநல்லுயிரிழந்தா னுத்தமப்பாண்டுராஜன் 12

சிவகாருண்யமின்றிச் சிறுவபதினிற்செய்தீமை
மேவிமாண்டவ்பர்பொல்லா வேதனைக்கழுவிலுற்றார்
துவலகினிற்றவஞ்செய் புனிதரைக்கொன்றதாலே
ஆவிநீக்கிடவாதாபி பகத்திற்றுணவானானே 13

சிவகாருண்யமில்லார் செயுந்தவமவமாய்ப்போகும்
சிவகாருண்யமில்லார் செயுமறம்மரமதாகும்
சிவகாருண்யமில்லார் சேருவரந்தகாரம்
சிவகாருண்யமில்லார் தீமைசெய்கிருதராமே 14

சிவகாருண்ய மில்லாச் சென்மமேமிருக்சென்மம்
சிவகாருண்யமில்லாத் தீயரேபிணியாற்சூழ்வர்
சிவகாருண்யமுள்ளோர் தமைத்தெழுஞ்சீவன்யாவும்
சிவகாருண்யமுள்ளோர் சேருவர்மோட்சந்தானே 15

சிவகாருண்யமுள்ளோர் செய்வதேன்றபஞ்ஜபங்கள்
சிவகாருண்யமுள்ளோர் செய்வதேன்றியானந்தானஞ்
சிவகாருண்யமுள்ளோர் செய்வதேன்யாகம்யோகம்
சிவகாருண்யமுண்டேற் சிற்சுகமடையலாமே 16

ஆவியையேத்தினாலென் னுதித்தன்மயமானாலென் (ன்
சேவைசெய்தின்புற்றாலென் திருக்குவாம்விழிபெற்றாலெ
ஓவியம்போதுற்றாலென் னுத்தமோத்தமனானாலென்
சிவகாருண்யமின்றேற் றீயனென்றுரைக்கலாமே 17

ஆவியைக்கொன்றுற்றோர்க ளாக்கையைக்காத்தலாலே
ஆவிநீங்கிடும்போதுற்ற வல்லற்றீர்த்தின்பீவாரோ
ஆவிநீங்கிடினுந்தீய வழல்புகுந்திடினுங்கொன்மா
பாவியென்கிறபேர்வேண்டாம் படிதனின்முடிவிதாமே.

என்றிங்ஙன முரைக்கும் சிவகாருண்ய வாக்கியங்களைக்கேட்ட தமாலானந்த சாகரத்திலழுந்தினவனாய் கபீரைக் கட்டியணைத்து முத்தமிட்டென்னையனே உன்மதுரமொழிகளைக் கேட் டின்படையாதவர்களு முண்டோவென்றக்கணம் மனையாள் முதலானவருடன் தன் வீட்டையடைந்து சிவகாருண்ய விரதத்தைப்பூண்டு பகவஸ்மரணையால் காலங்கழிக்கத்தொடங்கினார்கள்.

துலுக்கரோ கபீர்நவின்ற மொழிகளெல்லா முத்தமமாகவே யிருக்கின்றதென்னுஞ் ஜீவயிம்ஸை செய்வதற்கிடைந்திருந்தார்கள் கேட்டீர்களோ சித்தர்களே கபீருரைத்த சிவகாருண்ய மொழிகளைக்கேட்பவர்க் கிம்சை செய்யும்படியான மனம்வருமோவராது வருமாயின் தீவினைக்காளாவார்கள் பென நாபாஜிசித்தருரைத்துப் பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்:

கபீர் பசுவின் கன்றைக் கொல்லாமல்
மறுத்த அத்தியாயம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாவது
## கபீர் தன் மனைவியை வர்த்தகனுக்களித்த அத்தியாயம்.

இப்பால் கபீர் சிலநாளில் தர்ம விஷயத்தில் தன் தந்தை சம்பாதித்து வைத்திருந்த ஆஸ்தியை யெல்லாம் நாஸ்தி செய்து நெய்யுந்தொழிலாற் சீவனம் செய்துக் கொண்டிருக்கிற காலத்தில் ஒருநாள் வஸ்திரமும் விலை போகாமல் புசிப்பிக்கு மொன்றுமில்லாமல் காலையிலிருந்து மாலைமட்டும் பட்டினியாயிருக்கும்போது, பகவான் கபீரைச் சோதிக்கவெண்ணி நூறு சாதுக்களாய்க் கபீர் வீட்டையடைந்து, ஓ புண்ணியவானே! இன்றைய்த் திவசம் சூரியோதயமான முதற்கொண்டு எங்களுக்கெங்கும் அன்னம் அகப்படாக்குறைபால் பல விடங்களிற் றிரிந்து மிகவும் நொந்து தருமத்திற்சிறந்த பிரபு! நீரெனக் கேள்விப்பட்டும்மிடமடைந்தோம். ஓசீமானே! இட்சணம் பட்சத்துடன் எங்கள் குட்சி நிறையப் பட்சணமிடுமையாவெனத் துதிக்கும்போது, கபீர்தன்னுபகியை விளித்து, ஓ என்னுயிர்த்துணைவியே! தாய் தந்தையர் பட்டினியால் வாட்டமடைந்திருப்பதற் காயாசமேலிட்டிருக்கும் நம்பால் அனேக சாதுக்கள் வந்து அன்னங் கேட்கின்றார்களே இல்லை யென்போற் கில்லையென லில்லறத்தார்க்குரிய தர்மமல்லவே இரந்தும் பரந்துக்கிடுவெனத் தர்ம சாஸ்திரம் முறையிடுகின்றதே ஓ் மாதரசே! இச்சாதுக்களின் குட்சிபாதை நீங்குவதற் கேதேனும் பொருளிருந்தால் விக்கிரையஞ்செய்து அடியார்களுக் கன்னம்படைப்பாயென, சுந்தரா ஓ சுவாமி! உம்மைபறியாமலும் ஒரு வஸ்துவை நானொளித்து வைத்திருக்கின்றேனா இல்லையே. இவ்வீட்டை விற்றுத் தொண்டர்களுக்குத் தொழும்பு செய்யலாமென்றாலும், ஒருவருக்கடமானமாக விருக்கின்றதே மங்கிலியத்தைக் கொடுப்போமென்றால் குழாயன்றி மற்றதெல்லாம் விக்கிரையப்படுத்தி விட்டோமேமாங்கிலியக் குழாயைக்கொண்டு போய் விற்றால் இத்தனை சாதுக்களுக்குத் தேவையான பதார்த்தங்களகப்பட மாட்டாதே என்னும்பற்பலவார்த்தைகளுரைத்து முடிவில் ஓ என் பிராணவல்லபா! அடியாள் கடைத்தெருவுக்குப் போகும்போதும் வரும்போதும் ஒரு வர்த்தகன் என்மேற் சிறியகல்லை யெறிவதன்றி ஓ பெண்ணே! நீ யென்னிடமோர் நாள் வருவையாகில் தேவையான திரவியமகப்படும் யென்று சொல்லுகிறார். ஆகையால் இந்த முகாந்திரமாய் நடந்தால் சாதுக்கள் குறையும் தங்கள் வியாகுலமும் நீங்கும் மனைவியை விற்பது மானபங்கமெனக் கருதவேண்டாம் நவகண்டங்களை யாண்ட அரிச்சந்திர மகாராஜன் தருமார்த்தமாய்த் தன் நாயகியையும் தான் முளையையும் விற்று புலையனுக் கடிமையாய்ப் போனாரெனப் புராணங்களில் முறையிடுவது நீரறியாத தல்லவென்றுரைக்க,

அதுகேட்ட கபீர் சந்தோஷ சாகரத்திற் படிந்தவராய்த் தன் காந்தையைப் பலதர மாலிங்கனஞ்செய்து அன்புடன் முத்தமிட்டு ஓ என் குலவிளக்கே! கோதிலாமதியே! நிதிலாவமுதே! குணபூஷணமே! சுந்தரமே! சோபிதமே! நீ நல்ல உத்தம பத்தினியாதலால் இத்தருணத்திற் பரிசுத்த மொழியைப்புகன்று என்னைக் காத்தாய் அடியார்கள் பசியைத்தீர்த்தாய் வாழ்க்கைக் குத்துணையான மனையாளிருக்கும் வீடுகற்பக விருட்சங்களடர்ந்த சுரநாடு எனச் சொல்லப்படும். அருந்ததிக் கிணையான திருந்திய தேவியாகிய நீ யெனக்கருந் துணைவியாயிருக்க எனக்கோர் குறைவு முண்டாகுமோ ஓமதியிற் சிறந்த புனிதவதியே! இக்கணம் அவ்வர்த்தகனைக் காட்டி என் வியாகுலத்தை யோட்டிப் பத்தர்களைப் பாராட்டி விருத்தாப்பிய தாய் தந்தையரைச் சீராட்டி இல்லற தருமத்தை நிலைநாட்டிவைக்கச் சீக்கிரம் புறப்படுமென்றழைக்கும் கணவனைச்சூழ்ந்து பலதரந்தாழ்ந்து வியாபாரியைக் காண்பிக்கிறேன் வாருமென்றழைத்துக் கொண்டுபோய்த் தன்மேற் காதலாயிருக்கும் வர்த்தகனைச் சுட்டிக்காட்டினாள். கபீர் அவ்வணிகன்பாற் சென்று ஓ தனவானே! கனவானே! இவனென் மனையாளாகும் தாங்கள் இவ்வனிதையின்மேற்கொண்டிருக்கு மவா நீங்க இவளை உமக்கொருநாள் கொடுக்கிறேன். பதில் சத் புருஷர்கள் புசிக்கத்தகுந்த தவசங்களளித்து என்னைக் காப்பாற்றுமையா வெனத் துதிக்க, வர்த்தகன் காமத்துக்குக் கண்ணில்லை காமிக்கு முறையில்லை யென்னும் பழமொழிப்படி காமாந்தகாரத்தால் சுந்தரா தன்னருகில் நிற்பதைக்கண்டு அடங்கா விகாரங்கொண்டு கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தாற்போலவும், மார்க்கத்தில் மாணிக்கங் கிடைத்தாற் போலவும் பூரித்துக் கபீரை நோக்கி, ஓ கபீர்! நூறு பேருக்கல்ல இருநூறு பேருக்களிப்பேன் இப்பெண்ணை யென்னிடமொருதரஞ் சயனித்திருக்கக் கருணை கூறுவாயெனத் துதித்தான்.

கபீர் ஒருதரமேநின்று இராத்திரிக்கெல்லாம் வைத்திருந்து மறுநாளனுப்பலாமிது சத்தியமென நம்புமென்றுரைத்து நூறு சாதுக்களுக்குத் தேவையான பதார்த்தங்களைக் கொண்டுபோய் மனைவியைத் துரிதமாகப் பாகஞ் செய்யும்படியாகச் செய்து சாதுக்களின் பசியாரப் படைத்துத் தாய் தந்தையரை நோக்கி, ஓ மாதா பிதாவே! சாதுக்களுக்கின்னஞ் செய்யவேண்டிய பணிவிடை செய்துக்கொண்டிருங்கள். ஓர் கணத்தில் வருகி

தேமென்றுரைத்து தன் மனையாளை நன்றுப் சிங்காரித்துக்கொள்ளச்செய்து அழைத்துக்கொண்டு துரிதமாய் வர்த்தகன் வீட்டை நோக்கி வருகையில், வர்த்தகன் தன் பள்ளியறையை நன்றுய்ச் சிங்காரிக்கச்செய்து தானும் ஆடையாபரண அலங்கிர்தனைச்சாந்துசவ்வாது களைப் பூசிக்கொண்டு சுந்தரா எப்போது வருவாளோ வெனக் காத்திருக்குந் தருணத்தில் கபீரும் சந்தோஷ சித்தனுய் அங்கடைந்தார் அவரையும் சுந்தராவையுங் கண்ட வணிகன் சந்தோஷ சித்தனுக வாருமென்றழைத்துக் கொண்டுபோய்ப் பள்ளியறையிற் பிரவேசித்துக் கபிருக்கோர் மோகனமாலையைக் கொடுக்கவந்தான்.

கபீர் ஓ புண்ணியவானே! சத்சாதுக்களுக் கன்னமளித்த உமது குணத்தை நானெக்காலத்தில் தீர்க்கப் போகிறேனேவென்கிற வாட்டத்துடனிருக்கு மெனக் கிதளித்து மனக்கோட்ட மடையச்செய்யாமல் உமது மனேபிஷ்டத்தை முடித்துக் காமவேஷ்டையைநிவர்த்தி செய்துக் கொள்ளுமையாவெனப் பகர்ந்து அவ்விடம் விட்டு நகர்ந்து போகவெண்ணங்கொண்டு தன்னுயகியை விளித்து ஓ மாதரசே! இன்றிராத்திரி இவரிஷ்டத்துக் கோர் கஷ்டம் வாராமல் நடந்துக்கொள்ளென் றுரைத்துத் தன் வீட்டையடைந்து சாதுக்களுக்குச்சேவைமுதலானதுஞ் செய்துக்கொண்டிருந்தார். வர்த்தகனே முடவன் கொம்புத்தேனுக் காசைப்பட்டாற் போலவும் லோபி சொர்க்கத்தை வாஞ்சித்தாற்போலவும் விபசாரி பரமபதத்தைக் கோரியதைப்போலவும், துரோபதையை யிச்சித்த கீசகனைப்போலவும், தமையந்தியை யிச்சித்த கிராதகனைப்போலவும், புருரவச்சக்கிரவர்த்தியின் காந்தையையிச்சித்த ஓர் வர்த்தகனைப்போலவும், கபீர் மனையின்மேல் மோகங்கொண்டு ஓ பெண்ணே! என்னிரு கண்ணே! அன்புள்ள மானே! இன்பத்தருந்தேனே! பஞ்சுபோன்ற பாதங்கள் நோக ஏன் நிற்கின்றுய் பஞ்சணைமேல் வீற்றிருப்பாயாக. எனக்குற்ற காமதாகத்தைத் தீர்ப்பாயாக வென்றுரைத்துக்கொண்டே அவ்வறையின் கதவை மூடினுன். உடனே பகவான் அவ்வூர் கொத்தவால் வேஷத்துடன் வந்து அடா துன்மார்க்கா! அறிவில்லா மூர்க்கா! கதவைத்திறடா பரஸ்திரீ கமனஞ் செய்யுந்திருடா வென்றக்கபாடத்தை எட்டியுதைத்து அதட்டினுர்வணிகன் சுந்தராவைக் கட்டில்கீழ் ஒளித்துக்கொள்ளென் றுரைத்துப் பயங்கரத்துடன் அரணத்தைத்திறந்து புறம்போந்து கொத்தவாலைக்காணுமல் கதவை மூடிக் கபீர் மனைவியினருகிற் சென்றுன். பகவான் முன்போலவே அதட்டினர். பின்னுமவ்வாணிபனச்சமுற்றவனுய் வெளிப்பட்டுச் சுற்றுப் பக்கங்களிலும் பார்த்துப்பின்னு முட்போயடங்காக் காமவிகாரத்தால் அப்பத்தினியை ஆலிங்கனஞ் செய்யப்போனுன். பகவான் கொத்தவாலுருவுடன் அக்கதவு உடைப்படும்படியா யுதைத்துத்தள்ளி வர்த்தகன்மேற் குதித்து கிழே தள்ளி மிதித்து அடா பஞ்சமாபாதகா! எமகாதகா! சத்குருவின் மனைவியும் சாதுவின் மனைவியும் தன் தாயல்லவோ இவ்வுத்தமியைக் காம விகாரத்தோடும் பார்த்த உன்னிரண்டு கண்களையும் பிடுங்கியெறிவேன் ஆலிங்கனஞ்செய்யவெத்தனித்த கரங்களைத் துண்டிப்பேன் இப்போதே உன் சிரத்தைக்கண்டிப்பேன் பெண்ணே யென்றழைத்த வாயை பிளந்து மணிக்குடலெடுத்து எமலோகத்துக்கனுப்புவேனென் மாறி மாறி யடித்து முழங்கையாலிடித்து மூர்ச்சையாய் விழச்செய்து சுந்தராவின்கரத்தைப்பிடித் திழுத்துக்கொண்டேபோய்க் கபீர் வீட்டினுள் தள்ளி மாயமாய் மறைந்து காற்றுமழையுங் கலங்தடிக்கச் செய்தார்.

சுந்தரா ஐயோ அர்த்தமளித்த வர்த்தகன் அனியாயமா யடிபட்டானே மானங்கெட்டானே பழிவந்து நேரிட்டதே என்னவென்று பதிக்குரைப்பேன் சங்கதியெப்படி தெரிவிப்பேன் என்கிற அச்சத்தால் சற்று நேரம் நின்று ஒன்றுந்தோன்றுதவளா யுள்ளபடி முடியட்டுமென்று பிரவேசித்தாள். சாதுக்களுக்குப் பணிவிடைசெய்துக் கொண்டிருக்கும் கபீர் தன்னுயகியைக் கண்டு பெருங்கோபங்கொண்டு வெளியிலழைத்து வந்து மிகவும் நொந்து அடிபேதாய்! அறிவில்லாக் கோதாய் வர்த்தகனை மோசஞ்செய் தென்னிடமேன்வந்தாய் எனக்கேனிடர்தந்தாய் ஆ! ஹா! என்வாக்கைத் தடுத்தாயே துன்பத்தைக் கொடுத்தாயே பதிவிரதத் தன்மையை விடுத்தாயே தயிரியத்துட னென்னை யடுத்தாயே நெடுநாளாய்ச் செய்துவந்த நோன்பைக் கெடுததாயே, பஞ்சமா பாதகங்களுக்கு விமோசனமுண்டு. வாக்கை மறுக்கும்பேர்க்கோர். போக்குங்காணுமே வாக்கைக் காப்பாற்றும் நிமித்தம் அரிச்சந்திரன் வெகு கஷ்டப்பட்டுத் தன் மனைவியை வெட்டத்துணிந்தான், தசரதனும் மரனனும் தன் பிராணனை யிழந்தார்கள், பரமசிவன் பத்தரூரன் தூத்த வோட்டமெடுத்தான் அருச்சுனன் கிருஷ்ணருடன் போர்புரிந்தான் வாக்கைக்காப்பாற்றும் நிமித்தமேயல்லவோ பாஞ்சாலன் கட்டுண்டான் அடிபாதகி! எமகாதகி! என் வாக்கை வீணுக்கி நரகத்துக்காளாக்கிவந்துவிட்டாயே! நீகெட்டாயேஎனப்பற்பலவார்த்தைகளாடி நிந்திக்கும்போது சுந்தரா காவலனடிகளில் வணங்கி, ஓ ஸ்வாமி! சத் புத்திரனுக்கு மாதா பிதாக்களே தெய்வம், சத்சீடனுக்காரியனே தெய்வம், இராஜனுக்கு நீதியே தெய்வம், பதிவிரதைகளுக்குப் பதியே தெய்வம், நற்புதல்வனுக்குத் தந்தை தாய் வாக்கே

வேதம் மாணுக்கனுக்குக் குருவாக்கே வேதம இறைவ னுக்கு நீத்வாக்கியமேவேதம் பதிவிரதைக்குக் கொழு நன்வாக்கே வேதம் எனத் தெரிந்திருந்தும் உம்முடைய வாக்கை மரணம் வந்தாலும் மறுப்பேனு தாங்களென்னை வர்த்தகன் வீட்டில் விட்டுவந்ததும் ஊளவறிந்த இவ்வூர் கொத்தவால் வர்த்தகனைபடித்து மூர்ச்சையாய் விழச் செய்து என்னைப்பரபரவென் றிழுத்துக்கொண் டிவ்விட ம்விட்டுப்போய்விட்டான் நம்முடைய விரதத்தைக்கெடு க்க உட்பட்டா னிவ்வநீதத்துக்கு நானென் செய்யட்டு மென்று முறையிட்டு ஓவெனக்கூவி யழுதாள்

அவ்வழுகுரலோசையை சாதுக்களும் தாய்தந்தை யுங்கேட்டு ஓடோடியும்வந்து என்னகுறை நேரிட்டதெ னக்கேட்க, கபீர் அட்ங்காக் குரோதங்கொண்டு ஓர்பெரி யதண்டத்தைக் கையிலேந்திக்கொண்டு என் மனையாளை நானொருவனுக்குப் பிரியத்துடன் கூட்டிக் கொடுத்தால் இந்தவூர்கொத்தவால் தடுக்கும்படியான காரணமென்ன இக்கணமே அவனைக் கொல்லாமல் சற்றும் பொறுக்க மாட்டேனென்று மனையாளை யழைத்துக்கொண் டோர் கணத்திற் சென்று கொத்தவால் வீட்டின் கதவைத்தடி யாலடித்துடைத்து அடா துர்மார்க்க கொத்தவாலே! நானென் மனையாட்டியை வர்த்தகனுக்குக்கூட்டிக்கொடு த்தால் நீயாரடா மறுக்கிறவன் வணிகன்பதைக்க அடிக் கிறவன் சிக்கிரம்வெளியிற்புறப்படு இல்லாவிட்டால் உன் னையும் உன்களத்திரபுத்திர மித்திரர்களையு மித்தடியாற் கொன்று ஒருகணத்தில் வென்று என்பராக்கிரமத்தைக் காட்டிவிடுவேன் எமலோகஞ்சேர வாட்டி விடுவேனென் றிரைந்துறைந்து முனிவுனிறைந்து அதட்டும் போது அப்பேதமைக் கொத்தவால் திடுக்கென்றெழுந்து அவர் சேவடியில் விழுந்து அப்பனேசரணம் ஒப்பிலா ஞானவு த்தமாசரணம் செப்புதற்கறிய செல்வனே சரணம் இப் புவியோர்க ளேத்துவோய்சரணம் அற்புதாசரணம் அரி யனேசரணம் விற்பனமெய்த்தவ விமலனேசரணம் தப்பி தஞ்செய்யாத் தமியனை நீர் கோபிப்பதுகலனோபிரானே சரணம் சரணமெனத்துதித்து ஓ மாதவனே நானொரு சேதியுமறியேன் என்னகாரணம் யார்செய்தார்குறைகள் என்னையேன் விணுச்சபிக்கவந்தீர் துன்பந் தந்தீரென்று சேவகருடன் புறப்பட்டு வர்த்தகன் வீட்டை யடைந்து மூர்ச்சையாய் வீழ்ந்துகிடக்கும் வர்த்தகனுக் குபசாரனை செய்தெழுப்பி என்ன காரணமென்று கேட்க வணிகன் கொத்தவாலைக் கண்டவுடன் கிடுகிடென்று நடுநடுங்கி என்னைக்கொல்லப் பின்னும் வந்தாயாவெனக்கூவிப் பல பக்கங்களிற்றுவி மூர்ச்சையடையவே கபீர் ஆக்கிர கிக் குரோதமாய் ருத்திர ரூபத்தைக்காட்டி அடா கொத்த வாலே நீயே யிக்காரியஞ்செய்தா யிதற்கிவ்விருவரும் சா ட்சி இதோ இத்தண்டத்தா லுன்மண்டையை சிதறப்பு டைக்கிறேன் பாரெனத் தடியை ஓங்கவே ஸ்ரீமந் நாராய ணர் பிரசன்னமாகி ஓ கோபதீபத்தில் மிருந்த கபீர்தா சனே முகவிலாஸனே அந்தக்கொத்தவால் வர்த்தகனை யடிக்கவில்லை இந்தக் கொத்தவாலே அடித்தானுத லால் அவன்மேலோங்கின தடியை என்மேலோங்கி யடித்து உன் வைராக்கியத்தை முடித்துக் கொள்ளென் று நவரத்ன கசிதமான கிரீடத்தைத்தாழ்த்தி முதுகை க்காட்டிக் குனிந்துநின்றார் ஸ்ரீ மந்நாராயணனைக் கண்ட கபீர் கையிலிருந்த தடியை எறிந்துவிட்டுப் பலதரஞ்சூ ழ்ந்து பாதங்களிற்றாழ்ந்து ஓ அனுதரட்சகா! அகிலாண் டகோடி பிர்மாண்டநாயகா! ஸ்ரீராமா பரந்தாமா சகஸ் திரநாமா! ஓ பகவான் ஓ தெய்வமே அடியேனுக் காகக் கொத்தவால் வேஷமுந்தரித்தீரோ,

வர்த்தகன்மே லார்ப்பரித்தீரோ • வர்த்தக னுமது கரங்களாலடிபட என்னபாக்கியஞ்செய்தானே ஏது தவ ஞ்செய்தானே அடியேனைவோரடி அடிக்க லாகாதோ? எனக்குற்ற குறைகளெல்லாம் நீங்கிப்போகாதோ? அடி யேனைக் குனிந்து நிற்கலாமோ யாவரும் வணங்காமுடி யைத் தாழ்த்தப்போமா? சுந்தராவைக்காக்க வந்தாயோ அரிதானசேவை தந்தாயோவெனப் பாதங்களிற் பணிந் தபடி பலபலவிதங்களாகத் தோத்திரஞ் செய்யும்போது பகவான் ஓ கபீர் உலகில் தன் ஸ்திரீயை ஒருவன் தொடு வானு லவனைக்கொல்லத் துணிவார்கள் கொன்று விடு வர் அப்படியிருக்க நீ ரிப்படி செய்யலாமா உனக்கு மா னமில்லையா? ஈனமில்லையா? நீர் புருஷனல்லவா விரித்து ச்சொல்லவா? தர்மார்த்தமாய் தன் ஸ்திரீயைப் பலவந்த மாய்க் கூட்டிக்கொடுக்கலாமா? புருஷனுக்குள்ள அபி மானத்தை விடுக்கலாமா பதிவிரதையைக்கெடுக்கலாமா அபகீர்த்தியை யடுக்கலாமா? இப்படி பரமசிவனும் ரகு ராஜனும் பிறருக்குத் தன்மனைவியர்களைக் கொடுக்க வில் லைவா வெனச் சங்கைசெய்வீரோ அவர்கள் ஒருவர்வாஞ் சித்த வஸ்துவை வைக்கலாகாதெனக் கொடுத்துவிட்டா ர்க ளப்படிசெய்ததும் அவர்களுக்குற்ற ஞானப்பயித்தி யமாகும் நீர் ஒருவர் கேட்காமலிருக்க பலவந்தமாகக் கூட்டிக்கொடுத்தீர் நாணத்தை விடுத்தீர் சொற்பமான தானியதவங்களுக்காகத் தாரத்தை கொடுத்தவர்களு மு ண்டா அடியார்களுக் கன்னமிட அருந்ததிக்கிணையான அரிவையை மனந்துணிந்து பிறனுக் களிக்கலாமா இப்

படி இவ்வுலகில் நடந்திருக்குமாவெனப் பற்பல வார்த்தைகளாடும்போது,

கபீர் பகவானைநோக்கி ஓ மாதவனே என் மானம் உன்மானம் நான் நீ எனதுனது என்னும் விகற்பங்களெல்லாம் உமது லீலையான மாயாசம்பந்தமல்லவோ வாசாக்ஞானத்தாலும்பை வெல்லவோ உமதரிய சேவை பெற்றவர்களுக்கு ஞானந்தகார கூபத்தி லமிழ்ந் திருக்குமக்கிரந்தி யுள்ளவர்களுக் கியல்பான மானவீனமுமிருக்குமோ! அர்ச்சுனனுக் குடன்பிறந்தாளை பலராமருக்குத் தெரியாம லிணங்கவைத்த தீனமல்லவோ அப்பார்த்தனை அசுவத்துடன் பூபிரதட்சணஞ் செய்தகாலத்தில் ஓர் தினமிரவில் காமவிகாரத்தால் கலக்கமுற்றிருக்க சுமித்திரைபோயவனை உல்லாசப்படுத்தின தீனமல்லவோ உமது கபடநாடகத்தை விரித்துச்சொல்லவோ மர்மமறிந்தவர்களுக்கு மானமில்லை இச்சையிறந்தவர்களுக் கீனமில்லை என்னும் பழமொழி மெய்யா பொய்யா யிருக்கட்டும் சாதுக்களுக்குதவிய வர்த்தகனை வீணேயேனடித்தீர் என் வாக்குதத்தத்தையேன் கெடுத்தீர் என்றுபணிய,

பகவான் ஓ கபீர் சாதுக்களுக் கன்னமளித்த இவ்வர்த்தகன் உமது மனைவியைத் தொடுவானாகி லுடனே பஸ்பமாயெரிந்து போவதற்கோர் ஐயமுளதோ உமக்குதவி செய்தவ னுயிர்நீங்குதல் தர்மமோ உமது மனைவியைபடுத் துயிர்விடுக் தெமபுரம்போதலைத் தடுத்து அடித்தது கர்மமோ உமக்குந்தெரியாத மர்மமோவெனப் புகல கபீர் ஓ ஸ்வாமி அடியே னிசைந்து கொடுத்தபின் வணிகன்மேற் குற்றமென்ன அவனென்றும் பலாத்காரஞ்செய்யவில்லையே யெனத் தொழப் பகவான் ஓ அரிபக்தனே அவனுக்கு விருப்பமிருந்த காரணத்தா லல்லவோ நீர்கொடுக்கநேரிட்டது அன்றி எரியும் நெருப்பைவிருப்பத்துடன் தொட்டால் சுடாமலிருக்குமா நீ ரவனுக்குச் சொந்தமாகக் கொடுத்தாலும்சொந்தவிளக்கென்று முத்தமிடலமா; பரஸ்திரியை விகாரத்துடன் தொடலாமா? பரஸ்திரி கமனஞ்செய்தவர்க ளெல்லாம் வாழ்விழந்து தாழ்வடைந் தார்களேயன்றி மேன்மையடைந்த துண்டோ பலவந்தமா யணைபவரும் ஸ்திரி பரந்தையென்றும் அவள் முகம்பார்க்கவே கூடாதென்றும் வேதமுறையிடுவது பொய்யா பரஸ்திரியை இச்சித்த மாத்திரத்தில் மலைப்பாம்பாய்ப்போகும் சாபத்தைப்பெற்ற நகுஷராஜனுடைய சரித்திரமறியாதவரோ பரஸ்திரிகமனஞ் செய்தவன் இகபரத்துக் குதவாதவனென்றும் பரஸ்திரிகமனஞ் செய்பவன் பாவிகளிற்சிறந்த கொடும்பாவியென்றும் பரதாரகமனன் குடும்பம் பாழாய்ப்போகுமென்றும் பரதாரகமனனுக்கு ரவ்ரவாதி நிரையமே பிராப்தியாகுமென்றும்பிறர்மனையாளைப்புணர்ந்தவனே பேடியாய்ப்பிறப்பானென்றும் பிறர்மனையாளை விகாரமாய்ப் பார்த்தவனே கண்ணிழந்திறப்பானென்றும்அயலான்மனைவியையாலிங்கனஞ் செய்தவனே குறத்தால் கரங்களறுபட்டு மடிவானென்றும் அயலான்மனைவிக் கர்த்தமீந் தவள் கற்பையழிப்பவனே அநீதமாய்க் கொலைக்குட்பட் டழிவானென்றும் பெரியோர்களா லுரைக்கப்பட்ட வாக்கியுங்க ளபத்தமோ ஒருவர் குடும்பத்தை இடும்பா லலக்கணுறச்செய்வது நீதியோ கற்பழிந்த காந்தை கர்த்தபமென்பது பொய்யோ? நீர் சாதுக்கன்னமளித்துப் புனிதனானீர்கள் வர்த்தகனுமது நாயகியின்மேல் மோகித்து நரகத்துக் காளானான் பலவந்தமாய் வணிகனுக்குமது மனைவியைக் கொடுத்தவனை அந்தகாரத்துக் காளாக்குதல் நன்மையோவெனத் திருவாய் மலர்ந்தருளக் கபீர் ஓ என்னாண்டவனே உமது கரங்களா லடிபட்டவனுக்கும் நிரையத் துன்பமுண்டா? அனேககாலந் தவஞ்செய்தோர் களுக்குங் கிடைத்ததற் கரிதான உம்மைக்கண்ணாரக் கண்டவர்களுக்கு மோர் குறையுண்டா ஓ அச்சுதனே உச்சிதனே என்வாக்கை எவ்விதமாய்க் காப்பாற்றுவே னதற்கோர் மார்க்கமுரைக்க வேண்டுமெனபணிய பகவான் ஓ மாதவனே உனக்குச்சொந்தமான முத்திக் காந்தையை யவனுக்களித்து அவளுடன்கூடி இன்புற்றிருக்கும் படியாகச் செய்வீர் ஏனெனில் உத்தமர்களைப் பகைத்தவர்களும் முத்தர்களாவாரெனும் மொழி யறியாதவரோ வென்றுறைந்து மறைந்து போயினர்.

பின்பவ்வர்த்தகன் கபீர் திருவடிகளில் பணிந்துநயனங்களையணிந்து ஓ என்சத்குருநாதனே மெய்ஞ்ஞான போதனே உமது மகிமையை யறியாமல் யானியற்றிய குற்றத்தை நற்றவமாகக் கொண்டென்னையாட்கொள்ளுமையாவெனத் துதித்துச் சுந்தராவின் தாட்டாமரைகளிற் சிரசாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு ஓ என்னையீன்றதாயே நின்னைப்பார்த்த கண்களின்னங்கெடாமலிருக்கின்றனவே ஆச்சரியம் உம்மைப்போ லொத்த பத்தினியிருப்பதினாலே யல்லவோ கரையிலாமற் கடலும் நிற்கின்றதே கனிதப்படி சூரியனும் உதயமாகின்றான் ஓ என்னம்மணி! உன் பொறுமைக் காகாயத்தையுமளவிடப்போமோ தாத்திரியின் கனத்துக் கிணையான ஓர் வரையுமுண்டோ ஸ்ரீமந் நாராயணருடைய அரிய சேவையை அரைக்கணத்திற் றருவித்த என்

மாதாவே! என்மேல் முனிவுகொள்ளாம லிட்சணமே ரட்சியுமெனத் தொழுதழும்போது சுந்தரா! கருணைக் கண்களைச் சாத்திப் பரமபக்தனுகக் கடவாயென வாழ்த் தித் தன் கணவனைப் பார்த்துக் கரங்களைச்சேர்த்து, ஓ சுவாமி! மனுளனுப்வந்து மகனுப் முடிந்தானென்னும் கதையின்படி நமக்கு புதல்வனுகச் சரணமடைந்த இவ் வர்த்தகனை அன்புடன் நோக்கி துன்பங்களைப் போக்கிக் காத்தாட் கொள்ளுமையா வென்று வணங்க, கபீர் அவ் வணிகன் நாக்கினில் தாரக வாக்கியத்தை எழுதி நிஷ் காமியாகக் கடவாயென் ருசீர்வதித்து மோட்ச வநிதை யைக்கூடும் மார்க்கத்தைப் போதித்து பேரின்பவாரியில் மூழ்கி இருக்கும்படியாய்ச் செய்து பந்தபாசங்களை கொய்து மனைவியுடன் வீட்டையடைந்து அங்கு நார தாதி முனீசுவரர்களுட னெழுந்தருளியிருக்கும் பகவா னைக்கண்டு ஆனந்தங்கொண்டு ஆ ஹா இப்போழ் தங்கு மாயமாய் மறைந்து உடனே இங்கு நாரதாதி முனீசு வரர்களுட னிறைந்து காட்சிகொடுத்த கருணையேதோ நான் செய்த தவமேதோவெனத் துதித்துருகிக் கண் ணீர் பெருகிக் களிப்பின்மேலீட் டானந்தமா யபிபரந் தாமனைத் தோத்திரம் புரியும்போது பகவான் கபீர் மஸ் தகத்தின்மேற் றன்னஸ்தத்தைத்தாக்கி ஓ பரம பாகவத னே! நீரில்லற தர்மத்துக் குறுதித் துணையான தர்மத் தை காப்பாற்றுகின்றீரோ இல்லையோவெனச் சோதிக்க வேண்டி நானே இந்த முனீசுவரர்களுடன் வந்தும்மை அன்னங்கேட்டும் மனைவியை அயலானுக் களிக்கும்படி யாகச்செய்து ஆனந்த மடைந்தேன்.

சுராசுருக் கோரோர் காலத்தில் சுரலோகத்தைக் கொடுத்ததுபோலப் பரதாரகமனம் முதலான பாவஞ் செய்வோர்களுக்கு மும்மா லிக்காலத்தில் மாட்சிமை யான என் காட்சியைக்கொடுக்க நேரிட்டதென் றுரை த்து ஜிஜாபியையும் தமாலையும் நோக்கி, ஓ புனிதர் களே! இனி இந்நாட்டைவிட்டுக் காட்டையடைந்து தபத்தா லென்பதவியை யடையுங்களென்ருக்கியாபித்து மறைந்தருளினர். பின்பு தமால் மாதா பிதா மறை போர் துறவோர் பத்தர் சித்தர் பரப்பிரமக் ஞானிகளா கிய முத்தர் முதலானேருடைய வாக்கிற் சிறந்தது குரு வாக்கியம், குருவாக்கிற்சிறந்தது தேவவாக்கியமாதலால் ஸ்ரீமந்நாராயணருடைய வாக்கியத்தைக் கடந்தவருமுன் டோவென் றன்புள்ள மகனை வாரியெடுத்து மடிமீதிருத் திக்கொண்டு சில நியாயங்களைச் சொல்லத் தொடங்கி னர். அது ஏதென்றால், ஆ என்மகனே! அழகான முக னே! ஸ்ரீ பகவான் நமக்கடிக்கடி பிரசன்னமாகின்ரு ரென்கிற வெண்ணங்கொள்ள வேண்டாம் தெய்வ சகா யத்தினலாவது குரு சகாயத்தினலாவதுமோட்ச மார்க் கந்தெரியுமன்றி மற்றையோகம் த்யாகம் - தியானம் - தானம் - மோனம் - ஞானம் - தபம் - ஜபம் - மந்த்ரம் - யந்த்ரம் முதலானவைகளால் தன்னையறிவது கூடாது ஆரியர்க்கிருபையன்றி ஞானதிருஷ்டியில்மனதுநாடாது உபாயத்தாலாகிற காரியம் பராக்கிரமத்தாலாகிற தென் கிற நியாயமுனக்குத் தெரிந்ததே சிலர் நீர்மேல் குமிழி யான இத்தேகத்தைச் சுழுத்தியவஸ்தையிற்பிரேதமாய்ப் பார்ப்பார்களன்றிச் சாக்ராவஸ்தையிற் பார்க்கமாட்டார் கள். எதினுலென்பையோ மலமூத்திர மாம்சக்கிருமிகள் சீரழித்த நரம்பென்பு தோல் மச்சை மயிர் மூளைகோளை நஞ்சு குடர்களுஞ்சேர்ந்தோருருவா யிருக்கும். இந்த ஸ்தூலதேகத்தை நானென்கிற அபிமானம்பூண்டுதன்னை மறந்திருக்கும் அவிவேகிகள் அஞ்ஞானந்தகாரக் குகை யிற்சிக்கி நரக வீடாகிய இத்தனுவிற்சொக்கி வியாதிக ளால் முக்கி அன்னப்பாலுந்தக்காமல் கக்கி எமனுக்கினை க்குள் புக்கிச் சிருஷ்டிகாத்தன்முன் வெட்கி அன்னக் கருவினுள் மட்கித் தாசனென்று பேரெடுத்து உற்பவித் தவதூதன் சீரெடுத்து மானசாதிகள் வளர மனமென் னும் மாயையும் வளர்ந்து பயவழியும் விடுத்துப் பாலப் பருவமடுத்து நாருசிக்கே போர்கொடுத்துக் கௌமார தசையையடுத்து விளையாடலாதிகளைத் தொடுத்து எவ் வனமெடுத்துக் காந்தையால் பகவான் ஸ்மரணையைக் கெடுத்து மாயாசம்சாரபாரத்தையெடுத்துத் தனைமறக்கு ம் பிர்மஞானத்தைத்தடுத்து விருத் தாப்பியமடுத்துத் தாரபுத்ரமோகத்தைகொடுத்து எமனுக்குரியசொத்தாகி மறுஜென்மத்துக்கு வித்தாகி யிருப்பார்களவர்களே ஆயுளின்ன மிருக்க,

மோட்சவார்த்தை இப்போதே அபேட்சித்தல் சுபேட்சை யல்லவென்று காட்சிப்பிரமாணத்தில் சுடு காட்டுக்குப்போகும் காயத்தை என்னமாயத்தால் நம்பு கிறார்களோ அவர்களுக்கே வருஷப்பிரமாணம் வாசாக் ஞானிகளுக்கு மகிப்பிரமாணம், முமுட்சுகளுக்கு நாட் பிரமாணம், அப்பியாசிகட்குக் கடிகைப்பிரமாணம், ஆரூ டர்களுக்கு மூச்சுபிரமாணமாதலால் பகவான் ஓர் முகூ ர்த்தத்துக்குள் முப்பத்தாறுதரம் பிரசன்னமானுலும் போதாதென்றே யிருக்கவேண்டும் மாயையானது தன் னிழல்போற் பிரியாதிருந்துக் கொண்டெக்காரியத்தால் நமக்குளைக்யமாவானே நமது பிரமஞ்சருப நாமத்தைக் கடக்கும் மார்க்கத்தைத் தேடுவானே வென்கிற எண் ணத்தாற் கற்சேருவதுபோல நம்மைக்கலக்கி மோட்ச மார்க்கத்தை விலக்கிச் சுழல்காற்றி லகப்பட்டுழலும்

சருகைப்போல ஜனனமரண தரங்கங்கள் வீசும் வாரிதியிற் படிந்திருக்கும்படியான வகைக்குரிய காரியங்களைச் செய்து களித்திருக்கும்படியாய்ச் செய்கின்றது. அதையே மாயாபூதமெனச் சொல்லப்படும் அன்றி, அப்பா ஒப்பிலாமகனே! தெய்வத்திலுங்குருவே! பெரியவரென்றே சாஸ்திர சித்தாந்தஞ் சத்தியமேயாம். பகவான் முனிவு பரமாசாரியராற் றீர்ந்துபோம். குரு சாபத்தை அறியாற்றீர்ப்பதரிதாகும். ஆயினும் காரிய காரணங்களென்கிற உபயமார்க்கத்தைத் தெரிவிக்கு மாரியர்களில் காரணகுருவே கர்த்தனாகும். காரணக்குருவின் லட்சணம் சுலட்சண மானவர்களுக்கே தெரியுமெனப் பெரியோர்களுரைக்கின்றார்கள். இகவெண்ணங்க ளிறந்து தன்னை மறந்திருக்கும் காரணகுருவே பரப்பிரமமென்று சொல்லத்தகும்.

மாத்ருதுரோகி பித்ருதுரோகி தெய்வதுரோகி யென்றுரைக்காமல் குருத்துரோகியென்றே உலகத்தில் மிகவும் வழங்குங்காரணம் தனுமனதனங்களைத் தாரை வார்த்து நிறையும் பிரியாமற்கட்டித் காத்துக் காற்சவைமுதலானவைகளாற் றேகம் வேர்த்து எப்போதும் மஸ்தகத்தின்மே லஸ்தங்களைச்சேர்த்துக் குருநாமத்தை மனசூத்திரத்திற் கோர்த்து வாஞ்சனை விஷயத்திற்போகும் மனதை அறுத்த நிர்ச்சங்கல்பமாய், நிர்விகல்பனாய், நிர்நாம பரப்பிர்மமாய், மனதுக்கெட்டா மர்மமாய், வாக்காலுரைக்கத் தர்மமாய், திரிகரணங்களாற் செய்யா நிஷ்காமமாய் ஆனந்த மாத்திரமாகியிருக்கும் நிலையைத் தெரிவித்த நிர்மலகுருவுக்குச் செய்யுங் கைம்மாறு மொன்றன்றே.

ஆரியர் பணிவிடையைவிடப் பிர்மநிஷ்டை மேலானதோ காவு திய்யமென்னு முபய விஷயானந்தத்துக்காக காக்கையைப்போலவும், சுணங்களைப்போலவும் சுழலுஞ் சிலர்கள் தேகசுகத்திலும் இந்திரிய சுகமே மேலான தென்றறிந்தபடி மனோ சுகத்திலும் சிவசுகமே மேன்மை யென்றுணர்தல் கூடாதோ சிவசுகம் பிர்மானந்தமேயன்றி வேறோ பிர்மானந்தத்தை யளிக்கும் ஆசாரியர்க்கா யுழைக்கலாகாதோ பாபங்களெல்லாம் படுசூர்ணமாய் வெந்துபோகாதோ தேகசுகம் ஸ்மரணை தப்பும் பரியந்தமல்லவோ இந்திரிய சுகம் மயக்கமட்டுமல்லவோ மனோசுகம் மறதி மட்டுக்கு மல்லவோ சிவசுகம் மரணமட்டு மல்லவோ மரணகாலத்தில் தேகசுகம் இந்திரியசுகம் மனோசுகத்தையும்வாஞ்சிக்காமல்ஜீவசுகத்தைத் தேடுதல் பொய்யோ சுழுத்தியில் பிர்மானந்தசுகமன்றி வேறு மொன்றுமுண்டோ அச்சுகத்தை இப்போதேதேடுதல் நன்றன்றோ சங்கல்பமே பிறப்பு விகல்பமே இறப்பு என்னும் வாக்கியம் சத்தியமோ தேக மசத்திய யென்றிருந்தவர்க ளரைநிமை யிவ்வுலகில் நாட்டத்தி லிருப்பார்களோ காட்டத்திற்சென்று ஏக ரோட்டத்தி லிருப்போர்க் கினியோர் வாட்டமுண்டோ வாங் கோஷ்டமும் மனோ வேஷ்டையும் நீங்கினோ களுக்கோர் சேஷ்டை யிருக்குமோ காஷ்ட மௌனத்திற் கப்பாற் பட்டவர்கட்கன்றோ கைவல்யஞ் சித்திக்கு மெனத் திந்திக்கு முத்தாரஞ் சொல்லுங் கர்த்தவ்ய காரணகுரு உபதேசிக்கின்றார். அத்துவித வஸ்துவைக் கைத்தல நெல்லிக்கனிபோற்காட்டுங் கருணாநிதிஅவரல்லவோ திரிகரணசைவற நிற்கும் சூட்சும மார்க்கத்தால் மோட்சமடையச் செய்பவ ரெப்பேர்க்கொத்தவ ரென்றால் என்னைக் காட்டிற்போய்த் தவஞ்செய்ய உத்திரவளித்த இப்பேர்க்கொத்தவ றென்றறைந்து கபீர் பின்மறைந்து நிற்கும் மகாவிஷ்ணுவைச் சுட்டிக்காட்டினர்.

உடனே கபீர் பின்திரும்பிப் பகவான் சீதாசமேதனாக விருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு தந்தையைப்பார்த்துக் கரங்களைச்சேர்த்து ஓ எனதையனே அன்னமூட்டின கையனே என்னைப் பிரிந்துபோக வெண்ணங் கொண்டீரோ இப்பகவானை யன்றி நமக்குப் பரசுகமும் பரமுத்தியு மளிப்பவ ரொருவருண்டோ இங்கும் அங்கும் எங்குந் தங்கியிருப்பவ ரித்துங்கனவல்லவோ வென்றுரைக்க தமால் ஓ என்னப்பனே எங்குமிருப்பவரிப்புங்கவனாலும் இகலோகத்துக்கும் பரலோகத்துக்கும் எவ்வளவும்பேதமுண்டோ அப்படியே நாடு நாடு என்பதிலும் பேதமுண்டு இனிச் சுகசீவியாய் வாழ்ந்திருக்கக் கடவாயென் றுரைவழங்கி எழுந்துபோகையில் கபீர் பிதாவுக்குத் தன்மேல் எவ்வளவு வாஞ்சையிருக்கின்றதோ அவ்வளவு வாஞ்சை தனக்குமிருக்குங் காரணத்தால் சரேலெனப் போவதற்குக் கூடாமல் மனம் மகன்மீது தனுதபசின்மீது மிருக்கின்ற தெனக்காட்டும் பிதாவின் பின்னோடி ஆலிங்கனம் செய்துக்கொண் டழும்போது கடந்தஞானியுங் கடப்பரோ மக்கள்மேல் காதலென்னும்பழமொழிப்படி தமால் மகன்மீது தனக்குற்ற அன்பைப் பலருமறியக் கண்ணீராலலம்பினர்.

அப்போது ஜிஜ்ஜாபீபியைச் சுந்தரா ஆலிங்கனஞ் செய்து நளமகா ராஜனைப்பிரிந்த தமயந்தியைப் போற் புலம்பினன் இப்படி நால்வருங் கலந்தழும் போது ஸ்ரீராமரும் சீதாபிராட்டியு மவர்களுடன் தாங்களும் தொந்தமுடையவர்போல் கலந்து பகவான் கபீரையும்

தமாலேயும் கட்டிக்கொண்டு மகாலட்சுமி சுந்தராவையும் ஜிஜ்ஜாபீபியையுங் கட்டிக்கொண்டு ஓவெனக் கூக்குர லிட்டழத் தொடங்கினர்கள் தாத்திரி யசைந்தால் சகல மும் அசைவதுபோலக் காசியிலுள்ள மாந்தர்களெல்லா ரும் கிடந்தபடி நடந்தபடி வாரணசியிலுள்ள பசு பட்சி கள் முதலானவைகளுங் கண்ணீர் விட்டழுதுக்கொண் டிருந்தால் இவர்களைத் தேற்றுவாரியார் இப்படி இரண் டுசாமபரியந்த மிருக்கும்போது ஸ்ரீகாசிவிஸ்வநாதர்பார் வதிசமேதராய்க் கபீர் வீட்டையடைந்து பகவானையும் பார்க்கவியையும் நோக்கி ஓ திரிலோகநாயகா தேவாதி தேவா செல்வத்திற்சிறந்த சீதாதேவியே பெருமையிற் சிறந்த பூமாதேவியே இதுவென்ன கபடநாடகம் இது வென்னமாயம் அம்பெய்தையோ வென்பவைப்போல இவர்களுக்குன் மாயமோகத்தைக் கொடுத்துந் துக்கத் தையெடுத்து அழச்செய்ததுமன்றி நீரு மோசமுள்ளவர் போலழுது இக்காசியில் இருஜாமமாய் அழுகுரலுண்டா க்கினீர் இன்பத்தைப்போக்கினீர் உம்மை நீர் மறந்திரோ நாராயண னென்கிறதைத் துறந்திரோ நீரே தமாலுக்கு ப்பிறந்தீரோ காசியில் துக்கமயமாய் நிறைந்தீரோ,

இவ்வித லீலேசெய்வது நான் மெச்சவா தேவர் தமால் மெச்சவா கபீர்மெச்சவா சொல்லும் பகவானே எனப் பலதரங்கேட்டு பேசாத பீதாம்பரனை விலக்கிக் கபீர்தாசனை நோக்கி ஓ நிராசையிற்சிறந்த நிர்மலனே? மோகமில்லா விவேகனே தந்தையாசை சாதுக்களுக்கி ருக்கலாமா, இப்படியும் துக்கத்தைப் பெருக்கலாமா, உன்னுடன் பகவானும் வெகுநேரமா யழுதுக்கொண்டி ருக்கிறரே அவரையும் என்னையும் பார்க்கலாகாதோ வெனத் திருவாய்மலர்ந்தருளின மாத்திரத்தில் கபீர் கண்ணைத்திறந்து ஆலிங்கனஞ் செய்திருந்த பிரியாததந் தையையும் அன்புள்ள தாயையுங்காணுமல் ஒன்றுந்தோ ன்றுமல் ஓ ஓ தாய் தந்தை கானகத்தை யடைந்தாரென் றலறும்போது பகவான் ஓ கபீர் உன் தாய்தந்தை கான கத்தை யடையவில்லை என்னுடைய வானகத்தை யடை ந்தார்கள் நானே யுன் தந்தையாகும் இலக்குமியே உன் தாயாகும் அவர்களை மானிடர்களென்றே வறிந்தாய் உன்னை நீ யறிவாயாகில் என் மனைவியையு மின்னுளென் றறிவாய் நீ இப்புவியிற் பிறப்பதற்கு முன்பே அன்னை வயிற்றிற்பிறக்க உன்னை உன்னிதமா வளர்க்க அன்னை தந்தையாய்ப் பிறந்திருந்தோ மவ்வுருவை இன்னமோர் தரம் பார்ப்பாயாகவெனத் தமா லுருவெடுத்து நிற்க, உடனே இலச்சுமி ஜிஜ்ஜாபீபியாகத் தரிசனந் தந்தாள் அப்போது பரமசிவனும் பார்வதியும் பகவான்செய்யுந் திருக்கூத்தைக்குறித் தானந்தமடைந்து மாயானடனத் தைக் கற்றுக்கொள்ள வாஞ்சித்தவர்போல அசைவற்று நின்றிருந்தார்கள். அப்போது பகவானும் பார்க்கவியும் தமால் ஜிஜ்ஜாபீபி ரூபமாய்த் தரிசனந்தந்தபின் மாய மாய் மறைந்தார்கள். கபீர் பகவானு மிலக்குமியும் நமக் குத் தாய்தந்தையராய்ப் பிறந்திருந்தார்க ளினி நாமன் னை யத்தனுக்காயழுவ தஞ்ஞானமே யாமெனத் துணிந் து துக்கந்தணிந்து பரமேசுவரனையும் பார்வதியையும் பணிந்து இருநயனங்களையு மணிந்து ஓ ஸ்வாமி நீலகண் டா, நிடலாட்சா, அன்னைதந்தையாசையாலழுந் தாட்சி யுள்ளவனுக்கு மாட்சிமையான காட்சி கொடுக்கலாமோ வெனத் துதித்து ஓ விசாலாட்சி அன்னபூரணி, நாரணி காரணியெனப் பார்வதியைத் துதித் திருக்கும்போது வி சுவநாதரும் பகவதியும் பல ஆசிகள்செய்து ஓ பரமபக் தனே ஜீவன்முக்தனே இனி பிரமக்ஞான திருஷ்டியாற் பரமானந்த சாகரத்திற் படிந்திருக்கக் கடவாயென் றந் தர்த்தானமானுர்கள் பின்பு கபீர் தாய்தந்தையர் பிரிவா ற்றுமையாற் கலக்கமுற்றிருந்து மறுநாள் ராமானந்த சுவாமிகளாற் றேர்ந்து களிகூர்ந்திருந்தார். கேட்டீர்க ளோ சித்தர்களேயெனப் பின்னும் நாபாஜிசித்தர் சொ ல்லத் தொடங்கினர்.

கபீர் மனைவியை வர்த்தகனுக்களித்த அத்தியாயம் முற்றிற்று.

பதின்மூன்ருவது

## கபீர் குமாரனுகிய கமால் யாத்திரை அத்தியாயம்.

இப்படிகபீர் நாள்கழிக்குங்காலத்தில் பகவானுடை ய மாயையாலும் சுந்தராவின் அபேட்சையாலும் முன் னரம்பைக்குள் இஷ்டத்தை ஓர்காலத்தில் நிறைவேற்று கிறேனென வாக்களித் திருந்ததாலும் சுந்தராவினழகி னுலும் மோகமோங்கி மருவித்தெரிவையின் மனங்களிக் கச்செய்ய சுந்தரா கர்ப்பவதியாகிப் பூரணமானபின் நார தருடைய அம்சமே யந்த முப்பத்திரண் டிலக்கணங்க ளும் வாய்ந்த ஓர் புத்திரனைப் பெற்றுள் அக்குழவியைக் கண்ட தாயுந்தந்தையும் மிகவுங் களிப்புற்று அருமையு டன் வளர்த்து கான்முளையின் முகங் கமலம்போ லிருப் பதால் கமாலென்று பேரிட்டு அடியார்களுக்கு விருந் திட்டு நெய்யுந்தொழிலாற் சீவனஞ்செய்துக்கொண்டிரு ந்தார்கள் இப்படி ஏழுவருஷங்களாக ஒருநாள் கமால்

தன் தந்தையையணங்கி ஓ என்னையனே அடியேன் தீர்த்தயாத்திரை செய்து வரவேண்டு மென்கிற எண்ணங் கொண்டேன் கருணையுடன் விடைகொடுத் தருளல் வேண்டுமெனத்துதிக்க கபீர் மகனைவாரி மடிமேல்வைத்துக் கொண்டு ஓ-என்னப்பனே நீ யறியாத குழந்தையாயிற்றே யாத்திரைசெய்துவர உன்னாலாகுமா துணையின்றித் தனியாய் வுன்னையனுப்ப என்மனந்துணியுமா இன்னஞ் சிலநாள் பொறுத்து யாத்திரைசெய்யப் போகலாமென்று மறுத்தனர் கமால் தாதையின் பாதங்களை முத்தமிட்டு ஓ என்னைய்யாவே நீர் மேற்குமிழியான இக்காயத்தை நிலையென்றுநம்பி யிருப்போரல்லவோ நினைத்த காரியத்தை நிமைக்குப்பின் செய்யலாமென யோசிப்பார்கள்.

க்ஷணபங்குரமென விச்சரீரத்தைத் தீர்மானித்தரைக்கணமும் வீண்காலத்தைக் கழிப்பார்களோ இப்படியென்னைச் சோதிக்காமல் அன்புடன் விடைகொடுத் தருளல் வேண்டுமெனப் பணிய கபீர் ஓ என் கண்மணியே எள்ளுக்கு ளெண்ணெய்போலவும் பாலுக்குள் வெண்ணெய்போலவும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் பகவானை யிருப்பிடத்திற் கண்டு களிப்புறுமல் தேசங்கள் தோறும் ஓடித்திரிவதா லுண்டாகும் பயனென்றுளதோவென்று மறுக்க கமால் ஓ என் தாதையே தாங்களுரைப்பது சத்தியமே ஆயினும் புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்தால் புண்ணியமேலிடுமென்றும் பரிசுத்த தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தல் பாபம் க்ஷீணமாகு மென்றும் சாதுக்களைத் தரிசித்தால் சகல சங்கைகளும் நீங்குமென்றும் பலதேசங்களைப் பார்ப்பவர்களுக்குப் புத்தி விளக்கமடையுமென்று சொல்லும் வாக்கியம மெய்மையாதலால் யாத்திரைசெய்ய யோசித்தேன தடைசெய்யாமல் தயவுகூர்ந்தனுப்ப வேண்டுமெனத் துதிக்க கபீர் மகனுரைக்கும் வாக்கியங்களுக்கு மகிழ்ந்தவராய் ஓ என்னருமைப்புத்திரனே தனித் தன்னியர் வீட்டுக்குட் போகும் ஆடவனும் அலக்கணுறு வாராதலால் ஒரு சாதுவின் துணைப்பற்றிச் சந்தோஷமாய்ப் போய் வாலாமென்றுரைய கமால் ஓ என்னருமபிதாவே ஸ்ரீராம நாமமென்கிறவாளும் சத்குணங்களென்கிற தோழர்களும் எனக்கு நற் துணைவர்களாயிருக்க வேறுதுணையும வேண்டுவதோ நீரிப்படிச்சொல்வது என்மேலிருக்கு மன்பின்மேலிட்டாலல்லவோவென் றத்தனடிகளி லன்புடன்பணிந்து அன்னையைத்தொழுது போய்வருகிறேனென்று துதிக்க சுந்தரா ஓ என்னருட் பாலனே தவத்திற்சிறந்த சிலரை சத்கருமத்தைத் தடுக்கக்கூடா தாதலால் நீ யாத்திரைசெய்ய யோசித்ததைத் தோத்திரஞ்செய்ய நானெம்மாத்திரம் தாதாவைக்கேட் டுத்தரவு பெற்றுக்கொண்டபின் மாதாவைக்கேட்க வேண்டுமோ சுபமங்களத்துடன் போய்வாருமப்பாவென விடைகொடுத் தனுப்பி விட்டுத் தன்தனயன் சிறுபிராயத்தில் யாத்திரை செய்யப்போனதைக்குறித் தாச்சரியப்பட்டுத் தன் கணவனை நோக்கி ஓ சுவாமி இவ்வுலகிலிவ்வளவு சிறுகுழந்தை தனித்து யாத்திரைசெய்யப் போனதுண்டா நீர் கேள்விப்பட்டதுண்டா? தேவரீர் ஐந்துவயதில் ஆதாம் வருணத்தாருடன் தர்க்கஞ்செய்து வென்றதைப் போலவே உமதுமைந்தன் ஏழுவயதில் பலதேசங்களிற்போய் பல மதபேதங்களைக் கண்டித்துவர எண்ணங்கொண்டான் தன் ஊரில் தந்தை பேரெடுத்தால் அயலூரில் தனையன் பேரெடுக்கப்போனான் இப்பேர்க்கொத்த விந்தை எந்தயுகத்திலும் நடந்திருக்க மாட்டாதென்றே நினைக்கிறேனெனத்தொழ கபீர் ஓ பெண்ணே தசரததனயனாகிய ஸ்ரீரகுநாயகர் பனிரெண்டு வயதானபின்பே யாத்திரைசெய்யப்போனார் நமதுமைந்தன் சிந்தையால் நினைந்தது விந்தையாகவே யிருக்கின்றது ஆயினும் பதிவிரதா சிரோன்மணியாகிய உன் ஆசிபெற்றுப்போன தனயன்யாதொரு கங்கடமு மடையாமல் சந்தோஷத்துடன் யாத்திரை செய்துவரக் கடவனென்றுரைத்துப் பகவானைத் தியானஞ் செய்துக்கொண்டிருந்தார்.

இவர்க ளிப்படியிருக்க கமால் நாட்டைக்கடந்து கங்காதீரத்தை யடைந்து அக்கரைக்கேக யோசித்துப் பாகீரதியைப் பூசித்து ஓ ஸ்ரீமந்நாராயணருடைய திவ்ய பாதத்தை விட்டுப் பிரிந்தோமென்கிற ஏக்கங்கொண்டிருக்குந் திரிபதகையே பார்வதியின் பயத்தால் சங்கர சடாபாரத்திற் பதுங்கிக்கொண்டிருக்கும் கங்காபவானியே கார்த்திகேயனைப் பெற்றுப் புத்திரவாஞ்சையை நீக்கிக்கொண்ட மந்தாகினியே பார்த்தன் பப்பிரவாகனனுக்குத் தோற்றுப்போகும்படியாய் சாபமிட்ட சானவியே பகீரதனுடைய தவத்துக்கிரங்கி அவன்பின் தொடர்ந்து வந்த பாகீரதியே சகரராஜன் புதலவர்களின் சாபத்தை நிவர்த்திசெய்த சாநதியே ஆயுருவாயண்டத்தைக்கடிக்க இரணியனால் பாருலகில்வந்த ஆகாயகங்கையே எனக்குள்மூழ்குவோர் பாபத்தை நீக்குவேனெனப் பகீரதனுக்கு வரமளித்தவா நதியே என்தந்தையை யிக்கரையிற் சேர்த்து ரட்சித்தபடியே என்னை அக்கரையிற்சேர்த்துக்காப்பாயாகவென் றக்கங்கையிறங்கிப் போவதைக்கண்ட பிரஜைகள் அடா கமால் ஆழியை நீந்துவதும் இக்கெங்கையை நீந்துவதும் ஒன்றென்றேநினை ஆழியினுமத்திலுமா

முழுள்ள கங்கையில் நடந்து கடந்து போனவர்களு முண்டோ வேண்டாம்வேண்டாம் வோடத்தின்மேற் சகலருமேறிப்போவதுபோல் நீயு மக்கரையிற் செல்லு இல்லாவிடின் கங்கைக் கிரையாவாயென்றிரைந் தரைந்துக் கொண்டிருக்கும்போதே கங்கையிற் சற்றுதூரம்போய் அப்பால் போவதற்குக் கூடாமலசைந்து நிற்கையில் அப்போது கங்காதேவி பிரசன்னமாகிக் கமாலுக்குக் காட்சி கொடுத்து என ஹஸ்தங்கள்மேல் நடந்துபோய்க் கரையேறுவாயென் றழைத்துக் கமால் பாதங்களைத் தாங்கக் கமால் களிக்கடலி லமிழ்ந்தவனுப் செம்பீரத்துடன் கங்கையினங்கைகளின்மே லிருகாலையு மூன்றவைத்துத் தன்னைக் கூவும் பிரஜைகளை நோக்கி ஓ சிலர்களே! யுத்தஞ்செய்யப் புறப்பட்டு எதிர்த்து வரும் சேனுபலத்தைப் பார்த்துப் பின்னிடைபவன் வீரனுகுவானு கற்பைக்காக்க விரகம்பூண்டு மாரனெய்யும் பஞ்சபாணங்களாற் கலக்கமுள்ளவள் பதிவிரதை யாவாளா சன்னியாசியாய்ப் புறப்பட்டுச் சீராதி வாதனைகளுக்கபர்ந்து சபதபங்களைவிட்டவ னவதூதனுவானு அதுபோல் கங்கையின் துணையா லக்கரையேறுவே னெனத் துணிந்திறங்கி ஆழத்துக் கச்சமுற்றுப் பின்திரும்புவேனுயின் கபீருக்குரிய புத்திரனுவேனே வென் றரைந்து பாகீரதியைத் துதித்துக்கொண்டே அத்தீரத்தி லேறிப் போகும்போது பகவான் நாரதாதி முனீசுவரர்களுடன் சாதுவேஷங்க டரித்துக்கொண்டு கமால் பக்கலடைந்து அடா கமால் நீ யெங்கேபோகிறுய் சொல்லடாவென்று மறுக்க

கமால் பணிந்து ஓ ஸ்வாமி அயோத்தியா கயாபத்ரி நாராயணம் பிருந்தாவனம்அரித்துவாரம் முதலானபுண்ணிய ஸ்தலங்களிற் சென்ற ஸ்ரீபகவானை தரிசித்து அங்கிருக்கும் பரமபாகவதர்களின் பாதங்களைப் பரிசித்துப் பரிசுத்தனுக வேணுமென்கிற எண்ணங்கொண்டு போகிறேனென்று பணிவாகவுரைக்க பகவான் சாதுக்களை நோக்கி ஓ சாதுக்களே இச்சிறுவனை நீங்களறிவீர்களா இவன் துலுக்கரிலும் இந்துக்களிலும் கூடாமல் நடுநாடனுயிருக்கும் கபீரென்பவனுடைய புத்திரனுகும் அக்கபீருடைய தாய்தந்தை தாரம் துலுக்கராகும் ஆசானே ராமானந்தனுகும் குலமோ துலுக்கக்குலம மதமோ இந்துமதம் வேஷமோ துலுக்கர்வேஷம் ஆசாரமோ பிராமணுசாரம் பேசுவதோ பிர்மக்ஞானம் செய்வதோ பகவத்தியானம் சிஷர்களுக்குரைப்பதோ அத்வைதம் தானிருப்பதோ த்வைதம் இப்படி இரண்டுவழியிலு மில்லாப் பிரஷ்டனுக்குப்பிறந்த பிள்ளையாகிய இவன் கத்திரிக்காய்க்குக் கால் கைகள் முளைத்தாற்போல ஜானுண்டு பயலாயிருந்தபோதிலும் ஒருவர் துணையும் வேண்டாமல் தனியனுய்ப் புறப்பட்டுப் பலதேசங்களிற்சென்று அங்கங்கிருக்குஞ் சாதுக்களுடன் வாதுசெய்து வென்று ஷன்மதங்களையுங் கண்டித்து அத்வைதத்தை ஸ்தாபித்து வரப்போகிறுனு மிது கலிகாலமகிமையல்லவோ உங்களுக்கும் விரித்துச் சொல்லவோ வென்றுரைந்து முப்பத்திரண்டு பற்களைக்காட்டிக் கெக்கலிகொட்டி நகைத்துப் பலபரியாச வார்த்தைகளாடும்போது கமால் சற்றே முனிவுகொண்டு ஓ கோ கள்ளச்சாதுவே நீர் வோதியது வொருவிஷயத்தில் நீதியாகவும் ஒரு விதத்தில் அநீதியாகவும் இருக்கின்றது எப்படியெனில் உம்முடைய வாக்கிலிருந்து புறப்பட்ட சொற்களை யெல்லாம் பூஷணமாகவும் தூஷணமாகவும் பிறருக்குங் காட்டியதன்றி அகடவிகடமாகவும் தோன்றப்பட்டது ஆனுல் உள்ளதைச் சொன்னுல் சள்ளென்று விழுபவன் வெள்ளறிவனுகும் நீருரைத்ததெல்லாம் உண்மையே எப்படி யென்பீரோ எங்களுக்குஞ் சாதிபேதமில்லை காரணம் மச்சகந்தியின் புத்திரனுகிய வியாசனுக்குப் பேரனுகிய அர்ச்சுனனுக்கு ஆயர்குலத்தி லுற்பவித்த எங்கள் பகவான் பெண்கொடுத்தார் சாதிபேதமிருந்தால் கொடுப்பாராவென பகவான் அடா கமால் ஓர் க்ஷத்திரியனுடைய வீரியத்தை ஓர் மச்சம்விழுங்கி கெர்ப்பமடைந்து மச்சகெந்தியை யீன்றதா லம்மச்சகந்தி வலையற்குலத்தாளாவாளா க்ஷத்திரியனுகிய வசுதேவருக்குப்பிறந்த கிருஷ்ணரை ஆயர் வீளர்த்ததா லிடைய னுவானேவென.

கமால் அயோனி சம்பந்தராகிய எனது பிதாவைத் துலுக்கரெடுத்து வளர்த்தார்கள் துலுக்கனுகி விட்டானு சாதியிற்கெட்டானு ஆஹா சாதுக்கள்சாதிபேதங்களைப் பேசலாமோ கௌசிகர் செய்த பலகொடுமைகளை மனுபவித்த அரிச்சந்திரன் அவ்விசுவாமித்திரரைத் தூஷித்திருப்பானு லௌகிகத்தை நாடிய அரசனே தூஷணை செய்யப் பயந்திருக்க வைதிக தர்மத்தை நாடிய நீர்பரமசாதுவாகிய என் தந்தையை நிந்தைசெய்யப்போகுமா சாதிபேத மிவ்வுலகுக்கன்றி பரமார்த்தத்துக் குண்டோ பேதமற்றவன் பிர்மக்ஞானியல்லவா ஆசாரமே குலமல்லவா அபேதமே அத்வைத மல்லவா எங்களிஷ்டதெய்வமாகிய பகவா னர்ச்சுனனுக் குபதேசித்த பகவத்கீதையில் துவிதத்தையும் அத்வைதத்தையும் கலந்து பேசவில்லையா துவிதமோ முக்கியமாயின் அத்வைதத்தைபேன்

கண்டிக்கவில்லை இரண்டையுங் கண்டிக்காமல் சமமாய்ப் பேசின பகவத்வாக்கியம் பொய்யோ அத்வைதத்தைப் பேசினாலும் தன்னைமறக்கும் பரியந்தம் துவிதத்தி லிருந் தவனே யல்லவோ சாக்ர சழுப்தி நிலைவர்தவனோ் தியா னஞ்செய்யக் கூடுமோ அந்நிலை வராதவன் துவிதபாவ மடைந்தவனே வேதவியாசரா லுரைக்கப்பட்ட பாகவ தத்திலுந் துவிதாத்வைதங்களைச் சமமாய்ப் பேசவில்லை யா தேகஸ்மரணமா யிருக்கும் பரியந்தம் இஷ்டதெய்வ த்தையும் ஆரியரையும் மறக்கலாகுமோ நீர் நியாயமான சாடுவானுலிப்படிப் பேசுவீரோ அகங்காரத்தைக் காட் டுவீரோ என்னை வாட்டுவீரோ ஜம்பத்தை நீட்டுவீரோ சிவாம்ஸமான சுகப்பிரமரிஷியே என் தந்தையல்லவோ தேவாம்பையே என் தாயல்லவோ சட்சக்ரேஸ்வர ராறு வரு மோருருவான ஷன்முக ரம்ஸனே நானல்லவோ அபிமன்னனுக்குச் சுந்தரியைக் கூட்டிக்கொடுத்த ஸ்ரீமந் நாராயணர் நீரல்லவோ இவர்களெல்லாம் நாரதாதிமுனீ சுவரர்களல்லவோ இன்னம் விரித்துச் சொல்லவோ சுத் த அத்வைதமான பகவத்கீதையில் துவிதபாவத்தையும் வைத்திருப்ப தும்முடைய சூதல்லவோ உமது ரூபம் மச்சமா, கச்சபமா, வராகமா, வாமனமா, பரசுராம,ஸ்ரீ ராம, பலபத்ரராம, கிருஷ்ண, பரமாத்ம, ஸ்வரூபமா, மோகினிரூபமா, உமக்கெந்தரூபம் மெய்யெனச் சொல் வது? சொல்லி யாரை வெல்வது உம்மையன்றி வேறு வஸ்து ஒன்றுண்டானாற் காட்டும் எதோ உமதஸ்தத்தை நீட்டும் ஒரு ராமர் பலராமராய் நின்று மூலபலத்தை வென்றபோது அப்பலராம ரெங்கிருந்து முளைத்தார்.

ஒரு கிருஷ்ணரே பலகிருஷ்ணராய்ப் பதினாராயிர ங்கோபியர் வீட்டிற்றங்கி நாரதரை நாணமடையச் செய் தபோது அப்பால் கிருஷ்ணரெங்கிருந்து கிளைத்தார்? துரியோதனன்சூதுசெய்து பாதாளத்திலமிழ்த்தினபோ துமக்கு விஸ்வரூபமெப்படி வந்தது அயனரனதியர் நடு ங்கத்தகுந்தரூபத்தைக் கண்ணாரக்கண்டும் கௌரவர் விரோதித்திருந்த சூதியார் செய்தது ஒருபுத்திரனுக்கா யர்ந்த அர்ச்சுனனுக்குப் பதினாயிரம் புத்திரராகிய வெ ண்கல ரதக்காரரைப் பறிகொடுத்த நீர் தைரியமுரைத்த காரணமென்ன? உமக்குப் புத்திரரிருந்தாற் சோகமுண் டாகாதோ! நீர் விஷயானந்த சகிதராமானுல் பால பிரம சாரி யென்கிற பேருண்டாகுமோ உமது கர்ப்பத்தி லிவ் வண்டபிண்ட பிர்மாண்டங்களெல்லாம் ஓர் அனுமாத்தி ரமா யிருந்தால் இலங்கை உமது கர்ப்பத்தி லில்லாமல் வேறேயிருந்ததோ லோக நாயகியை இராவண னெடுத் துக்கொண்டுபோக எங்கிருந்து வந்தானோ' ஏகாலியனு ரைத்த வாக்கியத்தாற் குரோதித் திரண்டுண்டா யிச்சா னகியை வெட்டிவாருமென் றுரைத்த நீர் இராவணனெ டுத்துபோன காலத்தில் காட்டினில் வேஷ்டையா யழு திரெனுமொழி மெய்யென்று நம்பத்தக்கதோ? இராமா யண பாரதம் முதலானவைகள் பிள்ளைகள் மணலால் வீடுகட்டி விளையாடுவதற் கிணையான தல்லவோ எங்கும் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் நீர் அயோத்தியில் மது ராபிருந்தாவனத்திலேயே யிருந்தீ ரென் றுரைக்கப்போ மோ? இப்படி மாந்தர்களின் மதியை மயக்கினதும் உம து மாயையல்லவோ? நிரூபமாய் நிர்நாமமாய் நிர்க்குண மாயிருக்கு முமக்கு ரூப நாமகுணங்க ளேற்படுத்தியது முமது மாயையல்லவோ பரப்பிரம்மமே நீரன்றி வேறெ ன்றுரைக்கத் தகுந்ததோ வேறொன்றுரைக்க எந்த ரூப முள்ளவரோ காலத்துக்குத்தகுந்த வேஷந்தரித்துக் கப டநாடகமாடும் உமதுமாயையு மறிந்தவருண்டோ! அறி யாக்குழந்தையைச் சோதிக்கவும் வாதிக்கவும் வரலா மோ தரிசனந்தரலாமோ! ஓ அனாதரட்சகா! அகிலாண் டகோடி பிர்மாண்டநாயகா! ஆதிமத்யாந்தரகிதாசோதி நித்யானந்த சகிதா? ஓ பகவான்! ஓ விஷ்ணுவெனத் துதித்தருகும்போது பகவான் கருடவாகன ரூடராய் சீதாசமேதராய் பரதசத்ருக்க லட்சுமணருடன் காட்சி கொடுத்து அஸ்தமஸ்த சையோகஞ் செய்து கருணை மழைபெய்து ஓ கமால்? சபானுகிய கமால் தந்தைக்குப தேசித்த கார்த்திகேயனைப்போல் கபீருக்குபதேசிக்கும் படியான மர்மங்களெல்லா முனக்குத் தெரியும்படியான வரமளித்தே னினியோர் தடையுமின்றிச் சகலரையும் வென்று சாது விருத்தியைப் புகன்று எனக்குத்தேவை யான காணிக்கையைக் கொண்டுவரக் கடவா யென்ற றைந்து மறைந்தருளினர்.

பின்பு கமால் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவராய் நைமிசாரண்ய முதலான வனங்களிலும் இமயகிரி முத லான பர்வதங்களிலும் அரித்துவாரம் முதலான ஸ்தலங் களிலும் சென்று தர்க்கித் தவர்களைவென்று வைரவம் வாம ம்கராளாமுகம் மாவிரதம் பாசுபதம் சைவம் முத லான ஷட்சமயங்களையும் உலகாயுதம் புத்தம் சமணம் மீமாஞ்சை பாஞ்சராத்திரம் பட்டாசாரியமுதலானபகிர் சமயங்களாறையும் அத்வைதத்தாற் கண்டித்து அனுபவ மில்லாதவர்களைத் தண்டித்து இறந்தவர்களை யெழுப்பி மறந்தவர்களையு மெழுப்பி ஓ பண்டிதர்களே! ஜீவ

னென்பதேது ? ஜீவனை யுண்டாக்கினவ னியார் ? ஜீவ னுக்கு மரணமுண்டா வில்லையா ? ஜீவனித்தனுவுடன் கூடின காரணமென்ன ? ஜீவனுக்குப் பந்தம்வந்தகாரண மென்ன ? ஜீவன் பலரூபமடையு முபாயமென்ன ? கை வல்யம் எந்த லோகத்திலிருக்கின்றது ? ஜீவனெவ்வித மிருந்தால் இன்பமடையலாம் ? ஜீவசப்தத்துக் கர்த்த மென்ன ? ஜீவன் மாயா சம்பந்தமா ? பிர்ம சம்மந்தமா? ஜீவனெந்த ஸ்தானத்திலிருந்து வருகின்றது ? எந்த ஸ்தானத்தை யடைகின்றது ? ஜீவன் போச்சுது வந்த தென்றுரைக்கும் விந்தையென்ன ? நரகசொர்க்கமடை வது ஜீவனுதேகமா? தேகமென்றுரைப்பவரு முண்டா? ஜீவனெனின் அதற்கு ரூபமுண்டா ? சுத்த சூன்யமான ஆகாயத்தை வெட்டிப் பிளக்கக்கூடுமோ? அப்படி செய் பவனுக் காயாசமே பலனல்லவா ? ஜென்மமே நரகம் ஜென்ம ரகிதமே முக்தியல்லவா ? பிராந்தியே பந்தம் பிராந்தி ரகிதமே விமோசனமென்றுரைக்கும் வேதவாக் கியம் பொய்யா? பிர்மப் பிராயமாயும் ஜீவனுக்கு ஜென்ம விமோசனமில்லை யென்பதின் கருத்து அகம் பாவத்தை நாசஞ்செய்ப வல்லவர் அகம்பாவ நீத்தலே மாயா நாஸ்தியாகுமே சூன்யமான மாயைக் கடந்தவர்க ளல்லவோ பூரணமான பிரமத்தி லபிக்கப்படுவார்கள். அருணனுதயமானதே இருளெப்படி நீங்குமோ அப்படி யே அகம்பாவமென்னு மகங்கார நீங்கின மாத்திரத்தில் பூரணஜோதி தோன்றப்படும்.

அபேதமான பரஞ்ஜோதியி லைக்யப்பட்ட பின் இருளைத்தேடினுலு மிருக்கின்றதோ சூரியனுல் பிரகாசிக் கும் கண் அகண்டமல்லவோ ஊனக்கண்களுக்குத்திரை யுண்டு ஞானக்கண்ணுக்குந் திரையுண்டோ ஞானசட் சுவை மறைந்திருக்குந் திரையே மாயையென் றுரைக் தப்படு மல்லவா? அத்திரையின் மறைப்பா லல்லவோ மதிமயங்கிப் பிரமதேவன் தலைபிழந்தான்.

ஸ்ரீ மகாவிஷ்ணு வாலிபவன் சுக்ரீவனிவ னென்ப தறியாமற் றயங்கினின்றான். மகாதேவன் மோகினியாய் வந்த மாதவனை மருவ விச்சித்தான். அண்ட பிண்ட பிர்மாண்டங்களும் மாயா விலாசமல்லவோ ? அகண்ட பரப்பிர்மத்தி லத்துவிதமா யிருப்பவர்க் கண்டரண்ட மனேக மலவலேச மல்லவோ ? க்ஷணபங்குரமான அங் கம் பங்கமெனப் பங்க மடையலாமோ? அனித்திய மல துக்கமயமான தேகாதிகளை நானென்றிருமாப் படைய லாமோ? திரிகரணங்களை யசைவற நிறுத்தி அரைநிமை பிரம்ம மயமாயிருப்பதும், திரிகரணங்களா லாயிரஞ் சதுர்யுக மருந்தவம் புரிதலும் சமானமாகுமல்லவோ ?

சற்றே யிச்சையுள்ளோர் சாக்ராவத்தையிலும் மிகவும் வாஞ்சையுள்ளோர் சாகா சொப்னுவஸ்தையிலும் ஜபம் செய்வார்கள். சுழுப்தியிற் ஜபஞ்செய்யக் கூடுமோ ? திரியவஸ்தைகளினு மலுப்பின்றி உலாவிக் கொண்டிருக கும் அம்ஸமே அஜபா மந்திரத்தை அனேகந்தரம் ஜபித் துக் கொண்டிருக்க அதையறியாமல் சஞ்சலமுள்ள நெஞ்சகத்தோடு ஜெபிக்கும் மந்திரத்துக்குள் கூர்பவர் யாரோ ? நமன்கைக்குத் தப்பி மீள்பவர்யாரோ ? சரீ ரமே நானென்றிறுமாந்து எமன் கையாலே மாய்ந்துப் போகலாமோ ? இந்திரிய போகங்களை இச்சித்து இதர ஜீவர்களைப் பட்சித்து இடரடையலாமோ? மனதிலெண் ணப்படி நடந்து மாயாவாரியிற்கிடந்து மறதியுற் றிருக்க லாமோ? அந்தந்த இந்திரிய அந்தக்கரணங்களி லந்த தேவதைகளிருந்தாட்டி எமனுக்குக் காட்டிவைப்பதை மறக்கத் தகுந்ததோ ? பூஜை செய்பவனுக்கு மறுயோச னையைத் தொடுக்கும் அகக்கரண புறக்கண தேவதை களின் சமர்த்தை எதிர்த்தழைக்கு முபாய மௌன நிஷ்டையன்றி ஸ்நானம் கானம் தியான மென்னுந் திரி கரணங்களாற் செய்யுங் கர்மங்களாகுமோ ? கர்மங்க ளுக்கு மேலானது நிஷ்கர்மங்களுக்கு மேலானது தர் மம், தயா தர்மங்களுக்கு மேலானதுமர்மம், அகங்காரக் கிரந்தியோர்க் குரைக்கக்கூடா அதிகுப்த மர்மத்துக்கு மேலானது பிர்மம்.

ஆனந்த மாத்திரமாயிருக்கும் அகண்ட பரப்பிர மமே தானுயிருக்க அதனை வேறுபடுத்தி யுரைக்கத் தா னேர் முதண்டா யிருந்தாலல்லவோ அவாங்க மனோ கோசரமான வஸ்துவென்றுரைத்தும் அதைத் தியானி த்து மோட்சமடைய வேண்டுமென்கிற எண்ணங் கொ ள்ள நாணமாயில்லையோ தியானிக்கும்.

மானசத்தி யில்லாதவரோ வென்றனந்தம் வார்த் தைகளால் மறுவார்த்தை பேசாமலடக்கி கபீரனுக் கிர கம் பெற்றுக் கொள்ளுங்களென்று மடக்கி ஸ்ரீராமரு டைய பராக்கிரமத்தை இராவணனுக்குக்காட்டி இராக் கதரை வாலால் மாட்டியழுத்த அனுமாரைப்போலவும் அரியென்னுந் திருநாமத்தின் மகிமையை இரணியனுக் குப் புலப்படக்காட்டிய பிரகலாதனைப்போலவும், தன் பிதாவின் பரிபூரண க்ஞானத்தைப் பலருமறியக்காட்டி எதிர்த்தவர்களையெல்லாம் வாட்டி ரூம், ஷாம், காபூல், பஞ்சாப், மக்கா, அரப் முதலான பட்டணங்களிற் பிர வேசித்து அங்கிருக்கும் மஹா மது மதஸ்தர்களை நோ க்கி, ஆனையி னடிசப்தத்தையும் எறும்புருஞ் சப்தத்தை

யுங் கேட்கும் கடவுளுக்குக் காது செவிடென்றோ
வாயை ஆவெனத்திறந்து ஊவெனக் கூவுகின்றீர்கள்.

நிர்நாமமான வஸ்துவுக்கு நாம முண்டாக்கினவர்க
ளியார்? எள்ளினு ளெண்ணெய் போலவும் பாலினுள்
வெண்ணெய்போலவும் எங்கும் பரிபூரணமா யிருக்கும்
பரப்பிரம்மம் ஏழாமண்டலத்தி லிருக்கின்றாரென்று எழு
தினவன்யார் வாயுமண்டலம், வருணமண்டலம்,சந்திரம
ண்டலம், சூரியமண்டலம், நட்சத்திரமண்டலம், அக்கி
னிமண்டலமென்னும் ஆறுமண்டலத்துக் கதிபதியான
விசுவாமித்திரனையே சுட்டிக்காட்டுகிறீர்களோ உமதுவம்
சத்துக் காதியான கௌசிகனால் காட்சியடைய யோசிக்
கிறீர்களோ பிரமத்தை நோக்கி மர்மமாயிருக்காமல் உங்
களுக்கும் பலகர்மங்களேற்படுத்தினது மாயையல்லவோ
ஏகக்கடவுளிலே லவுகீக பாவமாயிருக்கும் மார்க்க மறி
யாமல் மோட்சமடைதற் கிலேசானதோ மேற்கேநோக்
கித் தீர்க்கதெண்டனிடு முமது மார்க்கத்தில் கிழக்கில்
கடவுளில்லையென வழக்கைக் காண்பித்ததோ மதியினுற்
றமயக்க சங்கல்மே மாயாபூதங்களென் றறியாமல் வலதி
டது தோளை மாறிமாறிப்பார்ப்பதென்ன மதிமோசமோ
பசுபாசமோ குண ரகிதனை கடவுளை வழுத்திக்குக்கிட
முதலானதுகளின் கழுத்தையறுத்த லென்ன மாயா சம்
பந்தமோ ஈதியாருக்குத்தான் ஒப்பந்தமோ வாக்கில்லா
க்கடவுள் மஹம்மது முதலான பயம்பர்களுட னெப்படி
பேசினர் வாழ்த்துத லெப்படி செய்தார் மறைந்திருந்
தெப்படி யுத்தரந்தந்தார் வாக்கிருந்தால் நாக்குமுண்டே
நாக்கிருந்தால் நானு அவயவமுண்டே அவயவத்துக்கு
ரூபமுண்டே ரூபத்திற்கு ஜென்மமுண்டே யென்கிற சங்
கைகள் பலசெய்து அனுபவார்த்த அம்புகளெய்து ஓ
மொசல்மான்களே ஆணும் பெண்ணுமல்லவா அலியெ
ன்னும் அகண்டவஸ்துவி லமிக்கப்பட்டிருக்கும் வலியெ
ன்னும் பிரம்க்ஞானிக ளனுபவத்தைச் சற்றே விசாரித்
தறிய லாகாதோ அதனாலனுபவக்ஞானம் தெரிந்துபோ
காதோ ஆமைபோ லூமைபோலிருக்கும் ஆனந்தாவேச
மேவிட்டவர்க ளனுபோக மார்க்கத்தைநீக்கி மேற்கே
நோக்கி ஆயுளைப்போக்கி விடலாமோ அனுபவக் ஞான
மின்றி மோட்ச மடையப்போமோ ஆனந்த முறப்போ
மோ மஹம்மத் தென்னும் வாக்கியார்த்தம் மஹாபெரிய
மத்மதம் ஆக மகாமதம் பிடித்தனென்கிற அர்த்தத்தைக்
காட்டுகின்ற தறியீரோ அகம்பாவமாகா தென்பதனைக்
குறியீரோ அகங்காரமுள்ள ஓர் அரசன் மாயமான் பின்
றொடர்ந்து காட்டையடைந்து வேஷ்டையாற் கிடந்து
இருக்கையில் அவனை மறுதேசத்துக் காவலர் வந்து சூழ்
ந்து பிணித்துக்கட்டிப் பட்டணத்திற் கொண்டுபோய்க்
கள்வனெனக் கரங்கால்களை வெட்டியெறிய அவ்வரசன்
அகந்தையைக்கடந்து சாந்தத்தில் நடந்து வரும்போது
தனக்குத்தானே வெட்டுண்டவைகள் வளர்ந்தன வென்
றுங்கள் சாஸ்திரங்களில் முறையிடுவ தபத்தமோ அப்ப
டியிருக்க சிலநாளுக்கு முன்போ ரேழைக் குடும்பத்தி
லுற்பத்தியான மஹம்மது வென்பவன் இடும்பால் கொ
லைத்தொழிலை இயற்றும்படி எழுதிவைத்ததைச் சத்திய
மென்றுநம்பி நிறையத்துக் குள்ளாகுதல் நன்மையோ
சகல சீவராசிகளையும் மானிடர் புசிக்கவே கடவுள்படை
த்திருக்கின்றாரென்கிற கட்டளை மெய்யென் றெருத்துக்
கொண்ட நீங்கள் மானிடர்களைப்புசிக்கும் மிருகங்களைக்
கடவுளேன் சிருஷ்டித்தாரென் றுங்களுக்கு ளொத்துப்
பார்த்துக்கொண்டு இது தப்பென்றும் அயிம்ஸையே
நமக்குரிய ஒப்பென்று முணர்ந்து கொள்ளக்கூடாதோ
கோடிநாள் தவஞ்செய்து கொலையொன்றுசெய்யின் தப
மெல்லாமோடி வித்தையாய்ப் போகாதோ அக்கிரமமா
ன் குரானிலெழுதியிருக்குங் கட்டளைப்படி அனுபவக்ஞா
னியாகிய யமன் உன்னைச் சூலத்தின்மேலேற்றி அவர்
வாக்கினுற் சொல்லும் மகா வாக்கியத்தை மாற்று முபா
யம் பலசெய்தும் அவரங்கத்திலிருந் துதிர்ந்த உதிரத்து
ளிகளெல்லாம் அனுபவ மகாவாக்கியத்தையுரைக்க அவ
ரங்கத்தையும் சிந்தின உதிரத்தையும் சேர்த்து எரித்துச்
சாம்பலாக்கினபின் அப்பூதியும் வேதமா வாக்கியத்தைப்
புகல அதையோர் கும்பத்திலடக்கி வைத்திருக்க அப்ப
ட்டணத்தரசன் புத்திரியதைமோர்ந்ததே கர்ப்பவதியா
ய்க் கர்ப்பத்திலும் அச்சப்தமே உச்சரித்துக்கொண்டிரு
ந்துற்பவித்து அவ்வாக்கன்றி மறுவாக்கை யுரைக்காமல்
அப்பட்டணத்தரசன் புதல்வன் மடிந்துபோக,

அச்சுதனை அவ்வாக்கியத்தா லெழுப்பின துடுக்கர்
செய்யுந் துன்பத்துக்காகத் தேகத்தின் சர்மத்தைவாங்கி
மொசல்மான்களுக் கொப்பித்துச் சூரியனைவரவழைத்து
மெய்ப்பித்து உங்கள் குமாரன் தப்பிதமெனக் காட்ட
வில்லையோ அப்பட்டணத்தை உஷ்ணத்தால் வாட்ட
வில்லையோ வென்கிற பற்பல காதைகளைக் காட்சிப் பிர
மாணமாகக்காட்டி அனுபவக் ஞானமொழிகளால் மாட்
டிக் கபீரை பாராட்டித் தந்தை பெருமையை நீட்டி
ஜகத்தை உத்தாரணம் செய்யும் நிமித்தம் சுகப்பிரமமே
ஓ ருருவாய் இவ்வுலகில் வந்திருக்கின்ற ரவருக்குத் தாய்
தந்தை யில்லை ஜாதிபேதமில்லை மான வீனமில்லை நம்

புங்களென் சொல்லே யென்றுரைத்துச் சமஸ்த மதாபி மானிகளேயுங்கரைத்து அங்கிருந்து புறப்பட்டுத் தந்தை தாயிருக்கும் வாரணசியை நோக்கிவரும் மார்க்கத்தி லுள்ள ஓர்பட்டணத்திற்றங்க அப்பட்டண வாசியாகிய ஓர் வர்த்தகன் கமால் மகிமையைக் கேள்விப்பட்டவரை ப்பார்த்துவரும் பிரஜைகளே நோக்கி ஓ மாந்தர்களே! அறியாக் குழந்தையாகிய கமா லென்பவனிட மென்ன மகிமை யிருக்கிறதென்று போகின்றீர்கள் அவனிடம் போனல் பிணி நீங்குமா பீடை நீங்குமா பெருமை யுண் டாகுமா திரவிய மகப்படுமா ஜென்ம சாபல்யமாகுமா ஓ ரெறும்பின்பின் பலபிபீலிகைபோகுங் காரணத்தைப் போல் அவிவேகி ஒருவன் மெச்சினல் பலரும் மெச்சிப் பட்டணமெல்லாந் திரண்டு கும்பல் கும்பலாய்ப் போகி ன்றீர்கள் போன பலருக்குள் எவன் குறையாவது நீங்கி ற்று இன்பமெவனுக்காவ தோங்கிற்று சொல்லுங்களெ ன கேட்கப் பிரஜைகள் ஓ கனவானே! கற்பகத்தருவை ச்சார்ந்த காகமும் அமிர்தமுண்ணும் என்னும் பழமொ ழிப்படியே கமாலேத் தரிசித்துக் குறைநீக்கிக் கொள்ளா தவர்களுமுண்டா எனக்கிக் குறை தீர்ந்தது எனக்கிவ் வாஞ்சனை நீங்கிற்றென் றுரைக்கும்போது அவ்வார்த் தைக ளதிசயித்து எனக்குற்ற பவுத்திர வியாதியை நீக் குவாராயின் அவருக்காயிரம் பொன் விலையுள்ள ஓர் பச் சையைக் கொடுக்கிறே னென்றுறைத்தபோதே அப்பி ணி நீங்கிற்று.

உடனே பிணிநீங்கினவன்போல் களிப்படைந்து நவமிதிகளிற்சிறந்த விலையுயர்ந்த ஓர் பச்சையை ஓர் தட் டிலேந்திக்கொண்டு கமாலிடம்போய் மிகவும் உபசரித் துப்பேசுஞ் சாதுரியத்தைக்கண் டதிசயித்துச் சிரசாஷ் டாங்கமாகத் தெண்டனிட் டெழுந்து நின்று பெற்றல் இப்பேர்க் கொத்த பிள்ளையல்லவோ பெறல் வேண்டும் பிள்ளையென்பதில் அணிப்பிள்ளை கீரிப்பிள்ளை கிளிப்பி ள்ளை முதலான பிள்ளைபட்டம் பெற்றதற் கிணையான பிள்ளைகள் பிறந்தால் பிரயோசனமுண்டோ பால் கொ டாத பசுக்கள் பல விருந்தாற் பயனேதேனு முண்டோ உன்மத்தமுள்ள பத்துப்பிள்ளைகள் பிறந் திருப்பதால் கணக்கிடுவதற்கே யல்லவோ சித்தையிற்சிறந்த உத்தம மைந்தனெருவ னிருந்தா லுலகத்தையாளலாம் இப்பே ர்க்கொத்த புத்திரனைப்பெறாத நாம் எப்பேர்க் கொத்த பாக்கியத்தில் நிறைந்திருந்தாலும் குறையற்றவனே யெ ன்கிற பற்பல வெண்ணங்களோடுங்கூடி நிற்கையில் கமா லவ்வர்த்தகனைநோக்கி ஓ தனவானே உனக்குற்ற பிணி நீங்கிற்றே என்னைப்போன்ற புத்திரா பேட்சையால் தன்னைமறந்து நிற்கின்றீரோ என்னை யுமது புத்திரனக பாவித்துக் கொள்ளலாகாதோ உமதுகுறை நீங்கிப்போ காதோ வென்றவ் வணிகனை ஆலிங்கனஞ் செய்துக்கொ ண்டாசனத்தின்மீதி லிருத்திக்கொண் டன்புள்ள வார்த் தைகளாடும்போது அவ்வர்த்தகன் தான்பெற்ற புத்திர னகவேயெண்ணி இனி யிக்குழந்தையைப் பிரிவதுகூடா தென நண்ணி உச்சிமோந்து முத்தமிட்டினி நமது வீட் டுக்கு வாருமப்பா வென்றழைக்க கமால் சம்மதித்து அவ்வணிகன் மனைக்கெழுந் தருளி ஓ மகானு பாவனே! உமது தந்தை இவ்விடத்திலுமக்காகச் சில பச்சைகள் புதைத்திருக்கின்ற ரதைக்கெல்லி யெடுமையா வெனத் திருவாய் மலர்ந்தருள அப்படியே அவ்விடத்தில் வெட் டிப்பார்க்கையில் சிறு குழந்தையணியத் தகுந்த பச்சை கற்கள் பதித்து செய்திருக்கும் பல ஆபரணங்களகப்பட அதைக்கண்ட வணிகன் ஆனந்த மடைந்தவன யிப்பணி க ளணியும்படியான சிறுகுழவியில்லை வேழையேனுக் கிதையேன் காணுறச் செய்தீரெனக் கண்கலங்கி நிற்கை யில் கமால் பணிகளணியத் தகுந்தச் சிறுகுழந்தையா யழுகிற குரலோசையென்னும் நாதானந்தத்தில் அவ்வர் த்தகனைச் சேர்க்கும்படியாகச் செய்தார்.

அவ்வணிகன் கமாலேக்காணமல் கான்முளையைக் கண்டு ஆனந்தங்கொண்டு கமாலே நமது புத்திர வாஞ் சையைத் தீர்த்தருளினரென்று பாலனை வாரியெடுத்து மார்புட னணைத்துத் தனது நாயகியை விளித்து ஓ பெ ண்ணே என்னிருகண்ணே நமக்குற்ற புத்திர பாக்கியம் நீங்க விசித்திரமான மகனுற்பவித்தான் பசியாற் கதறு கிறன் பணிபாலுதவுகிறன் அங்கையாற் சீக்கிரமெடுத் துக் கொங்கையையூட்டி அனங்களைக் காப்பாற்றென்று போற்ற உடனே அவ்வரிவை தனபனுசையா லதிசீக்கிர மாய் வந்தெடுத்து மார்புடனணைத்துக் கலையை நீக்கி முலையைக்கொடுக்கக் கடவுளருளால் பாலுண்டாகக் கா ன்முளை அகடுநிறையப் பாலுண் டன்னை தந்தையின்வத னங்களைப்பார்த்து அவர்களகம் அக்கினியைக் கண்ட அரக்குபோ லிருக்கும்படியாய்ச்சிரித்து அளவிலாமோக க்கடலி லமிழ்த்தித்தன்னை மறக்கச்செய்ய அப்போது அவ்வர்த்தகன் சந்தோஷமேலீட்டால் சகலருக்கும் பஞ் சதாரையைப் பங்கிடும்போது பலரும் என்ன காரணத் தால் சர்க்கரையைப் பங்கிடுகிறர்களெனக்கேட்டுகமால் வர்த்தகனுக்குப் புத்திரனகச் சிறுகுழந்தை வடிவுடனி ருக்கின்றனென்ற விந்தையுரைக்குக் களித்துக் கமால் வீற்றிருக்குமிடம்போ யங்கு எதாவுருவோ டிருப்பதைக்

கண்டு ஆச்சரியங்கொண்டு புத்திரபாக்கிய மில்லாதவர்களெல்லோரும்போய் ஓ கமால் எனக்குப் புத்திரனைக் கடவாய் எனக்கு மைந்தனைக் கடவாயெனத் தோத்திரஞ்செய் துருகும்போது பணிகள்பூட்டிய பல புத்திராய்க்காட்டி சகலருடைய புத்திரவாஞ்சையையும் நீக்கிக் குறைவென்பதைப்போக்கி வாரணாசியை நோக்கிப்போகையில் வணிகன் கேள்விப்பட்டு கமாலுக்கென் றெடுத்துக்கொண்டுபோன பச்சையை இச்சையுடன் வைத்திருக்கலாமா இப்பேர்க்கொத்த புண்ணியவானுக் கல்லவோ நமதுடல் பொருளாவியைத் தாரைவார்த்தல் வேண்டும் புத்திர பாக்கியமில்லா மாந்தாதாவுக்குப் புத்திர பாக்கியமளிக்க நாரதராற் கூடாமற்போயிற்று தசரதனுக்குப் புத்திரகாமேஷ்டியாக முன்னிலையில் வசிஷ்டர் புத்திரபாக்கிய மளித்தார் அதுவுங் கலைக்கோட்டு முனிவரால்நடந்தது இவ்வளவு அரிதாகக்கிடைக்கும் புத்திர பாக்கியத்தை அனேகருக்களித்துக் களிக்கும் படியாய் செய்த கமாலை நானினிப்பிரிந் துயிர்தரிப்பேனோ கமால் காருண்யம்பெற்றவன் காயத்துடன் சுவர்க்கம் அடைவதற்கோர் தடையுண்டோ பெருத்த மேடைகட்டி வாழ்வதா லுயிர்போந் தருணத்திற் கூடவரப் போகின்றதா பெண்டுபிள்ளைகளை தன்னுயிர்போல் காக்கினும் நமது பாபபுண்ணியத்துக் குடன்படப் போகின்றார்களா எல்லோரும் பணமிருந்தால் மணமாய்ப் பார்ப்பார்கள் பணமில்லாவிடின் பிணமேயென் றியாரும் பேசமாட்டார்கள் கனகமிருந்தால் தாய்தந்தை அண்ணன் தம்பி புத்திரமித்திரர்கள் பட்சமாய்ப்பாராட்டுவார்களன்றி மிகவுஞ் சீராட்டுவார்கள் அதுவில்லாவிட்டால் எங்கிருக்கின்றா யென்று வாய்பேச்சும் பேசமாட்டார்க ளல்லவா மாந்தர் துர்விஷயத்திற் செலவழிப்பதுபோல நல்விஷயத்திற் செலவழிக்கமாட்டார்கள்.

எவர்களுந் தங்கள்தங்கள் தாரபுத்திராதிகளைக் குறித்துத் தழைத்துழலு கின்றார்களே யல்லாமல் பகவத் பக்தர்களைக் குறித்தரைக்கணங் கஷ்டமெடுத்துக்கொள்ளமாட்டார்க ளல்லவா தனுமன தனங்களைச் சாதுக்களுக்குத் தாரைவார்த்து இகபோக வாசையை நீத்துப் பரலோக சாம்பிராச்சியத்தை ஆசிப்பவர்களே மாந்தரிற்சிறந்த மகானுபாவர்க ளென்றுரைக்கத்தகும் தன் பராக்கிரமத்தாற் காட்டுக்கதிபதி யாதொரு சஞ்சலமற்றுழலும் அரிமாவைப்போலத் தனமிகுதியால் நாட்டுக்கதிபதியாய் எதேச்சையாய் ஸ்திரீயாதி போகங்களில் ரமித்துக்கொழுத்துப் பழுத்துக் கொக்கொக் கென்கிற இருமல் முதலான வியாதிகளாற் பீடிக்கப்பட்டு இகபரங்கெட்டு குறுக்கி யோனிகளிற் சிக்கி எமவாதனையாற் சொக்கி அலக்கணுறல் நன்மையோ வென்றிவ்விதங்களாயோசித்துத் தன் மனைவியைநோக்கி நீ இக்குழவியுடனுன்தந்தை வீடுசேர்ந்து சுகமாயிரு நான் கமால்பின் போய்வருகிறேனென் றுரைத்துத் தனது ஆஸ்தியெல்லாம் தர்மவிஷயத்தில் நாஸ்திசெய்து மேடைமாளிகைகளையு முத்தமர்க்குத் தாரைவார்த்துக் கமாலுக்குரிய பச்சை ஒன்று மாத்திர மேந்திக்கொண் டதிதுரிதமாய்க் கமால் பக்கலடைந்து வந்தனம்புரிந்து மிகவும் பயந்து ஓ என்னாண்டவனே ஆனந்தத் தாண்டவனே என்னை விட்டேக உமக்கு மனமும் வந்ததோவென் றழத்தொடங்கினார்.

கமால் ஓ தனவானே கனவானே நானே குழந்தையுருவாகி யுமதகமிருக்கப் பிரிந்து போவதாக நினைக்கலாமோ நீர் வந்துவிட்டால் அங்கு என்னைக் காப்பாற்றுவார் யார் என்மொழியை மறுக்காமல் என்னம்சமாகிய குழவியை ஆதரணைசெய்யச் சீக்கிரம் புறப்பட்டுப் போமென்றறைய வர்த்தகன் நீர் வந்தாலன்றி நான் போக மாட்டேனென் றுரைக்க கமால் உன்னைப்போலவே இச்சரீரத்தைப்பெற்ற கபீர் வாஞ்சைகொண் டிருக்கின்றார் அவருக் கிவ்வுருவைக் காண்பித்து அகத்தியம் வருகின்றேன் நீர் என் வாய்மையை மறுக்காமல் வீட்டைச் சேருமென்றுரைக்க வர்த்தகன் உமதிஷ்டப்படியே செய்கிறேன் இக்காணிக்கையை யேற்றுக் கொள்ளு மெனக் கமால் ஓ மகானுபாவனே நானிதை யிச்சித்தேனாகில் ரவ்ரவாதி நரகத்துக் காளாவதற்கோர் தடையுண்டோ உமக்குற்ற ஆஸ்தியை யெல்லாம் தர்மவிஷயத்தில் நாஸ்திசெய்துவிட்டீர்.

தாரிதரியத்துக்குட்பட்டீர் இதை யாதாரவாய்வைத்துக்கொண்டு சீவனார்த்தம் நடப்பித்துக் கொண்டிருஞ் சிலநாளில் வருகிறேனென் றகலும்போது வர்த்தகன் கமாலுடன் பேசிக்கொண்டே அவருக்குத் தெரியாமல் அப்பச்சையை முந்தானியில் முடிந்துபோய் வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு தன்மாமனார் வீட்டையடைந்து கமால் கருணையாலுற்பவித்த மைந்தன் மீதிருக்கும் நகைகளிற் சிலதை விக்கிரயப்படுத்தி அதனால் வியாபாரத்தைநடத்தி முன்னிலும் மேடமாளிகைமுதலானவைகளிற் செழித்துக் கமால்வரவை எதிர் நோக்கிக் கொண்டிருந்தா இங்கிப்படியிருக்கக் கமால் தந்தை தாய் மேலுற்ற அவாவால் பச்சையை முடிந்திருக்கும் விந்தையைச் சிந்தையுட்கொள்ளாம னடந்து கன்றைநாடிச்செல்லும் பசுவைப் போலப் பாகீரதியைக் கடந்து வீட்டை யடைந்து தந்தை தாயை வலம் வந்து வந்தனம்வந்து யாத்திரைப் போய் வந்த விர்த்தாந்

தங்களைச் சவிஸ்தாரமாய்ச் சொல்லத் தொடங்கினர். கபீர் தனயன் மேலிருக்கும் பேரன்பால் பலதரந் தழுவி யணைத்து அங்கவஸ்திர முந்தானையில் முடிந்திருக்கும் பச்சையை யவிழ்த்துப் பார்த்துத் தேகமெல்லாம் வேர்த்து முகந்திருப்பிக்கொண்டு பூசாவிக்கிரகத்தின் முன்னின்று துக்கசாகரத்தில் மூழ்கி ஓவென் றழத்தொடங்கினர். சுந்தரா என்னகாரணமென வாய்விட்டுப்ரலாபிக்கத்தொடங்கினள். காரணந்தெரியாக் கமாலு மழத் தொடங்கினர் அப்போது கபடநாடகனுகிய ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீராம லட்சுமண பரத சத்துருக்க சீதா சமேதராய்வந்து கமால் கபீர் சுந்தராவையுங் கட்டிக்கொண்டோவென்றழுது புலம்பத்தொடங்கினர் இது சங்கதி தெரிந்த ராமானந்த ஸ்வாமிகள் தனது மாணுக்கருடன் புறப்பட்டுக் கபீர் வீட்டையடைந்து, ஓ கபீர் ! கதவை மூடிக்கொண்டு யார் கூப்பிட்டாலும் பேசாமல் வெகு நேரமாவழுதுக்கொண்டிருக்கின்றீர். நான்கூப்பிட்டும் பேசாம லிருக்கலாமோவெனக்கூவுகிறதைக்கேட்டகபீர் இதோ வந்தேன் ஸ்வாமியென்று கண்களைத்திறந்து கடவுளமும் பாசாங்கைப்பார்த்துக் கரங்களைச்சேர்த்து அதிசீக்கிரமாயோடி அறணந்திறந்து ராமானந்த ஸ்வாமிகளைத்துதித்து உள்ளே வாருமென்றழைக்க அகத்தில் வந்த ராமானந்த ஸ்வாமிகள் ஸ்ரீராமலட்சுமண பரத சத்துருக்க சீதா பிராட்டியைக்கண்டு ஆனந்தங்கொண்டு இன்றும்மை காணும் படியான பாக்கியமேதோ நான் செய்த சிலாக்யமேதோ இக்கபீருடன் கூடி நீரழுங் காரணமேதோ அவ்விர்த்தாந்த மும்மக்குத்தெரியாததோ உம்மால் நீங்காக்குறையு முண்டோ ஓ பகவானேஎன்றுருகும்போது ஓ ராமானந்தா! என்னுடைய மார்பகத்திலணிந்துக் கொண்டிருக்கும் இப்பதகத்தில் நடுநாயகமாகப் பதிக்கப் பச்சை யொன்றப் படாமல் வெகுகாலமாய் வாஞ்சை கொண்டிருந்தது.

இக்கமால் யாத்திரை போகும்போது காணிக்கை கொண்டுவரும்படிச்சொல்லி யனுப்பினேன்என்வாக்கை மறுக்காமல் இப்பச்சைகொண்டு வந்தா னதற்காகவே இக்கபீரழுதான் நாங்களுமழுதோம் இப்பச்சையை நீர் தருவிப்பீரேல் எக்காலமு மும்மது கியாபக மிருக்குமென்றுரைக்கும்போது கபீர் கரத்திலிருக்கும் பச்சையை ராமானந்த ஸ்வாமிகளுக்குக் காண்பித்து ஓ ஸ்வாமி ! பகவான் பச்சையை கொண்டு வந்த கமாலை பரியாசஞ் செய்கின்றீரேயன்றி உண்மையாய்ப் நம்பத்தக்கதல்ல இல்லாதவரல்ல, பகவானிப்படி சொல்ல ஓ என்னாண்டவனே! கஸ்தூரியை கொடுத்துப் புழுதியும் வேதாந்த சாஸ்திரங் கொடுத்துக் களாசாஸ்திரமும் கங்கையை ஊற்றிவிட்டுச் சுராபானமும் சந்தனக் கட்டையைக் கொடுத்து எட்டியையும் அசுவத்தைக்கொடுத்துக் கர்த்தபத்தையும் அமிர்தத்தைக்கொடுத்து விஷயத்தையுங் கொண்டுவந்ததைப்போலப் பகவான்றிருநாமங்களை விற்பனை செய்து அற்பமான கல்லைக்கொண்டுவந்தான் இதனால் நிரையத்துக் குள்ளாகும்படியாய் நேரிட்டது. எவ்வளவு உயரப்பறந்தாலும் பருந்து கருடனும் தீபங்களொத்தனையானாலுஞ் சூரியனும் நட்சத்திரங்க ளொத்தனையானாலும் சந்திரனும் பசுக்களெல்லாங் காமதேனுவும் விருட்சங்களெல்லாங் கற்பகமும் ஆகாததுபோல இக்கமால் எவ்வளவு பிரயாசப்பட்டு யாத்திரை செய்து வந்தாலும் நிராசையுள்ளோனுக்குச்சமானமாகான்இனி இவன் முகத்தில் விழிக்கலாகாது. நம்முடனிவன் கூடியிருக்கத்தகாது. ஓ சுந்தரா ! இக்கணமிவனை வெளியிலனுப்பிவிடு மென்றுரைக்க, அதுகேட்ட கமால் ஓ என் தந்தையே ! நீருரைத்தது வெகு விந்தையே இந்த அற்பக்கல்லின்மே லவாக் கொண்டேனென்று நிச்சயமாய் நினைக்காதீர் புலி எவ்வளவு பசியாயிருந்தாலும் புல்லைத் தின்னாது சிங்கம் எவ்வளவும் உதராக்கினியால் வாட்டமுற்றிருந்தாலும் நரியிறைச்சியை யுண்ணாது விவேகியெவ்வளவு சங்கட மடைந்தாலும் லோபியைக்கோரான் புண்ணியவானுக் கெவ்வளவு வறுமை வந்தாலும் தர்மஞ்செய்ய யிடையான் வீரன்மேலெவ்வளவு சேனைகள் திரண்டு வந்தாலும் முதுகுகாட்டி ஓடான் பதிவிரதைகெவ்வளவு காமவிகாரம் மேலிட்டாலும் பரபுருடனை நாடாள் யோகி தனக்கெவ்வளவு மதமிருந்தாலும் ஸ்திரீ முகம்பாரான் அதுபோலவே விகாரமுள்ள நான் இச்சொற்பக்கல்லின்மே லிராகங்கொள்ளுவேனு எனக்குத் தெரியாமல் என்மேல் வாஞ்சையுள்ள ஓர் வர்த்தகன் முடிந்திருப்பான் அறியாமலு மொருவர் சொத்தை அபகரிக்கக்கூடாது. இக்கல்லினாலல்லவோ சகலரும் அழும்படியாய் நேரிட்டது இதோ அவரைக்கண்த்திற் கொண்டு போய்க் கொடுத்துவருகிறேன் சகலருக்கும் சந்தோஷந் தருகிறேன் என்றக்கல்லை வாங்கிக்கொண்டு அதிசீக்கிரமாய் நடந்து வர்த்தகனிருக்கு முன்னடைந்து வர்த்தகன்பாற் சென்று ஓ தனவானே ! இப்பச்சையைநானறியாமல் முடிந்தென்னை யவமானப்படுத்தினீ ரிப்படி செய்யலாமோ? என் மிடற்றைக்கொய்யாமல் கொய்யலாமோ வென்றீந்து அரைக்கணத்தில் தந்தைபாற் சேர்ந்து ஓ யென்னையனே ! பச்சையை வர்த்தகனுக்களித்துவந்தேன் இனி யுமதாயாசம் நீங்கிற்றே துக்கம்

போயிற்ரோ வென, கபீர் ஓ கமால்! ஒரு முகூர்த்தத்துக்குள் வர்த்தகன்பாற் சென்று வந்தாயா நிச்சயமா வென, பகவான் ஓ கபீர்! நானிச்சித்த பச்சை நிச்சயமாய்க்கொண்டுபோய்க் கொடுத்து வந்தான் நான் சந்துருஷ்டி யடைவதைப்பார்க்கிலும் உங்களுடைய வைராக்கியம் மேலானதோ வென்றறைய கமால் ஓ பகவானே கடைத்தேங்காயைத்திருடி வழிப்பிள்ளையார்க் குடைத்தால் பிரயோசன மில்லா ததுபோல் வர்த்தகன்சொத்தை உமக்களிப்பதாலிபாங்களடையும் பயனேது நீரித் துச்சமான பச்சைமேலிச்சை கொண்டது நிச்சயமோ வென்றறையும் மகனைப்பார்த்த கபீர் இறந்த மக்கள் எழுந்து வரக்கண்டவர்களைப்போலவும், முழுகிப்போன கப்பல் கரையில் வரக்கண்ட வர்த்தகனைப்போலவும் களிப்புற்று விருப்புற்று ஓ என்னருங்குழந்தாய்! உன்னை நான் பெறும்படியான பாக்கியமேதோவென் றுலிங்கனஞ்செய்து ஸ்ரீமந்நாராயணரை நோக்கி, ஓ என்னாண்டவனே! உமக்கப் பச்சையின்மே லிச்சையிருந்தாற் சொல்லுமிப்போதே அடியேன்போ யவ்வர்த்தகனுக் கேவல் செய்துக்கொண்டு வருகிறேனெனப் பணிய பகவான் ஓ கபீர்! உங்களைச் சோதித்தேனன்றி மற்றப்படி இச்சை கொண்டவனல்ல உங்களுடைய அன்பே இன்புள்ளதென்றறைந்து மறைந்து போனர். பின்பு ராமாவந்த ஸ்வாமிகள் கபீர் வீட்டில் நடக்கும் விந்தையைக்குறித்து மிகவும் வியந்து விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடஞ்சேர்ந்தார், கபீருங் கமாலுஞ் சுந்தராவும் சாதுக்களுக்குப் போதுமானவீ வஸ்துக்களைக்கொடுத்துக்கொண்டு பகவத்தியானத்திலும்; ஸ்ரீபிர்மக்ஞானத்திலும் சிறப்புற்றிருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

கமால் யாத்திரை அத்தியாயம்

முற்றிற்று.

---

பின்பு கபீர் தாஸர் தர்மார்த்தமாய் தனையன் தலையை யரிந்ததும முண்டம் கூத்தாடினதும் பகவான் அருளால் உயிர்த்தெழுந்ததும் பின்னும் கோரக்கர்வந்து காசியில் எங்கும் ஜலமில்லாற் செய்ய கபீர் இருந்த விடத்தில் பெருவிரலால் பூமியை அழுத்து வேர்க்கெல்லாம் ஜலம் புறப்படச்செய்ததும் மரித்த தந்தைக் கர்க்கிய நீரளிக்கும் ஓர் பண்டிதனுடைய தந்தை வாரணாசியிலுள்ள ஓர் வணிகன் வீட்டில் இருகண்ணிழந்த ரிஷபமாயிருப்பதைக்காட்டி அந்தப்பண்டிதனை யாட்கொண்டதும் நீயும் சம்சாரி நானும் சம்சாரி யெனக்கேன் பகவத்தரிசனங் கிடைக்கவில்லை யென்றுகேட்ட ஓர் பிராமணனுக்கு தன் மனைவி மக்களின் குணோத்தமத்தை வெளிப்படுத்தி அப்பிராமணனை யாட்கொண்டதும் நானக்ஷாவோடு தர்க்கஞ்செய்ததும் ரோயிதாஸரோடு தர்க்கஞ்செய்து கணபதி பிர்ம்மா ஆதிசத்தி ருத்திரனையும் சீதாரா மென்று சொல்லச்சொன்னதும் ராமதாஸருக்கு பகவானுடைய தரிசனந்தருவித்ததும் முதலான அத்தியாயங்கள் பின்வரும் பக்தர்கள் சரித்திரங்களின் தொந்தார்த்தமாய் வரும் அதை அங்கங்கே காணலாம்.

கபீர்தாசர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமந்நாராயணரே துணையிருந்து மேல்வரும் சரித்திரங்களையெல்லாம்

இனிதாய் முடிக்கவேண்டும்.





ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்.

# ஸ்ரீ மகாபக்த விஜயம்.

## மூன்றாவது

## துளசிதாசர் சரித்திரம்.





### பகவான் துதி.

விருத்தம்.

உலகமளிக்குஞ் சதுர்முகனை யுந்திக்கமலத் தளித்துலகை
இலகவளிக்கும் பெரும்பார மேற்றுக்கொண்ட தயையெவராற்
சொலுதற்காகு மீன்றழித்தல் சுலபங்காத்த லரிதென்றே
அலையிற்றுயிலு மச்சுதனை யடியேனுன்ற னடைக்கலமே.

### துளசிதாசர் துதி.

விருத்தம்.

அளவில்காமத் திருந்தவனை அரியைத்தேடித் திரிந்தவனைக்
களவாயனுமான் றனைக்கண்டு கட்டியிழுத்த மாதவனைந்
துளசிதரனைப் பார்த்தவனைத் தொண்டுசெய்ய வைத்தவனைத்
துளசிதாஸ னெனுநாமத் தோன்றலுபய வடிதொழுவாம்.

## முதலாவது
## துளசிதாசர் உற்பத்தி அத்தியாயம்.

மூலாதார முதலாருதாரங்களையுந் தரிசித்து நாதானந்த வசமாகி சோதியைக் கண்டு அச்சோதியைக் காணும் பரஞ்சோதியாகிய பரப்பிரம்மத்தைக் காணமற் கண்டு பரமானந்தக் கடலிற் படிந்திருக்கும் உத்தவ சித்தர் முதலானவர்களும் மறுநாட் காலையில் ஸ்நானஞ் செய்து சுபதபங்களை முடித்துக்கொண்டு வால்மீகாவதாரமான துளசிதாஸருடையகதையைக் கேட்கவேண்டு மென்கிற அவாவால் விரிஞ்சாவதாரமான நாபாஜி சித்தரிடம்போய்ப் பணிய, அவர் களிப்புடன் துளசிதாஸருடைய சரிதையைச் சொல்லத் தொடங்கினர்.

ஓ சித்தர்களே! ஸ்ரீ கிருஷ்ணபகவானுக் குகந்த அன்பர்களாகிய பாண்டவர்க ளரசுபுரிந்த இடமாகியும் ஸ்ரீ வாசுதேவர் தன் சுயரூபமாகிய விசுவரூபங் காட்டின ஸ்தானமாகியும் விளங்காநின்ற அஸ்தினபுரமென்னும் டில்லி நகரத்தி லிருப்பவர், திவ்ய திருநாமந் தரிப்பவர், உத்தம பிராமண குலத்திற் பிறந்தவர், சாதுக்கள் சங்கமே சாயுச்சிய பதமெனத் தெளிந்தவர், சாந்தர் சேவைக் குகந்தவர், வேதாந்தத் தெளிவில் மிகுந்தவர், சந்தோஷ வாரியிற் றோய்ந்தவர், இந்தாவென் றதிதிகட்கீந்தவர், கல்வியில் மிகவுஞ் சிறந்தவர், செல்வந்தன்னில் நிறைந்தவர், துரியந்தன்னில் விழித்தவர், துரிசுகளெல்லா மழித்தவர், தயாரசத்தால் மகிழ்ந்தவர், ஜெயாவெனப் பலரும் புகழ்ந்தவர் ஆகிய ஓர் பிராமணர் துலுக்கர் முதலாகிய சகலருக்கும் ஆத்மாவே அல்லா, நான் சொல்வது பொய்யல்ல ஆத்மாவே அழியாப் பொருள், ஆத்மாவே அஷ்டாட்சரத்துக்காதி, ஆத்மாவே பஞ்சாக்ஷரப் பிரக்கியாதி ஆத்மாவே சைவவைஷ்ணவ ரகசியம், ஆத்மாக்களே இனியே னுங்களுக்குச் சமுசயம், ஆத்மாவே மனுவெழுத் தென்னும் மவ்யோமம், ஆத்மாவே தாரகமென்னு நாமம் என்றும், ஆத்மாவே ராமா வேறென்றுலகத்தை போமாவென்றுஞ் சொல்லிக்கொண்டே யிருப்பதால் சகலரும் அப்பிராமணோத்தமரை ஆத்மாராம் என்றழைத்துக்கொண் டிருந்தார்கள்.

அப்போது டில்லிநகருக் கரசனான அக்பர் பாதுஷா வென்பவன் அந்த ஆத்மாரா மென்பவருடைய வித்வத்திறத்தையும் சத்குணத் திறத்தையும் சாதுரியத்தையும் அத்வைத க்ஞானத்தையும் சகலரையும் அனுபவ க்ஞானத்தா லடக்குகிறதையும் மாறுத்தரஞ் சொல்லாமல் மடக்குகிறதையும் கேள்விப்பட்டு ஆத்மாராமை யழைப்பித்து தன்னிடத்தில் யோசனைக்குரிய பிரதானியாக வைத்துக்கொண்டு ஆத்ம க்ஞானத்தை பயபக்தியுடன் சிரவணஞ் செய்துக்கொண்டு நமக்குக் காரண குருவானவ ரிவரேயென வின்டு ஆத்ம க்ஞானத்தை மனனம் பண்ணிக்கொண்டு அத்தியந்த பக்தியுட னிருந்துக்கொண்டு யாதொரு காரியத்திற்கும் ஆத்மாராமை ஆதார புருஷனெனச் சொல்லிக்கொண்டு வெகு வுபசரணையோடும் பராமரித்துக் கொண்டு மாதாந்தரம் ஆயிரம் பொன் சம்பளங் கொடுத்துக்கொண்டு வருகிற காலத்தில் மரா மரா வென்னும் மந்திரத்தாற் றேர்ந்தவர், தராதலத்திலழியாத தபசைச் சார்ந்தவர், சகல சாஸ்திரங்களையும் பார்த்தவர், சகல சந்தேகங்களையும் பேர்த்தவர், ராமா வெனும்மொழி வராமல் வைதவர், ராமாயணத்தைச் சுலோகமாகச் செய்தவர் பரத்துவத்தை யறிந்தோர்களில் முன்னவர் பரத்துவாசருக் கருள்வாசிஷ்டஞ் சொன்னவர் ஆகிய நால்வேத முணர்ந்த வால்மீக முனியானவர் பகவானுத்திரவின்படி இவ்வுலகை ரட்சிக்கும் நிமித்தியம் ஆத்மாராம் பத்தினியாகிய உத்தமியின் கர்ப்பத்திற்றங்கி பூரணமானபின் பூரணச்சந்திரனைப்போ லழகுடன் பிறந்தார்.

அப்போது ஆத்மாரா மென்பவர் அழகுள்ள மைந்தனைப்பார்த்து, கண்களில் சேர்த்து ஆனந்தவாரியிற் குளித்தவராய் ஆனந்தோப் பிரமத்திற் களித்தவரா யன்பாய்ப் பாராட்டி இன்பாய்ச் சீராட்டி ஆசையாற்பொங்கி அனுசன்பால் தங்கி (கடந்த ஞானியுங் கடப்பரோ மக்கள்மேல் காதல்) என்பதைப்போல மிகவுங் காதலாய் வளர்த்து அருங் கொழுந்துபோற் றளிர்ந்து துளசிதாஸென்று பேரிட்டு சகலருக்கும் விருந்திட்டு உபநயனஞ் செய்து கருணை மழை பெய்து நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பல இதிகாச வியாகரணம் முதலானவற்றையு முணர்த்தி வயது முதிர்ந்தபின் தன் குலத்தின் நீண்ட குழலும் நிறைமதி முகமும் கமலக்கண்களும் கற்கண்டு மொழிகளும் பவளவாயும் பரிமள வுடலும் அன்ன நடையும் சின்ன யிடையும் அதிகச் செல்வமும் அதிகக் கல்வியும் உள்ள மமதாதேவி யென்னும் ஓர் கன்னிகையைப்பேசி சகலர்க்குஞ் சவ்வாது பூசி உறவோர் மற்றப் பெரியோருடனே சகலரும் மெச்சச் சந்தோஷத்துடனே அரசனும் வரிசை யன்பாய்க்கொண்டு

அருகினில் நிற்கப் பலநகர் மொய்க்க உறவினர் களிக்க பன்னீரிற் குளிக்க விந்தையாகக் கலியாணஞ் செய்து நாடோறுந் துளசிதாசனை அரசனிடமழைத்துக் கொண்டுபோய் அரச நீதிகளையும் பார்த்துக்கொண்டு வரும்படியாய்ச் செய்து மற்ற வேளையி லருகிலிருத்திக் கொண்டு அப்பா துளசிதாசா! அரசர்களும் பாழ்புர் சரியென்று சொல்லப்படும். ஆதலால் அக்கினியி னிடங் குளிர்காய்வதுபோல மிகவும் ஒற்றுமையாய்ச் சேராமல் வெறுப்புடனும் போகாமல் சமமா யிருக்க வேண்டும், கொலு மண்டபத்திற் சென்றபின் அரச நீதிகளிலேயே மனதை நிலைத்திருக்கச் செய்யவேண் டும். நியாயத் தீர்ப்புகளில் எளியோர் வலியோரென் கிற பாராபட்சம் பார்க்காமல் அனியாயமாய்த் தீர்க்கா மல் அறத்தைக் காக்கவேண்டும். இராஜ னேதாவ தோர் வார்த்தையைக் கேட்பானாயி னதைத் தீர்க்காயா யோசித்துரைக்க வேண்டும். ஏனெனில், அநீதியான மந்திரியால் ராஜாங்கங் குன்றிப்போம். ஓர்சாட்சியை நிலை நிறுத்துவது வெகு துர்லபம். அழித்தல் சுலபம். தன்னுயிரைப்போல் மன்னுயிரைப் பார்த்துப் பாது காப்பதே பிரதானிக்குரிய தர்மம். அரசன் அநீதிக் குட்படுவானாயின் பலவித திருஷ்டாந்தங்க ளெடுத்துக் காட்டி தர்மத்தை நிலைநாட்டி சகலரும் புகழும்படியான கீர்த்தியைச் சம்பாதிக்கவேண்டும். உத்தமர்க் கரும் பொருள் கிடைத்தா லதனால் சத்கருமங்கள் செய்து எப்படி மேன்மையும் புகழும் சம்பாதித்துக் கொள் வாரோ அப்படியே தனக்கதிகார மிருக்கும்போதே நாட்டைச் சீர்ப்படுத்தி தர்மவிஷயத்தைப் பெருக்கி கர்மங்க ளியாருஞ் செய்யாமற் றடுத்து நியம நிஷ்டை யள்ளோரை மிகவும் விசுவாசித்து இறைவன் முதல் சகலருக்கும் சத்காலத்தில் காலங்கழிக்கும்படியாய்ச் செய்து, கொலை களவு காமம் குருநிந்தை முதலான துஷ்ட காரியங்கள் நடக்காமற் றன் னாக்கினையைச் செலுத்தி யதார்த்தவானென்னப் பேரெடுத்து அதிதி களை ஆதாரணைசெய்து யதிசுவரர்களுக்கு ஸ்நானங்க ளேற்படுத்தி அவர்கள் மனங் குறைவுறாமல் பாது காத்து அவர்க ளாசீர்வாத மரசனுக்குத் தருவித்து அரசர் மாபுக்குக் குற்றம் வாராமல் நிலைக்கச் செய்ய வேண்டும்.

ஏனெனின், இல்லறத்தோர்களுக்குத் துறவறத் தோர் செய்யுந் தபமே துணையென் றுரைக்கத் தகும் தபத்துக்கு சம்சாரிகளின் தர்மமே துணையென் றுரைக் கத் தகும். ஆகலால், பக்தர், சித்தர், முக்தர், சித்தங் கலங்குமாயின் பட்டணம் பாழாய்ப் போவதற்கோர் குறைவில்லை. மேலோ ராசீர்வாதத்தால் குனியமான நகர் திலக்க மடையும். சந்திர சூரியர்களால் பட்டணம் பிரகாசிப்பதல்ல சாதுக்களாலேயே பட்டணம் பிர காசிக்கும். வசிஷ்டபகவா னயோத்தியி லிருந்தபடியால் தசரத மகாராசனை அனேகநாள் பாதுகார்த்தார். சாது க்க ளில்லா நாடு நரி பூழி வாழுங் காடென்றே சொல் லத்தகும். சாதுக்கள் கூட்டமே சந்தோஷ கோஷ்ட மென்று பெரியோர்க ளுரைப்பார்கள். முக்கியமாய் அமைச்சனுக்குப் பொறுமையும் சூக்ஷ்மபுத்தியும் யுக்தியு மிருக்கவேண்டும். சாந்தஞ் சாகரத்திலும் பெரிதென்று ஓர் மகாத்மா எழுதிக்கொடுத்த ஓர் சீட்டாலும் பிர தானியி னுத்தியாலும் ஓரரச னதிக சந்தோஷமடைந்த தன்றி ஸ்ரீஹரிதிக்குள்ளாகாமல் புகழ்பெற்ற னதெப்படி யெனின், ஓர் பட்டணத்தில் ஓர் சாது சமுசாரத்தி லிருந்தே பிரம நிஷ்டையைச் சாதித்துப் பிர்மானந்தத் தை யனுபவித்துக் கொண்டிருந்து நிரியாண திசை படையுங் காலத்தில் அவர் தனயன் விவேகத்தால் ஓ என் தந்தையே! என் சீவனார்த்தத்துக்கும் மணத்துக் கும் அரைப்பணஞ் சம்பாதித்து வைக்காமற் போனீ ரே இனி நானெவ்விதமாய்ச் சீவனஞ் செய்வேனென்று பிலாபிக்க, அச்சாதுவானவர் சாந்தஞ் சாகரமென் றெழுதிக்கொடுத் திதைப் பத்திரமாக வைத்திருந் துனக்கோர் குறைவருங் காலத்தில் இப்பட்டணத்துக் கதிபதியினிட மிதைக் கொடுப்பையாயி னுன்குறை நீங்குமென் றுரைத்துப் பரம சமாதி யடைந்தார். பின்பவர் தனயன் தந்தைக்குச் செய்யவேண்டிய கிரியை களையெல்லாஞ் செய்து முடித்து மறுநாள் சீட்டைக் கொண்டுபோ யரையனிடங் கொடுக்க, அத்தோன்றல் சாந்தஞ் சாகரத்தினு மதிகமென் றெழுதியிருக்குஞ் சாதுவின் கையெழுத்தை தன் சக்கிராயுத உறையிற் செருகி, அச்சாதுவின் மைந்தனுக்குத் தேவையான தளித்தனுப்பி, அரசன் நெடுநாள் சென்றபின் னொரு நாள் வேட்டையாட நாட்டைவிட்டுக் காட்டிற் செல்ல, நாட்டில், வேந்தன் படுக்கையைச் சிங்காரிக்கும் வேவு காரன் வெகுநாளாய் நரபதியின் மலரணைமேற் சய னிக்க வெண்ணங்கொண்டிருந்தவ னாதலால், அன்று வெகு விநோதமா யலங்கரித்து. அப்பஞ்சணைமேற் படு த்து மெதுவான பீதாம்பரத்தைப் போர்த்துக்கொண்டு என்று மறியாதா னின்பத்தை யனுபவிப்பதுபோல துயிலாற் றன்னை மறந்து நித்திரை செய்தான்.

அத்தருணத்தி லிராஜ பத்தினி அரசனறையிற் சென்று இறைவர் அனந்தல் செய்கிறா ரென்றவன் பக்கத்திற் சயனித்து அனந்தல் மேலீட்டாற் றன்னை மறந்தாள். அத்தறுவாயில் காட்டில் வேட்டையாடப்

போன பூபாலன் காட்டையடைந்து மந்திரியுடன் அரண்மனையின் பிரவேசித்து சயன அறையிற் சென்று தன் மனையின்மேற் றூங்குஞ் சதியையும் ஆடவனையும பார்த்து தேகம் வேர்த்து அடங்காக் கோபத்தா லிவர்களிருவரையு மிரண்டு துண்டாக வெட்டிப் பலியிடுகிறேனென்று சரேலென்று சந்திராயுதத்தை யுருவினன். அப்போது உறையிலிருந்த சாதுவின் சீட்டு ஆகாயத்திலிருந்து விழ்ந்ததைப்போ லந்நரபதி அதிசயிக்க முன்னே விழ்ந்தது. நிருபதி அச்சீட்டைக் கையிலெடுத்துச் சாந்தம் சாகரத்தினும் பெரிதென்று எழுதியிருப்பதை நோக்கிச் சாதுவின் கைச்சீட்டென்னிங் கியாபகமின்றி இது அந்தரத்திலிருந்து வந்ததென்றே தீர்மானித்து வெட்டுதற் கச்சமுற்றவனாய்ச் சந்தடியின்றிப் புறம் போந்து தன் மந்திரியை விளித்து யாவும் புகன்று தண்டிக்குந் தருணத்தில் ககனத்திலிருந் திச்சீட்டு விழுந்ததெனப் புகல, அம்மதி மந்திரி யூகித்து, ஓ அண்ணலே ! உமது சங்கை நீங்க ஒருபாயஞ் செய்கிறேன் பார்ப்பீராக வென்று ஓர் பக்கமாய் வரையனை நிறுத்தித் தான் பள்ளியறையின் வாயிலில் நின்று மெதுவாய்க் கையைத் தட்டினன். அக்கையொலியைக் கேட்ட இராஜ ஸ்திரீ விழித்து மந்திரியை நோக்கி, அதிசீக்கிரமாக வெழுந்து குன்றின குரலோடு இராஜனும் நானும் சயனித்திருக்கும் அறைக்கு ளச்சமின்றி வரலாமா ? இது உத்தமர்க்கழகாவென் றுரைத்துக் கொண்டே தன்னறைக்குட் போகத் தொடங்கினள்.

மந்திரி அப்பதிவிரதையின் பின் சென்று காட்டிற் போன காவலர் காட்டிலெப்போது வந்தார்தெரியச் சொல்லுமென, இராணி, அரசர் முதற்சாமத்திலேயே வந்து சயனித்துக்கொண்டா ரென்றாள். மந்திரி, நிருபன் வந்ததை நீர் பார்த்தீராவென, அவ்வுத்தமி அவர் வந்தது நானறியேன். காட்டிற்போன ஆயாசத்தால் எவ்வழியாக வந்தோ தன்னை மறந்து தூங்குகின்றார். நீர் நல்ல விவேகியா யிருந்தும் அறியாதவர்போல் அந்தப்புரத்தில் வந்ததன்றி என்னைத் தொடர்ந் திவைகளெல்லாங் கேட்கத்தகாது. எவ்வளவு துரிதமான காரியமிருந்தாலும் ஏவலாளரா லெழுப்ப வேண்டு பன்றித் தனித்து வரலுமாகாது. இராஜனை அயர்ந்து நித்திரை செய்வதா லெழுப்பவுந் தகாது. தடாக்கருமமாயிருந்தா லெழுப்பலாமென்று தன்னறையிற் பிரவேசித்தாள்.

பின்பு மன்னியன் இவள் மகா பதிவிரதையெனத் தெரிந்துகொண்டு பஞ்சணையிற் றுயிலும் வேவுகாரனைத் தட்டி யெழுப்பினன், உடனே பணியாளனெழுந்து அமைச்சனை நோக்கி கிடுகிடென்று நடு நடுங்கினன் அமாத்தியன உன் பக்கத்தில் யார் சயனித்திருந்தார்களுண்மைசொல்லலென் றச்சங் காட்டினன். தொழும்பன் நானொருவனே துயின்றேனன்றி மற்றொருவரு மிதிற் படுக்கவில்லையே யென்றான். வறுதியன் நீயே யிறைவனணையிற் படுத்தாயென்றான். ஏவலாளன் எனக்கு நெடுநாளாயிருந்த விச்சையாற் படுத்தே னென்றான். தேர்ச்சித் துணைவன் அவ்வனை காவலுக்குளனுப்பி அரையனை நோக்கி, உமக்குற்ற சங்கை நீங்கிற்றோவென்று பணிய இன்னஞ் சோதிக்க நினைத்த தோன்ற லென் னையமின்னம நீங்கவில்லையென்று இராணியை விளித்து பரிசாரகனோடு நீ துயின்ற காரணத்தால் கொதிக்கும் எண்ணெய்க் கொப்பறையில் நீ குளித்து வந்தா லென்னுடன் கூடி சுகிக்கலாம். இன்றேல் உன்தந்தைவீட்டைச் சேரலாமென, அதற்கவ் வுத்தமி அன்னிய புருஷனாற் தீண்டப்பட்ட இத்தேகமிருந்தாற் பழுதாதலால் அனலில் மூழ்குவதே உத்தமமென்று அக்கணமே எண்ணையைக் கொதிக்கவைத் ததிற்குதிக்க எத்தனித்தாள். கோமான் தன் தேவியின் திடத்துக் கிரக்கமுற்று, ஓ பெண்ணே ! உனக்காக இச்சீட்டு பகவானருளா லென்முன் வீழ்ந்தபடியால் உன்பேரில் குற்றமிராது. நீ யிதிற் குதிக்கவேண்டாமென்று மறுத்தான். அப்பதிவிரதை அன்னிய புருஷனாற் றொடப்பட்ட அசுத்தமான இத்தேகத்தை பரிசுத்தமான நீர் தொடாம விருமென்று வணங்கி அதிற் பாய்வதற் சாயத்தமானள்.

ஏந்தல் தன் தேவியைப் பாங்கிகளாற் றடுத்து உனக்காகவே இச்சீட்டு என்முன் தெய்வ கடாட்சத்தால் வீழ்ந்தபடியால் இதை தீயாற் கொதிக்கும் எண்ணையிற் போட்டு பரீட்சிக்கிறே னென்றதைத் தயிலத்திற் போடப்போகையில், மந்திரி ஓ பூபதியே ! இச்சீட்டு ஓர்சாதுவின் நந்தன னுமக்குக் கொடுத்த தாகுமே அதை யிதிற் போட் டெரிந்துபோமாயி னுமக்கதிக சங்கைக் கிடங் கொடுக்கும். அப்படியல்ல. சாந்தம் சாகரத்தினும் பெரிதென்னும் வாக்கியமும் இப்பத்தினி கற்பழியா உத்தமியும் சத்தியமானல் போட்டபடியேயிருக்கக்கடவதென்று போடுவதே வுத்தம மென் றுரைக்க, அரையன் இதுவே சரியென்று தனது இஷ்ட தெய்வத்தைச்சிந்தித்து வந்தித்து அற்றயிலத்தி லெறிந்தான். அது போட்டபடியே கொதிக்குங் கொப்பறையெண்ணையில் மிதந்துக்கொண்டிருந்தது அவ்வாச்சர்யத்தைச் சகலரும் பார்த்துக் கொண்டிருக்குஞ் சமயத்தில் அரசன்றேவிசீட்டப்படி யிருப்பதால் நான் பரிசுத்தமானேனோ இல்லையென

றக்கொப்பறையிற் பாய்ந்தாள் உடனே அக்கனற்றபிலப் பனி நீர்போற் குளிர்ச்சியடைந்து எரியும் அனலும் அவிந்து போயிற்று ஆகாயவாசிகள் பூமாரி சலசல வென்று பொழிந்தார் தேவதுந்துபி தாம் தாம் என்றுமுழங்கிற்று. பின்பவ்விறைவன் தன்னுபகிலைபக் சுட்டி யணைத்து உன்னைப்போன்ற உத்தமிகளிவ்வுலகி லிருப்பதனாலேயே சந்திர சூரியர் பிசகின்றி உதிக்கிறார்கள்பருவகாலந்தப்பாமல் மழையும் பொழிகின்றது பூமியுமந்தரத்தில் நிற்கின்றதெனக் துதித்து மதிமந்திரியைநோக்கி யூகத்திலொப்பிலா வென்னப்பனே நீ என் சந்தேகம் நீங்கும்படியான யுக்தி செய்யாதிருந்தால் இப்பத்தினியை என் வாளுக் கப்போதே இரை கொடுத்திருப்பேனே யெனத்துதித்து சாந்தம் சர்காத்திலும் பெரிதென்றெழுதிக்கொடுத்த சாதுவின் குமாரனுக்குப் பாதிராச்சியமளித்து மிகவும் களித்திருந்தார்களாதலால் ஓ துளசிதாசனே! பிரதானிகளதியுக்தி புத்திகளிற் சிறந்தவராக விருப்பதன்றிச் சாந்தமென்னும் ஆபரணத்தையேபூஷணமாக வணிந்திருக்கவேண்டுமென் றிவ்வித பல நீதி கதைகளை ஓதி சாதுக்களுடன் கூடித் தீர்த்தயாத்திரை செய்யப்போனார். பின்பு துளசிதாசன் அக்பர் பாதுஷாவினிடத்தில் அத்தியந்த பக்தியுடனிருந்துகொண்டு தன் பாராக்கிரமத்தால் முக்கிய பிரதானியாகிய தன்னையே அரசனுஞ்சகலரும்நினைக்கும்படியான நீதிச்செங்கோல் செலுத்தி அன்னசத்திரங்கள்சாதுக்கள் வாசஸ்தானமான மடங்கள் விசாலமானகுளங்கள் நீண்ட கோபுரங்கள் முதலானவைகளிபற்றித் தன் தந்தையினும் சமர்த்தனெனப் பேரெடுத்து சாதுக்கள் சங்கத்தையடுத்து நாள்கழிக்கத் தொடங்கினர். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜி சித்தர் பின்னுஞ்சொல்லுகிறார்.

துளசிதாசர் உற்பத்தி அத்தியாயம்

முற்றிற்று.

---

இரண்டாவது

## பகவான் துளசிதாசனைக் காமத்தில் அழுத்திய அத்தியாயம்.

இப்படி நீதியுடன் முக்கிய பிரதானியாயிருக்குங் காலத்தில் பகவானுடைய மாயையால் துளசிதாசன் சத்சங்கத்தைவிடுத்து துர்ச்சங்கத்தையடுத்து துஷ்டர்கள்கூட்டுறவாலும் யவ்வன பருவத்தாலும் தாசிகள்வீடே கெதியாய் வீட்டுக்கும் வாராமல் அரசாங்கத்துக்கும் போகாமலிருந்தார். அதையறிந்த ஆத்மாராம் பத்தினி மிகவும் நொந்து துளசிதாசனைத்தேடிக்கொண்டே போய்த் தாசியின் வீட்டிலிருக்கக் கண்டு மாச்சரியங்கொண்டு அடா மகனே! அழகான முகனே! உன் தந்தையானவர் மகாயோக்கியரென்று பேரெடுத்திருக்க நீ இப்பேர்க்கொத்த அயோக்கியமான பேரெடுக்கலாமா? வேசையர் வீட்டுக்குப்போகலாமா? காசாசையாலதிக பாசமாயிருக்கும் வேசியர் வெகு மோசக்காரிகளாயிற்றே! ஐயோ நமது மானம்போயிற்றே! பலருக்குப்பிணைப்பட்டிருக்கும் பரத்தையர்மேற்சிரத்தைகொள்ளலாமா? மாதாவாக்கியத்தைத் தள்ளலாமா? பணமில்லாவிட்டாலேன் பிணமேயென்றிக் கணிகையர் கேட்பார்களே வீட்டிலுஞ் சேர்ப்பார்களா? முற்பிறப்பில் பல புருஷர்கள்மே லிச்சைகொண்டு பதி முதலானோரச்சத்தால் துச்சகுணத்தோடும் பிறரறியாமற் புணர்ந்து தன்னிச்சை நிறைவேறாமல் ஏக்கங் கொண்டிருந்திறப்பவளன்றோ மறுபிறப்பில் பலர் வாங்கும் விலைமகளாய்ப்பிறந்து நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு யென்னும் பெண்மைக்குறிய குணங்களின்றிப் பயனிலாபபெண்ணெனப்பேரெடுத்துத் துஷ்டகுணங்களிற் சிறந்த ஆடவரால் வேசி தாசி யென்றழைக்கப்பட்டு மான வீனமின்றிப்பொருளை விழித்திருக்கும்போதே கொள்ளைக்கொள்ளும் பொது மடந்தையரைத் தொடலாமா? வைராக்கியத்தை விடலாமா? யாத்திரைசெய்து உன் தந்தை வந்து இச்சங்கதியைக்கேட்டால் உன் பற்களைத்தட்டிவிடுவாரே! இரண்டு துண்டாக வெட்டிவிடுவாரே! பலரும் அறியாமுன்னமே வீட்டுக்கு வந்து விடென்று வெகு பணிவாயுரைக்கும்போது துளசிதாசனென்றுஞ் சொல்லாமலிருக்க அத்தாய் மிக முனிவுகொண்டு அடா துஷ்டா! தாசிகளைப்புணரும் பிரஷ்டா! வேசிகள் வலையிற்சிக்கினபேயா! நான் வந்தழைத்தும் வீட்டிற்கு வராமலிருக்கிறாயா வென்றதட்டியும் வராமையா லினிநம்மாலிவனைத்தேற்றக் கூடாதென்று வாட்டத்துடன் வீட்டையடைந்து பெற்ற தாயாதலால் மறுநாளும்வந்து துளசிதாசனைப்பார்த்து நொந்து, அடா என்கண்மணியே! சிகாமணியே! அனலானது புனலாலவிந்துபோம் இக்காமக்கனல் வரைமீதேறி யொளிப்பினுஞ் சுடுமே விசாலமான தடாகத்திற்குளித்திருப்பினுஞ்சுடுமே சப்தமெழுந்ததே குப்பமாய் வந்து கொல்லுங் குண்டுக்கிணையான கோதையர் மாயையிற்பட்டுப்பேதையாய்ப் போனாயே யென்கிற பல வார்த்தைகளுரைத்தும் வாராமைந்தனை நிந்தைசெய்து சொந்தவீடு சேர்ந்து சிந்தாகுலத்தால் மிகவும் நைந்திருந்தாள்.

துளசிதாசனே பகவானுடைய லீலாவினோதத்தால் காமதுரந்தரனாய் தாசிகள் மயக்கத்திற் சிக்கி மிகவுஞ் சொக்கித் தாயை மறந்திருந்தார். இவரிப்படி இருக்கிற நாளில் யாத்திரைக்குப்போன ஆத்மாராம் சொந்த நாட்டிற் பிரவேசித்து வீட்டையடைந்து மைந்தனிருக்கும் விர்த்தாந்தமைக் கேட்டிடைந்து துளசி தாசனிருக்குந் தாசியின் வீட்டுக்குப்போய் மருடானிருக்கும் கோலத்தைப் பார்த்து காலமெல்லாம் வேர்த்து அடே துன்மார்க்கா அறிவில்லா மூர்க்காவென்று மிகவுங் கோபித்துத் தன்யனை யழைத்துக்கொண்டு நாட்டிற்போக நாணமடைந்து பாதுஷாவின் சோலையிற் பிரவேசித்து அனேக ஏவலாளர்களால் ஸ்திரீகளை உள்ளே விடாமல் காவல் வைத்துத் துளசிதாசனைப்போன்ற சில எவ்வனபிராமண வாலிபர்களை அழைப்பித்து வேதாத்தியயனம் பண்ணிக்கொண்டு சதாகாலமும் ஜபதபங்களைச் செய்துக்கொண்டு வரும்படியாய்த் திட்டஞ்செய்து தானும் பிரம்மநிஷ்டையைச்சாதித்துக்கொண்டிருந்தார் இப்படி இருக்கிறகாலத்தில் பகவான் துளசிதாசனைச் சோதிக்கவேண்டி ஓர் தேவகன்னிகையை விளித்து ஓ மாதரசே! நீ இக்கணம் டில்லி நகருக்குப்போய் பெருஞ்சோலையிற் தபஞ்செய்துக் கொண்டிருக்குந் துளசிதாசனைப் பங்கப்படுத்தி நீதிவாக்கியங்களுரைத்து வாருமென்றனுப்ப அக்கன்னிகை மகா பாக்கியமென்று அக்கோடறத்திற்போய் அனேகருடன் தவஞ்செய்துக்கொண்டிருக்குந் துளசிதாசனை எவ்விதமாய்க் காணலாமென்று யார் கண்ணுக்கும் புலப்படாமல் அப்பொழிலிலுலாவிக்கொண்டிருக்க, அத்தருணத்தில் துளசிதாசனுந் வாலிபத்தோழர்களும் ஸ்நானஞ்செய்ய வேண்டி அவ்வுத்தியானத்திலுள்ள வோர் தடாகத்திற் பிரவேசிக்க அத்தருவாயில் சுயமாது அச்சிரசி னருகிலிருக்கும் ஓர் விருட்சத்தின் கீழ்ப்போய் மதிமயங்கும்படியாய் நிற்க இப்படி சரச சல்லாப உல்லாச ஒயிலுடனிற்கும் இளம்பிடியைக் கண்ணுற்ற துளசிதாசன் மதிமயங்கி மிகவும் தயங்கி ஆ ஆ என்ன ஆச்சரியம், ஓ ஓ என்னருமைத் தோழர்களே இதோ மனோரஞ்சிதமான வஞ்சியென்னும் ஓர் புட்பக்கொடி நிற்கின்றதைப்பார்த்தீர்களா? ஆ ஆ முப்பத்திரண்டிலட்சணங்களும் வாய்ந்த சிற்பசாஸ்திரிகளா லெழுதுவதற்கரிதான பதுமையைப் பார்த்தீர்களா ஆனந்தம் ஆனந்தமென் றுரைத்துக்கொண்டே அச்காந்தையினருகிற் சென்றார் அதற்கந்த காரிகைகினந்தவள்போல் ஆத்மாராமிருக்கும் ஸ்தானத்தை நீங்கித் தருக்கள் நெருக்கமான விடத்திற்போய்நின்றாள் துளசிதாசன் அவள்பின் சாயைப்போற்றொடர்ந்து அச்சுந்தரியின் சமீபத்தில் நின்று தன்னுடன் வந்ததோழர்களை நோக்கி ஓ என்னன்பர்களே! இதோ சகல விசித்திர வர்ணங்களாற் சூழப்பட்டு அழகோங்கி விளங்கிய ஓர் தோகை நிற்கிறது பார்த்தீர்களா ஆ ஆ புலவராற் புகழ்வதற்கரிதான ஓர் மங்கை இங்கே நிற்கின்றாள் பார்த்தீர்களா இவ்வுலகிலுள்ள அழகெல்லாம் திரண்டொரு வுருவாகி மின்னற்கொடிபோன்ற ஓர் ஒப்பாரி நிற்கின்றாள் பார்த்தீர்களா தேவர் மூவர் மற்றியாவருடைய மகிமையும் மயக்கும்படியான ஓர் மோகனாங்கி வந்திருக்கிறாள் பார்த்தீர்களா? தன்னை மறந்து திக்கு தேசாதிகளிறந்து அந்தர் முகத்திற் சென்று பிரமானந்தத்தை யனுபவிக்கும் பிரமக்ஞானிகளு மிச்சிக்கும் ஓர் சோபிதமான சுந்தரம் வந்திருக்கின்றது பார்த்தீர்களா? சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கும் அம்புயக்கண்ணாளான ரம்பை இதோ வந்து நிற்கின்றாள் பார்த்தீர்களா பார்த்தீர்களா புற்புதம்போலற்புதமா யிருக்கும் திரண்டகொங்கைகளைச் சுமக்கக் கூடாமல் துவண்டு நிற்கும் அங்கனைமேலன்பைச் சேர்த்தீர்களா வென்று பற்பல வார்த்தை சொல்லி புளகாங்கமாய் மயிர்க்குச்செறிந்து ஸ்மரணை தப்பி மூர்ச்சையடைந்தார் ஓ சித்தர்களே இப்படி யம்மாதைப் புகழுவதும், அத்தெரிவை நீதியுரைக்கும்.

சந்த விருத்தம்.

மண்ணின்மீதரை நாழிமூர்ச்சை வசத்திருகி விழித்தெழில்,
விண்ணுறும்மதி யோகருங்குழன் மேகமோநுதல் பிறையதோ,
கண்ணருங்கதிர் வாளதோமொழி கன்னலோவாய் பவளமோ,
கண்ணிணுலிவ டன்னைக்காணுதன் முற்பவத்தவ மென்றனன். 1

தேவலோக வரம்பையோதிகழ் மின்னலோ விந்திராணியோ, ஆவியுண்வலி காலனோவென தாவியுண்டிட வந்தவிப்பாவையாரென வறிவமென்றவள் பக்கமுற்றன மேயென, தாவியேயிவன் வந்தவாறடி யேற்கியம்புக வென்றனன். 2

என்றபோதவ ளேசிதாசனை யேத்தியான்சுர கன்னிகை, உன்றன்றந்தையி னடிவணங்கிட வுன்னிவ்விடம் வந்தனன், என்றபோதெழி லன்னமேயெனி யேனையாட்கொளுஞ் சொர்ணமே, என்றன்கண்மணி யிவ்வேளை யெனக்கிணங்குக வென்றுபின். 3

வேறு.

என்னமாதவஞ்செய்தேனோ விங்குநீவருவதற்கந்தோ
தன்னைநேருற்றபெண்ணே தயவுகூர்ந்தென்னையாள்வாய்
என்னவேதேவ ரம்பை யிந்தவன்யாயவார்த்தை
என்னிடஞ்சொல்லலாமோ வென்றிறைஞ்சியம்பலுற்றாள்.

யானுன்றன்றந்தைதன்னை யிறைஞ்சிழிவகற்றவெண்ணி
ஞானுலகநின்றிங்குற்றேன் மாதவனருள்குமாரா
ஆனதாலடியாண்மீதி லருள்செய்வதன்றிநல்ல
மோனவார்த்தைகளாலென்றன் மூடத்தைநீக்குமென்றாள். 5

நீக்குமென்றோதும்பெண்ணே நினக்குறுமஞ்ஞானத்தைப்
போக்குவனன்றிவிஞ்சை போதிப்பனெளியேன்றன்னை
நீக்கிடாதிணங்கியின்ப நிறைவித்தாற்கண்ணேபெண்ணே
மோக்கநீசேர்வையென்று மொழிந்திடமறுத்துசொல்வாள். 6

வேறு.

அயலான்றன்னைப்புணர்ந்த ததனாலடைந்தாள்பழியைத் தாராவும், அயலான்தன்னைப்பார்த் ததிசயித்தே யதமாய்ப் போனாள் ரேணுகையும், அயலான் தன்னையாசித் ததனாலடைந்தாள் பழிசுக்கிரன் மகளும், அயலான்றன்னைக் கண்ணாற் பார்க்காதடைந்தாள் பெறுமை சீதையுமே. 7

அயலான்தன்னையாசித்த வரக்கியான சூர்ப்பனகை, அயலான் தன்னாற் செவிமூக்கு மறுபட்டையோ மிகநொந்தாள், மயலீவின்செலந்தரனாய் வந்துமயக்கமயங்காமல், அயலானென்றே யறிந்துகொண்டா ளறிவிலுயர்ந்த பிருந்தையுமே. 8

தேவர்முனிவர்புகழ்ந்தவளாய் திருப்பாற்கடல்பிறந்தவளாய்
தேவபஞ்சகன்னியரிற் சீரும்பேருமுள்ளவளாய்த்
தேவராஜன்கௌதமருந் திகழ்மாதழகாயிருவருளம்
பாவையெனக்கென்றெனக்கென்றேபயிலவைத்தவாயவளாய்

இருவர்தம்மிற் கௌதமரு மீரைஞ்சூராண்டொருமனதாய், மருவித்தவத்தைச் செய்தபின்னர்மகிழ்ந்துமணஞ்செய்திட்டவளாய்த், தாணிதனில்வாழ் தையலரிற் றூனேயழகிற் சிறந்தவளாய்த், தெரிவையென்னும் மகலிகையாள் சேதிசொலக்கேளெனச் சொல்வாள். 10

பொல்லாவிந்திரன்றனைமருவிப் போகித்ததனாற்கௌதமராற், கல்லாயமைந்தாளிப்போதுங் கலியாணஞ்செய்வோர்களெலாம், பொல்லாவிபசாரஞ்செய்தே போனாள்சிலையாயாதலினால், கல்லாயுதைப்பா யகலிகையாங் கல்லையென்று கவில்கின்றார். 11

நீசன்புதல்வியானாலு நிமலக்கற்பினதனாலே (வாய்த்
தேசம்போற்றவருந்ததிதான் றிகழ்கின்றாள் வான்றனிலும்
தேசுளவவ்வடமீனைச் சிறப்புற்றின் றுமணவரையிற்
பாசமுடையமணப்பெண்ணே பாரென்றுவைகாட்டுகிறார்.

வேறு.

புருடனேதெய்வமென்று புகலுநான்மறைபுராணம்
புருடனையன்றிவேறோர் புருடனைச்சேர்ந்தகன்னி
இருணரகடைவதன்றி யெழிலருட்பெருவதுண்டோ
இருளிலாதவன்குமாரா வியம்பெனவியம்பலுற்றான். 13

இணங்கியென்னுரைதீர்த்தா லெழின்மயிலேயிப்பாவம்
கணந்தனிற்றீர்க்குமார்க்கங் கழறுவேனென்றுசொல்ல
அணைந்திடவந்தபோழ்தி லரம்பையுமுனிந்துநீயக்
குணந்தவிர்க்காதோய்நாரா நில்லெனக்கூறலுற்றாள். 14

புத்தியில்லாதவட்குப் புத்தியையுரைத்துமேலாம்
முத்தியையளிப்பாயென்று முன்னின்றேன்மோகமாகிப்
பித்தரைப்போலென்மீது வீழ்ந்துநீபிதற்றலானற்
புத்திகளுனக்கின்றேங்கப் புகலுவேன்கேளுமென்றாள். 15

அயலான் மனைவிதனையாசித்தவமாய்ப்போனான் றசக்கிரீவன், அயலான்மனைவி தனைப்பார்த்தே யழிந்ததொருமத்தகமயனுக், கயலான்மனைவி தனையாளத் தாவிபிழந்தான் கீசகனும், அயலான்மனைவி தனைப்பார்த்தே யளகேசன்றன் கண்ணிழந்தான். 16

சுரகன்னிகையாற்சுந்தோப சுந்தரனுயிர்த்துறந்தார்கள்
சுரவித்ராணிதனைப்புணரத் துணிந்தேநகுஷன் பணியானான்
குருவின்மனைவிதனைக்கூடிக் குஷ்டமானான் சந்திரனும்
அரியின்மனைவிகளையாசித் தழிந்தானாகாசுரனன்றே. 17

பரதாரத்தையிச்சித்துப் பாரிலழிந்தான்கிம்மீரனன்
பரதாரத்தையிச்சித்துப் படியின்முடிந்தான்வலிவாலி
பரதாரத்தையிச்சித்துப் பஸ்பமானானுடல்வேடன்
பரதாரத்தையிச்சித்துப் பதியிலிறந்தோர்க்கிலக்குண்டே 18

வேறு.

தானமும்யாகமும்பலசெய்துந் தவமிகச்செய்தடைகின்ற வானவர்வாழுஞ் சொர்க்கலோகத்து மன்னவனுமிந்திரனும், ஞானவானனகௌதமரிஷியி னன்மனையாடனைப் புணர்ந்தோர், யோனியாசையினாலுட்லோகாறும்யோனியை யடைந்தனனென்றாள். 19

வேறு.

இவ்விதவனேகநீதி யிசைத்திடத்துளசிதாசன்
கொவ்வையங்கனிவாயாளுன் கோதிலாமுகத்தைநோக்கித்
திவ்வியநீதிகற்றுத் தேசினைப்பெற்றபெண்ணே
எவ்விதமேனுமென்னை யிணங்கெனவருகிற்சென்றான். 20

அருகுறத்தேவரம்பை யறிவிலார்க்கறிவுணர்ந்த
அரனரியயனுலாகா தாதலாலுனக்குமுன்னே
அறையிமையிருக்கலாகா தென்றருதேவலோகம்
விரைவுடன்போனாள்பின்னர் நடந்ததைவிளம்புவோமே 21

கன்னிகைசினந்துபோகக் கனமுளதுளசிதாசன்
தன்னையுமறந்தான்பெற்ற தந்தையைமறந்தான்சிந்தை
பின்னமதாகிநொந்தான் பித்தரைப்போலலைந்தான்
என்னமாயிருப்பேனென்பா னேங்கியேபதைபதைப்பான்.

மலரணிகுழலாளென்முன் வருவளோவென்பானெந்தத்
தலத்திலிருக்கின்றாளோ தமியனேனறியேனென்பான்
கலைமதிமுகத்தாடன்னைக் காண்பனோவென்பான்கும்ப
முலையுளமாதேமாதே யென்றுமூர்ச்சித்துவீழ்வான். 23

இப்படிதுளசிதாச னேங்கியேயிருக்கக்கூட
ஒப்பமாய்வந்ததோழ ரோலமிட்டழுதுநொந்து
செப்பருங்கலைகள்கற்ற திவ்வியகுலனேயெங்கள்
சொற்படிகேட்கவேண்டு மென்றொருதோழன்சொல்வான்.

காமத்தைநீக்கிநித்ய கருமத்தைமுடிக்கவேண்டித்
தாமரைகுளத்தில்ஸ்நானஞ் செய்யெனத்துளசிதாசன்

காமமென்னுந்தடாகமதிற் களித்திருத்தலாலே
தாமரைதடாகந்தன்னைச் சார்ந்திலேனென் றுசொன்னன். 25

மற்றொருதோழன்காம மயக்கத்தை நீக்கமேலா
நற்றவஞ்செய்வாயென்று நவின்றிடத்துளசிதாசன்
மற்றொருநினைவிலாதவ் வனிதையைக்கூடவேண்டி
நற்றவஞ்செய்வேனென்று நவின்றனனசையிலானே. 26

அந்தமாதியுமிலாத வாண்டவன்பாதத்திற்கு
வந்தனஞ்செய்வாயென்ன மகிழ்ந்தந்தத் துளசிதாசன்
சுந்தரவதனமுள்ள தோகையிவ்விடம்வந்தெய்த
வந்தனஞ்செய்வேனென்றான் மற்றொருதோழன்சொல்வான்.

மேலவனுயிருக்கும் வெட்கமில்லாமலித்தக்
கோலத்தையடையலாமோ கூறெனத் துளசிதாசன்
மேலவனுனதாலே வெட்கப்பூட்டினையுடைத்திக்
கோலத்தையடைந்தேனென்று கூறிடமற்றோர்தோழன். 28

பரமனார்தமக்குநீயும் பயப்படாமையினாற்றீய
நரகத்தையடைவாயென்று நவின்றிடத்துளசிதாசன்
நாகன்னிகையினாலென்னைச் சூழ்ந்தவக்கினியினாலே
நரகத்தையெரிப்பேனென்ன நவிலுவன்மற்றோர்தோழன். 29

மோக்கமேயடையவேண்டின் மோகத்தையிப்போதே நீ
நீக்குவாயென்றுசொல்ல நேயனார்துளசிதாசன்
மோக்கமுமடைவேனன்றி முன்வந்தகன்னிவந்தால்
பாக்கியனாவேனென்னப் பகருவன்மற்றோர்தோழன். 30

திவ்வியம்போன்றவுன்றன் சிந்தையெங்கொளித்ததையோ
திவ்வியவருட்குமாரா செப்பெனத்துளசிதாசன்
திவ்வியசிந்தைதன்னை திருடிக்கொண்டகன்றாணல்ல
திவ்வியகன்னியென்னச் செப்புவன்மற்றோர்தோழன். 31

சுந்தமாதிகளைவென்று கர்த்தனைத்துதிக்குமுன்றன்
தந்தைபால்வாவாவென்னத் தாழ்ந்தந்தத்துளசிதாசன்
கந்தம்வீசியமெய்யாளைக் கண்டவிவ்விடத்தைவிட்டுத்
தந்தைபாலணுகேனென்று சாற்றினன்றோழர்க்கெல்லாம். 32

வசனம்.

ஓ சித்தர்களே! துளசிதாசனுக் கருந்துணையான தோழர் இன்னம் பலபல நீதிவாக்கியங்களை யுரைத்துப் பயன்படாமல் ஓ துளசிதாசனே! இச்சங்கதியையுன் தந்தையினிடம் போயுரைத் திக்கண மழைத்துக்கொண்டு வருகிறோமென் றொருநொடியிற்போய் பிரம நிஷ்டையாற் றன்னை மறந்திருக்கும் ஆத்மாராமைப் பணிந்து ஓ ஸ்வாமி! தங்களுடைய குமாரனாகிய துளசிதாசன் ஆகாயத்திலிருந்து வந்த ஓர் கன்னிகையின்மேல் மோகித்து அவளைப் பலவந்தம் செய்தான். அம்மாது பல நீதி வாக்கியங்களைப்போதித்து ககனமார்க்கமாய்ப்போனாள் பின்பு துளசிதாசன் அந்தம்மையின் மோகத்தாற்றன்னைமறந்து வாயில் வந்தபடி பிதற்றிக்கொண்டிருக்கின்றான் ஆதலாற் சீக்கிரம் தேவரீர் வந்து மயக்கத்தை நீத்து ஆட்கொள்ளுமையா வென்றதைக் கேட்ட ஆத்மாராம் ஆச்சரியமுப மாச்சரியமுங்கொண்டு அதி துரிதமாயோடி காமாக்கினியாற்றகிக்கப்பட்டு ஸ்மரணைகெட்டு பெண்ணே கண்ணே யெனும் வார்த்தைகளாடிக்கொண்டிருக்கும் அழகான புதல்வன் வனத்தை ஆசையோடு பார்த்தார் கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னும் பாபாஜி சித்தர் சொல்லுவார்

துளசிதாசனைக் காமத்திலழுத்திய அத்தியாயம்
முற்றிற்று.

---

மூன்றாவது

## இராகம் நீக்கு அத்தியாயம்.

ஓ சித்தர்களே! பகவான் முன்னம் தாசிகள் மயக்கத்தில் விழச்செய்து வேசிகளைக்கனவிலும் நினைக்காமல் மறுத்து இனி பரஸ்திரீகமனந் தீதென் றறிந்து நீங்க மாய வலைபாற் பிணிக்க அதனாற் சொக்கிருக்கும் துளசிதாசன் முகத்தை ஆத்மாராம் அன்புடன் பார்த்துச்சொல்லும்.

கவி

பார்த்தெனதருள்குமாரா பாதகமடைந்ததுயோர்
எத்திடுங்கண்ணேபெண்ணே யிப்படியலையலாமோ
ஊத்தையுமுதிரஞ்சீயு மொழுகிடும்புண்ணுந்தோலை
நாற்றமென் றகற்றிடாதே நண்ணிடலாமோவென்றான். 1

குடல்வழும்பென்புந்தோலுங் குருதியுரோமம்பிறைச்சி
கொடுமலசலமுமீனக் கோழையுங்கொழுப்புமுற்றுச்
சுடுமணமணத்திற்கெட்ட துர்க்கந்தம்வீசாநின்ற
மடந்தைமீதாசையாதல் வளமதோமகனேயென்றான். 2

அப்பனேமகனேயென்ற னரியமாதவத்தால்வந்த
ஒப்பிலாநிதியேயாய வுணர்வுளதுளசிதாசா
செப்பருங்கலைகள்கற்ற செல்வமேபெண்ணினால் நீ
இப்படியலையலாகா தினியிதையகற்றுவாயே. 3

முன்னொருகாலந்தன்னிற் பிருகுமாமுனிவனிஷ்டை
தன்னையுற்றிருக்குங்காலந் தனிலவன்மைந்தனானோன்
துன்னருங்கலைகள்கற்றோன் சுக்கிரனென்போன்றேவ
கன்னியைக்கண்டோமகக் கடலில்வீழ்ந்தவசமுற்றான். 4

அவசநீத்தெழுந்தத்தூய வரம்பையைக்காணுநொந்து
சவந்தனைப்பிதாப்பால்வைத்தோர் சடத்தினோடண்டஞ்சென்று
உவமையிற்றேவமாதை யொப்புடனணைந்தனேகப்
பவமெடுத்துழன்றானந்தப் பாவனைபோனீசெய்தாய். 5

மூவருமறையுணர்ந்த முனிவருஞ்சொர்க்கலோக
தேவருமஞ்சத்தக்க திவ்வியவிசுவாமித்ரன்
பாவையையோர்நாட்கூடிப் பண்ணியதவமிழந்து
மூவர்மாமுனிவர்தேவர் முன்செலநாணமுற்றான். 6

சுரர்குருபுதல்வனுன கஜமுனிசுக்கிரன்பால்
உறியநற்பணிகளாற்றி யுயிர்தருமாந்திரத்தைப்
பிரியமாய்ப்புகரளிக்கப் பெற்றுவானேகுமப்போ
தருள்புகர்புதல்விதன்பா லணுகுவதறிந்துநின்ருன். 7

நின்றிடமாதுசொல்வா ணின்னைநானணையவேண்டி
யுன்றன்பாலடைந்தேன்மாற்ற முறைந்திடாதிணங்கென்ருேத
என்னையேயீன்றதாயே யிம்மொழிக்கிணங்கேனென்று
சென்றபோதுயிரைநீயுந் திருமந்திரம்பலிக்காதென்ருள். 8

பக்குவக்கஜன்பயந்து பாவியென்றழுதுநொந்து
சுக்கிரன்பால்போய்சொல்லித் துன்பத்தைநீக்கிக்கொண்டு
சொர்க்கத்தையடைந்துநல்ல சுகந்தனையடைந்தாற்போல
பக்குவதுளசிதாசா பாவைமாமயனீக்கென்ருன். 9

சுகப்பிர்மரிஷிதவத்தைத் தொலைத்திடுவோமென்றெண்ணி
அகப்பிர்மையோடுதேவ ரரம்பையையனுப்பக்கன்னி
சுகப்பிர்மரிஷியைச்சூழ்ந்த தொண்டர்கடவமழித்து
சுகப்பிர்மரிஷிமுன்னின்ருள் தாயனுமவளைக்கண்டான். 10

கண்டுநீயாரென்ருேதக் கதிதரும்ரம்பையென்ன
அண்டரைநீக்கியென்பா லணுகினதேதோவென்ருன்
ஒண்டியாயிருந்துநீசெய் யுயர்தபோபலத்தாலென்றுங்
கண்டமில்பரப்பிரம்மத்தின் காட்சியையுணராயென்ருள். 11

ஒண்டியாயிருப்பதன்றி யுதவியும்வேண்டுமோசொல்
கண்டமில்பரப்பிரம்மத்தின் காட்சியையுணர்தற்கென்ருல்
அண்டர்கள்ரிஷிகணில கண்டனேடயன்மால்தாய
விண்டுவுஞ்சமுசாரத்தின் மேன்மையாற்காட்சிபெற்ருர். 12

ஆதலாலெனைநீகூடி யணைந்தின்பமடைந்திவ்வில்ல
நீதியாற்பிரமானந்த நேயனைக்காண்குவாயென்
ருேதிடமுனிமுனிந்துன் னுதிரமாந்துர்க்கந்தத்தை
மாதவர்நோக்கார்யாரை மயக்கிடவந்தாயென்ருன். 13

வந்தனன்மயக்கமீய மயக்கத்தைநீத்தார்யாவர்
உந்தனைவலிந்தணைந்தே யும்பர்பாற்செல்வேனென்று
பந்தமாமொழிகண்மெத்தப் பகர்ந்தொருபயன்படாமல்
இந்தநற்றூயதேக மின்பமீசுகந்தமென்ருள். 14

உகிரினல்வயிற்றைக்கீறி யுத்தமமுனிக்குக்காட்டிச்
சுகந்தமீசிடுமென்றேகந் துர்க்கந்தமென்றுசொன்னே
சுகந்தத்தைக்கண்டதானீ சுகந்தரயணைவாயென்ன
றுகந்தருகிளிற்சொல்போதி லுத்தமமுனிவனுனேன். 15

தோகையர்களிலேநற் றூயவளாயினும்மென்
ஆகந்கிடினுமுன்னை யணைந்திடமாட்டேனென்று
மோகமில்லாமலந்த மோகினிதன்னைநீத்தான்
மோகினிமோசம்போனே வென்றவன்மொழியலுற்ருன். 16

அரிவையர்மோகமாயி னணைந்திடவேண்டுமென்ன
உரியமாமறைகள்சொல்ல வுத்தமமுனியேயென்னைப்
பிரியமாயணைந்திடாமற் பின்னிடற்றருமமாமோ
பிரியமாயணைவாயென்று பித்தரைப்போன்மேல்வீழ்ந்தாள். 17

பித்தரைபோலவீழ்ந்த பேதையைமுனிவன்கோபித்
தித்தலத்துற்றுபென்ற விடுவனுன்சாபமென்ருன்
மற்றெருமொழிபேசாமன் மங்கைவானுலகடைந்தாள்
உத்தமசுகர்சமாதி யுற்றருள்வடிவாய்நின்ருர். 18

துரியமாநிலையுணர்ந்த தூயமாமுனிவர்போற்ற
உரியநற்சொர்க்கலோகத் தும்பர்களெல்லாம்வாழ்த்த
புரமெரித்தோன்மால்வேதன் போற்றிநின்றேவல்செய்து
கரங்குவித்திருந்தாரென்ருர் சுகர்கனமென்னசொல்வேன். 19

சுகர்போன்றபிள்ளையன்றே துரியமாம்பொருட்குச்சொந்தம்
இகபரபோகநீத்த வினையிலாச்சுகர்போனீயும்
மிகுமயலீந்தகன்னி மேலிச்சைவிடுத்துஞானச்
சுதந்தனையடைவாயென்று தூயமாதவனுரைத்தே. 20

வருகவென்றழைக்கமைந்தன் மறுமொழிசொல்வாயின்றி
சுரகன்னிநினைவினேடுந் தூயமாதவன்பின்செல்ல
சுரகன்னிமேல்விருப்பந் தொலைந்ததேயில்லையென்று
அருள்வடிவானவாத்ம ராமருளாற்கண்டானே. 21

வேறு.

கண்டுசோகமடைந்துதொண்டர் கருத்திவற்கெந்நாளிலே
அண்டர்கோனருளால்வருமென வாத்மராமன்ருனினைந்
தண்டரும்பலமுனிவருமய னுதியோர்களுமேத்திடுங்
கண்டமின்றியகர்த்தனேகரு ணலயந்தனுசுத்தனே. 22

தற்பதந்தனையுறுபுதல்வனைப் பெறுவர்மாதவரென்றுமா
நற்பதந்தருமாரணஞ்சொலு நாயினேற்கென்பாவமோ
வற்பவறிவர்தனிலுமீன மடைந்தபுத்ரனமைந்தனன்
ஒப்பிலாப்பரமேஸனேயுய ரடியருளமதில்வாசனே. 23

எங்குமோரியல்பாய்நிறைந்தரு ளிறைவனேயெளியேற்கரு
ட்ங்கவருளியமெய்யனேயுப சாந்தனேவேதாந்தனே
எங்குமாரற்கிந்தவிதிவர லேதுவோயிதுநீதியோ
சங்கரன்மாவேதனும்பணி சாமியேயெனநைந்தனன். 24

இவ்விதமாக ஆத்மாராம் நொந்து இனி நமது மைந்தனுக்குற்ற மோகத்தை எவ்வித உபாயத்தால் நீக்கலாமெனப் பலவாறு யோசித்து ஆ ஆ இப்போதந்த தேவ கன்னிகை வருவாளா, இனி இவனுக்கிருக்கும் காமமயக்கத்தை ஓர் க்ஷணத்தில் மாற்றுவேனென் றன்னுப்போது பக்தர்களைக் காக்கவே கங்கணம் பூண்டிருக்கும் பகவான் துளசிதாசனை மோகத்திலமிழ்த்திவந்த கோதையை விளித்து நீ இக்கணம்போய் துளசிதாசனின் மன்மதநோயினைறத் தகிக்கச்செய்து வருவாயென்றனுப்ப மகாபாக்கியமென்றம்மாது சோதி மின்னலைப்போல் துளசிதாச னெதிர் வந்து நிற்க, ஆத்மாராம் அக்காரிகையை நோக்கிப் பிரமித்து நீயாரென்று வினவ, அவ்வொய்யாரி வணங்கி, ஓ மகாத்மாவே! நான் தேவலோகத்துக் கன்னிகை நாடோறு மிச்சோலையிற் சஞ்சரிப்பவளாதலா லின்றும் வந்தேனென்றுசொல்ல, அப்போ தப்மங்கையைப்பார்த்த துளசிதாசன் அதிகமோகமாய் ஸ்மரணையின்றி மூர்ச்சையாய் நிலத்திற் சாய்ந்துவிட்டார். உடனே வாலிபப்பிராமணன் ஆத்மாராமை வணங்கி, ஓ ஸ்வாமி! இந்த கன்னி

கையே முன் வந்து துளசிதாசனை மயக்கிப் போனவ ளென்றறைய, ஆத்மாராம் அம்மாதரசை வினயத்துட னருகிலழைத் திருத்திக்கொண்டு தனக்குத் தெரிந்த தந் திரங்களினால் தந்திரத்தா லச்சுந்தரியி னுடையிரு க்கு முதிரத்தையெல்லாம் வாங்கி ஓர் பாத்திரத்தில் நிறைத்தவுடனே அத்தையலி னழகு குன்றிக் கன்னம் ஸ்தனம் யாவும் வற்றி வெளுத்துப் பிரேதத்துக்கிணை யாகிச் சிங்காரநடையும் மெலிவான இடையுந்தளர்ந்து அடிபெயர்த்து வைத்து நடப்பதற்கும் கைகால்களை மட க்குவதற்குங் கூடாமல் ஒருலர்ந்த விருட்சத்தைப்போ லசைவற நின்றுவிட்டாள். அப்போது ஆத்மாராம் துளசிதாசனுடைய மூர்ச்சையைத் தெளிவித்துக் கன்னி கையினருகில் நிறுத்திச் சொல்லுவர்,

க வி.

உதிரமுற்றிடு பாண்டமும்மகன் முன்னம்வைத்துயர் மைந் தனே, மதுரமாகியமாதைநீமிக மனமகிழ்ந் தணைகுவையென, அதிகவச்சமசங்கியம்முட னுழ்ந்தகண்ணுடன் வற்றிய, அதரகன னமுந் தனமும்பார்த்தவ ளாசைவிட்டவனுணமாய். 25

என்னசெய்தன மென்றயர்ந்திட வென்றன்மைந்தனேகன் னிகை, கன்னமுங்கன தனமும்பார்த்தலோ காமமாகினை யிப் பொழு, தென்னமாயிக்கன்னியாகின ளென்னிரத்துருவாகிய, கன்னியாகிய பிரேதமீதினில் காமமாதினையேனடா. 26

அசங்கியமுளரத்தமீதினி லாசையாகினையேனடா
அசங்கியமுளதசையின் மேன்மிகவாசையாகினையேனடா
அசங்கியச்சலதாரையில்விழ வாசையாகினையேனடா
அசங்கியமலநரகில்மூழ்கி வாசையாகினையேனடா. 27

வே று.

பெண்ணாசையுளோர்க் கறிவில்லை பெண்ணாற்றவமுஞ் சுக மில்லை, பெண்ணாசையுளோர்க் கறமில்லை பெண்ணாற்சற சங்கமு மில்லை, பெண்ணாசையினாற் றுறவில்லை பெண்ணாற்சிரும் பேரு மில்லை, பெண்ணாசைக்கோர் முரையில்லை பெண்ணாற்றீங்கு வரு மகனே. 28

பெண்ணான்மான முண்டாகும் பெண்ணாலீன முண்டாகும்
பெண்ணான்முறைகண மாறிவிடும் பேதஞ்சூது முண்டாகும்
பெண்ணால்வினைக ளேறிவிடும் பிறப்புமிறப்பு முண்டாகும்
பெண்ணாலன்றோ பாரதமும் பெரியராமா யணமாச்சே. 29

பெண்களாலே வருங்கஷ்டம் பெண்களாலே வருநஷ்டம்
பெண்களாலே வருங்கஷ்டம் பெண்ணாநரகம் வந்தொட்டும்
பெண்களாலே வரும்சண்டை பெண்ணாலுடையுந் நலமண்டை
பெண்களாலே கெட்டவர்கள் பேரையுரைக்க விலக்குண்டோ 30

அரிபதங்க ளுணர்ந்தாலென் நைவ்பாவ மறிந்தாலென்
அரியபரனைத் துதித்தாலென் தபஜெபங்கள் செய்தாலென்
உரியமனைவி தனையன்றி யுவகையோடு மயலானுக்
குரியஸ்திரீயைப் புணர்ந்தானே லோகோகொடிய பாவியே. 31

பரஸ்திரீகமனந் தன்னைச்செய்தே பாவியானோ ரனேகராம்
பரஸ்திரீகமனந் தன்னைநீத்துப் பரத்தையடைந்தோ ராரியராம்
பரஸ்திரீதன் ரூயெனுமெண்ண முடையோன்றனக்குபணி செய
பரஸ்திரீகமனும் பனும்பாவி முகத்தைப்பார்க்க லாகாதோ. (லாம்

பரஸ்திரீகமனந் தன்னைச்செய்வோன் பண்ணுந்தவங்கள் பலிக்காவாம், பரஸ்திரீகமனந் தனைச்செய்வோன் பண்ணுந்தர் மங்கர்மமாம், பரஸ்திரீகமனந் தனைச்செய்தே பரத்தையடைந்தா ராரையோ, பரஸ்திரீகமன மில்லாதோன் பரமஞானி யென லாமே. 33

பரஸ்திரீகமனஞ் செய்வோர்க்குப் பரமுமிகமு மிலவாகும்
பரஸ்திரீதன்னைப் பார்த்தவனே படியிற்குருடனுய்ப் பிறப்பன்
பரஸ்திரீதன்னைப் புணர்ந்தவனே பாரிலலியாய்ப் பிறப்பானேல்
பரஸ்திரீகமனந் நீதன்றோ பண்பிற்சிறந்த பாலகனே. 34

வே று.

பரபுருஷனைப்பார்க்காத பத்தினிதனையிச்சித்தால்
எரிவிழுங்கிடுமேதீய வீடணுகிடுமேயென்றும்
நரகணுகிடுமேகொல்லும் நயனனுகுவனேயிந்தத்
துருசினையகற்றிக்காமத் துகளினையகற்றுவாயே. 35

பத்தினிமனதுரோகப் பாழாச்சோர்யாகமப்பா
பத்தினிசினைக்கப்பூமி படீலெனவெடித்ததப்பா
பத்தினியுரையால்வன்னி படிகமாஞ்சலமாச்சப்பா
பத்தினிமுனிவால்வேடன் பஸ்பமாய்ப்போனானப்பா. 36

உத்தமிகளினாலன்றோ வுலகத்தின்மழைபெய்கின்ற
துத்தமிகளினாலன்றோ யுயிர்நவந்தானமோங்கும்
உத்தமிகளினாலன்றோ வுலகசாட்சியோங்கும்
உத்தமிகளினாற்சந்த்ர சூரியருதிக்கின்றாரே. 37

மதிகதிர்மறைந்திட்டாலும் மண்டலேகீழானாலும்
பதியரசளித்திட்டாலும் பரமன்வந்துரைத்திட்டாலும்
நிதிமிகவளித்திட்டாலும் நியமநிட்டைகள்சொன்னாலும்
பதிவிரதத்தைநீங்கார் பத்தினிமார்களென்றான். 38

என் றிவ்விதமாகிய பல நீதிவாக்கியங்களைத் துளசி தாசனுக்கு ஆத்மாராம் ஓதிக்கொண்டிருக்கையில் அசை வற்று நிற்கும் தேவகன்னிகை ஆத்மாராம் செய்த தந்தி ரத்துக் காச்சரியமும் பயச்சரியமுங்கொண்டு ஆயாச படைந்து மனமிடைந்து ஸ்ரீரங்கநாரயணரை உள்ளத்திற் சிந்தித்து வந்தித்து ஓ பகவானே ! ஆதரவற்றிருக்கும் அடியனை இப்போதே ஆட்கொள்ளாமற்போனால் வெகு துன்பத்துக்குள்ளாவேனென்று முறையிடுவதறிந்த கபட நாடகசூத்ரிய பகவான் அம்மாதுக்கு போதுமான ரதா புஷ்பமளித்த மாத்திரத்தில் தேகவலிவந்து ஆத்மா ராம் முன்னிற்பதற்குப் பயந்து நடுங்கி சமீபலே

ன்றெழுப்பி ககனத்தில் மறைந்தாள். பின்பு ஆத்மா
ராம் துளசிதாசனுக்கு நீதி மார்க்கங்களை யோதிட
தேவகன்னிகையின் மயக்கத்தைப் போக்கி மகாவிஷ்ணு
வின் மாயையை நீக்கி அப்பா மகனே! இன்றுடன்
உன் மனைவியையன்றி வேறு ஸ்திரீயைக் கருதாதே
கருதி மிகவும் வருகாதே என் வாக்கியத்தைத் தள்
ளாதே பரஸ்திரீகமனங் கொள்ளாதே கொண்டால் மிக
வும் பொல்லாதே தாசிகள் தெருவில் நில்லாதே மறந்து
மத்தெருவில் செல்லாதே எப்போதும் பொய் சொல்
லாதே ஒரு ஜீவனையுங் கொல்லாதே பாவமுன் தன்வழி
செல்லாதே மிகவும் ஸ்திரீயைக்கூடாதே கூடிப்பின்றல்
வாடாதே அழியும்பொருளைத் தேடாதே தேடிப்புவியில்
ஓடாதே ஜபதபங்களைமறக்காதே தெய்வபக்தியைத்துறக்
காதே கர்மத்தொழில்கள் செய்யாதே கபடால்வாடி
னையாதே தர்மகுணத்தை நீக்காதே தண்டாளர்தம்மைச்
சேர்க்காதே தெருக்கள் தோறுந் திரியாதே தீனர்கள்
தம்மைப் பிரியாதே குருக்கள்மாரை வையாதே குமாரா
வென்சொல் பெய்யாதே என்கிற வாக்கியங்களையுரைத்
துத் துளசிதாசனுடைய மனதைக்கரைத்து அக்பர் பாது
ஷாவினிடத்தி லிவனையினி இருக்கக்கூடாதென்று தா
னும் தங்கள் பெரியோரும் வாழ்ந்த ஊராகிய ராஜா
பூருக்குச் சமுசாரத்துடன் பிரயாணப்பட்டுப் போய்ச்
சேர்ந்து தன் மனைவியை நோக்கி. ஓ பெண்ணே! உன்
குமாரனை வெகு பத்திரமாய்க் காப்பாற்றுவதன்றி நமது
மருமகளாகிய மமத்தாதேவியை யழைப்பித்துக்கொண்டு
சுகமாயிருங்கள் நான் அனேக சாதுக்கள் வாழும் நைமி
சாரண்யத்திற் போய்த் தபஞ்செய்ய வேண்டுமென்
றுரைக்க, அதற்கவா மனைவி ஓ சுவாமி! உம்மைவிட்டு
அடியாள் பிரிந்திருக்கமாட்டேனென்று தானும் பிரயா
ணத்துக் காயத்தமாக ஆத்மாராம் ஓ பெண்ணே! நமது
மைந்தனோ சிறுவயதுடையவனா யிருக்கின்றான் நீயுமென்
னுடன் வந்துவிட்டால் குமாரனை யாராதரிப்பார்கள் என்
வார்த்தையைத் தள்ளாமல் மறுமொழி விள்ளாமல் மைந்
தனைப் பாதுகாப்பாயாக என்சொற்படி நடப்பதே உனக்கு
முக்கியமான தவமும் விரதமும் பதிவார்த்தையைக் கட
வாத சதிக்குப் பரமபத முண்டென்று பல சாஸ்திரங்கள்
முறையிடுகின்றது. நானோ சகல சாஸ்திரார்த்தங்க
ளறிந்தும் வோதினபடியே சாதனஞ்செய்யாமல் கோதக்
குள்ளா யிருந்தேன் இனி யென்னுடன் வாதிக்கவேண்
டாம் சமுசாரத்திலிருந்தடைந்த பலனெனக்குப் போதும்
உனக்கோர் குறைநேரிடுமாயின் நைமிசாரண்யத்திற்குத்
தடையின்றி வரலாம் சாதுக்கள் தரிசனம் பெறலாப

பிரமானந்தமுறலாம் எனத்துசியால் போதிக்கப் பெற்
றுக்கொண்ட ஞானநிட்டைக்கும் இல்லற தர்மத்துக்கும்
வெகுதூரம் எனக்கோ தன்னை மறந்து திக்குதேசாதி
களிறந்து பிரமானந்தவாரியில மூழ்கியிருக்கும்படியான
ஞாபகம் மேலிட்டு மானிடப்பிறப்புக் குறுதித்துணையான
தவஞ்செய்யாதவர்கள் சவத்துக்குச் சமானம் தேகமோ
நீர்மேற்குமிழி ஓதாத பேதைமானிடரைப்போல நானி
ருப்ப தழகல்ல பவசாகரத்துக் கடக்கும் புணையானது
தவமேயாம் தேகேந்திரிய பிராண கரண சீவதிருளைக்
கடந்து சுழுப்தி நிலையையடைந்து அகய மாத்திரமா
யிருக்கும் சமாதிநிஷ்டை சமுசாரத்திலிருந்து சாதித்
தல் வெகுதுர்லபம் மனமரும்பொருளைப் பற்றமாட்டாது
சாதுக்கள் கூட்டத்திலிருந்து தேர்ந்தாலன்றிச் சகஜக்
ஞானத்தை யடையக்கூடாது. அற்பமான சொர்க்காதி
போகங்களுக்கே அற்புதமான தபஞ்செய்வார்களாகில்
செப்புதற்கரிய ஒப்பிலாக் கைவல்யமடைவதற் கெத்தனை
பாடுபடவேண்டும். திரிவுலகத்திலொரு க்ஞானியென்
றுரைக்கும் பழமொழி பொய்யா மெய்யாவென்றுரைத்து
நைமிசாரண்யத்தை நாடிப்போகையில் துளசிதாசன் தந்
தையுரைத்த விரக்தி வார்த்தையைக்கேட்டு மனந்துலக்க
முற்றுத் தந்தையினிடம்போய் அவரம்புய வடிகளிற்
பணிந்து நயனங்களையணிந்து ஓ என் தந்தையே! அடி
யேனு மும்முடன் வருகிறேனென்று பின்றொடர அந்த
ஆத்மாராம் ஓ என்னருமைக் குழந்தாய் நீ என்னுடன்
வர இச்சித்தது நன்மையே ஆனாலும் சகல விஷய
போகங்களையுமனுபவித்து விரக்தியடைந்து சன்யாசி
யாக வேண்டுமன்றி ஒருவர் போதனையால் விரக்தி
யடைந்தவன் சிலநாளில் விஷயபோக எண்ணங்களாற்
பீடிக்கப்பட்டு இல்லற தர்மமுங்கெட்டு பிரஷ்டத்துவ
மடைவான் அது எப்படியென்றால்,

அபசாரத்திற் சிறந்த விபசாரி ஒருவர் போதனை
யால் விபசாரஞ் செய்யாதிருந்தாலும் சிலநாளிற் றன்
சுயகுணத்தையேயடைவாள். தானே இது கூடாதென்
றும் இச்செய்கையால் நரகத்தை யடைவோமென்றும்
அற்பமான ஓரிந்திரிய சொற்பசுகத்தையே வெல்லாத
நாம் வஞ்சகமான சஞ்சலமுள்ள நெஞ்சகத்தை வெல்வ
தெங்கே பகவான்றிருவடிகளை யடைவதெங்கே தசேந்
திரியங்களில் ஓரிந்திரியத்தை யடக்காமல் மானமிழந்து
ஈனமடைந்து திரியும் நாம் தசேந்திரியங்களை வெல்வ
தெப்போ பரிசுத்த மனதுடன் பகவானைத் தியானிப்ப
தெப்போ இனி கற்பைக் காப்பதே நமக்குரிய தபம்.

செபப்-ஓமப்-நியமப்-விரதப்-சீலம் என்று திடநிச்சயங் கொண்டவள் தன்னுயிர் நீங்கும்பரியந்தம் பதிவிரதைத் தன்மையைக் காத்து சஞ்சல மனதைப்பேர்த்து லேசில் பரமபதத்தையடைவாள் உண்மை இப்படியாகும் நீ சிறு பிள்ளை விஷயஞாபகமுள்ளவன் உன்னுடைய ஸ்திரீயோ அறியாதவள் அவளைவிட்டென்னுடன் வருவது கூடாது இன்னஞ் சிலவருஷங்கள் உன்னுடைய ஸ்திரீயுடன் கூடியிருந்து விரக்தியடைந்து மோட்ச மார்க்கத்தில் நடந்து சமுசார சாகரத்தைக்கடந்து விஷயாதி போகங் களுக்கிடைந்து சாதுக்களுடன் சேர்ந்து உன்னை நிலைமையையறிந்து ஆனந்தத்தையடைவதே உனக்குகந்த போக்கியமென்றறைந்து தனயனைப்பிரிந்து நைமிசாரண்யஞ்சேர்ந்து சாதுக்களுடன்கூடி களிகூர்ந்து பந்தபாசங் களிலிருந்து பேர்ந்து பிரம நிஷ்டையைச்சார்ந்து நிச்சல சமாதியிற்சேர்ந்து சகல சந்தேகங்களுந் தீர்ந்து பிரமானந்தவாரியிற் படிந்திருந்தார். கேட்டீர்களோசித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத்தொடங்கினார்.

இராகம் நீங்கு அத்தியாயம் முற்றிற்று.

---

நான்காவது

## துளசிதாஸன் ஸ்திரீவாஞ்சனை

## அத்தியாயம்.



ஆத்மாராம் நைமிசாரண்ய மடைந்தபின் அவர் மனைவி தன் மருகியை யழைப்பித்து குமாரன் பாலொப்பித்து அப்பாமகனே! இன்றுடன் உன் மனையையன்றி வேறு ஸ்திரீயைக் கனவிலும் நினைக்காதே யென்றுரைத்துப் பதிபதங்களை மதியிற்பதித்து துதித்துக்கொண்டே நாள்கழிக்கத் தொடங்கினாள். துளசிதாசர் பகவானுடைய மாயையால் தன் மனைவியின் மோகத்திலமிழ்ந்து தேவரம்பையே இவளாமென்று மேடைவிட்டு வெளி வராமல் ஒருவருக்குந் தரிசனந்தராமல் சிற்றின்பமே பேரின்பமென்று காமக்கடலில் மூழ்கி ஒன்றுந்தோன்றாமல் மாழ்கி நாள்கழிக்கத்தொடங்கினார். இப்படிச் சில நாள்கழிய அக்பர்பாதுஷா நடந்தயாவும் கேள்விப்பட்டு துளசிதாசனைப் பார்க்கவேண்டுமென்று ஆசைகொண்டு தண்டிகையையும் பல ஏவலாளரையும் அனுப்பினான். அவர்கள் ராஜாபூருக்குப்போய்த் துளசிதாசனைப்பணிந்து பாதஷா உம்மை அழைத்துக்கொண்டு வரும் படியாகக் கட்டளையிட்டாரெனச் சாற்றினார்கள். அதற்குத் துளசிதாசன் பாதுஷாவிடப்போனால் பின்னும் இங்கு வருவதற்கு நாள்செல்லும் அதுவரையில் நமது மனையாளைப்பிரிந்து நம்மா லிருக்கக்கூடுமாவென்கிற தாற்பரியத்தாற் காவலரை நோக்கி, இப்போது வரக்கூடிய தல்ல போமென்றார் தொழும்பர் மகா பாக்கியமென்று டில்லியடைந்து பாதுஷாவுக் குரைத்து தொழுதார்கள். அரசன் சிலநாள் சென்றபின் முன்போலவே காவலரை யனுப்பினான். வந்தழைக்கும் காவலருக்கு முன்போலவே துளசிதாசர் விடைகொடுத்தார். இப்படி பலதரம் இராஜனனுப்பியும் துளசிதாசன் மறுத்தகாரணத்தால் நிருபன் ஆச்சரியமு மாச்சரியமுங்கொண்டு யோசிக்கின்றான் இவ்வுலகில் ராஜனென்றால் எப்பேர்க்கொத்தவர்களும் அச்சப்படுவார்கள் பயந்து வருவார்கள் அல்லாமல் பூமியினாசையாலாவது கன்னியத்தைக் குறித்தாவது தனத்தை நாடியாவது ஆக்கினைக்காவது வாராதவர்களில்லை. ஓ மந்திரிபிரதானிகளே! சாது சற்சனர்களே! நான் துளசிதாசனைப் பலதரம் வரவழைத்தும் வாராம லிருக்குங் காரணமென்ன? இப்படி மறுப்பது சிறுவயதாலோ? ஐசுவரிய கர்வத்தாலோ? வித்தியா மதத்தாலோ? அவித்யா சம்பந்தத்தாலோ? தாய் தந்தையைப்பிரிந்த சிந்தையாலோ? யாராவது செய்த நிந்தையாலோ? என்ன விந்தையாலோ? நிற்சிந்தையாலோ? என்னால் ஏதாவது குறைநேரிட்டதோ? மாசாந்தரங்கொடுக்கும் ஆயிரம் பொன்னை நிறுத்திவிட்டீர்களோ? குரோதங் கொண்டீர்களோ? விரோதங் கொண்டீர்களோ? தெரியச் சொல்லுங்களென்று கேட்டான்.

அதற்குப் பிரதானிகள் வணங்கி, ஓ ராஜராஜாதிபா! துளசிதாசன் வித்தை புத்தியிற் சிறந்தவனாயிருந்தும் புத்தியிற் குறைந்தவனாயிருக்கிறான். புத்தியில்லாதவனுக்கு வித்தையும் புத்தியும் அபிவிர்த்தியாயிருந்தாலும் சிரத்தையில்லா பக்திக்கிணையானதல்லவோ? அவரிங்கு வாராமலிருப்பது தன் ஸ்திரீயின்மேலிருக்கும் மோகமே காரணமாம். முன்னம் தந்தைக்குப் பயப்படாமல் தாசிகள்வீடே கெதியாயிருந்தான் அந்த துர்க்குணத்தை நீக்கும் பொருட்டு ஆத்மாராம் நமது சோலையிற் கொண்டு போய் வைத்திருக்கையி லங்கேயுமோர் மங்கைமேல் மோகித்துத் தந்தையைச் சிந்தாகுலத்தால் நைந்து போகும்படி செய்தான் அதனாலேயே ஆத்மாராம் சமுசாரத்தோடு ராஜாபூருக்குப்போய் விரக்தியடைந்து நைமிசாரண்யத்தை அடைந்தார். அவர்போன பின்னிக் கோலத்தை யடைந்திருக்கிறானென்று சாற்ற, பாதுஷா ஆச்

சரிப்பட்டு ஆ ஆ ரீங்கள் சொல்லும் மொழிகள் வெகு விந்தையாயிருக்கின்றன ஓர் நாழிகையும் நாயகியைப் பிரியாம லிருப்பது நிச்சயந்தானு வென்றறைந்து இதைச் சோதித்துப் பார்க்கவேண்டு மென்கிற யோசனையோடுக் கூடியிருந்தார்.

அப்போது ஆத்மாராம் மனைவி துளசிதாசனை விளித்து அப்பா ஒப்பில்லாமகனே! ஒளிவான முக னே! இராஜனுன்னைப் பார்க்கும்பொருட்டுப் பலதாரந் தண்டிகையையனுப்புகின்றாரே நீ போகாமலிருக்கலாமா? பலதரங் காவலரைத் திருப்பலாமா? உப்பிட்டவரை உள்ளளவும் மறக்கலாகா தென்கிற பழமொழி யறியாயோ? மாசாந்தரம் ஆயிரம் பொன் கொடுப்பதைக் குறியாயோ நெடுநாளாய் நம்மைக் காக்கும் தர்மப்பிரபு வேண்டி யழைத்தால் போகாமலிருப்பதழகோ உன்னுயுளெல்லாம் காமாந்தகாரத்திலேயே கழித்துக்கொண் டிருக்கின்றாயே நன்றாயோதி யுணர்ந்தவனுயிருந்தும் சகல நியாயங் களுந் தெரிந்தும் இப்பேர்க்கொத்த அபகீர்த்திக் குள்ளாகலாமா சகலரும் உன்னடத்தையைக் குறித்து நிந்தையாய்ப் பேசுகிறார்களே பேசி யேசுகிறார்களே சதி புருஷர்கள் சேர்ந்திருப்பது பிறரறியலாமா அரசன் மனமும் முறியலாமா புண்ணியவான்கள் காக்கையைப் போன்றவர்க ளென்றும் பாபிகள் நாயைப் போன்றவர்க ளென்றும் சிலர் கருடனைப்போன்றவர்க ளென்றும் சிலமிலார் குக்கிடத்தைப் போன்றவர்களென்றும் சாஸ்திரங்களிற் சொல்லி யிருக்கின்றதே நீயதை யறியாதவனல்லவே என்றுரைத்து வாட்டமனதுடன் மமத்தாதேவியைக்கூவி அடிபாவி! நீ இக்கணமுன் தந்தைவீட்டுக்குப் போவென் றுக்யாபிக்க மமத்தாதேவி மகா பாக்கிய மென்று கணவன் பக்கலடைந்து மாமியார் கட்டளையையுரைக்கத் துளசிதாசன் சிந்தாக் கிராந்தனுய்ப் பெருமூச்சுவிட் டுணர்வுகெட்டு ஓ பெண்ணே என்னிருகண்ணே! உன் தந்தை வீட்டிலிருந் தழைப்பித்த நாள்முதற்கொண்டு உன்னை அரைநிமை பிரிந்தேனு அரையன் பலதரமழைப்பித்தும் போனேனு இப்பேர்க்கொத்த காமியென் றறிந்திருந்தும் என்னை விட்டுப்பிரியலாமா? நீபோனல் உயிர்தரித் திருப் பேனு? ஓ மனோரஞ்சிதமே! மாது சிரோன்மணியே! மாணிக்கப் பொக்கிஷமே! மன்மத சொருபமே! மாகதக் குன்றே? உன் மாமியாருடைய கோபத்தை க்ஷமித்திருக்கக் கடவாயென்று வேண்டிக் கொண்டார். அதற்கந்தவுத்தமி பதிவாக்கைக்கடவாப் பத்தினியாதலால் தாய்தந்தை யுரை மறந்திருந்தாள்.

இப்படி சதியும் பதியும் ஒற்றுமையோ டிருக்கிற நாளில் அக்பர்பாதுஷா துளசிதாசனைப்பார்க்க எண்ணங் கொண்டு சதுரங்க சேனைகளுஞ்சூழப் பிரயாணப்பட்டு ராஜாபூருக் கருகாயிருக்கும் ஓர் சோலையி லிறங்கி மந்திரிகளைநோக்கித் துளசிதாசனுக்கென் வரவைத்தெரிவித்து சீக்கிரமழைத்துக்கொண்டு வாருங்க ளென்றனுப்ப மந்திரிகள் மகா பாக்கியமென்று துளதாசன் மேடைக்குப் போய்ப் பாதுஷாவானவ ரும்மைப்பார்க்க வந்திருக்கின்றார் வாருமையாவென்றுவிளிக்க, துளசிதாசர் நாம் போவோமானல் அதிபதி டில்லிக்கழைத்துக் கொண்டு போய் விடுவான், இங்கு வருவதற்கு நாள்செல்லும் என்கிற எண்ணத்தாலும் காம மயக்கத்தாலும் வரமாட்டே னென்று மறந்துவிட்டார். அதற்கந்த வமைச்சர் குரோதங்கொண்டு தூஷண வார்த்தைகளை விண்டு அரையன் பக்கலடைந்து நாங்கள் துளசிதாசனைப் பலவிதவுபசாரணையோடு மழைத்தும் வராமற்போனுன் ஆதலாலத்துஷ்டன் முகத்தைத் தேவரீர் பார்க்கலாகாதென் றுரைத்தார்கள். பாதுஷா பிரதானிகள் முனிந்து பரஸ்திரீ கமனஞ்செய்யும் பாவிகள் முகத்தைப் பார்க்கக்கூடாதே யல்லாமல் குலஸ்திரீயின் மேல் மோகித் திருப்பவன் முகத்தைப் பார்ப்பதற்கியாதொரு குற்றமில்லை என்று தன்பட்டத்து யானைமீ தூர்ந்துகொண்டு சகல சேனைகளுஞ் சூழத் துளசிதாசன் மேடைக்குப் போகும்போது யோசிக்கின்றார் ஆச்சரியம் இவ்வுலகில் இவ்வளவு காமக்குணமுடையவர்க ளியாரு மிருக்கமாட்டார்கள். ஆத்மாராமுக் கிப்பேர்க்கொத்த புதல்வனுபிறந்தான் அவர் மிகவும் விவேக முடையவ ராயிற்றே அவரைவிட இவர் கல்வியிற் சிறந்தவராயிற்றே புலியின் வயிற்றிற் பிறந்தகுட்டிப் பூனையாகுமா(பண்ணியபயிரிற்புண்ணியந்தெரியு) மென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றதே ஒருவேளை நாமேவந் தழைக்கவில்லையென்ற எண்ண மிருக்குமோ அதுவும் இன்றைக்குச் சோதித்து விடுவோமென்று துளசிதாசன் மேடைக்கருகில் வந்து ஓ ஸ்வாமி! என் சத்துருநாதன் தனயனே! உம்முடைய தரிசனத்தை கோறிய எனக்கும் மரிய சேவை தாராமலிருக்கலாமா? உம்முடைய தந்தை என்மீது அதிகப் பிரீதியோடிருந்தது நீரறியமாட்டீரா? என்மேலிவ்வளவு கோபமாயிருக்கலாமோ? என்னுல் வந்த குறையேதோ அவையாவது சொல்லலாகாதோ வென்கிற பற்பல வார்த்தைகளாடிப் பரிவுடன் கூப்பிட்டார்.

அப்போதந்த துளசிதாசன் ஓ ஓ இன்றைக்கு நமது மனைவியைப் பிரியும்படி நேரிட்டதோ நான் பாதுஷா

விடம்போனால் அவர் தம் பட்டணத்துக் கழைத்துக் கொண்டு போகாமல் விடுவாரோ என்கிற கருத்தால் பாதுஷாவைப் பார்ப்பதற்கும் வராமல் ஓரறையிற் புகுந்தொளிந்துகொண்டார். அதுசேதி ஆத்மாராம் மனைவிக்குத் தெரிந்து துளசிதாசன மேடையிற்போய் அடா துஷ்டா! காமத்தால் கெட்ட பிரஷ்டா! இவ்வுலகையாளும் பாதுஷா நெடுநேரமாகக் கூப்பிடுகிறாரே ஒருவார்த்தையும் பேசாம லிருக்கலாமாவென்று கடிந்துபேசி அங்கு நிற்கும் மமத்தாதேவியைப்பார்த்துக் கோபத்தால் வேர்த்து அடிபஞ்சமாபாதகி! என் மைந்தனைக் கெடுத்ததோதகி! நீயாவது ரைத் தனுப்பக்கூடாதாவென் றதட்டிக் கடினவார்த்தைக ளாடினாள். உடனே மமத்தாதேவி பொறுக்க மாட்டமல் கணவனருகிற் சென்று ஓ சுவாமி! நீர் இன்று இராஜனைக்கண்டு பேசிவராவிட்டால் இக்கணமே என் பிராணனை விட்டுவிடுவேனென்று சத்தியஞ் செய்தாள் அது கேட்ட துளசிதாசன் திடுக்கிட்டு ஓ ஓ பிராணனை விட்டால் நமது தந்தைசொற்படி வேறு ஸ்திரீயைத் தொடக்கூடாதே இன்றிவளைப் பிரியலாச்சுதே வென்கிற ஏக்கத்துடன் பாதுஷாவி னருகிற் போனவுடனே, அக்பர் பாதுஷா ஆனந்தமடைந்து ஆத்மாராமென்றே நினைந்து தன் பட்டது யானையின்மேற் துளசிதாசனை யேற்றிக் கொண்டு டில்லியை நோக்கிப் பிரயாணப்பட்டார்.

அப்போது துளசிதாசன் தன்னைப்போன்ற வாலிபர் பலர் புடைசூழ்ந்து வருகிறதைப் பார்த்துக் காமச் சிந்தையாலும் காந்தையைப்பிரிந்ததாலும் மிகவும்நொந்து பாதுஷாவிடத்தில் யாதொரு வார்த்தையும் பேசாமல் மௌனமாய்ச் செல்வாராயினர். அங்கே ஆத்மாராம் மனைவி மமத்தாதேவியை நோக்கி அடி மமத்தாதேவி! நீ இக்கணம் உன் தாய்வீடுபோய்ச் சேரென் றுக்கியாபித்தாள். மமத்தாதேவி மகாபாக்கிய மென்று உடனே தந்தைவீடுபோய்ச் சேர்ந்து தாய் தந்தையரை வணக்கி க்ஷேமவார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கும்போது, மமத்தாதேவியை முன்ன மறிந்த தோழிகள் வந்துசூழ்ந்து ஆ ஆ நீயுன்மணவாளனைப்பிரிந்து வந்தது மிகவுஞ்சிந்தையாயிருக்கின்றது உன்னைப்பிரிந்துன்னாயகன் உயிர்தரித்திருப்பானா? நீ உன்னாயகனைப்பிரிந் தோர்நாழிகை யிருப்பாயா? உங்களைப்போன்ற காமிக ளிவ்வுலகி லில்லவே யில்லை. உலகத்தில் ஸ்திரி புருஷர்கள் சேர்ந்திருப்ப திப்படியா? நாயைப்போல நாலுபேர் நகைக்கப்பேரெடுப்பதா பெருந்தகைமையோர்க் கழகன்றோ என்றுரைத்ததன்றியுந் தோழிக ளாதலாற் பல பரியாசவார்த்தைகளு மாடத் தொடங்கினார்கள் அதற்கு மமத்தாதேவி ஓ பாங்கிகளே! என்றைக்கோர் புருஷனுக்குத் தாய் தந்தையர் தத்தஞ் செய்தாரோ அன்றுமுதல் புருஷனேதெய்வம், கணவன் மொழியே வேதம் காவலனிச்சைப்படி நடப்பதே விரதம் என வேதங்கள் முறையிடுகின்றனவே மனாள னென்னைப்படி நடக்கும் என்னைப் பரபுருஷனைக்கூடும் பாவியை நிந்திப்பதுபோலேன் நிந்திக்கிறீர்களெனக் கேட்க அதற்கந்த தாதிகள்நகைத்து ஓ அம்மணி! எந்நேரமும் சதி புருஷாள் கூடிக் காம இச்சையினாலேயே நாள் கழிக்க வேண்டுமென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றனவா? பருவகாலமன்றி மற்றகாலங்களில் சதி புருஷாள் சேரலாமா? வேதவாக்கியத்தை மீறலாமா? மிருகமும் அகாலத்திற் கூடுகிறதில்லையே? உங்களை யிவ்வுலகெல்லாம் நிந்திக்கின்றதே உன்னைவிட்டுன் நாயகன் ஓர் கணமும் பிரிந்திருக்க மாட்டாராமே புருஷன் அவிவேகியாயிருந்தாலும் கற்புள்ள ஸ்திரீ தர்மாதர்மங்களைப் போதித்து சகலமுஞ் சாதித்து நன்மார்க்கத்திற் கொண்டுவர வேண்டாகா? இப்படியனேகம் பெண்கள் தங்கடங்கள் பத்தாவுக் மறிவுணர்த்தி விவேகிக ளாக்கவில்லையா? நீமாத்திரஞ் செய்வது தொல்லையா வென்றுரைத்து க்ஷேமவார்த்தைக ளாடித் தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்பு மமத்தாதேவி வாட்டமடைந்து ஓபகவானே! என்னையெல்லாரும் எளிதஞ் செய்து நகைக்கும்படி செய்து விட்டாயே? ஐயோ எனது கணவன் செய்யும் கர்மானுஷ்டானம், சந்தியா வந்தனம் வேதமோதுதல் ஓமம்வளர்த்தல் முதலான ஒரு நற்கிரியையும்ஒருநாளுஞ் செய்ததில்லை. இப்பேர்க்கொத்த விகாரத்தை என் பத்தாவுக் களிக்கலாமோ? வீணாக நாளைக் கழிக்கலாமோ? இவ்வுலகில் இவ்வளவு காமக்குணமுடையவர்களுமுண்டோ? ஓ தெய்வமே! வேத விதிப்படி நடந்தா லாடவர்க்கபவருக்கமும் கேள்வனெண்ணப்படி நடந்தால் அரிவையர்க்கு முத்தியும் கிடைக்குமென் றல்லவோ வேதம் முறையிடுகின்றது எப்போது பலர் தூஷிக்கத் தொடங்கினார்களோ அப்போது நிறைய மடைந்ததற்குச் சமான மல்லவா என் மீதிருக்கும் மோகத்தினாலல்லவோ நாலுபேர்நகைக்க வுடம்படுத்தாரெனத் தொழுது கண்ணீர் விட்டழுது இனியெவ்விதஉபாயத்தாலாவது நமதுதுணைவனை நன் மார்க்கத்திற் கொண்டு வரவேண்டுமென் றுறுதிக்கொண்டிருந்தார். அங்கே பாதுஷாவுடன்போகும் துளசிதாசர் தனது நாயகியை நினை

ந்து நினைந்து மிகவுமுருகி முகங்கருகிப் பாதுஷாவினி
டம் பலவந்தயாகச் செல்லும் மார்க்கத்திலேயே செலவு
பெற்றுக்கொண்டு கன்றை நாடிவரும் பசுவைப்போலவும்
அதி சிக்கிரமாய்த் தன் மேடையிற் பிரவேசித்து மனை
வியை நாடிப் பல விடங்களிற் றேடிக் காணமல் வாடித்
தாயிடம் மோடி மமத்தாதேவி யெங்கேயெனக் கேட்டார்.
அதற்கந்த அம்மணி அப்பா ஒப்பிலா மகனே! உன் மனை
யாள் தன் தாய் தந்தையைப் பார்க்கப்போனாள். நாளைக்கு
வருவாள் அதற்குள்ளேன் பதைத்துதைத்துக் கொள்ளு
கிறுயென் றதட்டினாள். துளசிதாசர் கரைபெடுக்க வந்
தால் திரையலைக்குங் கப்பலென்பதைப்போல் சிற்றின்பம்
நீங்கிப் பேரின்பம் ஒங்குங் காரணம் வந்தாலும் மனைவி
யைப் பிரிந்துபோகும் நாளன்றே யானதாலும் தாயுரைத்த
மொழியைக்கேட்டு வாட்டத்துடன் வீட்டைவிட்டு வெளி
யிற் புறப்பட்டுக் காமநோய்க் காற்ருதவனுய் ஸ்திரீவாஞ்
சையை மாற்ருதவனுய் வலைக்குளகப்பட்டு விடுபட்டோ
டுங் கலைமானைப்போலவும் நெருப்பை மிதித்தவனைப்
போலவும் தன் மனைவியிருக்கும் ஊரைநாடி கால் நடை
யாய் அதிக பரபரப்போடும் ஒடத் தொடங்கினார் அப்
போது பகவான் காந்தையைப் பிரியும் நாளிந்நாளேயாம்
சமுசாரத்தலையைத் தறிக்குந் தின மித்தினமேயாம். ஆத
லால் ஆகாயகங்கையில் ஸ்நானம்செய்வாயென்றக்காற்றும்
மழையும் கலந்தடிக்கும் படியாகச்செய்தார். அதை அந்
தப்பரமபாகவதன் சட்டைசெய்யாமல் காலடி பிட்டத்திற்
படும்படியாய் வோடத் தொடங்கினார். இப்படி யோடுந்
துளசிதாசனைப் பார்த்த சகலரும் ஏனிப்படி யோடுகிறீ
ரென்றுத் தடைசெய்யவும் மன்மதனின்றன்றி மறுநாள்
நமது ஜெபஞ்செல்லாதென்று வலிகொண்டு பஞ்சபாணங்
களெய்யவும் மழையானது தடைசெய்து மேன்மேலு மிக
வும் பெய்யவும் காமநோயைக் கழிக்கும் நாளாதலால்
துளசிதாசனுக்கு மன மிகவும் நையவும் மெய்மறந்து
வெட்க முதலானதுந் துறந்து மதனநோயினுற்றுனிறந்து
வயினதேயனைப்போற் பறந்து முத்துமாலைகள் கழன்று
விழவும் முகத்தைப் பார்த்தோரெல்லாந் தொழவும் அங்க
வஸ்திரம் சேற்றில் புரளவும், அகமும் நாவும் வாளவும்
ஊரைக்கடந்து வோட்டமாய் நடந்து யமுனாநதியை
யடைந்து அதைக் கடப்பதற்கிடைந்து பொழுதுபோய்
ஜாமமானதாலும் நிலவில்லாத காலமானதாலும் மேகக்
கூட்டத்தி னிருளாலும் காற்றுமழையுங் கலந்தடிக்கு மரு
ளாலும் கரையழிந்து ஜலப்பெருகிப் போவதாலும் எப்
பேர்க் கொத்தவர்களுக்கும் நதியை நீந்தத் தடையாவ
தாலும் யமுனாநதியிலிறங்கித் தயங்கி என்னசெயலா
மென்றியங்கி அக்கரைச்சேர்க்க இங்கியாரு மில்லையா
வென வழங்கி ஆற்றிலடித்துக்கொண்டு போகும் பிரே
தத்தை முயங்கி ஆற்றிலிரங்கி ஆழற்ருற்றியங்கி மன்மத
ரோய் மீறி மமத்தாதேவியைக்கோரி சுயகுணங்கள் மாறி
துரிதத்துக்குத் தடையாச்சென்றே மாறி ஆற்றில்
விழுந்து அமிழ்ந்தெழுந்து ஏகாந்தியாய் நீந்திக்கொண்டு
இன்னமெவ்வளதுதூரம் புனலிருக்கின்ற தெனவிண்டு
ஆபாசந் தெரியாதவனுய் அரியின் லீலையை யறியாதவ
னுப் ஆற்றைக்கடந்து அதிவேகமாய் நடந்து மாபனூர்
வீட்டையடைந்து உட்போக வழியில்லாததற் கிடைந்து
நடுராத்திரி யென்றறிந்தும் மமதாதேவியைப்பிரிந்து எப்
படி யிருப்போமென நொந்து அம்மனையைப் பலதாம்
வலம் வந்து கதவுகளெல்லா மடைபட்டிருக்கின்றனவே
மாரிமென்மேலும் பெய்கின்றனவே காமக்கினி தகிக்கின்
றதே கதவுகள் தடுக்கின்றதே எப்படிப்போவோம் நாய
கியை எப்போது பார்ப்போம் அவாவை எப்போது தீர்ப்
போம் மனதை யின்பத்தி லெப்போது சேர்ப்போம்
மமதாதேவியைக் கூப்பிட்டுப்பார்ப்போமென்று ஓ மமதா
தேவி ஓ மமதாதேவியெனப் பலதரங்கூப்பிட்டும் பேசாக்
குறையால் ஓ ஓ காற்றுமழையுங் கலந்தடிக்கும் வோசை
யாற் கேட்கவில்லையாக்கும் கேட்டால் வராமலிருப்பாள
நான் மாரியால் நனைகிறதைப்பார்த் துயிர்தரிப்பாளா இனி
யென்ன செய்வோம் எவ்வித உபாயத்தாலுள்ளே போ
வோம் என்று மேடையின் சுற்றிலுமிருக்கும் சாளரங்க
ளாவது திறந்திருக்கின்றனவாவெனப் பார்த்துக்கொண்டு
வருகையில் ஓர் பலகணிதிறந்திருக்கக் கண்டு ஆனந்தங்
கொண்டு உற்று நோக்கிப்பார்த்து இவ்வளவு உயரமான
சுவற்றின்பேரிலேறவ தெப்படியென்றெண்ண மிட்டுக்
கொண்டே நிற்கையில் அவருடைய பரிதாபமறிந்த பக
வான் ஓர் நீண்ட சர்ப்பமாகிச் சாளரத்துக்கும் துளசிதாச
னிருக்கும் ஸ்தானத்துக்கும் ஓர் கயிற்றைப்போற்றொங்கி
னார். அதைச் சர்ப்பமென்றறியா துளசிதாசன் கயி
றென்றே தீர்மானித்து அதைப்பிடித்துக் கொண்டேறி
உள்ளே குதித்து அங்கு சயனித்திருப்பவரை மிதித்து ஓ
மமதாதேவியே. என் சொந்த ஆவியே, மயிலே, குயிலே,
மானே-தேனே - மதியே - கதியே, மணியே - அணியே,
மலரே-தளிரே, மனமே-கனமே, மங்கையே-நங்கையே,
மணமே-குணமே, வண்டே-செண்டே, மைபலே - தைய
லே, அன்னமே-சொர்ணமே, அரிவையே-தெரிவையே,
அன்பே-இன்பே, பாசக்கயிரே-பட்சமாமுயிரே, ரதியே-

சதியே, கோதையே-பேதையே, பாவையே - பூவையே
கொடியே-பிடியே என்று காம மயக்கத்தால் ஓசையாகப்
பேசத்தொடங்கினர். இப்படி கூசாமற்பேசும் துளசி
தாசன் தங்கமயமான அங்கமெல்லாஞ் சேறு நிறைந்திருப்
பதாலும், தலைவிரிகோலமா யிருப்பதாலும், மாமன் மாமி
மைத்துனர் முதலானவர்களும் இதுவென்ன பேதமே!
பூதமோ பேயோ நாயோ காளியோ கூளியோ வென்று
மூலைக் கொருவரா யெழுந்தோடத் தொடங்கினார்கள்.

அப்போது மமதாதேவி கணவனென்றறிந்து மிகவும்
நாணமடைந்து நாயினி கூசத்தாற் பேசாமலிருந்தால்
பசாசமேயாய் விடுவானென்று திக்கென்றெழுந்து சேவடி
யில் விழுந்து நாதனே வாரும் பிராண நாதனே வாரும்
நீதனே வாரும் சமலபாதனே வாரும் எனத்தோத்திரஞ்
செய்யும் மமதாதேவியைத் துளசிதாசன் தன் மாமன்
மாமி மைத்துனர் முதலானவர்களு மருகிலிருக்கவும் இஞ்
சித்தேனு நாணமின்றி மோகாந்த காரத்தால் அடி
பெண்ணே! என்னிரு கண்ணே! அழகு சுந்தரமே!
என் மோகனமே! பரிமளமருவே! பாக்கியத் திருவே!
கற்பகத்தருவே! களங்கமில்லுருவே! கொஞ்சுக்கிளியே!
கோதிலாவொளியே! மல்லிகையரும்பே! ரசமுள்ள
கரும்பே! இதுகாலபரியந்த மென்னைவிட்டெப்படிப் பிரிந்
திருந்தாயே! சீக்கிரமென் மோகத்தைத் தீர்க்கவா கார்க்
கவாவெனக் கரத்தைப்பிடித்திழுக்கும் துளசிதாசனைப்
பார்த்த சகலரும் வாயில் வந்தபடிபேசி மிகவுமேசிக் கீழ
றைக்குட் போய்விட்டார்கள்.

அப்போது மமதாதேவி நாணமும் லச்சையும்
அடைந்து கூடுவதற்கிடைந்து ஓ ஸ்வாமி! நீ ரெவ்விதமா
இம்மேடைக்குட் பிரவேசித்தீரென, துளசிதாசன் ஓ என்
குலவிளக்கே! என்னுருயிரே! நான் வந்து வெகு நேர
மாயுள்ளே வருவதற்குத் தடையாய் நின்று பின்பிச்சால
கத்திற்றொங்கும் வடத்தைப் பிடித்துக்கொண்டேறிக்
காமம் மிகவும்மீறி வந்தேனுதலால் இக்கணமே என்னை
யாட்கொள்வாயென மிகவும் கெஞ்சிக்கொஞ்சும் நாய
கனைப்பார்த்து மமதாதேவி புகல்கின்றாள். ஓ ஸ்வாமி!
இந்நுழைவாயிற் பழுதை தொங்குவதேது பார்க்கலாம
வாருமென்றவ்வாதானத்திற் பார்க்கையில் பருத்து நீண்ட
ஓர் சர்ப்பந் தொங்கக்கண்டு அச்சங்கொண்டு ஆ என்
னுசை நாயகனே! பிராணநாதனே! என்மீதிருக்கும
வாஞ்சையா லல்லவோ மழைபால் நனைந்து காற்றலைந்து
ஆற்றைக்கடந்து அதிவேகமாக நடந்து காமம்மீறிடக்
கட்செவியின் மீதேறிட வீட்டில் நுழைந்து பலர்மேல்

விழுந்து மனநாணமின் றெழுந்து நாணிலையெனவந்து
மிகவும் நைந்து பின்னெனைக் கண்டு மிகு மோகங்கொண்டு
வாயில் வந்தபடி பிதற்றினீர் என்பேரிலிருக்கும் வேட்
கையை நீத்து விகாரத்தைப் பேர்த்து ஸ்ரீமந் நாராயணன்
மேலன்புடையீரானால் ஸ்ரீ அகிலாண்டகோடி பிரம்மாண்ட
நாயகராகிய பகவான் பிரசன்னமாகிக் காமக்கவலையை நீக்
கிக் களங்க நெஞ்சினைப்போக்கிப் பாமரத்தைத் துளாக்
கிப் பரமானந்த பதத்தைத்தாக்கி மேலானபேரின்பத்தைக்
கொடுப்பார் நிறையத்து ளமிழ்வதைத் தடுப்பார், சிற்றின்
பத்திலும் பேரின்பமல்லவோ மேன்மையானது முனிவர்
தேவர் புகழும் பிரமானந்த போகத்தை விடுத்துத் துர்க்
கந்தமான வெண்ணையடுத்து வேதவாக்கியத்தைத் தடுக்க
லாமா வைராக்கியத்தைக் கெடுக்கலாமா பலர் நகைக்க
உடம்படுக்கலாமா இப்படியுஞ் சலந்தொடுக்கலாமா அ௱
வருஷம் பெண்போகமின்றி வைராக்கியத்தாற் பீஷ்ம
ரென்று பேரெடுத்த பீஷ்மாசாரியின்வைராக்கியத்தையும்
பலவந்தமாயணைபவந்த ..வரம்பையி .. னபிப்பிராயத்துக்
கிடங்கொடுக்காமல் பேடியாகச் சாபம்பெற்ற அர்ச்சுன
னுடைய வயிரத்தையும் நாளது வரைக்கும் ஸ்திரீமயக்
கத்திற் சிக்கா திருக்கும் அனுமார் திடத்தையும் இது
காலபரியந்த மணமும் மோகமில்லாதிருக்கும் விக்னேசு
வரனுடைய அடக்கத்தையும் நன்று யூகித்துப்பாரும் மாயா
விலாசனான பகவான் மன்மதனென்னும் புத்திரனல்
லவோ மாதவஞ்செய்யும் முனீசுவரர்களையும் தன் மாயை
யிலமிழ்த்தி மயக்கித் தன் பதவியையடையாமல் மறுத்தி
ருக்கின்றார் அம்மாரனை ஞானக்கண்ணாலெரித்த பரமசிவ
னுடைய மாட்சிமையை ஒருவராற் புகழத்தக்கதோ சகல
தாட்சிகளையுங் கொடுக்கும் சம்பாரியை உம்மைப்போன்
றவர்களால் வெல்லத்தக்கதோ காமமென்னும் மதயா
னையை ஏலசிற்கொல்லத்தக்கதோ சித்தசனைச்செயிக்கும்
வித்தையிதென் றொருவராற் சொல்லத் தக்கதோ காமத்
தால் தேவாமிர்தத்தை இராக்கதர் இழந்துபோக வில்
லையா காமத்தாற் பாண்டுராஜன் களேபரமாகப் போக
வில்லையோ காமத்தால் யயாதிராஜன் மூதுமையுங் கப
ோகமு மடையவில்லையோ காமத்தாலட்ட வசுக்களும்
கர்மத்துக்குள்ளாக வில்லையோ அன்றிக்காமமே நரகம்,
பந்தம், ரோகம், சோகம், மரணம் முதலியவை கொடுக்
கும் என்பதற்கோ ஐயமுண்டோ வலியாற் சிறந்த மத
கரியானது காமத்தாலல்லவோ படுகுழியில் வீழ்ந்துமானி
டரைத்தாழ்ந்து ஆனையென்னும் பேர்மாறிட் பூனையென்

னும்பேர் பெற்றிருக்கின்றது காமவலையிற் சிக்கினபேர்க்குப் பரகதிபடையும் மார்க்கந் தெரிவதோர் காலத்திலு முண்டோ? வந்து விட்டனை நைந்து கெட்டனை யென்னும் பழமொழி மெய்யோ பொய்யோ வெனப் பற்பல நீதிவாக்கியங்களை யோதினுளென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லுவார்.

ஸ்திரீ வாஞ்சனு அத்தியாயம்
முற்றிற்று.



ஐந்தாவது
## துள்சிதாசன் வைராக்கிய அத்தியாயம்.



ஓ சித்தர்களே! சிரவணத்துக்குகந்த பத்தர்களே! மமதாதேவி இவ்வித நீதிகளை யோதியதைக் கேட்ட துளசிதாசன் கருழனொலியைக்கேட்ட உரகமும் கேசரியின் கெர்ச்சனையைக் கேட்ட குஞ்சரமும் தாக்குவின் முழக்கத்தைக் கேட்ட பசுக்கூட்டமும் கலங்குகிறதைப் போலக் கலங்கி மனந்துலங்கி ஆ ஆ என்னுடைய மந்த புத்தியாலல்லவோ சகலரும் வாயில் வந்தபடி பேசவும் பேசி யேசவும் உடம் பெடுத்தேன் தந்தைசொல்லிய வாக்கியத்தையுந் தடுத்தேன் மாதாவுக் களவிலாத் துன்பங் கொடுத்தேன் நாணமும் மானமும் விடுத்தேன்; முன்னம் நந்தத்தை விந்தையான ஓர் சுந்தரியின் மோகத்தைத் தழ திரத்தால் பிந்தச்செய்து அந்த ரம்பையைச் சொற்பனத்திலும் நினைக்காமற் செய்தார் அன்றியும் சற்சங்கத்தால் தாசிகளினுசையை நீக்கிப் பல நீதிவாக்கியங்க ளுரைத்து அரக்கைப்போல மனதைக் கரைத்து விஷயபோகங்களை வெறுத்து பந்தபாசங்களை யறுத்து தேகமனித்தியமெனக் கானகத்திற் சென்று கருவிகாணுதிகளை வென்று தவ யோகியானர். இகதலைத் திரனயாக நினைத்துப்போனுர், அப்பேர்க்கொத்த தந்தை நிந்தை செய்யவும், தாயார் மனம் நையவும், மனையாள் வெறுக்கவும் நீதிவாக்கியங்களுரைக்கவும் நேரிட்டதல்லவா? ஓஒ அஞ்ஞான மனமே! உன்னுலல்லவா அபகீர்த்திக் குள்ளானேன்? பேதையாய்ப் போனேன்? உன்மீதுங் குற்றமில்லை, நானே தேடிக்கொண்டேன் தொல்லை, எனக்கெதன்மேலிச்சையோ அதையே அடிக்கடி நினைந்து என்னைக் கெடுத்தாய், இப்போதே எனக்கு ஸ்ரீமந் நாராயணன்மே லாசையாய் விட்டது, உன்னெண்ணப்படி நடப்பது கெட்டது, இனிமேல் மாதபரியர்தம் கொஞ்சிப்பேசும் வஞ்சியரைக் கனவிலும் நினைக்காதே, கோதையரைப் பார்த்துக் களைக்காதே, அரியின் திருநாமங்களை மறக்காதே, தாதை யோதிய நீதியைத்துறக்காதே என்று பற்பல வார்த்தைகள் பகர்ந்து காமவிகார மிறந்து கர்த்தன் பத்திநிறைந்து பாமரகுணங்கள் குறைந்து பாவியானேனெனப் பறந்து மமதாதேவிக்கு வந்தனம் புரிந்து நீயே குருவெனப் பரிந்து இன்றுடன் நீ தாயென்றறிந்து இகவின்பமெல்லாந்துறந்து கச்சிதக் கதவைத்திறந்து கர்த்தனைக் காண நடந்து வீதியிற் போகையில் உடனே மமதாதேவி காய காவெனக் கூவி அன்பன் பால்மேவி ஆர்வலா நீரென்னுவி, அடியாள் மிகவும் பாவியென்றவரைப் பலதாஞ் சூழ்ந்து பாதங்களில் வீழ்ந்து பண்புடன் தாழ்ந்து ஓ ஸ்வாமி! பக்திமார்க்கத்தை யுரைத்தால் என்னைத்தாயென வெறுக்கலாமா? அளவிலா அன்பைச்சுருக்கலாமா? அடியாள் கழுத்தை நறுக்கலாமா? இப்படியும் அடத்தைப் பெருக்கலாமா? இல்லற தர்மத்தை மறுக்கலாமா என்றயரும்பொழுது.

துளசிதாசன் ஓ மமதாதேவி! இன்றுட னுனக்குமெனக்கு முள்ள சம்பந்தம் போய்விட்டது, காமவிகாரம் மிகவும் கெட்டது, என் மனதைச் சுட்டது, பகவத்தியானம் நேரிட்டது ஆ ஆ நான் செய்த தபசாரம் நீ செய்த துபகாரம், நானியற்றிய தபசாரம், நீ யியற்றிய துபகாரம், உன்னை மறப்பேனு? உயிருள்ளமட்டும் வெறுப்பேனு? நீ தாயென்பதுறுதி நீ நன்றாகப் பார் கருதி இது வென் மனவுறுதி இது வேதத்தினிறுதி இனி பெண்ணுசையை விடுத்து இழிவுள்ள மனதைத்தடுத்து இகபோகத்தைக் கெடுத்து இறையன் பாதத்தைப் பிடித்து இருப்பாயென்று மறுத்துப் பெண்ணுசையில்லா துறுத்து அடவைராக்கியத்தைப் பூண்டு அரியைப் பார்க்க அவாக்கொண்டு நாட்டைக்கடந்து காட்டில் நடக்கத்தொடங்கினர். இவ்வாச்சரியத்தைப்பார்த்து மாமன் மாமி மைத்துனர் பந்துக்கள் முதலான சகலரும் துளசிதாசனைப் புகழ்ந்து மிகவும் மனமகிழ்ந்து மமதாதேவியை யிகழ்ந்து விந்தை யீதெனத் திகழ்ந்து ஒன்றுந் தோன்றுதவர்களாய் நின்றுர்கள். மமதாதேவியோ கணவன்முன் சென்று பட்சவார்த்தைகளைப் புகன்று ஓ பிராணநாயகா! பிராணவல்லபா என்னைவிட்டுப் பிரியவும் மனம் வந்ததோ நானுரைத்த கடுஞ்சொற்களால் மனம் வெந்ததோ வீட்டுக்கு வாரும் அன்புடன் சேரும் இன்பத்தைத் தாரும் கிருபை கூறும் என்று போகாமற் றடுத்தாள் விடாசலத் தொடுத்தாள். துளசிதாசன் ஓ மமதாதேவி! நான் தாயென வெறுத்த பின் நீ மறுத்து வருத்துவதா லென்கருத்துப் பிறழாதெனச் சிரித்துக் காமனை யெரித்தவன்போல் காந்தையை நோக்கிச் சாந்தத்தை நீக்கி இக்கண முன் தந்தை

விடுசேரு பகவான் பாதத்தைக்கோரு பதியே தெய்வ மெனுஞ் சதி நீயானல் என் வார்த்தை தள்ளாதே யாதொரு மொழியும் விள்ளாதே என்றுரைக்கும் பதியின் பாதங்களிற் பணிந்து நயனங்களை யணிந்து பலதரம் முத்தமிட்டு உம்மையும் விட்டு நானுயிருடனிருப்பேனா? மனமும் பொறுப்பேனா? உமக்கு மெனக்கு முள்ள சம்பந்த மின்றுடன் தீர்ந்து விட்டதோ? நான் உரைத்த கடினசொற்களு மும்மைச்சுட்டதோ? எவ்விதமாக மறந்திருப்பேன்? துக்கந்தனித்தெப்படி யிருப்பேன்? தனித்தெப்படி வுயிருடனிருப்பேன்? பட்சமாய் இனியாருடன் பேசுவேன்? சந்தனாதிகளெவர்க்குப் பூசுவேன்? யாருடனாடுவேன்? எவருடன் பாடுவேன்? நாயகாவென்றுயாரை யழைப்பேன்? எப்படி பிழைப்பேன்? யாருடன் கைப்பேன்? எவருடன் பகைப்பேன்? யாருடன் கொஞ்சுவேன்? எவர்பால் கெஞ்சுவேன்? இனியெனக்குப் பூமாலைகளேன்? முத்துமாலைகளேன்? சிங்காரக் கொண்டையேன் செஞ்சதங்கைத் தண்டையேன்? என்னழகைப் புகழ்ந்து மகிழ்பவர் யார்? யாரெனப் பெருமூச்சு விட்டயர்ந்து ஆபாசத்தால் மூர்ச்சையாய் நிலத்தில் சாய்ந்து விட்டாள்.

இதுகளை யெல்லாம் பார்த்திருந்த துளசிதாசன் சற்றுமிடருறுமல் அரிவையின் காமம் நீங்கி அறிமேற் காமம் ஓங்கி அச்சுதனைப் பார்க்க ஏங்கி அரைக்கணம் நிற்கப்பின் வாங்கித் தன்னெதிரில் யார் வந்து மறித்தாலும் ஓ ஐயமாரே! நீங்களானந்தமா யிருக்கிறீர்களே அரியைப்பார்த்தீர்களா? அவரடியிற் றலைச்சேர்த்தீர்களா? ஆசைகளை யெல்லாம் மாய்த்தீர்களா? அடியோட கந்தையைச் சாய்த்தீர்களா? அரியிவ்வழியாய் வந்தாரா? அரிய சேவை தந்தாரா? அரியைக்கண்டு புகழ்ந்தீரா? அன்பாயுருகி மகிழ்ந்தீரா? அரி நீ யென்முன் வாராயோ? அரிய சேவை தாராயோ? அடியேன்மேற் கிருபை கூறாயோ? அருட்கண்ணாலெனைப்பாராயோ? ஐயோ வீணாய் நாள் போச்சு அடியேனுயுள் வீணாச்சு, மெய்யோர்க்கிது மிகவு மேச்சு, விதியோவென்று பெருமூச்சு அடிக்கடி விட்டுக் கொண்டே பேயன் போலவும் பித்தன் போலவும் பேசிக் கொண்டே கன்றையிழந்த பசுவைப்போலவும், புதல்வனையிழந்த பூவையைப் போலவும், பதியையிழந்த பதிவிரதையைப்போலவும் பதறிக் கதறிக்கொண்டு அரிஹரியென்கிற வார்த்தை யல்லாமல் வேறுவார்த்தை சொல்லாமல் எங்குந்தங்கி நிற்காமல் கற்களென்றும் முட்களென்று பாராமல் காடென்றும் நாடென்றும் தேறாமல் கர்த்தனைக் காண நடந்தார். அப்போது மமதாதேவி மூர்ச்சை தெளிந்தெழுந்து கணவனைக் காணாமல் பின்னும் பூமியில் வீழ்ந்து புரண்டு மருண்டு கதறிப்பதறி ஓலமிட்டழுது ஓ கர்த்தனேயெனத் தொழுது ஐயையோ செய்தேனே பழுது இனி யெப்படிப்போகும் பொழுது எனப்புலம்பிக் கண்ணீராற் றேகத்தை யலம்பிக் கணவனைக் கானக் காட்டை நாடிப்போகத் தொடங்கினாள், அப்போதவ்வுத்தமியின் தந்தை தாய் பலவாறாகத் தேற்றித் துக்கத்தை யாற்றி நீ வீட்டிலிரு சற்றேபொறு நாங்களழைத்துக்கொண்டு வருகிறோமெனத் திடப்படுத்தினார்கள். அதற்கு மமதாதேவி நீங்கள்போய் எனது மாமியாரை அழைத்துக்கொண்டு வந்தாலவ்வம்மணி தன் சுதனை மறித்து நாட்டுக் கழைத்துக்கொண்டு வருவாளென் றுரைக்க மமதாதேவி சகோதரர் க்ஷணத்திலழைத்துக்கொண்டு வருகிறோமென்றோடி யமுனா நதியைக் கடக்கக் கூடாமல் வாடிச் சூரியோதயத்தை நாடி நின்றார்கள். துளசிதாசனோ இரவிலேயே நாட்டைக் கடந்து காட்டிற் புகுந்தும் சேற்றிற் புதைந்தும் புதருகளாற் சிதைந்தும் சூரியாஸ்தமன மாவதற்கு முன் ஓர் மலைமேற் பிரவேசித்து ஆபாசமேலீட்டா லயர்ந்து சற்றுத் தங்கியிருந்து பகலவன் வந்ததே அம்மலையை யிழிந்து பல காடுகளிலும் காடுகளிலும் புகுந்து இன்றைக்கரியைக் காண்பேனா இன்பாபரணம் பூண்பேனா இன்றைக் கென்முன் வருவாரா எளியேன் விரதம் முடிப்பாராவெனக் காலையிலிருந்து உச்சிமட்டும் பலவிடங்களிலுஞ் சொல்லிக் கொண்டே திரிந்து மனநொந்து இப்போது பதினைந்து நாழிகையாய் விட்டதே இனிமேல் கமலக்கண்ணன் வருவானா விமலபதத்தைப் புகழ்வேனா மேலாமின்பமடைவேனா வென்று தேவாலயங்களிற் பிரவேசித்துப் பகவானிவரோ யாவாரா பகவானாற் பேசாரா மகிழ்வோ டெழுந்து வாராரா மலர்ப்பாதங்கள் தாராரா வென வெகுநேரந் தோத்திரம் புரிந்து அசையாத விக்கிரகங்களைப் பார்த்து மார்புடன் சேர்த்து ஓ ஸ்வாமி! நானும்மைக் காணவேண்டி காடு நாடுமலைந்து திரிகின்றேனே கால்கள் மிகவு நோகின்றனவே பாதங்கள் தேய்ந்து போயினவே பொழுதுமிதோ போச்சுதே நீ ரசையாம லிருக்கின்றீரே நானிரவும் பகலு மோலமிட்டுக் கூப்பிடுகின்றேனே நீர் வாய் திறந்து பேசாம லிருக்கின்றீரே இது வுமக்குத் தர்மமோ அல்லது வேறே மர்மமோ நான் செய்த கர்மமோ நீ ரசையாப் பிரமமோ வெனத் துதித்து சூரியாஸ்த மானமே ஆலயத்திலேயே சயனித்து அரியென் கனவில் வருவாரா அரிய சேவை தருவாரா

உரிமையாக்கிக் கொள்வாரா உபதேசஞ் செய்வாரா கமல பதங்கள் பார்ப்பேனே களிசாகரத்திற் குளிப்பேனோ நிமலாவென்று துதிப்பேனே நிச்சலனுகி யிருப்பேனே பண்ணேனுருகிப் பணிவேனே பவசாகரத்தைக் கடப்பேனே கண்ணுற் பார்ப்ப தெந்நாளோ கவலைகள் தீர்ப்பதெந்நாளோ வெனத் தியாநஞ் செய்துக்கொண்டே நித்திரை செய்து பாதியிரவிலேயே விழித்து கோயிலிலிருந்து வெளிப்பட்டு ஓ ஓ பகவானே நீயென்னதிரிற் பிரசன்னமாய்ச் சேவைதரல்வேண்டும். கண்களாற்பார்த்து மகிழவேண்டும் மனங்குளிரப் பேசவேண்டும் என் மனவாட்டங்க ளறவேண்டும் ஆனந்தமுறவேண்டும். நிர்த்தனஞ் செய்யவேண்டும் தன்னை மறந்து திரியவேண்டும் எனப் புகன்று பகவானைக் கனவிலும் மறக்காமல் அரிஹரியென்கிற வாக்கியத்தைத் துறக்காமல் அனேக நூதன பஜனைகள் பாடிக்கொண்டே பல தேசங்களிற்றிரிந்து மிகவுந் பரிந்து கால்களெரிந்து முகங்கரிந்து காசிபட்டணத்திற் பிரவேசித்து விஸ்வநாதரைப் பூசித்து சாதுக்களை நேசித்து அரியின் கதைகளை வாசித்து விஷ்ணு சங்கீர்த்தனங்களைக் கோஷித்துப் பக்தியில் விசேஷித்து நாள்களைக் கழிக்கத் தொடங்கினர்.

இவரிப்படியிருக்கத் துளசிதாசன் தாய் சூரியோதயமாகியும் புதல்வன் வரக் காணுமையால் வாடி வீதிகளிற் போய்த்தேடிப் பல திசையிலும் வோடி பாலனைக் காணுதற்குநாடி யமுனாநதியின் கரைக்குவந்து கடந்து போவதற்குநொந்து துக்காக்கினியால் வெந்து மிகவுஞ் சிந்தை நைந்து வோடத்தின்மீதேறி மகனைக் காணக்கோறி இக்கரைகடந்து அக்கரையையடைந்து சம்பந்தியின் புதல்வரைப்பார்த்து என்னருமைக்குமாரன் வந்தானுவெனக் கேட்க அவர்கள் சகலமும் சவிஸ்தாரமாகவுரைக்க அவ்வசனத்தைக் கேட்ட தாய் பூமியில் விழுந்து புரண்டெழுந்து அதிசீக்கிரமாகச் சம்பந்தியின் வீட்டிற்சென்று மமதாதேவியைக் கூப்பிடவே உடனே மமதாதேவி மாமியைத்தொழுது வோவென்றழுது நீரென்னை யிங்கே அனுப்பாமலிருந்தா லிக்குறை யெனக்குவருமா துன்பந்தருமாவெனத் துக்கித்தலறும்போது அத்தாயும் கூடவே புலம்பி ஆ என் மகனே! அழகான முகனே என்னையும் மறந்தாயோ உன்மனைவியையுந்துறந்தாயோ எத்திசையிற் சென்றாயோ எங்கே யிருக்கின்றாயோ பசிவேதனைக் கெப்படி பொறுப்பாய் கால்கள் நோக நடக்கதெப்படி உயிர் தரிப்பாய் மோகஜன்னி மேலிட்டதோ மனைவியின்வாய்மொழிகள் சுட்டதோ இல்லறங் கசப்பாய்விட்டதோ மதிமயங்கி விட்டதோ விதிபிரித்துவிட்டதோ இவ்வூர்தான் கெட்டதோ உன்முகத்தைக்காட்டாமற்போய்விட்டாயேயென்னைப் பாவியாக்கி விட்டாயே உன்னைப்பார்க்காமலெப்படி யிருப்பேன் எவ்விதமாய்ப் பொறுப்பேன் ஓ ஓ மோசஞ்செய்தாயே என் கழுத்தைக்கொய்தாயேயெனப் புலம்பிக்கொண்டிருக்கும்போது சம்பந்தி அத்தாயை அன்புடன்நோக்கி இதோ என் புதல்வர்களாலிப்போதே யழைப்பிக்கிறேன் துன்பப்பட வேண்டாமெனத் தேற்றித் துன்பத்தையாற்றிப் புதல்வரையும் ஏவலாளரையும் துளசிதாசனைத்தேடியழைத்துக்கொண்டு வரும்படியாக அநுப்பினன்.

அவர்கள் காடு நாடு மலை வனாந்தரங்களிலெல்லா மலைந்து திரிந்து அங்கங்கே துளசிதாசனுடைய சங்கதியைக் கேள்விப்பட்டு வாரணாசியையடைந்து அங்கு துளசிதாசனைக்கண்டு பித்தனாய் விட்டானென்று தன்னூரிற்சென்று துளசிதாசனிருக்குங் கோலத்தைப் புகன்று முறையிட்டார்கள். அதுகேட்ட தாய் மிகவும் பிரலாபித்துத் தானும் மருகியும் தண்டிகைகளின்மேலூர்ந்து ஏவலாளருடன் பிரயாணப்பட்டு வாரணாசியையடைந்து தேகத்தின்மீதும் வஸ்திரம்முதலான சகலசொகுசுகளின் மீதும் வாசையின்றி ஓரிடத்திலும் நில்லாமல் அரிஹரியென்கிற மொழியல்லாமல் வேறுவார்த்தை சொல்லாமல் பரதேசியைப்போற்கிழிந்த ஆடையைத்தரித்துக்கொண்டு குடுமியை விரித்துக்கொண்டு பாதங்கள்வெடித் துதிரம் புறப்பட நடந்துகொண்டு பகவானை வோசையுடன் கூப்பிட்டுக்கொண்டு மஸ்தகத்தின்மே லஸ்தங்களை கூப்பிக்கொண்டு தெருக்களிற்றிரிந்துக்கொண்டு மழையென்றும் வெயிலென்றும் பாராமல் யாரிடத்தும் பேசாமல் ஊமையாகி அங்கங்கறுத்து கோடைக்குப்பொறுத்து எறும்பு மாத்திரமாகி நிச்சல சித்தனாகி மேடை மாளிகையிலிருந்ததுபோய் மடஞ் சத்திரங்களிற் றங்கிப் பஞ்சணைமேற் சயனிப்பதுபோய்ப் புழுதியிலனந்தற் செய்து பேய்பிடித்தவன்போலுஞ் சேயிருப்பதுபோலும் இருக்குமைந்தனைக்கண்ட தாயானவள் தாரை தாரையாய்க் கண்ணீர்விட்டழுது பாதங்களின் மேல்வீழ்ந்து தொழுது ஓ என்னருமைப்பாலனே தவத்திற்சிறந்த சீலனே உனக்கு யிப்பேர்க்கொத்த விதிவந்ததோ உன் மனைவிசொன்ன கடுஞ்சொல்லால் மனம் நொந்ததோ அஞ்ஞானம் நாசமாய்ப் போகாதோ ஓ என்னருமைக் குழந்தாய் உன்

தாதையு மென்னைப்பிரிந்தாரே நீயும் பிரிந்து விட்டாயே நான் தனித்திருப்பேனே உன்னைப்பிரிந் துயிர்தரிப்பேனே வெனப் பற்பல மொழிகளைப்புகன்று இரண்டு கரங்களையும் பிடித்துக்கொண்டு வயிற்றிற் றலையை வைத்து வோவென்றழத் தொடங்கினாள்.

அதற்கந்த பரமபாகவதன் பணிந்து ஓ என்தாயே நாராயணனைப் பார்த்தாயா நபனங்களவர் பதத்திற் சேர்த்தாயா இழிவான எண்ணங்களைப் பேர்த்தாயா எல்லா! ஆயாசங்களையுந் தீர்த்தாயா அடியேனரியைக் காணவில்லை அதனாலொன்றுந் தோணவில்லை கொடியேன்மேலருள் கூறவில்லை கோதுகளின்னுந் தீரவில்லை பச்சைவண்ணனைக் கமலக் கண்ணனைச் சுதாற்புதனை அரசனார்சுதனை கோதண்ட அஸ்தனை குறைவிலாச்சொஸ்தனை சீதைமணவாளனைத் தேவர் கண்ணாளனைப் பத்மநாபனை பரமசொரூபனை கதிதரு முதல்வனைக் கௌசலை புதல்வனை ஆதிமூலனை அன்பரனுகூலனை மாதயர்நேயனை மதிதரும் மாயனைக் கண்குளிரக்கண்டு ஆனந்தங்கொண்டு பலவரங்களைப் பெற்றுக்கொண்டு இதோ வருகிறேன் இன்றைக்கத்தியம் பகவான்வருவார் தரிசனந்தருவார் இன்றைக்கென் விரதம் நிறைவேறும் சமஸ்த குறைகளுந் தீரும்பெனப் பற்பல வசனங்களாடி அரியைத்தேடிக் காணமல் வாடிப் பல கீர்த்தனங்களைப் பாடிக் கொண்டிருந்தார்.

அப்போது மமதாதேவி கணவனைச் சூழ்ந்து அடிகள்மேல் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து ஓ ஸ்வாமி! நான் செய்தகுறையை க்ஷமித்து வீட்டுக்குவாரும் தாபைக்காரும் ஆ ஆ இத்திவ்ய திருவடிகள் நோக நடக்கவும் நேரிட்டதோ புழுதியிலுஞ் சயனிக்கலாச்சுதோ உமக்குள்ள அபிமானமெங்கே பிரிந்து போச்சுதோ இப்பேர்க்கொத்த விதியும் வாச்சுதோ ஓ கொடுங்காலமே! ஓ கடுந்தெய்வமே! என்னை இப்படியும் சோதிக்கலாமோ வெனப் பன்முறை முகத்தி லறைந்துக்கொண்டு கல்லும் உருகக் கரைந் தழுக தொடங்கினாள். அதற்கந்த ஹரிதாசன் ஓ மமதாதேவி! நீ செய்த உபதேசப்படி இன்னும்ஹரியேன் வரவில்லை எனவர் தரிசனந்தரவில்லை இன்னும் எத்தனை நாள்செல்லும் எனக்கோருபாயம் நீ சொல்லும் என்று விபீஷணனைக்காத்தவனை ராவணனை மாய்த்தவனைக் கும்பகர்ணனை வென்றவனை மூலபலத்தைக் கொன்றவனை அயோத்தியை யாண்டவனை எனக்கு முனக்கு மாண்டவனை இதோ பார்த்து வருகிறேன் நீ மனைக் கேகென்றுரைத்துஸ்ரீராமா-பாந்தாமா-துளபத்தாமா-சகஸ்ரநாமா-பரசுராமா-பலபத்ரராமா-நீலமேகஸ்யாமா-புஜபலபராக்கிரமா-திரிவிக்கிரமா-புருஷோத்தமா-நரசிம்மாவெனத்தோத்திரஞ் செய்துக்கொண்டே இச்சைப்படி பலவிடங்களிலுந் திரியும் காவலனை மமதாதேவி மறுக்காமல் மாமியாரை நோக்கி இனி இவரை நாமழைத்துக்கொண்டு போவதருமையாதலால் இவ்வாரண்யசியில் ஓர் பெரிய மடம் ஏற்படுத்தி அதில் நாமிருந்துக் கொண்டிவருடைய தரிசனஞ் செய்துக்கொண்டிருக்கலா மெனப்புகல, அதற்கவ்வம்மணி ஓ மமதாதேவி! நீ நமக்குள்ள ஆஸ்தியையெல்லா மழைப்பித்து உன்னிஷ்டப்படியேசெய்து துளசிதாசனுக் கன்னவஸ்திர முதலானதுகளுக்குக் குறைவாரமற் பாதுகாத்துக்கொண்டிரு, நானுனது மாமனாரிடஞ் சென்றவரை யிங்கழைத்துக்கொண்டு வருகிறேன் வராவிடினவரிடத்திலேயே மாணமடைகிறேன் ஏனெனின் என்னருமைப்பாலன் முன்னிருந்த சிங்காரத்தைக்கண்டு களிப்புற்ற கண்கள் இப்போதிருக்குங் கோலத்தைக் கண்டு பொறுக்க மாட்டேனென்கிறது பெற்றவயிறே பற்றி யெறிகின்றது உடல் பதறுகின்றது மனம் நடுங்குகின்றது துயரமோ ஆறேனென்கிற தென்றுரைத்து மகனைக் கட்டியணைந்து முத்தமிட்டுப் பிரியாத்துயரால் ஓ வென்றழுது காசிவிஸ்வநாதரைத்தொழுது ஓ பரமேசுவரா! ஜகதீசுவரா! நீயாவதென் பாலனுக்குற்ற சித்தப்பிரமை நீக்கலாகாதோ காட்சி கொடுக்கலாகாதோ என்னாயுளெல்லாம் துன்பத்திலேயே கழிந்ததே என்று துதித்துப் பல காவலர்கள் சூழச் சிவிகைமேலூர்ந்துக் கொண்டு நைமிசாரண்யத்தை நோக்கிப்போய் காவலனிடஞ்சேர்ந்து பாதங்கள் மேல் வீழ்ந்து பிரலாபிக்கத் தொடங்கினாள்.

ஆத்மாராம் திடுக்கிட்டுக் கண்களைத்திறந்து மனைவியைநோக்கி, ஓ பெண்ணே! துளசிதாசனெங்கே மைந்தனைப் பிரிந்தென்பால் வந்த காரணமென்ன சீக்கிரஞ் சொல்வாயென்றுகேட்க, அதற்கவ்வுத்தமி துளசிதாசனுடைய வரலாற்றை ஆதியோடந்தமாகப் புகன்றுமுறையிட்டாள். அதுகேட்ட ஆத்மாராம் சந்தோஷ சாகரத்தில் மூழ்கினவராய் ஆனந்தம் ஆனந்தம் என்ன சுபவார்த்தைப்புகன்றாய் நமது மைந்தனும் இகபோகங்களை வெறுத்துச் சஞ்சலமனதை மறுத்து அரியைத்தேடித்திரிகின்றானோ தேடிக்காணமலலறுகின்றானோ எதோபார்ப்போம் வாவென்றாரணியத்தைக் கடந்து துளசிதாசனைக்கண்டு ஆனந்தங்கொண்டு மயக்கத்தைப்பேர்த்து மார்புடன்சேர்த்து மக

வாசை யோங்கி மனம் மிகத்தேங்கி அப்பாமகனே! அழகானமுகனே! நீயும் விஷயபோகங்களை வெறுத்தாயா இவ்வளவிடருக்கும் பொறுத்தாயே ஆ என்கண்மணியே! ஆ சிகாமணியே! ஆ என்புத்திரா! அடியார்க்கு மித்திரா! ஆசைப் பெருக்கே! அடியேனன்பே! என்னுருயிரே! என்மனத்தெளிவே! ஜீவசஞ்சீவியே! தெருள் சிரஞ்சீவியே! மாசிலாவுருவே! மகிழ்தருதிருவே! நீ யிப்படியலைவதாற் பஞ்சுபோன்ற பாதங்கள் நோகாதோ என்னுயிர் பிரிந்துபோகாதோ சும்மா விருக்கலாகாதோ துரிசுகளெல்லாஞ் சாகாதோ நீயுமென்போலானயோ எலும்பாய் வாடிப்போனயோ நீயுமிச்சிரை யணியலாமா எளியேன் கண்களாற் பார்க்கப்போமா ஐயோ தேகமெல்லாம் புழுதி யாயிருக்கின்றதே என்தேகம் மிகவும் பதறுகின்றதே உன்னைப் பெறும் பாக்கிய மென்ன செய்தேனே அதிக சிலாக்கியனுனேனே அரியைத் தேடித் திரிகின்றுயோ அரியைக்காண வுருகுகின்றுயோ இப்போதல்லவோ என் தபம் பலித்தது இப்போ தல்லவோ மோட்சசாம்பிராச்சி யத்தை யடைந்தேன் இனி இவ்வுலகிலெனக்கோ ராசையுமுண்டோ உன்னைப்பெற்ற எனக்கோர் குறையுமுண்டோ என்னை உன் மார்பிறுகத் தழுவிக்கொண்டே என்னுயிரை விடுவதே நன்மை, இப்படிவிடுவதால் வராதொருவின்மை ஆஆ ஆனந்த மடைந்தேன், ஆக்கையோடிருக்க விடைந்தேன், பந்தபாசங்க ளற்றேன் பரமானந்தத்தைப் பெற்றேன், உன் திவ்விய அஸ்தங்களா லென்னைப் பாகீரதியி லெறிந்துவிடு இனி யுனக்கோர் குறையுமில்லை, ஸ்ரீமந்நாராயணனைப் பார்க்கக்கடவாய், பரிபூரண ஞ்ஞானியாகக் கடவாய், பிரமானந்தத்தாற் றன்னைமறந் திருக்கக்கடவாய், மோட்சபாக்கியத்தைப் பெறக்கடவாய் என்று பல ஆசிகள்செய்து மைந்தனைக்கண்ட சந்தோஷத்தாலே ஆக்கைமேலுற்ற நிராசையாலோ, விக்கைவல்ய மடையும் படியான எண்ணத்தாலோ, மகனை மார்புடன் புல்லிக் கொண்டிருக்கு மானந்தத்தாலோ தனயனிருக்கு மலங்கோலத்தைப் பார்க்கக் கூடாமையாலோ, சுதன்மீதிருக்கும் வாஞ்சையாலோ, விதியின் முடிவாலோ யாதுகாரணத்தாலோ, துளசிதாசனைத் தழுவினபடியே தேகேந்திரிய காரண சிவவிருளையுங் கடந்து ஆத்ம ஸ்வரூபயாகி விராட்டிரண்ணிய கர்ப்ப அவ்யாகிர்தத்தையும் கடந்து பரமாத்மாவி லைக்கப்பட்டு ஸ்மரணைகெட்டு தாத்திரியிற் சாய்ந்து ஆனந்தம் ஆனந்தம் என்றுரைத்துக் கொண்டே ஆவியை விட்டுவிட்டார்.

அப்பிராணனுனது குளிர்ந்த பூரணச்சந்திரன் போற் பிரகாசித்து ககனத்தில் மறைந்து விட்டது அப்போதவர்மனைவி ஆ இதென்ன பிள்ளைவரத்துக்குப் போய்ப் புருஷனைப் பறிகொடுத்தாபோலாச்சு தெனப் பதைப்பதைப்புடன் மெய்மறந்து மூர்ச்சை யடைந்தாள் அப்போதந்தத் துளசிதாசனுக் குற்ற துயரத்தை ஒருவராற் சொல்லமுடியுமோ மாதாபிதாவும் மனையாளு மடைந்ததுயரம் வோரணுவும் அவ்வரிதாசனடைந்த துன்பம மகமேருவென்றேசொல்லலாம் எப்படியெனில்கரைகாணு விடர்கடலில் மூழ்கித் தந்தையின்மேல் வீழ்ந்து ஓ என் தந்தையே! இதுவென்ன விந்தையே! ஆலிங்கனஞ் செய்துக்கொண்டே உயிர்விட்டவர்களு மிவ்வுலகிலுண்டோ தேரித்தெளிந்த ஞானியா யிருந்தும் சமஸ்த தர்மங்களறிந்தும் அடியேன்மீ திவ்வளவாசையுடனிருக்கலாமா அரைக்கணத்திலு மதாவியை விடுக்கப்போமா என்பால் வருவதே தடையாயிருந்ததோ முகம் பார்த்ததே ஆயுளின்முடிவு வந்ததோ பாவியின் தரிசனமே மரணந் தந்ததோ பந்தத்தில் நானிருந்தபோதும் நிந்தை செய்யாமற் போனயே ஆக்கையை ஆரண்யத்திலும் ஆவியை என்னிடத்திலும் வைத்திருந்தாயோ ஆ பட்சத்துடன் ரட்சித்த தந்தையே என்னை யிழந்தையே இனியென்னை மகனேயென் றழைப்பவர் யார் நீதிகளைப் புகல்பவர்யார்யாரென்றேவென் றழத் தொடங்கினர். இப்படித் துளசிதாசன் பிரலாபித்த காரணம் தந்தைமீது வைத்திருந்த தயவேயாம் பட்சமுள்ள தந்தையை மறந்தவரு முண்டோ தந்தை மரித்தா லழாமைந்தரு முண்டோ ஒ சித்தர்களே! துளசிதாச னிப்படியிருக்க ஆத்மாராம் மனைவி மூர்ச்சை தெளிந்தெழுந்து கணவன்மேல் விழுந்து கல்லும் வுருகக் கரைந்தழுவதைக்கண்ட ஹரிதாச னினி நமது பிதாவுரைத்தபடி கங்கையிற் போடாவிட்டால் துக்கமிருந்து மாதாவும் மரிப்பாளென்கிற எண்ணத்தாலும் (தந்தைசொன் மிக்க மந்திரமில்லை) யென்னும் வாக்கியமறிந்தவ ராதலாலும் பிதாவைத் தோண்மேலேந்திக் கொண்டுபோய் பாகீரதியைத் துதித்துக் கங்கையில் விட்டுவிட்டார் விட்டுதன் சுபநிலை கெட்டார் கண்ணீரைப் பெருக்கினர் சகலருடைய மனதையுமுருக்கினர்.

அப்போது துளசிதாசன் தாய் பதியுடன் பாகீரதியிற் குதித்திறக்க வெண்ணங்கொண்டு மகனைக்கட்டியணைத்து பலதரம்முத்தமிட்டு ஓ என்னருமைப்பாலனே! தவத்திற்சிறந்த சிலனே! நீ முன்னமிருந்தசிங்காரத்தைக் கண்டு களித்த கண்கள் இப்போதிருக்கும் கோலத்தைத்

பார்த்துப் பொறுக்கமாட்டே னென்கிறதே அங்கமெல்
லாம் எலும்பாய் விட்டதே முகங்கருகிப் போய்விட்டதே
இப்போர்க்கொத்த உன் துபரத்தையும் பார்த்தும் உன்
தந்தைபோல் நானும் மரிக்காமற் கடினநெஞ்சத்துட
னிருக்குங் காரணமென்னமோ நீ பரதேசியா யலைந்து
திரிவதைப்பார்த்து மென்னுயிர் பிரியாதிருக்குமோ நீ
இச்சைக்கொண்ட அச்சுதனுக்காளாகக் கடவது பிர்மக்
ஞானியாகக்கடவது என்றுரைத்துக் கங்கையிற்குதித்து
மறைந்துவிட்டாள். ஓ சித்தர்களே! இத்தருணத்தந்த
தாசன் எவ்விதமாய்ப் புலம்பியழுதானோ? அதையென்னு
லுரைக்கப்போமோ? இவ்வளவு உருக்கமுள்ள சரிதையை
நீங்கள் கேட்டதுண்டோ? மகனே மகனே என்று
மாதாபிதாக்கள் மரித்தபின் ஹரிதாசன் கங்கையின் கரை
யில்வெகுநேரம் மரம்போல நின்றிருந்து ஒன்றுந் தோன்
றாதவராய் நாமுமிக் கங்கையில் விழுந்து மரிப்போமா
வென்பார், அரியைத் தேடப்போவோமாவென்பார்,சற்று
தூரப்போவார், பின்னுமவ்விடத்தில்வருவார், நமதுமாதா
நிச்சயமாயிதில் வீழ்ந்திறந்தாளாவென்பார், ஒருமொழி
யாவது பேசாமற்போனோமேயென்பார், மாதுர் துரோகி
யானோமே யென்பார், மறலி நாமேயானோமே யென்பார்
மாதா மரித்த காரணமேனென்பார், இவ்வயணம்நமக்குத்
தெரியாமற் போனதே னென்பார் என்றிவ்வித பற்பல
மொழிகள் பகர்ந்துகொண்டிருந்தார்.

ஓ சித்தர்களே! இவ்வுலகில் பிள்ளையின்மீ திவ்வளவு
பிரியம் வைத்தவர்களுமுண்டோ, இவர்களிப்படி யிறந்த
காரணமேனெனின் பரமபாகவ தோத்தமனாகிய துளசி
தாசனுக்கு இவ்வுலகிலுள்ள எல்லாப்பற்றுகள் நீங்கியும்
தந்தைதாயிருவருந் தன்முன் சமாப்தமாக வேண்டுமென்
கிற வாதனையொன்றுமாத்திரம் வேதனை செய்துக்கொண்
டிருந்த தாதலாலப்படியே பக்தவச்சலனாகிய பகவான்
முடித்துவிட்டார் ஓ சித்தர்களே! துளசிதாசன் கங்கை
யிற் குதித்திறப்போமென் றெண்ணங் கொள்ளுகிறதும்
இன்றைக்குப் பகவானைப்பார்த்து நாளைக் கிறப்போமென
வெள்ளுகிறதுமாய் வெகுநோமிருந்து பகவானைப்பார்த்தே
மரிக்க வேண்டுமெனத் திடசித்தஞ் செய்துகொண்டு
ஆ ஆ நமது தாதை நெடுநாள் தவத்தி லிருந்தபடியால்
மேலானபதவியே யடைந்திருப்பார், நமது தாயோ நம்
மால் நாளது பரியந்தம் வாட்டத்தை யடைந்திருந்தா
ளன்றி ஓர் தவஞ் செபம் செய்யவேயில்லை, தநயன்முற்
றுந் துறந்த சன்னியாசியானாலல்லவோ தாய்க்கு மோட்ச
முண்டென சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்றது, அப்
படி தன்னைமறந்த சன்னியாசி யாகாமற் போனோமே
அதிக பட்சம்வைத்திருந்த அன்னைக்கென்ன கைமாறு
செய்வோம் எனப் பற்பல விதங்களா யோசித்து முடிவில்
கங்கையை நோக்கி ஓ பவானி! நீ யறிய எனையீன்றாட்கு
இதுகால பரியந்தஞ் செய்தவமெல்லாந் தாரைவார்த்தே
னதலாலெனைப் பயந்தவளை என் தந்தையடைந்த லோகத்
திற் சேர்ப்பாயென்றுரைக்க அதற்கந்த பாகீரதி அசரீரி
யாய் நீயின்னுமிப்போர்க்கொத்த தவம் பனிரெண்டாண்டு
செய்தாலொழிய உன் தந்தையடைந்த கைவல்யத்தை
உன் தாயடையமாட்டா ளென்றறைய அவ்வாக்கியத்தைக்
கேட்ட துளசிதாசன் இதோ இன்று நாளைக்குள் பகவா
னைப்பார்த்துச் சமஸ்தநுறைகளுந் தீர்த்துக்கொள்ளுகிறே
னென் றவ்விடம் விட்டுப்பேர்ந்து தந்தைதாய் கிலேசந்
தீர்ந்து முன்போலவே பகவானைத் தேடத்தொடங்கினார்.
அப்போது அக்காசியிலுள்ள ஓர் விப்பிரர் துளசிதாசன்
மகாபத்தனென்றவரைப் பலவந்தமா யழைத்துவந்து தன்
மனையி லிருத்திக்கொண்டு ஓ அரிபக்தனே! என் வீட்டி
லொருவருமில்லை உன்னைப்போல் நானுமோர் தியாகிதான்
ஆதலாற் கருணையுடனிங்கெழுந்தருளிப் பாவானைப்
பஜனைசெய்புமையாவெனப் பணிய துளசிதாசன் சாதுக்
கள் சங்கம் நலமெனச் சம்மதித்துப் பகலெல்லாம் பல
விடங்களிற் றிரிந்தாலும் இரவிலவ் வீட்டில் வந்து தங்கு
வா ரிவரிப்படியிருக்க ராஜாபூருக்குப் போயிருந்த மமதா
தேவி காசியையடைந்து மாயன் யாமி மரித்துப்போன
தைக் கேள்விப்பட்டு மிகவும் வியாகுலப்பட்டு இவைக
ளெல்லாம் நம்மால் வந்ததேயெனத் துக்கித்து முன்தான்
நினைத்தபடியே ஓர் விசாலமான மடமொன்றேற்படுத்தி
அதிலனேக சாதுக்கள் தங்கும்படியாகச் செயததன்றி
தன் கொழுநனுக்கு மியாதொரு விஷயத்திலுங் குறைவ
ராமற் பாதுகாத்துக் கொண்டிருந்தாள், கேட்டீர்களோ
சித்தர்களேயென்று பின்னுஞ் சொல்லுவார்.

துளசிதாசர் வைராக்கிய அத்தியாயம்

முற்றிற்று.

---



ஆருவது

## துளசிதாசன் பூததரிசன அத்தியாயம்.



ஓ சித்தர்களே! துளசிதாசர் அப்பிராமணோத்தமர் வீட்டில் பனிரெண்டு வருஷகாலமா யிருந்துக்கொண்டு பகவானைப் பிரார்த்தனைசெய்யுங் காலத்தில் ஒரு நாள் நாடோறும்போல் மலோபாதைக்குப்போய் மிகுந்த ஜலத் தால் வழக்கப்படி அங்கிருக்கும் ஓர் பெருத்த கல்லின் மேல் நின்று காலலம்பும்போ தக்கல்லிலிருந்தோர் பூதம் வெளிப்பட்டுத் துளசிதாசரைக் கூப்பிட்டு ஓ பிராமணோத் தமா! உமக்கென்ன வரம் வேண்டுமோ கேளுந் தருகிறே னென்றுரைக்க பாகவதன் நீயாரென்று வினவ, வெறி ஓ வேதியரே! நானிக்கல்லிருந்த பூதமாகும் நீர் பனிரெண்டு வருஷங்களாய் எனக்குற்ற சாபம் நீங்கும்படி நான் வாச மாயிருந்த இப்பாஷாணத்தின்மேல் உமது திவ்விய சா ணங்களை அலம்பிக்கொண்டே வந்தபடியா லுமீதெனக் குக் கருணைவந்தது உமக்கழகு சுந்தரமான கன்னிகை வேண்டுமா? இராஜரீகம் வேணுமா? சப்த சமுத்திரத் துக் கப்பாற்கொண்டு போகவேண்டுமா? திரவியக் குவி யல் வேண்டுமா? மாணிக்கங்கள் வேண்டுமா? எதுவேண் டுமோ சீக்கிரஞ் சொல்லுமையாவென்று பணிய துளசி தாசர் நகைத்து நீயா எனக்கு வரமும் பொருளுந் தரு கிறவன் கற்பகத்தை நாடினவன் காஞ்சிரங் கொடியையும் காமதேனுவை இச்சித்தவன் கழுதையையும் சொர்க் கத்தை யாசித்தவன் நிரையத்தையும் விரதசீலனான பிரம சாரி வேசையையும் ஆசாரமுள்ளவன் விபசாரஞ் செய்ய வும் கற்புடைய சதியானவள் பதி வஞ்சனை செய்யவும் வாஞ்சிப்பார்களா? அதுபோல ஸ்ரீமந்நாராயணரை நாடின தான் நாய்க்குங் கீழ்மையுள்ள பேயான வுன்னை ஆசரிப் பேனா அன்றிப் பேரின்பத்தை அபேட்சித்தவன் சிற்றின் பத்தையும் அமிர்தத்தைக் கோரினவன் விஷத்தையும் பிரபுத்துவத்தை வாஞ்சித்தவன் யாசகத்தையும் கோறு வானா? அதுபோல மோட்சமார்க்கத்தை விரும்பின நான் நீ கொடுக்கிறேனெனப் பகர்ந்த அற்பபொருளுக் காசிப் பேனா? போ போ பயித்தியம் பிடித்தபேயே கடை கெட்ட நாயேயெனப் புகல பேயானது ஓ மாதவனே! என்மீது முனிவுகொள்ளவேண்டாம் உமக்கு ஸ்ரீமந் நாரா யணன் சேவைதானே வேண்டும் அவன் சேவை உனக்குக் கிடைக்கும்படியாகச் செய்கிறேனென் பின் வாவென் றழைக்க, அரிபக்தன் சிந்தினியார்த்தையைப் பத்தினியும் கற்பழிந்தவள் மாற்றத்தைக் கற்புள்ளவனும் அஞ்ஞானி யின் மொழியைச் சுஞ்ஞானியும் பொய்யன் பேச்சை மெய் யனும லோபியின் வாய்மையை தர்மியும், கோளன் நீதி யைக் குணவானும் குரோதியினுத்தியை அவிரோதியும் கேட்பானா! அல்லது நம்புவானா! அதுபோல உன் உரை யைக் கேட்கமாட்டேன் நம்பவுமாட்டேன் வீணேயென் வற்புறுத்திப் பேசுகின்றனை உன காரியத்தைப் பார்த்துக் கொண்டுபோ என்னை மறிக்கவேண்டாம் வீணான வார்த் தைகள் விரிக்கவேண்டாம் நான் அரியைத்தேடப் போக வேண்டும் வீணான பொழுதைப் போக்கிவிட்டேன் ஆயுளை வீணாக்கிவிட்டேன் துன்மார்க்கர் சேர்க்கை மிகவுங் கெட் டது சீ சீ என்னருகில் வாராதே யெனச்செப்ப அலகை யானது ஓ பிராமணோத்தமரே! சிறிய கண்ணினால் பெரிய மலையைப் பார்ப்பதும் சிறிய ஒரு அக்கினிப்பொறியினால் மலையையொத்த பஞ்சு மூட்டைகளை யெரிப்பதுபோல அற்பமான வென்னால் ஸ்ரீமந் நாராயணனைத் தரிசிப்பீர் இதிலெவ்வளவுஞ் சந்தேகமிராது நான் பலவாறுமக்குப் பகர்வதிற் பயனில்லை. இக்கணமென்பின் வருவீரேல் எங்களுக்கிறைவனாகிய வேதாளத்தினிடத்திற் கொண்டு போகிறேன் அவரா லுமக்கரிதரிசனங் கிடைக்குமென் றறைய,

துளசிதாசர் ஓ பூதமே! நீ யெனக்கு நாராயணனைக் காட்டுவது அபத்தமேயாம் பேயை நாடினவன் நாய்க்குச் சமானமாகும் நாய்க்கு வேண்டுவது பசையிலா எலும் பதைப்போல உனக்கிணையான துஷ்ட தேவதைகளைப் பூஜித்துக் கனிஷ்ட வஸ்துக்கள் பேலிஷ்டமாகும் பிரஷ் டர்களையே மாற்றப் பலியை யபேட்சிப்பாயாக என்னை மோசஞ்செய்ய நீ நேசித்தா லுன்னை விசுவாசிப்பேனோ? ஸ்ரீமந் நாராயணரைக் காட்டு முபாயமுனக்குத் தெரிந்தி ருந்தால் உனக்குற்ற பேய்த்தனத்தை தீர்த்துக்கொள்ளா

மாட்டாயா? பரமபதம் பெறமாட்டாயா? பயங்காவுருவுடனிருப்பாயா? அசுத்த விடத்தில் வாசஞ்செய்வாயா போபோவென,

பிசாசம் ஓ அந்தணரே! அவரவர்கள் செய்த தீவினையை அவரவர்களல்லவோ அனுபவித்து நீக்கவேண்டும் இராஜ வரண்மனைக்குப் போகும்வழி தெரிந்திருந்தாலும் குற்றமுள்ளவன் போகக்கூடுமா? மோட்சசாதன மறிந்திருந்தாலும் விஷயாபேட்சை யுள்ளவனதைச்சாதிக்கக்கூடுமா? சமஸ்த வுபாயங்கள் தெரிந்திருந்தாலும் திரவிய வாஞ்சை யுள்ளவன் நடுநிலைமையாய்த்தீர்க்கக்கூடுமோ? சகல நீதிகளறிந்தாலும் அநீதியுள்ளவன் சன்மார்க்கத்தில் நடக்கக்கூடுமா? வேதாந்தத்திற் சிறந்த நிபுணனானாலும் சமுசாரத்திற் சஞ்சல மற்றிருக்கக்கூடுமா கற்பின் மேன்மையை எவ்வளவு விஸ்தரித் துரைத்தாலும் விபசாரி பதிவிரதாதன்மையைக் காப்பாற்றக்கூடுமா அதுபோலவே எனக்கு ஸ்ரீமந் நாராயணனைத் தரிசிக்கும்படியான உபாயந் தெரிந்திருந்தாலும் யான் முற்பிறப்பிற் செய்த குற்றத்தால் பகவானைச்சிந்திக்கநாணமாயிருக்கின்றது உம்மாலிப்போது பரிசுத்தமாகினேன் இனி மேலான பதவிக்கே போகின்றேனென, துளசிதாசர் ஓ கிருந்திமமே! நீ முற்பிறப்பிற்செய்த குற்றமென்ன பேயான வண்ணமென்ன என்னால் நீ புனிதமான காரணமென்ன தெரியப்படுத்தென்று வினவ, குணபாகி ஓ விப்பிரனே! நானிந்த வீட்டுக் குடையவனுகிய பிராமணனுடைய மனையாளாகும் நானென் எவ்வன காலத்தில் அதிகக் காமக்குணமுடையவளாய்க் கணவனைச் சட்டை செய்யாமல் போகத்தால் கண்ணுக்கினிய புருஷர்களைப் புணர்ந்து பதிக்கும் பகவானுக்கும் பயப்படாமல் பதிவிரதைகட்குரிய நீதிக்குட்படாமல் யானவீன மாகுமென் றுணராமல் பாமரமனதைச் செபிக்காமல் அற்பமான விஷயானந்தத்தைக் கருதி, உழன்றுக் கொண்டிருந்தேனிதனுல் என் கொழுனன் அன்புடனென்னை யழைத்தருகி லிருத்திக்கொண்டு ஓ பெண்ணே! உன்னுடைய கொடிய செய்கையானது என்னை வெளியிற் போகாமலும் ஒருவனுடன் பேசாமலும்செய்ததன்றி சகலரும் கெக்கலிகொட்டி நகைக்கும் படியாயுமாய்விட்டது! எல்லாவற்றிலும்விபசாரங்கெட்டது என்மீதுனக்கு அன்பிருக்குமாயின் இனிமேலாவது நற்குண நற்செய்கை யுடையவளாய்ப் பகவானுக்குப் பயந்து நபக்து இல்லறதர்மத்தை நடாத்து இல்லையெனில் என் வீட்டைவிட்டு உனக்கிஷ்டமான விடத்திற்போயிரு ஏனெனில் காலையிலெழுந்து விபசாரியின் வதனத்தைப் பார்ப்பவனுக்கு வேசாரியின் சணம் நேரிடுமென்று பதிவிரதா பங்கமானவளிருக்குட் வீடு பாழ்தைபர் வீட்டிலு மிழிவானதென்றும், சற்பழிந்தவளுடன் கூடியிருப்பவனுக்கு கர்மம் பலிதமாதுமென்றும், விபசாரியினு லப்பரம்பரையின் விர்த்தி நாசமடையுமென்றும், பதியை வஞ்சிப்பவள் பரம்பரைக்குக் குற்ற முண்டாகுமென்று விபசாரி வேசைக்குங் கீழ்மையானவளென்றும், விபசாரியின் பால் கொலைகளவுகள் காமம் பொச்சிந்தை வெறுப்பு அருவருப்பு சஞ்சலம் வாது சூது தாரித்திரம நோய் வஞ்சனை நாணமின்மை மூதேவி முதலானவைகள் குடியிருக்குமென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன அன்றி யானமில்லா மங்கையுடனிக்கிதமாயிருந் தீனமடைவதைப் பார்க்கிலும் கானமடைந்து பகவத்தியானத்தால் ஞானியாகி மோனமாயிருப்பதே உத்தமமல்லவோ நீ இம்மனைவியை விடுத்தேதுவையாகில் நான் சகல பற்றுக்களு மற்ற நற்றுறவியோயாம் இனி மானத்துடனில்லஞ் செய்கின்றுயா ஈனத்துடன் பிறர் மனைக்கேகின்றுயாவெனக் கேட்கும் பதிக்கு வந்தனஞ்செய்து நானுரைத்ததாவது இனி யெனக்கு மதி வந்தது பதிவிரதத் தன்மையைக் காக்கின்றேனென்று சாற்ற என் மணாளன் களித்து நீ இன்றுடன் வீட்டைவிட்டென் னுக்கினையைக் கடந்து பிறர்மனைக் கேகாதே ஆடவர்முன் போகாதே நாணமின்றிப் பேசாதே என்னை யேசாதே தெருக்களிற்போய் நிற்காதே சூது வார்த்தைகள் கற்காதே எனப் பல நீதிகளுரைத்து தெய்வமும் ஜலமும் அரசனும் ஆசானும் மூன்றுபிழை பொறுப்பதுபோல் நானும் உன் துர்நடத்தை நீங்க பலதரக் கோபக்குறி காட்டினேன் ஜாடை வார்த்தைகளால் வாட்டினேன் ஒரு சாக்கிட்டுப் பல கடுஞ்சொற்களால் மாட்டினேன் இன்றைக்கு வாய்திறந் தென்னபிப்பிராயத்தை நிலைநாட்டினேன் இனிமேற் குற்றஞ்செய்வாயாயின் சற்றும்பொறுக்கமாட்டேனென்றுறுதி கூறி, என்னைப் புறம்போகாமலும் ஆடவருடன் பேசாமலும் கட்டுதிட்டஞ்செய் தன்புடன் வைத்துக்கொண்டிருக்குங் காலத்தில் நான் சிலநாள் என் மணாளன் போதித்த நீதியிலிருந்து பின்பு தவிர்ந்து என் கொழுனன் ரட்சியினிமித்தம் பிட்சைக்குப்போய் வருவதற்குள் அநேகாபலெனக் கிஷ்டமான புருஷனை யழைப்பித்து என்னிச்சையை நிறைவேற்றிக்கொண்டு என்னுயகன் வருதற்கே வெகு நன்னடத்தையும் ஒடுக்கமும் அடக்கமு முள்ளவளைப்போ லபிநயித்துப்பதிவஞ்சகஞ் செய்து

கொண்டிருக்கிற நாளில் ஒருநாள் நானுட் என் கள்ளபுருஷ னும் கூடிக்குலாவிக் கொண்டிருக்கும் வேளையில் என்காந் தன் வந்துபார்த்து மிகவும் வெகுண்டு ஓ காமப்பேயே! நீ பேயாய்ப் போகக்கடவதென் றுஜபித்து வாட்டத்துடன் காட்டை நோக்கிப்போகையில் நானதிறுரிதமாயோடி என் காதலனை மறித்து பாதங்களில் விழ்ந்து எனக்கிட்ட சாப நிவர்த்திக் கோருபாயஞ் செப்பாமல் முனிவுடன் போக லாமோ யான் செய்த தீவினையால் பாவியாய்ப் பைசாசு மானேன் நிறையத்துக்காளாய்ப்போனேன் என்று முறை யிட் டழுபோது சாந்தகுணமுள்ள என் காதலன்கோபக் தணிந்து ஐயோ கோடஞ்சண்டாள மென்கிறபாபத்தாற் சாபமிட்டேனே ஆகெட்டேனே என்றறைந்து வியாகுல மடைந்த ஓ பெண்ணே! உன்னுடைய தீமையே எனக் குக்கோபம வருப்படிசெய்தது, என் தபமெல்லாம் பாழா கப் போகச்செய்தது, அடி பேதையே! அறிவிலாக் கோதையே நீ யிக்கங்கையிற் குதித்திறந்து பேயுருவாகி நமது வீட்டிலிருக்கும் பெருங்கல்லிற் றங்கியிருந்து நல் லோர் பாதநீரில் ஸ்நானஞ்செய்து பாததரிசனத்துக்குப் பாத்திரமாய்ப் பன்னிரெண்டாண் டிருப்பாயாகின் உனக் குற்றசாப நிவர்த்தியாகுமென் றுரைத்துக் காட்டை நாடிப்போகாமல் காட்டை யடைந்து வீட்டிற்பிரவேசித்து என் சாபநிவர்த்திக் கேது செய்யக் கருத்தைக்கொண் டார்.

நானோ தலைபிற்பட்டாற் றுழ்வாரென்பதுபோலவும், கண் கெட்டபின் சூரிய நமஸ்காரஞ்செய்ய வாரம்பித்தது போலவும், என் பதியின் பதங்களையு மதியிற் பதித்துத் துதித்துக் கங்கையிற் குதித்துப் பேயுருவாகி இக்கல்லிற் பிரவேசித்து சாபநிவர்த்தியை ஆசித்திருக்க என் காவலன் இவ்வீட்டைச்சாதுக்களுக்குரிய மொதுமடமாக்கி அநேக சாதுக்களைச்சேர்த்து இக்கல்லின்மீது காலலம்பும் படி யாகச்செய்தார் மகாத்மாவாகிய நீர் ௩௦ - வருஷங்களாய் இக்கல்லிலிருந்த என்னைப்பனி ரெண்டுவருஷ மிங்கிருந்து காலலம்பிப் பாதபரிசமும் எனக்குக்கொடுத்ததால் எனக் குற்ற சாபநிவர்த்தியாய்ப் புண்ணிய லோகத்துக்குப் போகின்றேன். இவ்வளவு உபகாரஞ்செய்த உமக்கோர் சகாயஞ்செய்யாமற்போக மனம் வாராமையா லிமை வருந்தி பென்பின்வரும்படி வேண்டுகிறேன் தடையில்லாமல் வாருமையாவென் றழைக்க, துளசிதாசர் யோசிக்கின்றார் இது பூதமாயிருந்தும அநேக நீதிவாக்கி யங்களுரைத்தது நமக்கு யாதாலாவது பகவான் தரிசனம் கிடைத்தால் போதும் ஜன்மத்திலும் அவயவப்பழுதி னும் ஒருவனை யிகழலாகாது குணத்தைப்பார்த்தே நீக் ரகிக்கவேண்டுமென்றி தசரத மகாராஜனுக்குற்ற புத்திர பாக்கியம் ஓர் பூத மேற்கிக்கொண்டு வந்த பாயாசத்தினு லல்லவோ நீக்கிற்றுயென்று ஓ மண்ணையே! வேதாளத்தி னிடம் போகலாம் வாவென்றழைக்க உடனே அக்குணங்க ளரிதாசனை யழைத்துக்கொண்டு வேதாளமிருக்குமோர் காட்டிற் பிரவேசித்து வேதாளத்தை தோத்திரஞ்செய்ப அது ஓ குணபாசியே! என்னையேன் துதிக்கின்றாய் வுனக் குற்ற குறையேதென பிரேகம் ஓ ராஜபூதமே! என்னைப் பவித்திரமாக்கிய இவ்விப்பிரருக்குன் தரிசனந்தந்து ஸ்ரீமந் நாராயணனைத் தரிசிக்கும்படியான உபாயஞ்சொல்ல வேண்டுமென, அதற்கந்த சோகு என்னால் அனுமாரைக் காட்டிக் கொடுக்கும்படியான சக்தியுண்டன்றி பகவானை தரிசிக்கும்படியான உபாயஞ்சொல்ல என்னாற் கூடாது இது மாருதியாலாகும் ஆனாலும் அவ்வாஞ்சனேயர் தரி சனம் தவத்திற் சிறந்த புண்ணியவான்களுக்கே கிடைக் கும் ஆதலால் அனுமாரைச் சேவிக்கும்படியான் தபம் இவ்வேதியர் செய்திருக்கின்றாராவென சோகு ஓ இறை வனே! இவர் பனிரெண்டாண்டாய் அரிதான தவஞ்செய் துக்கொண்டிருக்கிறு ரிதுசத்தியமென கழுகு அப்படியா வென்று துளசிதாசர் முன் பிரசன்னமாய்ப்பணிந்து ஓ பூசுரரே! பெண்ணாசையாலலையும் பேயருக்கும் மண்ணா சையாலுழலு மாந்தருக்கும் பொன்னாசையாற் றிரியும் புருடருக்கும் அஞ்சனைகுமாரன் தரிசனங் கிடைக்கமாட் டா திம்மூன்றையு மகற்றினரோ வென,

துளசிதாசர் ஓ பருவே! மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை உலகாசை தேகாசை முதலானவைகளும் நீக்கி துவாதச வருஷங்களுக்கு மேலாய் விட்டது இப் பனிரெண்டாணடாய் பகவானாசையே பெரிதாய் விட்டது இது அப்பகவானுக்கே தெரியுமென, சோகு சந்தோஷத் துடன் ஓ ஸ்வாமி! இக்காசியில் அசியென்னும் வீதியில் ஓர் புராணிகர் வால்மீகாராலுண்டாக்கப்பட்ட ராமாயணத் துக் கெல்லாம் ஞானார்த்தமே செய்துக்கொண்டு வருகி றார், அவர் சொல்லும் வாக்கியங்கள் பரமானந்தைத் தருத லால் அதைச் சிரவணஞ்செய்ய அனுமார் ஓர் பிராமண ரூபமாய் வருகிறார் அவ்விடத்தில் அனுமாரைத் தரிசிக்க லாமென துளசிதாசர் நகைத்து நவ்வியாகரண பண்டித ராகியும், அறுபத்து நான்கு சித்திகளில் வல்லவராகியும் வேதாந்தத் தெளிவில் நிபுணராகியும் விளங்கா நின்ற

ஆஞ்சநேயர் ஓர் மறையோன் சொல்லும் ராமாயணத்தைக்கேட்க வருவாரா? மித்தையான வார்த்தையைச் சொல்லவந்தாய் பேயை நாடினவன் நாய்க்குச்சமானமென்கிற பழமொழியை நிலைநிறுத்தினையென்றுரைய, பூசாதிபன் வணங்கி ஓ புண்ணியவானே! எவ்விடத்திற் சாதுக்கள் கூடிப் பகவானுக்குப் பிரீதியான வசனங்களைப் பேசுகின்றார்களோ அவ்விடத்தில் ஸ்ரீமந் நாராயணரே மாறுரூபங்கொண்டு வந்திருப்பாரென்பது பொய்யா மெய்யா காரணந்தெரியாமல் கோபிப்பது நீதியா நானொருபோதும் பொய் சொல்லமாட்டேன் நீர் பகவானைத் தரிசிக்கும் பொருட்டுப் பூண்டவிரதம் உன்னுமிடத்தில் மிகவும் விந்தையா யிருக்கின்றது அகத்தியமின்று மிரண்டு மூன்று நாளிற் பகவானைத்தரிசிப்பீர்? பாதங்களைப் பரிசிப்பீர் என்றுரைத்த வாக்கியத்தைக்கேட்ட துளசிதாசர் பகவானைத் தரிசித்ததுபோலவே புளகாங்கமடைந்து மயிர்க்குச் செறிந்து ஆநந்தக்கண்ணீரைச் சொரிந்து ஓ வியந்தாயே! பல மறையோர் வருமிடத்தில் அநுமாரைக் கண்டுபிடிப்பதெப்படியென அறிவழி ஓ மாதவனே! அநுமார் நாடோறும் எல்லாப் பூசுரருக்கும் முன் வருவதும் பாராயணம் முடிந்தபின் எல்லோருக்கும் பின் போவதும் வழக்கம் அன்றி தாரகமந்திரம் பலர் கேட்கப் பலதரம் சொல்வதன்றி ஆனந்த மேலிட்டால் நடக்கும்போது தங்கித்தங்கி நடப்பார் இதுவே அவரைக்கண்டு பிடிக்கும் அடையாளமென்றுரைத்துத் துளசிதாசருக்கு வந்தனம் புரிந்து இரண்டு பேய்களும் மறைந்துவிட்டது கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னுஞ் சொல்லுவார்.

துளசிதாசன் பூததரிசன அத்தியாயம்

முற்றிற்று.

---





ஏழாவது

## துளசிதாசருக்கு அநுமார் தரிசனந்தந்த அத்தியாயம்.

---

கேளுங்கள் சித்தர்களேயென்று நாபாஜி சித்தர் சொல்லுவார் அலகைகளிரண்டும் மறைந்த பின் துளசிதாசர் மாலைபரியந்தம் மாதவனைத்தேடித் திரிந்து சூரியாஸ்தமாகும் தருணத்தில் பாராயணமாகும் வீட்டுக்கெதிரி லிருந்துக்கொண்டு அநுமார் வரவை யெதிர்பார்த்துக்கொண் டிருந்தார் அத்தருவாயில் அநுமார் யதாப்பிரகாரம் ஓர் விருத்தப்பிராமணன்போல் வேதாளஞ்சொன்ன குறிகளுடன் வர அவரைக்கண்ட துளசிதாசர் வேதாள முரைத்தது மெய்யென்று நம்பி அவ்வேதியனை வலம்வந்து பணிந்து, ஓ ஸ்வாமி! நீரெவ்வீதியிலிருக்கிறவ ரென்று வினவ, அநுமார் மாறுத்தரஞ் சொல்லாது பாராயணம் நடக்கும் வீட்டுக்குட் பிரவேசித்தார் துளசிதாசர் பாராயணமாகுமட்டுங் காத்திருந்து, எல்லாவேதியர்க்கும் பின்போகும் அந்தணரை மறித்து ஓ ஸ்வாமி! உம்மைநோக்கின் மிகவும் புண்ணிய புருஷராகத் தோன்றுகின்றது ஆதலா லும்மிருப்பிடத்துக் கடியேனும் வருகிறேனென்றுபணிய, ஆஞ்சநேயர் என்னிருப்பிடம் வெகுதூரம் அன்றி நான் தனித்திருக்கிறவன் ஒருவனுடைய சங்கஞ் செய்வதேயில்லையென, அரிதாஸ் ஓ மாதவனே! உமதிட மனுக்கிரகம் பெற்றுக்கொள்ள வாஞ்சித்தேனாதலா லென்னைக் கருணையுடனுமதாசிரமத்துக் கழைத்துக் கொண்டு போமையாவென்று வணங்க, இராமதூதன் நானேழைப் பிராமணன் எனக்கேன் வந்தனஞ்செய்கிறு யல்லாமல் எனக்கோர் மந்திரமுந் தெரியாது இப்புராணிகர் மகாக்ஞானவான் அனேகருக் குபதேசமுஞ் செய்கிறு ரவரையடுத்

தாயானுல், உன்னிஷ்டப்படி நடக்குமென் றுரைந்துபிரா மணக் கூட்டத்திற் புகுந்து மறைந்துபோனுர்.

உடனே அரிபக்தன் மறையோர் கணத்திற்புகுந்து ஒவ்வொருவராய்ப் பார்த்துக்கொண்டேவர அந்தணர்கள் என்னடா மூடனு யிருக்கின்றுய் எல்லாவரையும் மறித்து மறித்து முகத்தை யுன்னியுன்னிப் பார்த்துக்கொண்டே வருகிறுயென்று வாயில் வந்தபடி பேசத்தொடங்கினுர்கள். துளசிதாசர் அவருரைக்கும் பன்மொழிகளைக் காது கொடுத்துக் கேட்காமல் எல்லாரையும் பார்த்தும் விருத்தரைக் காணுமையால் அம்முது மறையோ னனுமாரே யாமென நிச்சயித்துக்கொண்டு மறுநாளந்தி வேளை வந்து அனுமார் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அனுமார் வழக்கப்படியே வந்து துளசிதாசரைப்பார்த்து அடா இவனின்றைக்கு மிவ்விடத்தில் லெமனைப்போலக் காத்துக்கொண்டிருக்கிறுனென்று வதனத்தைக்காட்டாமல் அப்பக்கமாகத்திருப்பிக்கொண்டு அதிதுரிதமாய்ப்புராணிகர் விட்டுக்குட் புகப்போகையில், துளசிதாசர் இதோ நம்மைப் பார்க்காமல் அதோ போகிற அந்தணரே அநுமாரென்றவருகிற் சென்று பாதங்களைப் பிடித்துக்கொண்டு ஓ ஸ்வாமி! நீர் நேற்று மோசஞ்செய்து பிராமணக்கூட்டத்திற் புகுந்து மாயமாய்ப் போய்விட்டதுபோ லின்றைக்குப்போகிறதைப் பார்க்கிறேனென் றசையாமல் நிறுத்திவிட்டார். அதற்கஞ்சனை புதல்வன் முனிவுகொண்டு அடா மூடா! பாராயணங் கேட்கப்போகும் என்னையேன் மறித்து வருத்துகிறுய் என்னடிகளை விட்டுவிடு நானுனக்குபதேசஞ்செய்ய ஏதாவதோர் மந்திரம் இப்புராணிகரிடங் கற்றுக்கொண்டு வருகிறேனென, அரிதாசர் ஓ ஸ்வாமி! நீர் யார்? எவ்விடத்திலிருக்கிறவர் உமது பெயரென்ன பகவானறிய உண்மையைச் சொல்லுமையா வென்று வருந்திக்கேட்க, அனுமார் இதென்ன வல்லடி வழக்கா யிருக்கின்றது: நான் யாரானுலுனக்கென்ன உனக்கெனக்கு மேதாவதோர் சம்பந்த மிருந்தாலல்லவோ இப்படி கேட்கவேண்டும் நடுக்கொள்ளைக்காரன்போ லிரண்டுநாளா இவ்விடத்திலிருந்துக்கொண்டு தொந்திரவு செய்கிறுய். சீ போவென்று கடினவார்த்தைகளாட பாகவதன் உம்முடைய எதார்த்தத்தை நானறிந்துக் கொள்ளுகிற பரியந்தம் விடமாட்டேனென்று பலாத்காரஞ்செய்ய,

அனுமார் கோபித்துக் கால்களைத்திமிறிப் பிடுங்கிக் கொண்டு, மிகவும் பதைத்துத் தூரமாகக்குதித்து மனஞ்சொதித்து நான் புராணங்கேட்கப் போவதைத் தடுக்கிறுயா? சலத்தைத் தொடுக்கிறுயா? என் விரதத்தைக் கெடுக்கிறுயா? துன்பத்தைக் கொடுக்கிறுயா? பலவந்தமாயடுக்கிறுயா? இனி இப்படி செய்வையாயின் வாயில் வந்தபடி திட்டிவிடுவேன் பற்களைத் தட்டிவிடுவேன் தலைமேற் குட்டிவிடுவேன் துண்டாக வெட்டிவிடுவேன் என்றுரைத்துப்புராணிகர் விட்டுக்குட்போய்விட்டார் துளசிதாசர் இவர் அனுமாரே யாமென நிச்சயித்துக்கொண்டு பாராயணங் கேட்டுவரும்போது தொடர்ந்து உண்மையறிந்துக் கொள்ளலாமென் றுஞ்சவேயர் வரவைப் பார்த்துக்கொண்டிருக்க, மாருதி புராணபாராயணம் முடிந்ததும் மறையோரெல்லாம் போனபின்பும் வெகுநேரமிருந்து துளசிதாச னிருக்கின்றுனே இல்லையோவென் றெட்டிப் பார்த்தார். பரம பாகவதன் வாரும் ஸ்வாமி நான் வெகு நேரமாயுமது வரவுக்கெதிர் நோக்குற்றிருக்கிறேனென்று புராணிகர் வீட்டுக்குட் புகுந்தார். அனுமார் ஓ ஓ இவன் சூதறிந்த கள்ளனு யிருக்கின்றுன் இவ்விடத்தி லென்ன விபரீதஞ் செய்வானோவென வெளிப்பட்டு மாயமாய் மறைந்தார். துளசிதாசர் பல பக்கங்களிற் றேடிப்பார்த்துக் காணுக்குறையால் நல்லதாகட்டும் நாளைக்கு ஓர் மார்க்கமேற்படுத்திக் கொள்ளுகிறேனென்றுரைந்து தன்னிருப்பிடஞ்சேர்ந்து மறுநாளையிலங்கு வந்திருந்தார். அனுமார் நேர்வழியிற் சென்றுல் துளசிதாசர் வம்புசெய்வாரென்று மாயமாய்ப் புராணிகர் வீட்டிற்பிரவேசித்து ராமாயணத்தை அன்புடன் கேட்டுக் கொண்டிருந்தார். அரிபக்தன் வெகு நேரங்காத்திருந்தும் விருத்தப்பிராமணர் வரக்காணுமையால் வியாகுலத்துடன் புராணிகர் வீட்டிலெட்டிப் பார்த்து முதுமறையோரிருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு அவாருகிற்சென்று ஸ்வாமியெனப் புகன்று வந்தனஞ்செய்து, ஓ ஸ்வாமி! நேற்றெந்த வழியாய்ப் போனீரின் றெவ்வழியாக வந்தீர் கருணையுடன் சொல்லுமையா வெனப்பணிய,

அதற்கனுமார் அடடா இவனுள்ளேயும் வந்து விட்டானேயென்று உடல் நெளிந்து முகஞ்சுளித்துக் கண் வெறித்து மனங்கொதித்து மிகப்பதைத்துத் தலையையசைத்து முழங்கையாலிடித்து துளசிதாசருக்கு முதுகைக்காட்டித் துளசிதாசரைப் பார்க்காமலும் மாறுத்தாஞ் சொல்லாமலும் கண்களை மூடிக்கொண்டு ஸ்ரீராம காதையைச் சிரவணஞ் செய்துக்கொண்டிருந்தார். பாகவதன் அனுமார் காதருகிற் றலையைச்சாய்த்து ஓ ஸ்வாமி!

அடியேன்மீ திவ்வளவு வெறுப்பேன் அருவருப்பேன் சற்றே கண்களைத்திறந்து முனிவைத்துறந்து சொல்லலாகாதோவென மாருதி சிரவணத்துக்கு விரோதம் வருகிறதெனக் குரோதங்கொண்டு மௌனமாகவே யிருந்தார் துளசிதாசர் முன்போலவே பலதரங்கேட்டார். அனுமார் அடடா முட்டாளே, பக்தியுடன் ராமாயணத்தைக் கேட்கும்போது முணமுணென் றென்னென்னமோ உளறிக்கொண்டிருக்கின்றாய் எட்டப்போயுட்காரும் பிள்ளாயென்றார் துளசிதாசர் எளியே னெட்டப்போனால் நீர் பொட்டெனப் போய்விடுவீர். உம்மை விட்டுப் பிரியாமல் கிட்டவே யிருப்பேனென் றுரைத்தார் ஆஞ்சனேயர் இதென்னடா சள்ளையாயிருக்கின்றது கொள்ளப்போன விடத்திற் பிள்ளையைப் பறிகொடுத்தாற்போல இக்கள்ளனிட மகப்பட்டுக்கொண்டு வெள்ளறிவனு னேமெனச் சள்ளென்று விழுந்து கீழே தள்ளியெழுந்து வேறிடத்திற் போயிருந்தார். அரிதாசர் தாயைப்போல் கூடவேதொடர்ந்து அவரருகில் வீற்றிருந்து ஏழையின்மீ திவ்வளவு கோபமேனையாவென்று முன்போலவே எந்தவழியாக வந்தீரெனக் கேட்கத் தொடங்கினர். இராகவதூதன் அடா இதென்ன கோரமாயிருக்கின்றது நானெந்த வழியாவது வருகிறேன் எம்மார்க்கமாயாவது போகிறேன் இதைக் குறித்து நீ யாரடா கேட்கிறவன் சிரவணத்தை மீட்கிறவன் எட்டிக்கிளையான மட்டிப்பயலே யென்றறைந்து ராமாயணங்கேட்பதில் சித்தத்தை வைத்திருந்தார்.

அரிதாசர் ஓ ஸ்வாமி! இன்றைக்காவது கருணைகூர்ந்து ஆட்கொள்ளும் நேற்றைப்போல் காற்றாய் மறைந்து போகவேண்டாமெனப் பலதரங் கெஞ்சத்தொடங்கினர். அனுமார் என்னடா மூழமூடனா யிருக்கின்றாய் மஞ்சிபர்பால் கொஞ்சுவதுபோற் கெஞ்சுகிறாய் அன்புடன் கேட்டு இன்பமடையும் வேளையில் தென்புடையவனாய்த் துன்பங் கொடுத்துக் கொண்டிருக்கிறாய் எலும்புகள் முறிய முன்போதுரைத்துப் பின்பாவது கேட்கட்டுமாவென்றெழுந்து வேறிடத்திலுட்கார்ந்தார் அரிதாசர் கூடவே தொடர்ந்து அவரருகிலுட்கார்ந்து ஓ ஸ்வாமி கிஷ்காமிமுனிவுகொள்ளவேண்டாம் நீர் அனுமாரென்பதிற்சந்தேகமேயில்லை அடியேன் பனிரெண்டாண்டாகப் பகவானைக் காணும்பொருட்டவாக் கொண்டிருக்கிறேனாதலால் அப்பரம்பரனுடைய தரிசனமெனக்குக் கிடைக்கும்படியாகக் கருணைகூறல் வேண்டுமென மிகவும் பிரார்த்தித்தார். அனுமார் அடடா இதென்ன கர்மமாயிருக்கின்றது இவனுக்கெத்தனை விதங்களாயுரைத்தபோதிலும் கேட்காமல் சளசள வளவள வென்றோயாம லென்னென்னமோ பிதற்றிக்கொண்டிருக்கிறான் ராம ராம இதற்கானென்ன செய்யப்பட்டுமென வாட்டமுற்றார். அரிபக்தன் ஓ சுவாமி! இப்போது தாங்கள் துதித்ததெந்த பகவானுடைய வரையோ அவரையே யான் காணும்பொருட்டதிக அவாக்கொண்டிருக்கிறே னவருடைய தரிசனமெனக்குக் கிடைக்கும்படியாய்ச் செய்வீரே யும்மை என்னுயிர் பரியந்தம் மறக்கவேமாட்டேனெனச் சத்தியஞ்செய்தார் அதற்காஞ்சனேயர் அடப்பா உனக்கு வந்தனமாவது செய்கிறேன் சற்று நேரம் பேசாமலிரு பாராயணமுடிந்தபின் கூசாமற் பல வார்த்தைகள் பேசலாமென்றார் துளசிதாசர் வந்தனஞ்செய்து ஓ மகானுபாவா சத்தியசாவா நீரே இராமாயணத்துக் காதிகாரணரா யிருந்தும் ஒருவர் சொல்லக்கேட்கவும் வேண்டுமோ வென அவ்வாக்கியத்தைக் கேட்ட வாயுகுமாரன் பிரமித்து ஓ ஓ இவன் நமது மர்மமெல்லா மறிந்த பிரமதேவனைப்போல் பேசுகின்றான் ஒருவேளை இச்சபையிலுள்ளோர்க்கு நாமனுமானெனத் தெரிந்தா லிவனைப் போலவே நமக்கு வேஷ்டை யுண்டாக்குவார்களிவனுக்கெவ்வித உபாயத்தாற் றப்பித்துக்கொள்ளலாமென்கிற யோசனைகளோடு கூடியிருந்து மறுமொழி யுரைக்காமல் புராணம் முடிந்தபின் பிராமணக் கூட்டத்திற் புகுந்து மாயமாக மறைந்தருளினர்.

உடனே அரிதாச வந்தனர் கணத்திற் புகுந்தோடி வாயிலின்மத்தியில் நின்றுக்கொண்டு ஒவ்வொருவருடைய வதனத்தை யுன்னிப்பார்த்து நீரல்ல நீரல்லவென்றுரைக்கும்போது ஆதிவருணர் முனிவுகொண்டு தூஷண வார்த்தைகள் விண்டு இவனென்ன சுங்கக்காரனைப்போல்தடுத்து எல்லாரையும் சோதனைசெய்து விட்டுக்கொண்டிருக்கிறான் இவன் கன்னத்தி லறைந்து மென்னியைப் பிடித்துத் தள்ளிவிடுங்கள் நகங்களாற் கிள்ளிவிடுங்கள். ஆளுக்கொருதை கொடுங்கள். பஸ்பமாய்ப்போக சாபமிடுங்கள் நெருக்கிக் கட்டிக்கொண்டுபோய் சூலத்தில் நடுங்கள் என்றுரைக்கும் மொழிகளை அரிபக்தன் செவிகொடுத்து கேட்காமல் அனுமாரைக் காணவேண்டுமென்னுமவாவால் தீரமுள்ள வீரனைப் ஒருவரையன்றி இருவரைவிடாமல் அனுமாரை நாடிக்காணாமல் வாடி விரைவாயோடி பல பக்கங்களிற்றேடி எல்லாருடைய கண்களை மூடி எத்திசை போனாரோடி எனப்பல வார்த்தைகளாடித் தன்னிருப்பிடம் வந்து மிகவும் நொந்து துக்காக்கினியால் வெந்து நாளைக்குக் கட்டிப் பிடிக்கிறேனென்று வந்து மறு

நாளந்திவேளையிற் போய் காத்துக்கொண்டிருந்தார். அப்போதனுமார் எப்போதும் போல் புராணிகர் வீட்டுக்குள் வந்து ராமாயணத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார். துளசிதாச ரோர்புறத்தில் வெகுநேரங் காத்துக்கொண்டிருந்து பின்பு பாராயண சபையிற் புகுந்து விருத்த விப்பிரரைப் பார்த்துக் கரங்களைச்சேர்த்து ஓ மாயா விநோதனே! உம்மைக் கண்டுபிடிக்க என்னாலாகுமோ உம்மாலன்றிப் பிறரால் என்றுபர் போதுமோ கருணை கூர்ந்து இன்றையதினமாவது ஸ்ரீராமருடைய தரிசனம் அடியேன் பெறும்படியாகச் செய்யவேண்டுமென் கர்த்தனே யென்றவன் தாள்களில் வீழ்ந்து ஆட்கொளல் வேண்டுமெனத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர்.

மாருதி அடா மட்டிப் பிராமணா! கொடாக் கண்டனை விடாக்கண்டகன் பிடித்தாற்போல என்பின் தொடர்ந்தாய் ஸ்ரீராமர் வைகுந்தத்தி லிருக்கின்றார் நீ யவர்மீததிக பக்தியுடையவனா யிருப்பது மெய்யானால் வைகுந்தத்திற் போய்ப் பார்த்துவா இவ்விடத்தில் ஸ்ரீராம ரெங்கிருக்கின்றார். உனக்குச் சயித்தியம் மேலிட்டுப் பயித்தியம் பிடித்திருக்கின்றது இது தீர வயித்தியரிடத்திற்போ என்னருகில் வரவேண்டாம். ஒரு வார்த்தையும் பேசவேண்டாம், எதிரிலும் நிற்கவேண்டாம் போ போவென்றுரைக்க துளசிதாசர் ஓ என் சற்குரு நாதனே! மெய்ஞ்ஞான போதனே! உமது கருணையினால் வைகுந்தத்திற்குப்போய் ஸ்ரீமகா விஷ்ணுவையும் பார்த்து வருவேன், இதுவோர் பெரிய காரியமா வைகுந்தம் கைலாயம் நிஷத்திரி இமயகிரி முதலானதுகளைத் தாண்டிப்போய்ப் பூமியிலாயிர மியோசனை தூரம் பதிந்தும் விண்ணில் ஆயிர மியோசனை தூர முயர்ந்தும் மிகவும் விசாலமும் பொருந்தியுமிருக்கும் சஞ்சீவி பர்வதத்தை ஓர் கரத்தில் தாங்கிக்கொண்டு ஓர் கணத்தில் வந்து இராமலட்சுமணாதியரைக் காத்த வீராதிவீரன் நீயல்லவா? இப்போர்க்கொத்த அதிசூரனாகிய உம்மை யடைக்கலம் புகுந்த எனக்கோர் குறையு முள்ளதோ வென்று தும்தும் மெனக்குதித்துக் கூத்தாடினர், பல சங்கீர்த்தனங்களைப் பாடினர், அப்போதஞ்சனை குமாரன் அடடா வென் முன்னிக் குதிக்கிறாய் வேண்டாம் வேண்டாம் நீ கற்ற சஷ்ட கல்வியையும் புஷ்டிபலத்தையும் துஷ்ட குணத்தையும் பிரஷ்டத் தனத்தையும் என்னிடந்தானா காட்டவந்தாய் ஜம்பத்தை விட்டவன்றாய் போதும் போதும் இனி இவ்விடத்திலிருந்தெழுந்து சட்டமாய் வெளியிற்போய் உன்னைப் போன்றவர்களி—முன் சிரேஷ்டத்தைக் காட்டென்று கடுகடுத்துரைக்க துளசிதாசர் ஓ மாதவனே! இனி உம்மை விட்டேனுயிருடன் பிரிவேனோ நீர் மிகவும் பூததயாள முடையவராயிருந்தும் வெகு நாளாயலைந்து திரியும் என்னை வெறுக்கலாமா? அருளானமனதைச் சுருக்கலாமா? அடத்தைப் பெருக்கலாமா? எளியேன் செய்த அபசாரத்தை உபசாரமாகக்கொண்டு எவ்விதமேனு மின்று பகவானைக் காண்பித் தருளல்வேண்டு மென்னையனே! அழிவிலா மெய்யனே! மிகவுந் துய்யனே! அஞ்சனாதேவி புத்திரனே! நல்லோர் மேலதிக மித்திரனே! வலிமையில் வீரபத்திரனே! சகல சங்கைகளை நீக்கு முத்தமனே எனப்பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினர், அதற் கிராகவதூதன் ஏதேது பக்தி மிஞ்சிப் போய் விட்டது யாருரைக்கினுந் தடைபடாதுபோ லிருக்கிறதே இருக்க விருக்க விண்ணான வார்த்தைகள் புறம்படுகின்றதே இத்தமட்டும் வஞ்சியைப்போற் கொஞ்சிக் கொஞ்சிக் கெஞ்சினது போதும் போதுமெனப் புகன்று புராணிகர் சமீபத்தில் வெகு நெருக்கமான விடத்திற்போய் வீற்றிருந்தார்.

அரிபக்தன் ஓ ஓ இவர் நேற்றைப் போலவே மோசஞ் செய்து காற்றாய்ப் பறந்தோடிப்போக யோசித்திருக்கிறாப்போற் றோன்றுகின்றதென்று கூடவேசென்று அவரருகில் நின்று அன்பாய் மொழிகளைப் புகன்று நம்பிக்கையில்லாக் காரணத்தால் தன் தங்கவஸ்திரத்தா லவரிடது கையைக் கட்டத்தொடங்கினர். அதற்கனுமார் ஓ ஓ மோசம் வந்தது, இதென்ன நாராயணனைப் பாராயணஞ் செய்யுங்காலத்தில் திருடனைக் கட்டுவதுபோ லென்னை யிம்மூடன் கட்டவந்தான் யாருக்கு மிவ்வளவு துணிவிருக்கலாகாது நானிஷ்டமாய்க் கேட்பதை நஷ்டப்படுத்த வந்த கனிஷ்டனே இதுபரியந்தம் முஷ்டியாற் சாகாமற் றப்பியிருப்பதுன் நல்லதிஷ்டமே இனியாகிலுமென் கிட்டவாமல் எட்டப்போடாவெனப் படபடெனத் தலைமேற் குட்டி வாயில் வந்தபடி திட்டி மென்னியைப் பிடித்து கெட்டி கீழே விழும்படி எட்டி யுதைத்தார். அரிதாசர் பக்கத்திலிருந்த வேதியர்மேல் விழுந்து உடனேயெழுந்து உடல் பூரித்து மயிர்க்குச்செறிந்து அஞ்சலியஸ்தனாய் நின்றுக்கொண்டு ஆ ஆ இனி கிருதார்த்தனானேனென் றெழுந்தெழுந்து கூத்தாடி விஷ்ணு சங்கீர்த்தனங்களைப் பாடி, அங்கு மிங்குமாயோடி, அனுமாரைக் கொண்டாடி, இனி யும்மைவிட மாட்டேனென நாடிப்பின்னுமவர் கரத்தைச் சிரத்தையுடன் கட்டத் தொடங்கினர். அப்போதரு

குற்ற தொழுகுலத்தோர் துளசிதாசரை நோக்கி என்னடா விருத்தப் பிராமணனோடு போராடுகிறாய், வாயில் வந்தபடி பாடுகிறாய், அங்கு மிங்குமா யோடுகிறாய், வேசியைப்போற் கூத்தாடுகிறாய், சீ நாயே பேயே நாளையோடு இச்சபைக்குள் வாவேண்டா மென்றதட்டத் தொடங்கினார்கள். அதற்குத் துளசிதாசர் மாறுத்தரஞ் சொல்லாமல் அனுமார் கையைத் தன் வஸ்திரத்தாலிறுக்கிக் கட்டிக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு ஓ ஸ்வாமி! நீரினி யோடிப் போவதைப் பார்க்கிறேனெனச் சந்தோஷமே லீட்டாற் சிரித்தார், ஆஞ்சனேயர் ஓ ஓ இவன் சூதறிந்த கள்ளனா யிருக்கின்றான் நம்முடைய சூதை யாரோ இவனுக்குரைத்தது போற் காண்கிற தினி நம்மை யிவன் விடப்போற தில்லை சகாதேவனிடமு மரவானிடமு மகப்பட்டுக்கொண்ட ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப்போல நாமிவனிட மகப்பட்டுக்கொண்டோமினிச் சாந்தமாகவேயிருந்து தப்பித்துக் கொள்ளவேண்டு மென்றுன்னித் துளசிதாசரை நோக்கி ஓ பிராமணோத்தமா! பாராயண காலத்திற் பேசினாற் றோஷம்வரும் சீதாராமென்று தியானஞ் செய்துக்கொண்டு சந்தடி செய்யாமலிரு புராணம் முடியும் பரியந்தப்பொறு பகவத் பாராயணமே சகல பாக்ய முந்தரும் கற்பகத்தரு சகலருக்கும் ஸ்ரீமந் நாராயணரே பரமகுருவென் றுரைத்துச் சிரவணத்தில் சித்தத்தைப் பக்தியுடன் வைத்திருந்தார்.

அதிதாஸர் ஓ ஸ்வாமி! ஸ்ரீமந் நாராயணரை நீர் போகும்போது எனக்குத் தரிசனந் தரும்படியாகச்செய்கிறீரா வென வணங்க வாயுகுமாரன் இப்போதொன்றும் பேசாதே எல்லாப் புராண முடிந்தபின் பார்த்துக்கொள்ளலாமெனப் பரமபாகவதன் போகும்போது பார்த்துக் கொள்வோ மென்பது சந்தேக வார்த்தையல்லவா நிச்சயமாய்ப் புராண முடிந்தபின் ஸ்ரீ பரமாத்மாவைக் காட்டுகிறேனெனச் சத்தியஞ் செய்தாலொழிய எனக்குத் திருப்தியாகாது ஆதலால் ஸ்ரீமந் நாராயணர்மே லாணையிடுமையாமெனப் பலாத்காரஞ்செய்ய அதற் கிராகவதூதன் இது நல்ல அகட விகட சாமார்த்தியந்தான் கூடியமட்டு மிவன் கெட்டிக்காரன் தான் இருக்க விருக்க ஆயாசத்தையே கொடுத்துக்கொண்டு வருகின்றானினி யிவனிடம் பேசாமலிருப்பதே உத்தம மென்றோர் மொழியுமாடாமலிருந்தார் துளசிதாசன் ஓசீதாபிராட்டியின் சோகநாசனே! இப்படிப்பேசாமற் பாசாங்கு செய்ததானே என்னை மோசஞ்செய்துக் கொண்டே வந்தீர் உம்முடைய வேஷத்தை நானறிந்துக்கொண்டே னினி துவேஷமில்லாமல் ருஷிகேசனைக் காண்பித்தே நீர் போகவேண்டுமென்று மற்றொரு கரத்தைக் கட்டத்தொடங்கினார். ஆஞ்சனேயர் அதி கோபத்துடன் துளசிதாசர் முகத்திற் காறியுமிழ்ந்து அடா எமகாதகா, பஞ்சமா பாதகா, உன்னைப்போற் சீயுஞ் சுரணையு மில்லா மட்டிச்சென்மத்தை நான் பார்த்ததே யில்லையென வைது அந்தணர்களை நோக்கி ஓ ராமாயணத்தை யத்தியந்த பக்தியுடன் கேட்கும் பூசுரரே! இந்த மூடன் இரண்டு மூன்று நாளா இவ்விடத்திற் பலாத்காரமாக வந்து என்னை ராமாயணத்தைக்கேட்க விடாமற் றொந்திரவு செய்கிறானிவனை யாருந் தண்டிக்கிறவர்களில்லையா? கண்டிக்கிறவர்களில்லையா? இவனுக் கென்னையன்றி யாருமகப்பட வில்லையா? நான் செய்துக்கொண்ட தொல்லையா வெனக் கூக்குரலிடத் தொடங்கினார்.

அப்போதருகிலிருந்த மறையோர் துளசிதாசரைப் பார்த்து கரத்தைப்பிடித் திழுத்து நீ இரண்டு மூன்று நாளாக விருத்த மறையோனை அலங்கோலஞ் செய்வதன்றிச் சிரவணத்தைப் பங்கப்படுத்திக் கொண்டு வருகின்றாய் உன்னை இவ்விடத்தில் மரியாதையுடனழைத்துக்கொண்டு வந்தவனையும் உன்னையும் இப்போதேவெளியிற் றள்ளி விடுகிறோமெனப் புகல, அப்போது புராணிகர் ஆம் ஆம் இந்தப் பிராமணன் வெகு இடக்கனாகவேயிருக்கின்றா னாதலா லிவனுடைய கெர்வத்தை நீங்களனைவோருங் கூடி யடக்கி வெளியிற் றள்ளிவிடுவதே நன்மையென் றறைபச் சபையிலுள்ள யாவரும் என்ன சந்தடி யென்று இருவரையும் வெளியிற்றள்ள ஆரம்பித்தார்கள் அப்போ தனுமார் ஓ பிராமணோத்தமர்களே! விருத்தாப்பியமுள்ள என்னை இந்தத் துஷ்டனிடத்திற் காட்டிக் கொடுப்ப துங்களுக் கழகோவென் றப்மறையோர் கூட்டத்தில் நுழைந்து அங்கு மிங்கு மோடத்தொடங்கினார். துளசிதாசர் ஆஞ்சனேயர் கைகளிற் கட்டியிருக்கும் வஸ்திரத்தை விடாம லுறுதியாய்ப் பிடித்துக்கொண்டு கூடவே வோடத்தொடங்கினார். அனுமார் துளசிதாசரைச் சோதிக்க வேண்டி அதிக வேகத்துடன் அந்தணர்களைக் கீழே தள்ளிக் கொண்டே பல பக்கங்களி லோடும்போது துளசிதாசருக்கு வீட்டின் சுவரும் ஸ்தம்பங்களும் பூசுரர் மஸ்தங்களு மிடிபட்டு உதரத்திலும் சிரத்திலு மிரத்தம் புறப்பட்டுத் தட்டு கெட்டுத தடுமாறிக் கொண்டே வஸ்திரத்தை விடாமல் கூடவே தொடர்ந்தார். அனுமார் புராணிகர் வீட்டில் வோவென்னுங் கூக்குரலுண்டாக்கி வெளிப்பட்டு வாயுவேகத்தைப் பார்க்கிலு மதிவேக

மாயோடும்போது அரிதாசரவருடன் வோடுவதற்குக் கூடாமல் வஸ்திரத்தை விடாமல் கீழே வீழ்ந்து தரையில்தேகமெல்லா முராய்ந்து தேய்ந்து வோய்ந்து சாய்ந்து ஸ்மரணைகெட்டு ஒரு பக்கத்தில் மூர்ச்சையாய் வீழ்ந்து விட்டார். உடனே மாருதி மாயமாய் மறைந்து துளசிதாசரடைந்த ஆயாசத்துக் கபர்ந்து, வைராக்கியத்தைக்குறித்து வியந்து இனி தரிசனந்தரல் வேண்டுமென நயந்து ஒரு பக்கத்தில் நின்றிருந்தார். பின்பு துளசிதாசர் நெடுநேரம் மூர்ச்சை யடைந்திருந்து அனுமாரைக்காண வேண்டுமென்னு மவாந்தெளிந்து ஆஞ்சநேயரைக் காணாமல் நொந்து சோகம் மிகுந்து இனி இத்தேகத்தை வைத்திருப்பதிலும் மரண மாவதே உத்தமமெனத் துணிந்து, தரையிற்றலையை மோதிக்கொள்ளப்போனர். உடனே கருணாநிதியாகிய மாருதி தனதிரு அஸ்தங்களால் துளசிதாசருடைய மஸ்தகத்தைத் தாங்கிக்கொண்டு அப்பா ஒப்பிலாபக்தனே! என்னைக் காணும்படியான யுக்தனே! எனக்குள்ள வழக்கமான முரட்டுத்தனத்தைக் காண்பித்துனக் கதிக துக்கத்தைக் கொடுத்தேன் இதைக்குறித்தென்மேல் முனிவுகொள்ளாமல் க்ஷமிப்பாயென்றன்பான உரையாடினர்.

அப்போது துளசிதாசருக்குற்ற ஆயாசங்களெல்லாம் நீங்கி ஆனந்தமோங்கித் திக்கென்றெழுந்து சேவடியில் விழுந்து ஓ மாதவனே! கொடியேனாகிய வடியேனுக் கும்முடைய தரிசனந் தந்தீரோ? ஆட்கொள்ளவு முவந்தீரோ? ஆ ஆ உம்மையின்று தரிசனஞ்செய்ய என்னபாக்கியஞ் செய்தேனோ? எத்தவஞ் செய்தேனோ? எவ்வளவுயோக்கியனானேன் எவ்வளவுசிலாக்கியனானேன் என்கிற பற்பலவுரைகள் பகரும்போது அனுமாரதிக சந்தோஷ சித்தராய்த் துளசிதாசரை மார்புடனணைத்துக்கொண்டு, ஐயா துளசிதாசனே! முகவிலாசனே! என்னாலாகவேண்டிய காரியமென்னவோ தெரியச்சொல்லுமென அரிதாசர் ஓ என்னாண்டவனே! ஸ்ரீராமருடைய தரிசனமே யெனக்கு வேண்டியதென, அஞ்சனைதனயன் நீர் நெடுநாளாகத் தவஞ்செய்தும் பிரசன்னமாகாப் பகவான் நான் சொல்லுவதாற் றரிசனந் தருவாராவெனப் பரமபாகவதன் பகவான் தரிசனம் பார்க்காப் பாவியேனுடைய ஆவிபிருந்ததாற் பிரயோசனமேதென வாயு குமாரன் பகவானனேக வவதாரங்களெடுத்தும் அநுபமா யிருக்கிறவ ராயிற்றே, நிரூபமாயிருக்கிற பரமாத்மாவை எப்படி தரிசிக்கக்கூடுமென அரிபக்தர் பகவான் பக்தன் நினைத்த வண்ணமான ரூபத்துடன் தரிசனந் தருபவராதலால் தேவரீருபதேசித்த ஸ்ரீராமர் சீதா சமேதனாய்க் கருடவாகனா ரூடனாய்ப் பரத சத்துருக்கருடன் வந்து காட்சி கொடுத்தாலொழிய என்றாட்சி நீங்காதென அனுமார் திரேதாயுகத்திலெடுத்த அவதாரத்தை இக்கலியுகத்திலெப்படி காணக்கூடுமென அரிதாசர் பிரகலாதனனுக்காய் நரசிங்கரூபமுடன் ஓர் தூணிலிருந்து வெளிப்பட்ட பகவான் ஸ்ரீராமவதாரத்துடன் வருவது துர்லபமோ? அன்றி, மச்ச - கச்ச வராக - வாமனமாகவும், மோகினியாகவும், மூலபல நாசத்துக்காக அனேக ராமராகவும், நாரதரைப் பங்கஞ் செய்ய பல கிருஷ்ணராகவும், இன்னமனேக வடிவங்களாகவும் அவதாரஞ்செய்த மாயாவிலாசன் அடியேன் கோரிய ரூபத்துடன் வருவதற்கோர் தடையுண்டோ? சீக்கிரம் பகவானை வரவழையுமையாவென அனுமார் நினைத்த மாத்திரத்தில் கபட நாடகனாகிய பகவான் பிரசன்னமாக லேசானவரோ வெனத் துளசிதாசர் இக்கணம் அந்தப் பராத்பரனுடைய தரிசனங் கிடைக்காவிடின் என்னுயிர் தரியாது. உமக்கிது தெரியாதோ வென ஆஞ்சனேயர் துளசிதாசருடைய தீவிரத்துக்கு மெச்சி ஓ புண்ணியவானே! நாளையத்தினம் நீரிருக்கும் தெருவில் பகவானை வரும்படியாகச் செய்கிறேன். ஸ்ரீராமரைத் தரிசனஞ்செய்து ஆனந்தமடையலா மென்றறைந்து மறைந்து தன்னிருப்பிடஞ் சேர்ந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

அனுமார் தரிசன அத்தியாயம்

முற்றிற்று.



எட்டாவது

## துளசிதாசருக்கு ஸ்ரீராமர் தரிசன

## அத்தியாயம்.

கேளுங்கள் சித்தர்களே! பிர்ம பட்டத்துக்கெதிர் நோக்கிக் கொண்டிருக்கும் ஆஞ்சனேயர் மறைந்தபின் துளசிதாசர் ஆனந்தவாரியில் மூழ்கினவராய்த் தன்னிருப்பிடஞ்சேர்ந்து எப்போது சூரியோதயமாகும் பகவானெப்போது பிரசன்னமாவார் யாருக்கிணையென மதிப்பேன் பகவானைப்பார்க்க முற்பிறப்பி லென்னதவஞ் செய்தேன் எப்புண்ணியஞ் செய்தேன் உண்மையாய் நமக்குப் பராத்பரனுடைய தரிசனங்கிடைக்குமாகருணையுடன் கடவுள் நம்முன் பிரசன்னமாவாரா நாட்டைவிட்டுக் காட்டிற்சென்று தரிபோலனேக வருஷம் தபஞ்செய்யும் தபோதனர்களுக்குந் தரிசனந்தராப் பகவான் யாதொரு நற்கிரியையுஞ் செய்யாக் கொடியோனுகிய வடியேன் முன் வருவாரா ஆண்டவனைக் காணும்படியாகச்செய்யும் ஆஞ்சனேயர்க் கென்ன கைம்மாறு செய்வேன். அனுமாரை யறிவித்த பூதத்துக்கென்ன வுபகாரஞ்செய்யப் போகிறேன் அனுமாருரைத்துப்போன வாக்கியம் மெய்யாக விருக்குமா? மிகவும் உத்தமராகிய ஆஞ்சனேயர் பொய்சொல்வாரா பிரமருத்திராதியருங் காணுதற்கரிய ஸ்ரீமந் நாராயணர் அனுமாருரைக்குடன்படுவாரா என்கிற ப்பல வார்த்தைகளாடிக்கொண்டே இரவெல்லாம் நித்திரை செய்யாமல் தெருவில் வந்து பார்த்தும் வீட்டினுட் புகுவதுமாயிருந்தார்.

இவரிப்படியிருக்கச் சூரியோதய மானவுடன் அனுமார் வைகுந்தத்திற் செழுந்தருளி விரஜா நதியில் ஸ்நானஞ்செய்து ஜபதபங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீமந் நாராயணருடைய பக்கலடைந்துவலம்வந்துபணிந்து திவ்விய பாதாம்புயங்களிற் றனதிருநயனங்களை யணிந்து ஓ ஸ்வாமி! உமக்கத்யந்த பக்தராகிய வால்மீகாவதாரமான துளசிதாசர் கோரிய ஸ்ரீராமாவதாரத்துடன் இன்றைய தினம் பிரசன்னமாயவரை ரட்சிக்காமற்போனுல் உமது பக்தனுயிர் தரியானிது நிச்சயம், உமக்கில்லா அக்கரை எனக்கேனேவென்று பலபல விதங்களாகத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர். அதற்கு ஸ்ரீமந் நாராயணர் புன்னகைகாட்டி ஓ ஆஞ்சனேயா! பக்தன் பதைக்க எட்டி யுதைக்க உனக்கு மனமும் வந்ததோ வெகுநாளாகத் தவஞ்செய்தும் உனக்குள்ள முரட்டுக்குணம் இன்னம் நீங்காமலிருக்கின்றதே யென்கிற பல பரியாசவார்த்தைகளாட அனுமார் வெட்கி, ஓ ஸ்வாமி! அடியேன் செய்த குற்றத்தைப்பொறுத்து மகானுபாவராகியதுளசிதாசருக்கு உம்முடைய திவ்விய தரிசனந்தரச் சீக்கிரம் வாருமென்னையனே யென்றுவணங்க, பகவான் பின்னும் நகைத்து இலட்சுமியை நோக்கி, ஓ மாதரசே! இந்த அனுமார் யாதொரு குற்றமுஞ் செய்யாத துளசிதாசரை யுதைத்தகாரண முனக்குத்தெரியுமா? அதென்னவென்ருல் துளசிதாசர் முற்பிறப்பில் வால்மீக ராமாயணத்தை இருபத்து நான்காயிரம் சுலோகத்தில் முடித்திருந்தார். அதை இந்த அனுமாரிரட்டித்துப்பாடி வால்மீக ராமாயணத்தை யாரும் பார்க்காமற் செய்தாரதையறிந்த வால்மீக ரென்னிடம் முறையிட்டார். நானே இந்த அனுமாரை யழைத்து நீர்பாடிய ராமாயணத்திற் சுந்தரகாண்டத்தை வோதுங் கேட்போமென்றேன் இவர் தன்னைத்தானே புகழ்ந்துக்கொண்டே வந்தார். அதற்கு நான் நகைத்தேன். இவர் ஏன் ஸ்வாமி நகைக்கின்றீரென்று பலதரங்கேட்டார் நானும்மை நீரே புகழ்ந்துக் கொள்வது நியாயமோவென்று கேட்டேன் அதற்கிவர் நாணமுற்று இவர்பாடிய ராமாயணத்தைச் சமுத்திரத்திலெறிந்துவிட் டிவ்வால்மீக ரோர்காலத்தி லெனக்கு மாணுக்கனுக வேண்டுமென உன்னினர். அப்படியே இப்போது நேரிடத் துளசிதாசரை பலவிதங்களாகச் சோதித்து மிகவும் போதித்துத் தன் கோபம் நீங்க உதைத்துத் தன் பகையை தீர்த்துக்கொண்டார். இது ஞாயமாவென்று குலுங்கக் கலகலவென நகைத்தருளினர். கூடவே இலட்சுமி கலீரென்று நகைத்தாளப்போது சபையிலுள்ள தேவரிஷிகள் யாவரும் பெருநகை புரிந்தார்கள். அதற்கனுமார் மிகவும் லச்சையடைந்து பகவானைப்பணிந்து ஓ என்னாண்டவனே! தேவரீரே என்னைப் பரியாசஞ்செய்து மந்தகாசஞ் செய்தால் மற்றி

யார்தா மேனிதஞ்செய்ய மாட்டார்கள். ஆயினுங் குற்ற மில்லை தேவரீர் இத்தினம் துளசிதாசர் முன் பிரசன்ன மாய் ரட்சித்தருளல் வேண்டுமெனத்தொழுதார். பரந் தாமன் எனக்கில்லா அக்கரை உமக்கேன் நீரும்மிடத்திற் குப்போம் எனக்கிஷ்டமான போதென்பக்தனுக்குத் தரி சனந் தருகிறேனென, அனுமார் அடியேனின்றைக் குனக்குப் பகவான் தரிசனந் தருவாரெனத் துளசிதாச ரிடத்திற் சொல்லிவிட்டே னுதலால் என் வசனம் பொய் யாகாம லகத்யமின்று தரிசனந் தரல் வேண்டும் ஸ்வாமீ யென்றுபணிய, பகவான் என்னபிப்பிராயந் தெரிந்துக் கொள்ளாமல் நீரேப்படி வாக்குத்தத்தஞ் செய்தீரெனத் திருவாய் மலர்ந்தருளிப் பின்னுஞ் சொல்லுவார். ஓ அஞ்சனைதனையா! அந்தத் துளசிதாசன் மிகவும் காமக் குண முடையவனன்றிக் கொடிய செய்கையுள்ளவன் ஆதலாலின்னம் பனிரெண்டாண்டு தவஞ்செய்தாலொ ழிய என்னுடைய தரிசனந் தரமாட்டேன் போ போ வென்றுரைக்க,

அதுகேட்ட இலட்சுமி அனுமாரை நோக்கி, ஓ என்னரும் புதல்வனே! சிரஞ்சீவிகளின் முதல்வனே! உன்னெண்ணப்படியே இன்று பரமபக்தனுகிய துளசி தாசனுக் கெங்கள் தரிசனந்தருகிறோம். இனி யுன்னி ருப்பிடத்துக்குப் போவென்றுரைய, அனுமார் பகவா னுக்கும் பார்க்கவிக்கும் வந்தனம் புரிந்து தன்னிருப் பிடஞ்சேர்ந்தார். பின்பு பகவானை இலக்குமி நோக்கி, ஓ ஸ்வாமி! பனிரெண்டாண்டாய் நம்மை நோக்கித் தவஞ்செய்யும் துளசிதாசர் முன் இன்று அகத்தியம் பிரசன்னமாக வேண்டுமென வணங்கிச் சீதையுருவெடு த்து நின்றுர் அப்போது பக்தவச்சலனுகிய பகவான் கபட கியாபகத்தோடு ஸ்ரீராம லட்சுமண பரத சத்துருக் கரின் வடிவெடுத்துக் கருடனை விளித்து அதன்மேலூர்ந் துக்கொண்டு துளசிதாசரிருக்கும் வீதியில் யாருக்கும் புலப்படாமல் வந்தார் இதற்குமுன்பே பகவானைத்தரி சிக்க அவாக்கொண்டு வீதியில் வந்து நிற்குந் துளசி தாசர் இன்றைக் ககத்தியம் பகவானுடைய தரிசனங் கிடைக்கும். அந்தப்பராத்பரனுடைய அழகு சுந்தர மும் கோதண்ட அஸ்தமும் பச்சைமேனியும் கமலக்கண் களும் கமலபாதமும் பார்க்கும்படியான பாக்கியமேதோ வென்று ஸ்ரீராமாவதாரத்தை வர்ணிக்கத்தொடங்கினர். எப்படியென்றல், ஓ தேவர்க்கு முதல்வா, தசரதன் புதல்வா, கோதண்டக்கையா, கோதிலா மெய்யா, வசிஷ்ட விசுவாசா, விசுவாமித்திர நேசா, தாடகையை யழித்தவா, அகலிகையை யளித்தவா, ஜனகர் கண் ணுளா, சீதை மணவாளா, பரசுராமபங்கா, பசியமா வங்கா, தந்தை மொழிக்குகந்தவா, தாயுரைக்கு மகிழ்ந் தவா, மகுடம் புனைய மறுத்தவா, மரவுரி தரிக்கப் பொறுத்தவா, கோசலையுருக நைந்தவா, காந்தையுருக நொந்தவா, லட்சுமணனேடு நடந்தவா, நல்லயோத்தி யைக் கடந்தவா, நடந்தறியாத நாரணு, நற்குகன்போற் றும் பூரணு விதிதுணையென்று விண்டவா, நதிகடந் தின்பங்கொண்டவா, பாதம் பணியும்முன்னவா, பட் டணம் போவெனச் சொன்னவா, அத்திரிபோற்றமகிழ்ந் தவா, அகஸ்தியர் தம்மைப் புகழ்ந்தவா, காக்கையின் கண்ணைக் கழித்தவா, கவந்தனுயிரை யழித்தவா, கன் னியிச்சிக்கப் பழித்தவா, கரதூஷணர் தமை யொழித் தவா, மாரீசன்றனைக் கொன்றவா, வஞ்சிக்கா யயர்ந்து நின்றவா சடாயுவைக்கண்டு மூச்செறிந்தவா, சடாயுவாற் சகலமுமறிந்தவா, சவரியினெச்சிலைத்தின்றவா, சந் தோஷமொழிகளைப் புகன்றவா, அனுமான்மேற் களி கூர்ந்தவா, அரியகிஷ்கிந்தையிற் சேர்ந்தவா, மரங்களே ழையுந் துளைத்தவா, வாலிவீழ்ந்தேதத்த இளைத்தவா, அனுமான்றனைக் குறைவிரித்தவா, அவனுலிலங்கையை யெரித்தவா, விபீஷணன் றனக்கருள் செய்தவா, மேலா மருண்மழை பெய்தவா, அசுரர்மேலம்புகளெய்தவா, அவுணர்சிரங்களைக் கொய்தவா, கும்பகர்னனைக்கொன் றவா, கொடிய மாபலங்களை வென்றவா, அரிவையைக் கண்டவா, ஆனந்தங்கொண்டவா, அயோத்தியை யாண் டவா, அறநோன்பு பூண்டவா வென்று ஸ்ரீராமாவ தாரத்தை வர்ணித்துக்கொண்டே வீதியில் வருகிறவர் போகிறவர்களாகிய யாரையும் பார்க்காமல் பகவா னுடைய வரவையேநோக்கிக்கொண்டு புளகாங்கத்துடன் அஞ்சலி யஸ்தராய் ஜெயராம் சீதாராம் ஜேஜேராம் எனத்தியானஞ் செய்துக்கொண்டே யிருந்தார்.

அப்போது பகவான் துளசிதாசருடைய பக்திக் கிரக்க முற்றும் அவரைச் சோதிக்கவேண்டி அவராுகில் வரும்போது ஸ்ரீராம ரூபத்தை மறைத்து கோணற்பா கையும் நீண்ட அங்கியும் நீண்ட தாடியும் கற்களின் தாவ டங்களுமுள்ள துலுக்கரூபமானுருடனே பரதசத்துருக்க லட்சுமணரு மப்படியே யாய்விட்டார்கள். கருடனே அசுவமாய் விட்டது இலட்சுமியோ ஸ்ரீராமாவதாரத்தை வர்ணித்துக்கொண்டே நிற்கும் துளசிதாசனுக் கிரக்க முற் றிப்பரம பாகவதனுக் கென்னவர மளிக்கலாமென் கிற யோசனையோடுங் கூடியிருந்தார். இப்படி சற்று நேரம் துளசிதாசன் முன் பகவான் நின்று இலட்சுமியை

நோக்கி, ஓ மாதரசே! இந்தத் துளசிதாசனுடைய மடமையையறிந்துக் கொண்டாயா என்னைப் பார்க்காவிட்டாலும் உன்னைப்பார்க்கவாவ தருகில் வராமற்போனுனினி யிவன்முன் நிற்கவே கூடாதென்றுரைத்து அந்தர்த்தானமானர். துளசிதாசர் தன்முன் வந்து நின்றவர்கள் யாரோ துலுக்கரெனத் தீர்மானித்துப் பராமுகமாயிருந்து பகவான் மாயை யறியாமல் பகவான் வருவார் வருவாரென் றொருசாமம் ராத்திரிமட்டுங் காத்திருந்து ஓஓ அனுமார் வாக்கியப்படி ஸ்ரீமந் நாராயணர் வராமலிருக்குங்காரண மேதோவென்று சரேலெனப் பாராயணச் சபையைமேவி அனுமாராகிய விருத்தப் பிராமணருடைய பாதங்களில் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து முறையோவென் றோலமிட்டழத் தொடங்கினர். அவ்வழுகுர லோசையைக்கேட்ட சகலரும் அச்சமுற்றவர்களாயிதுவென்ன விபரீதமென்று நாராயணத்தை விட்டு விருத்தப் பிராமணரை நோக்கி இதுவென்ன கூக்குரலென் றோசையாய்ப்பேசத் தொடங்கினர்கள்.

துளசிதாசருடைய மகிமையைப் பலருக்கும் புலப்படக்காட்ட வெண்ணங்கொண்ட அனுமார் அப்பா துளசிதாசா பகவானை இன்று தரிசனஞ்செய்ய வில்லையாவெனத் துளசிதாசர் காலையிலிருந்து மாலை பரியந்தங் காத்திருந்துங் கர்த்தன் வரவில்லையென வலக்கணுற அனுமார் ஓஓ மோசம் போனையே அசுவத்தின் மீதிலூர்ந்து சீதா சமேதராகத் துலுக்கவேஷமாய் வந்து உன்முன் சற்று நின்று மறைந்தவர் பகவானல்லவோவென அரிதாசர் ஓ ஸ்வாமி! எனக்கெப்படி தெரியும் சுயரூபத்துடன் தரிசனந்தரப் பரந்தாமனுக்குப் பயமோ? இப்படி மாறுவேஷமாய் வந்து மோசஞ்செய்துப் போகலாமோ? பகவான் என்னெதிரில் வந்தும் தரிசனந்தந்தும் பார்க்காத பாவியானேனே? மோசம் போனேனே? ஓ தெய்வமே! இதற்கு நானென்ன செய்யட்டுமென் றோலமிட்டழத் தொடங்கினர். அப்போதனுமார் ஓ தொண்டராகிய துளசிதாசரே! நாளையத்தினம் உமது மனையாள் கட்டிய மடத்துக்கு நானே பகவானை யழைத்துக்கொண்டு வருகிறேன். பயப்படவேண்டாமென்றுரைப, அரிபக்தர் ஈதுண்மையான வார்த்தையாவென வணங்க ஆஞ்சனேயர் ஓஅரிதாசரே! உம்மைப்போன்ற பக்த ரிவ்வுலகிலியாருமில்லை நாளைக் கத்தியம் பகவானுடைய தரிசனங்கிடைக்கும். இது சத்தியமென் றுரைத்து சகலருக்குந் தன் சுயரூபத்தைக் காட்டி மாயமா மறைந்தருளினர். அவ்வாச்சரிய வசனங்களைக் கேட்ட, சகலரும் துளசிதாசருடைய திருவடிகளிற் சிராசாஷ்டாங்கமாகப் பணிந்து தங்களுடைய நயனங்களை யணிந்து நீர் மிகவுந் தன்யர் சொல்வதற்கரிய கன்பர் எனப் பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய்துக்கொண்டே மமதாதேவியின் மடத்திற்பிரவேசித்து அனுமாரறைந்துபோன அற்புதவசனத்தைமமதாதேவிக்கும்காசியிலுள்ளஇராசன் முதலானவர்களுக்குந் தெரிவித்தார்கள்.

அதுகேட்ட இராஜன் முதலானவர்களும் மமதா தேவி மடத்தில் பகவான் வந்து துளசிதாசருக்கு தரிசனந்தருகிறாராம் நமக்கும் பகவானுடைய தரிசனங் கிடைக்குமென்று காசிபட்டண முழுதும் அலங்கரித்து வாழைகள் நட்டு மலர்ப்பந்தல்போட்டு வீதிகளிற்றோரணங்கள் கட்டி சூரியோதய மானவுடன் துளசிதாசரையும் மமதாதேவியையும் தண்டிகையின்மேலேற்றிக் கங்கைக்குக் கொண்டுபோய் ஸ்நானஞ்செய்வித்து நல்ல வஸ்திராபரணங்களணிந்து சுகந்தபரிமளாதிகளைப் பூசியானையின் மேலேற்றி ஊர்கோலஞ் செய்வித்து இவரே நாராயணர் இவரே வேதபாராயணர் இவளே ஸ்ரீதேவி இவளே பூதேவியெனத் தோத்திரஞ்செய்து மேளதாளங்கள் தாம்தாமென முழங்கவும், தேவதாசிகள் நாட்டியமாடவும், சோபனம் பாடவும், மங்களார்த்திகளெடுக்கவும், கைலாகு கொடுக்கவும், தூபதீபங்களைக் காட்டவும், வீணை முதலானவைகளை மீட்டவும், வேதியர் வேதகோஷ்டங்க ளோதவும், மடத்துள் பிரவேசித்து பீடங்களிலிருத்தி பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்துக் கொண்டிருந்து ஸ்ரீமகா விஷ்ணுவையும் ஸ்ரீமகா லட்சுமியையும் கொண்டாடும் பரமபாகவதர்களைப்போலவே கொண்டாடி இவ்வளவு வைபவத்துடனிங்கிருக்க, அனுமார் வைகுந்தத்திற் சென்று ஸ்ரீமந்நாராயணரை வலம்வந்து பணிந்து ஓ அகிலாண்டகோடி பிரமாண்டநாயகா! அனுதரட்சகா! இப்படியும் பக்தர்களை மோசஞ்செய்யலாமோ! அடியேன் மீதருட் கூர்ந்து துளசிதாசருக்கிட்சணஞ் சேவைதந்து பாதுகார்க்க வாரும்ஸ்வாமியென்றுதோத்திரஞ்செய்யக் கபட நாடகனுகிய கர்த்தன் கோபித்தவர் போலப் போபோ நான் நேற்று அத்துளசிதாசனிடம் போய்ப் பங்கமடைந்து வந்தது போதாமலின்றைக் குன்னுடன் வந்து குறைவடைய வேண்டுமோ பக்குவா பக்குவம் பார்க்கத் தேவையில்லையோ இன்னும் பனிரெண்டு வருஷங்கள் பரிசோதித்தபின்பே வருவேன் என் சேவைதருவேன் அன்றி என்னுடைய தரிசனம் லேசில் கிடைக்குமோ வென்று திருவாய் மலர்ந்தருள ஆஞ்ச

னேபர் வணங்கி, ஓ சுவாமி! உம்முடைய கட்டளைப் படி உம்முடைய திவ்விய திருநாமங்களை நாவுலகிற் பிரசித்தப்படுத்த அவதாரஞ்செய்து வெகுகாலமுமது திவ்விய சேவையைக் கோரியிருக்கும் துளசிதாசருக்கு சேவைதாராமற் பின்னிடைந்தால் தேவரீர்க் கொருவர் சொல்ல வல்லவரு முண்டோ? ஓ தெய்வமே! என் வாக்கியம் பொய்க்காமல் துளசிதாசரைக் காப்பாற்ற வாருமையா வென்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய்தார் பகவான் கூடவே கூடாதென்று மறுத்துவிட்டார். அதற்கு மாருதி துளசிதாசருக்குத் தீவிரத்துக்கும் பகவான் செய்யுந் தாமஷத்துக்கும் மிகவுமாயாசமடைந்து மிகவு மிடைந்து பகவானை நோக்கி, ஓ என்னாண்டவனே! நீரிப்படித் தாமதஞ் செய்வீரே யிவ்வைகுந்தத்தை அடியோடும் பேர்த்தெடுத்துக் கொண்டுபோய்க் காசியில் வைத்து விடுகிறேன் பிறகும் மீக்கும் பிடிக்கிறேனென்றறைய பகவான்நகைத்து இலட்சுமியை நோக்கி, ஓ மாதரசே இந்த அனுமானுரைத்த முரட்டுவார்த்தையைக் கேட்டீ! யோ முன்னம் இராவணன் கயிலையை அடியோடு மெடுக்க வெண்ணங் கொண்டதைப்போ லல்லவோ விருக்கிறது. இப்படி பத்தர்கள் பேசக்கூடுமாவென்று திருவாய்மலர்ந்தருள அது கேட்ட இலட்சுமி பெருநகை புரிந்து பகவான் வதனத்தைநோக்கி, ஓ சுவாமி! இந்த வைகுந்தத்திலும் பத்துமங் கதிகமான சஞ்சீவி பர்வதத்தைப் பந்தைப்போல் ஓர் கரத்திற் றூங்கிக் கொண்டுவந்த என் தனயன் இந்தப்பரமபதத்தைப் பேர்த்தெடுத்துக்கொண்டு போதலோர் பெரிதோ ஆனையைச் சுமப்பவனுக்குப் பூனைபெரிதா யிருக்குமோ வென்று நவிலப் பகவான் அப்படியே செய்யட்டும் நான் துளசிதாஸனிடம் வரவேமாட்டே னென்றறைய அதுகேட்ட அனுமார் வாக்கைக்காப்பாற்றும் பொருட்டு யன்மத னனலா பெரிந்து போனான் தசரத னுயிரிழந்தான். நமக்கு மப்படியானலு மாகட்டும் உயிர் பிரிந்து போனாலும் போகட்டுமெனத் துணிவுற்றுப் பகவானை வலம்வந்து வணங்கி, ஓசுவாமி! வைகுந்தம் பேர்த்தெடுத்துக் கொண்டு போகட்டுமாவென, பகவான் கயிலையைப் பேர்த்தெடுக்க நினைத்த தசக்ரீவன் பரமசிவனார் பெருவிரலா லாயாசமடைந்ததை நன்றா யோசித்துப்பாரென் றுரைக்க அனுமார் பிறர்க் கிதஞ்செய்ய நினைத்த அடியே னுய்யா விடாமடைந்தாலு முத்தமமேயெனப் பணிந்து விஸ்வரூபமெடுத்து அண்டகோளத்தில் தன் சிரந்தாக்க நிமிர்ந்து வாலை வளர்த்திப் பரமபதத்தைப் பேர்த்தெடுக்க எத்தனித்தபோது அண்டகடாகங்கள் கிடுகிடென நடு நடுங்கத் தலைப்பட்டன. சப்த சமுத்திரங்களும் அல்லோல கல்லோலங்களாய்த் தன்னெல்லை கடந்தன. அப்போது ஸ்ரீ மகா லட்சுமியும், தேவரிஷிகளு மிதுவென்ன விபரீதகாலம் நேரிட்ட தென்று பரந்தாமனைப் பல பல விதங்களாகத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்கள். அப்போது பகவான் அனுமாருடைய வைராக்கியத்தைக் குறித்து விபந்து பயந்தவர்போல்நபந்து ஓ அனுமானே! என்ன விபரீதஞ்செய்ய நினைத்தாய் பிரளய காலருத்திரன் நீயேயானாய் இனி இந்த வைராக்கியம் வேண்டாம். உன்னிஷ்டப்படி துளசிதாசனிடம் போவோம் வாவென் றழைக்க, அனுமார் ஓ என்னாண்டவனே! இக்கணமிந்தப் பரமபதத்தை என் வாலினாலும், கைலையை வோர் கரத்தினாலும் பேர்த்தெடுத்துக் கொண்டுபோய் வாரணாசியில் வைத்துப் பின்புமக்குச் சிரசாஷ்டாங்கமாக வந்தனஞ் செய்கிறேனென்று வணங்க, பகவான் இவன் மூடனுதலா லிப்படிச்செய்தாலுஞ்செய்வான் நம்முடைய ஆசீர்வசனமே உறுதித்தனையாயிருக்கின்றது. பத்தர்களை செயிக்க நம்மாலாகாது. ஓர்வேளை விபரீதங்கள் நேரிட்டாலும் நேரிடுமென்றனுமாருக்குப் பிரிய வசனங்க ளுரைத்து மனதைக்களைத்து விஸ்வரூபத்தை நீங்கச்செய்து கருடவர்கன ரூடராய் பாத சத்துருக்கா லட்சுமண சீதா சமேதராக முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் சித்த வித்தியாதரர் கருடகாந்தருவர்களும் புடைசூழ மேனகை ஊர்வசி முதலான கன்னிகைகள் மனதைக்களைத்து நாட்டியமாடத் தும்புரு நாரதர் முதலானவர்கள் வீணை முதலான வாத்தியங்களை முழக்கத் தேவதுந்துமி தாம் தாமென் றொலிக்க அனுமார் முன்னே நடக்கப் பூமாரி பொழிய பொன்மாரி சொரியத் துளசிதாசரிருக்கும் மேடைக்குச் சரியாக ஆகாயமார்க்கத்திலிருந் திறங்கும்போது, காசிதேவ இராஜன் முதலானவர்களும் ஆ! ஆ!! ஆச்சரியம் ஆச்சரியம், ஆனந்தம் ஆனந்தம், இந்தத் துளசிதாசர் எத்தனை காலங்களாகத் தவஞ் செய்தவரோ முற்பிறப்பிலெந்த முனிவரா யிருந்தவரோ அல்லது இவ்வுலகை ஆட்கொள்ள வந்தவரோவெனப் பற்பல விதங்களாகத் துதித்துப் பகவானையும் பற்பல விதங்களாகத் துதித்து தோத்திரஞ் செய்யத் தொடங்கினார்கள்.

அப்போது துளசிதாசர் பகவான் வரும் விந்தையைப்பார்த்து தேகம் வேர்த்து ஆ! ஆ!! என்னாண்டவன் இவ்வாறு வைபவத்துடன் வந்து தரிசனந்தரானிழைத்த தவமேதோ எங்கள் பெரியோர் செய்த புண்ணியமேதோ ஓ! ஓ!! எத்திசையினுந்தேவர்கள்

நிறைந்து வருகிறார்களே நான் முன் நீ முன்னென்றநேக ரிஷிகளதிக துரிதமாக வருகிறார்களே இதோ அனுமாரும் வந்து விட்டாரே அதோ பகவான் சீதா சமேதனாகப்பரத சத்துருக்க லட்சுமணருடன் வருகிறாரே யெனப் புளகாங்கமாக பயிர்க்குச்செறிந்து உல்லாசத்தாற் றிரிந்து அடிக்கடி வந்தனம் புரிந்து மிகவும் பரிந்து சந்தோஷம் விரிந்து மெய்மறந்து மனங்கரைந்து ஆனந்தக்கண்ணீரால் நனைந்து என்னமாகத் துதிப்பேனென நினைந்து ஒன்றுந் தோன்றாதவராகத் தன்னைமறந்து அசைவற்று நின்றிருந்தார். அப்போது பகவானங் கெழுந்தருளித் துளசிதாசரை மார்புட னணைத்துக்கொண்டு வெகு கஷ்டப்பட்டாயென விண்டு ஓ ஒப்பிலா வென்னப்பனே! உன்னைப் போன்ற பக்தி வைராக்கியத்திற் சிறந்தவர்கள் இவ்வுலகிலியாருமில்லை. உன் பக்திக்கு மிகவும் மெச்சினேன் ஆதலால் சீக்கிரமுன் றிருவாக்கைத் திறந்து என்னவரம் வேண்டுமோ கோரும், ராமாவதாரத்தைப் பாரும், உனக்குற்ற கவலைகளெல்லாந் தீரும், ஆனந்தம் மீறும், இழிவான குணங்கள் மாறும். பக்திசெய்தது போதும், உடலாதியைத் தாரைவாரும், மமதாதேவியும் நீரும், மோட்சலோகத்தைச் சேரும், ஏதோ உம்முடைய திருவஸ்தத்தைத்தாரும், பூவுடன் கூடியநாரும், மேன்மை பெறுவது போலெல்லோரும் உம்மாலென்னைத் தரிசிப்பார்கள்பாரும் என்று பற்பல வார்த்தைகளாடிப் பாதாதிகேச பரியந்தந் தந் திவ்விய அஸ்தங்களாற்றடவின மாத்திரத்தில் துளசிதாசனனந்த பரவசத்தாற் பகவானைப் பலதரஞ் சூழ்ந்து திவ்விய திருவடிகளில் வீழ்ந்து பலதரந் தாழ்ந்து ஓ! அரி ஹரி நரஹரி முரஹரி அப்புஜாட்சஹரி மாதவா யாதவா ராகவா கேசவா வாசுதேவா தேவதேவா ஆதிதேவா மகானுபாவா ராவண மர்த்தன காளிங்க நிர்த்தன ஓ ஜனார்த்தன பச்சைவர்ண கார்வண்ண கருடவாஹன கோபியர் மோஹன சேஷசயன கமலநயன நாராயண பிரம்ம பாராயண அப்புயகாண கௌஸ்துவாபாண ஓ பகவானே ஓ விஷ்ணு ஓ தெய்வமே இன்றைக்குத்தானுனது கருணைவந்ததோ இத்தனை நாளென்முன்வர கனம் நொந்ததோ அனுமார் பலவந்தத்தால் வந்தீரோ அல்லது நீரே சேவைதந்தீரோ ஆஞ்சநேயர் மொழிக்குட்பட்டீரோ அல்லது நீரே புறப்பட்டீரோ மாருதிக் கபயஸ்தங்கொடுத்தீரோ அதனால் ஸ்ரீராமாவதார மெடுத்தீரோ நேற்று வந்தும் தரிசனந் தாமற்போன காரணமேதோ யான் செய்த தீதோவென்று பலபல வார்த்தைகளாடி அன்பு மேலிட்டால் பின்னுந் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.



## இராமாயணச் சுருக்கம்.

### விருத்தம்.

அத்துவிதானந்தமாதவா ஆதியுமந்தமிலாதவா
சுத்தவறிவருள்யாதவா தோற்றமொடுக்கமிலாதவா
பத்திசற்றுமிலாப்பாவியேன் பார்தனிலென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 1

சத்தியதேவரீடேறவே தசரதனார்குறைதீரவே
புத்திரனாகியமாயனே புண்ணியரேத்திடுந்தூயனே
புத்திசற்றில்லாதபாவியேன் பூமியிலென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 2

தத்துவகௌசிகன்வாக்கினாற் றாடகைதன்னையழித்தவா
வித்தககௌதமன்றேவியை வேவியசாபந்தவிர்த்தவா
சுத்தஜனகனைபார்த்தவாதொல் பவத்தென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 3

வத்தியஞ்செய்வில்முறித்தவா வைதேகியைமணஞ்செய்தவா
மத்தபரசுராமன்றனுன் மத்தமறித்தநக்கொற்றவா
சித்தசன்மாலிலிருந்திடுந் தீயனென்மாதவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 4

உத்தரவீந்தாற்கைகயி னேர்மொழியான்வனஞ்சேர்ந்தவா
மித்திரனாகுங்குகன்றன்பான் மேவிவரம்பலவீந்தவா
அத்திரிமேலருள்கூர்ந்தவா ஆதியிலென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 5

சித்திரகூடத்தினின்றவா தீயவரக்கரைக்கொன்றவா
சித்திரமான்பின்னேசென்றவா சீதையெங்கேதம்பியென்றவா
குத்திரவாலியைவென்றவா கோழையேனென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 6

கைத்தலமீந்துசுக்ரீவனே காசினிகாவென்றகாரணா
அத்திசூழ்லங்கைக்கேகென வாஞ்சனேயற்கருணாரணா
உத்திக்கணைசெய்தபூரணா உலகினிலென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 7

புத்திவிபீஷணன் காவெனப் பொன்னிலங்கையாளென்ற சீலனே, சித்திலட்சுமணாவிக்கிர சித்தனைக்கொல்லென்ற மூலனே, முத்தியை வேண்டிடாப்பாவியேன் முற்பவத்தென்றவஞ்செய்தனன், இத்தினஞ் சீதாசமேதனா யின்புடன் வந்தெனை யாளவே. 8

பத்தியுள்ளகும்பகர்னனைப் பாரின்மேல்வீழ்த்தியநாதனே
யுத்தஞ்செய்மூலபலங்களை யோர்கணையால்வென்றநாதனே
குத்திரமேசெயும்பாவியேன் குத்தியிலென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே. 9

பத்துத்தலையனைபாரினிற் பாணத்தாற்கொன்றவுதாரனே
எத்தலமும்புகழ்தாயினை யெரியிற்குளியென்றசூரனே
பத்தினிநீயென்றவீரனே பாவியேனென் றவஞ்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனா யின்புடன்வந்தெனையாளவே 10

சத்துருக்கன்பரதன்றனைச் சபாசென்றுமெச்சினநாதனே
இத்தலமேத்தவயோத்தியை யாண்டரவிகுலவேந்தனே

முத்தியளிக்கும்வேதாந்தனே மூடனேனென்றவம்செய்தனன்
இத்தினஞ்சீதாசமேதனை யின்புடன்வந்தெனையாளவே. 11

பத்தர்தமைக்காக்குநேமனே பாபவிநாசஸ்ரீராமனே
நித்தியநிர்மலநாமனே நிர்ப்பேதனைபரந்தாமனே
எத்திசையும்புகழ்வியோமனே யென்றவஞ்செய்தனன்சோமனே
இத்தினஞ்சீதாசமேதனை யின்புடன்வந்தெனையாளவே. 12

என் றிவ்விதமாகத் தோத்திரஞ் செய்துருகும் துளசிதாசருடைய மஸ்தகத்தின்மேற் பகவான் தனதிரு ஹஸ்தங்களை வைத்துப் பத்தியில் மிகுந்த சித்தத்தி னுடைய உத்தமனாகிய எனக்கொத்த பக்தனே! உன் பக்திப் பிரதாபத்துக்கு வந்தேன் என்னவரம்வேண்டுமோ கேளுந் தருகிறேனெனத் திருவாய்மலர்ந்தருளின பச்சை வர்ணனை அச்சுதனுடைய உச்சித பாதங்களை உச்சியின் மேலேந்திக்கொண்டு ஓ என்னாண்டவனே! இவ்வுலகி லுள்ள ஆவிகளுள் பாவியே னெப்போதுமை நினைக் கின்றேனோ அப்போதே என் தாயாகிய சீதாசமேத னாய் வந்து தரிசனந் தரல்வேண்டுமன்றி எல்லா ஆனந்தங் களுக்கு மேலான ஆனந்த மியாதோ எல்லாப் பதவிகளி லும் மேலான பதவியாதோ எதனாலுன்றிருவடியை லேசி லடையலாமோ எந்தச் சாதனத்தாற் கொடிய விந்திரிய சேஷ்டைக ளொடுங்கிப்போமோ என்ன உபாயத்தால் மனோவேஷ்டைக ளடங்கிப்போமோ நாரதாதி ரிஷீசு வரர்களெல்லாம் எந்த நிலையிலிருக்கின்றார்களோ அந்த நிலையை யடியேனுக் கனுக்கிரகஞ்செய்யும் ஸ்வாமீயென்று துளசிதாசர் வணங்கும்போது பகவான் துளசிதாசரைக் கருணையுடன் பார்த்து மார்புடனே சேர்த்து ஓ பரமபாக வதனே! ஓதுதற்கரிய வேத ரகசியங்களை நீ தவிர இப்பூ தலத்திலறிந்த மாதவருண்டோ? ஓ ஞானபோதனே! பற் றில்லா அவதூதனே! சிரத்தையிற் சிறந்த பரத்துவாச ருக்குப் பரத்துவத்தை வசிஷ்ட சங்கிதையில் விரித் துரைத்த வால்மீகரிஷியல்லவா வென்று க்ஞானதிருஷ் டியைக் கொடுத்த மாத்திரத்தில் துளசிதாசருக்குப்பூர்வக் ஞானம் பிறந்து முற்பிறப்பிற்றான் வால்மீகரென்றறிந்து ஓ ஓ நாம் இவ்வுலகிலுள்ள மாந்தர்கட்குப் பக்தியும் சீவன் முக்தியும் போதிக்க அவதரித்துப் பூர்வக்ஞானம் மறந்து உலகிலுள்ள மானிடர்களுஞ் செய்யாக்கொடும்பாவமாகிய காமாந்தகாரக் குகைக்குட்பட்டுக்ஞான நிலைகெட்டு உலகந் தூஷிக்க உடம்பெடுத்தேனே யென்று பலவாறாக வுன்னி பகவானைச் சூழ்ந்திருக்கும் நாரதாதி ரிஷீசுரர்களைப் பார்க்க நாணமடைந்து பகவான் முன்னிற்பதற் கிடைந்து ஸ்ரீமந்நாராயணனை வலம் வந்து பணிந்து ஓ கர்த்தனே! தங்களுடைய பரிபூரணக்கடாட் சம் பெற்ற அடியேன் கொடியேனாகிக் காமவலையிற் சிக்கி அசங்கிதமான விஷபானத்திற் சொக்கி பிரமக் ஞானத்தை மறந்து நின்னும பஜனையைத் துறந்து உபாதி வைராக்கிய மிறந்து துர்க்குணங்கள் நிறைந்து மாயாதி ரையில் மறைந்து சொல்லுதற்கரிய துன்பத்தாற்குறைந்து பாமரனான காரண மென்னமோ தெரியச்சொல்லும் ஸ்வாமியென்றிரங்கு கூறும் அரிதாஸனைப் பகவானாதரணை செய்து ஓ பரம பாகவதசிகாமணி! பரப்பிர்ம க்ஞானி நான் திரேதாயுகத்தில் ராமாவதார மெடுத்து பூர்வக் ஞானம் மறந்து மிகவுமயர்ந்து வசிஷ்டராற்றெரிந்து சகல தோஷங்களுமிறந்து சங்கல்ப விகல்பங்களைத் துறந்து அனேக நாள் அரசுபுரிந்து நாட்டிற்றருமத்தையும் காட் டிற்றவத்தையும் நிலை நிறுத்தி எதாஸ்தான மடைந்தேனாத லால் மாயா சம்பந்தமான ஜென்ம மெடுப்பவர்களெல்லாம் துக்கமே பலிதமாகும் நீரும் மாயையின் சாமர்த்தியத்தா லேயே விஷயபோகத்தை யிச்சித்து வெகு அவஸ்தைக் குள்ளானீர் காமத்தை வென்றவர்கள் திரிலோகத்திலு மில்லை நீரிதைப் பாராட்டிச் சஞ்சலப் படவேண்டாம்.

ஏனெனில் இதோ நிற்கும் நாரதருடைய சரிதை யைக் கேட்பீரேல் வெகு ஆச்சரியப்படுவீரதேனென் றால், முதல்யுகத்தில் இந்த யாழ்வல்லோன் உபாதியினாற் சுரநாட்டை விட்டுக் காட்டையடைந்து பதினைந்து திவ் விய வருஷங்கள் தவஞ்செய்து காமாதிகளை வென்றோ மெனக் கிஞ்சித்துக் கர்வமடைந்து சொர்க்கலோகத்திற் சென்று தவமே மேலான தெனப்புகன்று சத்தியலோகம் போய்ச் சதுர்முகனை நோக்கி நாட்டிலிருப்பதிலுங் காட்டி லிருப்பதே உத்தமமென் றறைந்து கயிலையிற் சென்று பரமசிவனைப் பணிந்து காமதகனஞ் செய்பவர்க்குக் காடே திவ்விய ஸ்தானமென நவின்று வைகுந்த மடைந்து என் னைப் பலவிதங்களாகத் துதித்து ஆனந்த மேலீட்டாற் றுதித்து ஓ மாயாவிலாசா! வைகுண்டவாசா! உம்மு டையமாயை தவத்திலிருப்போரை யென்னசெய்யுமெனப் புகல நான் சுழுப்தியிலிருக்குஞ் சுகங்கனவு கனவிலிருப் போர்க்கெப்படி வருமென்று கேட்க, இவர் எப்பொழுதும் கனவிற் சுழுப்தி நிலையிலிருப்போர். சாக்ரத சொப்பன சேஷ்டைகளால் வேஷ்டையை யடையமாட்டார்களென நான் சாக்ரத சுழுப்தி நிலையை எப்போதும் மேவியிருத்த லரிதல்லவா வென இவர் சகஜ க்ஞானமுள்ளோர் சந்தத முஞ் சமாதி நிஷ்டையிலேயே யிருப்பார்களென நான் இவரைப் பரிசோதிக்கும் பொருட்டு ஓ நாரதமகாரிஷியே

உம்மைப்போன்ற திவ்விய க்ஞானிக ளிவ்வுலகிலுண்டோ உம்மைக் காமதகனஞ்செய்த கறைமிடற் றன்னவரென்றே யுரைக்க வேண்டுமெனத் துதிக்க இவரசுபடைந்து அடியேன் காட்டிற்குப்போய் தவஞ்செய்து நாள் கழிக்கிறேனென்று வணங்கிக் கானகத்தை நாடிச்சென்றார் அப்போது நான் இவர் போகும் மார்க்கத்தில் மாயையால் ஓர் பட்டண முண்டாக்கி அந்நகருக் கிறைவனுக்கோ ரழகுள்ள கன்னியிருக்கவும், அப்பெண்ணுக்கு சுயம்வரம் நடக்கவும், அன்பத்தாறு தேசத்தரசர்களு மங்கு வந்திருக்கவும், அந்நங்கையின் ஜாதை சோதிஷம் பார்த்தெந்த மன்னனுக் கென்புத்திரி மாலையிடுவார்களெனக் கேட்க வெதிர்பார்த்துத் தவஞ்செய்யப்போகும் இவரை மறித்துப் பலவந்தமா யழைத்துக்கொண்டு போய்த் தன் புதல்வியை யழைத் திவரெதிரில் நிறுத்தி ஓ மஹானுபாவா! இந்தப் பெண் ணெத்தேசத் தேந்தலை மாலையிடுவாளெனக் கேட்கவும்செய்ய இந்த நாரதர் கும்பிடப்போன தெய்வங் குறுக்கே வந்ததுபோற் களித்து அச்சுந்தரியை யுற்றுப் பார்த்துப்பரிவுகொண்டு பிரமித்து ஸ்தம்பித்து மனமுருகி அன்புபெருகி இவள் நரலோகப் பெண்ணல்லவென றன்னி தான் பணஞ்செய்ய நண்ணி அரசனை நேசித்து மிகவும் விசுவாசித்து ஓ மகாராஜனே! இந்தப் பெண்ணுக்குரிய ஆடவன் தேவலோகத்திலிருந் தினியோர் முகூர்த்தத்துக்குள் வருகின்றான் உங்களுக்குத் தரிசனந் தருகின்றான் அவனுக்கே உமது கன்னிகையைக் கொடுத்து வதுவைசெய்வீரென் றறைந்து அம்மாதை நோக்கி ஓ பெண்கள் நாயகமே! உனக்கெவ்வித புருஷன்மேலிச்சையென்று வினவ, அதற்கவ்வனிதை ஓ முனி சிரேஷ்டரே! எனக்கு மகாவிஷ்ணுவுக்கு நிகரான புருஷன்மேலிச்சையென்று வணங்க, இந்த யாழ்வல்லோன் இப்போது வரும் புருஷன் மகாவிஷ்ணுவைப்போலவே யிருப்பானென்றோதி அந்நாட்டைக் கடந்து காட்டை யடைந்து கன்னியென்னும் வன்னி தன் சென்னியைக் கொளுத்துவதால் காமச் சிந்தையால் நொந்து நாணமிழந்து ஓஓ இத்தருணத்தி லெந்த ரூபத்துடன் சென்றால் நம்மை யம்மாது வாதுசெய்யாமல் மாலைசூட்டுவாள், பாராட்டுவாள், இன்பத்தை யூட்டுவாள், களிமுகத்தைக் காட்டுவாள், ஆ ஆ அக்காந்தையின் முகவிலாசமே விலாசம், இப்பேர்க்கோத்தவளுடைய கேசமே கேசம், அவளுடைய கூந்தலே கூந்தல், அவளை யணையும் ஏந்தலே யேந்தல், அவளுடைய ரூபமே ரூபம், அவளாலிங்கன லாபமே லாபம், அவளுடைய வசனம் அவளைத் துதிக்கும் பஜனமே பஜனம், அவளுடைய பார்வையே பார்வை, எனக்குக் கிடைத்த சேவையே சேவை, அவளுடைய நடையே நடை, இப்பேர்க்கோத்தவட்கியுங் கொடையே கொடை எனப் பற்பல வார்த்தைகளாடி மாரன்செய்யுங் கோரத்தால் தவஞ் செய்யப்போகுந் தீரத்தைவிட்டு நேரத்துக் கேட்பட்டு பக்த வச்சலனாகிய என்னை நினைந்து ஓ பகவானே! இவ்வேளை வந்து உன்னுடைய ரூபத்தைத் தந்து பாதுகாக்காமற் போனால் காமாக்கினியா லெரிந்து போவெனென் றறியாயோ? ஓர் கன்னிகையால் நாரதன் மரணமடைந்தா னென்னும் பழி நிலை நிற்குமெனக் குறியாயோ? உன்னுடைய மாயையை வென்றவர்களு முண்டோ? நான் சொல்லும் மொழியிற் பிசகுண்டோ? சீக்கிரம் வருவாய் உன்னுடைய ரூபத்தைத் தருவாயென்றுருகும்போது நான் தரிசனந்தந்தா லென்சேவை பலத்தால் காமவிகாரம் நீக்குமென்று அந்தர்த்தானமாகவே யிருந்து ஓ முனிசிரேஷ்டரே! நீரிச்சித்தபடி என்னுருவைக் கொடுத்தேன் சீக்கிரம்போ யும்முடைய இச்சையை நிறைவேற்றிக் கொள்ளுமென்றுரைக்க, உடனே இந்த முனிவர் தனக்குப் பச்சை நிறமும், பீதாம்பரமும் கௌஸ்துவாபரணங்களு மடைந்தே களிப்புற்றுப் பகலனையும் புருகூதனையும் தனக்குத் துவார பாலகராகி வர நினைத்தமாத்திரத்தில் உடனே அவர்களிருவரும் ஸ்ரீவைகுந்தவாசலைக் காக்கும் துவார பாலகரைப்போல வடிவெடுத்திவர் பக்கலடைய உடனே இந்த மகாத்மா வெகு அவசரத்துடன் அப்பட்டணத்திற் பிரவேசிக்க அத்தறுவாயில்தான் அவர்கொண்ட வடிவழகி பூமாலையைக்கையிலேந்திக்கொண்டு விசாலமான சபாமண்டபத்தி லெழுந்தருளியிருக்கும் ஐம்பத்தாறுதேசத்தரசர் மையல்கொள்ள சபையில் நின்றிருப்பதைக் கண்ட இந்த யாழ்வல்லோன் அதிக ஆவலாய் அவளருகிற் சென்று ஆயிரங் கண்ணனு லரியணையை வரவழைத்ததில் வீற்றிருந்து அடங்காக் காமவிகாரத்தா லவ்வரிவையை நோக்கி நாணத்தை நீக்கிப் பூதலம் போற்றும் ஓ மாதரசே! நீ தவிர எனக்காதர வில்லாமையால் என்னையிக்கணமே காப்பாய், கடைக்கண்ணாற் பார்ப்பாய், என்னை உன்னிரு கரங்களாலும் மார்பிற் சேர்ப்பாய், என் மையலைத் தீர்ப்பாய், என்றன்புள்ள வார்த்தைக ளன்புடனுரைக்க அதுகேட்ட அம்மோகனாங்கி காருகவதனமுள்ள இவரை நோக்கிக் கலீலென மந்தகாசஞ்செய்து மன்னர்களருகிற் செல்ல இம் முனிநாதர் அவள்மேலிருக்கும் பேராசையால் அருகிற்சென்று கரங்களைக் குவித்து நின்று ஓ அழகுசுந்தரமே! ஆசைப்பெருக்கமே! உனக்குகந்த மணாளன் நா

னன்றி வேறொருவருண்டா இல்லை இல்லை ஆதலா லன்புடனெனக்கே மாலையிட்டு மகிழ்வடையக் கடவாயென் றவ்வஞ்சியைப் பற்பல விதங்களாகக் கெஞ்சி கெஞ்சி கொஞ்சி கொஞ்சி வேண்டியும் வேண்டா அம்மங்கை மேலுள்ள வாஞ்சையாலும் மாரனெய்யுங் கோரமான வுபத்திரத்தினு முபத்திரத்தாலும் அவள்மேல்விழுந்து ஆலிங்கனஞ் செய்து ஓ பெண்ணே ! என்னிரு கண்ணே! உன்னை வணங்கினே னிப்போதே என்னையிணங்க வாவென்னப் பலவந்தஞ் செய்ய அம்மாது முனிந்து கடின வார்த்தைகளாடி எட்டிப்போய் நிற்க இவர் மோகாந்த காரத்தால் பின்னு மவளைப் பலவந்தஞ் செய்ய அக்கன்னி இவர்க் ககப்படாமற் புறம்போக இவரவள் பின்சொல்ல அவளச்சமுற்றுப் பல திக்குகளினுமோட இவரவளை விடாமற் றொடர்ந்தோட முடிவி லப்பேதை ஓர் தடாகத்திற் குதிக்க, இவரு மச்சரசிற் குதிக்கப் போய் அவ்வாயிற் றெரியும் தன்னுடைய சாயையைப் பார்த்து ஆ! ஆ!! நம்முடைய வதனம் யூகத்தின மாத்திரமா யிருப்பதினு லல்லவா இம்மோகனுங்கி வெறுப்புற்றாள்.

இது காரியத்தை ஆயிரஞ் சோதியனும் ஆயிரங் கண்ணனும்புலப்படுத்தாமற் றுங்களுங் கெக்கலிகொட்டி நகைத்துப் பங்கப்படுத்தினர்களல்லவா வென்று முனிவு கொண்ட மாத்திரத்தில் கேணியும் கன்னியும் பட்டணமும் இராஜர்களும் மாயமாய் மறைந்து காரடவியான மாத்திரத்தில் ஓ ஓ நம்மைப் பகவான் பரிசோதித்தார் நம்முடைய திரமான மனதைப் பேதித்தார் இது தெரியாமல் அவர் மாயைக் குட்பட்டு தபநிலை கெட்டுச் சூரனுஞ் சுனசீரனும் கெக்கலி கொட்டி நகைக்கும்படியாக நேரிட்டதல்லவாவென வெகுண்டு ஓ கதிரவனே கரியவனே! நீங்களிருவரும் வானரத்தின்மேல் மோகமாகி வானரங்களாகி ஒரு ஸ்திரீயைப் புணர்ந்து ஆயுள் பரியந்தம் பகையாளிகளாய்ப் போகக்கடவீர்க ளெனச் சாபமிட்டார் அதுகேட்ட இந்திரனும் எழ்பரியோனுங் கைகுவித்து ஓ! மாதவனே! குற்றமில்லா எங்களுக்கு விபரீத சாபமிட்டீரே இச்சாபநிவர்த்திக் கேதுவுரைத் தாட்கொள்ளு மையாவென்று வணங்க இந்த யாழ்வல்லோனுக்குச் சற்றே தணிந்து பிறந்து ஸ்ரீமந் நாராயணருடைய தரிசனத்தா லுங்களுக்கிட்ட சாபநிவர்த்தியா மென்றுரைத் தனுப்பிவிட்டு அன்று முதல் என்னைப் பிரியாமல் என்றரிசன பரிசன பலத்தால் . நிஷ்காமியா யிருக்கின்றாரெனத் திருவாய்மலர்ந்து ஓ அரிபக்தனே ஜீவன் முக்தனே! எப்பேர்க் கொத்தவர்களும் மாயையை வெல்வதரிது இந்த மாயா விசேஷத்தினாலேயே பூர்வ ஜன்மத்தி லுன் மனைவிக்கு நீதியுரைத்ததுபோல இச்சென்மத்தி லுன்தேவி யுனக்கு விவேகமுரைக்க நேரிட்டது. இப்படி மேல்கீழ் கீழ்மேலாக்குவது மாயையின் சுபாபமாம் இப்படிசெய்வதே மாயையன்றி வேறே மாயையென்ப தொன்றுண்டோ ? அறிவூன்றி யூகிக்கின் சுத்த சூனியமாய்ப் போகும். மாயையை கடக்கப்பிரமாதி தேவர்களாலுங் கூடாது என்றறைந்த பகவான் திருவடிகளில் துளசிதாசர் வணங்கி ஓ சுவாமி உம்மையன்றி மாயை யென்பது வேறேயொன் றுண்டாயிருக்க வஸ்து மிரண்டா ? ஓ பகவானே ! சகல லோகங்களையுஞ் சிருஷ்டித்து உமது மாயையி லழுத்தி வாட்டுகிறவரும் நீரே சகல சீவர்களையும் காமக் குரோதங்களிற் பிரவேசிக்கச் செய்து பலவிதங்களா யாட்டுகிறவரும் நீரே விஷயானந்தத் துக்கமயமா யிருக்கவும் மேன்மேனு மின்பபோகமாகக் காட்டுகிறவரும் நீரே ஸ்தம்ப முதல் சகல சீவராசிகளுக்கும் எட்பிரமாணம் பிசகின்றி அவரவர்கள் வினைப்படி சுகதுக் கங்களை யூட்டுகிறவரும் நீரே சமுசார மென்னும் நாகமேடையைவிட்டு வெளிப்படாமல் ஞானக் கதவைப் பூட்டுகிறவரும் நீரே பாப புண்ணிய மென்னும் சுமை சுமக்கு மாளாக்கி மாட்டைப்போ லோட்டுகிறவரும் நீரே ஆட்டுக்கடாக்களைப் போல் ஒருவரோ டொருவ ரெதிர்த்து யுத்தஞ்செய் திறக்கும்படியாய் மூட்டுகிறவரும் நீரே பக்தியுடன் வேண்டிக் கொள்ளும் பரம பாகவதர்களைச் சீக்கிரம் பாதுகார்க்காமல் என்னையன்றி காக்க வேறு தெய்வமில்லை யென்கிற பெருமையை நீட்டுகிறவரும் நீரே, பக்தர்களின் மனம் நோகச்செய்யும் மாபாவிகளின் மனம் நடுங்கக் கோரரூபங்களைக் காட்டுகின்றவரும் நீரே நம்பின அடியார்க்கோ ரிடையூறு வாராமற் பாராட்டுகிறவரும் நீரே நமனென்னு மகத்தைச் சிகிச்சைசெய்து மௌனமுற் றிருக்கும் பிரமக்ஞானிகட் ககண்டானந்தத்தை ஈட்டுகிறவரும் நீரே என்று பற்பல விதங்களாகத் துதிக்கும் துளசிதாசரைப் பகவா னன்புடன் பார்த்து மார்புட னணைத்து அப்பா பக்தசிகாமணி பரபிரமக்ஞானி நீயறிடா மர்மமொன்றுண்டோ மாயை யென்னையன்றி வேறுண்டோ நீ ராமராமவென் றுரைத்துப் பராபரத்தை யுணர்ந்த பரமசாது வாச்சுதே இனி மேலான பிரமானந்த லாபத்தைப் பெற்றுச் சுகஜீவியாய் வாழக்கடவாயென் றாசீர்வாதஞ்செய்து இனி நாம் போகிறோ மெனப் புகலத் துளசிதாசர் ஓ தெய்வமே! பிரமக்ஞானம் ஒருவர் போதிக்கப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று வேதங்கள் முறையிடு கின்றதன்றி

சுபேச்சையா லறிதற்குக் கூடாமையான பிரமக்ஞானத்தை அடியேனுக் குபதேசித் தாட்கொள்ளும் சுவாமீ என்று பணிய, பகவான் ஓ அரிதாசரே! என்றுஞ் சிரஞ்சீவியாய் அநேக சாதுக்களின் சங்கத்திலிருந்து தேர்ந்த நவ்வியாகரண பண்டிதரான இந்த அநுமாரிடம் பிரமோபதேசம் பெற்றுக்கொண்டு ஆனந்தமாயிருமென்றுரைப துளசிதாசர் மகா பாக்கியமென்று துதித்துத் தேவரீர் திருவிளையாடல்களிலெதை நூதனமாகச் செய்து பாராயணஞ்செய்தால் புத்தியும் பக்தியும் சித்தியும் முத்தியு மெளிதிற் கிடைக்கு மென்று தொழப் பகவான் ஓ பரமபாகவதனே ஜீவந்துவமான தாஸத்வமுடையோர்க்குப் பக்த விலாசமும் ஆத்ம தத்துவமான ஐக்யதத்துவ முள்ளவர்க்குப் பிரமக்ஞானமு முக்கியமாயிருக்கும். ஆதலால் தாஸத்வ முள்ளவர்க் கானந்தம் வரச்செய்யும் என் திருவிளையாடலாகிய ஸ்ரீ ராமாயணத்தை முன் ஜென்மத்தில் தேவபாஷையிற் செய்தது போல் இப்போது இந்துஸ்தானி பாஷையிற் செய்து துளசிராமாயண மெனப் பேரிட்டு அநேகம்பேரைப் பாராயணஞ் செய்யும்படியாய்ச் செய்து என் பதவியையடையும்படியாகச் செய்வெனத் திருவாய்மலர்ந்து பல ஆசிகள்கூறி அந்தர்த்தானமானுர். தேவரிஷிகள் ஜெய விஜய பவவென் றுரைந்து தங்கடங்க ளிருப்பிடஞ் சேர்ந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்குனர்.

ஸ்ரீராமர் தரிசனந்தந்த அத்தியாயம்

முற்றிற்று.

ஒன்பதாவது

## ஞானுேபதேச அத்தியாயம்.

கேளுங்கள் சித்தர்களே! ஸ்ரீமங்நாராயணன் மறைந்தபின் துளசிதாசர் அந்த மடத்தில் அநேக சாதுக்களுட னிருந்துக் கொண்டு பகவான்பேரில் அநேக கீர்த்தனைகள் அஷ்டகங்கள் கவிகள்பாடி தேவபாஷையிலுள்ள வால்மீக ராமாயணத்தை இந்துஸ்தானி பாஷையிற் செய்து துளசி ராமாயணமெனப் பேரிட்டு வடதேசத்தி லுள்ளவர்களெல்லாம் பாராயணஞ்செய்ய மகிழ்ந்து தாஸத்வ மார்க்கத்திற் சிலநாள் கழித்துச் சாதுக்கள் சங்கத்தாலும், பகவத் தியானத்தாலும், விஷயபோக நிக்கிரகத்தாலும் அன்னதான பலனுலும் வேத பாராயணத்தாலும், தேகேந்திரிய காண வேஷ்டைகளை மாற்றவேண்டிய பாவத்தாலும், நனவிற் சுழுத்தியைப் பெறவேண்டு மென்கிற வாஞ்சையாலும், கர்ம காண்ட பக்தி காண்டத்திலும் க்ஞான காண்டமே முக்கியமென வேதத்தில் விதித்திருப்பதாலும், பிரமானந்த மன்றிக் கருவி கரண சேஷ்டைக ளிறக்காதென் றென்ற தாற்பரியத்தாலும், அஞ்ஞான குணங்கள் கீழ்ப்பட்டு மெய்ஞ்ஞான குணங்கள் மேலிட்டு ஓர் நாள் யோசிக்கின்றார். ஆ ஆ மேலான பிரம க்ஞானத்வத எனது சத்குருநாதராகிய அநுமாரிடம் அநுக்கிரகம் பெற்றுக் கொள் ளெனப் பகவான் திருவாய்மலர்ந்தருளியிருந்தும் அஞ்ஞான புத்தியினுல் வெகுநாளாக மெஞ்ஞானத்தை மறந்திருந்து விட்டேனே ஆ கெட்டேனே யென்று வாட்டமடைந்து மிகவு மிடைந்து ஸ்ரீமங்நாராயணனைப் பலபல விதங்களாகத் துதித்து தனது சத்குருநாதனுகிய அநுமாரைச் சிந்தித்து வந்தித்து ஓ ருத்ராவதார வாயுகுமாரா, அஞ்சனுதேவிதநயா, ஸ்ரீராகவதூதா, சீதாசோகவினுசா, சுயம்பிரகாசா இராக்ஷஸ காலா, இலங்கையைக் கொளுத்தினசீலா, சஞ்சீவியைத் தந்தவனுகூலா, பக்தபரிபாலா,, விசுவ சொரூபா, க்ஞான தீபா, ஸ்ரீராம லட்சுமணரைத் தாங்கினவா, இராவணன் மார்பிலுள்ள தந்தங்கள் வெளிப்படக் குத்துவாங்கினவா, கடலைக் கால்வாயாகத் தாண்டினவா, சீதாபிராட்டியின்பா லோர்வரம் வேண்டினவா, தசரத தநயா போட்ட முத்துமாலையிலோரோர் முத்தாகக் கடித்துப் பார்த்து ஞானரச மில்லையென் றெறிந்துவிட்டவா, சீதாபிராட்டியின்பால் ஞானுர்த்தங்க ளறிந்துக் கொண்டானந்தத்துட்பட்டவா, கதிரவன்பால் நவ்வியாகரணங்கள் கற்றவா, என்று மழியாச்சிரஞ்சீவித் தன்மையைப் பெற்றவா, சஞ்சீவி பர்வதத்தை யளித்தவா, தானவரைக்கொன்று களித்தவா, பரத சத்துருக்கனை காத்தவா, பரப்ரமத்தைத் தனக்கு ளாராய்ந்து பார்த்தவா, தும்புருநாரதர் கர்வபங்கஞ் செய்தவா, தொந்தங்க ளனைத்தையுங் கொய்தவா, பீமனுடெதிர்த்தவனுக் கருள்தந்தவா சுதர்மன்விட்ட சுழல்பாணத்தாற் சுழலு மருச்சுனன் தேரை நிறுத்திக் களிப்படைந்தவா அடியேனுக் கனுக்கிரகம்புரிந்தவா, அநுபோகமனைத்துந் தெரிந்தவா வென்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய் தேத்தும்போது,

அதுதெரிந்த அநுமார் உடனே ஸ்ரீமங்நாராயணனுக்கு மிகவும் நேசனே, சாதுக்கள்பால் மிகவும் விசுவாசனே, இராமாயணத்தை நவநவமாய் விரித்துரைத்த விலாசனே, ஓ துளசிதாசனே, இதோ வந்தேன் வந்தேன், இதுகால பரியந்தம் சிந்திக்காம லிருந்த

தற்கு தொந்தேன் நொந்தேன், இப்போதெனை நினைத்த தற்கு வந்தேன் வந்தேன், என்னுடைய தரிசன மிதோ தந்தேன் தந்தேனென்றுரைத்துக் கொண்டேவந்து பிர சன்னமாக நின்று பிரமானந்தம் விளங்கிய முகத்துடன் பல ஆசிகள் வழங்கி ஆதித்தனைப் போற்றுலங்கி நிற்கும் ஆஞ்சநேயர் திருவடிகளிலரிதாசன் சிரசாஷ்டாங்கமாக வந்தனம் புரிந்து மிகவும் பரிந்து அத்திபந்த பக்தியுடன் அநுசரித்தண்டிப் போற்றிப்புகழ்ந்து பொங்கிப் பூரித்து மகிழ்ந்து ஓ என் சத்துருநாதனே ! மெய்ஞ்ஞான போதனே ! கமலம்போன்ற பாதனே ! முற்றுந்துறந்த அவதூதனே அரிஷ்டவர்க்கத்தை வென்ற நீதனே ! என்னை யிப்போதே யாட்கொள்ளும் ஸ்வாமி யென்று அஞ்சலியஸ்தனுய் நிற்கும்போது ஆஞ்சநேயர் துளசி தாசரை பட்சமாகப்பார்த்து மார்புடன் சேர்த்து ஓ அரி பக்தனே ! ஜீவன் முக்தனே ! என்னையேன் நினைத்தீர் என் மனதை ஏன் கரைத்தீர் அபயமென்றேனுரைத்தீர் நெடுநாளாக மறந்திருந் தின்றைக்கேன் விளித்தீர் சீக்கிர முமக்குற்ற குறையைச்சொல்லும், அஞ்ஞான மனதைக் கொல்லும் காமாதிகளை வெல்லும், க்ஞான திருஷ்டியில் நில்லும், ஜாக்ராவஸ்தையான எல்லும் சுழுப்தி யவஸ்தையான அல்லும் அற்ற ஆத்மாவைப்புல்லும், ஆனந்த மேடையிற் செல்லும் என்றிவ்விதமாகச் சொல்லும் தாதாராயன் புதல்வனைக் கல்வியிற்றெளிந்த முதல்வனைத் துளசிதாசர் பணிந்து பாதங்களில் நயனங்களையணிந்து ஓ ஸ்வாமி! கருவிக ளொடுங்குவதாயும் காதலெல்லா மடங்குவதாயும், நானென்பதற்றதாகியும், நாளுமோ ரியல்புற்றதாகியும், இருளஞ்ஞான மில்லாததாகியும், அருள்மெய்ஞ்ஞான முள்ளதாகியும் பிரபஞ்ச சேஷ்டைகளில்லாததாகியும், பிரமமாத்திர முள்ளதாகியும், துன்பமெப்பொழுது மில்லாததாகியும், இன்ப மெப்பொழுதுங் குறைபாத தாகியும், என்றும் நிறைவானதாகியும், ஆதிமத்தியாந்த ரகிதமாயும், சோதிசித்தானந்த சகிதமாகியும், அத்வைத மாகியும், அற்புதமாகியும், நித்யமாகியும், சத்தியமாகியும், நிஷ்கள மாகியும், புஷ்களமாகியும், எல்லாமாகியு மெல்லா மல்லாததாகியும், விலட்சணமாகியும், சுலட்சணமாகியும், நிர்விகார மாகியும் நிரூபமாகியும், சொரூபமாகியும், யாதொரு வஸ்துவுண்டோ அந்தப்பரப்பொருளை அடியேனுக் கநுக்கிரகம் புரிந்தாட்கொள்ளுமையா வென்று தாட்களில் வீழ்ந்த அரிதாஸனை,

அநுமார் அன்புடன் நோக்கி துன்பினைப் போக்கி அப்பா ஞான பொக்கிஷமே ! மெய்ப்பொரு ளுரைப்பது கச்சகமே ! ஆயினும் நீர் முன்சென்மத்தி லுரைத்த ராமாயணமே நீர் கேட்ட மெய்ப்பொருளை யறியும் சூட்சமம், இதைபாராயி லுண்டாகும் மோட்சம், எப்படி யென்பாயே லிக்காசியில் நாராயணன் சதைபான ராமாயணத்தைப் பூராயமாய்ப் பாராயணஞ் செய்து தாரதலம் புகழும் புராணிகராகித் தாரதரத்தையும் பராபரத்தையும் காதல நெல்லிக் கனிபோலுணர்ந்த உத்தவதாஸெனும் பிர்மக்ஞானியானவர் ராமாயணத்துக் கெல்லாம் ஞானர்த்தஞ் செய்வதைக் கேள்விப்பட்டுப் பந்தபாசங்களிலிருந்து விடுபட்டு நானென்னு மகங்காரங்கெட்டுச் சங்கல்ப விகல்பமுங்கெட்டு அங்க மேலாசையும் விட்டு அரியாஸ்மரணையும் விட்டு தேக ஸ்மரணையுக் திக்கு தேசாதிக ளிறந்து அநேகர் தறிபோற் சமாதியடைந்திருக்கிறார்கள். நானுமப்படியே பிரமானந்தத்துள் மூழ்கி சிரமங்களெல்லாமாழ்கித் தன்னை மறந்திருந்தவன் உன் தோத்திர மென்னும் வன்னியென் சென்னியைக் கொளுத்த மெள்ளவராமற் றுள்ளி வந்தேனென் றறைய, துள்சிதாசர் ஆஞ்சநேயர் திருவடிகளில் தன்முடியைவணங்கி என்னை பிணங்கி யிருக்கும் நுணங்கிறைச் சுணங்கி உணங்கினேனென்னை யிணங்கிய குருவே ! எழிலலர் தருவே ! இன்பமா முருவே ! ஏகமாம்அருவே ! பரிமள மருவே ! பாக்கியத்திருவே ! பயனருள் தெருவே ! பண்புருள் சருவே தனை நிகரான அந்தணரும் தேவரீருஞ் சிரவணஞ் செய்த ஞான ராமாயணத்தை அடியேற் குபதேசித் தாட்கொள்ளும் ஸ்வாமியென்று வணங்கிய துளசி தாசரை அநுமார் மார்புட னணைத்து ஓ அரிதாசரே ! சுவிசேஷனே ! காட்சியைக் கொடுக்கும் மாட்சிமையான நீட்சிக் குழலுள்ள விசாலாட்சி வீற்றிருக்கும் இவ் வாரணசியி லிருந்தால் விசேஷமென்று வசிஷ்டர் ஓர் பூசுரனுக வந்து உத்தவ தாசனெனப் பேர்பெற்று அத்தியாத்ம ராமாயணத்தைப் பாராயணஞ் செய்வதை நாட்டைவிட்டுக் காட்டிலிருக்கும் ஓதுதற் கரிய மாதவரெல்லாம் அந்தணர்களாகச் சிரவணஞ்செய்ய இக்காசியில் வந்ததை யானறிந்து நானுமிங்கடைந்து அத்தியாத்ம ராமாயணத்தைச் சிரவணஞ்செய்து சமஸ்த வாசைகளையுங் கொய்து பாவசமானேன், அதை சுருக்கமாக வரைக்கின்றே னிற்சலமனதுடன் கேட்டுற்சாகமடைவீரெனச் சொல்லத் தொடங்கினர்.

எப்படி யென்றல், மோட்சமென்னு மயோத்தியில் பிரமமென்னும், தசரதன் ஞானசத்தி இச்சா சத்தி கிரியாசத்தி யென்னும் மூன்று மனைவியருடன்

கூடி வாழ்கையில் ச்ஞானசத்தி யென்னும் கௌசலை யின் கர்ப்பத்திற் ஆத்மா வென்னும் ஸ்ரீராமன் பிறந்து அவ்வியக்த மென்னும் பால்யத்தாற் றன்னை மறந்து அஞ்ஞான மடனன சிவனே தானகித் தேகேந்திரியாதி களுக்குக் கோனகிச் சிரவண மென்னும் வசிஷ்டரை யடைந்து மனனமென்னும் விசுவாமித்திரரைத் தொடர் ந்து வைராக்கிய மென்னும் லட்சுமணருடன் நடந்து பஞ்சமா பாதகமென்னும் பர்வதங்களைக் கடந்து காடு, மலை, வனம், வனந்திரங்களைக் கடந்து ஆத்மா ராம னென்னும் பரமேட்டி ஞான மென்னும் பாணத்தைத் தீட்டி ஆவரண மென்னுந் தாடகையை மாட்டி அடி யோடு மிறந்துபோகவாட்டி இச்சை யென்னும் மாரீச னுக்குப் பயங்காட்டி என்னெதிரில் வந்தால் சாவாயென் றோட்டி விபசார மென்னும் பாறையை மிதித்து ஆசார மென்னு மகலிகையைத் துதித்து ஏகாந்த மென்னு மிதலையிற் சேர்ந்து சாந்த மென்னுஞ் சனகரைச் சார் ந்து பொறுமை யென்னுங் கார்முகத்தை யொடித்து ஆனந்த மென்னும் ஜானகியின் கைபிடித்து மத மென் னும் பரசுராமனை யெதிர்த்து யென்றும் மதமெழாமல் விதிர்த்து மோட்ச மென்னு மயோத்தியிற் புகுந்து ஜீவன் நானல்ல வென்று வந்த பிரம மென்னுந் தசரத னைக்கூட ஜீவத்வமற லென்னும் மகுடாபிஷேகத்தை நாடகக்கிரியை யென்னுங் கைகையினுடைய சலன மென்னு மேவல்வந்தடைய பிரம மென்னுந் தசரதனைப் பிரிந்து மோட்ச மென்னு மயோத்தியைத் துறந்து வைராக்கிய மென்னும் லட்சுமணனுடனே ஆனந்த மென்னும் வைதேகியுடனே சித்த மென்னுஞ் சரயுநதி யைத்தாவிப் புத்தியென்னுங் குகன்றனைமேவி விக்ஷேப மென்னும் வனத்தினுட்சென்று தபமென்னும் சித்திர கூடத்தில் நின்று அகங்கார மென்னும் விராதனைக் கொன்று மனமென்னுங் காகாசுரனைவென்று சங்கல்ப மென்னுங் கண்ணைக் கெடுத்து நிருவிகல்ப மென்னுங் கண்ணைக்கொடுத்து வீரமென்னு மகஸ்தியரைக் கண்டு தீரமென்னு மஸ்திரம் பெற்றுக்கொண்டு காமமென்னுஞ் சூர்ப்பனகையைத் தண்டித்து ஆகாமிய மென்னுங் கர தூஷணாதியரைக் கண்டித்து இச்சை யென்னும் மாரீச னாலே ஆனந்த மென்னுஞ் சீதையைப் பிரிந்ததாலே இராசத மென்னு மிராவணனடுத்து ஆனந்த மென்னுஞ் சீதையை யெடுத்து இன்ப மென்னும் வைதேகியை யுருக்கும் துன்ப மென்னும் லங்கையிலிருக்கும் அசு பவாசனை யென்னு மிராக்கதர் மொய்க்க என்ன மென் னும் அசோகவனத்தில் வைக்க ஆத்மா வென்னும் ஸ்ரீராமன் கடுகி இச்சை யென்னும் மாரீசனை முடுகி நிராசை யென்னும் பூமியின்மேற் சாய்த்து என்றைக் குந் தன்முன் வாராமல் மாய்த்து ஆனந்த மென்னு மை துலியால் வந்த இல்லாம லாத்மா ராமன் நொந்து வை ராக்கிய மென்னும் லட்சுமணனுட னயர்ந்து விட்சேப மென்னுங் கானகத்தி லலைந்து சிந்தனை யென்னும் கவந் தனைக்கொன்று சந்தோஷ மென்னுஞ் சவரிபாற்சென்று நித்தியாசன மென்னு மனுமானைக் கூடி ஆனந்த மென் னுஞ் சீதையைப் பாடி ஜனன மென்னுஞ் சப்த தருக் களைக் கொய்து பய மென்னும் வாலிமேலம்பெய்து அடய மென்னுஞ் சுக்ரீவனைக் காத்து சுபவாசனை யென் னும் வானரங்களைச் சேர்த்து நித்தியாசன மென்னு மனுமானைத் தூண்டி மோஹ மென்னுஞ் சமுத்திரத் தைத்தாண்டி லோப மென்னு மலகணியைத் தொலைத்து அசுபவாசனை யென்னு மிராக்கதரைக் கலைத்து ஆனந்த மென்னுஞ் சீதையைக் கண்டு உல்லாச மென்னு மனு பூதி மேற்கொண்டு எண்ண மென்னு மசோகவனத்தை யழித்து அஞ்ஞான மென்னும் மாலியவானைக் கிழித்து சந்தேக மென்னு மட்சயனைக் கழித்து விபரீத மென்னு மிந்த்ரசித்தனைப் பழித்து மயக்க மென்னும் பாசத்தை யெதிர்த்து இராசத மென்னு மிராவணனை யெதிர்த்து மௌன மென்னும் மக்கினியைப் பெருக்கித் துன்ப மென்னும் லங்கையைக் கருக்கி மோக மென்னும் வாரி யைச் சுட்டித் திடமென்னு மணையைக் கட்டிச் சாத்வீக மென்னும் விபீஷணனைக் கிட்டி இங்கே தாமஸ மென் னுங் கும்பகர்ணனை வெட்டி இது இராசத மென்னு மிராவணனை யதட்டி விபரீத மென்னு மிந்த்ரசித்தனை முட்டி மயக்க மென்னும் பாசத்தால் மயங்கி வைராக்கிய மென்னு மிலட்சுமணனுட னுயங்கி நித்தியாசனமென்னு மனுமார்களிக்க நிஷ்டை யென்னுஞ் சஞ்சீவியையளிக்க வைராக்கிய மென்னும் லட்சுமணர் கதிக்க விபரீத மென்னு மிந்திரசித்தனைச் சிதைக்கச் சஞ்சித மென்னு மூலபலமெதிர்க்க தீரமென்னுமோசனுஸ்திரம் வதைக்க அசுபவாசனை யென்னு மிராக்கதர் முடுக்கச் சுபவாசனை யென்னும் வானரங்கள் கெடுக்க ஆத்மா வென்னும் ஸ்ரீராமன் கடுத்துக் கெம்பீர மென்னுங் கோதண்ட மெடுத்து இராசத மென்னு மிராவணனை யடுத்து ஞான மென்னும் பாணத்தைத் தொடுத்து நானென்னுங் கல சத்தை யுடைத்துத் தசேந்திரியங்க ளென்னுந் தசமஸ் தங்களை யுடைத்து ஆனந்த மென்னுஞ் சீதையைக் கண்டு மௌனக்கினியிற் குளியென்று விண்டு பிரம மென்னுந் தசரதனை நாடி ஆனந்த மென்னுஞ் சீதை யைக் கூடி மோட்ச மென்னு மயோத்திற் புகுந்து ஜீவத்வமற லென்னு மகுடாபிஷேகம் புனைந்து பிரம

யென்னுந் தசாதனே தானுகி மோட்ச மென்னு மயோத்தியிற் புகுந்து ஜீவத்வமற லென்னு மகுடாபி ஷேகம் புனைந்து பிரம மென்னுந் தசரதனே தானுகி மோட்ச மென்னு மயோத்திக்குக் கோனுகிக் கேவல கைவல்ய பிரமானந்த சொரூப சாட்சாத்காரமாய் பிரகா சித்தாரென்று துயரேத்து மாஞ்சனேயர் பகர்ந்து சந்தோஷ மேலீட்ட லானந்த நிர்த்தனஞ் செய்யத் தொடக்கினர்.

இந்தப்படி க்ஞான ராமாயணத்தைக்கேட்ட துளசி தாசர் தன்னை மறந்து ஆனந்தத் தாண்டவஞ் செய்யத் தொடங்கினர். அதைக்கேட்ட யாவரும் புகழ்ந்தார் கள், தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள், மூவர்கள் கொண்டாடி மகிழ்ந்தார்கள், ரிஷிகளெல்லாம் மடத்தில் நிறைந்தார்கள், சித்தர்க ளிதுவே மோட்ச மார்க்கமென் றறைந்தார்கள், சகலருந் அவிதயானையைத் துறந்தார் கள், மெழுகைப்போற் கறைந்தார்கள், பிரமத்திலிறந் தார்கள், பிரமஸ்வருபமாயிருந்தார்கள், தேவர்களெல்லா மங்கேயே கூடினர்கள், ரம்பையர் நடனமாடினர்கள், தும்புருநாரதர் சங்கீதம் பாடினர்கள், அனுமாரைக் கொண்டாடினர்கள். அப்போ துண்டாகிய வேதகோஷ் டங்களினுலும் சிவ சங்கீர்த்தனங்களினுலும் விஷ்ணு சங்கீர்த்தனங்களினுலும் அநுமாருந் துளசிதாசரும் தங்களுடைய ஆனந்த நடனம்நீங்கிப் பிரமானந்தமோங் கித் தேவரிஷிகள் பாதங்களைத் தாங்கி இன்பமேலீட் டாற்றேங்கி வேதாந்த வார்த்தைகளாடி நிர்க்குண கீர்த் தனங்களைப்பாடி ஆஞ்சனேயர் முதலானவர்களும் துளசி தாசரிடம் விடைபெற்றுக் கொண்டு தங்கள் தங்களிருப் பிடஞ் சேர்ந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங் கினர்.

ஞானேபதேச அத்தியாயம் முற்றிற்று.

---

பத்தாவது

## துளசிதாசர் மடத்திற்கு பகவான் காவலாயிருந்த அத்தியாயம்.

---

கேளுங்கள் சித்தர்களே! சற்சங்கத்துக்குரிய பக் தர்களே! ஆஞ்சநேயர் முதலானேர் தங்கடங்களிருப் பிடஞ் சேர்ந்தபின் காசிதேசத்திலுள்ள சகலரும் துளசி தாசரை வணங்கி இணங்கி, ஓ சுவாமி! நீரே எங்க ளுடைய சற்குருநாதன், நீரே மெஞ்ஞான போதன், நீரே சகலருந்தொழும் ஜகநாதன், நீரே சுத்தசாஸ்வித விநோதன், நீரே எங்களுடைய பாபங்களைப் பரிகரிக்கும் நீதன் யென்று தோத்திரஞ் செய்தேத்தும் போது துளசிதாசர் அனைவரையு மன்போடு வுபசரித்து அத்தி யந்த பக்தியுட னனுசரித்து மடத்திலிருக்குஞ் சாதுக் களைப் பார்த்து கரங்களைச்சேர்த்து இன்றுமுத லிம் மடத்திலிருக்கும் வஸ்துக்களை வேண்டினவர்க் களித்து நீங்களுங்களித்துப் பகவத்பாராயணஞ் செய்துக் கொண் டின்புடனிருங்களெனத் திருவாய் மலர்ந்தருளி வார்த் தையாடலுங் குறைந்து ஏகாந்த ஸ்தான மடைந்து தானம், நிதானம், தியானம், க்ஞான மெனும் நான்கை யுங்கடந்து மௌனத்தைநாடிப் பிரம நிஷ்டையைக்கூடி பரமானந்தவாரியிற் படிந்திருந்தார். இவ்வனஞ் சில நாள் கழிவுற ஒருநாளிரவில் துளசிதாசர் மடத்தில் நெடுநாளாயிருந்த சாதுக்களில் நால்வர் மேல்வருங் காரிய மறியாதவர்களாய் மடத்திலிருக்குஞ் சில வற்புத வஸ்துக்களைச் சொற்பமாயுன்னுது காவடமாக வெடுத் துக்கொண்டு நடுராத்திரியில் பிறரறியாமல் மடத்தி லிருந்து வெளிப்படுந் தருவாயி லிதையறிந்த பகவான் ஸ்ரீராமலட்சுமணராய் வந்து சாதுக்களைத்தடுத்து யாரடா நீங்கள் துளசிதாசருடைய சொத்துக்களை ஆசையால் மோசஞ்செய்து எடுத்துக் கொண்டு போகிறீர்கள் நில் லுங்கள் நில்லுங்கள் காவற்காரர்களாகிய எங்களுக் குத் தாரஞ் சொல்லுங்கள் சொல்லுங்களென் றதட்டினர் கள். அதற்கந்தப் புரைசாதுக்கள் இருட்டினுல் ஸ்ரீராம லட்சுமணரென் றறியாமல் யாரோ சேவகர் மறிக் கிறார்களெனப் பயந்து நயந்து முன்னிட்டகாலைப் பின் னிட்டு மடத்துட் பிரவேசித்து சற்றுநேரம் யோசித்து மற்றோர் வழியாக வதிக பரபரப்போடும் வெளிப்பட் டுப் போகும்போது அங்கேயும் ஸ்ரீராமலட்சுமணர் வந்து மறித்துக் கொக்கரித்துக் காவடர்மேற் குதித்துத் துளசி தாசரைத் துதித்து அடா திருட்டுக் குருட்டுப் பிரட்டு முரட்டுக் காவடரே! காருண்யமில்லாக் குரவரே! என் னடா கொண்டுபோகிறீர்களென மிரட்டினர்கள்

அதற்கத்தேனர் ஒருபா லொதுங்கிப் பதுங்கி மயங்கித் தயங்கி மடத்தினுள் வந்து மிகவும் நொந்து சாதுக்களுக்குப் புலப்படா முன்னமே வெளிப்பட வேண்டு மென்னுங் கருத்தால் வேறுவழியாகச் சந்தடி யின்றி வெளிப்பட்டு மெள்ளப் போகும்போது அங்கே யும் ஸ்ரீராமலட்சுமணர் சந்தேகமின்றி அவர்களருகிற் சென்று எதிரில் நின்று மெதுவாய் அடா கள்ளப்பயல் களே! மெள்ள எங்கேயடா போகிறீர்களெனத் தடுத் தார்கள். அப்போது பிறர்செய்த தப்பிதத்தால் பிர

மித்துக் கம்பித்து ஸ்தம்பித்து மர்மம் வெளிப்படும் போ லிருக்கின்றதே யென் றாகித்து அச்சேவகரை நோக்கி ஓ காவலரே! நீங்களும் நாங்களும் இதைப் பாகித்துக் கொள்ளலாம் வருவீர்களென் றழைத்தார்கள், அது கேட்ட ஸ்ரீராமலட்சுமணர் ஓ அந்தணர்களே! இப் போது நாம் பாகித்துக் கொள்வது பணத்தையா பாபத் தையா சொல்லுங்களென மறையோர் பணத்தையும் பாபத்தையும் பாகித்துக் கொள்ளுவோ மென இராம லட்சுமணர் எங்களுக்குப் பணம்மாத்திரங் கொடுத்தால் சம்மதமன்றிப் பாபத்தை யேற்றுக்கொள்ள சம்மத மில்லையெனப் பூசுரர் அப்படி சொன்னத்தையே பங்கிட் டுக் கொள்ளுமென ராமலட்சுமணர் நீங்கள் விப்பிரர் களாயிருந்துந் தப்புக்காரியங்கள் செய்ததை நாங்கள் பிரத்தியட்சமா யறிந்திருந்தும் தப்பித்துக் காத்தல் செய்ததில் பாதி கவர்ந்தால் பாபம் வந்தடையும் அது நீங்க ளிதுகால பரியந்தம் துளசிதாசருக்குச் சேவை செய்த புண்ணியத்தை எல்லாந் தாரைவார்க்கின்றீர்களா வென ஆதிவருணர் அப்படியே ஆகட்டும் சீக்கிரமிவ் விடம் விட்டுப் புறப்பட்டு வாருங்களென ஸ்ரீராமலட்சு மணர் நாங்கள் இவ்வூரரசன் கட்டளைப்படி மகானுபாவ ராகிய துளசிதாசருடைய மடத்துக் காவலாளரா யிருக்கின்றோ மாதலா லிவ்விடம்விட்டு மூன்றுஞ்சாமம் வரையி லடிபெயர்த்து வைக்கமாட்டோம் அன்றி நீங்க ளிகவின்பினைத் துச்சமாக நினைத்துச் சொச்சரூபமான பரமபதத்தை யிச்சித்து வெகுநாளாகத் துளசிதாச ருடைய சேவைசெய்து அபகரித்த வஸ்துக்க ளிவ்வளவு தானுவெனப் புரையோர் ஓ காவலரே விபசாரிக்கு நீதி யுரைப்பதுபோலக் கள்வராகிய எங்களுக்கு முத்தி விவ ரணைபைச் சொல்ல வந்தீர்கள் சாதுக்கள் விழித்துக் கொண்டால் மானம்போகும் சீக்கிரம் இவ்விடம் விட்டு நீங்கலாமென ராமலட்சுமணர் நீங்கள் கொண்டுவந்த வஸ்துக்களையெல்லாங் கொடுத்து நீங்கள்செய்த புண்ணி யத்தையெல்லா மெங்களுக்குத் தாரைவார்த்தா லன்றி உங்களை விடமாட்டோமென•அதற்கு · ஆசையில் மிக்க பூசுரர் நீங்களிருவரும் நடுக்கொள்ளைக்காரர்களாக வந் தீர்கள் பேராசையுள்ள நீங்க ளேவலாள ரென்ப தபத் தம எங்களைப்போன்ற உங்களுக்குப் பாகமே கொடுக்க லாகாது அப்படியிருக்க புண்ணியங் கொடுக்கக்கூடுமோ வென ஸ்ரீராமலட்சுமணர் பலவந்தமாகப் பாகங்கொடுப் போமென்று நீங்களே யுரைத்து எங்களைக் கள்வராகத் தீர்மானித்தீர்க ளினிப் பங்கும் வேண்டாம் பாபமும் வேண்டாம் உத்தமோத்தமராகிய துளசிதாசருடைய சொத்துக்களை அவருக்குக் கொடுப்பிக்குங் காரியமே எங்களுக் குரியதென முப்புரிநூலோர் அப்பப்பா இத் தருணத்தில் எங்களைத் தப்பிக்காமல் சோரரென மெய்ப் பிப்பது தப்பிதமல்லவா எப்படியாகிலும் தப்பிப்பீர்க ளென வேண்டக் கோதண்ட அஸ்தர் அப்பப்பா விப சாரிகளிடமும் கள்வரிடமும் பொய், கொலை, நிந்தை, கோபம், குரோதங் கொண்டிருக்கு மாதலா லிவ்வுலகில் சோரரைப் போன்ற நேசஸ்த ரியாருமில்லை உங்களை விட்டா லெங்களுக்குவரும் பெருந்தொல்லை இனி நீங்க ளிருவரும் இவ்வெல்லை கடந்து போகவேண்டா மெனு மெங்கள் சொல்லைக்கடக்கவே வேண்டாமென் றறையப் பார்ப்பார் ஓ காவலரே! எங்களைக் காட்டாமலும் வாட் டாமலும் இவ்வஸ்துக்களையும் நாங்கள் செய்த எல்லாப் புண்ணியத்தையும் கைக்கொண்டு விட்டுவிடக் கிருபை கூறுங்களெனத் தானவநாசர் விபசாரியையும் சோரரை யும் விடக்கூடாதென வேதம் முறையிடுகின்றதே யென, வேதியர் நாங்கள் விப்பிரர்களாதலால் எங்கள் தப்பிதம் பார்க்காமல் மன்னியுங்க ளெனப் பக்த பரிபாலனர் ஜாரஞ்செய்த அகலிகை முதலான ஸ்திரீகளும் சோரஞ் செய்த அஷ்டவசுக்களும் சாபத்துக் குள்ளானர்க ளன் றித் தப்பிப்போக வில்லை யாதலால் கள்வருக் குபகாரஞ் செய்தவர்கள் கடுநரகடைய வேண்டுங் காரணத்தாலுங் களை விடுவதினி யில்லை யில்லை யென் றறையப் பூசுரர் தெரியாம லிக்குற்றத்துக் காளானோம் இனி எங்க ளாயுள் பரியந்தம் களவுசெய்ய மாட்டோமென்று வணங் கத் தசரத புத்திரர் விழியில்லாதான் வழியறியாதது போலச் சாஸ்திர மறியாதவர்களே தப்புவழியில் நடப் பார்கள். நீங்கள் வேதாதிகளை வோதியிருந்தும் அநீதிக் குட்பட்ட காரணத்தால் விடுவதில்லை மடத்துக்குள் நடப்பதே யோக்கியமென முடுக்கினார்கள். அதனால் அச்சத்தில் மிகுந்த அந்தணர்க ளபகரித்து வந்த அறிய வஸ்துக்களை அவ்விடத்தி லெறிந்து குடுகுடு வென மூலைக்கொருவரா யோட்ட மெடுத்தார்கள் உடனே ஸ்ரீராமலட்சுமண பரத சத்துருக்க ரானவர்கள் பின் திடுதிடென் றோடி நால்வரையுங் கைப்பிடியாகப் பிடித் துக் கொண்டு வந்து அவர்கள் கொண்டுவந்த பொருள் களை அவர்கள் மஸ்தகத்தின்மே லேற்றி அடா சோர ரே! வீரராகத் தீரம்பேசிக் கொண்டு மெள்ளப் போகா மல் துள்ளியோடி வொளிக்க எத்தனித்தீர்களோ எல்லா வற்றிலும் ஈனச் செய்கைக் குட்பட்டதால். அபகரித்த பொருளும் புண்ணிய மனைத்துந் தத்தஞ் செய்ய வொப்புக் கொண்டீர்கள் நயமொழிகள் விண்டீர்கள் கொடியோராகிய உங்களுடைய புண்ணியமும் பாபமே

யல்லவோ வென் றுரைத்துக் கழுத்தைப் பிடித்து கெட்டி மடத்துக்குட் டள்ளி ஓ ஓ கள்ளர் புகுந்தார்கள் புகுந்தார்கள் யென்று ஓசையாகக் கூச்சலிட்டு மடத்திலுள்ள சகலரும் விழித்துக் கொள்ளும்படியாய்ச் செய்து மாயமாய் மறைந்தார்கள்.

உடனே சாதுக்கள் வெளிப்பட் டோடிவந்து களவடஞ் செய்த நால்வரையும் தள்ளிக்கொண்டே மடத்துட் கொண்டுபோய்த் தீபவெளிச்சத்திற் பார்க்கையில் தங்களிற் சேர்ந்தவர்களா யிருக்கக் கண்டு பெருங் கோபங்கொண்டு அடா விசுவாச துரோகிகளே! அவிவேகிகளே! இகபோகிகளே! துன்பரோகிகளே! அற்பமோகிகளே எஃறடித்து வைது கவர்ந்த சொத்துக்களுடன் துளசிதாசரிடங் கொண்டுபோய் நிறுத்தி ஓ ஸ்வாமி! இந்த மூடாத்மாக்கள் தங்களுக்குத் தேவையான தெங்களைக் கேட் டெடுத்துக்கொண்டு போகாமல் வவ்வுதல் செய்து போகும்போது காவலர்கள் கண்டு பிடித்து எங்களிட மெய்ப்பித்துப் போய்விட்டார்கள் இவர்களை உதயமானதே அரையனிட மொப்பிக்கிறோ மென்றுரைக்க, துளசிதாசர் சாதுக்கள்மேல் முனிந்து அந்த கள்ளச்சாதுக்களைப் பணிந்து ஓ விப்பிரரே! இந்தச் சாதுக்கள் செய்த தப்பிதத்தை மன்னித்து என்மேல் கருணைகூர்ந்து உங்களுக் கிஷ்டமானதை யெடுத்துக்கொண்டிப்போதே போகலாமென வணங்க அது கேட்ட சாதுக்கள் ஓ ஸ்வாமி! நாங்கள் களவுசெய்து இவ்வஸ்துகளைக் கொண்டுபோகத் துணிந்து இராத்திரியெல்லாம் பட்டபாடு சொல்லமுடியாது அது நினைவில் வந்தால் எங்கள் நெஞ்சம் பிளந்துபோகின்ற தன்றோ வென்றழத் தொடங்கினர்கள். அதற்கவ் வரிதாசர் மிகவும் முனிவுகொண்டு உமக்கிஷ்டமான தெடுத்துக் கொண்டு போவதைத் தடுத் தும்களுக் கஷ்டங்கொடுத்த துஷ்டர்கள் யாரென்றார். பூசுரர் ஓ ஸ்வாமி! நமது மடத்து வாயில்களி லிபரோ காவலிருந்துகொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு புறம் போகாமற் றடைசெய்து வெகுநேரமாய்க் கைதிசெய்து வைத்ததன்றிப் பலருமறியக் காட்டி காமுஷ்டிகளா லெங்களை வாட்டி மானத்தை வாங்கி ஈனத்துக்குட்படச் செய்தார்களென த்தொழ அரிதாசர் வெகுண்டு ஓ பரமசாதுக்களே! உங்களை வைதவர்? கைது செய்தவர்? அவர்களைக் காண்பியுங்க ளிப்போதே இறுகக்கட்டி இரண்டு துண்டாக வெட்டி எமபுரத்துக் கனுப்புகிறே னென்றார் வாளை யேந்திக்கொண்டு வெளியே புறப்பட்டார் உடனே கள்வர் நால்வரும் நெடுந்தடிகளெடுத்துக்கொண்டு தீவட்டிகளுடன் புறப்பட்டு மடத்து நான்கு வாசலிலும் பார்த்து காவலரைக் காணாமல் இப்போதிருந்தவர்க ளெங்கேயோ மறைந்தார்க ளென்றுரைத் தவர்களைக் கைப்பிடியாக பிடிக்கவேண்டுமென்கிற துவேஷத்தாற் பல பக்கங்களிலுக் தேடலுற்றார்கள்.

துளசிதாசர் காவலரைத் தேடும் வேதபாலகரை விளித்து உங்களைத் தடுத்து அடித்தவர்களின் மண்டை சிதறப் புடைக்கிறேன் சீக்கிரங் காட்டுங்களென்று ஆக்ரோஷத்துடன் அட்டகாசஞ் செய்து தெருவீதியில் நின்றிருந்தார் மேற்குலத்தோர் நாற்றிசையினுந் தேடிக் காணாமல் அரிதாசர் பக்கலடைந்து காவலரைக் காணோமென்றார்கள். பரமபாகவதன் அந்தக் காவலர்க ளெவ்வித ரூபமுடையவர்கள் என்ன, ஆயுதத்தைப் பிடித்துக் கொண் டிருக்கிறவர்களென்று கேட்கும்போது இவ்வித ரூபமுடையவர்கள் தானப்பா வென்று ஸ்ரீராம லட்சுமண பரத சத்துருக்கர் நால்வரும் துளசிதாசர் முன்னின்று நாங்களே உம்முடைய அன்பர்களை மறித்தவர்களாதலால் எங்களை உமது கைவாளால் வெட்டிவிடு மென்றுரைத்துத் தங்கள் கையிலிருக்கும் அம்பு வில்லுகளைக் கீழேவைத்துக் குனிந்து நின்றார்கள். அப்போது அரிதாசர் தன் கையிலிருந்த வாளைக் கீழெறிந்து அஞ்சலிபஸ்தராய் நின்றுக்கொண்டு ஓம் அரி அரி முராரி நாகரி அம்புஜாக்ஷரி மாதவா யாதவா ராகவா கேசவா ஸ்ரீராமா பரந்தாமா பத்மநாபா பரமசொரூபா கார்வண்ணா கமலக்கண்ணா அனுதாக்ஷகா அகிலாண்டகோடி பிரமாண்டநாயகா ராவணமர்த்தனா ஓ ஜனார்த்தனா வெனப் பற்பல விதங்களாகத் தோத்திரம் புரிந்து மிகவும் பரிந்து ஓ என் தெய்வமே நீ யென் றறியாமற்போனேனே ஆதரவற்றவனானேனே முன்னுனக்குட்பட்டேனே இப்போது மறந்துவிட்டேனே கோபத்துக்குட்பட்டேனே ஆ கெட்டேனே யென்று பற்பல வார்த்தைகள் புகன்று பாதங்கள் மேல் வீழ்ந்து ஓ வென் றோலமிட்டழுந் துளசிதாசரை ஸ்ரீராமர் வாரியெடுத்து மார்புடனணைத்துக்கொண்டு ஓ மெய்ஞ்ஞான விலாசனே! எனக்குரிய நேசனே சுபப்பிரகாசனே! துளசிதாசனே! பிரமஞ்ஞானத்தாலென்னை மறந்துவிட்டாயா வென்று திருவாய் மலர்ந்தருள அதற்குத் துளசிதாசர் ஓ தெய்வமே! நீயன்றிப் பிரமமென்பது வேறுண்டோ? உமது வட்சஸ்தலத்தில் வீற்றிருக்கும் சீதாபிராட்டியன்றி ஆனந்த மென்பது வேறொன்றுண்டோ? வேறுண்டென்பவர்க்கு மோட்ச வீடுண்டா உம்மை நம்பினோர்க்குக் கேடுண்டா உம்மை வெட்டும்படியான வாளுண்டா? உம்மைப் பிரிந்த நா

ளுண்டா? ஒ பகவானே! பகவானே! அடியேனியற்றிய
குற்றங்களை நற்றவமாகவும் அடியேன் செய்த தூஷணை
களைப் பூஷணமாகவும் கொண்டு என்னையாட்கொண்டு
உமக்குகந்த தொண்டுசெய்வ தேதனை விண்டு கருணை
கூறமென்று பலதரம் வணங்கும் அரிதாசரைப் பகவான்
கருணையுடன் நோக்கி ஒ பரம பாகவதனே! பரப்பிரம்
மஞ்ஞானியே! உம்மை யறியாமல் உமது சொத்துக்களைக்
களவுசெய்துக் கொண்டுபோகுங் கள்வரை மறித்தோமே
யல்லது வேறோரபசாரஞ் செய்யவில்லையே! ஒ உபகார
புருஷனே! நன்மைசெய்தவர்கட்குத் துன்மை செய்வது
போல எங்களை வாளால் வெட்டத் துணிந்து வரலாமோ?
நாங்கள் துன்பமுறலாமோ? ஒ சீவ்காருண்யமுள்ள சீமா
னே! உமக்கிவ்வளவு கோபமிருக்கலாமோ வென்றுகேட்ச.

அரிபக்தன் ஒ அரிபரந்தாமா! ஸ்ரீ ரகுராமா வென்
றுள்ள முருகி ஆனந்தக்கண்ணீர் பெருகிப் பலதரஞ் சூழ்
ந்து பாதங்களிற்றாழ்ந்து ஒ ஸ்வாமி! புண்டரீகாக்ஷா!
பூரணமருள் சூக்ஷா! அனேக கோடிகாலந் தவஞ்செய்
தாலுங் கிடைப்பதற்கரிதான உமது திவ்விய தரிசனந்
தந்து திருவாயால் வைது உத்தம அஸ்தங்களாலடித்து
ஆட்கொண்ட புனிதர்களான இந்தச் சுதர்களோ அற்ப
மான சொத்துக்குரியவராக ளாகமாட்டார்களோ? உம்
முடைய அரிய தரிசனத்திலும் இச்சொற்ப வஸ்துக்க
ளுயர்ந்ததோ? உமது திவ்விய கரங்களாலடிபட்ட இவ்
விப்பிரர்கள் செய்த ஒப்பிலா மெய்த்தவமேதோ? என்
னையனே நின்னுடைய திருவிளையாட்டைப்பிரமாதிதேவர்
களாலுந் தெரிந்துக்கொள்ளக் கூடாதென்றால் என்னா
லறிந்துகொள்ளக் கூடுமோ? இவ்வுத்தமர்களை அடித்த
திவ்வியாஸ்தங்களா லென்னை யோரடி அடிக்கலாகாதோ?
அடித்தாற் சகல கர்மங்களும் நீங்கிப் போகாதோ? இவர்
கள் செய்த புண்ணியமேதோ? நான் செய்த பாவமேசோ
வென்னும் பற்பல வார்த்தைகளாடும் பரம பாகவதனை
ஸ்ரீமந் நாராயணன் அஸ்த மஸ்த சையோகஞ்செய்து
கருணைமழை பெய்து ஒ துளசிதாசரே! இந்தப் பார்ப்பார்
நெடுநாளாக உம்மைச்சேர்ந்து பின்னு முலகியலைச்சார்ந்து
கர்மிகளாய்ப் போகாமற் றடுத்தோம் ஆட்கொள்ள சலந்
தொடுத்தோம் அல்லாமல் நல்லோரை யடுத்தவர்கள்
பொல்லா நரகமடையலாமா? ருக்மாங்கதன் பட்டணத்தி
லிருந்தவர்களெல்லாம் பரமபதமடைய வில்லையா? உமக்
குத் தெரியாதது மொன்றுண்டோ வென்றுரைக்க துளசி
தாசர் ஒ மாதவனே! அடியேனுகிய கொடியேன்மீது
உமது கருணை இப்படியு மிருக்க நானியற்றிய தபமேதோ?
என்னைப்போல் பாக்கியமுடையவர்க ளிவ்வுலகிலொருவ
ருண்டோ? ஒ தெய்வமே! அரூபமாகியும் ஆனந்தமாத்
திரமாகியு மிரானின்ற பரப்பிரமமும் அடியார்கள் நினைத்த
வண்ணமான ரூபமெடுத்தாட் கொள்பவரும் நீரன்றி
வேறொன்றுண்டா? பாரில்லாமல் நீருண்டா?
உம்மையன்றி மெய்த்தெய்வ மொன்றுண்டா? உன்
டெனச் சொல்வாருண்டா? அப்படியுரைத்துமது மாயை
யை வெல்வாருண்டா? வெல்வதற்கொருவ ராதரவுண்டா?
ஒ தேவாதிதேவா! வாசுதேவா! மகானுபாவா வென்றி
துதித் துருகும்போது பகவான் மிகவும்மகிழ்ந்து, ஒ என்
னன்பனே! மேலான யின்பனே! இனிமேலுன்சொத்தை
யாருக்காவது கொடு நாங்கள் தடைசெய்ய மாட்டோ
மெனப்பகர்ந்து அந்தர்த்தானமானுர்கள். பின்பு அரிதா
சர் அரியின் திருக்கரங்களா லடிப்பட்ட சாதுக்களினடி
களிற்றாழ்ந்து ஸ்ரீமந் நாராயணருடைய அஸ்தங்களாலடி
பட்ட கனவான்களே! அரியினரிதான தரிசனம்பெற்ற
தனவான்களே! ஆண்டவன் திருவாக்கா லேசக்கேட்கும்
படியான உங்கள் செய்தவமேதோ? உங்கள் மீதிவ்வளவு
காருண்யம் பகவானுக்கு வந்த காரணமேதோ? ஒ ஸ்வாமி
களே! நிஷ்காமிகளே? நெடுநாளாய்ப் பகவானைப் பார்க்
காதிருந்த இக்கொடியேனுக்கு அரியின் தரிசனந் தரு
விக்கவும், உமது தபோமகிமையைச் சகலருக்குந் தெரி
விக்கவும், அற்பமான இச்சொத்துக்களைக் கவர்ந்தீர்களோ?
உங்களுடைய அற்புதமான தபத்தையறியாப் பாவியா
னேனே? தெரியாமையா லுங்களுக்குச் சேவை செய்
யாமற் போனேனே? இனிமேலாவதென்னுற் றெண்டு
அன்புடன் செய்வித்துக்கொண்டு பேரின்ப மொழிகளை
விண்டு முழுதுமென்னை யாட்கொண்டு கிருபை கூறுங்க
ளென விண்டு அவர்கள் கரங்களைப் பிடித்துக்கொண்டு
மடத்தினுள் வாருங்களென வேண்டிக்கொண்டு மடாதி
பதிகள் நீங்களே யெனப்பகர்ந்து ஸ்ரீமந் நாராயணனைத்
துதித்து ஆனந்தமேலீட்டாற் குதித்துப் பிரமானந்தத்
திற் சொக்கி மோட்ச வீட்டிற் புக்கி தன்னை மறந்திருந்
தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னுஞ்
சொல்லத் தொடங்கினர்.

பகவான் காவலாயிருந்த அத்தியாயம்
முற்றிற்று.

## பதினோராவது

## துளசிதாசரை சோதித்த அத்தியாயம்.



கேளுஞ் சித்தர்களே ! துளசிதாச ரிப்படியிருக்குங் காலத்தி லோர்நாள் மமதாதேவி அனேக சாதுக்களுக் கன்னமிட எண்ணங்கொண்டு சுத்த ஏகாதசியின் மறுநா ளிரண்டாயிரம் பிராமணர்களுக் குச்சந்தர்ப்பணஞ்செய்து சகலரும் அன்னம்புசிக்குந் தறுவாயில் பகவானே ரங் தனைஞகி மடத்துட்பிரவேசித்து துளசிதாசருங்கு வந்த னஞ்செய்து ஓ சுவாமி! ஏழைப்பிராமணனாகிய அடியேன் மிகவும் பசியோடும் வந்திருக்கின்றேன் அன்னமகப்படுமா வென்று கேட்க, உடனே மறையோர் குலமுறை விசா ரித்துப் பந்தியில் வைத்துக்கொண் டுண்ணப்போகையில் மாயா மறையோன் சகலரையும் நோக்கி, ஓ சாதுக்களே நீங்களெல்லாம் மிகவும் புனிதர்களா யிருக்கின்றீர்கள் நானோ மிகவும் பாவியா யிருக்கின்றேன் அதேதென்று கேட்பீரோ நான் பிரமஞ்ஞானியாகிய ஓர் விப்பிரனை அறி வீனத்தாற்கொன்று அப்பிரமத்தியைமேற்கொண்டு அது தீர இக்கங்கையில் ஸ்நானஞ் செய்து பசிவேதனை பொ றுக்கமாட்டாம லிங்கடைந்தேன். ஆதலால், அப்படியே னுங்களுடனுண்ணும்படியாக வொப்புக்கொள்வீர்களோ அல்லது தள்ளிவிடுவீர்களோ உற்றது சொன்னா லற்றது பொறுந்து மென்கிறபடி உண்மையைச் சொல்லிவிட்டே னென் றுரைத்த மாத்திரத்தில் பூசுரரெல்லாமெழுந்து அம்மறையோன்மேல் விழுந்து அடித்து இடித்து அவ மரியாதை செய்து வெளியிற் போகும்படியாக விரைந்து பேசத்தொடங்கினார்கள். அதற்குத் துளசிதாசர் சாதுக் களையமர்த்தி வந்த வேதியனைப்பார்த்து கரங்களைச்சேர் த்து ஓ பிராமணோத்தமா! சீக்கிரஞ் ஜெய சீதாராமென்று சொல்லும். உம்மையடைந்த பிரமத்தி முதலான மகா பாதகங்களெல்லாம் நிவர்த்தியாய்ப் பரிசுத்தமாவீரென் றுரைய அதற்கம் மாயாவேதியன் சற்றுநேரம் மௌன முற்றிருந்து ஐயா துளசிதாசரே ! ஏழைகட்கு நேசரே ! இப்போது நீருரைத்த வாக்கியத்தை என் வாக்கினாற் சொல்லவேமாட்டேன் சொல்லவோ நாவெழாது ஏனென் பீரேல் நானனேக தேவசாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்தே னதிலிந்த நாமமில்லவேயில்லை அன்றி இவ்வ ளவு சிக்கானவார்த்தையை இதுபரியந்தம் நான் கேட் டதேயில்லை சொல்லலாமென்றால் தடமாட்டமா யிருக் கின்றது இதற்கு நானென்ன செய்யட்டுமென் றுபாச மடைந்தவர்போ லபிநயித்திருந்தார்.

அதுகேட்ட சாதுப் பிராமணர்கள் சகலரும் வெகு லேசாயுரைக்கும் ஜெய சீதாராமென்னுந் திவ்விய நாமத் தைக் கொடும்பாவியான உன் நாக்கிற் சொல்வாயா ? பிர மத்தி சூழ்ந்த உனக்குச் சொல்லவும் வருமா ? சொன்னா லும் பயன்தருமா? சீக்கிர மிவ்விடம்விட்டு வெளியிற் போடா துஷ்டா ? எங்களுடனுண்ணத்தகாத பிரஷ்டா? பஞ்சமர்களினுங் கனிஷ்டாவென்று வைததைக்கேட்ட துளசிதாசர் சாதுக்கள்மேல் முனிவுகொண்டு அப்பூசுர னருகிற் சென்று, ஓ பிராமணோத்தமா ! வேதங்கள் புக ழுந் தாரக மந்திரத்தை யாருஞ்சொல்ல நீர் கேட்டதில்லை யோ? அப்படி கேட்டிருக்காவிட்டால் அடியேன் இன்ன மோர்தரஞ் சொல்லுகிறேன் கேளுமென்று அவர்காதரு கிற் றன் வாயைவைத்து ஜெய சீதாராமென்று சொல்லு மையாவென்றார். அதுகேட்ட மாயாவேதியன் ஜெய வென்பது நல்ல வார்த்தையே அதற்குப் பின் சொன்ன மொழிகள் மிகவும் கெட்டதாயிருக்கின்றது. ஆதலால் அதைநீரும் மற்றியாவரும் நினைக்கவே கூடாதென் றுரைக்க, துளசிதாசர் வியப்புற்றவராய், ஓ பிராமணோத்தமா ! இக்காசியில் மரிக்கும் பரிசுத்தன் வலதுகாதில் பரமசிவ னுருபதேசிக்கும் திவ்விய திருநாமத்தையேன் நினைக்கக் கூடாதென்று மறுக்கின்றீரென விப்பிரன் மரித்த பிரே தத்தைச் சுமந்துகொண்டேகும்போது மரிக்கும்போதும் ஓதும் இழிவான வார்த்தையைச் சுபமாக ஜீவித்திருக்குங் காலத்தில் நினைக்கலாகுமா ? அமங்கலத்துக்குதவுவது சுமங்கலத்துக்குதவுமா ? சீ சீ இனி அவ்வார்த்தையைச் சொல்லவே வேண்டாமென, துளசிதாசர் அனுதினம் பரமசிவனாதியோர் தியானிக்கும் திவ்விய நாமத்தை வெறுக்கலாமா? மற்றொன்றால் பிரமத்திபாவம் நீங்குமா ? சீக்கிர மித்திருமந்திரத்தைச் சொல்லுமையாவென மறை யோன் வேண்டாமென்கிறவன் கழுத்தில் லிங்கம் கட்டு வதுபோல நான் மறுத்தும் நீரிறட்டித்துரைத்தால் என் மதி திரும்பமாட்டாது நான் சொல்லமாட்டேனென அரி தாசனச்சமுற்று நீரோர்ந்த தெய்வத்தைத் தியானிக்கின்றீ ரெனப் பூசுரன் பரமசிவனைப் பழிக்கிறேனென அரிபக் தன் சிவபத்தரானால் விபூதியணியாமல் திருநாம மணிந் திருக்குங் காரணமேனென ஆதிவருணன் என்னமோ மறந்து குருக்காயிடுவதை நெடுக்காயிட்டுவிட்டேன்.

முக்கியமாக நானீசுவரனையே தியானிக்கிறேனென பரமபாகவதன் சிவநாமமான அராவென்றும், சத்திநாம மான உமாவென்றுஞ் சொல்லுமையாவென முப்புரி

னாலோன் மிகவுஞ் சந்தோஷித்து, அர அரா உமா உமா வென்று பலதரஞ்சொல்ல அரிபக்தன் அ உ என்பதை நீக்கி மற்றிரண் டக்ஷரங்களையுங் கூட்டிச் சொல்லுமையா வென மேற்குலத்தோன் இதென்ன விபரீதம் உயிரெழுத்துக்களை நீக்கி நிற்கச் சீவமான எழுத்துக்களை கூட்டியதையோ சொல்லும்படி யுரைக்கிறீர். சீ சீ உயிரெழுத்தில்லாப்பேரை நான் கனவிலும் நினைக்கமாட்டேனென இனி சாதுக்கள் பொறுக்கமாட்டார்களென்று துளசிதாசர் பகவானுடைய திருநாமத்தை யுரைக்காவிட்டாலும் அன்புடன் கேட்டாற் போதுமெனப் பலதரமுரைத்து இனி யும்முடைய பாவங்களெல்லாம் பஸ்பமாய்ப் போய் விட்டது. கிருதார்த்தனாய் விட்டீரென்றறைந்து பலவந்தமாகப் பார்ப்பனைத் தன்னருகில் வீற்றிருக்கச் செய்து சகலரையு மன்னமுண்ணும்படி ஆக்கியாபித்தார் அதற்கந்தச் சாதுப்பிராமணர்கள் சம்மதிக்காமல் ஓ சுவாமி! ஜெய சீதாராமெனச் சொல்லுவதாலும் கேட்பதாலும் சகல பாபங்களுக்கும் மேலான பாபமாகிய பிரமத்தி நீங்குமா இது நீங்க அநேகநாள் ஜெபஞ்செய்ய வேண்டும் ஓமம் வளர்க்கவேண்டும் பிராயச்சித்தஞ்செய்ய வேண்டும். பிறகல்லவோ நம்முட னுண்ணவேண்டும் அப்படிக்கிருக்க இப்படிச்செய்வது நியாயமல்ல வென்று மறுக்க,

துளசிதாசர் ஒருதரம் ராமாவென்றுரைத்தாலும் அல்லது கேட்டாலும் சகல பாபங்களும் நிவாரணமாகுமெனச் சுருதி ஸ்மிருதி இதிகாசங்களு முறையிடுகின்றன இம்மறையோன் பலதரம் ராமாவென் றுரைத்ததைக் கேட்டாரே இன்னம் பிரமத்திபாபம் நீங்காமலிருக்கின்றதாவென சாதுக்கள் யாவரும் ஒரு சீவனைக்கொல்லலாகாது கொன்றாலதற்குத் தகுதியான பிராயச்சித்தஞ் செய்துக் கொள்வதன்றி அநேகநாள் ஜெபஞ்செய்ய வேண்டுமென்று வேதம் முறையிடுகின்றது. அன்றி ஸ்திரீஹத்தி சிசுஹத்தி கோஹத்தி முதலான பாபங்களிலுங் கொடியபாபமல்லவா பிரமத்தி யன்றி பதிவிரதை தன்னையறிந்த சீவன்முத்தன் பரம பக்தனாகிய இவர்களின் மனதையே நோகவைக்கலாகாது. அப்படிக்கிருக்க இவன் பிரமத்தை யுணர்ந்த பிராமணனைக்கொன்ற கொடிய பாபியாயிற்றே இவனைத் தீண்டலாமா அன்ன முண்ண வேண்டலாமா அதிபாதகனாகிய இவனுடைய நாக்கில் ராமாவென்கிற வாக்கியம் புறப்படுமாவென அரிதாசர் இம்மறையோன் அரா அரா உமா உமா வெனப் பலதர முரைத்ததை நீங்கள் கேட்கவில்லையோ அரா உமாவென்பதே ராமாவென்னுந் தாரகமந்த்ரமாகும். எப்படியென்றால், தசரத மகாராஜனுக்குப் புதல்வனாகப் பிறந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவுக்கு என்ன நாமகரண மிடலாமென யோசித்த வசிஷ்டர் அராவென்னும் ஈசுவர நாமத்தையும் உமாவென்னும் பார்வதியின் நாமத்தையும் ஒன்றாகச்சேர்த்து ராமாவென்கிற நாமதேயமிட்டார். அன்றி நீங்கள் ராமநாமத்தின்மகிமை யறிந்தவர்களால் வெகு நேரமாக வாதுசெய்யத் தொடங்கினீர்கள் அன்பர்களது மனதில் ரமிப்பவராகிய ஸ்ரீ ராமருடைய நாமதேயத்தின் பலனையுரைக்க வெகு விரிவாகும். அதேதெனனின், ரா-சகல பாபங்களையும் வெளிப்படுத்தும். மா-வெளிப்பட்ட பாபங்கள் தன்னையடையாமல் நிக்கிரகிக்கும், அதற்குத் திருஷ்டாந்தம் ரா-வென்றால் வாய்திறக்கும் மா-என்றால் வாய்மூடுமேயாம். ஓ சாதுக்களே ! ரா-ஆதிசிவன், மா-ஆதிசத்தி, ரா-பரப்பிரமமம், மா-சிற்சத்தி, ரா-ஆத்மா, மா-சீவன், ரா-வென்றால் பரப்பிரமத்தைத் துதித்ததாகும், மாவென்றால் மும்மூர்த்திகளை நினைத்ததாகும், ரா-வென்றால் பாபங்களணுகாது, ரா-மா வென்றால் எமன் நடுங்குவான், ராமாவென்றால் எமபாசந் துகளாகும். ராமாவென்றால் நாகவேதனை நீங்கிப்போம். ராமாவென்றால் குஷ்ட முதலான வியாதிகளகன்றுபோம், ராமாவென்றால் வறுமை சிறுமை நீங்கி அஷ்டயிசுவரியமுமுண்டாகும், ராமாவென்றால் கோரிய யெண்ணங்களெல்லாம் பலிதமாகும், ராமாவென்றால் பிரமத்தி முதலான சகல பாபங்களும் நீங்கி மோட்ச சாப்பிராச்சியத்தை யடையலாம், ராமாவென்றால் ஆயுள்விர்த்தியாய்ச் சகல வித்தைகளும் சம்பவிக்கும், ராமாவென்பதே தாரக மந்திரம், ராமாவென்பதே சகல கர்மங்களையுமோட்டும் மந்திரம், ராமாவென்பதே மோட்சமடையும் தந்திரம், ராமாவென்பதே அண்ட சராசரங்களிலும் நிறைந்திருக்கும் பிரந்தாம் என்று சொல்லியும், அந்தச் சாதுக்களின் சந்தேகம் நீங்காமையால் பிரமத்திசெய்த பிராமணருக்கு வட்டித்திருக்கும் பத்திரத்தைத் தன் கரங்களா லேந்திக் கொண்டு, ஓ சாதுக்களே! ராமாவென்னுந் திருமந்திரத்தின் பலனை உங்களுக்குக் காட்டுகிறேன்வாருங்களென்று ஸ்ரீ கைலாசவாசராகிய விசுவநாதர் திருக்கோயிலிற் பிரவேசித்து கல்லுருவான ரிஷபத்தின் முன் பத்திரத்தை வைத்துப் பலதரம பரமசிவனைச்சூழ்ந்து சிரசாஷ்டாங்கமாகத்தாழ்ந்து ஓம் அரகரா, மஹாதேவா, வாமதேவா, நீலகண்டா, நீரணிமுதல்வா, சாம்பவா, சங்கரா, மசானவாசா, கயிலாசவாசா, உமாபதி, பசுபதி, திரிநேத்ரா, திரிபுரதகனா! சர்வேஸ்வரா, பரமேசா, சர்ப்பாபரணா.

சர்வாபஹாரணா, காலகாலா, திரிசூலா, ஆதிமூர்த்தி, கபாலமூர்த்தி, விஸ்வநாதா, பூதகணநாத, கசிதா, சடநாதா, நந்திவாகனா, கங்கை மோஹனா, தாண்டவா, ஆண்டவாவென்று பற்பலவிதங்களாக்த் துதித்து ஆனந்தமேலீட்டாற் குதித்து லிங்கமூர்த்தியி னெதிரிலிருக்கும் நந்திகேசுவரரைப் பணிந்து, அவரது பாதங்களிற் றன் திருநயனங்களை யணிந்து, ஓ நந்திகேசுவரா! ரா-என்பது பரமசிவனும், மா-வென்பது ஆதிசக்தியுமாகி இந்தச் சத்திசிவனே ஆதிமூலப்பொருளாகிய ஸ்ரீ மந்நாராயணராகிய ரா-வென்னு மோரட்சரத்தினாலேயே பிரமத்தி முதலான மகா பாதகங்களெல்லாம் நிவாரண மாகுமென்பதும் சத்தியமானால் இந்தப் பத்திரத்திலுள்ள அன்னம் முதலான பதார்த்தங்களையும் புசித்து இந்தச் சாதுக்களின் சந்தேகத்தை நீக்கி பிரமத்திசெய்த பிராமணனைக் கிருதார்த்தனாக்கி ராமமந்திரத்தின் பலனை பலருமறியக் காட்டி என்னையாட்கொள்வாயென் றுரைத்த மாத்திரத்தில் கல்லுருவாயிருந்த ரிஷபமானது எழுந்து நின்று பலதரமுக்காரம்போட்டுப் பிராமணரூபமாய் நிற்கும் பகவானைப்பார்த்து முன் கால்களைச்சேர்த்து வந்தனஞ் செய்து அன்னம் முதலான சகல பதார்த்தங்களையுமுண்டு பத்திரத்தையு முட்கொண்டு சரணம்போட்டு ராமநாமமகிமையைப் பலருமறியக்காட்டி பழையபடி கல்லுருவான மாத்திரத்தில் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். தேவதுந்துமி தாம்தாமென முழங்கிற்று பின்பு துளசிதாசர் நந்திகேசுவரனையும் பரமேசுவரனையும் தொழுது இன்னமுமிவர்க்குண்டா பழுது சொல்லுங்கள் சாதுக்களே யென்றுரைத்துக் கடின நெஞ்சத்தைக்கரைத்து ஓ சாது பிராமணர்களே! ரா-என்னும் ஓரட்சரத்தினாலேயே சகல பாவங்களும் நிவாரணமாகுமென்று இந்தரிஷபம் பகர்ந்து பத்திரத்தோடு சகல பதார்த்தங்களுமுண்ட விந்தையைப் பார்த்தீர்களா? உங்களுக்குற்ற மாச்சரியத்தைத் தீர்த்தீர்களா? வெண்ணெயை விட்டு நெய்யைத் தேடுவதுபோலவும், உள்ளங்கையை விட்டு முழங்கையை நக்குவதைப் போலவும், ராமாவென்னுந் திவ்ய திருமந்திரத்தை நம்பாமல் ஓமம் வளர்க்கவேண்டும் பிராயச்சித்தம் செய்யவேண்டுமென்று வெகுநேரந் தர்க்கஞ் செய்தீர்களே? பூசுரனை வாயில்வந்தபடி வைதீர்களே? அடியேன் மொழியை நம்பாமற்போனீர்களே? சந்தேகத்துக் குள்ளானீர்களே? ராமாவென்னுஞ் சம்மாரத்தின்மகிமையே இவ்வளவிருக்குமாயின் ராமாவென்னு மோரட்சரத்தினா லெவ்வளவு நன்மை யடையலாகும். ஜெய சீதாராமென் றன்போடுந் துதிப்பர்பால் பாபமெட்டிப் பார்க்கக்கூடுமோ? ராமநாமத்தை நம்பினவர்களை எமன் பாசத்தாற் கட்டிப் பிடிக்க கூடுமோவென்று பற்பல வார்த்தைகளாடி ராம சங்கீர்த்தனம்பாடி ஆனந்த நிர்த்தனஞ் செய்யத் தொடங்கினர்.

சாதுக்களாச்சரியப்பட்டுத் தங்களுக்குற்ற மாச்சரியங்கேட்டு ஜெய சீதாராம், ஜெய சீதாராமெனத் தோத்திரஞ் செய்துகொண்டே இன்பநடனஞ் செய்தார்கள். இப்படி வெகுநேரம் தாண்டவம் புரிந்து துளசிதாசரைப் பணிந்து, ஓ சுவாமி ராமநாம மகிமையை இன்றைபத்தினமறிந்தோம் பற்பல பாபங்களும் பஸ்பமாகுமெனத் தெரிந்தோம் இனி இப்பிராமணோத்தமருடன் அன்னம் புசிப்பதற்கு வாரும் சுவாமியென் றழைத்துக்கொண்டு மடத்திற் பிரவேசித்து பிரமத்திசெய்து வந்த வேதியர்க்குவந்தனம் புரிந்து மிகவும் பரிந்து துளசிதாசரைப் பகவானெனத் தீர்மானித்து அப்பூசுரர்க்கு ஓர் பத்திரம் போட்டுச் சகல பதார்த்தங்களையும் வட்டித்துத் தங்கடங்கள் பத்திரங்களில் வீற்றிருந்து நமக்குச் சமானமானவர்க ளில்லையென் றிருமாப்படைந்து இது துளசிதாசருடைய பிரசாதமென்று சந்தோஷத்துடன் தின்று சகல தீவினைகளையும் வென்று அடைக்காயிலைகளை மென்று ஒருவருக்கொருவர் சந்தனம் பூசிவந்த அந்தணர்க்கு சவ்வாதுபூசி விசிறியால் வீசித் துளசிதாசரைக் கொண்டாடி விஷ்ணு சங்கீர்த்தனங்களைப்பாடிப், பிரமஞானத்தை நாடிப், பரமானந்தத்தைத் தேடி, அரிதாசர் கீர்த்தியைக் கொண்டாடத் தமோடி, நம்மாலாகாதென வாய் மூடி அஞ்ஞானங்களைச்சாடி, பிரமத்திலிரண்டறக்கூடி, வீணாள் கழித்தற்கு வாடி, பிரமானந்த மேலீட்டாற் கூத்தாடி, நாம் செய்ததபமே கோடானகோடி எனச்சங்கல்ப விகல்பமற்று சகசானந்தத்தையுற்று என்று மடையா வின்பினைப்பெற்று நானென்பது செற்று சித்திர தீபத்தைப் போல வசையற்றிருந்தார்கள்.

அப்போது கபடநாடக சூத்ரதாரியாகிய ஸ்ரீமந்நாராயணரும் சந்தோஷசாகரத்தில்மூழ்கினவராய் ஞானதிருஷ்டியால் நம்மை யறிந்துகொள்ளுவார்களோ வென்கிற சந்தேகத்தால் சஞ்சலமனதோடுங்கூடி அடிக்கடி கண்களைத்திறந்து பார்ப்பதும் மூடுவதுமாயிருந்தார். இப்படி அந்திவேளை பரியந்தம் நிஷ்டையிலிருந்து பிறகு தெளிந்து சாதுக்களனைவோரும் சந்தியாவந்தனஞ் செய்யப் பாகீரதியை யடைந்தார்கள். அத்தருவாயில் மமதாதேவி நாடோறுந் துளசிதாசரைக் காலைமாலைப் பணிந்துப்

போகும் வழக்கப்படி வந்து வந்தனந்தந்து அருகே விற்றிருக்கும் மாயா மறையோனையும் வணங்கினள். அந்தணர் மமதாதேவியின்மேல் மோகித்தவர்போ லபிநயித்து பெருமூச்செறிந்து ஓ பெண்ணே என்னிருகண்ணே எனக்குன்மீதுற்ற ஆசையைத்தீர்த்து இப்போதே யென்னைக்காத்து ரட்சிக்கவேண்டு மென்னுவியே! மமதாதேவியே யென்றுரைத்துக் கொண்டே மூர்ச்சையாய் விழ்ந்து விட்டார்.

உடனே துளசிதாசர் திக்கென்றெழுந்து அவரது சேவடியில் விழுந்து மமதாதேவியினல் பன்னீரை வரவழைத்து உபசாரணை செய்தெழுப்பவே அப்பூசுரன் ஓ அரிதாசரே! இந்த மங்கையின்மே லெனக்கிச்சையாய் விட்டது காமவிகாரஞ்செட்டது இவளியாருடைய மனைவியா யிருந்தபோதைக்கும் நீர் கருணைகூர்ந்தெனக்கிணங்கும்படியாகச் செய்யவேண்டுமென மிகவும் பரிதாபத்துடன் பன்முறை வேண்டிக்கொண்டார். துளசிதாசர் சாதுக்களறிந்தா லிவருடன் வாதுசெய்வார்களெனச் சுற்றுப்பக்கமும் பார்த்து யாருமில்லாமையாற் கரங்களைச் சேர்த்து ஓ பிராமணோத்தமா! சந்தடிசெய்யாதே சாதுக்களறிந்தால் விபரீதத்துக்கிடமாகும். உமதுயிர் பிரிந்துபோகும். ஜாமாத்திரியானபின் இந்த மங்கையை யுடக்கிணங்கச் செய்கிறேன் அவசரப்படாமல் பொறுத்திருமையாவென் றுபசரித்தார். அவ்வேதியர் சற்றுநேரமிருந்து சந்தியாவந்தனஞ் செய்யப்போன சாதுக்களெல்லாம் வந்ததே துளசிதாசரைப்பார்த்துக் கரங்களைச்சேர்த்து ஓ ஐயா! பேதமிறந்த பிர்மஞானியே! கோபமில்லா நிதானியே! எனக்கோ காமவிகாரம் மேலிட்டாது, அங்கத்தையெல்லாஞ் சுட்டது, இனி யென்னுற் பொறுக்கக்கூடாது, இப்போது வந்த மாதிருக்கும் விடெது, சீக்கிரஞ் சொல்லுமையாவென்றார். துளசிதாசர் சாதுக்களறிந்துக்கொள்ளப் போகிறார்களென்று கண்ணுலுங் கையாலுஞ் சாடைகாட்டி மௌனமா யிருக்கும்படி வேண்டிக்கொண்டார். விப்பிரன் ஐயோ மன்மதனை யெரித்த மகாதேவனும் கங்கையின்மேல் மோகமாகித் தபக்கமுற்றாரென்று லென்னுற் பொறுக்கக்கூடுமா? இதுதெரிந்த நீரென்னை இப்படி வெறுக்கக்கூடுமா? அந்த மமதாதேவி எங்கே போனள் எனக்கு மோகமுண்டாக்கி எங்கே மறைந்தாள் எங்கே பறந்தாள் எனக்கு வந்த காம மிச்சா துக்களுக்கு வரலாகாதா? துன்பந் தரலாகாதாவென்று பாபாப்பாடும் வெறிகொண்ட மர்க்கடம்போலவும், சொறியுற்ற சுணங்கனைபோலவும், ஆசியக் கூத்தனைப் போலவும், கோளன் நாச்சைப்போலவும், குதமிலாக் குடமியைப்போலவும், பித்தனைப்போலவும் சித்தினியைப்போலவும் பதைபதைத்து அங்கு மிங்குமாயோடி மமதாதேவியைத் தேடத்தொடங்கினர். சாதுக்கள் அந்தணன் மேல் முனிவுகொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு, அடா மூர்க்கா! துன்மார்க்கா! உண்டவீட்டில் ரெண்டகஞ்செய்யும் கண்டகனுகிய உன்னை இப்போதே துண்டந் துண்டமாய்க் கண்டங் கண்டமாக வெட்டிப் பலியிடுகிறோம் பாரென்று தள்ளிக் கீழேதள்ளி நக்களாற் பிறிக்கிள்ளி அடாதொள்ளி யெனத் தாருமாறுஞ் செய்யத்தொடங்கினர்கள். துளசிதாசர் சாதுக்கள்மேல் மிகவும் வெகுண்டு பெருங்கோபங்கொண்டு அந்தணனை யழைத்துக்கொண்டு தன் மனைவிபாலடைந்து மமதாதேவியிடஞ் சொல்வதற்கிடைந்து மௌனமாய் நின்றார். மமதாதேவி மணாளனை வணங்கிப் பதிவார்த்தைக்கிணங்கி, ஓ ஸ்வாமி! இப்பிராமணோத்தமரை என்பாலழைத்துக்கொண்டு வந்த விதமறிவேனுதலா லுமதபிப்பிராயத்தைப் புலப்படுத்துமையாவென்று பணிந்து நின்றாள். அரிதாசர் ஓ மமதாதேவியே! இவர் சொந்த ஆவியே! என்னுடைய அன்புனக்குத்தேவையா யிருக்குமானல் நீ நல்ல குலஸ்திரீயானல் பதியின் வார்த்தையைக் கடக்காப் பதிவிரதையானல் மோக்ஷார்த்தம் வேண்டிருக்குமானல் இந்த அந்தணருடைய அவா நீங்கும்படிக் கூடிக்குலாவி யிருப்பாயாகவென் றறைந்தார். மமதாதேவி பனிரெண்டாகப் பட்சமாகப் பேசாமலிருந்திப்போது பட்சமாகப்பேசும் பதியைத் துதித்து, ஓ என்னுர்வலனே! உமக்குரிய வஸ்துவை ஒருவருக்குத் தானஞ்செய்தால் மறுப்பவருமுண்டோ? மனைவி பதிக்கு வேருனதுண்டோ? உம்மிஷ்டப்படி நடந்துக்கொள்ள எனக்கோ தடையுமிராது ஏனென்றுல் பரமசிவன் பார்வதியை இராவணனுக் களிக்க அப்பத்தினி மறுத்துரைத்ததுண்டா? ஆனல் மடத்திலிருக்கும் சாதுப்பிராமணர்களால் இவ்விப்பிரருக்கோரிடையூறுவாராமல் பாதுகாக்கவேணடியபாரமுமக்குத்தானென்றறைந்து வேதியர் பாதங்களில் வந்தனஞ்செய்து, ஓ ஸ்வாமி! ஐயமின்றி சையோகஞ்செய்யச் சீக்கிரம்வாருமென்றழைத்தாள். அப்போது சாதுக்களாளுக்கோர் தடியெடுத்துக்கொண்டு அந்த மாயாபிராமணர்மேல் விழுந்து அடா பாமதுரோகி! பதியின்வார்த்தையைக் கடவாயிப்பத்தினியையா பெண்டாளப்போகின்றாய். ஓ ஓ நாயே! அறிவில்லாப் பேயே! சீக்கிரம் இம்மடத்தைவிட்டோடிப்போ. இல்லாவிட்டாலுன் தலைமண்டையை யுடைத்து மூளை சிதறப் புடைத்துக்

கொன்று விடுவோம் ஒருகணத்தில் வென்று விடுவோ மென் ருர்ப்பரித்து அட்டகாசஞ் செய்து தடிகளைச் சுழற்றி யெறிந்தார்கள். துளசிதாசர் அத்தண்டங்களைக் கரத்தால் மறித்து சாதுக்கள்மேல் மிகவும் முனிவு கொண்டு ஓர் வாளை யெடுத்துக் கொண்டு ஓ சாதுக் களே! உங்களுடைய பிராணன்மீது தங்களுக்கு அவா விருக்குமாயின் இக்கணமே இவ்விடம் விட்டுப் பேர்ந்து வோடிப்போய்க் களிகூர்ந்து சிவனைக் காப்பாற்றிக்கொள் ளுங்கள் இல்லாவிடி லென்வாளுக் கிரையாகுங்க ளென் றதட்டிச் சாதுக்கள்மேல் குதித்து மிதித்து வுதைக் கிறேனென் ருர்ப்பரித்தார். சாதுப் பிராமணர்கள் ஓ சுவாமி! உமது கைவாளா லெங்களை வெட்டினாலும் இந்தத் துஷ்டனை மாத்திரம் மமதாதேவியி னருகிற் போகவிட மாட்டோ மென் றம்மறையோன் குடுமி யைப் பிடித்திழுத்து முழங்கைகளாலிடித்துப் பற்களாற் கடித்துத் தண்டங்களா லடித்து மூர்ச்சையாய் விழூப் படி செய்தார்கள்.

அரிபக்தர் மிகவுங் கோபதீப்தரு யெரிந்து பொரி ந்து முகங் கரிந்து அந்தணர்மேல விழுந்து ஆக்கிரம நிக்குரோதனுப் பல்லை நறநறவெனக் கடித்து மீசைகள் படபடெனத் துடிக்கும்படியாய் மிகவும் உக்கிராகார னுய்க் காலருத்திரனைப்போ லாகித் தன்னை மறந்து ஜீவகாருண்ய மிறந்து தப்பிதஞ்செய்த விப்பிரர்களின் தாள்களையுந் தோள்களையும் கரங்களையும் சிரங்களையுங் கண்டங் கண்டமாகத் துண்டந் துண்டமாக வாளால் வெட்டிச் சாய்த்து, மூடகளைப்போலத் தேய்த்து உதி ரப் பிரவாகத்திற் றேய்ந்து, ஒருவரை விடாமல் மாய் த்து மாயாப் பிராமணர் மூர்ச்சை யடைந்ததைக் குறித் துப் பாதவித்துக் கரங்களை குவித்துத் தன் மனைவியை யழைத்து ஓ கற்புள்ளமாதே! சீக்கிர மிவ்வேதியரின் மூர்ச்சையை தெளிவித்துப் பன்னீரிற்குளிப்பித்து அவ ரிச்சைப்படி நடந்துக்கொள் ளென் றுரைத்து அன்பான மொழிகளால் மமதாதேவியின் மனதைக் கரைத்துப் பார்வதி வாசமாயிருந்த பன்னகசாலையி லியாரும் போகாமற் காவலிருந்த விக்கினேசுவரரைப் போலவும், வாணாசுரன் வாயிலைக்காத்த வாமதேவனைப் போலவும் மாபலியின் வாயிலிற் காப்புசெய்த வாசுதேவனைப் போலவும், பஞ்சபாண்டவர்களைப் பாதுகாத்த பத்ம நாபனைப்போலவும், மயில்ராவணன் இராமலட்சுமணரை மோசஞ்செய்யப் போகிரு னெனக் காவலிருந்த அனு மானைப் போலவும், புஜத்தின்மேல் வாளை யேந்திக் கொண்டு துளசிதாசர் காவலி ருக்குந் தருவாயில் மமதாதேவி மூர்ச்சை யடைந்திருக்கும் முதியோர்மேல் பன்னீரை வீசி விசிறிக்கொண்டு விசி ஓ சுவாமி யெனப் பலதரங் கூப்பிட்டும் பேசாமலிருக்கும் அந்தணரை அரிதாசர் வீட்டினுட் கொண்டுபோய் மலரணைமேற் படுக்கவைத்து உபசாரணை செய்து வெளியே வந்து நந்திகேசுவரரைப் போலவும், துவார பாலகரைப் போல வும் காவலிருந்தார் மமதாதேவி மணாளன் வாக்கியப்படி கதவை மூடிக்கொண்டு நடுராத்திரி பரியந்தம் அப்பூசுர ருக் கனேக விதங்களாக உபசாரனை செய்பச் செய்ய அம்மாயாமறையோன் பிரேதம்போ லசைவற்றி ருந்தார் மமதாதேவி கணவனை விளித்து ஓ சுவாமி! இவ்வேதி யர் மரித்துப் போனதுபோற் றோன்றுகின்ற தென் றறைந்து அழத்தொடங்கினுள். பரமபாகவதன் வீட்டி னுட்போய் பூசுரனைப் புரட்டிப் பார்த்து அங்கம் வேர்த் துப் பிராமணன் போய்விட்ட தெனத் தீர்மானித்து இடும்பு செய்யும் கொடும்பாவிகளாகிய மூப்பரினுலோர் தண்டத்தா லடித்துக் கொன்று விட்டார்கள், நனறி கேட்டார்கள், இனி நானென்ன செய்வேன் தெய்வமே யென்று தொழுது, கோவென் றழுது, வந்ததே பழுது, இனியிருப்பதேன் கழுரு என்று புலம்பி கண்ணீரால் தேகத்தை யலம்பி ஒன்றுந் தோன்றுதவராய்த் தன் கைவாளால் தன் கழுத்தைபறுத்துக்கொள்ளப்போனர்.

அதுதெரிந்த பக்தவச்சலனுகிய பகவான் பிரேதம் போ லசைவற் றிருந்ததுபோய்த் திக்கென் றெழுந்து ஸ்ரீராமவதாரத்துடன் பிரசன்னமாகித் துளசிதாசனு டைய கரத்தைப் பிடித்து ஓ மனைவியைக் கூட்டிக் கொடுக்க மனமுவந்த மாதவனே! சுயம்பிரகாச ஆத வனே உன்னை யெந்த விஷயத்தைக் குறித்துக் கொண் டாடுவேன் ஓ ஓ உன்னைப்போன்ற தயாளகுணமுடைய பக்தனை எந்த யுகத்திலு மறியேன், உனக்கென்ன வர மீயலாமென தெரியேன், பட்சத்துடன் பாரியைக்கொடு க்க மனம் வருதல் லேசானதோ வென்று பற்பல வார்த் தைகள் பகர்ந்து அரிதாசரை மார்புட னணைத்துக் கொண்டு சுகஜீவியாய் வாழ்ந்திருக்கக் கடவா யென விண்டு இறந்து கிடக்கும் அந்தணர்களை யெல்லா மெழு ப்பி, ஓ துளசிதாசா! உன்னைச் சோதிக்கும் பொருட்டு இவ்வித வேஷமெடுத்துப் பற்பல விதங்களாக நடித் தேன் இதைக்குறித் தாயாசப்பட வேண்டாம். இனி யுன் மனையாளுடன் கூடிச் சுகபோகங்களை யனுபவித்து இறுதியில் நீங்க ளிருவரும் என் பதவியைப் பெறுங்க ளென்று திருவாய்மலர்ந்தருள, அரிபக்தர் ஓ பகவானே பனிரெண்டு வருஷங்களாய் மனைவியுடன் பேசாமலிரு ந்தவென் வைராக்கியத்தைக் கெடுத்து மதிமருளும்படி

யாகத் தொடுத்துக் கபடஞ்செய்த காருத்தனே! கக்கி னது பாயாசமானாலும் நக்குவாருண்டா? சன்யாசமான பின் சமுசாரத்துக் குட்பட்டவரு முண்டா? பூண்ட விரதங் கெடலாமா? பேரின்பத்தின்மே லிச்சையான பின் சிற்றின்பத்தைக் கனவிலும்நினைக்கலாமா? சொர்க் கத்தை நாடினவன் நரகத்தை நாடுவது போலவும், சற் பைகாக்கும் விரதம் பூண்டவள் கணிகையானது போல வும் அல்லவோ இருக்கின்றது ஓ தெய்வமே உன் திரு வடிகளைநாடின அடியேன் கோடியேனானாலும் இவ்விஷய போகத்தைக் கனவிலும்நினைப்பேனா? ஸ்திரீயை மறந்து முபசரிப்பேனா? என்றைக்கு வீட்டைவிட்டுப் புறப்பட் டேனோ அன்றே சிற்றின்பத்தை மறந்தேன், மனக் கவலையைத் துறந்தேன் யானனுபவித்த விஷயபோகத் தால்வந்த சுகம் போதும் போதும் அப்பப்பா கன்னியர் மாயையிற் சிக்கினவனுக்குப் பரமபக்தியு முண்டா, பாரங் தலைகொண்டவர்க் கல்லல்விடும் பரிசமுண்டா சோதையிற் மாயையிற் சிக்கின பேதையர்க்கு வேதை யின் பலனன்றி வேறுசுக மனுபவிப்ப துண்டா? அசு ணப்பட்சி யானை விட்டிற்பூச்சி மீன் வண் டென்னும் ஐந்தும், சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்னும் ஐந்து விஷயங்களி லொன்றொன்றினால் தன் பிராணனுக் கேடு வருவித்துக்கொள்ளு மானால் ஐப்புலனு மயக்கச்செய் யும் ஆயிழையார்மேல் அவாக்கொண் டிருப்போன் அழிவதற்கோர் தடையுண்டா? சிலந்தியை வருட அப் போது சுகமாயிருந்து பின்பு பெருவாதனைக் குட்படுத்து வதுபோல நிமைநேர் சுகத்தை யிச்சித்த ஆடவன் அக் காமத்தால் பலநாளுந் துன்ப மனுபவிப்பதற்கோ ரைய முண்டா? உமது சிருஷ்டியைக் காமாந்தகாரத்தால் விர்த்தி யடையச்செய்து தெரிந்த அடியேன் உமது பூரணகடாட்சம் பெற்றிருந்தும் நரகக்குழியிற் புகு வேனா? ஜலதாரையில் ஸ்நானஞ் செய்வாரு முண்டா? மலத்தில் அழுந்துவாரு முண்டா? குஷ்டம முதலான வியாதிகளால் நஷ்டப் படுத்துவது காமமே யல்லவா? பரந்தாமனுகிய உமது நாமருசியை யனுபவித்தோர்கள் காமரசத்தை இச்சிப்பார்களா? தெரிந்தும் விஷத்தைப் பட்சிப்பார்களா? உமது கபடநாடகத்தை நானும் சற் றறிந்தவனே ஆதலா லிவ்வார்த்தையை இனி சொல்லா மல் சந்திர சூரிய ருள்ளமட்டும் ஸ்திரீயைப் புல்லாமல் நின் னுடையபஜனை யல்லாமல் வேறுவார்த்தை சொல்லாமல் காலங்கழிக்கும்படியாக கருணைகூர்ந் தாட்கொள்ளு மை யாவென்று பதிந்து பற்பல விதங்களாகத் துதிக்கத் தொடங்கினர்.

பகவான் பரமபாகவத னிருகரங்களையும் பிடித்துக் கொண்டு தந்தை வாக்கை மறுக்காமற் றாயை வெட்டின பரசுராமரைப் போலவும், தாய்வார்த்தையைத் தள்ளா மல் சகோதரர் மனைவியரைக்கூடியவேதவியாசரைப்போ லவும், துரோபதையைக் கூடின பஞ்சபாண்டவர்களைப் போலவும், தன் னுயிரைக் கொடுத்த கர்னமகாராஜனைப் போலவும், என் வார்த்தையைத் தள்ளாமல் யாதொரு பொழுதும் விள்ளாமல் பதிவிரதா சிரோன்மணியாகிய மமதாதேவியுடன் கூடிச் சிலகாலமில்லறத் தர்மத்திலிரு ந்து பின்பென் பதவியை யடைவா யப்பா வென் றிரந்து கூறும் பகவான் பாதங்களில் அரிபக்தர் வணங்கி ஓ என்னாண்டவனே! இதையன்றி வேறேது சொன்னா லும் கேட்பேனன்றி உன் திருவடி சாட்சியாக ஸ்திரீ போகத்தை மாத்திர மிச்சிக்கவேமாட்டேன் தேவரீரை நம்பின மமதாதேவியை இப்போதே தேவரீர் பரம பதத்துக்குக் கொண்டுபோ மையாவென்று பணிய பக வான் இனி எவ்விதமாக உரைத்தாலும் துளசிதாசர் சமுசாரத்திற் கூடன்பட மாட்டா ரென் றறிந்திருந் தும் பின்னுஞ் சொல்லுவார் அப்பா துளசிதாசா முற் பிறப்பில் நீ மரா மரா வெனத் தியானஞ் செய்துக் கொண்டே தபத்தி லிருந்தபொழு துன்மனை யுன்பா லடைந்து காமவிகாரங் கொண்டு உன்னைப் பலவந்தஞ் செய்ய நீ இவ்விஷயபோகம் பொல்லாதென் றிகழ்ந்து கூற உன் மனைவி கூடாதெனப் பலவந்தஞ்செய்ய நீசில நாட் சென்றபின் னுன்னிஷ்டப்படி நடக்கிறேனென் றுரைத்து அப்பொழுது தப்பித்துக்கொண்டு அவள் கண்ணுக்குப் புலப்படாமல் காட்டில் மறைந்து அடர்ந்த புதர்கள் சூழ்ந்த ஓரிடத்திற் றபநிலையிலிருந்து விட் டாய் உன் மனையா ளுன்மேலிருக்கும் மோகத்தால் பல திசைகளிலும் தேடித் திரிந்து களைபிரிந்த மான் போற் கதறிக்கதறி பதறிப்பதறி ஆவியை விட்டு விட்டு என் பதவியை யடைந்து நீ துளசிதாச ரவதாரமெடுத் ததே தான் மமதாதேவியாய்ப் பிறந்தவளாதலா லிவ ளிச்சைதீர நீ முற்பிறப்பிற் சொன்ன வாக்கியப்படி கூடி யிருக்க வேண்டு மல்லவாவென, அரிபக்தன் ஓ தெய்வ மே! நான் முற்பிறப்பிற்சொன்ன வாக்கியப்படியே இம் மமதாதேவி வெறுக்குங்கால பரியந்தங் கூடியிருந்து அவளாய் வெறுத்தபின் நானும் வெறுத்து விராகத்தை யடைந்தேன் விளந்தக்கல் கூடாததுபோல் இனி யொரு பொழுதும் கூடாதென்று வணங்க, பகவான் துளசி தாசர்மேல் மிகவும் வாஞ்சையாயிருக்கும் மமதாதேவி யை நோக்கி ஓ அம்மா பாக்கியவதி! உனக்கு இகபோ

கம் வேண்டுமா? பரபோகம் வேண்டுமா? உன் தபிப்பிராயத்தை வெளிப்படுத்தென்று கேட்க, மமதாதேவி ஓ பகவானே! வேண்டாமென்கிறவர் கழுத்தில் லிங்கங் கட்டுவதாற் பிரயோசன மேதேனுமுண்டா? அதுபோல் மிகவும் விரக்தியடைந்திருக்கும் என் கணவனை வேண்டி என்னைச் சேர்த்தபோதிலும் அவரொற்றுமையா யிருக்கப் போகிறதில்லை ஆயினும் அவரை இணைபிரியாமல் பார்த்திருப்பதே எனக்கு போதுமான இன்பமென்று வணங்கத், துளசிதாசர் ஓ மமதாதேவி! நீயென் சொற்படி பரமபதத்தைச்சேரு சிலநாட் சென்றபின் நானும் வருகிறேனென் வாக்கியத்தை மறத்தலுனக்கழகல்லவென, மமதாவேி உபதிஷ்டப்படியே நடக்கின்றேனெனப் பணிந்து நிற்கப் பகவான் தாரகனை நினைக்க, உடனே அத்தாரகன் ஓர் புஷ்பவிமானத்தைக் கொண்டுவந்து நிறுத்த பகவானதிலெழுந்தருள மமதாதேவி மகா பாக்கியமென்று தன் கொழுனன் றிருவடிகளிற் பணிந்து, ஓ ஸ்வாமி! இதுகாள் பரியந்தம் நானறியாமலியற்றிய குற்றங்களை யெல்லாம் நற்றவமாகக்கொண்டு முற்றிலுமென்னை யாட்கொள்விரெனப் பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்து உம்மைவிட்டெப்படி பிரிவேனென்று அழுதகண்ணுந் தொழுதகையுமாய் நிற்கத். துளசிதாசர் ஓ பாக்கியவதி! எனக்குகந்த யோக்கியவதி! நீ நல்ல உத்தமியான படியினாலேயே உனக்காகப் பகவான் வந்து எனக்குத் தரிசனந்தந்து பலரும் பார்க்கப் புஷ்ப விமானத்தை வரவழைத்து பரம பதத்துக்கு வரும்படியாய்த் திருவாய் மலர்ந்தருளினர். இப்பேர்க்கொத்த பேறு இப்புவியிலியாருக்குங் கிடைக்கமாட்டா தென்றுரைத்துச் சீக்கிரம் பகவான் லோகத்துக்குப்போ நானும் வருகிறேனிது சத்தியமென, மமதாதேவி இன்றும்மைப் பிரியலாச்சுதோவென் றோலமிட்டழுதுகொண்டும் பதிவாக்கைக் கடக்கக்கூடாக் குறையால் விமானத்திலேறின மாத்திரத்தில் தேவதுந்து பிதாம்தாமென்று முழங்கிற்று, தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். பகவான் துளசிதாசருக் காசிகள் செய்து நாமகளை எச்சரித்தார் தாரகன் அரைக்கணத்தில் வைகுந்தத்திற் கொண்டுபோனார்

இவ்வாச்ரியத்தை பறிந்து படத்திலுள்ள சாதுப் பிராமணர்கள் என்றும் அடையா வியப்படைந்து துளசிதாசர் முன்னிற்பதற்கஞ்சியுடைந்து மமதாதேவியைப் புகழ்ந்து அரிதாசரைப் பற்பல விதங்களாக கொண்டாடி மகிழ்ந்து ஐயோ பகவானென் றறியாமல் இப்படிவருமெனக் குறியாமல் ஸ்ரீமந் நாராயணர் பதைபதைக்க அடித்தோமே ஒரே வயிராக்கியம் பிடித்தோமே யென்று தங்களைத் தாங்களே யிகழ்ந்து துளசிதாசருடைய மகிமையையும் மமதாதேவி வைகுந்தத்தையடைந்த விந்தையையும் பல விடங்களிற் சொல்லிக்கொண்டே திரிந்தார்கள், அதுகேட்ட காசிதேசத்தரசன் முதலானவர்களு மதிசயித்து துளசிதாசர் பக்கலடைந்து பற்பல விதங்களாகத்துதித்து நீரிப்பட்டணத்தி லெழுந்தருளி யிருக்கும்படியான பாக்கியம் நாங்களென்னசெய்தோமோ நாங்கள் செய்த தவமே மாதவமென்றுரைத்து அவரை அரைக்கணமும் பிரியாமலிருந்தார்கள் துளசிதாசரோ பகவான் வந்து செய்துப்போன விந்தைகளை நினைந்து நினைந்து ஒன்றுந்தோன்றாதவராய் ஆனந்தவாரியில் மூழ்கித் தன்னைமறந்திருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

துளசிதாசரைப் பகவான்சோதித்த அத்தியாயம்.

முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

## பகவான் துளசிதாசனுருவாய் வந்து பிரேதமான பிராமணனை எழுப்பிய அத்தியாயம்.

கேளுங்கள் சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் சொல்லுவார், இவ்விதமாகத் துளசிதாசர் பற்பலதேசங்களிற் றன்பேர் விளங்கப் புகழ்பெற் றிருக்குங்காலத்தில் டில்லிநகருக் கரசனான அக்பர்பாதுஷா துளசிதாசருடைய மகிமையைப் பலருஞ்சொல்லக் கேள்விப்பட்டுப்பார்க்க வேண்டுமென்கிற வாஞ்சையால் வாரணாசியை யடைந்து அரிபக்தரைத் தரிசித்துப் பாதங்களைப் பரிசித்து மகானுபாவரெனப்பூசித்து அத்தியந்த பக்தியுடன் விசுவாசித்து அவருரைக்கும் பிரமக்ஞானத்தைச் சிரவணஞ்செய்துக் கொண்டிருக்குங்காலத்தில், அக்காசியிலோர் உத்தமபிராமணர் பிராரப்தபோகமநுபவித்துத் தீர்ந்ததே இவ்வாக்கை அரைநிமை யிருக்காதென்ற வேத வாக்கியப்படி, தேகவியோக மடைந்து பிதுர்லோகத்திற் பிரவேசித்தார். அவர்மீது தன்னுயிர்போல வாஞ்சைகொண்டிருந்ததுமன்றி இன்னஞ்சுகபோகங்களை அநுபவிக்க வேண்டுமென்கிற அதிக அவாக்கொண்டிருந்த மகா பதிவிரதையாகிய அவர் பத்தினி தன் காவலன் மரித்ததைக் குறித்து மிகவும் புலம்பிக் கண்ணீராற் கணவனை புலம்

பிப் புருஷனின்றி இனி எப்படி போகும பொழுது வித வையானபின் இவ்வுலகிலிருப்பது மிகவும் பழுதுயென்று பகவானைத்தொழுது தேம்பித் தேம்பி யழுது ஓ தெய்வமே ! சின்னஞ் சிறு வயதுள்ள கன்னிகையாகிய என்னை கைமையாக்கி விட்டாயே, இவ்வேழையைக் கைசோர விட்டாயே, பதியே தெய்வமென்றும், பதிசேவையே மோட்சமென்றும், பழமறையிலெழுதிய பகவானே இனி யாரைத் தெய்வமாகப் பாவிப்பேன் யாருக்கு சேவை செய்து பூசிப்பேன், இப்படி பல சீவர் புலம்பி யழுவ துனக்குச் சந்தோஷமோ ? துக்கமயமான இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துப் பட்சியினிறகுபோல் பன்முறை பரதவிக்கும்படியாகச் செய்வதாலுனக்குவரும் மேன்மையேதோ என்னைப்போ லேழ்மையையுடைய மாதர்களெத்தனைபேர் வேதைக்குட் பட்டிருக் கின்றார்களோ ? அரி அரி ஆண்பால் பெண்பாலெனச் சிருஷ்டித்து அதிற் பெண்பாலடவனுக் கடக்க வொடுக்கமா யிருக்கச்செய்து ஒருவரை விட்டொருவர் நிமை பிரியாமலிருக்க அத்தியந்த இச்சையை யுண்டாக்கி ஒருவரை அழைத்துக் கொண் டொருவரை அயர்ந் தலரும்படியாகச் செய்வது காருண்யக் கடவுளாகிய உமக்கழகோ ? இப்படி ஒருவரை விட்டொருவர் பிரிவாற்றாமல் பேய்பிடித்தவர்போல் மதிமயங்கிப் பிரேதத்துக் கிணையா யிருக்கும்படிச் செய்வதா லுமக்கு வரும்பயன் யாதோ? ஓதெய்வமே ! பூதபவுஷிய வர்த்தமான மென்னுந் திரிகாலங்களிலும் நடக்குஞ் செயல்களெல்லா மறிந்த நீரே சீதையை இராவண னெடுத்துக்கொண்டு போனபோதுசொல்வதற் கபாரமான துக்க சமுத்தி ரத்தி லமிழ்ந்தீரென்றால் அறியாப் பேதையான நானிப் பிராமண நாயகனைப் பிரிந்து பிராணனுட னெப்படியிருப்பேன் சசல சத்திகளிலும் வல்லமையான சீதா பிராட்டி எமது புரிவாற்றாமல் அழலில் வைத்த மெழுகைப்போல் கதறிக்கதறிப் பதறிப்பதறிக் கரைந்தழ திருப்பாளானல் ஒரு வல்லமையு மில்லாவென்னால் பிராணநாயகனைப் பிரிந்துயிருடனிருக்க லாகுமோ? ஓ என்னுண்டவனே ! என்னைப் போல் பல சீவர்கள் கலக்கமடைய நீர் ஆனந்தமா யிருந்தால் நலனோ? இப்படிஜீவர்கள் துயரடைவது தீவினைப் பலனோ? நீபடைத்த ஜீவர்களுக்கு நீயறியாமல் தீவினை வந்தணுகுமா ? அப்படியடைய நீ படைத்த ஜீவர்களுக்கு நீயறியாமல் தீவினை வந்தணுகுமா? அப்படியடைய நீ பூரணத்திற் குறைந்தவனோ ? ஆ ஆ உன்னுடைய மாயை செய்யும் விந்தைக்கு வியப்படையாதவர்களுமுண்டோ ? ஓ பராத்பரா ! தன்பத்திலிருந்துயிர் தரிப்பதிலும் இறததலழகல்லவோ ? பிராணநாயகனைப் பிரிந்த பதிவிரதைகள் அரை நிமை பிராணனுடனிருப்பார்களோ ? பின் வரும்பழிக் குட்படுவார்களோ ? பதினைந்துவயதுப் பருவமுள்ள நான் பதியிழந்தபின் னிவ்வுலகி லிருந்தாலும் பழிவந்தடையாதோ ? காமாவிகாரத்துக்குத் தடையேதோ ? பிரமாதி தேவர்களாலும் ஜயிக்கக்கூடா மாரனை யென்னால் ஜெயிக்கக்கூடுமோ ? காமக் கடலைக் கடக்கலேசானதோ? பதியின் ரட்சத்தைப் பட்சிகளே சகிக்காமல் தட்சணம் மரிக்குமாயின் ஐந்தறிவுள்ள நான் மரணமடையாமல் இருந்திவ்வுலகி லிடையாமல் ஒரேதுதேட வேண்டியதே முக்கிய காரமையல்லவோ வென்று கங்கையில்போடக் கொண்டுபோகும் கணவனுடன்போய் நானும் பாகீரதியிற்குதித்திறப்பதே சத்தியம் இறவாமலிருப்பதே பழித்தியம் இத்தேவமெத்தனை நாளிருந்தாலும் அநுத்தியம் பதியுடனிறத்தலே நித்தியம் எனத்துணிந்து துக்கந்தணிந்து கங்கையை நாடிப் போகின்றவள்.

துளசிதாசருடைய மடத்தில அக்பர்பாதுஷா முதலானவர்களுங்கூடி ஏககூட்டமா யிருக்கக்கண்டு இந்த மாகாத்மாவைத் தரிசனஞ் செய்துக்கொண்டு பதியைத் துதித்துக் கங்கையிற் குதித்து மோட்ச காட்சியை படைவேனென்று மகாசபையில் நாணமில்லாமற்சென்று துளசிதாசர் முன்னின்று பகவானேயெனப் புகன்று சிகசாஷ்டங்கமாகத் தெண்டஞ் செய்ய அப்போது அக்பர் பாதுஷாவுடன் பிரமஞான வார்த்தைகளை ஆனந்தத்தோடும் பேசிக்கொண்டிருக்கும். துளசிதாசர் சந்தோஷமேலீட்டால் அந்தப் பிராமணஸ்திரீயைநோக்கி, ஓ அம்மணி ! நீஅஷ்டயிசுவரியமும் அஷ்ட புத்திர பாக்கியமும் பெற்றுச் சுபமாங்கலிய ஸ்திரீயாய் வாழ்ந்திருக்கக் கடவாயென் றாசீர்வாதஞ் செய்தருளினர். அவ்வசனத்தைக்கேட்ட பிராமணோத்தமி நகைத்து, ஓ ஸ்வாமி ! விந்தையான வசனத்தைப் புகன்றீர். என்கணவனிறந்து ஒரு ஜாமமாயிற்று, என் மங்களமும் போயிற்று, என் கணவனைக் கங்கையில் போடக் கொண்டு போகிறார்கள் நானும்வருடன் பாகீரதியிற் குதித்திறக்க எண்ணங்கொண்டு கூடவே தொடர்ந்து வந்து இவ்விடத்திலேகக்கூட்டமா யிருக்கக்கண்டு உம்மைத் தரிசனஞ் செய்துக்கொண்டு பிராணனை விடலாமெனத் துணிந்து வந்தேன். வந்தவிடத்தில் தேவரீர் கேட்டவர்க ளெல்லா மதிசயிக்கும் படியான ஆசீர் வசனம் புகன்றீர் புருஷனிறந்தபின் எனக்கெங்கிருந்து புத்திர பாக்கிய முண்டாகும். இனிக் கள்ளப்புருஷரைச் சேர்ந்து பிள்ளைகளைப் பெற வேண்டுமோ ? இதா புரு

ஷர்களைப் புணர்ந்து மானங்கெட்டு ஈனமடைந்து எமதண்டனைக் குட்படுவதைப் பார்க்கிலு மிறந்தா லழகல்லவோ உபக்கும் விரித்துச்சொல்லவோ அல்லாமல் பதிவிரதைத் தன்மைக் கெட்டுப் பாபபுருஷனைக்கூடி நான் பல பிள்ளைகளைப்பெற்றாலும் நான் சுபமங்கிலிய ஸ்திரீயாய் வாழ்வதெங்கே? தேவரீர்செய்த ஆசிர்வாதப்பலனெங்கே, பகவானைப் பலருக்குந் தெரிசனந்தருவித்த மகானுபாவராகிய தேவரீர் வாக்கில் நிஷ்பலமான வாக்கியம் பிறக்கமாட்டாதே பெரியோர்களி னாசிர்வாதப்பலன் பெற்றவர்க் கியாதோர் வியாகுலமும் வரமாட்டாதே உத்தமர்களாசிர்வாதப்பலன் ஒருபோதும் தப்பிப்போகமாட்டாதே நான் கைமையாகுங் காரணமிருந்தா லிப்பேர்க்கொத்த வாக்கியம் புறப்படமாட்டாதேயெனப் பற்பல வார்த்தைகளாடி ஓ பகவானே நீர்செய்த ஆசிர்வாதப்படியே நான்சுபமங்கிலிய ஸ்திரியாய் அஷ்டபுத்திரரைப்பெறச் சீக்கிரமென் காவலனைப் பிழைப்பிக்கவாரும் சடைக்கண்ணாற்பாரும் மாங்கல்ய பிட்சையைத்தாரும் கிருபைகூரும் என்றேத்திப் பணியும்போது அக்பர் பாதுஷாவும் அவனுடைய மந்திரி பிரதானிகளும் சேனைகளும் இப்போதுதான் துளசிதாசருடைய மகிமையைப் பிரத்தியட்சமாய்ப் பார்க்க வேண்டும் இறந்தவர்களை எழுப்ப லொருவராலாகுமா சகல சாமர்த்தியமு முள்ளவரெனப் பலரும் புகழ்ந்த தசத்தியமோ? சத்தியமோ எல்லாம் ஒர் நாழிகையிற் றெரியவருகிறதென்று துளசிதாசருடைய வதனத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். துளசிதாசரோ பிராமண ஸ்திரீயுரைத்த வாக்கியங்களைக்கேட்டுத் திடுக்கிட்டு மோசம்வந்தது இப்பேர்க்கொத்த அபாரமான வார்த்தை என் வாக்கிலேன் பிறந்தது இவள்மனமேன் நொந்தது எனக்கேனவமானந் தந்தது இறந்தவர்களை எழுப்ப ஒருவர்வசமா எழுப்பரிஷிகள் வசிஷ்டமா பேன்மையான மகிமையுடையவர்களாலும் விதியைத் தடுக்கக்கூடுமோ விதியைத் தடுக்கும்படியான வாக்கைக் கொடுக்கக் கூடுமோவெனப் பற்பல விதங்களாயோசித்துப் பகவானை மனதிலேயே பூசித்து அந்தப்பதிவிரதையைப்பார்த்துக் கரங்களைச்சேர்த்து ஓ அம்மா இப்போதென் வாக்கிலிருந்து புறப்பட்ட ஆசிர்வசனம் நானுகச் சொல்லவில்லை ஸ்ரீரங்கநாயகனே என் வாக்கிலிருந்துரைத்தார் இதற்கு நானென்ன செய்யட்டும் உள்ளபடியே முடியட்டும் என் வாக்குபொய்த்துப்போனாலும் போகட்டும் இனியெப்படியானாலு மாகட்டும் நீயுன் கணவனுடன்போய்ச் சேரென்றுரைத்துப் பிரமவிலாசமான முகங்கறுத்து அக்பர் பாதுஷாவின் வதனத்தைப்பார்க்க நாணமடைந்து யாதோர் மொழியும்பேசுதற்கிடைந்து தலையைத்தாழ்த்திக்கொண்டு பகவானைவாழ்த்திக்கொண் டிருக்கையில் பக்தவச்சலனாகிய பகவான் கங்கையிற்போடக் கொண்டுபோகும் பிரேதத்தினிடம் துளசிதாசர் வடிவுடன் வந்து சுமந்து செல்வோர்க்கு தரிசனந்தந்து ஓ-இறந்த பிராமணா தன்னைமறந்த பிராமணா உன்மனையாளுக்குநான் செய்த ஆசிர்வாத வாக்கியப் பிரகாரம் பெழுந் தென்னுடன் வருவாயாக வென்றறைந்த மாத்திரத்தில் பிரேதமாய்ப்போன பிராமணன் உயிர்பெற்றிதோ வருகிறேன்சுவாமியென்றுரைத்த மாத்திரத்தில்

அவனை யெடுத்துக்கொண்டு போகும் அந்தணர்கள திசயித்துப் பிரமைகொண்டு மரித்த மறையோனைநோக்கி இறந்துபோன நீ மறந்து தூங்கினவனைப்போ லெழுந்த காரணம் யாதோவெனக்கேட்டுக் கட்டுகளை யவிழ்த்துவிட்டவுடனே அம்மாதவன் சந்தோஷ முகத்துட னெழுந்து துளசிதாசர் பாதங்களில் விழுந்து ஓ-என்னாண்டவனே என்னை யாட்கொள்ளும் பொருட்டு மடத்தைவிட் டிவ்வளவுதூரம் நடந்து வந்தீரோ அரிதானசேவை தந்தீரோ வென்றுரைத்துக்கொண்டே அவர்பின் கடந்துபோக மாயாதுளசிதாசர் அப்பிராமணனை யழைத்துக்கொண்டுதுளசிதாசர் அப்பிராமணனை யழைத்துக்கொண்டு துளசி தாசர்மடத்தில் பிரவேசிக்க அப்போது கங்கையிற் குதித்திறக்க வெண்ணங்கொண்டுவரும் பிராமணேத்தமி துளசிதாசரும் மரித்தமணாளனும் சபையில் வருவதைக் கண்டு ஆனந்தங்கொண்டு அங்கிருந்த துளசிதாச ரிங்கெப்படிவந்தாரென்றும் என் கணவனுக் குயிரெங்ஙனந் தந்தாரென்றும் ஆச்சரியப்பட்டு மாச்சரியங்கெட்டு ஆனந்தக் கண்ணீர்சொரிய அவர்கள் பின்றொடர்ந்துபோய் அக்பர்பாதுஷாவின்முன் வீற்றிருக்குந் துளசிதாசரையும் தங்களுடன் வரும் துளசிதாசரையும் பார்த்து வியப்புற்றுத் துளசிதாசரே பகவானெனத்துணிந்து பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினாள். மாயா விலாசனாகிய பகவான் அக்பர் பாதுஷாவைநோக்கிச் சந்தோஷத்தைப்போக்கி ஓ-பாதுஷாவே நானிப்போ தாசிர்வாதஞ்செய்த பிரகாரமே மரித்த பிராமணன் இதோ வுயிர்பெற் றெழுந்து வந்தான் அவன் மனையாளுக்கு மாங்கல்யந்தந்தான் ஆதலால் ராமநாமமும் மெய்யே துளசிதாசனென்னும் என் வாக்கும் மெய்யே யென்றுறைந்து மாயமாய் மறைந்தார் உடனே தேவவாத்தியம் தாம்தாமென முழங்கிற்று சுரர்

பூமாரி சலசலவெனப் பொழிந்தார்கள். அக்பர் பாதுஷா திடுக்கிட்டு ஜயபுத்திகெட்டு தலைபைத் தாழ்த்திக்கொண்டு தன்னெதிரி லெழுந்தருளி யிருக்கும் துளசி தாசரையும் தன்னெதிர்வந்து நின்று சிலமொழிகள்புகன்று மாயமாய்ப் போன துளசிதாசரையும் இறந்த பிராமணனுயிர்பெற்றெ ழுந்துவந்து நிற்பதையும் அவன்பக்கத்தில் நின்றுக்கொண் டனந்தம் விதங்களாகத் துதிக்கும் பிராமணஸ்திரீயை யுங் கண்டு விந்தையென்றுவிண்டு இனி இவர்க்குத் தொ ண்டு செய்வேனென் றுட்கொண்டெடுத்தில் நடுவேநின்று இவர் சொல்மொழிகளை கற்கண்டு இவர்முன் நம்மதத் தோர் பெண்டு இவரைத் தூஷிப்போர்களைச் செய்வேனிக ண்டுதுண்டு என்கிற பற்பல வார்த்தைகளைப்புகன்று பயப க்தியுடனெழுந்து நின்று சிரசாஷ்டாங்கமாய் வந்தனம் புரிந்து ஓ சுவாமி உம்முடைய மகிமையை என்னொருவ னுலுரைக்கப்போமோ இவ்வுலகிலுள்ள மானிடர்களனைவ ராலும் விரிக்கப்போமோ, ஓ என் சற்குருநாதன் தன்யரே யாவரும் போற்றும் வினயரே பூனைபோலிருந்து புலிபோ ற்பாய்ந்ததென்னும் பழமொழிப்படி காமியாயிருந்து நிஷ் காமியாயுயர்ந்து இறந்தவர்களை எழுப்பின மஹானுபாவ ரே யான் தொழுந்தேவரே இனியோர் கணமு மும்மை விட்டுப்பிரிந் தென்னுயிருடனிருக்கமாட்டேன் எமதுசொ ந்தநாட்டுக்கு நாடோறுஞ் சேவைதந்து எங்களை யாட்கொ ள்ளவாருமென் றுரைத்து யானையின்மேலேற்றிக்கொண்டு காசிராஜனைநோக்கி ஓ-அரசனே என்னு லிடிக்கப்பட்ட கோயில் குளங்களைக்கட்டி முன்னிலும் தர்ம தானங்கள் நடக்கவும் பலசத்திரங்கள் கட்டவும் பத்துக்கோடி பொன் னளித்தேன் பெற்றுக்கொள்ளுமென் றுரைத்து விடைபெ ற்றுக்கொண்டு டில்லியையடைந்து அங்கும் ஸ்ரீராமர் கோ யில்முதலான ஆலயங்களை ஏற்படுத்தி சாதுப்பிராமணர்க ளுக்குக் குறைவில்லாமற் கேட்ட தளித்து ராமநாமத்தை தியானஞ்செய்துக்கொண்டு சத்விஷயத்திற் காலங்கழிக்க த்தொடங்கினன்.

துளசிதாசரோ பகவான் தன்வாக்கைப் பரிபாலனஞ் செய்யத் தன்னுருவெடுத்து வந்து இறந்தவனுக் குயிர்தந் து தன்னைக்காத்து ரட்சித்ததை அடிக்கடி நினைந்து ஆன ந்த பாஷ்பங்களால் நனைந்து ஓ- சுஜனபரிபாலனே தான வர் காலனே உற்பத்தி ஸ்திதி லயங்களுக்கும் காரணமா யிருக்குங் கர்த்தனே ஸ்தூல சூட்சும காரண மென்னுஞ் திரிதேகங்களுக் கதிதமாயிருக்கும் பரிசுத்தனே இத்தி ரைய தேகங்களுக்கு விலட்சணோத்தமனும் விவேக க்ஞா னஸிலரிருதய கமலாசனத்தில் வீற்றிருக்கும் தேவனே ஜனனமரண ராகத்வேஷ சுகதுக்கங்களையடையாமல் கண் டானந்தா மிர்தத்தில் மூழ்கும்படியான கடைக்கண் கிரு பையை யளிக்கும் வாசுதேவனே சுலட்சண கிர்தசுபமங் கள சோபித சுந்தர சுயம்பிரகாச சுத்தாத்புத மோட்ச சாதனனுஷ்டான நிபாணபரர்களுக் கந்தரங்கமான இஷ்ட தெய்வமே சாட்சாத்கார சதானந்த சமோதய சமாசாந்த சாஸ்வித சலட்சண சந்தோஷாமிர்தத்தை யளிக்குஞ் சக நாதனே மோகாந்தகாரக் குகையிற்சிக்கி அஞ்ஞானத்திமி ரேத்தி அதோகதிக்காளாகும் அடியேனை உஜ்ஜீவிக்கும் படி முற்றிலுமென்னை இப்படியே ஆட்கொள்ளக்கடனும தாகுமெனப் பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய்து பிரமானந்தவாரியில் மூழ்கியிருந்தார் கேட்டீர்களோ சித் தர்களே யென்று நாமாஜிசித்தர் பின்னுஞ்சொல்லத் தொ டங்கினர்.

பகவான் துளசிதாச னுருவாய்வந்து பிராமணனை எழுப்பிய அத்தியாயம் முற்றிற்று.



பதின்மூன்றுவது

## துளசிதாசர் அக்பர் பாதுஷாவைப் பங்கஞ்செய்த அத்தியாயம்



கேளுங்கள் சித்தர்களே அஷ்டாட்சரத்தி னிரண் டாமட்சரமும் ஸ்தூல பஞ்சாட்சரத்தி னிரண்டா மட் சரமும் கூடியபோ தெந்தநாமம் விளங்குகின்றதோ அந்த திவ்ய திருநாமஸ்மரணையும் விஸ்வதைசத்பிராக்ஞ விராட் டிரண்யகர்ப்ப அவ்யாகிர்தத்துக் கப்பாற்பட்ட பரிபூரண சர்வ சாட்சியாயிருக்கும் சாட்சாத்கார தசையையும் பெற் றுத் தொந்தா தெந்தங்களையும் அரிஷ்ட வர்க்கங்களையும் சடூர்மிகளையுங்கடந்து சாந்தம் சாம்பவனை சந்தோஷம் உபாதி ஜகத்விலட்சணம் சும்மாவெதிருக்கம் அந்தர்முக ம் அகண்டானந்தத்தையுந்தரும் நிபதிமார்க்கத்தை யடை ந்து சகசானந்தத்தாற் பூர்த்தியாய் விஸ்ராந்தியை மேவி ஜன்ம கர்ம சூன்யராய் விளங்கியிருக்கும் சர்வ சத்குணால ங்கிர்தராகிய துளசிதாசரை வீரம் தீரம் கெம்பீரம் தாத் ருத்வம் தாசத்வம் தைரியம் சௌரியம் முதலான குணங் களிற் சிறப்புற்றோங்கிய இவ்வுலகத்தைத் தாங்கி யுக்தி பக்தி சுபுத்தியுமுள்ள அந்த அக்பர் பாதுஷா வானவர் அனுதினமும் அன்பாய் மன்பாயும் இன்பாய்ப்

பூசித்து வணங்கிப் பகவான் திருநாமங்களை ஸ்மரிப்பதற் கிணங்கி மஹம்மது மதத்தோருடன் பிணங்கி எத்திசை யிலும் சிவாலயம், விஷ்ணுவாலயம், அன்னசத்திரம், தடாகம் முதலியவைகள் அபரிமிதமாக ஏற்படுத்திக் கோவதையை விலக்கி, அனுமக்கொடிகளையும் கருடக் கொடிகளையும் நட்டு இந்து மதத்துக்குட்பட்டுப் பரம சாதுவாயிருக்கும் நாளில் மோசல மாமுனிவனை மேற் படுத்திய மொசல்மான்கள் சகலருங்கூடி பாதுஷாவின் நடத்தையைக் குறித்து முகம்வாடிப் பற்பல விதங்களா யோசித்துப் பாதுஷாவுடன் கபடமாக நேசித்து துளசி தாசரை வாயாற்பூசித்துத் தாங்களும் வைஷ்ணவனென மேலுக்கு விசுவாசித்துச் சிலநாளிருந்து ஒருநாள் பாது ஷாவை நோக்கி, ஓ அரசனே! வேந்தரிற் சரசனே! வெகு நாளாய்ப் பூசிக்கும் நமக்கு விஷ்ணுதரிசன மில் லாமற் போச்சுது வீணாக நாள்களைக் கழிக்கலாச்சுது பரமபக்தனாகிய உமக்கு ஸ்ரீராமதரிசன மகத்தியமாகும் உம்மைப்போலொத்த புருஷோத்தமர்க்குப் பகவான் தரிசனம் கிடைக்காமற்போனால் எம்போலொத்த பாவி கட்குக் கிடைக்குமா? துளசிதாசருமதுபோ லத்தியந்த பிரீதியுடையவரா யிருப்பது மெய்யாகில் ஒருகணத்தில் ரகுநாயகரை வரவழைப்பர் தரிசனந்தருவிப்பார் நீர் இக்கணம் அரிபக்தனிடம்போய் இன்றையோடு மூன்று தினத்துக்குள் ஸ்ரீமந்நாராயணரை வரவழைத்து தரிச னந் தருவித்து என்னை யாட்கொள்ளு மையாவென வணங்கி நீர் மேடைக் கெழுந்தருளும் நாங்களெல்லோ ரும் அவர் மனமிரங்கும்படியான பட்சமான பற்பல வார்த்தைகளுரைத்துக் கன்னெஞ்சரைக் கரைத்து ஒரு நொடியிற் பகவானை வரவழைக்கிறோமென்று உசுப் பேற்றி அனுப்பினார்கள்.

பாதுஷா பகவானைப் பார்க்கா இக்கண்களும் பக வான் பாதங்களைப் பரிசிக்கா இக்கரங்களும் பராத்பரனை வணங்கா சிரசென்னியும் இருந்தாற் பயனே தேனு முண்டாவென வுன்னித் துளசிதாசரை நண்ணி, ஓ மகானுபாவா! யாந்தொழுந்தேவா! இக்கொடியேன்மே லருள்கூர்ந்து ஸ்ரீரகுநாயகரை வரவழைத்து அடியேனுக் குத் தரிசனந் தருவித்து ஆட்கொள்ளுமையா வென்று வணங்க, அரிபக்தன் ஓ அரசனே! பனிரெண்டாண்டு பகவானை நோக்கி தவஞ்செய்த எனக்கே அப்பரந்தாம னுடைய தரிசனம் கிடைக்க வெகு துர்லபமாச்சுது என் னாலாகாப்போச்சுது அநேக வருஷங்கள் தமிபோற் றபத்திலிருக்குந் தபோதனர்களுக்குந் தரிசனந் தராப் பகவான் நானழைத்தவுடன் வந்து உனக்குத் தரி சனந்தந்து ஆட்கொள்வாரா? கோஹத்தி சூழ்ந்த இப் பட்டினத்திலும் வருவாரா? லேசில் விஷ்ணுவின் தரி சனங் கிடைக்குமா? அவர் முன் னொருவர் திராணி நடக்குமா? என்னாலாகாக் காரிய மாகுமென் றொரு போழ்துஞ் சொல்லமாட்டேன் வீண் சம்பத்தைக் காட் டேன் இன்னஞ் சிலநாள் சென்றபின் பகவான் கருணை கூர்ந் தாட்கொண்டால் கொள்வாரே யன்றி இப்போது கூடாதென்று மறுத்துவிட்டனர் பாதுஷா ஓ ஸ்வாமி! வெகுநாளாக அத்தியந்த பக்தியுடன் அநுதினம் பஜிக் கும் என்முன் பகவான் வருவதற்கோர் தடையுமிராது. நீர் நினைத்த காரியத்துக்கோ ரிடையூறும் வராது, வார ணாசியிலுள்ளமாந்தர்களெல்லாம் பார்க்கவந்த பக்தவச்ச லன் நானொருவன் பார்க்க வருவதற்குத் தடையேன்? பிர்மா நினைத்தா லாயுளுக்குக் குறைவில்லாததுபோல் நீர் நினைத்தா லகத்தியம் பகவான் வருவார் ஏழைமே னுக்குத் தரிசனந் தருவார் இன்றையோடு மூன்றுதிவ சத்துக்குள் பகவானை வரச்செய்து எனக்குற்ற பந்த தொந்தங்களைக் கொய்து பாதுகாத்தருளுமையாவெனப் பணிந்து இனி நமக்குப் பகவான் தரிசனந் தருவா ரெனத் துணிந்து மந்திரி பிரதானிக ளுரைத்தவண் ணம் தன்னிருப்பிடஞ் சேர்ந்து பிரஜைகளை நோக்கி நீங்க ளெல்லாம்போய் துளசிதாசருடைய மனதைக் கரைத்து ஸ்ரீமந்நாராயணரை வரவழைத்து என் குலத் தைப் பரிசுத்தப் படுத்துங்க ளென் றாக்யாபித்தான்.

துடுக்கர் முடுக்காய்த் துளசிதாசர் பக்கலடைந்து ஓ அரிதாசரே! நீரிப்போது பகவானை யாங்கள் பார்க்க வரவழைக்காவிடின் நீர் முன்னம் ஸ்ரீ மந்நாராயணரைக் கண்டதும் அவருமக் காசீர்வசனங்கள் விண்டதும், நீரானந்தங் கொண்டதும் சுத்தப் பொய்யாகும் ஆத லால் சீக்கிரம் பராத்பரனை வரவழையுமென்று பலவந் தஞ் செய்யத் தொடங்கினர். அரிதாசர் நகைத்து ஓ மொசல்மான்களே! நான் சொல்வதைக் கேளுங்க ளதே தென்றால் பகவானே கருணைகூர்ந்து காட்சி கொடுக்க வேண்டுமே யல்லது நம்முடைய பலவந்தத்தால் தரி சனந் தரவேமாட்டார் இது சத்திய வசனமாகு மிதை உங்க ளிறைவனுக் குரைத்து இவ்விட மழைத்துக் கொண்டு வாருங்களென் றியம்பத் துடுக்கர் ஓ ஸ்வாமி அரசன் வார்த்தையை மறுத்து உமது மொழிக்குச் செவிகொடுத்துத் தண்டனைக் குடன் படுவோமோ? பகவானை வரவழைக்கா வும்மை கொஞ்சத்தில் விடு வோமா? நீர் தொழும் ஸ்ரீராமரை வரவழைக்கும் பரி யந்தமும்மை இச்சிங்காசனம் விட்டெழுந்திருக்க வொட்

டோம் உம்மாலெங்கள் குல தர்மங் கெட்டோம் மஹம் மதுவைக் கும்பிடுவது விட்டோம் அநீதிக் குட்பட்டோம் பாதுஷாவிட மும்மது பாசாங்கு நடக்குமேயன்றி எங்களிடம் நடக்காது உம்மைக் கொஞ்சத்தில் விடமாட்டோம் நடக்காது வெனப் பற்பல வார்த்தைகள் ப்கராலுற்றார்கள். அரிபக்தன் ஓ துடுக்கரே! சன்மார்க்கங் குறைந்து துன்மார்க்கம் நிறைந்து வாது செய்வோர்க்கு ஜெகநாதன் தரிசனங் கிடைக்குமா? என்னை வருத்துவ துங்களுக் கடுக்குமா? இனி நானிஷ்டமான விடத்துக்குப்போக விட்டுவிடுங்க ளென் றறைந்து சிம்மாசனம் விட்டெழுந்தார், மொசல்மான்கள் அரியணையிலிருந் தெழுந்த அரிதாசரை எழுந்திருக்க ஒட்டாமலவ் வணையின்மே லழுத்திச் சீக்கிரம் பகவானைவரவழைத்தா லன்றி உம்மை யிங்கிருந்து பெயரவிட மாட்டோம் ஜீவன் பிரிந்தாலும் முதுகு காட்டோம் மஹம்மதியர்வைராக்கிய மறியீரோ இது மாத்திரந் தெரியீரோவென்று பலவார்த்தைகள் படபடவெனப் பிதற்றலுற்றார்கள். அரிபக்தன் ஓ மொசல்மான்களே! இவ்வித பலவந்தத்தாற்றானே பகவானைப் பார்க்கப் போகிறீர்கள். இப்பேர்க்கொத்த துஷ்டர்களுக்குப் பகவானுடைய தரிசனங் கிடைக்குமா? சாதுக்களிட மொருவர் பலம் நடக்குமா? இனி யென்னைத் தீண்டாமல் பகவானைக் குறித்து வேண்டாமல் உங்களிருப்பிடஞ் சேருங்கள் சீக்கிர மிவ்விடம் விட்டுப் பேருங்களென் றறைந்தார். துலுக்கர் ஓ சாதுர்க்குண முள்ள சாதுவே மும்முடைய துஷ்ட குணத்தையும பிரஷ்டத்தனத்தையும் எங்களிடங் காட்டவேண்டாம், வீண் ஜம்பத்தை நீட்டவேண்டாம், அரச னுக்கினைப்படி அரியணையைவிட்டசைய வேண்டாம், ஒரு மொழியும் பேசவேண்டாம், நகங்கள் வளர்ந்த கரங்களை நீட்டி வீசவேண்டாமென்று தடிகளாலும் கர்ச்சனை யிடிகளாலும் பயங்காட்டிக் கோபத்தை மூட்டி மூன்றுநாள் பரியந்தம் சிங்காசனம் விட்டெழாமலும் அசையாமலும் மலசல விசர்ஜனதி கட்குச் செல்லாமலும்அன்னபானதிகளைஉட்கொள்ளாமலும் அதட்டி வாயில் வந்தபடி பிதற்றி வெகு தொந்தரவு செய்யத் தொடங்கினார்கள்.

அதனால் துளசிதாசர் உடல் வாட்டமும் மனக் கோட்டமு மடைந்து மிகவு மிடைந்து ஓ மஹம்மதியரே! உங்க ளிஷ்டப்படி பகவானை வரவழைக்கிறேன் பாதுஷாவை அழைப்பியுங்களெனத் துலுக்கர் முன்னம் ஸ்ரீராமரை வரவழைத்தாலொழிய இராசனைக் கூப்பிட மாட்டோமென் றுரைத்து அடிமே லடியடித்தால் அம்மியும் நகருமென்கிற பழமொழிப்படி உம்மாலொரு கணத்தில் பகவானை வரவழைக்கிறோம் பாருங்களென் றின்னம் தொந்தரவு செய்யத் தொடங்கினார்கள் இவர்களிங்கு இவ்வித கோரஞ்செய்ய அங்கே பாதுஷா துளசிதாசரிடம் பகவான் தரிசனத்துக்குரைத்துவந்து மூன்று நாளாகின்றதே என்ன சங்கதி யென்று தன்னருகிலிருக்கும் பிரதானிகளைக் கேட்டான். மந்திரிகள் இதுபரியந்தம் நம்மவர்செய்த தந்திரத்தாலும் தொந்தரவாலும் பக்தியாலும் சக்தியாலும் பகவானை வரவழைக்கிறேனென் றுரைத்தாராம் இன்னும் மூன்று ஜாமத்துக்குள் பொழுது விடியும் அதற்குள் பகவானும் பிரசன்னமாவார் சற்றே பொறுத்திருமென் றுரைத்தார்கள் பாதுஷா சந்தோஷமடைந்து எப்போது சூர்யோதயமாகும். எப்போது பகவான் வருவார், தரிசனந் தருவாரென்கிற எண்ணத்தோடு கூடியிருந்தான் அங்கே துளசிதாசர் துடுக்கர் செய்யும் வேதனைக் காற்றாமல் இக்கொடியரை அநுமாரால் சிக்ஷை செய்விக்க வேண்டுமேனெனின் இத்துடுக்கருக் காதிகாரணனை மோசலமா முனிவரை ஓர் குத்தால் குடல்களெல்லாம் குதத்தின் வழியாக வரச்செய்தவர் அநுமாரேயாம் அவரே இவர்களுடைய மடமையைப் போக்கடிப்பவ ரென்றுன்னித் தனக்குற்ற வேதனையைப் பொறுக்க மாட்டாமல் இன்பமா யநுமாரைத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

---

## அநுமார் அநுபூதி.

சீரார்தாஞ்தேனுர்மொழியுந்
தாரார்புயமுந்தடமார்புமுள
சூராவிரைவாத்துணையாவருவாய்
வீராவினைவீறமொருதியே. 1

அடல்வவ்வலறி வழிராகம்பாடி
மடமாதியல்கேசரியின்மதலாய்
முடிவென்றமிலாமுதல்வாவடியே
னிடர்தீர்த்தருள்வாயிறைமாருதியே. 2

இனியேசுசியஞ்சனையீன்றருளும்
பொறையேயொருவாகியபுண்ணியனே
குறையேபுரிந்துணேலமிடும்
முறைகேட்டருளென்முதுமாருதியே. 3

முகிலோரணுவாமணுவும்மலையாம்
பகவானுனிலப்பதமேயிரவும்
பகலுந்துதியாய்ப்படிநேனெனினும்
பகைதீர்த்தருள்வாய் மிளிர்மாருதியே. 4

மிளிராதவனைமிகுநற்பலமென்
றிளமைப்பருவத்தின் புற்றதுபோ
லுளவொன்றறியாதிடருற்றனனுன்
களியெய்திடக்காகா மாருதியே. 5

கார்த்தாட்கொள்வாய் கருணைக்கண்ணுற்
பார்த்தாட்கொள்வாய்படிறேன் வினையத்
தீர்த்தாட்கொள்வாய் திமிரும்மருளும்
பேர்த்தாட்கொள்வாய்ப் பிரியமாருதியே. 6

பிரியத்துடனெம் பெருமானுனருட்
டிரியத்திலெனைச் சேர்க்கும்படிசெய்
தருமைப்பொருளாக்கியவாண்டவவென்
மருளச்சகமற்றுவை மாருதியே. 7

அகமும்புறமும் அணுவுங்குறையா
தகரக்கரநேரமலப் பொருளீ
சுகநற்றவசுந்தரசோபித்தே
சிகவற்புத்திண்ணியமாருதியே. 8

நியமப்படியோர்நெறிதன்னினிலாப்
பயனற்றவனுகினன் பண்பருள்வாய்
ஜயசித்களனே ஜயசிஷ்களனே
ஜயபுஷ்களனே ஜயமாருதியே. 9

ஜயஸ்ரீரகு நாயகவித்தகனே
ஜயவாரிதிதாண்டிய சத்துவனே
ஜயலங்கணியட்சய கூற்றுவனே
ஜயமாமறைவாசக மாருதியே. 10

ஜகசாட்சியிருந்தொருசார்புசெல
விகலாட்சியர் வாழ்மிகுலங்கையைப்பா
வகனேயுணவாலகரீட்டியகான்
மகனேயிவண்வாவரமாருதியே. 11

வரலாலுயர்மாவணைசெய்தவுணன்
மேலோனுப்பல்விம்ப கூறினவா
மாலோனுழிபோய்வைதேகியின்சீ
ராலோசனையுமறை மாருதியே. 12

அறையாவுணர்க்கதமீந்திளவல்
குறைநீக்குமருந்துகொணர்ந்ததலத்
துறைராவணனுட்புகுதாவகைமாச்
சிறைபாற்றியதிண்புய மாருதியே. 13

புயநாலைந்தோன் போர்விட்டிரிய
மயில்ராவணன் மாய்ந்திடமோதினவா
சுயவச்சுதசுப்பிரனே வடியேன்
மயனீங்கிடவாவிவன் மாருதியே. 14

வண்ணம்முளமாவைதேகியைச்சு
ழெண்ணங்களை நீத்தின்பீந்தவனே
நண்ணித்தொழுமிந்நாயேற்கருள்விண்
மண்ணுந்துதிசெய்மாமாருதியே. 15

மாமேவியகோசலம் வாழ்பரதன்
ராமாஜநீச வரசாட்சியெனத்
தீமூழ்கிறபோதனுகித்திடமும்
ஆமோதமுமீயருண் மாருதியே. 16

அருளார்க்கதிராதவன் பாற்கலைமெய்ப்
பொருளோதிய நுன்னியபுந்தியினு
லருளாற்விகரமிழிவுமழிவும்
மருளேதமுநீக்கிய மாருதியே. 17

நீக்கப்படும்வல்வினை நீடளையைப்
போக்கப்படும்வெம்புறையார் குறையை
ஆக்கம்புகழீயனுமானெனவே
மூர்க்கனெனும்முது மாருதியே. 18

முதுசொல்லுரைதும்புரு நாரதன்முன்
மதமுற்றனைநாடிவரத்தனையையோ
டிடமுற்றிடலின்னிசை மீட்டியவவர்
மதநீக்கியதேவக மாருதியே 19

தேவாதிகளேத்தியதேசிகனே
காவாவிஜயன்களை தீர்த்தவனே
மூவாவுலகும் புகழ்மூர்த்திகனே
வாவாவிடர் நீக்கிடு மாருதியே. 20

படரும்வினையும் பழியுமிழிவும்
தொடரும்பவமுந் தொடராதெனையே
கொடையுந்துதிமெய்குறியுமறியும்
நடையுந்தருவாய் நய மாருதியே. 21

நயனேபரந்தநாயேன்மீதில்
பயநீங்கிடநீபார்த்தாட்கொய்ய
நயனேச்சலநானடையும் வகைநீர்ப்
பயனேசுயபண்டித மாருதியே. 22

பண்டோரேத்தும் பகவானேயுன்
தண்டாமரைத்தாட்டனை நீதருவாய்
எண்டோளினனீயெண்ணேக்கினன்கோ
தண்டாச்சுதநீசரண்மாருதியே. 23

சரணம்விசுவாகாராட்சபனே
சரணம்விருகோதான் முன்னவனே
சரணம்மகமேரினை தாஷ்டிகனே
சரணஞ்சுகதாண்டவ மாருதியே. 24

சுகமோரனுவாந்துயர் வாரணமாம்
ஜகமீதறியாதவர்யாரறிவுற்
றிகமேயாசித்திடராதலையும்
அகமேவரவேவண மாருதியே. 25

ஏனேவுனதன்பிலையுண்டெனிலென்
கோனேவருவாய் குறைதீர்த்தருள்வாய்
நானேவினைநம்பினனம் பினனே
ஞானேதயனே நலமாருதியே. 26

நலமும்நீயே நாயேன்விரதப்
பலமும்நீயே பரமானந்தப்
பலமும்நீயே பரமேசுவரநீர்ச்
சலனும்நீயே சதுர்மாருதியே. 27

சதுரப்படையாசம் ப்ரப்பிரியா
முநிசத்குரவாதுகளில் லுருவா
அதிகத்தயவாயடியேன் முன்வா
மதிதத்துவமாதவ மாருதியே. 28

தவமேசெயினுந் தவறேசெயினும்
பவமேயுரினும் பழியேபெறினும்
அவதூறொருசேரடியேற் குளதோ
அவிகாரனே நீயருண்மாருதியே. 29

இக்கணமிந்நீசியோர் மருள
வாயத்தமிழைத்தருள் வாயருள்வாய்
தாயொத்ததயாபர வுன்னடியேன்
சேயொத்தவன் சீர்தருமாருதியே. 30

என்று இவ்விதமாகத் தோத்திரஞ் செய்திருக்குந் துளசிதாசருடைய பரிதாப மறிந்து அனுமார் துடுக்கர் செய்யும் அக்கிரமத்தை நிக்கிரகிக்கு நிமித்தம் தனது சேனைகளாகிய வானரங்களை நோக்கி, ஓ யூகக்கூட்டங்களே! உங்களில் பதினாயிரம் மந்திரிகள் டில்லி நகரிற் பிரவேசித்து எத்திசையிலும் பிரகாசித்துத் துடுக்கர் நடுக்கங்கொண்டு பல திக்குகளி லோட்டமெடுக்கவும், துளசிதாசரைக் கெஞ்சி யடுக்கவும், அக்பர் பாதுஷா பயந்தேங்கவும், துளசிதாசருக்குச் சந்தோஷ மோங்கவும், அந்தப்புரத்தை அல்லோல கல்லோலங்கள் செய்து வாருங்க ளென் றறைந்த மாத்திரத்தில் பர்வதாகாரமான பதினாயிரம் வானரங்கள் ஓர் கணத்தில் டில்லி நகரை யடைந்து தோப்புகளையும் சிங்காரத் தோட்டங்களையும் பாழாக்கி அங்கிருக்கு மேடைகளைத் தூளாக்கிப் பட்டினத்துட் சென்று கரங்களைக் கொட்டி நிமிர்ந்து நின்று முன்னாளில் நம்முநிவோர் இலங்கையைப் பாழாக்கினதுபோ லின்று இந்நகரை யழித்து எதிர்த்தவர்களைப் பழித்துக் கீழேதள்ளி மிதித்துப் பிராணன் நீங்கும்படி சிதைத்து ஒருவரையும் விடாமல் வதைத்து இம்மாளிகைகள் சரிந்து விழும்படியாக வுதைத்துத் தூளஞ் செய்து விடுவோ மென்று மேடைகளை யிடித்து பஸ்பமாகப் பொடித்து மானிடர்களை யடித்து கரங்களை வெட்டிப் பிடித்து மூர்ச்சை யடையக் குத்திப் பட்டணம் நடுங்கக் கத்திக் கிருகிறெனச் சுற்றிப் பட்சிபோல் பறக்க வெற்றிப்பாதுஷா நகரையடைந்த காவல்களெல்லாங் கடந்து பட்டத்தரசிகளைப் பார்த்துக் கூந்தலைப் பிடித்து ஈர்த்துப் பற்களைத் திறந்து காட்டிப் பாணியா லறைந்து வாட்டி இராஜனைக்கண்டு நகைத்து நீயா அரசனெனப் பகைத்து நெஞ்சம் பிளக்க மருட்டி நிலமேற் பலதரம் புகட்டி வதனத்தில் மலத்தைப்பூசி மாதர்மேல் மரியை விசித் துளசிதாசர்பால் வந்து சொகுசாக வந்தனந் தந்து சூழ்ந்திருப்பவர்களை மடக்கிக் கக்கத்தில் பலரை அடக்கி நசுக்கும்படியாகச் செய்து நகங்களாற் சிரங்களைக் கொய்து வாலா லடித்துக் கொன்று ஓடுவோர் முன்னோடி நின்று அமர் செய்யலாமெனப் புகன்று அநேகரைக் கணந்தனில்வென்று சுற்றுப் பக்கங்களிலோடிப் பதுங்கினோர் தம்மையுந் தேடிப்பிடித் தாகாயத்திலெறிந்து பலர்மேல் கற்களை யெறிந்து பட்டணத்தைப் பாழாக்கி மேடைகளைத் தூளாக்கிப் பலதிக்குகளிலும் பாவும்போது சிரங்களுடைந்தவர்களுங் கரங்க ளருந்தவர்களும் உரங்க ளொறிந்தவர்களும், தோள்கள் முறிந்தவர்களும், தாள்க ளறிந்தவர்களுங், கண்கள் கெட்டவர்களுங், புண்கள் பட்டவர்களும், குடல்கள் சரிந்தவர்களுங் இடைகள் முறிந்தவர்களுங், மூக்கருந்தவர்களும் ரணக்களத்திற் சாய்ந்தவர்களுந், தலைவிரி கோலமாய் மூலைக்குமூலை பதுங்கி ஒதுங்கிக் கூகாவெனக் கூக்குரலிட்டு ஸ்மரணைகெட்டுத் திக்கு முக்கிட்டுத் தட்டுகெட்டு டில்லிநகரை விட்டுப் பல திக்குகளிலு மோட்டமெடுத்தார்கள் அங்குள் வானரங்களைக்கண்டு தைரியத்தை விடுத்தார்கள், தெண்டனென் றுரைப்பார்கள், தொண்டனென் றுரைப்பார்கள், மூர்ச்சையாய் விழுவார்கள் முறையோவென் றழுவார்கள் தெய்வமேயென்று தொழுவார்கள், திருத்தாட்களில் விழுவார்கள், நடுங்குவார்கள், ஒடுங்குவார்கள் இவ்விதமாகத் துடுக்கர் நடுக்கங் கொள்ளும்படியாகச் செய்த வானரங்கள் அட்டகாசஞ் செய்து கெக்கலி கொட்டி நகைத்து, டில்லிநகரை யழிக்கும்போது, துளசிதாசர் அக்பர்பாதுஷாவின் மேலிருக்கு மன்பினால் அதிசீக்கிரமா யந்தப்புரமடைந்து அரசரிருக்கு மலங்கோலத்தைக் கண்டிடைந்து ஓ அரசனே! உனக்கைக்பமாயிருக்கும் யாந்தர்களாலல்லவோ இவ்வளவு வேதனை வந்து ஆயாசம் தந்தது என்றுரைக்கும்போது பாதுஷா துளசிதாசர் பாதங்கள்மேல் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து இந்த வானரங்க ளெங்கிருந்து வந்தது சீக்கிரஞ்சொல்லும் ஸ்வாமியென்று பணியத் துளசிதாசர் ஓ இராஜனே! ஸ்ரீராமருடைய சேனைகளி லாயிரம் பங்கில் ஓர் பங்குவந்தது மற்ற கூகூகூ-பங்கு இனிவரும் பின்னால் ஸ்ரீராமர் வருவார் தரிசனந் தருவாரென்றறையப் பாதுஷா நடுங்கிப் பூனைபோலொடுங்கி ஓ ஸ்வாமி! ஸ்ரீராமருடையதெரிசனமெனக்குத்தேவையில்லை. அவருடைய சேனைகளாகிய யூகங்களைத் தன்னிருப்பிடம் போகக் கடாட்சித் தருளுமையாவென்று பன்முறைவேண்ட அரிதாசரப்படியே யாகட்டுமென்று அநுமாரைத் தியா

னஞ் செய்து உம்முடைய படைகளைக் கூப்பிட்டுக்கொள்ளும் ஸ்வாமியென்று பிரார்த்திக்க, உடனே அனுமார் மாயமா யங்கடைந்து அசரீரிவாக்காய் ஓ துளசிதாசரே என்னைத்துதித்துப் பாடிய பாடல்களை யாராவதன்புடன் துதிசெய்வார்களானு லவர்களுக்குற்ற விக்கினங்கள் நீங்கிச் சுகஜீவியாக வாழ்ந்திருப்பார்களென் றுறைந்து கவிகளையெல்லாங் கூட்டிக்கொண்டு மறைந்துவிட்டார். பின்பு டில்லி நகரிலுள்ள துஷ்டர்களெல்லாம் துளசிதாசர் பக்கலடைந்து ஓ ஸ்வாமி! சிறியோர்கள் செய்த குற்றங்களையெல்லாம் குற்றவமாகக்கொண்டு எங்களை யாட்கொள்ளுமையா வென்று சிரசாஷ்டாங்கமாகத் தெண்டஞ் சமர்ப்பிக்கக் கருணாநிதியான அரிதாசர் பயப்படாதிருங்களென் றபயஸ்தங் கொடுத்துத் துன்பத்தைக் கெடுத்துப் பாதுஷாவை நோக்கி, ஓ இராஜனே! துஷ்ட பிள்ளைகளுக் கூரார்புத்தி சொல்வாரென்கிற பழமொழிப்படி இந்தத் துன்மார்க்கப் பிரஜைகள் மந்திரிகளால் மிகவும நொந்தார்கள். அரசமரத்தைப் பிடித்த சனியன் அனுமாரையும் பிடித்ததென்பதுபோலவும் பிரஜைகள் செய்த பாவம் இராஜனைப் பிடிக்குமென்பதைப் போலவும் உமக்குத் துன்பம் வந்து நேரிட்டது துஷ்டர்கள் நேசங் கெட்டது என்று பற்பல வார்த்தைகளாடித் தன்னிருப்பிடஞ் சேர்ந்து பிரமநிஷ்டையைச் சார்ந்து துன்பத்திலிருந்து பேர்ந்து மிகவும் களிகூர்ந்து சகஜ ஞானத்தில் விஸ்ராந்தி யடைந்திருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

துளசிதாசர் அக்பர் பாதுஷாவைப்
பங்கஞ்செய்த அத்தியாயம்
முற்றிற்று.

---

பதினேன்காவது

## துளசிதாசர் அக்பர் பாதுஷாவுக்கு அனுக்கிரகஞ் செய்த அத்தியாயம்.



இப்பால் அக்பர் பாதுஷா தன் மந்திரி பிரதானிகளை நோக்கி ஓ மந்திரிகளே! தந்திரிகளே! நீங்கள் செய்த அக்கிரமத்தால் பட்டணம் பாழானதன்றிப் பலபேர் நகைக்கும்படியான கீழ்மையை யடைந்தேன் இப்பேர்க்கொத்த துஷ்டர்களாகிய நீங்களென் பட்டினத்திலிருந்தால் வெகு நஷ்டமுண்டாகும் பரமசாதுவாகிய துளசிதாசருடைய மனம் நைபச் செய்பத்தகாத காரியங்களைச் செய்தீர்கள். என் கழுக்கடைக் கொய்யாமற் கொய்தீர்கள் துன்பத்துக்குள்ளானீர்கள். துளசிதாசருடைய அருமை தெரியாமற் போனீர்களாதலா லினி யோர் கணமு மென் னாட்டிற் றங்காமற் பேருங்களென் றுறைந்து தன் மன மிகவுங் கரைந்து துன்பம் மிகவும் நிறைந்து சமஸ்த மேன்மைகளிலுங் குறைந்து துளசிதாச ரிருப்பிட மடைந்து முன்போவதற் கிடைந்து புறத்திலிருந்துக்கொண்டே பலபல விதங்களாகத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர். துளசிதாசர் தப்பிதமறியாத தராபதியைப் பிரியத்துடனழைத்து அருகிலிருத்திக்கொண்டு பட்சமான வார்த்தைகள் பல புகன்று ஓ இறைவனே! உனக்கோர் குறையும் நேரிடாது. அரசன் அஜாக்கிரதையாயிருத்த லடாது. உத்தமர்கள் சித்தக் கலக்கம் கிஞ்சித்தல் விடாது சாதுக்களைத் தனலுஞ் சுடாது இனி சுகத்துடன் வாழ்ந்திரும் நன் பல தேசங்களிற் சென்று சஞ்சார சமாதியால் சகஜ ஞானத்தைப் பூரணமாயடைய வேண்டுமென்றி உன் பட்டணத்திலுள்ளவர்கள் மதபேதத்தால் அபேத ஞானமறிந்துக் கொள்ளாமல் அகக்கிராந்தியால் பொறாமை கொண்டிருக்கிறார்கள். இதனால் ஒவ்வொரு காலத்தில் என்னுடன் வாதிப்பார்கள் உன்னையும் பேதிப்பார்கள் இதற்குத் திருஷ்டாந்தமான சரித்திர முங்களிலேயே நடந்திருக்கின்றது அது வதென்பீரேல் பனிதரைச் சூலத்திலேற்றினதும் தோலுரிய களாசத்தா லடிக்க வேண்டு மெனத் தீர்மானித்ததேயாம். அப்பதிக்கிறைவன் மந்திரிப்பிரதானி பிரஜைகளுக் கனந்தம் விதமாயவர் பெருமையை விரித்துரைத்தும் அன்பான வார்த்தைகளால் மனதைக்கரைத்தும் கேட்காமல் சூலத்திலேற்றினார்கள். அப்போ தம் மகாத்மாவின் அங்கத்துற்ற துங்கமான ரத்தத் துளிகளெல்லாம் அலக்யென்னும் மகா வாக்கியார்த்தத்தையே யுரைக்க அதைச் சுட்டுச் சாம்பலாக்கி யோர் கலசத்தி லடைத்து வைக்க அத்திருநீறுமப்படியே யுரைத்துக்கொண்டிருந்தது அவ்வாரையன் மகளதை யவிழ்த்துப்பார்த்ததே அக்கன்னிகையின் கற்பத்திற் பிரவேசித்துப் பிராணமாய்க் குழந்தையாய்ப் பிறந்து அவ்வாக்கியமே புகன்றுக்கொண்டிருந்து அவ்வேந்தனுடைய மகன் மடிய அக்குழவியை அவ்வாக்கியத்தா லெழுப்ப அதனால் மாந்தர்களனைவரும் வெட்கி நமது குமாரனுக்கு விரோதமான வாக்கியத்தா லெழுப்பின னென்று தோலுரிய அடிக்க எத்தனிக்கையில் இப்புருஷோத்தமன் தோலை யுரிந்தவர் முன் னெறிந்து சூரியனை யழைத்துப் பட்டிணத்தை

நடிக்கச் செய்து அத்வைத க்ஞானத்தைப் புலப்படக் காட்டி மதபேதத்தை வாட்டி அரைக்கணமு மவ்வூரிற் றங்காமல் புறநாட்டிற் சென்ற ரிதை நீர் கேட்டிருப் பீர். அப்படியே எனக்கும் நேரிட்டதன்றி இன்னமும் நேரிடும் இதனாலுனக்குக் குறைவுண்டாகுஞ் சந்தோஷ மாக விடைகொடுத்தனுப்பு மென்றறையப் பாதுஷா அவர் பாதாம்புயங்களிற் றனதிருநயனங்களை யணிந்து சிரசாஷ்டாங்கமாகப் பணிந்து ஓ ஸ்வாமி! எனக்கோர் மார்க்கமறிவிக்காமல் எழுந்தருளினல் நான் மஹம்மது மார்க்கத்திலும் நில்லாமல் இந்துக்கள் நெறியினுஞ்செல் லாமல் நடுநாடாய்த் தடுமாடிக் கொண்டிருக்கமாட்டே னே இப்படிச் சந்தேகத்தில் வைத்துப்போவதழகோ? காருண்ய மூர்த்தியாகிய தேவரீரே என்னைக் கைசோர விட்டால் காப்பவ ரொருவ ருண்டோவென்று மிகவுங் கரைந்தழத் தொடங்கினர்.

அரிதாசர் ராசனை ஆலிங்கனஞ் செய்துக்கொண்டு ஓ வேந்தனே! சத்துவகுணத்திற் சிறந்த சாந்தனே! ஞானி யுரைப்பதும் வேதத்தி னுரைப்பது மொரு பொருளன்றி வேறில்லை. ஆயினும் ரூபத்தைத் தொழு வோர் இந்துக்கள். நிரூபத்தைத் தொழுவோர் மஹம்மதி யர் இப்படிப் பேதமாயிருந்தாலும் ஒன்றையே தொழுத தாகும் எப்படி யென்பீரேல் லவணத்தைப் போன்றது ரூபம் ஜலத்தைப் போன்றது நிரூபம் ஜலமே லவண மன்றி வேறல்ல அதுபோல நிரூபம் ரூபமன்றி வேறல்ல அவிவேகத்தால் வேறுபடுத்துவ தன்றி விவேகத்தா லன்றி விசாரிக்கின் சம்மதமாகவே யிருக்கின்றது ஆத லால் நிரிதுகால பரியந்தம் தியானஞ் செய்துக்கொண்டு வந்த நிருபமாகிய பரப்பிரமத்தையே தியானஞ்செய்துக் கொண்டிருப்பதன்றி அப்பரப்பிரமத்தை உமக்குள் நீரறி ந்தும் சந்தோஷசாகரத்தில் மூழ்கியிருப்பீராக வென் றந்த மஸ்த சையோகஞ்செய்து மகா வாக்கியோப தேசஞ்செய்து தேகேந்திரிய கரண பிராண ஜீவவஞ்ஞா னங்க ளிதிதென் றுணர்த்திச் சாக்ர சொப்ன சுழுப்தி யின் நிலவரங்களைத் தெரிவித்து சின்னளிருந்து பிரம நிஷ்டையிலிருக்கும் மர்மத்தையும் அந்தர் முகத்தில் மனஞ்சென்று ஆனந்த நித்திரையில் ரமிக்குங் குறியும் புலப்படக் காட்டி அத்வைத க்ஞானத்திற் பூர்த்தியடை யும்படியாய்ச் செய்து ஒருநாளிறைவனை நோக்கி, ஓ அர சனே! உமக்கேதேனுஞ் சந்தேகமிருந்தால் கேளுமென் றறையப் பாதுஷா தன் பட்டினத்திலிருக்கும் அனேக பகிர்களுரைக்கு மார்க்கமும் அரிதாசர் சொன்ன மார்க் கமும் ஒற்றுமையாயிருப்பதால் யாதொன்றுங் கேட்கக் கூடாமல் சற்றே மௌனமுற்றிருந்து பின் தனக்குற்ற ஓர் சங்கை நீங்கப் பரம பாகவதனைத்தொழுது ஓ ஸ்வாமி! உங்களில் மஸ்தானென்றும் வலீயென்றும் புகழ் பெற்ற பேர்படைத்த உத்தமர்கள் சொல்லும் நெறியும் தாங்கள் புகன்றவழியும் அபேதமா யிருப்பதாலும், பிரத்யட்சமான அனுபவ க்ஞானத்தாலும் சந்தேக மொன்றுமில்லை ஆயினும் இவ்வுலக மெவ்விதமா யுண் டாயிற்றோ, எவ்விதமா யொடுங்குமோ என்கிற சங்கை மாத்திரம் நிவர்த்திசெய்யக் கோருகிறேனென வணங்க துளசிதாசர் ஓ பாதுஷாவே! அனுதினஞ் சகலருக்கு மனுபோகமான நித்திரையி னுற்பத்தியையும் நாசத்தை யும் சொல்வதற்கே கூடாமையாயிருக்கப் பிரபஞ்சோற் பத்தி லயத்தை யொருவரா லுரைக்கத்தகுமோ ஆயி னும் சகலமஸ்தரும் ஒப்புக்கொள்ளும்படியான வேதா ந்த சாஸ்திரத்திலுரைக்கும் பிரபஞ்சோற்பத்தி லயத் தைப் பெரியோர்களால் கேள்விப்பட்டபடியே யுரைக் கின்றேன் சற்றே கவனமாகக்கேளும். அதேதென்றால் அகண்ட பரிபூரண சச்சிதானந்த நித்தியநிர்மலசொரூப சாக்ஷாத்கார சுயம்பிரகாசமாகிய ஒப்பற்ற பறப்பிரம வஸ்துவானது நாமரூப ரகிதமாயிருக்கின்றபடியால் இப் பேர்கொத்த தென்று மூவர் தேவர் மற்றியாவராலுஞ் சொல்லக்கூடாததா யிருக்கின்றது சொல்லப்புகின் பிர மைக்குள்ளாகு மாதலால் அத்வைதமான நிற்குண வஸ்துவுக்கு பிரமமென்கிற நாமமுண்டாயிற்று இப்படி யே பல காரணங்களாற் பல நாமங்க ளேற்பட்டது நிராகாரமாகிய பரப்பிரமம் நிவாத்தீபம் போலவும், நிஷ்தரங்க சமுத்திரம் போலவும், ஓவியம் போலவும் காந்தக்கல்போலவும், சலனமற்றிருக்க அதன் சந்நிதா னத்தில் காந்தக்கல் முன்இரும்பூசிகளைப் போலவும், அக்கினியிற் சூடுபோலவும், விளக்கின் நிழலைப்போல வும், நச்சு சர்ப்பம் போலவும், கானல் சலம்போலவும், சலனமே சுபாவமான மூலப்பிரகிருதி யென்றும், அவ் வியக்தம் என்னும் பேருடைய ஓர் மாயாசக்தி யுண்டா யிற்று இதின் வடிவம் இருளேயாம். எங்ஙனமெனின், சந்திர சூரிய ருற்பத்தியாகாமுன் எங்கும் அந்தகாரமே நிறைந்திருந்தது. அந்த அந்தகாரமே மாயையென் றுரைக்கத்தகும், ஓ ராசனே! அகண்ட பேரொ ளியின் பரப்பிரமம் ஓர் தீபமாம், அத்தீபத்தின் நிழலே மாயையாம். ஏகபெருவெளியின் பிரமத்தி னிடத்தில் வந்தியா புத்திரனைப்போல அணுவுக் கணுவான மாயையென்னு மிருட்டெப்போ தன்

டாயிற்றோ அப்போதே ஒன்றுண்டானால் அதி லனேக முண்டென்கிற சப்பவப் பிரமாணப்படி முழுதும்மித்தை யான மாயையிற் பிரதிபலித்த பரப்பிரமத்திற்கு அரோ பமாய் ஈஸ்வர னென்கிற பொதுப்பெய ருண்டாயிற்று அனேகவிசித்திரரூபயான மாயா பிரதி பிம்பனுன ஈஸ்வ ரனுக்கு மனேக விசித்திரரூபமுள அதெப்படி யென்றால் சலனமே சுபாவமான மாயாந்த காரத்தில் சத்த தன்மாத் திரையான அரூப ஆகாயமுண்டாயிற்று அதிற் பிரதிபலி த்த பிரமத்திற்குச் சதாசிவனென்றும் அரூபயான ஆகா யத்தில் சத்தத்துடன் பரிச தன்மாத்திரையான வாய்வுண் டாயிற்று அதிற்பிரதிபலித்த பிரமத்திற்கு மயேசுவரனெ ன்றும் ரூபாரூபமான வாயுவில் சப்தஸ்பரிசத்துடன் ரூப தன் மாத்திரையான தேயுவுண்டாயிற்று. அதிற்பிரதிபலி த்த பிரமத்திற்கு ருத்திரனென்றும் ரூபமுள்ள தேயுவில் சப்த ஸ்பரிசரூபத்துடன் ரச தன்மாத்திரையாகிய அப்பு வுண்டாயிற்று.

அதிற் பிரதிபலித்த பிரமத்திற்கு விஷ்ணு வென் றும் ரூபமுள்ள ஜலத்தில் சப்த ஸ்பரிசரூபத்துடன் சத்த தன்மாத்திரையான பிருதிவியுண்டாயிற்று அதிற் பிரதி பலித்த பிரமத்திற்குப் பிரமாவென்றுசொல்லப்படும் பஞ் சபூதங்களும் மாயாம்ஸமாம் பஞ்சகர்த்தாக்களும் பிரமா ம்ஸமாம் பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமான மாயை பிரமத்தி லோரணுவெனச் சொல்லப்படும் மாயையென னுஞ் சாயையில் விசாலமான ஆகாயமும் ஆகாயத்தில் வா யுவும் வாயுவில் தேயுவும் தேயுவில் அப்பும் அப்புவில்பிரு திவியு மடக்கமாயிருக்கும் நிர்ச்சலமான ஆகாயத்துக் கிணையாயிருக்கும் பரப்பிரமத்தினிடத்தில் தனக்குத்தா னே யுண்டாகிச் சுழலும் சுழல்காற்றுக்கிணையான மாயை யானது பஞ்ச பூதங்களிடமாயிருந் தொன்றுட னொன்றை ச்சேர்க்கும்.

ஈசுர பிரயோகத்தால் அனேக அண்டங்களாகிமயில் முட்டையைப்போல் நானு விசித்திர ரூபங்களால் விளக்க முற்றிருப்பின் அல்லாமல் ஸ்படிகம் நிஷ்களங்கமாய்ச் சுத்த நிர்மலமாயிருந்தும். பஞ்சவர்னக் கோட்பாட்டால் பலவித வர்னங்களாக எப்படி தோன்றப்படுமோ அப்படி யே அரூபமுள்ள ஆகாயத்திற் பிரதிபலித்த பரப்பிரமம் அரூபமுள்ள சதாசிவனாகவும் ரூபாரூபமுள்ள வாயுவிற் பிரதிபலித்த பரப்பிரமம் ரூபாரூபமுள்ள மயேசனாகவும், ரூபமுள்ள தேயு அப்பு பிருதிவியிற் பரப்பிரமம ரூபமுள் ள ருத்ராதி பிரமாவாகவும் விளங்கின பிருதிவி சொரூப மான பிரமாவானவர் ஐந்துகுணமுள்ள பிருதிவியாலனே க அண்டபிண்டங்களை யுண்டாக்கினர் விஷ்ணு வானவர் நான்குகுணமுள்ள அப்புவால் பிரமாவா லுண்டாகினதை ரட்சிக்கத் தொடங்கினர். ருத்திரன் மூன்று குணமுள்ள தேயுவால் அரியால் ரட்சிப்பதைச் சம்மாரஞ்செய்யத்தொ டங்கினர். மஹேசுவரன் இரண்டுகுணமுள்ள வாயுவால் மாயாம்ஸமான ஜீவர்களுக்கு மயக்கமுண்டாக்குவார் சதா சிவன் ஏகுணமுள்ள ஆகாயத்தில் ஜீவர்களுக்குத் தெளி வைக்கொடுப்பார் மாயை பஞ்சபூதாம்ஸமான தேகேந்திரி யாதிகளே நான் நானென்னும் அகங்காரக் கிரியை வி ளைவிக்கும் பிரமம்தேகாதிகளுக்கும் இவைகளையே நானெ ன்றிருக்கும் சிதாபாசனுக்கும் விலட்சணமாய் எல்லாவற் றிற்கும் சாட்சியாயறிந்துக்கொண்டு சுலட்சணமாகித்திரு க்குவாகிய ஆத்மாமாத்திரமா யிருக்கும் பிரம்மா ஜாக்ரா வஸ்தையாய் ஜீவனை நானுவிதபோக யோக்கியங்களி லலை யச்செய்பச்செய்வார். விஷ்ணு சொப்னவஸ்தையாய் ஜீவ னுக் கனேகவித லீலையைக்காட்டுவார் ருத்திரன் சுழுப்தி யவஸ்தையால் எல்லாவற்றையுஞ் சூனியமாக்கி ஜீவனைத் தனியாக்குவார் மயேசன் ஜீவனுக்குத் துரியாவஸ்தைக் கிணையான ஓர் மயக்கமுண்டாக்குவார் சதாசிவன் ஜீவனுக் குத் துரியாதீத அவஸ்தைக்கிணையான ஓ ரானந்த முண் டாக்குவார் மாயை சுகத்தைமறைத்துச் சுத்த சூன்யமாய்ப் ப்பிரமிக்கச் செய்யும் பிரமம் சுயப்புவாய் அறிவானந்த மாயிருக்கும் பரப்பிரமமான இந்த ஆத்மானந்தத்தை மா யாவிசேஷத்தா லறியாச்சீவன் துக்கத்தையே சுகமாக நினைத்து அளவற்ற ஆசைக்குள்ளாகி இச்சா சொரூபமா ன அனந்த தேகங்களெடுத்து ஜனனமரணமென்னும் வா ரிதியிலமிழ்ந்து கரையேதுதற்கோர் துறைகாணமல் துக் கத்தையே யனுபவித்துக் கொண்டிருக்கும் பஞ்ச தன்மா த்திரைகள் பஞ்சபூதங்கள் இவைகளாலுண்டான அண்ட பிண்ட பிரமாண்டங்களும் மாயையினுடைய லீலையன்றி வேறில்லை விவேகத்தாலறிவூன்றி விசாரிக்கில் ஜீவசப்த மேயில்லை எங்ஙனமெனின் தேவாதிகளைப் பஞ்சபூதாம்ச மென்று நியதிசெய்து பார்க்கையில் நானெனுஞ் சீவசப் தம் சூன்யமாகும் தேகாதி நானென்றகங்கரித்து நிற்கும் பிரமையே ஜீவனன்றி வேறில்லை சாட்சியாகிய ஆத்மாவே பிரமமாகும். இந்த கூடஸ்தை பிரமமே சுயம்பிரகாசமாய் ஜாக்ர சொப்ன சுழுப்தியிலுள்ள விஷயபோகங்களையும் நா னுபேத விசித்திரங்களையும் சூனியத்தையும். ஜீவனுக்குள் ள மயக்கத் தெளிவையும் விலட்சணமாயிருந் தறிந்துக் கொண்டு அவைகள் நானுபேதப்பட்டாலும் தானபேதமா ய் அவைகள் சத்தானாலும் தானழியாச் சத்தாய் அவைக

ளஞ்ஞான மயமானாலும் தான் ஞானமயமாய் அவைகள்
துக்கமயமானாலும் தானானந்தமயமாய்நிர்மலமாய்நிர்விகார
மாய் நிரூபமாய் ஏகப்பிரகாசமாய் பெருவெளியாய் அக
ண்டபரிபூரணமாய் விளங்கியிருக்கும்மாயை ஓர்காலத்தில்
விசித்ரரூபங்களாய் அனிருத சடதுக்கமாயிருக்கும் இந்த
மாயையை நாடினோர்களுக்கு விசித்திரமான சித்திகள் சித்
தித்தாலும் நாசமற்ற பிரமக்ஞானமில்லாமையால் அகங்கா
ரம் விர்த்தியடைந்து இறுதியில் துக்கமே பலிதமாகும்
பிரமத்தை நாடினோர்களுக்குச் சித்திகளனேகம் பலிதமா
வதன்றி அகண்டானந்தமுண்டாகி இறுதியில் கைவல்யங்
கிடைக்கும் பிரம்மாம்ஸமான பஞ்ச கர்த்தாக்களில் யாரை
ப்பரதெய்வமென நம்பித் தியானதோத்திரங்கள் செய்தா
லும் அந்தப் பரப்பிர்மத்தையே தியானதோத்திரஞ் செய்
ததாகும் அதனாலேயே அனேகர் எந்த தேவதையை இஷ்
டதெய்வமெனத் தொழுதார்களோ அதையே தேகவியோ
கபரியந்தம் நம்பி அத்தேவதையினருளால் மோட்சமடை
ந்தார்கள் ரூபமுள்ள தேவதைகளைத்தள்ளி நிரூபமான பர
ப்பிரமத்தை தியாநித்தல் வெகுதுர்லபமாயிருக்கும் ரூபத்
திலேயே நிலைக்காமனம் நிரூபத்தில் நிற்பதருமையாதலால்
சுலபமாய் முக்தியைநாடும் வழிரூபமென அனேகர் அங்
கீகரித்தார்கள்.

இதிலிருந்து தேர்ந்து நிரூபமான பரப்பிர்மத்தை
நாடினோர்களைப்போல எல்லோரும் ரூபத்தை விட்டு நிரூ
பத்தை தியானஞ்செய்வதால் நிஷ்பிரயோசனமே பலித
மாகும் உறுதியான மனதாற் றியானிப்பதற்கோர் தடையு
மில்லை தடைசொல்வாருமில்லை பரப்பிரமமேசிருஷ்டியாதி
கிருத்தியங்க ளியற்றுகின்றதென்றால் நிர்ச்சலன வஸ்து
வென்றுரைத்தல் கூடாது நினைத்தமாத்திரத்தில் சகலமு
முண்டாயிற்றென்றால் நினைப்பிருந்தால் மறப்புமிருந்தால்
இவ்விரண்டுமிருந்தால் விகாரமு மிருக்கும் ரூபமுமிருக்
கும் விகாரமும் ரூபமுமில்லாப் பரம்பொருளுக்கு நினைப்
புண்டென்பதே எல்லாச் சங்கைகளுக்கு மிடமாயிருக்கின்
றதாதலால் திரிமூர்த்திகளாலேயே திருஷ்டி ஸ்திதி லயங்
கள் நடக்கின்றது ஆதலாலிவர்களையு முக்கியமாகத் தொ
ழவேண்டும் திரிகாணசுத்தியோடும் திரிமூர்த்திகளையா
வது பரப்பிரமத்தையாவது பஜிப்பவனே பரமபக்தனென்
றுரைக்கத்தகும் இந்தச்சிரத்தா பக்தியோடு சர்ப்பத்தை
ப்போல சுவாசத்தையுண்டுநீண்ட ஆயுளைப்படைத்துஅநே
கசித்திகளால் பூர்த்தியடைந்து நிர்வியாகுலத்துட னிருப்
பவன் யாட்சியையான சித்தனென்றுரைக்கலாம் பகவத்
பக்தியும் யோகப்பயிற்சியும் செய்த பலத்தால் சித்திப்ப
தென்னவெனில் ஜீவன்முத்தித் தன்மையாம் ஜீவன்முத்தி
யென்பது தேகாதிகளை நியதிசெய்து தன்னையறிந்து தா
னே பிரமமென்றுணர்ந்து பிர்ம நிஷ்டா சாதனத்தினால்
விஸ்ராந்தியடைந்து தன்னைமறந்து பரப்பிர்மத்துக்குளைக்
யமாய் ஆனந்தவாரியில்மூழ்கிதானின்றோனென்றுணராமல்
ஆரூடக்ஞானியாதலேயாம் கேவலம் மௌடீகப் பசுவைப்
போலிருப்பவனினும் மூர்த்தித்தியானஞ் செய்பவனதிகம்
அவனிலும் பரப்பிரமத்தைத் தனக்குளறிபவனதிகம் அவ
னிலும் அப்பரம்பொருளா யிருப்பவனதிகம் அவனிலும
அகண்டானந்தத்தாற் றன்னை யின்னானென்றறியாமல் சா
ட்சாத்காரத்தை யடைந்திருப்பவனதிகம் அவனிலும் துரி
யதிருஷ்டியைமேவித் திக்குதேசாதிகளிறந்து பேய்பிடித்
தவன்போலவும் சேயிருப்பதுபோலவு மிருக்கும் சகசஞா
னிகளைத் தேடிக்கண்டுபிடித்து அன்னபானாதிக ளூட்டிக்
குற்றேவல் செய்பவனதிகமாகும் ஓ இராஜனே இப்பேர்க்
கொத்த மேலானலாபத்தை விடுத்துத் துன்பத்தை யடுத்
து அரிதான ஆயுளைக்கெடுத்துக் கர்மமென்னும் பெருமூ
ட்டைகளையெடுத்துப் பசுவைப்போலிருக்கும் மானிடர்க
ள் நாளை எமன்வந்தடுத்தால் என்னசெய்வார்களோ யாரை
வைவார்களோயானறிகிலேன். ஓ-வேந்தனே எத்தனைநாளி
ருந்தாலு மொருநாளி லழிந்துபோகும் இத்தேகத்தைப்
பொய்யெனத்தீர்மானித்து மெய்வாழ்வுக் குடன்படாம
லைநிமை வீண்காலம் போக்கலாமோ மண்ணிற்செய்
த பாண்டம் உடைந்தும் மண்ணே இருந்தும் மண்ணே
யானதுபோலப் பரமபக்தியும் ஜீவன்முக்தியு மடையாதவ
ர்களினுக்கை இருந்தும் பிரேதமே மரித்தும் பிரேதமே
யல்லமோ ஆ-ஆ-மந்தமதியோர்க் கெந்தவிதமாயுரைத்தா
லும் அந்தகன் சூரியனைக்காணாமல் ஒன்றுந் தோணாமல்
அந்தகாரமே நிறைந்திருப்பதாகக் காண்பதைப் போலப்
பந்தத்துக்கு ளகப்பட்டு வெகுதொந்தமைக் குட்பட்டிருக்
கிறார்களே மதபேதவாதிகள் வாதுகளாடி வேதைக்குட்
பட்டுத் தாங்கற்ற கல்வியாலோர் பயனடையாமல் சம்
மதத்துக் குட்படாமல் உங்கள் வேதம் பொய்யென்றும்
எங்கள் வேதம் மெய்யென்றும் உங்கள் தெய்வம் அசத்
திய மென்றும் எங்கள் தெய்வம் சத்திய மென்றும்
தூஷண வார்த்தைகள் விண்டு மதாபிமானம் மே
ற்கொண்டு சம்மதத்துக் குட்படாமல் தன்னை யறியா
மல் தனக்குள் ளிருக்கும் ஆனந்தத்தையு மனுபவிக்
காமல் உத்தமர்களைப் பழித்து வீணாய் நாளைக்கழித்து
எமன் வருங் காலத்தில் தந்தங்களைக் காட்டிச் சூழ்ந்
திருப்போரையும் வாட்டிச் சொல்லொணாத் துயரத்தை
யூட்டி நரகப்பட்டணத்துக்கு மேட்டான மேட்டிகளாகி
றது நன்மையோ தனக்குள் மெய்ப்பொருளைத் தேடா
மல் தெரிவிப்பவர்பாலு மோடாமல் பகவத் பக்தியை
யும் நாடாமல் பரமபாகவதர்களையுங் கூடாமல் வீணாய்த்
தர்க்க குதர்க்கங்களால் நாள்கள் கழிக்க லாகுமோ?

இதனு லகமதை பிரிந்துப்போகுமோ? க்ஷணபங்குமான இவ்வங்கத்தைத் தங்கத்தைப்போ லெண்ணிலாமோ? பாபகர்மங்களைப் பண்ணலாமோ?

ஓ அரசனே! மதபேதகர்க்குச் சதுர்வேதமுஞ் சந்கையேயாகும், சம்மதமுள்ள சாதுக்களுக்கு ஓர் மொழியேபோதும், முடிவு எழுவகைத் தோற்றங்களான சராசரங்க ளெத்தனையுக மிருந்தாலும் ஓர் காலத்தில் பூமியி லடங்கிப்போகும், பூமியோ சூரிய உஷ்ணத்தாற் சுண்ணமாகிப் பிரசண்ட வாயுவாற் றூசாகி வருண பகவானால் ஜலமயமாய்போகும், ஜலமோ அக்கினியால் வற்றிப்போகும், அக்கினியோ வாயுவா லில்லாமற் போகும், வாயுவோ ஆகாயத்தி லடங்கிப்போகும், ஆகாயமோ இருள் மயமான மாயையி லடங்கிப் போகும். மாயையோ தன் சாமர்த்தியங் கெட்டுச் சூரியனைக்கண்ட பனியைப் போலவும், சுழல்காற்றி லகப்பட்ட இலவம் பஞ்சுப்போலவும், அக்கினியில் வீழ்ந்த சருகைப் போலவும், சுத்த சூன்யமாய்ப் பிரமத்தி லில்லாமற் போகுமானால் நம தாக்கையை ஓர் பொருளாய் மதித் தகமடைந்திருக்கலாமோ? ஓ பூபதி! மாயை யிவ்விதமா யொடுங்கியும், பரப்பிரமம் பதி ஆதிமத்தியாந்த ரகிதமாய் நாமரூப விகார ரகிதமாய் அகண்டானந்தமாய் நித்த சுத்த புத்த முத்தமாய் நிஷ்கள புஷ்கள நிராமயமாய் நிர்ச்சேத நிர்மேத நிராவர்ணமாய் என்று முள்ளபடியே யிருக்கும் ஆதலால் தனக்கு யிப்போது மந்த லட்சணத்தோடிருக்கும் பரமாத்மாவைச் சற்குருவா லறிந்து கூடஸ்த பிரமத்தையே சுகசாதிகவி சாதிக சுவகத பேதாசிக மென்றும், அகண்டபரிபூரண ஸ்வரூபி யென்றும், சத்ய க்ஞானனந்த வஸ்து வென்றும், தேவரும் மற்றியாவரும் போற்றும் ஆதி தெய்வ மென்றும், முத்தரும், பத்தரும், சித்தரும் வணங்கும் பரம்பொருளென்றும், சித்விலாச சின்மய சுயம்பிரகாச தேஜோமய மென்றும், திவ்ய மங்களாற்புத போத மென்றும், இதை யடைந்தவர்களுக்கே ஜனன மரண துக்கமாடபரைபொழியு மென்றும், சகல பாபகர்மங்கள் விமோசனமாகு மென்றும், நரகவேதனை யில்லை யென்றும், மோட்சானந்தங் கிடைக்கு மென்றும் சொல்லப்படும் இதிற் சந்தேகமே யில்லை சந்தேகமுள்ளோர்க் களவற்ற தொல்லை ஓ இராஜனே! இந்தப் பிரமக்ஞானம் லேசி லடைவதற்குச் சற்குரு கிருபையும் இஷ்ட தேவதையின் வரப்பிரசாதமும் அவசியம் வேண்டும் இன்றேல் நிஷ்பிரயோசனமாய் முடியும் ஆதலால் இன்றுடன் தெய்வ பக்தியும் சத்குரு சிரத்தையும் சாதுக்கள் சேவையும் செய்து சுகமுற்றிருப்பாயாக வென்றுரைத்து அக்பர் பாதுஷா விடத்தில் விடைபெற்றுக் கொண்டு மதுரா பிருந்தாவனம் முதலான புண்ணிய க்ஷேத்திரங்களிற் சஞ்சரித்து ஆனந்த மேலீட்டாற் றன்னை மறந்து சஹஜஞானத்தாற் பூர்த்தியடைந்து ஆரூட க்ஞானியாய் சிறப்புற்றிருந்தார். அக்பர் பாதுஷாவோ அன்றுடன் பகவத் பக்தியில் விசேஷித்துப் பிரமக்ஞான நிஷ்டையையும் சாதித்துக்கொண் டானந்தமாயிருந்தார். கேட்டீர்களா சித்தர்களே! பின்னும் துளசிதாசரால் அனேக விசித்திரங்கள் நடந்ததுண்டு அவையனைத்தும் பக்தவிஜயத்தின் மத்தியி லங்கங்கே வரும் கேட்டுச் சந்தோஷ மடையலா மென் றுரைத்துப் பின்னுஞ் சொல்லுவார், இந்தத் துளசிதாசருடைய சரித்திரத்தை அன்புடன் பாராயணஞ் செய்தவர்களுக்கும், சிரவணஞ் செய்பவர்களுக்கும், பகவத் பக்தியும், நிஷ்காமியமும், பிரமக்ஞானமும், அகண்டானந்தமும், அஷ்டயிசுவரியமும், தீர்க்காயுசும், நோயற்ற வாழ்வும், சத்தியமாகச் சித்திக்கும். ஓ சித்தர்களே! நான் உத்தவ அவதாரமான நாமதேவர் சரித்திரத்தைச் சொல்லுவேன் அது வெது உசிதமாயிருக்கும். இனி உங்களுடைய ஸ்தானத்துக் கெழுந்தருளி நாளை அதிகாலையில் வாருங்களென் றுக்யாபித்து நாபாஜிசித்தர் பிரயாணந்தத்திற் படிந்திருந்தார். உத்தவசித்தர் முதலானவர்கள் தங்கடங்க ளிருப்பிடஞ் சேர்ந்து யோகநிஷ்டைகளி லெழுந்தருளிக் களிகூர்ந் திருந்தார்கள்.

துளசிதாசர் திருவடிகளே சரணம்.

---

நாலாயிரப் பிரபந்தத் திருவாய்மொழியில்

## விஷ்ணுபக்தர் வாக்கியம்.

நின்றவொன்றையுணர்ந்தேனுக்
கதனுணோர்மையதுவதுவென்
றென்றமொருவர்க்குணரலாகா
துணர்ந்தமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபரம்பரமா
யாதுமின்றித்தேர்ந்தாலு
நன்றுதீதென்றறிவதாய்
நன்றாய்ஞானங்கடந்ததே.

நன்றாய்ஞானங்கடந்துபல
நல்லிந்திரியமெல்லாமீர்த்
தொன்றாய்க்கிடந்தவரும்பெரும்பா
ழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பதுன்பங்கள்
செற்றக்களைந்துபசையற்றால்
அன்றேயப்போதேவீடு
அதுவேவீடுவீடாமே.

## சிவபக்தர் வாக்கியம்.

—(-*-)—

அஞ்சலென்றகரதலமுங் கணபணகங்கணமும்
அரைக்கிசைந்தபுலியிடையு மம்புலிச்செஞ்சடையும்
நஞ்சையுண்டமணிமிடறு முன்னூலுமார்பும்
நலந்திகழ்வெண்ணீற்றொளியு மறிமானுமழுவும்
கஞ்சமலர்ச்சேவடியுங் கருணைபொழிமுகமுங்
காமனையன்றெரித்ததிருக் கண்களொருமூன்றும்
பஞ்சடிசிற்றிடைமடந்தை யொப்பனைபாகனுமாய்
பால்வண்ணனுளத்திருக்கப் பயமுண்டோவெமக்கே

என்றுரைத்த பதிக்கவர் சதியுரைத்த
வாக்கியம்.

ஆக்கையெனும்புழுக்குரம்பை யனேந்தனையாப்பொருளை
அருளொளியைப்பராபரத்துக் கப்புரமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்கு மிடமறவிவ்வுலகை
நிறைந்துநின்றபெருவெளியை நினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள் செய்தனந்தத் தவக்குறைகண்முடித்த
பழவடியார்க்கருளுதவும் பசுந்துணைக்கற்பகத்தை
வாக்குமனவிகற்பத்துக் களவுபடாவொன்றை
மாசற்றபெருவெளியை மனவெளியிலடைப்பாம்.

# துளசிதாசர் சரித்திரம்

முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீமத் விட்டலதேவாய நமః

# ஸ்ரீ மகா பக்த விஜயம்.



நான்காவது

# நாமதேவர் சரித்திரம்.

### பகவான் துதி.

விருத்தம்.

பாண்டவர்க்காகத் தூதுசென்ற பத்மநாபா பரந்தாமா
நீண்டவுலக முழுதுண்ட நெடியமாலே யுனையன்பாய்
வேண்டிடாம லுலகியலை வேண்டுஞ்சிறிய நாயேனை
ஆண்டுகொள்வா யச்சுதனே அடியேனுன்ற னடைக்கலமே,







### நாமதேவர் துதி.

விருத்தம்.

அன்னைவயற்றிற் பிறக்காதோ னரிபைக்கணமு மறக்காதோன்
அன்னமாலுக் குண்பித்தோ னரியவருத்தந் தருவித்தோன்
சொர்னஞ்செய்கற் பலதந்தோன் சுரபிக்கன்றுக் குயிர்தந்தோன்
உன்னற்கரிய நாமதேவ னுபயவடிக டமைத்தொழுவாம்.

முதலாவது

## நாமதேவர் உற்பத்தி அத்தியாயம்.

பிரமாந்திரத்தில் சுவாசத்தை யேற்றிக் கால பயத்தைமாற்றித் தேகமான வாதைகளில்லாச் சித்தர்கள் காலையிலெழுந்து நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு புராதன சித்தரான நாபாஜி சித்தருடைய ஸ்தானத்தையடைந்து அவருடைய தாட்டாமரைகட்கு வந்தனந்தந்து, ஓ ஸ்வாமி! உத்தாவதாரமான நாமதேவருடைய திவ்ய சரித்திரத்தைக் கிருபைகூர்ந் தருளுமையா வென்று வணங்க, நாபாஜிசித்தர் களிகூர்ந்து ஓ சித்தர்களே!

அண்டர்கள் மகிழும் தொண்டர்கள் திகழும் இந்திரன் புகழும் சந்திரன் தவழும் சுந்தரமான சங்

திரபாகா நதிக்கருகான எண்டிசைபோற்றும் விண்டு
விற்றிருக்கும் பண்டரபுரத்திலிருப்பவர் புண்டரப்
நெற்றியிற்றரிப்பவர் சுப்ரதுணத்திற் சிறந்தவர் பெய்ப்
பணிதன்னில் நிறைந்தவர் தப்புகளெல்லாந் துறந்தவர்
இப்புவியாசை யிறந்தவர் கைப்புளயெண்ணம் மறந்த
வர் செப்பரும்பத்தியி லுரைந்தவர் ஒப்பிலாவின்பிற்
கறைந்தவர் துப்புளகுணத்திற்குறைந்தவர் எப்பொழுது
மரியின் பதத்தில் மறைந்தவர் தைப்பவர் குலத்திற்
பிறந்தவர் ஆகிய ராமராமயென்னும் வாக்குள்ள தாம்
ஸேட்டியென்மவர் மனோ விகாரங்களை மாய்த்த குணு
பாயியென்னும் மங்கையுடன்இங்கிதமா யில்வாழ்க்கையி
லிருந்து செல்வாக்குகளறைந்து அனுதினம் கனவிலுட
அன்பாய் இன்பாய் ஆயனே மாயனே நேயனே உபாய
னே சகாயனே என்றறையும் சுஜனரோடுங்கூடிப் பஜனை
பற்பலபாடிப் பண்டா புரத்திலிருக்கும்- விண்டுக்கு
நாடோறுந் தப்பாமல் நைவேத்தியங் கொண்டுபோய்
நைவேத்தியஞ்செய்து அஞ்ஞான மனதைக்கொய்து
தையல் வேலை விடாமல் வேறுவேலையைத் தொடாமல்
எண்ணங்களுக்குத் தன் மனதைக்கொடாமல் கோபத
துக் குட்படாமல் வீண்தொழில் செய்து கெடாமல்
நலத்தில் நாள்களைக்கழித்துப் பஜனை செய்யாதவர்க
ளைப்பழித்து லோபஞ் சற்றுமில்லாமலழித்துப் பகவான்
பக்தியிற்செழித்து வாழ்கிறகாலத்தில் தனக்கு அறு
பது வயதாயும், தன் மனைவிக் கைம்பது வயதாயும்,
பிள்ளையில்லாமையாற் கள்ளிபோல வளர்ந்தோமே யெ
ன்று சதியும் பதியும் துக்கம்மேலிட்டு கக்கசத்துக் குட்
பட்டு பாலனுக்காகவழுது பாண்டுரங்கனைத் தொழுது
நாடோறும் தாம்ஸேட்டி அதிகாலையிலெழுந்து சந்திர
பாகா நதியிற்போய் ஸ்நானஞ்செய்து ஈரவஸ்திரத் துடன்
கோயிலை நூற்றெட்டுதரம் அங்கப்பிரதட்சணஞ் செய்து
பண்டரிநாதனைப் பணிந்து, ஓ என்னுண்டவனேருக்மணி
மனோகரனே எனக்கோர் மைந்தன் பிறக்க வரந்தக்
தாண்டருளுமையா வென்று தோத்திரஞ் செய்துக்
கொண்டே வந்தார்.

இவர் மனைவியாகிய குணுபாயி தன் கொழுனன் நித்
திரைவிட்டெழுந்து போவதற்கு முன்பே ஸ்நானஞ் செய்
திருந்து அவர் ஆலயத்திற்கு வருவதற்குள் தான்பண்டரி
நாதன் கோயிலுக்குப்போய், ஓ பண்டரிநாதா! பாண்டவர்
தூதா! என்க்குற்ற பிள்ளை கலியைத் தீர்க்கலாகாதோ
வென்று தொழுது கண்ணீர் விட்டழுது தன் வீட்டில்
வந்திருப்பாள். இப்படி சிலநாள் கழிய ஒருநாளிரவில்
குணுபாயி சொர்ப்பனத்தில் பகவான் ஓரந்தணனாய் வந்து
தரிசனந்தந்து ஓ குணுபாயி! நீபொழுது விடிந்தவுடனே
பிள்ளையைப் பெறுவாயெனறறைந்துமறைந்தார். உடனே
குணுபாயி, நித்திரைவிட்டெழுந்து தன் பதியின் பாதங்
களில் விழுந்து, ஓ ஸ்வாமி! யாரோ ஓர் பிராமணர் என்
கனவில் வந்து நீ சூரியோ தயமானதே குழந்தையைப்
பெறுவாயென்றறைந்து மறைந்துபோனார். அவர் வாக்
கிப்படி நான் பிள்ளையைப் பெறுவேனுவென்றாள். அது
கேட்ட தாம்ஸேட்டி குலுங்க நகைத்து, அடி பெண்ணே!
என்னிருகண்ணே! பத்துமாதஞ் சுமந்தல்லவோ புத்திர
னைப் பெறவேண்டும். அப்படிக்கிருந்தாலும் நரைத்த கிழ
வியாய்ப்போன நீ எப்படி பிள்ளையைப்பெறுவாய் உனக்
குற்ற தனய னாசையின் நினைவே கனவாய் வந்தது. நன
விற் காண்பதே பொய்யாயிருக்கக் கனவிற்கண்டது மெய்
யாயிருக்குமா? ஓர்வேளை நீ கண்ட சொர்ப்பனம் மெய்
யாயிருந்தால் பகவானருளால் நமக்கெங்கிருந்தாவது குழ
ந்தைபகப்படுமென்று இக்கிழவியான நீ இனிக்குழவியைப்
பெருதற் கிச்சையாயிருப்பது லச்சைக்கிட மல்லவோ
வென, அதற்குக் குணுபாயி நாணமடைந்து மறுத்துப்
பேசுவதற்கிடைந்து நாடோறும் போவதுபோல் ஆலயத்
திற்குச் சென்று பகவான் முன்னின்று ஓ பாண்டுரங்கா!
ஸ்ரீரங்கா! என் கனவில்வந்த அந்தணர் நீரோ மற்றியா
ரோ யாராயிருந்தபோதைக்கும் எனக்குற்ற பிள்ளைகலி
யை இத்தினந் தீர்த்தருளல் வேண்டுமென்று மிகவுந்
துதித்துப் பகவான் றிருததாட்களை மனதிற் பதித்து
மைந்தனுசை தீருமென்றுமதித்துச் சந்தோஷமேலீட்
டாற் குதித்து வீட்டில் வந்திருந்தாள் தாம்ஸேட்டி
யென்பவர் அதிகாலையில் நாடோறும் போவது போல்
ஸ்நானஞ்செய்யச் சந்திரபாகநதியை நோக்கிப் போகை
யில் பகவானோர் விருத்தப்பிராமணரா யவருகிற்
சென்று, ஐயா தாம் ஸேட்டியாரே! உமக்கின்றைய
தினம் மைந்தன் பிறந்தானுவென்று கேட்டார். அது
கேட்ட தாம்ஸேட்டி நகைத்துத் திகைத்து ஓ! ஓ!
நமது மனைவி நமமுடன் இராத்திரிபேசிய மொழிகளை
இவர் கேட்டிருந்ததுபோற் றோன்றுகின்றது. நாமும்
நம் மனைவியும் விருத்தாப்பிய மேலிட்டும் குழந்தை
யாசையாற் குளறிப் பேசினோமே இவருக் குத்தாஞ்
சொல்லக் கூசினோமே யென்று யோசித்துக்கொண்
டிருந்தார்.

அப்போது மாயாமறையோன் தாம்ஸேட்டியின்கரத்
தைப் பிடித்துக்கொண்டு, ஓ ஐயா! அரிபக்தரே! நான்
சொன்னவார்த்தை யுமக்குக் கேட்கவில்லையோ? உமது

காதுசெவிடோ? இப்படிக்காதுச்செவிடான நரைத்தகிழவனுக்கும் பிள்ளையாசை கொள்ளையாயிருக்கின்றது கேட்டீர்களோ ஜனங்களேயென்று பலருங்கேட்கப் பலதரமூரக்கக்கூவிச் சொல்லத்தொடங்கினர். அதனால் தாம்ஸேட்டி கோபித்துக் கையைத்திமிறிப் பிடுங்கிக்கொண்டு அந்தணரை நோக்கி ஏனையா பரிகாசஞ் செய்கின்றீர். தள்ளாத கிழவனாகிய வெனக்குப்பிள்ளை யெண்ண மிருக்குமா? உமது வேலையைப்பார்த்துக் கொண்டு போகாமல் பிரயோசன மில்லா மொழிகளைப் பேசுகின்றீர்? வீணாக யேசுகின்றீர் ஈதுமக்குத்தகாத காரியமென, விப்பிரர் ஓ ஐயா பகவத்பக்தரே! பிறரறியாக் குப்தரே! உன்மனையாளிப்போது தான் மகவையீன்றாள் நான் பார்த்தே வந்தேன் உள்ளதைச்சொன்னால் வெள்ளறிவன் சள்ளென்று விழுவானென்பதைப்போல் நிச்சயத்தைச்சொன்னால் குச்சிதங்கொள்ளுகிறீர் தூஷண வார்த்தைகள் விள்ளுகிறீர் என் வாக்கியத்தைப்பரிசோதிக்கச்சீக்கிரம் வீட்டுக்குவாரும் புத்திரனைப்பாரும் பத்திரமாய்க்காரும் எனக்கு தட்சணைதாரும் என்று பின்னுமவர்கையைப்பிடித்திழுக்கத்தொடங்கினர். தாம்ஸேட்டி முனிவுடன் நீயாரையா வெகு நேரமாக என்னை மரித்து வருத்துகின்றீர் பொய்மொழி புகன்றீர் பருவகாலங்கடந்த விருத்தை கர்ப்பமெப்படியுருவாள் சுதனையெப்படி பெறுவாள் மூத்தோள் குமாரனைபெற்றதை யாராவதிவ்வுலகில் பார்த்ததுண்டா? அல்லது கேள்விப்பட்டதுண்டா ஒருநாளுமறிமுக மில்லா நீரிப்படி ஏளனம் செய்யலாமா மோடனம் பண்ணலாமாவென, மாயாமறைபோன் ஓ ஓ என்னை நீர் நாடோறும் பார்த்துக்கொண்டிருந்தும் கரங்களைச்சேர்த்துக் கொண்டிருந்தும் இன்றைக்குத்தான் நூதனமாயறிந்தவர்போல் நீர்யாரென்று கேட்கின்றீர் நெடு நாள் சினேகத்தை மீட்டுகின்றீர் ஓ ஓ காது செவிடானாலுங் கண்ணுக்குருடோ? அல்லது முருடோ? இப்படி கண்கெட்ட குருடனுக்குக் காளை யாசையிருக்கலாமா? சுதன் வாஞ்சையைப் பெறுக்கலாமா வென்றுரைக்கத் தாம்ஸேட்டி அந்தணரை வுற்றுநோக்கிச் சாந்ததை நீக்கி ஏனையா குருடன்-திருடன்-முருடன்-கடன்-என்றேசுகிறீர், பேசாததெல்லாம் பேசுகிறீர், அப்படி என் பெண்சாதி பிள்ளையைப்பெற்றாலும் நீரிப்படிப்பேசக்கூடுமா? பேசி யேசக்கூடுமா? வெகுநேரமாக விகடவார்த்தைகள் கடப்ட வென்று சொல்லிக் கொண்டு குடு குடு - திடு திடு வென்றங்கு மிங்குமாக யுலாவிக்கொண்டு பலர்முன் என்னைத் தூற்றுகிறீர் ஏமாற்றுகிறீர், இச்சகம்பேசிப் பிட்சைபெடுத்துண்ணும் துச்சகுணத்தைக் காட்டாமல் லச்சைசெய்வதுவிட்டு இட்சணமேயும்மிடஞ் சேருமென்று கடுகடுத்துரைத்தனர்.

வேதியர் என்னைப்போமென்றிசைத்த தாம்ஸேட்டியாரே! நீர் நாடோறுந்தப்பாமல் என்குட்சி நிறையப்பிச்சையிடுவதும் நிச்சயமே இனிமேலுன்றன் சொந்த மைந்தன் என்றவனுக்குப் பிச்சையிடுவதும் நிச்சயமே ஓ சித்தனே! பிறந்த மைந்தனுக் கென்ன நாமகரண மிடப்போகிறீர், பெயரிடப்போதென்னை மறந்து விடப்போகிறீர், வேறோரந்தணனைத் தொடப்போகிறீர், தொட்டுத்துக்கப்படப்போகிறீர், துக்கப்பட்டுக் கெடப்போகிறீர் ஜாக்கிரதை ஜாக்கிரதை யென்று சொல்ல, தாம்ஸேட்டி இதென்ன சள்ளையா யிருக்கின்றது பேயில் பிராணப்பேய் பிரம்ம ராட்சசப்பேயன் றுரைப்பதுபோல அதிகாலையிலிருந்து கூடவே தொடர்ந்தார், சூழ்ந்த கொடியைப்போலப்படர்ந்தார் ஸ்நானஞ்செய்யப் போகாமலடர்ந்தார் என்று தாபமுள்ளவர்க்குக் கோபமதிகமென்றுரைப்பதுபோல ஸ்வாமி யென்று பூசித்ததுபோய் நாயேபேயே யென்று தூஷிக்கத்தொடங்கினர். வேஷதாரி வேதியன் துர்வேஷங்கொண்டதுபோல தாம்ஸேட்டியின் மார்புடன் தன் மார்பகத்தைச்சேர்த்துக் குடுமையைப்பிடித்திர்த்து மீசையைமுறுக்கிக் கோபத்தைப்பெருக்கி அடா கந்தைகளிலுள்ள ரந்திரங்களைக் காலையிலிருந்து மாலை பரியந்தம் தைக்கும் கடையா! அறிவில்லாமடையா! நான் சுபத்தை சொல்லவந்தால் விபத்தென்று நினைத்து மேன்மேலுங் களைத்து சாந்தமே ஸ்வதாந்தமென்று வாசித்துப்போய்ப் பிராமணோ மமதேவதாயென்று விசுவாசித்துப் போய்ப் பூஷிப்பதை விட்டு வாயில் வந்தபடி தூஷிக்கிறாயா? அந்தணர் புகழும் சந்திரன் தவழும் இந்தச் சந்திரபாகாநதி யறிய உனக்கு மைந்தனுசை எந்தநேரமுமில்லையா? பாசபந்தனே. சொல்லடாவென்று தாம் ஸேட்டியின் கன்னத்தி லறைந்து மிகவு மிறைந்து பேசத்தொடங்கினர்.

தாம்ஸேட்டி இதென்ன கர்மம் தர்மசங்கடமாயிருக்கின்றது பிரமிக்கும்படி நமது மர்மமெல்லாம் நாலுபேரறிய மேலுமேலும் பேசுகின்றான். ஒண்டியாயிருந்தால் கண்ட கோடாலியால் கண்டங் கண்டமாகத் துண்டந் துண்டமாகக் கண்டித்து விடுவேன். சூரியோதயமாய் வெகுநேரமாய் விட்டது. பகவானுக்கு நைவேத்தியஞ் செய்பத் தடங்கலாய் விட்டது. நன்மை தின்மையுங் கெட்டது. இப்பிராமண ராகாத்திய மிகவுங் கெட்

டது என்று கோபங்குதித்து மிகவுங் கொதித்துப் பற்களை கறகறெனக் கடித்து அதரத்தை மடித்து உதிரம் புறப்படக் கடித்து மிகவுந் துடித்து ஈனமொழிகளைப் படித்து மரக்கிளையை ஒடித்து வோங்கி வோரடி வாங்கப் போனார். கபடநாடகமாடுப ஐயன் ஓ ஜனங்களே! எனக்குரிய இனங்களே! இந்த விருத்தன் மிகவும் பருத்த மரத்தின் கிளையை முறித்து நான் வருத்தமுற அடித்தான் பார்த்தீர்களா பார்த்தீர்களா வெனக் கூக்குரலிட்டுக் கோபமேலிட்டுத் தாம்சேட்டியைக் கீழே தள்ளி நகங்களாற் கிள்ளி மேன்மேலுங் குத்தத் தொடங்கினா. தாமசேட்டி அதிககோபதீப்தனுகமீசைகள்படபடென்று துடிக்கக் கண்களில் நெருப்புப் பொறிகள்பறக்க மகாவுக்கிரங்கொண்டு வேதியர் முகத்திலும் மார்பகத்திலும் கை முஷ்டியிற் குத்தி அவ்விருத்தப்பிரர்மணரைக்கீழேதள்ளி வெற்றியடைய வேண்டு மென்கிற எண்ணத்தால் தன் பலங்கொண்டமட்டும் போர்செய்து புரட்டிப் பார்த்தும் தன்னாலாகாமல் பற்களாற் கடித்து நகங்களாற் கீறித் தட்டு கெட்டுத் தமோறி மிகவும் வேசாறி மெதுவாகத் தப்பித்துக்கொண்டு ஆற்றின் பக்கமாய் வோடத் தொடங்கினார். மாயாவிலாசன் தாம்சேட்டியை விடாமற்றொடர்ந்தோடிக் கழுத்தைப் பிடித்து நெட்டிக்கொண்டே தலையில் குட்டிக்கொண்டே ஆற்றிற் குப்புறவிழும்படி யதட்டிக்கொண்டே வாயில் வந்தபடி திட்டிக்கொண்டே நின்றார். தாம்சேட்டி நதியில் தலைகீழாய் வீழ்ந்து திக்குமுக்கிட்டு நொந்து துக்காக்கினியில் வெந்து இன்று நமக்குப்பொல்லாதகாலமாதலால் இந்த முரட்டுப் பிராமணன் நம்மைத் தறையிற் புரட்டித்தன் பலங்கொண்டமட்டுமடித்து விட்டான். வைராக்கியத்தை முடித்துவிட்டான். வல்லடி வழக்கு சொல்லடியாமியென்கிறபடி வீணு யித்துஷ்டனிடங் கஷ்டப்பட்டோம். நதியிலிறங்கி வந்து தொந்தரை செய்தாலுஞ் செய்வானென்று தூரமாகச்சென்று அந்தணருக்குப் புலப்படாமல் நின்று அதிசீக்கிரமாய் ஸ்நானஞ் செய்யத் தொடங்கினார்.

அப்போது பகவான் தாம்சேட்டியை யடைந்து வேஷ்டையைத் தீர்க்கவும் மைந்தன் வாஞ்சையைப் போக்கவும் உத்தவரை நினைத்தார். உடனே உத்தவர் பரமபதத்தை விட்டுப் பகவான் பக்கலடைந்து பற்பல விதங்களாகத் துதித்து என்னை யழைப்பித்த காரணமேதோ திருவாய்மலர்ந்தருளும் ஸ்வாமி யென்று வணங்கி நின்றார். பகவான் உத்தவரை நோக்கி, ஓ உத்தவனே! இதோ நமக்கு நேரே அதோ ஸ்நானஞ்செய்யும் உத்தமர் தன் வீட்டுக்குப் போவதற்குள் அவருடைய சதியின் கர்ப்பத்திற்றங்கி ரிஷிபிண்டத்தைப்போல இவ்வுலகிலுள்ளோ ரியாவரும் ஆச்சரியப்படும் படியாய்ப் பிறந்து மாந்தர்களுக் கென் பக்திப்பிரதாபத்தை விரித்துரைப்பாயாக வென்று திருவாய்மலர்ந்தருளினார். இவ்வாக்கியத்தைக் கேட்ட உத்தவர் திருக்கிட்டு ஓ என்னாண்டவனே! உனது பரிபூரண கடாட்சம்பெற்ற அடியேனை நரகத்தை யடையச் செய்யலாமோ? உதராக்கினி காமாக்கினி கோபாக்கினி யென்னும் திரியாக்கினியும் புகைந்தெரிந்து மலம் ஜலம் வழுப்பு முதலானவைகளுஞ் சேர்ந்து புழுக்கள் நெளிந்து துர்க்கந்தமான சுரோணிதம் வழிந்து அந்தமச்சைக் கொழுவாற் றழைந்து இருக்கும் கர்ப்பக் குழியை யன்றி வேறு நரகமொன்றுளதோ ஜன்மமில்லாம லிருப்பதன்றி வேறு மோட்சமொன் றுளதோ கருப்பைக்குள் கட்டுப்பட்டுப் பெருமூச் செறிவதும் நெருக்கவழியில் தலைகீழாய்த்தள்ளாடிக் கொண்டு வருவதும் பிரசூதவாயு வேதைசெய்ப அயர்ந்தழுவதும் மாயையென்னும் நீரில் மூழ்கியிருப்பதும் சொல்லக்கூடாத துன்பமல்லவோ? துன்பமே நரகமல்லவோ? தேவரீருக்கு மடியேன் விரித்துச்சொல்லவோ? எமதண்டனையும் நரகக்குழியுங்கர்ப்பத்திலிருப்பதேயன்றி வேறேயெவ்விடத்திலாவது எமதண்டனையுநரகக்குழியும் இருக்கின்றதோ? ஓ என்தெய்வமே! மோட்சமடைத்த நான் நரகத்தையடைந்து தாட்சியடையலாகுமோ? அடியேன் நரசடைய மறந்தும் தேவரீர் நினையீரென்றிருந்தேனே இப்படி அதிக நம்பிக்கையோடு மிருந்த என்னைப் பாழ் நரகிற்றள்ளலாமோ? அடியேன் துன்பங்கொள்ளலாமோ? நரகலோக மென்பது இந்நரலோகமன்றி வேறுண்டோ வென்றுரைத் திருகும் உத்தவரைப் பகவான் கருணையுடன் பார்த்துமார்புடன்சேர்த்து ஓ எனதன்பனே! உன்னைப்போன்றவர்களாலேயே என்னுடைய திருநாமத்தின் மகிமை இவ்வுலகில்விளங்குமன்றி மற்றவர்களாற் றுலங்காதாதலால் சீக்கிரங் குழந்தையாகித் தாம்சேட்டி யினிடஞ் செல்லுமென்றறைய உத்தவர் ஓ ஸ்வாமி! உமதாக்கினைப்படியேமைந்தனாய் ஜலத்தில் மிதந்துக்கொண்டு, போய்த் தாம்சேட்டிக்குத் தனயனாகின்றேன். ஆனால் அடியேனிப்போது எடுக்கும் ஆக்கையைவிட்டுப்பரமபதத்தையடையும் பரியந்தம் உமதுபக்திசிறந்திருக்கவேண்டும் என்னுடன் கூடித் தேவரீர் நாடோறுமுண்ணவேண்டும். தாரித்ரம் அணுகாம லிருக்கவேண்டும். நான் நினைத்து

போதெல்லா முமது காட்சி கொடுக்க வேண்டும் தாழ்ச்சி தவிர்கக வேண்டும் என்கிற வரங் கேட்டுக்கொண்டார்.

பகவான் ஓ உத்தவா! நீ கேட்ட வரங்களெல்லாங் கொடுத்ததன்றி உனக்குத் தோழனுகவும். பணியாளனுகவு மிருக்கின்றேன். சீக்கிரங் குழந்தை யுருவாகிப் போவென்று திருவாய் மலர்ந்தார். உத்தவர் மகா பாக்கியமென்று அழகுள்ள குழவியாய் ஓர் நீண்ட சிப்பியிற் றங்கிச் சந்திரபாகா நதியில் மிதந்துக்கொண்டே கரகர வென்கிற சபதத்துட னழுதுக்கொண்டே தாம்ஸேட்டியினருகில் வந்தார். தாம்ஸேட்டி குழந்தைபைக் கண்டதே கொப்பென் றெழுந்து வாரியெடுத்அு மார்புடனணைத்துச் செப்புதற்கரிய ஒப்பிலாமணியாகிய என்னப்பனே! இச்சலத்தில் எப்படி மிதந்து வந்தாய் எனக்கேனுன்னிட சேவை தந்தாய் என் றம்மகவை எடுத்துக் கொண்டு தன் வீட்டை நோக்கி வோடத் தொடங்கினுர். அப்போது பகவான் தாம்ஸேட்டியின் பின் தொடர்ந்தோடி, அடா திருடா? அடாகுருடா? குழந்தை எதடா? நீ இதுபரியந்த மென்னுடன் செய்தது வீண்வாதடா வாதடா? உன் பக்தி மிகவுஞ் சூதடா சூதடா? குழந்தையையெங்கே கொண்டுபோகிரு யோதடா ஓதடா? அப்பா துரிதமா யோடுதற் குனக் கெங்கிருந்து வந்தது பலம், இக்குழவிக்காகத்தானே வெகுநாளாக கோயிலை வந்தாய் வலம், இச்சுதனு லுனக்கென்னடா வரும் நலர், இம் மலைபாற்றுனே ஈடேறு முன்குலம், மகப்பேறில்லாமையாற்றுனே யடைந்திருந்தாய் சஞ்சலம் என்றுரைத்துக் கொண்டே காற்றைப்போல அதிவேகமா யோடும் தாம்ஸேட்டியின் முன்னேடி மறித்து, அடா தையற்காரா! இச்சுதன்யார் பெற்றபாலன், எவர்பெற்ற சீலன் என்ன திருவிளையாடல் செய்யவந்தகோலன், எப்போக்கொத்தவர்களனுகூலன், குழந்தையைத் தாரும் பார்ப்போமென்று பலவந்தமாகப் பிடுங்கத் தொடங்கினுர், பகவானுடைய மாயையா லக்குழவின்மே லதிக ஆவல் கொண்ட தாம்ஸேட்டிக்குத் தாபமும், கோபமும், சோபமும், லோபமும் மேலிட்டு அப்பிராமணனேக்தமருடன் வாதாடப் பினனிட்டு, ஓ ஸ்வாமி! நீர்மேலான வருணம் ஆதலாற் செய்கிறேன் சரணம் ஒடிவருவதால் நோகுமுமது சரணம், இப்போதென்னை மறுக்காதருணம், மறித்தா லுமக்குவரும் மரணம், நீரெனக்கோர் திரணம், சாந்தமாய் வந்தாற் றருவே னனேகாபரணம், ஆதலா லென்னைத் தடைசெய்யாதீர், செய்யாதீர், வாயில் வந்தபடிவையாதீர் வையாதீர் என்றுகூரத்துக்கொண்டே குழந்தைக் கொடுக்காமல் அங்குமிங்குமா யோடத் தொடங்கினுர்.

மாயாப்பிராமணர் தாம்ஸேட்டியின் மடியைப்பிடித்துக்கொண்டு அசையாமல் நிறுத்தி மிகவும் வருத்தி அடா தாம்ஸேட்டி! குழந்தை யேதுசொல்லு. ஓடாமற் சற்று நில்லு, என் செய்கிருய் மல்லு. நீயெனக்கோர் புல்லு, நசுக்க ஒருவரட்டிச் செல்லு, நறநறென்றேன் கடிக்கின்ருய் பல்லு, கோபத்தாலென்னைக் கொன்ருலுங் கொல்லு. இத்தர்ப்பையே உன்னைக் கொல்லும் வில்லு, உன்னைப் புடைக்க என் காமுஸ்டியே பெரிய கல்லு, உன் பல மூதச் சிதறும்பதர் நெல்லு, இப்பாலனுக்காகவா நாடோறு மல்லும் பகலும் பண்டரிநாதனுக்கு நைவேத்தியஞ் செய்துக்கொண்டு வந்தாய் அடா மோட்சத்தின் சூட்சமான மார்க்கமறியா மூர்க்கநாயே! அறிவில்லாப்பேயே! உனக்கும் வாயேனென்று கான்முளை நசுங்கிக் காகாவெனக் கூக்குரலிட்டழத் தாம்ஸேட்டி பலதரந்தொழ அவர்மீதிருக்கும் பேரன்பால் மார்புடன் மார்பைச் சேர்த்து பல திக்குகளி லீர்த்து அங்கம்வேர்த்துத் தாம்ஸேட்டி தோர்த்துப் போகும்படியாயும் மனங்கொதித்து வேகும்படியாயும் பகவானுக்கு முறையிட்டு நோகும்படியாயும், சினனு பின்னமாகும்படியாயும், குடிமியைப் பிடித்துப் பலதரமிழுத்து முழங்கைகளா லிடித்து, வீட்டுக்குப் போகாமத் றடுத்தார். விடாச்சலந் தொடுத்தார் அதனுல்தாம்ஸேட்டிக்குக் கோபம் மிகவும் ஓங்கி பெருமூச்சுகள் வாங்கிச் சண்டைசெய்யப் பின்தாங்கி என்ன செய்வலா மென்றேங்கிக் கைகால்களை அடிக்கடி யுதறி அங்கமெல்லாம் பதறி வாய் தடுமாறக் கதறி அந்தணர் முகத்தி லெச்சில் சிதறி விழும்படியாய்ப் பேசி மிகவும் யேசி அடா லச்சைகெட்டுப் பிச்சையெடுத் துழலும் பேயனே! துர்மொழிகள் பேசும் வாயனே! கலியாணப் பந்தலில் காடியைவிட் டோட்டினது போலவும், யானை நிழலைப் பார்க்கத் தவளை கலங்கினது போலவும், எனக் கிம்மைதாவந்தாய், வாதாடி நொந்தாய் என்று தூஷித்துப் பின்னும் சந்தோஷமாய் வீட்டுக்குவாரும் என்ன வேண்டுமோ கோரும், கோரின தளிப்பேன்யாரும், கொடுக்காவிட்டார் செய்வீர் தாருமாரும், வழக்காடியது போரும், சற்றே கிருபை கூறும் என்கிற மொழிகளால் தூஷிக்குப்போது மாயாப்பிராமணன் அடா போடா குடிகேடா! மூழுமூடா! வனவேடா! எனக்குத் தேவையான திக்குழந்தையே வாக்குக் கொடுத்தபடியா லிக்குழவியை யிழந்தையே யென்று சுதனைக் கொடுக்கும்

படி வப்புக்கு நின்று மெய்பன் விறிட்டழுக் தாம்ஸேட்டியை கீழேதள்ளிப் பரபரவென்று பல புக்கங்களிலிழுக்கத் தொடங்கினர்.

தாம்ஸேட்டி தனயனுக்குக் காபப்படாமல் பார்பில் சேர்த்துக் கொண்டு இதுவென்ன கோரமென்று விண்டு, சோகம் மிகுந்து, மிகவும் நொந்து தனதிஷ்டதெய்வமாகிய பண்டரிநாதனை நினைத்து, கண்ணீரால் நனைந்து, ஓ பண்டரிநாதா! அண்டர்கள் நாதா! தொண்டர்கள் நாதா! புண்டரீக பாதா! பாண்டவர் தூதா! ருக்மணீசமேதா! லீலாவிநோதா! வேதகீதா! ஓ மதுசூதா! நாதனுடத்திடம் குசேலனைப்போல் பாக்கியமும், விபிஷணனைப்போல் சிரஞ்சீவித் தன்மையும், அனுமாரைப்போல் பிர்ம பட்டமும், துருவனைப் போலழியாய் பதமு மர்ச்சுனனைப்போல் படைத்தலையும், பிரகலாதனைப்போல வச்சரட்சணையும், ருக்குமாங்கதனைப்போ லனேகர்க்குப் பரமபதமும், அப்ரீஷனைப்போல் பத்தவதார மெடுக்கவும், தேவர்களைப்போல் அமிர்தத்தையும், விதுரனைப்போல சன்னுடன் விருந்துண்ணவும், பரமசிவனைப்போல் பிர்மத்தியை நீக்கவும், பார்வதியைப்போல மானபங்கத்தைக் காக்கவும், இலட்சுமியைப் போலுமது மட்சஸ்தலத்திற் சேர்க்கவும், நாரதரைப் போலுமதுவடிவத்தையும் இந்திரனைப்போல் பலதாமிராக்கதரோடு போர்செய்பவும், முசுகுந்தனைப்போல் நீண்ட ஆயுளையும், வாணாசுரனைப்போல் யுத்தஞ்செய்யச் சம்மதிக்கவும், உத்தவரைப்போல் பேரின்பத்தையும், குப்ஜாவைப்போல் சிற்றின்பத்தையும அனுசூயைப்போல தனக்கும் புத்திரனாகவும். தேவகியைப்போலப் பிரமக்ஞானம் போதிக்கவும், துருவாசரைப்போல் கடின பணிவிடைக் காளாகவும், துரோபதையைப்போல் பல வஸ்திரங்கள் தாவும், கஜேந்திரனைப்போல் முதலையைச் சம்ஹாரஞ்செய்யவும், உமதிடம் நானிச்சிக்கவில்லையே? நானுசித்ததிக் குழந்தையைத்தானே, ஓ எம்பெருமானே! தந்தையின்படியே இச்சித் தனுகூலப்படாத துருவனுக்கழியாப் பதமளித்த பகவானே! மூவுலகை வஞ்சித்த மாபலிக்கு மோட்சவுலகையளித்த பகவானே! ஐசுவரியத்தைக் கோரிய குசேலனுக் கடிமையாய்ப்போக எண்ணங்கொண்ட அச்சுதனே! எச்சிலைக்கொடுத்த சவரிக்குச் சொச்சமானமோட்சம் கொடுத்த உச்சிதனே! பத்மநாபா! பரமசொரூபா! பரந்தாமா! ஸ்ரீராமா! பரமேசுவரா! ஜகதீசுவரா! பரிபூரணா! சர்வகாரணா! வெங்கடரமணா! சங்கடாஹரணா! சகஸ்திரநாமா! நீலமேக சாமளா! ஓ பகவான்! ஓ விஷ்ணு! ஓ தெய்வமேயென்று தோத்திரஞ்செய்தேத்தும்போது பக்தவச்சலனாகிய பகவான் தாம்ஸேட்டி செய்யுந் தோத்திரத்தினல் தனக்காத்திரமடங்கி ஆனந்தபேலிட்டு ஸ்மரணைகெட்டுச் சித்திரபபோலசைவற்றிருந்தார் அத்தருணத்தில் தாமஸேட்டி கான் முளையை யேந்திக்கொண்டு காலடிபிட்டத்திற் படிபபடியாய் அதிகபரபரப்போடும் தன்வீட்டைநோக்கி, ஓடத்தொடங்கினர். உடனே பகவான் கண்களைத்திறந்து தாமஸேட்டியைக் காணாமற்பறந்து தாம்ஸேட்டி தன் வீட்டில் நுழையுந்தருணத்தில் ஓடிப்போய் மறித்துக்கொக்கரித்து வாயிலில் நிறுத்தி வீட்டுக்குட்போகாமல் வருத்தி மென்னியைப் பிடித்தழுத்திக் குப்புற விழுத்திப்பிள்ளையைப் பிடுங்கிக்கொண்டு அடா நான் அநேகநாளாய்த் தவஞ்செய்து பெற்றபாலனைக் கதிர்வடிவேலனை யேன் திருடிக்கொண்டு வந்தாய் எனக்கேனிடர் தந்தாய் நீயுமுன் மனைவியுங் கிழப்பிணங்களாயிற்றே உங்களுக்குக் குழந்தையேது? செய்யவேண்டாம் வீண் வாது என்றோசையாய்ப் பேசத்தொடங்கினர்.

அப்போது குணபாயி வெளியில் வந்து சகலமும் மணாளனுற் கேட்டறிந்த அந்தணர்மேற் சீறி விழுந்து இதுநல்ல அகட விகட மென்றறைந்து ஓ அந்தணரே! பகவானென் சொர்ப்பனத்தில் வந்துரைத்த வண்ணம் எங்களுக்ககப்பட்ட மதலையை நீயார் வாங்கிக்கொள்ளுகிறவன் விருத்தரைப் பிடித்துத் தள்ளுகிறவன் என்னுடைய சுதனென்று விள்ளுகிறவன் கோபமேலிட்டுத் தள்ளுகிறவன் என்று சிறுவன் சீறியழவும் விடாமல் பிடுங்கத் தொடங்கினள். அதற்கு அந்த மாயாமறையோன் ஓ கிழப்பிணமே! உடைக்கிறேன் பாருன்பல்லை யிக்கணமே நீனுரைத்த விருத்தையானபின் உமக்கேன் மகவாசை வீட்டினுட்போ பசாசேயென்று வாயில் வந்தபடி பேசத்தொடங்கினர். அதுகேட்ட குணபாயி அடா லச்சைகெட்டுப் பிச்சை யெடுத்துக் குட்சியை நிறப்பும் துச்சகுண தையா காட்டினய், வீண ஜப்பத்தையா நீட்டினய், ஐயையோ சிறுகுழந்தை பசியால் பதறுகிறது, குளிரா லுதறுகிறது, உன் போராட்டத்தாற் கதறுகிறது, வாதுசெய்ய நீ யெங்கிருந்து வந்தாய், எங்களுக்கேனிடர் தந்தாய், எங்கள் சாபத்தாலேன் வெந்தாய், ஓடோடி வந்தேன் நொந்தேன் யென்று இரைச்சலிட்டுப்பேசும்போது வழியிற்போகும் பலருங்கூடி வழக்கைத்தீர்க்கமாட்டாமல் வாடி மாயாமறையோனுடன் வாதாடி இவர் பேசுவதும்

நமக்குத் தெரியபோடியென்று தகைடக்க ளாலுவலைகாடி பி
ன்னிடைந்தார்கள், அப்போது பாரத்பான் குனுபாயின்
பாபங்களெல்லாம் பஸ்பமாய்ப் பரிசுத்தமாகும் பொருட்டு
எட்டியுதைத்து தாம்ஸேட்டியைக் கைமுஷ்டியிற் சிதைத்
துத் தனது திருக்கோயிலை நோக்கி வோடத்தொடங்கி
னுர், சதிபதிகள் கூடவே தொடர்ந்தோடி ஆலயத்தின்
சந்நிதானத்தில் எங்கள் குழந்தை உங்கள் குழந்தை
யென்று போராடும்போது மாயாவிலாசனுன பண்டரி
நாதன் கான்முளையைக்கசக்கி முற்பிறப்பின் நிலைமையயு
பிர்மஞான் நிலையையும் மறக்கும் படியாய்ப் பூமியில்
தொப்பென்றுபோட்டு மாயமாய் மறைந்தார். உடனே
குனுபாயி காகாவென்று கூக்குரலிடடழும் மகவை வாரி
யெடுதது ஸ்தன்னியத்தைக் கொடுத்துத தன்னை மறந்து
நின்றுள். உடனே பகவானருளால் குனுபாயின் கொங்
கைகளில் பால்பொங்கி வழிந்தது. அதனுல் சதிபதிக
ளிருவரும் தாங்கள் பெற்ற தனயனைப்போல மோகித்து
வீட்டிற்சென்று திஷ்டிதாங்கினதெனப் புகன்று நீராட்டி
ஆலங்காட்டி பக்தர்களுக்கு மேட்டி இவனென்று பாராட்
டிப் பாலூட்டித் திலகம் நெற்றியிற்றீட்டிப் பல ஆபரணங்
களையுஞ் சூட்டி வியாகுலத்தை விழக்காட்டிப் பாலன்மீதில்
புனைகாட்டி வேறு நினைவுகளைவோட்டி விருத்திக் கதவு
களைப்பூட்டித் தையர்காரனுகிய தாம்ஸேட்டி லோப
குணத்தைவாட்டிக் கேட்போர்க்கு நிறைந்த காத்தை நீட்
டிக் கான்முளையை யருமையாகக் காப்பாற்றிப் பண்டரி
நாதனைப்போற்றிக் கடவுளே காதலனைத் தந்தாரென்றெங்
குந் தூற்றித் தள்ளாமை யென்பதை மாற்றிப் பந்துவர்க்
கங்களைக் கூப்பிட்டும் பட்சத்துடன் விருந்திட்டு மறை
யவரைக்கும்பிட்டு மதலைக்கு நாமதேவென்று பேரிட்டு
அருமையாக வளர்த்து ஆனந்தமாய்க் களித்து அதிதி
கட்கனேகந் திரவியமளித்து அருங்கொழுந்து போற்
றளிர்த்து அகமும் மலர்ந்து இன்புற்றிருந்தார்கள். கேட்
டீர்களா சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னிஞ்
சொல்லத் தொடங்கினுர்.

நாமதேவர் உற்பத்தி அத்தியாயம்

முற்றிற்று.

---

இரண்டாவது

நாமதேவர் பகவானுக்கு அன்னமூட்டிய

அத்தியாயம்.

வாருங்கள் விநோதமான காதையை மனோரதமாகக்
கேட்கும் மஹானுபாவர்களே ! ஸ்திரமான ஜீவர்களே !
இவ்வித அன்புடன் சதிபதிகள் மனமொத்துத் தனயனைப்
பாதுகாக்கும் நாளில் நாமதேவ் நான்காம வயதைக்கடந்து,
ஐந்தாம் வயதையடைந்து பிள்ளைகளுடன் துள்ளி விளை
யாடிக்கொண்டிருக்கும் நாளில் ஓர்நாள் தன் மனைவியை
நோக்கித் தாம்ஸேட்டி சொல்லுகின்றுர், ஓ பெண்ணே !
இன்றையதினம் நானுன் அநுஜனிருக்கு மூருக்குப்போய்
மாலைக்குமுன் வருகின்றேன் சீக்கிரம் சகல பதார்த்தங்
களையுஞ்செய்து நமது மைந்தனிடங் கொடுத்தனுப்பிப்
பண்டரிநாதனுக்கு நைவேத்தியஞ் செய்துவரும்படித் திட்
டஞ்செய்தனுப்புவா யென்றறைந்து நாமதேவரைப்
பார்த்து அப்பா ஒப்பிலாமகனே ! இன்றுனது அழகான
கைகளால் பாண்டுரங்கனுக்குப் பூமாலைகளைச் சாத்திப்
பத்மநாபா ! பரமசொருபாவென்றேத்தி நைவேத்தியஞ்
செய்து எங்களுக்குற்ற பந்தபாசங்களைக் கொய்து பத்திர
மாய் வீடுவந்து சேர்ந்து பின்பு விளையாடலாற் களிகூர்ந்து
இருப்பாயாகவென்றுரைத்துத் தன் தம்பியிருக்கும் ஊரை
நோக்கிப்போனுர்,

பின்பு குனுபாயி நாடோறும்போல் பகவானுக்கனுப்
பும் வஸ்துக்களனைத்தையும் ஓர் தட்டில் வைத்து நாமதே
வுக்கு நீராட்டிப் பூசூட்டிப் பட்டுவஸ்திரம் புனைந்து இத்
தோன்றல் பாலசுப்ரமண்யனேயென்று நினைந்து நைவேத்
தியங்கொடுத்து அப்பா மகனே ! அழகான முகனே !
பண்டரிநாதனுடைய திவ்விய சந்நிதானத்துக்குப்போய்
நைவேத்தியஞ்செய்து உன் தாதையோதினபடி வழியி
லெங்குந் தங்காமல் யாரையுந் தீண்டாமல் பாண்டுரங்கா
ஸ்ரீரங்காவென்னுந் திவ்விய திருநாமத்தைத் தியானஞ்
செய்துக்கொண்டே பண்டரிநாதனுடைய திவ்விய சந்நி
தானத்துக்குப்போய் நைவேத்தியஞ் செய்து அதிசீக்கிர
மாய் வீட்டுக்கு வாருமப்பாவென் றனுப்பினுள். நாமதேவ்
அதிக சந்தோஷ சித்தனுய் நைவேத்திய தட்டையேந்திக்
கொண்டு பாண்டுரங்கா ஸ்ரீரங்காவென்று பஜனை செய்துக்
கொண்டு வீதியில் வந்து அங்கு பந்தாடிக்கொண்டிருக்
கும் பாலகரைக் கண்டு ஆனந்தங்கொண்டு அசைவற்று

நின்றார். பாலர் விளையாடும் பந்தானது தவறி நைவேத்ய தட்டின்மேல் விழுந்தது அதனால் நாமதேவ் பந்தாடும் பாலகரை முனிவுடன் நோக்கிற் சாந்தத்தை நீக்கி அடா துஷ்டப்பயல்களே! நைவேத்தியத் தட்டின்மேல் பந்தை யெறிந்தீர்களோ! தெய்வபக்தி யுங்களுக்கில்லையா மூடாத் மாக்களே யென்று வைத்தார். அம்மொழியைக்கேட்ட சிறுவர் நாமதேவைச் சூழ்ந்துக்கொண்டு அடா நாமா! சாப்பாட்டு ராமா! கந்தைகளையும் பொந்தைகளையும் தைக்கும் தையற்காரரும் நைவேத்தியஞ் செய்வதுண்டா? அடா பக்தியிற் சிறந்த தொண்டா? நைவேத்தியங் கொண்டுபோது முனக்கு விளையாட்டின்மேல் கோபக மேன்? வெகுநேரமா இங்கு நின்றதேன்? அசுத்த மில்லாமல் பரிசுத்தத்தோடும் ஒதுங்கிப் போயிருந்தால் பந்தேன்விழும் என்றுரைத்து நைவேத்தியத்தைத் தீண்டிப் பந்தையெடுத்துக் கொண்டார்கள். அதனால் நாமதேவ் முனிவுகொண்டு தூஷண வார்த்தைகள் விண்டு நைவேத்திய மசுத்தமாகப்பந்தைப் போட்டதல்லாமல் தையற்காரரும் நைவேத்தியஞ் செய்கிறார்களா வென்று விகட வார்த்தை யரைந்தீர்கள் பகவானுக்கு நைவேத்தியஞ் செய்யாம லுண்ணும் பசுவுக் கொப்பான உங்களைப்போ லெங்களையும் நினைத்துக்கொண்டீர்களோ வென்றதைச் சிலர் ஒருவரைப் பார்த்தொருவர்நகைத்து நாமதேவரைப் பகைத்து அடா நாமா! உன்னைப்போன்ற பக்தர்க ளிவ்வூரிலியாருமில்லை, நீ பண்டரிநாதனைவிட் டொருநாளும் புசித்ததில்லை பொட்டைப்பயனா யிருந்தும் வெகு கெட்டவனா யிருக்கிறாய், எங்கள் கைமுட்டியால் உன் தலைபிளக்கக் குட்டிவிடுவோம் பற்களைத் தட்டிவிடுவோம சண்டைக்கு வாடா வென்று துஷ்டத்தனஞ் செய்யத்தொடங்கினர்.

நாமதேவ் நைவேத்தியத் தட்டைத்தெருத் திண்ணையில் வைத்து அதிக கோபதீபத்னு பெரிகது பொரிந்து சண்டை செய்பவன் யாரடாவென்று பாலர் கூட்டத்தில் புகுந்து முனிவுமிகுந்து அடித்தும்-இடித்தும்-குத்தியும் -எத்தியும்-மிதித்தும்-குதித்தும் - தட்டியும் - முட்டியும் - விழுந்தும்-எழுந்தும்-பன்னியும்-தோள்களைத் தட்டியும் - கோக்கரித்து தட்டியும்-யானைத்திரளிற் பிரவேசித்த சிங்கக் குட்டியையபோல்சிலர் முறிந்தோட யுத்தஞ்செய்தார், அது தெரிந்த குனபாயி வெருண்டு நாமதேவிடஞ் சென்று அடா நாமதேவ் பகவானுக்கு நைவேத்தியஞ் செய்துவரச் சொன்னால் தெருத்திண்ணையில் தட்டை வைத்துப் போர்செய்துக்கொண்டா யிருக்கின்றாய், இனி அந்த நைவேத்தியம் பகவானுக் கேறுமா, அனேக நாளாகச் செய்துவந்த விரதத்தைக் கெடுத்தாயே எங்கள் வாக்கைத் தடுத்தாயே துன்பத்தைக் கொடுத்தாயே ஆசாரத்தை விடுத்தாயே வீண்சண்டை தொடுத்தாயே என்னைப் பார்த்தே தட்டையெடுத்தாயே அடா நாயே அறிவில்லாப்பேயே என்றுரைத்துக் கொண்டே சமீபத்தில் வருமுன் நாமதேவ் பயந்து இதோ நைவேத்தியஞ் செய்துவருகிறேனென்று சந்நிதானத்தை நோக்கி ஓடும்போது குனபாயி அடா துஷ்டா! அடா பிரஷ்டா பலரால் தீண்டப்பட்ட நைவேத்தியத்தையா பகவானிடங் கொண்டுபோகிறாய் வேண்டாம வேண்டாமென்று மறுக்கவுங் கேட்காமல் அதிசீக்கிரமாய் ஆலயத்திற் பிரவேசித்துச் சந்தன புஷ்பங்களாற் பூசித்துப் பாண்டுரங்கா! ஸ்ரீரங்காவென்று கோஷித்து வினயமாய் விசுவாசித்து பண்டு பலாதிகளைப் படைத்து முக்கண்காயை யுடைத்துத் தூபதீபங்களைக்காட்டி எங்களிஷ்ட தெய்வமாகிய பரமேட்டி உமது வலக்கையை நீட்டி நைவேத்திய முட்கொள்ளுமென்று பாராட்டிப் பகவான் பாதத்தில் மனதை நாட்டித் தன் கரத்தாலோர் பிடியன்ன மெடுத்துாட்டி உண்ணா கண்ணனைப் பார்த்து இரண்டஸ்தங்களையுஞ் சேர்த்து ஓ பாண்டுரங்கா! இந்த நைவேத்திய மச்சுத்தமாய் விட்டதென்றோ உண்ணாமலிருக்கின்றீர் வேறு நைவேத்தியத்துக்குப் போனால் என் தாயார் வாயில் வந்தபடி வைவாள் சித்திரவதைச் செய்வாள் ஆதலால் அடியேன் மீதருள்கூர்ந்து ஓர் பிடியன்ன பாவ துட்கொள்ளவேண்டும் ஸ்வாமியென்று பன்முறை கெஞ்சிக் கெஞ்சிக் கொஞ்சும்போது பக்தவச்சலனாகிய பகவான் சற்றும் அசையாதிருந்தார். நாமதேவ் விக்கிரகத்தின் காதருகிற்றன் வாயைவைத்து ஓ பண்டரிநாதா பாண்டவர் தூதா நானிசைக்கும மொழி கேட்கவில்லையோ? உம்முடைய காது செவிடோ? ஓர் பிடியன்ன முன்னுப்படி பலதரஞ் சொல்லச் சொல்ல அசையாக் கல்லைப்போ லிருக்கின்றீர் நீர் சகல ஜாதியாருக்கும் பொதுவானவராயிற்றே யார் கொண்டு வந்தாலும் பேதமின்றிப் புசிக்க வேண்டுமென்றோ நீர் உண்டாக்கின ஜீவர்களன்றி மற்றெந்த ஜீவர்களிந்த நைவேத்தியத்தை தீண்டிக்கொண்டார்கள்? உமக்குச் சாதிபேத முண்டா? அதாவது சொல்லலாகாதா? பேசவாயில்லையா? என்னால் வந்த தொல்லையா? அல்லது தூங்குகிறீரா வேளை தப்பிப்போய் விட்டதா புசித்து வயிறு நிறைந்து விட்டதா நைவேத்தியங் கெட்டதா என் கைகள் கெட்டதா உள்ளபடி கள்ள மின்றிச் சொல்லலாகாதோ? என்முன் சாப்பிட லாகாதோ? இவ்

வளவன்னம் போதாதோ? நீர் நினைத்திருக்குஞ் சூதேதோ வென்கிற மொழிகள் பல வுரைத்தும் பகவானசையா திருக்கும்போது இதென்னடா வருவதெல்லாம் வம்பா யிருக்கின்றது. எனக்கோ மிகவும் பசியாயிருக்கின்றது இந்தத் தெய்வமோ மூட்டுத்தெய்வமா யிருக்கின்றது யென்று, ஓ ஸ்வாமி! நீரென்முன் னுண்ணாமலிருக்கத் திருடனா? எனக்குக் கோபம்வந்த பின்னுண்ண மூடனா? நைவேத்தியம் வைத்திருப்பதறியாக் குருடனா? என்னை யேமாத்திப்போகப் பறக்குங் கருடனா? ஓ மூட்டுத் தெய்வமே! நல்லதனத்தாற் சாப்பிடு இல்லாவிட்டால் என் மூட்டுத் தனத்தையுங் காண்பிப்பேன் உனக்கு நைவேத் தியங்கொண்டு வந்தல்லோ ஊனர்களங்களா லடிபட்டும் புழு தியில் விழுந்ததைபட்டும் அலங்கோலப்பட்டும் நானணிந் துக் கொண்டிருக்கும் இவ்விலையுயர்ந்த பட்டும் சின்னா பின்னமாகக் கிழிந்து நேரமாய்ப் போகுதென்றோடோடி யும் வந்து கால்கள் நோகின்றது இதோ பொழுதும் போகின்றது நான் வெகு நேரமாய் வருந்தியழைக்கின் றேனே கெஞ்சிக் கெஞ்சி மிகவு முழைக்கிறேனே சீக்கிர மெழுந்துவருவாய், உன்னுடைய அரிய சேவை தருவாய், உண்ணலாகாதா வொருவாய், உண்டாலென் துதிபெறு வாய், இன்றே லெனக்குவரும் கோபம், உண்டா லுனக்கு வரும் லாபம், இப்படிசெய்தாற் பெறுவா யென்சாபம், அசையா திருப்பது தானோ உன் பிரதாபம், நானறியாச் சிறுபிள்ளை நீருண்ணுதிருப்பது வெகு சள்ளை, வசிய வூட்டுவது முனக்குக்கொள்ளை, வப்புசெய்யும் நீதானா ஆண்பிள்ளை, உன்னுடைய அறிவெல்லாம் வெள்ளை. பல தரஞ்சொல்ல நீவாவாயா கிள்ளை, ஓ பாண்டுரங்கா! எத் தனை தரந்தான் கெஞ்சுவேன், எளியேன் முன்னுண்டா லல்லவோ கொஞ்சுவேன், உன் பக்கத்தில் மிஞ்சுவேன், மெய்த் தெய்வமென் றஞ்சுவேன் என்னும் பற்பல பட்ச மான வார்த்தைகள் பகர்ந்தும் பரந்தாமன் எதாப்பிரகார மிருக்க ஆயாசமடைந்து மிகவு மிடைந்து ஆ ஆ நம் முடைய பிதா அனுதினம் நைவேத்தியஞ் செய்து வரு வாரே பகவான் சேஷமென்று தருவாரே அவர் கொண்டு வர உண்ட அண்டரேத்தும் விண்டுவாகிய இப்பண்டரி நாதன் நான்கொண்டு வந்ததைத் தீண்டாமல் வேண்டா மென்பதைக் காட்டினாரே, மூட்டுத் தெய்வமென்பதை நிலை நாட்டினாரே, பக்தனல்லவென்று நீக்கிவிட்டாரே, என்னைப் பாவியாக்கி விட்டாரே, இனி இவ்வாக்கையோ டிருக்கலாமா? வைராக்கியத்தைச் சுருக்கலாமா வென்று பாண்டுரங்கனைப் பணிந்து, பாதங்களிற் றனதிருநயனங் களை பணிந்து, ஓ பண்டரிநாதா! நீ இக்கண முண்டா லாச்சுது, இன்றே லென்னுயிர் பிரியலாச்சுது, உனக்கப கீர்த்தி வாய்ச்சுது, நீயே தேடிக்கொள்ளலாச்சுது, இச் சணம் என் தலையை உன்பாதங்களின் மேலிடிப்பேன், என் னுயிரை மடிப்பேன், வைராக்கியத்தை முடிப்பேன், பிர்ம ராட்சசனா யுன்னைப் பிடிப்பேன். ஊரிலுள்ளோர் பாலு மடிப்பேன், உன் சன்னிதானத்துக் கியாரும் வாராமற் கெடுப்பேன், அப்பா! உனக்கிவ்வளவு கடுப்பேன்யென்று பாண்டுரங்கனைப் பக்தர்போற்றுந் துங்கனைப் பசியமர்வங் கனைப் பலதரம் ஆலிங்கனஞ்செய்து திருட்டுத் தெய்வமே யென வைது கண்ணீர் விட்டழுது கடவுளே யென்று தொழுது இதோ போச்சுது பொழுது உன்னால் வந்ததே பழுது என்று பகவான் பாதங்களின்மேற்றலையை மோதிக் கொள்ளப்போனார்.

உடனே பகவான் நிஜரூபமாய் நின்று, அடா என் னப்பனே யெனப்புகன்று நாமதேவ் மஸ்தகத்தைத் தன திரு அஸ்தங்களாற் றூக்கிக்கொண்டு, அப்பா நாமதேவ்? உன் பக்திப்பிரதாபத்தைச் சோதிக்கவேண்டி இவ்வளவு தாமதஞ்செய்தேன் இதைக் குறித்துக் கோபஞ்செய் யாதே, வாயில் வந்தபடி வையாதே, அடா என் கண் மணியே! சிகாமணியே! மாசிலாமணியே! மரகத அணியே! தேகமெல்லாம் புழுதியா யிருக்கின்றதோ? அதிதுரிதமாய் வந்ததாற் பாதங்கள் நோகின்றதோ? நைவேத்தியமேந்திக்கொண்டு வந்ததால் கைகள் நோகின் றதோ? சிலர் அடித்த அடிகளால் அங்கமெல்லாம் நோகின்றதோ வென்று பற்பல பட்சமான வார்த்தைகளா டித் தன் கரத்தால் புழுதியைத் துடைத்துப் பாதாதிகேச பரியந்தம் தடவித் தன்மீதிருக்கும் பீதாம்பரத்தை யணிந் துக் கொள்ளச்செய்து நாமதேவ் தரித்துக்கொண்டிருந்த பீதாம்பரத்தைத் தானணிந்துக்கொண்டு அப்பா நாம தேவ்! உனக்கதிக பசியாயிருக்கின்றதோ? வெகு நேர மானதால் களையாயிருக்கின்றதோ வென்று அன்னத்தைப் பிசைந்தூட்டி உன்னுடைய திவ்விய அஸ்தத்தாலெனக் கன்ன மூட்டப்பா வென்று திருவாயைத் திறந்தார் நாம தேவ் தன்பத்திலிருந்து பேர்ந்து கிருதார்த்தனானே னெனத் தேர்ந்து பகவானோடொன்றுய்ச்சேர்ந்து மிகவுங் களிகூர்ந்து ஸ்வாமிக்கு நாமதேவரூட்ட நாமதேவருக்குப் பகவானூட்டச் சகல பதார்த்தங்களையும் புசித்தபின்பு ஸ்ரீமந் நாராயணமூர்த்தி நாமதேவருக்குப் பரியள சந்த னாதிகளைப்பூசி அடைக்காயிலையை மென்று கொடுத்து அப்பா நாமதேவ்! நீ வந்து வெகு நேரமாய் விட்டது

சீக்கிரம் வீட்டுக்குப்போய் நானே நைவேத்தியங்கொண்டு வாவென்றுரைத்து மாயமாய் மறைந்து கல்லுருவா யிருந்தார். பின்பு நாமதேவ் சந்தோஷ மடைந்து மெதுவாய் நடந்து வீட்டிற்புகுந்து தாயைப் புகழ்ந்து வெறுந்தட்டைக் கொடுத்து அம்மா இன்றைக்கு நேரமானதைக் குறித்தும் பகவான் மிகவும் வெறுத்து நைவேத்திய முண்ணாமல் மறுத்துச் சற்றுநேரம் பொறுத்துச் சகல பதார்த்தங்களையு முண்டார் ஆனந்தங்கொண்டார் அன்பான மொழிகள் விண்டார்.

ஆதலால் என்மேற் கோபங்கொள்ளாதே தூஷண வார்த்தைகள் விள்ளாதே யென்று நடுவீட்டிலுட்கார்ந்துக் கொண்டு அடக்காயில்லை யென்றுக்கொண்டு பகவானணிந்த பீதாம்பரத்தைப் பார்த்துக்கொண்டு பகவான் கொடுத்த பீதாம்பரத்தைப் பாருமம்மாவென விண்டு, சந்தோஷமேலீட்டா லடிக்கடி நகைத்துக்கொண்டு மிருந்தார். குணபாயி வெறுந்தட்டைக்கொண்டு வந்ததையும் பகவானணிந்துக்கொண்டிருந்த பீதாம்பர மணிந்துக்கொண்டிருப்பதையும் பூமாலைகள் புனைந்துக்கொண் டிருப்பதையும் பூமாலைகள் புனைந்துக்கொண்டிருப்பதையும் பார்த்துக் கோபமேலிட்டு, அடா நாமதேவ்! பழவர்க்கமெங்கே? நைவேத்தியமெங்கே? நீ யணிந்துக் கொண்டுபோன பீதாம்பரமெங்கே? உண்மையைச் சீக்கிரஞ் சொல்லடாவென்று கோபக்குறி காட்டினாள். நாமதேவ்! ஓ என்னப்பனே! உண்மையாய்ப் பகவானே சகல பதார்த்தங்களையு முட்கொண்டார். பசி மிகுதியால் நானு மிரண்டொரு பிடியன்னம் புசித்தேன் எனக்கினி யன்னம் வேண்டியதில்லையென்று வயிறு நிறைந்திருக்கிறதைப் பாரென்று வயிற்றைக் காட்டினார். குணபாயி, அடா துஷ்டப் பயலே! பகவானென்ன நைவேத்திய முண்பதென்ன ஜாணுண்டு பயலே நீ வயிறு நிறையப்புசித்து எல்லாவற்றையும் ஸ்வாமியே அருந்தினாரென்று அசத்தியம் பேசுகின்றாயா? இப்போதே அசத்தியம் பேச வாரம்பித்தாயா வென்று அருகிலிருந்த ஓர் கோலையெடுத்து வீசியெறிந்தாள். நாமதேவ் இதென்னடா வம்மாயிருக்கின்றது நான் மெய் சொன்னால் பொய்யென்றெரிந்து விழுகின்றாள் அபாயம் நேரிட்டதுபோ லழுகின்றாள் என்று தெருவிலோடிவந்து நின்று என்னுயிர் போனாலும் அசத்தியம் பேசேனெனப் புகன்று அந்த மூட்டுத்தெய்வம் வெகு நேரமழச்செய்து நைவேத்திய முட்கொண்டு என்னை வேண்டிப் புசிக்கச்சொன்னால் பகவான் வாக்கியத்தைத் தள்ளக் கூடாதென்று இரண்டொருவா யருந்திவிட்டேன் அபசாரத்துக்குட்பட்டேன் வீட்டிலிருக்கும் பதார்த்தங்களையெல்லாம் நீ புசிக்கலாகாதா? விருத்தையாயிருந்து சகலமும் தெரிந்து உண்மை யறியாமல் ஆலோசனை பிரியாமல் மிகவுங்கோபித்து உன் வார்த்தையையே ஸ்தாபித்து உரக்கப் பேசுகின்றாய், வாயில் வந்தபடி பேசுகின்றாய், கோலையெடுத் தென்மேல் வீசுகிறாய் என்று கடகடுத்துப் பேசினார். குணபாயி, அடா துஷ்டா! அடா பிரஷ்டா! உன் தந்தை வரட்டு முன்னையிரண்டு துண்டாய்க் கண்டிக்கச் செய்கிறேன் கண்டங் கண்டமாகக் கொய்கிறேன் என்றுரைத்துக் கொண்டே பகவானுக்கு வேறு நைவேத்தியஞ் செய்துக்கொண்டிருந்தாள். நாமதேவ் இதென்ன கர்மமா யிருக்கின்றது இன்றைக்கெல்லாம் வியாகுலத் தாலேயே பொழுதுபோயு மின்னந் தீராமலிருக்கின்றது இனி அந்தக் கிழவன் வந்தால் என்னசெய்வாரோ என்கிற எண்ணத்தோடு கூடிப் புறத்திலேயே மாய்போலசைவற்று நின்றிருந்தார். இப்படியிருக்குந்தருணத்தில் தாம் ஸேட்டிவந்து தெருவில் நிற்கும் நாமதேவை யெடுத்து மார்புடனணைத்து அடா என்னருமைக் குழந்தாய்! நமதாண்டவனாகிய பண்டரி நாதனுக்கு நைவேத்தியம் படைத்து வந்தாயா? உன் தாய்க்குச் சந்தோஷந் தந்தாயாவென்று கேட்க, நாமதேவ் நைவேத்தியஞ் செய்து வந்தேனென்றுரைக்கத் தாம் ஸேட்டி உன் சிறிய அஸ்தங்களாற் பாண்டுரங்கனுக்குப் பூசை செய்து வர நானென்ன பாக்கியஞ் செய்தேனோவென்று உச்சி மோந்து முத்தமிட்டுக் கைகளாலேந்திக்கொண்டு வீட்டுக்குட்போனார். குணபாயி அந்தத் திருட்டுப்பையலை விடாமல் கட்டி இரண்டு துண்டாக வெட்டிவிட வேண்டுமென்றுரைத்தத் தாம்ஸேட்டி மனைவியை நோக்கி, ஓ பெண்ணே! நான் பிரிந்த மூன்று ஜாமத்துக்குள் உனக்கு வெறுப்பு வரும்படியான காரியமென்ன செய்தான், யாரை வைதான் சீக்கிரஞ் சொல்வாயென்று கோபக்குறிகாட்டக் குணபாயி, நாமதேவ் நைவேத்தியத்தட்டை வீதியிற் கொண்டுபோய் வைத்ததும், சிறுவருடன் போர்புரிந்ததும் மத்தியானத்துக்குமேல் பலநாழிகை நீண்டபட்ட நைவேத்தியத்தைச் சந்நிதானத்துக்குக் கொண்டுபோனதும் மூன்றாஞ்சாமத்தில் வெறுந்தட்டைக்கொண்டு வந்ததும், பகவானருந்தினாரென்று விண்டதும், பகவானணிந்திருந்த பீதாம்பரத்தைத் தான் தரித்துக்கொண்டு வந்ததும் முதலான சங்கதிகளையெல்லாம் சொல்லி முடித்தாள். அவ்வசனங்களைக்கேட்ட தாம்ஸேட்டி கோபதீப்தனாய் எதோ வாளைக்

கொண்டுவா? இவனை இரண்டு துண்டாக வெட்டி யெறிகிறேனென் ருர்ப்பரித்தார்.

அதனல் நாமதேவ் பயந்து தெருவீதியிலோட்டமெடுத்தார் தாம்ஸேட்டி தொடர்ந்தோடி அடா துஷ்டப் பயலே விளையும் பயிர் முளையிற்றெரியு மென்கிற பழமொழிப்படி சிறு பொழுதிலேயே பொய்யுங் களவுங் கற்றுக்கொண்டிருக்கின்ற நீ பெரியவனுனல் வெகு துன்மார்க்க காரியங்கள் செய்வாய், ஆதலாலினியுன்னை உயிருடன் வைத்திருந்தால் என் குலத்துக்குப் பழுது வந்து நேரிடும், பாபம் மீறிடும் என்றுரைத்துக்கொண்டே பிடிக்கவந்தார். நாமதேவ் இவனும் அக்கிழவியைப் போன்றவனேயாதலால், அகப்படாமல் வோடிப்போவதே நன்மையென்று நமக்கு யாருந்துணையில்லை யென்று பண்டரிநாதனைத் தியானஞ் செய்துக்கொண்டே பல பக்கங்களிலோடி மிகவும் வாடிப் பாண்டுரங்கன் சந்நிதானத்தை நாடி ஆலயத்தினுட்போய்ப் பண்டரிநாதனை ஆலிங்கனஞ் செய்து பின்பக்கத்தி லொளித்துக்கொண்டார் தாம்ஸேட்டி கூடவே தொடர்ந்து ஆலயத்திற் பிரவேசித்து பகவான் பின் பதுங்கியிருக்கும் நாமதேவின் கரத்தைப் பிடித்துக்கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு, அடா நாமதேவ்! நைவேத்திய மென்னசெய்தாய், தெய்வ சன்னிதானத்தில் அசத்தியம் பேசாதேயென்று வற்புறுத்திக் கேட்டார். நாமதேவர் சத்தியமாய் இப்பண்டரி நாதனே நைவேத்திய மருந்தினுரென்ருர், தாம் ஸேட்டி நல்லது பகவானணிந்த பீதாம்பரத்தை நீயேன் தரித்துக்கொண்டாயென்ருர், நாமதேவர் பகவானே என்னை யணிந்துக்கொள்ளச் சொன்னதால் நான் தரித்துக்கொண்டேனென்ருர். தாம்ஸேட்டி அதிசயித்துப் பகவானுக்கின்னமோர் தரம் என்முன் நைவேத்தியத்தை யூட்டுகிருயாவென்ருர் நாமதேவர் ஒருதரமின்றிப் பலதரம் பாண்டுரங்கனுக்கு நீர் பார்த்திருக்க அன்னத்தை யூட்டுகிறேன் உமக்குப் புலப்படக் காட்டுகிறேன் நைவேத்தியத்தைக் கொண்டுவாருமென்ருன், தாம்ஸேட்டி நல்லதாகட்டும் உன்னை இப்போதே பரிட்சித்துச் சிட்சை செய்கிறேன் என்னுடன் வாவென்று வீட்டுக்கழைத்துக் கொண்டுபோய் நைவேத்திய மேந்திக்கொண்டு வந்து பகவான்முன் வைத்து, அடா நாமதேவா! சீக்கிரம் பகவானை நைவேத்திய முண்ணும்படியகச்செய், இல்லாவிட்டால் உன் காலைவாரிப் பூமியிலறைந்து பகவானுக்குப் பலியிடுகிறேனென்று புலியைப் போலக் கர்ச்சித்து அடங்காக் கோபத்துடன் வாயிலின் மத்தியில் நின்ருர், நாமதேவர் பகவான் பாதங்களிலும் சிரத்திலும் புஷ்பங்களைச் சொரிந்து தூப தீபங்களைக் காட்டி நைவேத்தியத்தைத் திறந்து, ஓ பாண்டுரங்கா ஸ்ரீரங்கா! முன்போற்றுமசம் செய்யாமல் என் கழுத்தைக் கொய்யாமல் யாருந்தீண்டாப் பரிசுத்தமான இந்த நைவேத்தியத்தைச் சீக்கிரம் புசியுமையா அண்டரேத்துந் துய்யாவென்று ஸ்தோத்திரஞ் செய்தார். பகவான் முன்போலவே அசையாதிருந்தார், நாமதேவர் ஓஓ இந்த முரட்டுத்தெய்வம் மத்தியானத்தைப் போலவே உண்ணமற் கோபித்துக் கொண்டிருக்குமோ வென்கிற பீதிமேலிட்டு, ஓ பண்டரிநாதா! புண்டரீகபாதா! என்பிதா முன்னிலையிலுண்டு என்னை மெய்யனுக்க வேண்டுமென்றி பொய்யனுக்குவ துமக்குத் தர்மமல்ல நான் டலதாஞ் சொல்ல நீரறியாதவரல்ல இதோ நிற்கிறுரென்னைக் கொல்லவென்று ஓர் பிடியன்னமெடுத்துப் பாண்டுரங்கன் வாயில்வைத்தார். மாயா விசாலனுகிய பகவான் அசையாக்கல்லுருவா யிருந்தார்.

நாமதேவர் கோபித்து, ஓ முரட்டுத்தெய்வமே! நீ மெய்த்தெய்வமா யிருந்தாலல்லவோ திருட்டு புரட்டுகளுமில்லாமலிருக்கும் பொய்த்தெய்வ மானதாலும் என்னைப் பொய்யனுக்கி விட்டாய், நீ கெட்டாயென்று தூஷித்தார், அவ்வசனங்களைக்கேட்ட தாம்ஸேட்டிக்குச் சாந்தமிறந்து கோபம் பிறந்து அடா திருட்டுப்பயலே! பகவானை மரியாதையில்லாமல் திருடன் முருடன்யென்று பிதற்றுகின்ருய் அசத்தியமுரைக்கும் வாயா நீ நன்ருய்த்தின்று பகவானே தின்ருரென்று பொய் மொழிகளைப் புகன்று பயப்படாமல் நின்று துன்மார்க்கமொழிகள் பேசுகின்ருயாவென்று கோபமேலிட்டால் அடிக்கிறேன் உதைக்கிறேனென்றருகில் வந்தார். நாமதேவர் நடு நடுங்கிப் பூனைபோலொடுங்கி, ஓ பகவானே! என் வசனம் பொய்யாக்காமல் சீக்கிரம் நைவேத்திய மருந்துகின்ருயா இல்லையாவென்று தன் தலையைப் பகவான் பாதத்தில் மோதிக்கொள்ளப் போனுர். உடனே பகவான் நிஜரூபமாய் நின்று நாமதேவர் சிரத்தைத் தன் கரத்தாற் பிடித்துக்கொண்டு, ஓ என்னருமைப்பாலனே! பக்திபிற்சிறந்த சீலனே! சகலருக்கு மனுகூலனே! சகல லட்சணங்களும் வாய்ந்த கோலனே! உன் பக்திப்பிரதாபத்தை உன் தாதையறியாமல் வேதனைசெய்யத் துணிந்தானே? உன் தாய் கோலாலடிக்க வந்தாளோ? இதனுல் நீ மனங்குழைந்து நொந்தாயோ? ஆதரிப்பார் யாருமில்லாம லென்பாலோடி வந்தாயோ? இனி சந்தோஷமாய் உன் திருக்கரத்தால் முன்போலவே எனக்கன்ன மூட்டுவாயென்று வாய்பத்திறந்து நாமதேவர் ஊட்ட உண்டு, தானும் நாமதேவருக்கூட்டி நாமதேவர் பிரதாபத்தைத் தாம்ஸேட்டி பிரத்தியட்சமா

பரியக்காட்டி ஜகதில்வானகிய பரமேட்டி கல்லுருவா யிருந்தார்.

அவ்வாச்சரியத்தைப் பார்த்த தாம்ஸேட்டி தனக்கிருந்த மாச்சரியத்தை நீக்கிப் பக்தவச்சலனுகிய பண்டரிநாதனை நோக்கி, ஒ பாண்டுங்கா! ஸ்ரீரங்கா! கார்வண்ணு! கமலக்கண்ணு! கருடவாகனு! கோபியர் மோஹனு! வாமனு! கிருஷ்ணு! மதுசூதனு! பரிபூரணு! சர்வகாரணு! ராட்சசமர்த்தனு! காளிங்க நிர்த்தனு! ஒ ஜனர்த்தனு! உம்மை இந்தப்பாவியேன் கண்ணுரப்பார்க்க என்னபாக்கியஞ்செய்தேனே? எதுதவஞ் செய்தேனே? உமதருமைப் பக்தனுகிய இந்த நாமதேவருரைத்த வாக்கியத்தை என்னஞ்ஞான புத்தியாற் பொய்யென்று நினைந்தேனே? கொல்லவுந் துணிந்தேனே? வாயில் வந்தபடி வைதேனே? மனங்குழையச் செய்தேனே? அபசாரத்துக் குள்ளானேனே? படுபாவியாய்ப் போனேனே? என்று பற்பல விதங்களாயுரைத்து ஓவென்றலறியழத் தொடங்கினர். பகவான் அசரீரியாய் ஒ தாம்ஸேட்டி இன்றுடனிந்த நாமதேவரை நாருகப்பாவித்து அன்புடன் சேவித்து வருவாயாகவென்று திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாக்கியத்தைக்கேட்ட தாம்ஸேட்டி பகவானைப் பலபல விதங்களாகத் தோத்திரஞ் செய்தேத்திட நாமதேவுக்குச் சிரசாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்து, அப்பா நாமதேவா! உன் வசனத்தை மெய்யென்று நம்பாமல் பொய்யென்றெண்ணிப்பொல்லா அபசாரத்துட்பட்டேன் நன்றிகெட்டேன் நானியற்றிய அபசாரத்தை உபசாரமாகக் கொண்டு என்னையாட் கொள்ளவேண்டு மென்னப்பனே யென்று வாரியெடுத்து மார்புடனணைத்துப் புஜத்தின்மேலேந்திக்கொண்டு வீட்டை யடைந்து குனுபாயிக்குச் சகலமும் சவிஸ்தாரமாயுரைத்து அவ்வுத்தமியின் மனதையுங் கரைத்து சதிபதிகளிருவரும் நாமதேவரைப் பகவானென்றே தீர்மானித்து அத்தியந்த பக்தியுடன் விசுவாசித்து அன்றுமுதல் நாமதேவரிடத்தில் நைவேத்தியத்தை அனுப்பிக் கொண்டிருந்தார்கள். நாமதேவர் நாடோறும் நைவேத்தியங் கொண்டுபோய் பகவானுக்கூட்டி பகவானூட்டத் தானுண்டு அகமகிழ்ந்திருந்தார்கள் கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

நாமதேவர் பகவானுக் கன்னமூட்டிய அத்தியாயம்

முற்றிற்று.

---

மூன்றுவது

## நாமதேவருக்கு பகவான் விவாகஞ்செய்த அத்தியாயம்.

வாருங்கள் சித்தர்களே! நாமதேவரைச் சதிபதிகளிருவருந் துதிசெய்துக் கொண்டன்புடன் பாதுகாக்குங் காலத்தில் அரிபரந்தாமன் தாம்ஸேட்டியின் கனவிலடைந்து பதினறுவயதை யடைந்துட் கலியாணஞ் செய்யாமலிருப்பது தகுதியல்ல சீக்கிரம் நாமதேவருக்கு உமது குலத்தி லுற்பவிக்கும் ராஜாபாயென்னும் கன்னியை மணம்புரிந் தின்பமடையுமென்று திருவாய் மலர்ந்து மாயமாய் மறைந்தார். உடனே தாம்ஸேட்டி விழித்துத் தன் மனைவியை எழுப்பி, ஒ பெண்ணே! பகவானென் கனவில் வந்து தரிசனந்தந்து ராஜாபாயென்னு மங்கையைப்பேசி நாமதேவருக்கு விவாகஞ் செய்யும்படியாகத் திருவாய் மலர்ந்தருளினர். ராஜாபாயென்னுங் கன்னிகை உனக்குத் தெரியுமாவென்றுகேட்டார், குனுபாயி ராஜாபாயென்பவள் நமதுகுலப் பெண்ணுனும் லக்ஷாதிபதியின் மகளாயிருப்பதால் நமது மைந்தனுக்குக் கிடைப்பதரிதென் றுரைத்தாள். தாம்ஸேட்டி பகவானே சொற்மனஞ் சாதித்தபின் நாமப்பெண்ணை அகத்தியங் கேட்கவேண்டுமென்று அதிகாலையிலெழுந்து செய்யவேண்டிய நியமங்களெல்லாஞ் செய்து முடிந்தபின் ராஜாபாயின் தந்தையிடம்போய்த் தன் கருத்தைத் தெரிவித்தார். அவன் நிச்சய தாம்பூலத்துக்காக ஆயிரம் பொன்னேடும் வந்தென்னிடம் பேசலாமென் றறைந்தான். தாம்ஸேட்டி அவ்வசனத்தைக் கேட்டதே மனங்கூசி விவாகஞ்செய்ய மனம்ரோசி வீட்டை யடைந்து வியாகுலத்தாலிடைந்து மனைவியை யழைத்து, நாம் மிகவும் உழைத்துப் பொருள் சேர்த்தாலும் ஆயிரம்பொன் சேரப்போகிறதில்லை, இனி யென்ன செய்யலாம் மகனுக்கு மணமெப்படி செய்யலாம் திரவியத்துக்காக யாரைப்போய் யாசிப்போம், எவரைப்போய் நேசிப்போம், பகவானையே பூசிப்போம், பின்னல் நன்று யோசிப்போம் என்று பகவான் சன்னிதானத்துக்குப்போய் ஒ பாண்டுரங்கா! ஸ்ரீரங்கா! தேவரீர் கிருபையினுல் கிடைத்த மைந்தனுக்குத் தாங்களொன் கனவில் வந்துரைத்த பெண்ணை மணஞ்செய்யப் பணமில்லாமையால் தடையாச்சுது, லட்சாதிபதியின் சம்பந்தம் வாய்ச்சுது, இதற்கு நானென்ன செய்வேன் கர்த்தனே யென்று வீட்டை யடைந்து சதிபதிகள் பலவாறு யோசனையோடுங் கூடி குரியஸ்தமானமா யிருஜாமமாகியும் திரவியக் குறையா

லெண்ண மிட்டுக்கொண்டு நித்திரை செய்யாமல் கதவை மூடிக்கொண்டு பகவான் கீர்த்தியைப் புகழ்ந்துக்கொண்டு பலாமில்லாதவர்கள் நடப்பினவேயென் றுரைத்துக் கொண்டு மிருந்தார்கள். இப்படி இவர்கள் நித்திரை செய்யாமல் தோத்திரஞ் செய்துக் கொண்டிருந்தது தோத்திரப் பிரியனாகிய பகவானுக்கு வெகு சுசப்பாயிருந்தது ஏனெனில் நாமதேவர் விவாகத்துக்குத் தடையில்லாமல் பொன் செங்கல்லுகளைக் கொண்டுவந்து தாம்ஸேட்டி வீட்டில் போடுவதற்காய் வந்த பகவான் வீட்டின் தடையால் வெளியிலிருந்தபடி ஓர் பொன் செங்கல்லை வாசலிலெறிந்தார்.

விழித்திருந்த தாம்ஸேட்டி யாரடா என் முற்றத்திற் பயமின்றிக் கற்போட்டவன் அடா மடையா கடையா வென்று வைதார், பகவான் மடையா கடையாவென்றுலுஞ் சம்மதிதான் இடையா கொடையா வென்றாலும் சம்மதிதானென்று மற்றோர்கல்லை வீட்டின்மேற் போட்டார். தாம்ஸேட்டி கோபங்கொண்டு அடா திருடா, அடா முருடா, திடைப்பக்கட்டைக்குப் பட்டுக்குஞ்சங் கட்டினதுபோல் பிறர் வீட்டிற் கல்லெறியும் துஷ்டனாகிய உன்னைத் தருமத்திற் சிறந்த கொடையாளனென் றுரைக்கப்போமோ வென்றார். பகவான் கொக்கரித்துத் திக்கரித்து அடா தாம்ஸேட்டி அடா திருடா அடா முருடா கிம்புருடா அடா புண்ணிய புருடாவென்றும் என்னைச் சொல்லலாமென்று மற்றொரு செங்கல்லைக் கதவிற் படுபடியாய் வீசி யெறிந்தார். உடனே தாம்ஸேட்டி ஓர் தண்டத்தை யெடுத்துக்கொண்டு அரணந்திறந்து வெளிப்பட்டு அடா கிம்புருஷா அடா புண்ணிய புருஷா சற்றே நில்லுவென்றுரப் பரித்தார் பகவான் ஓர் பொன் செங்கல்லைத் தடிமேல் வீசியெறிந்து மற்றோர் கல்லை வீட்டினுள் வீசியெறிந்தார் குணபாயி அடா துஷ்டா அடா பிரஷ்டா வென்று வைது கூகூவென்று கூச்சலிட்டாள். பகவான் கூகூவெனக் கூச்சலிட்டதால் இரண்டுகல்லைப் போடுவேனென்று இரண்டு கனகக் கற்களைப்போட்டார். தாம்ஸேட்டி ஆக்கிரம நிக்குரோதனாய் பெரிந்து வீழ்ந்து இந்த மூர்க்கனை அந்தப்பண்டரி நாதனறியக்கொன்று விடுகிறேனென்று ஜெயவிட்டல் ஜெயவிட்டலென் றுரைத்துக் கொண்டே தெருவீதியில் வந்தார் பண்டரிநாதன் பயந்தவர்போலோடி மாயமாய் மறைந்தார்.

தாம்ஸேட்டி பகவானுக்குப் பயங்காட்டி அரை நிமை தங்காமலோட்டி நான் பேட்டான பேட்டி அறிந்தாயா ஓட்டி ஓடிப்போனான் காமாட்டியென்று மனைவிக்குரைத்துக் கதவை மூடிக்கொண்டு நித்திரை செய்தார் குணபாயி வழக்கப்படி அதிகாலையிலெழுந்து முற்றந் துலக்க வாசலில் வந்து கற்களெல்லாம் பொன்மயமா யிருக்கக்கண்டு ஆனந்தக்கொண்டு விந்தையென்று விண்டு நாம் தவஞ் செய்தவர்களே பண்டுயென்று மனங்களித்து மணாளனை விளித்துக் கற்களைக் காண்பித்து இது பகவான் கிருபையென்றுரைத்துக் கற்களை யெல்லாம் ஓரிடத்தில் புதைக்கும்படியாய்ச் சொன்னாள் தாம்ஸேட்டி கனகத்தைக்கண்டு களிப்பால் புருஷோத்தமனைத் தூஷித்தது மறந்து இன்பம் நிறைந்து அவைகளை மூலைவீட்டினுள் புதைக்க ஆரம்பித்தார். இங்கிப்படியிருக்கப் பகவானும் ருக்மணியும் அதிகாலையிலேயே தாம்ஸேட்டியைப் போலவும், குணபாயியைப்போலவும் வடிவெடுத்து ஆயிரம் பொன்னெடுத்துக்கொண்டு ராஜாபாயின் வீட்டுக்குப்போய்ச் சப்பந்தியைக் கூப்பிட்டார். இவர்கள் வரவையறிந்த அந்த லட்சாதிபதி கெக்கலிகொட்டி நகைத்துக்கொண்டே வெளியில் வந்து ஆயிரம் பொன்னுக்கே வழியில்லா அல்கலரே என்ன காரணத்தைக் குறித்து வந்தீர்களென்றான் பகவானும் ருக்மணியும் தாங்கள் கொண்டுவந்த ஆயிரம் வராகனையுங் கொடுத்து உமது பெண்ணுக்குப் பதினாயிரம் வராகன் பணிகளணிகிறோம் கலியாணச்சிலவுக் கிருபதினாயிரம் வராகன் தருகிறோம் நல்ல முகூர்த்த நாளாகிய இன்றைக்கே வதுவைசெய்ய ஆரம்பிக்கலாமென்றுரைந்து புறம்போந்து மறைந்து ஆள்கள்வசம் முப்பதினாயிரம் வராகனைக் கொடுத்தனுப்பி சந்தோஷப்படுத்திப் பெண்ணைக்கொடுக்க இணங்கச்செய்து பகவான் ஓர் தணனைப்போல் வடிவெடுத்துப் பின்னு மங்கடைந்து தாம்ஸேட்டி கையுடனும்மை யழைத்துவரும்படி யென்னை யனுப்பினானென் றறைந்து அச்சம்மந்தியை யழைத்துக்கொண்டு தாம்ஸேட்டி வீட்டுக்குட் புகுந்து சதிபதிகள் பெய்மறந்திருக்கச்செய்து புதைத்த பொற்கல்லுகளை யெல்லாம் பலவந்தமாக வெடுத்துச் சம்பந்தி களிப்படைய அவர் முன்னம் வைத்தார் அவைகளைப் பார்த்த சம்பந்தி சந்தோஷசாகரத்திலமிழ்ந்தவனாய் தாம்ஸேட்டியை நோக்கி, ஓ கோடீசுவரனே! அறிவில்லார் பெருமையைக் காட்டுவார் அறிவுள்ளார் அடக்கமாயிருப்பா ரென்பதுபோலவும், பெருத்த வச்சிரங்கள் மறைந்து சிறுத்த வயிரங்கள் வெளிப்படல் போலவும், பதிவிரதையும் பரம பக்தனும் குப்தமாயிருக்க விபசாரியும் வேஷதாரியும் பயிரங்கப் படுவதுபோலவும், நம்மிருவருடைய செய்கை யிருக்கின்றது இவ்வளவு அடக்க மொடுக்க முள்ள உம்முடன் சம்பந்தஞ்

செய்ய நானென்னபாக்கியஞ் செய்தேனோ வென்றுரைந்து நாமதேவைப் பார்த்து பிரமித்து ஆ! ஆ!! இவருடைய சவுந்தரியம் மன்மதனுக்கு மிருக்காது இவர்க்கு என் கன்னிகையைக்கொடுக்க நானிழைத்த தவமோ ராஜாபாய் செய்துக்கொண்டு வரும் விரதபல னீதோவென்று களிசாகரத் தமிழ்ந்தப் பொற்கதனையும் தாம்ஸேட்டி குணபாயி நாமதேவர் தூதுவந்த பிராமணோத்தமரையும் வண்டியிலேற்றிக் கொண்டுபோய்த் தன் வீட்டை அலங்கரித்து ராஜாபாய் நாமதேவரையுஞ் சிங்காரித்துக் கிரமப்பிரகாரம் வதுவைசெய்து ஆனந்தமடைந்தான். தாம்ஸேட்டியும் களிசாகரத் தமிழ்ந்தவராய் மருகியையும் மகனையும் சம்பிரமத்துடன் தன்வீட்டுக் கழைத்துக்கொண்டுபோய் சம்பந்திக்கும் பந்துகளுக்கும் விருந்திட்டுச் சகாயஞ்செய்த அந்தணர்க்களவற்ற திரவியங்கொடுத்துத் தெண்டனிட்டு இன்புற்றிருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ்சொல்லத் தொடங்கினர்.

நாமதேவருக்கு பகவான் விவாகஞ்
செய்த அத்தியாயம்
முற்றிற்று.

---

நான்காவது

## பகவான் லட்சவராகனளித்த அத்தியாயம்.

கேளுங்கள் சித்தர்களே! தர்ம சொரூபரான பகவான் பிராமண ரூபத்துடன்வந்து நாமதேவருக்கு மணஞ் செய்து முடித்தபின் நாமதேவரை நோக்கி, சில வாக்கியங்கள் சொல்லத் தொடங்கினர். அதாவது ஓ பரம பாகவதோத்தமனே! அன்னதானம், வஸ்திரதானம், சொர்னதானம், வித்தியாதானம், கன்னிகாதானம் முதலான அனேக தானங்களிலும் அன்னதானமே மேலான தானமென் றுரைக்கத்தகும். ஆனால், அன்னதானஞ் சிரணம் வித்தியாதானம் அசிரண மென்கிற வாக்கியமிருந்தாலும் பரம பாகவதோத்தமர்களுக் கொருதினமன்புடன் அன்னம் படைப்பவனுக்கு அழியாப்பதம் சித்திப்பதற்கோர் தடையில்லை. அதற்குத் திருஷ்டாந்தமேதெனப்பாயேல் பாரத யுத்தத்தில் அர்ச்சுனனால் விடப்பட்ட பாணங்களாற் களைபடைந்து தன் ரதத்தின் ஸ்தம்பத்தின்மேற் சாய்ந்து அரிபரந்தாமனைத் துதிக்கும் கர்னன் விஜயனுக்குத் தர்மராஜனைப்பால் தோன்ற அத்தருணத்தில் ஸ்ரீ கிருஷ்ணதேவர் கவசகுண்டலஞ் செய்த தர்மத்தை யெல்லாம் கவர்ந்துக்கொள்ள ஓ ரந்தணன் போலாகி அங்கர் கோமானை யாசிக்க அதற்குக் கச்சைக் கொடியோன் ஓ பிராமணோத்தமா! இந்த அந்தியகாலத்தில் இல்லையென்கிற வாக்கை நானுரையாம லென்பாலிருக்கும் வஸ்து எதானாலுங்கேட்டு வாங்கிக்கொள்ளலாகுமென்று வணங்கக் கண்ணன் ஓ கர்ணனே! உன்னிடத்திலிருக்கும் வஸ்துவையே கேட்கவந்தேனென்றுரைப்பக் கர்னன் மனமகிழ்ந்து ஓ அந்தணா! நீரிச்சித்ததென் னுயிரானாலுங் கொடுப்பேன் சீக்கிரங்கேளுமென்றுரைய ஸ்ரீகிருஷ்ணன் எனக் குன்னுயிர் வேண்டியதில்லை உன்னுயிர்க்குத் துணையான நீ செய்துவந்த தர்ம மனைத்தையும் எனக்குத் தத்தஞ் செய்வாயென்று கேட்கக் கவசகுண்டலன் களிப்புற்று ஓ வேதியரே! நீராசித்த புண்ணியத்தைத் தத்தஞ் செய்வேன் எனக்கிப்போதடைந்த களை நீங்க ஜலங்கொண்டுவந் தூட்டுமையா வென்று வேண்ட பகவானப்படியே யாகட்டுமென்று கச்சைக்கொடியோனைக் கரங்களை நீட்டெனப் புகன்று ஜலத்தைப்பூற்ற அவனஸ்தத்தில் விழ்ந்த புனல் பொன்மயமாயொளி பெற்று விளங்கக் கர்னன் அதிசயித்து ஓ பூசுரரே! என்கரதலத்தில் வீழ்ந்த ஜலம் கனகமாய்ப் போகின்றதே ஆபாசம் மேவிடுகின்றதே இதுவென்ன காரணமென்று பணியத் தாமோதரன் ஓ சொர்ன குண்டலனே! நீ செய்ததெல்லாம் சொர்னதான மானதால் நீ தொட்டதெல்லாம் பொன்னாகின்றது அன்னதான மொருகாலத்திலும் செய்யவில்லையோ வெனக் கர்னன் நான் அன்னதான மொருநாளுஞ் செய்ததில்லை ஆனாலொரு காலத்தில் ஓரந்தணன் என்னைப் போஜனங்கேட்டார். நான் அதோதர்மராஜன் அன்னதானஞ்செய்கின்றார் அவ்விடத்திற்போவென்று சுட்டு விரலாற் காட்டின துண்டென்றுரைத்தான். கோவிந்தன் ஓ கர்னா! அன்னதான இடத்தைச் சுட்டிக்காட்டின சுட்டுவிரலை உன் வாயில் வைத்துக்கொண்டால் அன்னதான மிடத்தைக்காட்டின பலனால் ஜலம் பெருகி உமது தாகத்தைத் தணிக்குமென்றுரைந்தார். அப்படியே சூரிய குமாரன் தன் சுட்டுவிரலைத் தன் வாயில் வைத்துக்கொண்ட மாத்திரத்தில் ஜலம்பெருகித் தாகத்தை தணித்தது பின்பு கர்னன் அவ்விப்பிரருக்கு முழு தர்மத்தையுந் தாரைவார்த்துக் கடல் வண்ணனைக் கண்ணாரக்கண்டு களிசாகரத் தமிழ்ந்தான். ஆதலால் அன்னதான பலனுக் கெதுவு மீடாகாது. அல்லாமல் அட்சயபாத்திரத்தி லொட்டியிருந்த ஓரன்னத்தை நந்த நந்தனனுண்ட பலத்தால் தூருவாசரும் அவருடன வந்த

அனேக முனிவர்களும் திருப்தியடைந் தார்களாதலால் நீ யின்றுடன் அன்னதான மளித்துப் புனிதனுக்கடவாய் சன்யாசத்துக்குத் தவமும் சம்சாரத்துக்குத் தர்மமுந் துணையென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றது அன்றித் தன்னைமறந்த பிரமக்ஞானிகளும் பக்தியிற் சிறந்த பரம பாகவதர்களும் அன்னத்தையன்றி வேறொரு பொருளையும் கனவிலு மிச்சியார்கள் என்று பற்பல வார்த்தைகளுரைத்து நாமதேவரிடம் விடைபெற்றுக்கொண்டு அவ்விடம் விட்டகன்று மாயமாய் மறைந்தார்.

அப்பால் நாமதேவர் அந்தணருரைத்த வாக்கியங்களை மனதிற் பதித்துப் பகவானைத் துதித்து அன்று முதல் நூறு இருநூறு சாதுக்களுடன் போஜனஞ்செய்து சின்னாளில் வறுமையடைந்து நல்லுறவு பொல்லாதென் றிடைந்து எல்லாவற்றிற்கும் பகவானே துணையெனத் துணிந்து இல்லையென்கிற துக்கந்தணிந்து பண்டரிநாதனைப் பணிந்து அவர்திருவடிகளிற் றன் திருவட்சிகளையுமணிந்து வீட்டுக்கும் வராமல் ஆலயத்திலேயே வாசமாயிருந்தார். தாயுந் தந்தையும் விருத்தாப்பிய மேலிட்டும தையல்வேலை செய்து பகவானுக்கு நைவேத்தியந் தப்பாமல் கொண்டுவந்து கொடுத்துக் கொண்டிருந்து வொருநாள் நைவேத்தியத்துக்கும் வழியில்லாமல் சம்பந்தியிடமுஞ் செல்லாமல் ஒருவருடனுஞ் சொல்லாமல் பண்டரிநாதன் கோயிலையடைந்து ஓ பகவானே! நைவேத்தியத்துக்கும் வழியில்லாமற்போச்சுதே பொல்லா வறுமை எங்களுக்கு வாய்ச்சுதே நாமதேவர் பட்டினியாயிருப்பானு ஒருநாள் பொறுப்பானு நாங்க ளினி யென்னசெய்வோம் எப்படியுய்வோமென்று கண்ணீர்விட் டழுதார்கள். அதுதெரிந்த நாமதேவன் தந்தையை வணங்கி ஓ என் மாதாபிதாக்களே! விருத்தாப்பியப் பருவமுள்ள நீங்களிருவரும் பட்டினியாயிருக்க எனக்கென்ன இந்தப் பகவானுக் கென்ன ஐயோ பசியால் வாட்டமுற்றிருக்கும் இவ்வளவுதூரம் தள்ளாடித் தள்ளாடி என்னைத் தேடி பகவானை நாடி வந்தீர்களோ வென்றுரையாடிப் பகவத் கீர்த்தனைகளைப் பாடிக் கொண்டிருந்தார். தாய் தந்தையிருவரும் மிகவும்நொந்து பண்டரி நாதனுக்கு வந்தனந் தந்து எந்தையாகிய கடவுளே இந்த மைந்தன் பட்டினியால் நைந்திருக்கலாமோ பசிவேதனை ஒருவரால் பொறுக்கப்போமோ வென்றுரைத்து தன் வீட்டையடைந்து வாட்டமுற்றிருந்தார். அத்தருவாயில் பகவான் ஓர் சேவகனைப் போல வேஷந்தரித்துக்கொண்டு ஒருடனை ரிஷபமாக்கி ஓர் பெருத்த கோணியில் லட்சம் வீராகன் நிறைத்துக் கனுழன்மேலேற்றித் தாம்ஸேட்டி வீட்டுக் கெதிரில் ஓட்டிக்கொண்டு வந்துநின்று ஓ நாமதேவரே! என்று பன்முறை கூப்பிட்டார் குணபாயி யாரைய்யா நாமதேவரைக் கூப்பிடுகிற தென்றாள், சேவகனுகிய பகவான் ஓ அம்மா! நான் நாமதேவரை நாடி வெகுதூர தேசத்திலிருந்து வந்தேன் நடந்து நடந்து நொந்தேன் அவரெங்கே சீக்கிர மனுப்பு மென்றார். குணபாயி யாரோ விருந்துக்கு வந்ததாகத் தோன்றுகின்றது இனி யிவனிடம் பேசினுல் மாட்டுக்கும் தனக்கும் உணவு கேட்பான் நமது வீட்டிலோ ஒன்றுமில்லாம லிருக்கின்றது என்று தனக் கிருக்கும் வறுமையாலும் பட்டினியாயிருக்குஞ் சிறுமையாலும் இங்கே நாமதேவரில்லை அவரெங்கேயோ போயிருக்கின்றார் அவருட னுனக் கென்ன காரியம் வந்தவழியைப் பார்த்துக்கொண்டு போமென்றாள், பகவான் பாரம்மா வீட்டில் வெளியில் வந்து பார்த்தும் அன்பாய்ப் பேசாமல் சற்றுங் கூசாமல் வீட்டிற்சென்று வெய்யலில்நொந்து வந்திருக்கும் எனக்குத் தாகத்துக்காவது கொடாமல் கடுகடுத்துப் பேசுகின்றாய் தன்னைநாடி வந்தவர்கட் கிப்படித்தானே உபசாரஞ் செய்கின்றது நானுங்கள் வீட்டு விருந்தைச் சட்டைசெய்து வரவில்லை உனக்குத் துன்பந்தரவில்லை பண மில்லாதவன் பிணமென்பதற்குச் சந்தேக மில்லை தாரித்திரத்தைப் போன்ற கொடிய வியாதி யில்லவே யில்லை, வறுமையுற் றிவ்வுலகி லிருப்பதைப் பார்க்கிலும் மாண மடைவதே யுத்தம மென்று சொல்லலாம், நல்குரவால் நலிவுற்றிருக்கும் உங்கள் முகத்தைப் பார்க்கவே கூடாது, ஆனாலும் எஜமானுடைய உத்தரவால் இங்குவர நேரிட்டது அந்த நாமதேவர் வருகிற பரியந்தம் இருந்து போகிறேன் நீங்கள் கோதுக்குணத்தா லொருவேளை வாது செய்யப் போகிறீர்க ளென்று பற்பல மொழிகள் பகர்ந்து வாயில் மத்தியி லுட்கார்ந்துக் கொண்டு அடிக்கடி கனைத்துக் கொண்டு மிருந்தார், அவ்வசனங்களைக்கேட்ட குணபாயி குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு மென்பதைப் போலக் குரோதங் கொண்டு விரோதமாய் அச்சேவகன்பால் வந்து யாரடா நீ பங்காளியைப்போலவும் கடன்காரனை போலவும் வாசற்படியி லுட்கார்ந்து என்னென்னவோ கடபட வென்றுளருகிறாய் சீக்கிரமாக யிவ்விடம் விட்டெழுந்து போவென் றுரைத்தாள்.

பகவான் அடா இவர்கள் கொடும்பாவிகளா யிருக்கிறார்கள் கடவுள் இப்பேர்க்கொத்த மூடர்களை யென் சிருஷ்டித்தாரோ வீட்டி லொன்று மில்லா விட்டாலும் வந்தவர்களுக்குத் தாகமாவது கொடுத்துச் சந்தோஷப்

படுத்தலாகாதா நாமதேவர் வர எங்கேரஞ் செல்லுபோ
வென் றுரைத்து குஞபாயைச் சட்டை செய்யாதவர்
போல காண்பித் திருமாக்கு அசையாமல் வாசற்படிபி
லேயே வீற்றிருந்தார் குஞபாயி ஓ அகங்காரத்திற்
சிறந்தவனே! உனக்கதிக தாகமா யிருந்தால் அதோ
கேணியிருக்கின்றது அதிற் சேந்தி சாப்பிட்டுச் சாந்தி
யாய்ப் போகலாம் எழுந்திரு வழிவிடு வென் றிறைந்து
பேசினள். பகவான் ஓ நரைத்த விருத்தியே! தாகத்
துக்குக் கேட்கா முன்னமே கேணியைக் காட்டிக் கை
களை நீட்டி வின்ஞன வார்த்தைகள் பேசுகின்றாய்
நாலுங்கள் வீட்டில் தாகத்துக்குக் கொள்ளும் படியான
தபமும் நீங்கள் செய்தீரோ பஞ்சபாதகங்கள் செய்யுங்
கொஞ்சக் குணமுள்ள உங்கள் வீட்டினருகில் நிற்கவே
கூடாது, இப்படிதானு நரைதிரை வருமட்டும் சமு
சாரஞ் செய்தாய் பிள்ளையைப்பெறு மலடியாகிய உனக்
கும் ஜீவகாருண்ய மிருக்குமா? உங்களுக்கும் செல்வம்
பெருக்குமா? கெடுகாலி படுநீலி யென் றுரைத்தார்.
அவ்வசனங்களைக்கேட்ட தாம்ஸேட்டிகோபித்து யாரடா
அவன் வன்புந்தன்புமாய்ப் பேசுகின்றவன், வழிபோக்க
னுகிய நீ துன்மார்க்க வார்த்தைகள் பேசக்கூடுமோ?
சீக்கிர மிவ்விடம் விட்டு எழுந்துபோ இல்லாவிட்டா
லோங்கி வோரரை வாங்குவே னென்று கடுகடுத்து
பேச த்தொடங்கினர் பகவான் அடா கிழவா! இது
தானோ ஞாயம் இதற்காகவா செய்ய வந்தேன் சகாயம்
இப்போதே உன்னையும் இக்கிழவியையும் வெட்டிப் பலி
யிடுவேன் காமதேவர் முகத்தைப் பார்த்தல்லவோ சும்மா
யிருக்க நேரிட்டது அடடா இப்பேர்க்கொத்த பரம
லோபிகளுக்குத் தானு அந்தக் கேசவ சவ்கார் இத்தனை
திரவியங் கொடுத்தனுப்ப வேண்டும். இவர்களுக் கென்
னுயிர் நீங்கினும் லட்சவராகனைக் கொடுப்பேனோவென்று
மாட்டைத் தட்டி யோட்டிச் சில வராகன் கோணியி
லிருந்து சிந்தும்படியாகவும் செய்தார்.

அது தெரிந்த குஞபாயும் தாம்ஸேட்டியுமா வோ
டோடியும் ரிஷபத்தை பறித்துச் சேவகன் மோக்கட்
டையைப் பிடித்துக் கொண்டு அப்பா எங்களுக் குற்ற
தாரித்திரத்தாலும் பசிவேதனையாலும் விருத்தாப்பியமே
லிட்டாலும் வொன்றுந் தோன்றாமல் யேதேதோபேசி
விட்டோம் நன்றி கெட்டோம் கொண்டு வந்த வராகன்
களைக் கொடுக்காமல் கோபித்துக் கொண்டேன் போகிறீர்
நாங்கள் செய்த அபசாரத்தை உபசாரமாகக் கொண்டு
திரவியத்தைக் கொடுத்துப் போமையா குற்றத்தைப்
பொறுத்தருளு மெய்யா சாந்தத்தில் மிகுந்த துய்யா தரு
மஞ் செய்யுங் கையாவென்று பலதரம் வேண்டிக் கொண்
டார்கள் பகவான் ஓ ஜனங்களே! கேட்டீர்களோ இப்போ
திவர்கள் செய்யும் மரியாதை எனக்காகவா திரவியத்திற்
காகவா சொல்லுங்கள் சற்றே நில்லுங்கள் யாரேனும்
பட்டினியால் வாடி இவர்கள் வீட்டைநாடி வந்தார்களா
னல் வேஷ்டையுற்று வாட்டமடைந்து பசி பசியென்று
பறந்து பிராணனிழந்தல்லவோ போகவேண்டும் தாரித்
திரகாலத்திலல்லவோ தர்ம குணத்தையும் மனைவியின்
மர்மத்தையும் சினேகிதர் வாஞ்சையையும் பந்துக்கள்
விசுவாசத்தையும் ஆராய்ந்தறியவேண்டும் என்கிற பழ
மொழிப்படி தர்ம குணத்திற்சிறந்த இவர்கள் தாரித்ரம்
வந்தடைந்த மாத்திரத்தில் தாகத்துக்கு மளிக்காமல்
சகாயஞ் செய்யவந்த என்னைத் தாருமாறுஞ்செய்து
சஞ்சலத்துக்குள் ளாக்கினர்கள் தாரித்திர காலத்தில்
தர்ம குணமும் அதிகார காலத்தில் அகங்காரக் குறை
வும் துன்பம் வரும் காலத்தில் தைரியமும் அவமான
காலத்தில் சந்தோஷமும் உள்ளவர்களையல்லவோ புருஷ
சிகாமணிகளென்றும் வறுமையுள்ளகாலத்தில் மணாளன்
பக்தியும் காவலில்லாக் காலத்திற் கற்பென்னுங் காவ
லும் பதி கோபஞ்செய்யும் வேளையில் சாந்தமும் அதிதி
அய்யாதிகட் கன்னமிடுவதி லுற்சாகமும் உள்ள பெண்
களையல்லவோ பதிவிரதைக ளென்றும் சொல்லலாம்.

அப்படியிருக்க இப்படிச்செய்யும் இவர்களைப் புண்
யோத்தம ரென்றும் விரதசீல ரென்றும் இவ்வூரிலுள்
ளோர் சொல்லுங் காரண மியாதோ பாகமாச்சுதில்லை
யென்பதற்கு ஓன்னமே காட்டுங் கொள்கையைப்போல்
இவர்கள் துஷ்டர்களென்று ஒரு காரியத்திற் றெளிந்
துக்கொண்டே னென்று பின்னும் மாட்டைத் தட்டி
யோட்டினர். தாம்ஸேட்டியும் குஞபாயும் ஓ பொருமை
யிற் சிறந்த புண்ணியவானே! கோபம் பாபமறியாதென்
கிறபடி எங்களுக்குற்ற வறுமையா லும்மைச் சிறுமை
படுத்தி விட்டோம் தர்ம குணங்கெட்டோம் இதை மன
தில் வையாதீர் அவமரியாதையைச் செய்யாதீர் என்று
பல மரியாதையான வார்த்தைகளாடத் தொடங்கினர்
கள். மாயாவிலாசன் ஓ பிரஜைகளே! இப்போ திவர்
செய்யும் பாசாங்கைப் பாருங்கள். இவ்வழக்கைத்தீருங்
கள் அகப்பட்டாற் றலைமூடி இல்லாவிட்டால் காலடி
இவர்கள் தர்மபக்தர்கள் இவர்கள் தர்ம சுத்தர்கள் பண
வாசைக் குகந்த கிழப்பிணங்களாகிய இவர்களுடன் பேச
வுந் தகுமோ வென்று லோபிகளே! கொடும் பாபி
களே! துவேஷிகளே அவிசுவாசிகளே என்றுரைத்து
வந்த வழியாக மாட்டைத் திருப்பு இழுத்துக்கொண்டு

போகத் தொடங்கினர். குணபாயி அப்பா வெப்பிலாதவனே வீட்டினுள்வாரும், ஏழைகள் முகத்தைப்பாரும், ஆசனத்தி லுட்காரும், ஆபாசந்தீரும், ஏளனஞ் செய்தது போதும், இனி நாங்க ளீடேறும்படியாகக் கிருபை கூறும், கொண்டுவந்த திரவியத்தைத் தாரும் நாங்களுய்யக்காரும் என்கிற வார்த்தைகளாடி சேவகனுடைய இரண்டு கரங்களையும் பிடித்துக்கொண்டு பலவந்தமாய் வீட்டினுட் கொண்டுபோய் ஆசனத்திலிருத்திக் கேசவ சவ்கா ரெந்தவூர் அவருக்கும் நாமதேவருக்கும் எத்தனை நாளாய்ப் பரிட்சை சொல்லுமப்பா வென்றாள். கபட நாடகன் ஆ ஆ இவ்வுலகில் பணமென்றால் பிணமும் வாய்திறக்கு மென்பது கட்டுக் கதையென்று நினைத்திருந்தேன். இப்போது பிரத்தியட்சமாகக் கிழப்பிணங்களாகிய உங்களால் பணத்தாசையைப் பரீட்சித்தேன் அகத்தியம் பிணமும் பணத்துக்காக வாய்திறக்கும் மானம்போய் வெகுமானங் கிடைத்தால் நலமென்றெண்ணும் மாந்தர்க ளிவ்வூரிலிருக்கும் நீங்களன்றி வேறெங்கணு மிருக்கமாட்டார்கள். ஓ பொருளாசையென்னும் மருள்கொண்டு இருக்கும் புலையரே! ஜீவகாருண்யமில்லா வலையரே? புண்ணிய மறியாத லுத்தரே! அனியாயஞ் செய்யு மசுத்தரே யென் றுரைத்துக் கொண் டிருந்தார், தாம்ஸேட்டி மாட்டை வீட்டின் வாசலி லோட்டிக் கொண்டுவந்து ஓர் சார்பிற்கட்டி ஓ வேவுகாரரே! வீணுய்க் கோபங் கொள்ளாதீர், ஏழைகளைத் தள்ளாதீர், தூஷணவார்த்தைகள் விள்ளாதீர், வாலிபத்தால் துள்ளாதீர், கேசவ சவ்கார் நாமதேவருக்குத்தானே இந்த திரவியத்தைக் கொடுத்தனுப்பினர் அப்படியிருக்க சேவகனாகிய நீரிப்படிப் பேசலாமா ஆயினும் குற்றமில்லை. கேசவ சவ்கா ரெந்தவூர் எத்தனைப் பை கொடுத்தனுப்பினர். ஓரோர் பையி லெத்தனை வராக னிருக்கின்ற தென்று கோணிப்பையைக் கீழே தள்ளினர், சிதறி வாசலெல்லாம் பொன் மயமானதாற் துள்ளினர், பாண்டுரங்கனைப் பாடினர், பரமானந்தமமேவிட் டாடினர், அதைப்பார்த்த பகவானுங் களிப்படைந்து ஓ தாம்ஸேட்டி! கேசவ சவ்கா ரிருப்பது வைகுந்தபுரம நாமதேவரைச் சிறுபோழ்திருந் தறிவார் அவரனுப்பியது பத்துப்பை ஒவ்வொருபையிலும் பதினயிரம் வராக விருக்கின்றது. நீர் யெண்ணிக் கொள்ளும் நானிம்மாட்டைச் சந்திரபாகா நதியிற் குளிப்பித்து நானும் ஸ்நானஞ்செய்து பண்டரிநாதன் ஆலயத்துக்குப்போய் நாமதேவருடன் பேசிவருகிறே னென்றுரைத்து ரிஷபத்துடன் வெளிப்பட்டு அந்தர்த்தானமானர். பின்பு தாம்ஸேட்டியும் ராஜாபாயும் வராகன்களை யெண்ணி லட்சம் வராகன் சரியா யிருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு சில வராகன்களுக்குத் தேவையான வஸ்துக்கள் வாங்கிக்கொண்டு அதிசீக்கிரமாய்ப் பதார்த்தங்கள் சமைத்து மதிமதுர பாகமாகச் சமைத்து ராஜாபாயை நல்ல வஸ்திராபரணங்க ளணிந்துக் கொள்ளச் செய்து நாமதேவருக்குத் திவ்வியமான வஸ்திராபரணங்களும் பகவானுக்குக் கைத்தல், தித்தித்தல், புளித்தல், உவர்த்தல், துவர்த்தல், காத்தல் என்னும் அறுசுவை யுண்டியுடன் அணிவர்க்கங்களும் கொடுத்தனுப்பித் தாங்கள் திரவியத்துக்குக் காப்பு செய்திருந்தார்கள்.

ராஜாபாய் மிகுந்த களிப்புடன் நைவேத்தியத் தட்டையும் வஸ்திராபரணங்களையு மேந்திக்கொண்டு வீதியிலுள்ள ஆடவரும் மாதரும் இவள் ரம்பையோ இந்திராணியோ கலைமகளோ மலைமகளோ வென்று மடங்க அன்னம் போலவும், கரிணியைப் போலவும், மெதுவாக நடந்து பலவீதிகள் கடந்து, சரணம் நோவதா விடைந்து, சன்னிதானத்தை யடைந்து, பாண்டுரங்கன் முன் பசியால் வாடிப் பகவானை நாடிப் பக்தியைக் கூடிப் பரமானந்தத்தைத் தேடி, இருகண்களை மூடி, விஷ்ணு சங்கீர்த்தனங்களைப் பாடி எழுந்தெழுந்து கூத்தாடிக் கொண்டிருக்கும் தன் கணவனைச் சூழ்ந்து பலதரந் தாழ்ந்து ஓ சுவாமி! பசியால் வருத்தமடைந்தீரோ? பாடியாட விடைந்தீரோ? இதோ நைவேத்தியங் கொண்டு வந்தேன் பாண்டுரங்கனைக் கண்டுவந்தேன் சீக்கிரம் பண்டரிநாதனுடைய பாதங்களுக்கு நீராட்டும், தூபதீபங்களைக் காட்டும், அன்னத்தை யூட்டும், பஜனை பிற்காகட்டும் என்று பணிவாக வுரைக்க நாமதேவர் கண்ணைத் திறந்து காந்தையைப் பார்த்து மெய்மறந்து ஓ பெண்ணே! உச்சிதமான வஸ்திரங்களேது, திவ்வியமான ஆபரணங்களேது, பற்பல பலகாரங்களேது, அனேகவித கனிவர்க்கங்களேது, சீக்கிரமாக ஓதுவாயென்று கேட்க, ராஜாபாய் ஓ சுவாமி! தங்களுக்குப் பால்ய சினேகிதராகிய வைகுந்தபுரத்திலிருக்கும் கேசவ சவ்கா ரென்பவர் ஓர் ரிஷபத்தின்மீது லட்சம் வராகன்களையேற்றி ஓராளுட னனுப்ப அச்சேவகன் நமது வீட்டிற்கு வந்து உம்மைக்காணாமல் நொந்து, கனகங்களைத் தந்து, உம்மைக்காண விங்குவந்து ஓர் ஜாமத்துக்குமேலாயிற்றே அவரைத் தேவரீர் காணவில்லையோ வென்று வணங்க, அவ்வாக்கியங்களைக் கேட்ட நாமதேவர் ஓ ஓ பகவானே நமக்காகத் திரவியம் கொண்டு வந்ததுபோற் றோன்றுகின்ற தென்று துன்பங்க ளகன்று சந்தோஷமெனப் புகன்று சற்றுநேர மசையாமல் நின்று ஆடை

யாபரணங்கள் தரித்துக்கொண்டு நைவேத்தியத்தட்டை வாங்கிக்கொண்டு சந்நிதானத்திலுட் பிரவேசித்துச் சந்துஷ்டியோடு பூசித்து நாடோறும்போல நைவேதகிய முட்கொள்ளுமையா வென்று தோத்திரஞ் செய்யத் தொடங்கினர். உடனே பகவான் பிரசன்னமாய் ஒன்று மறியாதவர்போல் இன்று வெகு சம்பிரமமாக விருக்குங் காரணமேதென நாமதேவர் ஓ தெய்வமே! அடியேனுக்காக ஆட்காரனாகலாமோ என் தாய்தந்தையர்பால் வேலைகலாமோவென்று பணியப் பகவான், ஓ நாமதேவரே நீ வெகுநாளாய்ச் சன்னிதானத்துக்குக் காவலாயிருப்பதன்றி அன்னமூட்டுஞ் சேவகனுமு மமர்ந்திருக்கின்றாய் அதற்குச் சம்பளங்கொடுக்காமல் நெடுநாளாக மறதியாயிருந்து விட்டேன் இதினிமித்தம் முனிவு கொள்ளாமல் இனிமே லப்போதப்போது சம்பளம் பெற்றுக்கொண்டு அன்புட னெனக் கன்னமூட்டப்பா வென்று பின்னுஞ் சொல்வார். ஓ அரிதாசனே! முகவிலாசனே! இனிமேல் இராக்காலத்தில் வீட்டிலும் பகற்காலத்தி லிவ்விடத்திலும் இருந்து நாள்கழிப்பாயாக வென் றறைந்து மறைந்தருளினர். பின்பு நாமதேவர் பகவான் கட்டளையின்படியே நாள் கழிக்கத் தொடங்கினர். கேட்டீர்களா சித்தர்களே யென்று இன்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

பகவான் லட்சம் வராகனளித்த அத்தியாயம்
முற்றிற்று.

---

ஐந்தாவது
## பகவான் கூலியாளனாய்வந்து பணிசெய்த அத்தியாயம்.

வாருங்கள் சித்தர்களே! இப்பால் நாமதேவர் பகவான் கொடுத்துப்போன வராகன்களைக் கண்டு ஆனந்தங் கொண்டு விந்தையென விண்டு இனி பக்தர்களுக்குத் தொண்டுசெய்தாலின்பமுண்டு என்றதாக வுட்கொண்டு அந்தணர் சாதுக்கள் அப்யாகதி முதலானோர்க்கு அன்னதானம் சொர்னதானம் முதலியவைக ளன்புடனளித்து இன்புடன் களித்து வராகன்களை யெல்லாஞ் செலவழித்து லோபிகளைப் பழித்து வீட்டையும் விற்று மேலோர்க் கீந்து சபதப முபாதி சந்தோஷத்தையுஞ் சார்ந்து முன்போலவே ஆலயத்திற் பிரவேசித்துப் பண்டரி நாதனைப் பூசித்து நாள்கழிக்கத் தொடங்கினர் ராஜாபாயும் தாய் தந்தையும தையல்வேலையால் பகவானுக்கு நைவேத்திய மனுப்பிக்கொண்டு இருப்பதற்கு வீடில்லாமையால் ஓர் பந்தல் போட்டு அதில் வாசமாயிருக்கிற நாளில் ராஜாபாய் கர்ப்பவதியாய் பூரணமான பின் நல்ல சுபமுகூர்த்தத்தில் பூரணச் சந்திரனைப் போன்ற ஓர் ஆண்குழந்தையைப் பெற்றாள், அப்போது பண்டரிநாதன் நாமதேவர் முன் பிரசன்னமாய் அப்பா நாமதேவ்! உனக்கொப்பிலாப் புதல்வன் பிறந்தா னாதலாற் சீக்கிரம்போய்ப் பார்த்து நாளை வாவென்று பல வந்தமா யனுப்பினர். நாமதேவர் கடவுளுத்திரவின் படியே தம திருப்பிட மடைந்து குழந்தையைப்பார்த்து வந்து உடனே சந்நிதானத்துக்குத் திரும்பினர். அது தெரிந்த குனபாயும் தாம்ஸேட்டியும் அப்பா ஒப்பில்லா மகனே! உனக் கருமையான மைந்தன் பிறந்தானே இன்றைக்காவ திங்கிருக்கலாகாதா வென்று வேண்டிக் கொண்டார்கள். நாமதேவர் நல்லதென் றப்பந்தலினோர் பக்கத்தில் சயனித்துக் கொண்டார். அப்போது மழைத் துளிகள் விழ ஆரம்பித்தது ஆனல் தாமஸேட்டி நாமதேவரை நோக்கி, அப்பா நாமதேவ்! சின்னக் குதவுமென்றோர் காசும் வைக்காமல் ஆபரணம் முதல் வீட்டையும் விற்றுச் சம்பந்தி முதலானோர் நகைக்கப் பந்தலில்சமுசாரம் செய்யும்படியாகச் செய்துவிட்டாயே அதிக மழைவந்தால் இளங்குழந்தையும் தாயும் விருத்தாப்பியமுள்ள நாங்களும் நனைய மாட்டோமா? குளிரால் வாதைபட மாட்டோமா? ஆதலால் யாரையாவ தழைப்பித்து இப்பந்தலைச் சற்றே செம்மையாகக் கட்டி வையப்பா வென்று சொல்ல, நாமதேவர் இப்பந்தலுக்கு மூன்றுகாலே யிருக்கின்றது மேற்புல்லு மில்லை ஆதலால் ஒருகாலும் புல்லும் இவ்விரவில் எங்கிருந்து கொண்டுவரட்டும் யாரிடம்போய்க் கேட்கட்டும் அப்படி இவைக ளகப்பட்டாலும் கட்ட என்னாலாகுமா? கூலியாளரை யழைப்பித்தால் அவர்களுக்குக் கூலிகொடுக்க என்னிடம் பண மிருக்கின்றதா? இதற்காகத் தானா என்னை யிருக்கச்சொன்னீரென் றெழுந்து சந்நிதானத் துக்குப்போகத் தொடங்கினர்.

குனபாயி நாமதேவரை மறுத்து அப்பா மகனே! உன்னை நாங்க ளெவ்வளவு அருமையாய்க் காப்பாற்றினோமோ அவ்விதமாகவே உன் மைந்தனை நீ பாதுகாக்க வேண்டிய தில்லையா? மனைவி மகவைக் காப்பாற்று வதுந்தொல்லையா? நாங்கள் விருத்தாப்பிய மேலீட்டால் யாதொன்றுஞ் செய்யக்கூடாமல் தடுமாறுகிறோமே நீ யறியாதவ னல்லவே யென்று கவல, நாமதேவர் ஓ அம்மா! எல்லாருக்கும் பகவான் துணையாயிருக்க, ஒருவரை யொருவர் காப்பாற்றுவ தென்பது கர்த்தன் பக்

நிக்குக் குறைவல்லவா ஈயெறும்பு முதல் சகல சீவராசிகளுக்கும் சுகதுக்க மறிந்தூட்டும் கர்த்தவ்யம் இக்குழந்தையைக் காக்காமல் கைசோர விடுவாரா? நமக்குத் துன்பந்தர வுட்படுவாரா வென்கிற பலமொழிகள் பகர்ந்து ஜாமாத்திரிக்கு மேலானதாலும் தாய்தந்தையர் வாக்கைத் தடுக்கக்கூடாமையாலும் சயனித்துக்கொண்டு பகவானை தியானஞ் செய்துக்கொண்டு மழைகாற்று வீசுவதால் நித்திரைவராமல் விழித்துக்கொண் டிருந்தார். அப்பொழுது காற்று மழையும் பலமாயடிக்கவே தாம்சேட்டியும் குணபாயும் மருகியாகிய ராஜாபாயும் குழந்தையும் நனையாம லிருக்கும்படிக்கு காற்றெழுந்தெந்தப் பக்கமாக வீசுகின்றதோ அந்தப் பக்கத்தில் தட்டிகளை யெடுத்து வைத்துக் கொண்டிருந்து மழை விட்டபின் ஓர் பக்கத்தில் சயனித்துக் கொண்டு ஓ பகவானே! பலமாக காற்றும் மழையும் வந்தடித்தால் பந்தல் விழ்ந்துபோகுமே சிசுவுக்குந் தாய்க்கும் வேதனை யுண்டாகுமே இதற்கு நாங்களென்ன செய்வோம் ஓ பண்டரிநாதா! நீயே துணையென்று தோத்திரஞ் செய்துக் கொண்டே கண்வளர்ந்தார்கள். அப்போது பக்த வச்சலனாகிய பாண்டுரங்கன் கூலியாளனாகப் பந்தலுக்கோர் காலும் புல்லும் ஏந்திக் கொண்டு வந்து ஓ நாமதேவரே யென்று பன்முறை உரக்கக் கூப்பிடத் தொடங்கினர்.

நாமதேவர் இதென்னடா சள்ளையா யிருக்கின்றது கர்த்தன் பக்திக்குத் தடைவந்துக் கொண்டிருக்கின்றது அரி அரி இந்நேர பரியந்தம் இந்த விருத்தனும் விருதையும் நுணு நுணு முணு முணென் றென்னென்னமோ பிதற்றிக்கொண்டிருந் திப்போதுதான் அனந்தல் செய்தார்கள் அவர்களை யெழுப்பவும் என் தியானத்தைக் கலைக்கவும் எவனோ வந்து கொள்ளை கொடுத்தவன்போல் கூக்குரலிடுகிறான் சம்சாரம் சாகரமென்கிற வசனம் மெய்யன்றிப் பொய்யல்ல வென்றனந்த வித யோசனையோடுங் கூடி மௌன முற்றிருந்தார். பகவான் நாமதேவ ரருகிற் சென்று அடா நாமதேவ்! நான் வந்து பலதரங் கூப்பிட்டும் கண்திறந்துப் பார்த்தும் மௌனமா யிருக்கின்றாயா? நீயாருக்காகச் சஞ்சாரஞ் செய்கின்றாய்? பேரின்பத்தையீயும் பிள்ளையைப் பெற்றுச் சள்ளையென் றுரைக்கின்றாய்? உனது மாமனார் பந்தலுக் கோர்காலும் புல்லும் கொடுத்தனுப்பக் கூடாதா? லட்சாதிபதிக் கிதுவோர் பாரமா? அரி அரி சிசுவுந் தாயும் ஈரத்தால் ஜன்னிக் கண்டு ஓர்வேளை இறந்துவிடப் போகிறார்க ளென்று பக்கத்து வீட்டுக்காரனாகிய நான் பெருத்த குடும்பி யாதலால் ஜீவகாருண்யத்தால் பந்தலைச் செவ்வையாக நிறுத்தி காற்றும் மழையும் உட்பிரவேசிக்காமல் ஓர் காலும் புல்லும் நாரும் கொண்டுவந்து துணையா யிருந்து கட்டுதற்கோர் துணைவேண்டி வெகுநேரமா யுன்னை யழைக்கின்றேனே? நானொருவனா யுழைக்கின்றேனே என்று மூன்று காலி லிருந்து பந்தலை நாமதேவர் பேரில் விழும்படி செய்து அடா நாமதேவே! பந்தல் விழ்ந்துவிட்டது உன்னுடைய எண்ணங் கெட்டது சீக்கிர மெழுந்து வாவாவென்று கரத்தைப் பிடித்திழுத்தார், நாமதேவர் பந்தலின்கீ ழகப்பட்டுக் கொண்டு வெளிப்படுவதற்குக் கூடாமல் வெகு கஷ்டத்துடன் புறம்போந்து கூலியாளனை நோக்கி அடா முருடா, அடா குருடா, நீ பந்தலை என்மேற் றள்ள வேண்டு மென்றே தள்ளினாய், உபகாரஞ் செய்ய வந்தேனென்கிற கர்வத்தாற் றள்ளினாய், அதிக கருணையோடும் வந்த நீ வோராளையு மழைத்துக் கொண்டு வரலாகாதா பந்தலைக் கட்டிப் போகலாகாதா வென் றுரைக்கப் பகவான் ஓ நாமதேவா! கோபஞ்செய்யாதே வாயில் வந்தபடி வையாதே நானு முங்களைப்போ லேழையன்றி மகாராஜனோ வோராளுக்குக் கூலிகொடுக்க என்னிடத்தில் பண மெங்கிருக்கின்றது உனது தாய் தந்தையரை வெகுநாளாய்ச் சிநேகித்திருக்கும் வாஞ்சையாலும் உன் மனைவியும் மகவும் படுந் துயரத்தாலும் உபகாரஞ் செய்யவந்தேன் நீ சற்றே துணையிருந்து கட்டுமேப்பா வென்று பலவந்தமாகப் பந்தலை வோர் பக்கந் தாங்கச்செய்து தான் வோர் காலைநட்டுக் காவணத்தைச் செவ்வையாக நிறுத்திப் புல்லைப் பரப்பி நாருகளாற் கட்டி நாலுபக்கங்களிலும் தட்டிகளை நிறுத்து நாமதேவை உள்ளிருத்திப் புறத்தி லிருந்த பகவான் மூங்கில்களால் பலமாயிருக்கிக் கட்டி அடா நாமா! சாப்பாட்டு ராமா! பந்தல் செவ்வையா யிருக்கின்றதா வென் றுரைத்துக் கொண்டே உள்ளிருப்பவர் வெளி வருவதற்கு வழியில்லாமல் செய்து அனுப்பவர் போல் அப்பப்பா இராத்திரி யெல்லாம் நித்திரை யில்லாமல் இந்த மூடாத்மாக்களுக்காக வெகு கஷ்டப்பட்டேன் இனியிவர்கள் கூலி கொடுப்ப தெப்போ நான் போய் நித்திரை செய்வ தெப்போ வென் றுரைத்து அடா நாமதேவா! நானின்னேர வேளையில் வந்து மழையில் நனைந்து பந்தலைக் கட்டினதற்கு சீக்கிரங் கூலி கொடு ஓர் காலுக்கும் புல்லுக்கும் நாருக்கும் விலை கொடு எனக் கதிக நித்திரை வருகின்றது ஆயாசந் தருகின்றது என்று சொல்லத்தொடங்கினர்.

நாமதேவர் சபாசு நன்றாயிருக்கின்றது காலும் புல்லும் நாரும் நானுன்னைக் கொண்டுவா சொன்னேனா? கஷ்டத்துடன கட்டச் சொன்னேனா? வீண் வாதுசெய்ய நீ யெங்கிருந்து வந்தாய்? ஏன் எனக் காயாசந் தந்தாய்? என்னிடம் கூலியேது? விலையேது போபோ வென்றார் பகவான் அடா நாமா கூலியும் விலையுங் கொடுக்காமற்போனா லுன்னைக் கொஞ்சத்தில் விடுவேனா? நஷ்டத்துக் குட்படுவேனா? இப்போது சுகப்பட்டது உன் மனையாட்டியா? என் மனையாட்டியா? உன் மகவா? என் மகவா? உன் தாய்தந்தையா? என் தாய்தந்தையா? நீ யிக்கணம் கூலி கொடுத்தா லாச்சுது இல்லா விட்டா லிப்பந்தலுக்கு நெருப்பை வைத்துப் பஸ்பமாக்கி விடுகிறேன் ஒருவரும் புறப்படுவதற்கு வழியில்லாமல் முன்னமே தடைசெய் திருக்கிறேன் இதோ தீயைக்கொண்டு வருகிறேன் பச்சைக்குழந்தையும் தாயும் துன்பப்படப் போகிறார்க ளென்று சகாயஞ் செய்த வெனக் குபசாரமுஞ் செய்யாமல் அபகாரஞ் செய்கிறாயா இப்பேர்க்கொத்தத் துஷ்டனாகிய உன்னையும் உன் குடும்பத்தையும் எரித்து விடுவதால் எனக்கோர் பாபமும் அணுகாது நாணமில்லா நாயே பிரியமில்லாப்பேயே யென்று வைதுக்கொண்டே சற்றுதூரம் போய் மாயமாய் மறைந்தார். உடனே நாமதேவர் பந்தலிலிருந்து வெளிப்பட நாலுபக்கத்திலும் சுற்றிப் பார்த்து வழியில்லாமல் ஓ ஓ நெருப்பிட் டெரிப்பதற்கோ யிப்படிச் செய்தான் நமது கழுத்தைக் கெய்தான் இனி உள்ளபடி முடியட்டும் பொழுதும் விடியட்டுமென்று பகவானைத் தியானஞ் செய்துக் கொண்டே ஓர் சார்பிற் சயனித்துக் கொண்டார். அப்போது ராஜாபாய் நாமதேவை நோக்கி, ஓ ஸ்வாமி! கஷ்டப்பட்டவனுக்குக் கூலியுங்கொடுக்காமல சமாதானமுஞ் சொல்லாமல் பந்தலைக் கொளுத்திவிட்டால் விடட்டும். நமக்கென்ன வென்று உமக்குள்ள பக்தியின் பிரதாபத்தால் சட்டை செய்யாமல் சயனித்துக் கொண்டீர் தள்ளாமையான உமது தாய்தந்தையும் நமது கான்முளையும் அக்கினியால் திக்குமுக்கிட் டிறந்துபோவதால் பாபஞ் சம்பவிக்காதோ இப்படி செய்வது நீதியோ வென் றுரைத்துத் தனது மாமன் மாமியாரையும் எழுப்பி நடந்த விர்த்தாந்தங்க ளனைத்தையும் புகன்று பாலனை எடுத்துக்கொண்டு பந்தலைவிட்டு வெளிப்படுங்க ளென் றுரைத்தாள். அதற்கு குணபாயும் தாம்ஸேட்டியப் பார்த்து நாமதேவரை நோக்கி அப்பா நாமதேவா இதுவென்ன விபரீதம் நேரிட்டது வாயில்லாமல் சட்டுப்போது நீயேன் பார்த்திருந்தாய் சீக்கிரம் வழிசெய்து நாமிப் பந்தலிலிருந்து வெளிப்பட்டுப் போவோம் வாருமப்பா வென்று இறுக்கிக் கட்டியிருக்கும தட்டிகளி லொன்றை அவிழ்க்க ஆரம்பித்தார்.

அது அவிழ்க்கப் பலமாயிருந்த தல்லாமல் வெளிப்படுவதற்கு வழியுண்டாகாமற் போச்சுது அதனால் தாய்தந்தை மிகவுங் கிலேசமுற்றுத் தங்களா லானமட்டும் கரங்களா லவிழ்த்தும் பற்களாற் கடித்தும் முழங்கைகளா லிடித்தும் காலாலுதைத்தும் தலையால் மோதியும் மார்க்க முண்டாகாமையா லினி வன்னிக் கிரையானோ மென்று தீர்க்கமா யோசித்துக் கூகூவென்று கூச்சலிடத் தொடங்கினார்கள். அப்போது நாலாஞ் சாம ராத்திரி யாதலால் பலரும் விழித்தெழுந்து வந்து என்ன சங்கதி யென்று கேட்டு ஓர் பக்கத்திலுள்ள தட்டியை யவிழ்த்து நாங்க ளெல்லோரு மிருக்க நெருப்பிடுகிறவ னெவன் பயப்படாம லிருங்கள் நாங்கள் சூரியோதயமாகும் பரியந்தம் இருக்கிறோ மென்றுரைத்தும் பற்பல வார்த்தைகளாடத் தொடங்கினார்கள். நாமதேவர் சள்ளையொழிந்த தென்று வெளிப்பட்டுச்சந்திரபாகாநதிக்குப்போய் ஸ்நானஞ்செய்து பண்டரிநாதன் சன்னிதானத்துக்கெழுந்தருளிப் பாண்டு ரங்கனைப் பற்பல விதங்களாகத் துதித்து இராத்திரி யெல்லாம் செய்யாமையால்அயர்ந்து ஓர் சார்பிற் சயனித்துக்கொண்டு நித்திரை செய்தார் இங்கே சூரியோதயமாவதற்கோர் நாழிகை யிருக்கையில் சகலரும் இனி யாரும் வரமாட்டார்கள் நெருப்பை யிடமாட்டார்கள் துன்பந் தரமாட்டார்கள் என்றுரைத்து ஸ்நானஞ் செய்யச் சென்றார்கள், அப்போது குணபாயும் தாம்ஸேட்டியும் வெளிப்பட்டு பந்தல் கட்டியிருக்கும் ஒழுங்கைப் பார்த்து அதிசயித்து உள்ளே போய் பார்க்கையில் ஒருகாலும் நாரும் அடியிலிருக்கும் புல்லும் பொன்மயமா யிருக்கக்கண்டு இது பகவானுடைய திருக்கூத் தென்று தீர்மானித்து ஓர் துண்டு புல்லைக் கொண்டுபோய் விக்கிரயஞ் செய்து ஓர் வீட்டை வாடகைக்குப் பேசி அதிலிவைகளை யெல்லாங் கொண்டுபோய் மறைத்துத் தானிய வர்க்கங்களை வாங்கி நிறைத்துப் பலவித பலகாரங்களுடன் அன்னமும் சமைத்துத் தாம்ஸேட்டி நைவேத்திய மேந்திக்கொண்டு போய் நாமதேவை விளித்துச்சீக்கிரம் பகவானுக்குப் பூசைசெய்து அன்னமூட்டி வீட்டுக்கு வாருமப்பா வென் றுரைத்து வீட்டிற் போய்ப் பொன்னை யெல்லாம் துண்டுகளாக்கிக் கொண்டிருந்தார்.

நாமதேவர் அனேக பதார்த்தங்களுடனிருக்கும் நைவேத்திபத்தைப் பார்த்தாச்சரியங்கொண்டு இன்றைக்கு வெகு ஜப்பமாயிருக்கிறதென வியந்து, பண்டரிநாதனிடம் போய் புஷ்பங்களை யணிந்து அன்புடன் பணிந்து ஓ ஸ்வாமி! மகாவுன்னிதமான பலகாரங்கள் வந்திருக்கின்றன உட்கொள்ளுமையா வென்று தோத்திரஞ் செய்தார் பகவான் பிரசன்னமாய் அப்பா நாமதேவா! இராத்திரி கூலியாளனாய் வந்து பந்தலைக் கட்டினதற்குக் கூலி கொண்டு வந்தாயாவென்று கேட்க நாமதேவர் ஓ பகவானே! பகவானே! உமக்குக் கூலிகொடுக்கும் எஜமான் நானோ என்னையாக்கி விட்டீரோ? அசங்கிதமான குழந்தையையுந் தொட்டீரோ? கூலியாளனாகவும் புறப்பட்டீரோ? பந்தலைக்கட்டவு முட்பட்டீரோ? எங்களுக்கிருந்த தரித்திரத்தைக் கெடுத்தீரோ, அளவற்ற வின்பைக் கொடுத்தீரோ பகவானென்கிற பெருமையைவிடுத்தீரோ? கூளங்குப்பையும் வாரியெடுத்தீரோ? இவ்வளவு கஷ்டமெடுத்துக் கொள்ளலாமோ? கூலியாளனென்றும் விள்ளலாமோ? பலதரம் கூலி கொடுமென்று நீர் கேட்கலாமோ. நானில்லை யென்றுஞ் சொல்லலாமோ வென்கிற பற்பல வாக்கியங்கள் பகர்ந்துக்கொண்டே அன்னத்தை யூட்டப் பகவான் சந்தோஷத்துடன் புசித்து ஓ நாமதேவா! பிறந்த மைந்தனுக்கு விஷ்ணு தாஸனென்று நாமதேய மிடுயென்றுரைந்து மாயமாய் மறைந்தார் நாமதேவர் நைவேத்தியத் தட்டுடன் பாடிகை வீட்டையடையடைந்து வீடெல்லாம் பொன் துண்டுகள் நிறைந்திருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு மைந்தனை வாரியெடுத்து மார்புடனணைத்துப் பந்துவர்க்கங்களைக் கூப்பிட்டுச் சந்தோஷமாக விருந்திட்டுப் பண்டரிநாதனுரைத்த வண்ணம் விஷ்ணு தாஸனென்று பேரிட்டு நாளொன்றுக்கு ஆயிரம் இரண்டாயிரம் பேர்களுக்கு அன்னதானம் வஸ்திர தானம் கோதானமுஞ் செய்யத் தொடங்கினர். அதனால் குனுபாயும் தாம்ஸேட்டியும் வேஷ்டையுற்று இருக்குந் திரவியத்தை யெல்லாம் ஒருநாளுக்குள் தானஞ்செய்து விட்டால் அடிக்கடி திரவியமெங்கிருந்து கிடைக்கும் பந்தலுக்கோர் காலும் புல்லும் அகப்படாமல் எத்தனை நாள் வாதையும் மனவேதையும் பொருந்தி மிகவும் வருந்தி யிருந்தோம் அதையிப்போது நினைக்கத் தேவையில்லையா! நமக்கு பகவான் எத்தனை தரந்தான் பாக்கியமளிப்பார்! உனக்குத் தெரியாதது நாங்களென்ன சொல்லப் போகிறோமென் றுரைத்துத் தானஞ் செய்ததுபோக மிகுதியான பொன்னை வேறிடத்தில் புதைத்து வைக்க வேண்டுமென்று வாதாடத் தொடங்கினர்கள். நாமதேவர் தந்தையை நோக்கிப் புண்ணியத்தால் வரும் பலனைச் சொல்லத் தொடங்கினர்.

## விருத்தம்.

இலையென்றுகேட்குமவ னிந்தவுலகதிலீனனிவனிலீனன், இலையென் றுரைக்குமவ னிசைபெறான் மனதோடு மீகுவோரை, விலகச்செய்பவனவரி விழிவினனேவனென்றிறைந்து பின்னர், அலைவித்து மீதலிலன் மீகவினன்னவரே நரகிலாழ்வார். 1

அரசாட்சியீந்து மாசிற்குரிய வன்பான சுதனையீந்து, சரசத்தையீயு மனைதனையீந்துஞ் சாயுச்சியபதவி சேர்ந்தோர், பிரமபதமடையவெனு மனப்பொரியோரென்று மிகப்பேரே யுற்று, திரணமுமே யீயநெஞ்ச முருச்சிறியோர் நரகமெனுந் தீயைசேர்ந்தார். 2

முதுகென்பளித்து மூடலைத்தாசிலுயிரோடளித்து முதியோர், சதுர்வேதனுதிமிகுதேவர்போற்றுசாயுச்சியம் பெற்றனர், முதுபெய்த்தவத்தி னல்வந்தசெல்வ மதில்வாஞ்சை வைத்தமூகர், அதிதிக்குத்தூசு காசுங்கொடாமலமிழ்வார்க ணிருநரகிலே. 3

உலோபத்தைவென் றமோகத்தையீந்தமோளிபெற்றனன் மாபலி, உலோபத்தினாலே குருடாயிவ்வுலகி லொளியற்றனன் சுக்கிரன் உலோபத்தினாலே சாபங்கொடுப்பருறுவார்கள் சாபம்பெற, உலோபத்தினாலே துயராதலாலவ்வுலோபம் பொலாதையனே. 4

தருமந்தவத்தி னிலுமேலதாகும் சாயுச்ய பதமளிக்கும், தருமம்பலர்க்கு முபகாரமாகு மிகுசங்கடங்க டீக்கும், தருமஞ்செயாத வடலப்பிரேத மல்லாததகமை யுளதோதருமம் வினைசற் கருமஞ்சகத்தி னுளதோவென் னருடந்தையே. 5

தருமஞ்செயாத பேரொகாங்க ளில்லாம லவதரிப்போர் தருமம்அனேக ஜனங்களுக்குத் துணையாகி வந்திடுவதாம், பொருளுடகோமும் பெண்பிள்ளை யுயிர்போக துணையாகுமோ, அருள்செய்யு மெந்தையே வென்றறைந்து மன்பாகவே துதித்தே 6

சரணத்தினிற்பணிந் தெந்தாயுனக்குத் தமியேனுரைத்ததகுமோ, புரணத்தையீயும் புண்யத்தையீட்டல் புனிதற்குகந்ததன்றி, தருணத்திலுதவுந்தருமத்தினியலைச் சாற்றைத்தவிர்ப்பை யுன்றன், ஸ்மரணத்தையென்று நாமதேவனிந்த வணமேயுரைக்கலுற்றான். 7

## வேறு.

தருமஞ்செய்தோர்க் கிடரில்லை தருமஞ்செய்தோர்க் கழிவில்லை, தருமஞ்செய்தால் வருமையிலை தருமஞ்செய்தார் பிணியுமிலை, தருமஞ்செய்வோ ரைசுவரிந் தாழாதோங்குஞ்சமனணுகின், தருமமெதிர்த்துச் சமர்புரிந்து ஜயம் பெற்றுயிரைக் காத்திடுமே. 8

தருமந்தலை காத்திடுமென்றே சார்ந்தருரைப்பர் கர்னன்மிகத், தருமஞ்செய்த காரணத்தாற் சமரிற்கொடிய வம்புகளைத் தருமந்தடுத்த தல்லாமற் சகாயமு மளித்ததனால், தருமங்கவர்ந்து தனதரிய சேவையளித்தான் ஜகதீசன். 9

வேறு.

தருமஞ்செய்யாமற் பொல்லாச் சண்டாள லோபத்தாலே, தருமற்றுரியோதனன்றான் றாழ்வுளநிறையஞ்சேர்ந்தான், தரணியையிழந்தபோதுஞ் சங்கடமடைந்த போதும், தருமமே ஜெயமென் றெண்ணித் தருமரிவ்வுலகையாண்டார். 10

உயிர்த்துணையான தம்பியர்நால்வ ருயிர்க்குயி ராகிய மனையாள், உயிரிழந்ததையு மொருவனானதையு முத்தமப்பதியனாகாதும், தைரியஞ்சொல்லுதற் கியாருமில்லாதுஞ் சகலமுநினைந்துசெல் போதில், பயந்தரு நதியைக் கண்டதைத்தாண்டப் பலன்சற்றுமின்றியங்கிருந்தான் 11

அங்கொரு நாய்வந் தக்கரைபோக வங்குமிங்கலைவதையறிந்தே, அங்கையாலெடுத் தப்புயத்தினில் வைத்தவ்வாற்றினிலிறங்கிடப் புனல்மேற், பொங்குகந்தருமட்டுறவிட்டுற்றப் புண்ணியன் கணங்களைத்தலைமேல், சங்கையில்லாமற்றூங்கிச் செல்போதிற் சாரமேயன்றனுப் புழுக்கள். 12

கண்ணில் வாய்செவி மூக்கிலும் புகுந்திடக் கனமுளவு திட்டிரனென்றும், எண்ணிடாததனை விட்டிடாதன்னனதிக்கரையேறியன்னாயைப், புண்ணியன்விடுத்தான் பெரும்புகழடைந்தானெந்தையே புண்ணியஞ் செய்தற், கெண்ணுவனெவனோ வவன்புகழென்னா விசைத்திடற் கெளிதலவென்றான். 13

தேவரைக்காக்கவல்லோவனங்கள்தேவன்மேற்கணை தொடுத்தழிந்தான், தேவரைக்காக்க வல்லோ கடுவைச் சிவன் புசித்திரங்கினன் முன்னாள், மூவரும்போற்று மகத்திபர்க்கன்னமளித்திடா தண்டர்மாமுனிவர் மூவருஞ் சுந் தாருகவனத்துமுனிவர்க ளுயிரிழந்தாரே. 14

என்று தருமத்தின் மேன்மையைப் பல விதங்களாயுரைத்து மாதா பிதாக்களின் மனதைக் கரைத்து இருந்த பொன்னையெல்லாம் அருந்தவர்க்களித்து மிகவுங் களித்துப் பண்டரிநாதன் கோயிலே சொந்த வீடாக வெண்ணிப் பண்போடு பஜனைபண்ணி இன்புற்றிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினார்.

பகவான் கூலியாளனாய் வந்த அத்தியாயம்
முற்றிற்று.

---

ஆறாவது

## நாமதேவர் தநயனுக்கு மயிர்வாங்கிக் காது குத்தும்போது பகவான் வரிசை கொண்டுவந்த அத்தியாயம்.

---

வாருங்கள் சித்தர்களே மிகவும் பரிசுத்தர்களே இவ்விதமாகப் பொன்னையெல்லாம் அன்னதானம் முதலியவைகளிற் சிலவழித்து லோபிகளைப் பழித்துப் பாண்டுரங்கன் திவ்விய சன்னிதானத்துக்கு நாமதேவர் போனபின் குணாபாயும் தாம்ஸேட்டியும் ஐயையோ நாமதேவர் அறியாமல் ஒரு புல்லையாவது ஒளித்து வைக்காமற் போனோமே முன்போலவே வறுமைக்குள்ளானோமே யென்று மனவேதையுற்றுச் சிலநாள் வாங்கி வைத்திருந்த தவசங்களாற் காலங் கழித்துப் பின்பு தாரித்திரமடைந்து தையல் வேலையால் ஜீவனஞ்செய்யத் தொடங்கினார்கள். அப்போது ராஜாபாயின் தந்தையாகிய லட்சாதிபதி தன் மகள் மகனைப்பெற்றதும் குழந்தை பிறந்ததே அளவற்ற திரவிய மகப்பட்டதும் நாமதேவன் ஒருநாளிலே அதிதிகட் களித்ததும் கேள்விப்பட்டுத் தாமஸேட்டி யிருக்குமிடத்தை யடைந்து பட்சமான வார்த்தைகளாடி அவருத்தரவால் தன் மகளை யழைத்துக்கொண்டு தன்னரண்மனையிற் சென்று குழந்தையை அன்புடன் வளர்த்து (கக) மாசமானதே மயிர் வாங்கி காதுகுத்த வேண்டுமென் றெண்ணி வோர் வேவுகாரனை நோக்கி நீ தாம்ஸேட்டியினிடம்போய் நாளையத்தினம் குழந்தைக்குக் காது குத்துஞ் சடங்காதலால் நீங்களனைவோரு மதிகாலையி லிங்குவர வேண்டுமென் றுரைத்து வாவென்றனுப்ப வேவுகாரன் தாம்ஸேட்டியினிடம்போய் எஜமானுரைத்த வண்ணம் பகர அதுகேட்ட தாம்ஸேட்டியும் குணாபாயும் அப்படியே யாகட்டுமென் றுரைத்தனுப்பியபின் நாளை நாம் போகும்போது தகுந்த வரிசைகளுடன் போகாமல் வெறுமையாய்ப்போனால் பலருக்கும் நகைக்கிட மாவதன்றிச் சம்பந்தியும் எளனஞ் செய்வானே அப்படி செய்யாமல் இவ்விடத்திற்கு ராஜாபாயும் குழந்தையு மழைப்பித்துக் கொண்டு சகல பந்துக்களையும் வரவழைத்துச் சம்பிரமத்துடன நாமே செய்யலாமென்றால் ஒருகாசு மில்லையே ஓ தாரித்திரத் தொல்லையேயென்று மிகவுஞ் சிந்தாக்கிராந்தர்களா யிருக்குந் தறுவாயில் இதையறிந்த பாண்டுரங்கன் ஒரு சவ்காரைப்போல் வேஷந் தரித்துக்கொண்டு வேவுகாருடன் தாம்ஸேட்டியினிடம்போய் க்ஷேமவார்த்தைகள் பேசியபின் நாளையத்தின முமது பேரனுக்குக் காதுகுத்துஞ் சடங்கு செய்கிறீர்களாமே நீரென்ன ஒரு வஸ்துவும் வாங்காமல் வறுமையுற்றவர்போல வாடியிருக்கின்றீர். உங்களுடைய சகாயத்தால் லட்சாதிபதியாயிருக்கும் என்பால் வேண்டிய திரவியம கடனாய் வாங்கிக்கொண்டு காரியத்தை நிறைவேற்றும் வாங்கிக்கொண்ட திரவியங்கொடுக்க நேரிடுமென்கிற அச்சம் வேண்டாம் பதினாயிரம் வராகன் உமக்கிப்போதே கொடுத்து விடுகிறேன் அதை யெனக்கு நீங்கள் கொடுக்க வேண்டாம் அக்கரையோடிவ்வளவு திரவியமுங்களுக்கு நான் கொடுக்

குங் காரணம் ஏனென்றால் சில வருஷங்களுக்கு முன் வணிகனாயிருந்தும் சாதுவேஷந் தரித்துக்கொண்டு வந்து நாமதேவிடம் இருபதினாயிரம் வராகன் வரையில் தர் மார்த்தமாய் வாங்கிக்கொண்டேன் அதனாலேயேலட்சாதி பதியானேன் உபகாரஞ் செய்தவர்களுக்குடனே உபகா ரஞ் செய்யவேண்டு மென்கிறபடி சகாயஞ்செய்ய வந் தேன் என்கிற பற்பல மொழிகள் பகர்ந்து வேவுகாரரை விளித்து இக்கணம நமது வீட்டுக்குப்போய் பதினாயிரம் வராகன் கொண்டுவந் திவருக்குக் கொடுங்களென்றுரைத் தனுப்பி தானும் புறப்பட்டு மாயமாய் மறைந்து மாயா சேவகரிடம் பதினாயிரம் வராகனையனுப்பி, நாமதேவைச் சோதிக்க வெண்ணி, சன்னிதானத்திலிருக்கு நாமதேவை யழைத்து, அப்பா நாமதேவ்! நாளையதினம் உனது மைந் தனுக்கு மயிர்வாங்கிக் காதுகுத்த வேண்டுமாம்.

அதற்குத் திரவியமில்லாமல் உன் தாய் தந்தை சிந்தை நைந்திருக்கிறார்கள். நீ சீக்கிரம்போய் அவர் களுக்குற்ற வியாகுலத்தை நீக்கி வாருமப்பா வென்றனு ப்ப, நாமதேவர் மகா பாக்கியமென்று வீட்டையடைந்து தந்தை தாயைப்பணிந்து வியாகுலத்தோ டிருக்குங்காரண மேனென்று கேட்கத் தாம்ஸேட்டி அப்பா நாமதேவா! நாளைக்குனது மைந்தனுக்குக் காது குத்துவதால் அதற்கு ஏதேனும் வரிசைகொண்டு போவதற்கு ஓர் காசுமில்லை வெறுங்கையோடு போவதற்குஞ் சமாதானமில்லை இது உன்னால்வந்த தொல்லை நீ சமுசாரத்துக் குகந்த வனல்ல வென்றுரைக்குந் தருணத்தில் பகவானனுப்பிய பரம பாகவதராகிய இரண்டு வேவுகாரர் தாம் ஸேட்டியின் முன் வந்து பதினாயிரம் வராகன் சரியா யிருக்கின்றதா எண்ணிக்கொள்ளு மென்றறைந்து இரண்டு மூட்டை களை யவிழ்த்து வைத்து ஓர் பக்கத்திலுட்கார்ந்தார்கள். நாமதேவ் தந்தையை நோக்கி, ஒ என் தாதையே! இந் தத்திரவியம் யாரனுப்பினார்களென்று கேட்டார் தாம் ஸேட்டி சொல்வதற்கிடைந்து மௌன முற்றிருந்தார். அப்போது திரவியங் கொண்டுவந்த வேவுகாரர் எங்கள் சவ்கார் சாதுவேஷந்தரித்து தங்களிடம் வந்து சில நாட் களுக்குமுன் இருபதினாயிரம் பொன் தானம் வாங்கிக் கொண்டு இதனால் லட்சாதிபதியானார் அவர் தற்காலத் தில் நீங்கள் வருமையுற்றிருப்பது தெரிந்தவித்தருணத்தி லிவ்வளவு திரவியமுதவி செய்தார் உத்தமர்க்குதவினால் இப்படியே சகாயஞ்செய்வார்களென் றறைந்தார்கள், அவ் வசனத்தைக்கேட்ட நாமதேவர் கரங்களா லிருசெவி களையு மூடிக்கொண்டு அரிகரி யென்ன பாவத்துக்குட் பட்டேன் தானஞ்செய்வதைப் பின்னும்வாங்குவது முண் டோ? வாங்குவோர் பரமபதமடைவ துண்டா? ஓ வேவு காரரே! இக்கணம் இத்திரவியத்தைக் கொண்டுபோய் உமது சவ்காருக்குக் கொடுங்கள் தடுத்துப் பேசுவதை விடுங்களென் றறைந்தார். அதற்குத் தாம் ஸேட்டி நாம தேவை நோக்கி, அப்பா நாமதேவா! உபகாரஞ் செய்த உனக்கு உதவிசெய்த சவ்கார் மனமுறியத் திரவியத்தை அனுப்பக்கூடுமோ? இது நமக்கு யோக்கியமா வென்று புகன்றார். அதற்கு நாமதேவர் பிதாவை வணங்கி, ஓ என் தாதையே! தானஞ்செய்ததை இச்சித்தால் அருநக கடைவதற் கேதுவாகும. இது தெரிய உதாரண சரித் திர மேதென்றால், ராவணாதிகளைச் சம்மாரஞ் செய்த ஸ்ரீராமர் லங்கையின் முகவாயிலையடைந்து அங்கிருக்கும் மேவார் விலையுயர்ந்தகல்லைப்பார்த்து இதை அயோத்திக்குக் கொண்டுபோக வேண்டுமென் றிசைத்ததை ஜாம்புவந்தர் கேட்டுக் காகுத்தனைப் பணிந்து, ஓ பகவானே! திரிபுர சம்மாரமாகும்போதும், திருப்பாற்கடல்கடையும்போதும் தட்சகன் சிவனை நோக்கி யாகஞ்செய்தபோதும், பார்வதி இமோர்ப்பர்வத ராஜனுக்கு மகளாய்ப் பிறந்து பரமசிவ னைக் கலியாணஞ் செய்தபோதும், இரணியன் இரணி யாட்சன் சோமுகாசூரன் முதலானவர்களை நீ வென்ற போதும், பிர்மா ஐந்து சிரங்களுட னிருந்தபோதும், காமனை யெரித்த போதும், காலனை யுதைத்தபோதும், சிவ சுப்பிரமணியர் பிறந்த போதும், ஐங்கரனும் சங்கர னும் யுத்தஞ் செய்தபோதும், பத்மாசுரனுக்குப் பயந் தோடும் பரமசிவனை நீர் காத்தபோதும் நானிருந்தேன் அதுகாலந்தொடங்கி இதுகாலபரியந்தம் வொருவருக்குக் கொடுத்தது அமிர்தத்துக் கிணையானதாலும் பின்னும் இச்சித்த இராஜர்களைப் பார்த்ததேயில்லை, இன்றும்மை தான் பார்த்தேனென் றுரைத்து லங்கைக்குள் போகாமற் றடுத்து விட்டார். அவ்வசனத்தைக்கேட்ட ஸ்ரீராமர் வோரடியும பெயர்த்து வைக்காமல் நின்றுவிட்டார் ஆத லால் கொடுத்த வஸ்துவை வாங்குவது நரகத்துக் கேது வாகுமல்லாமல் ரகுராஜன் கொடுத்த வஸ்துவை வாங்கு வது கூடாதென் றோர் மறையோனால் வெகு துன்புற் றிறுதியில் மேன்மையை யடைந்தா னச்சரித்திரத்தைக் கேளுமென்று சொல்லத்தொடங்கினார்

## விருத்தம்.

வீரியந்தனினல் விண்டுவைச் செயித்தோன் மேன் மை யிலரன்றனைச்செயித்தோன், ஆரியபக்தியினின் மிக நிறைந்தோ னன்னதானம் மிகச்செய்வோன், பாருயிரிட ர்கடனதேனனினைப்போன் பரிதிபோலனைவரைப் பார்ப் போன், சூரியவம்சந் தனிலவதரித்தோன் சகுணமாய்ரகு வெனும்பெயரோன்.

ஒருகுடைநிழற்கீ ழுலகெலாப்புறப்போ னுத்தமவயோத் தியையாள்வோன், ஒருநிலை வழுவா தறமிகச்செய்வோனு யர்பனிவிர் முப்ப துடையோன், ஒருதின மறையோர் மறையவர்வறுமை யுற்றவர்தமைவிளிப்பித், தொருபொரு ளவையாதனைத்தையுமீந்தோ னுதவுகோவலைத்துடனிருந் தான, 2

இருக்கின்றபோழ்தோர் மறையவன்வந்தா னேது வேண்டுமெனவறைய, னுருக்கமாவினவ லட்சமாணிக்க முதவவேண்டுமெனநிருபன், சுருக்குடனகர்சென் றுயர் தனதாரத்தோகையர்மீதுறும்பணிகள், சுருக்குடன்வாங்கி லட்சமாணிக்கஞ் சுத்தசாத்விகத்துடனளித்தான். 3

அளித்தெனதையா வின்னமேதேனு மாசையுண் டோவெனமறையோ, னளித்தநல்லரசே யினமொருபொ ருண்பேலாசையாகினைதைநீவி, ரளித்திடுவீரோவெனப் பதியெளிரேனுவியைக் கேட்கினுந்தடையின், றளித்திடு வேனென் றுரைக்கநின்பனிவி சளிலொருத்யையளியென் றான். 4

மன்னவன்மகிழ்ந்தம் மங்கையர்தம்மை மறையவன் முனமழைத்தெழிலா, ரின்னவர்தம்மி லியாவர்வேண்டிடு மெனவேலவார்குழலியர்மீது, அன்னவனுசித்தரசனேயை யா றரிவைபரையுமளியெனவே, மன்னவனந்த மங்கை யர்தம்மைமறையவர்க்களித்தின்ப மடைந்தான். 5

முப்பதுபேரையின் றுமக்களித்தேன்முனிவனேயின மவர்யேதோ, செப்பெனச்சுகத்தி லிருந்தவித்துயச்சேயி ழையார்தமைக்காக்க, ஒப்பிலாநிதியைக்கொடுமெனமன்ன னுளமகிழ்ந்தையனேயின்றே, டெப்பொருள்களு மிவ்வுல கினைத்தாங்கு மெளிற்குடையையு முமக்களித்தேன். 6

இனியிந்தவுலக மனைத்தையும்புறந்திங் கிருவெனப் பணிந் தடவியிற்போய்த், தனியனுல்பகவான் றனைப்பணிந் தேத்திச் சலனற்றிருந்தனன் மறையோ, னினிதுடனு லகம்யாவையுமாண்டிங் கிருந்தனன்சிலதுநா ளோர்நாள், முனிவரின்மிகுத்த நாரதமுனிவன் மோகமிலயோத்தியை யடைநதான். 7

வந்தயோத்தியையாளிரகுவின் வளப்ப மகிழ்வுடன் கேட்டதிசயித்தவ், வந்தணன்மீதுமிகமுனிந்தரைய னனு கிடுங்கானடைந்தன்பா, யுந்தநல்லறத்தின் மாட்சியென் னொருவனுனுறைத்திடற் கெளிதாமோ, பந்தமில்லாதோ யென்றவன்கரத்தோர் பழங்கொடுத்தஃதினைப் பகர்வான்,

இக்கனிபுசிப்போ னுகமிவ்வுலகத் தென்று முற்றிடு மெனவறையன், பக்குவப்பழமீநாரதமுனியின்பதம்பணிந் திடமுனியரசே, இக்கனிபுசித்திங்கிருவெனவசலவெழிற வமிகுத்தவன்னிருபன், இக்கனியுண்டியா னென்பெறக் காமித தெழின்மறையவன்றனக் களித்தால். 9

இக்கனிபுசித்திவ் வுலகினைப்புரந்திக் கிரவிவாழளவு மிக்கிருப்பான், பக்குவமிதுவென் றந்தணன்பாற்போய்ப் பழத்தினிற் குணந்தனையுரைத்த, இக்கனிபுசிப்பாயென மறையோனென்னன்பனேகாரணமின்றி, இக்குவலயத்தி னியானுறுமளவில் வேலவார்குழலிருமிருக்க. 10

முப்பதுபலங்க ளெப்படியேனு மோசநீசெய்திடா ளிப்பா, லொப்பிலாவரசே யெனப்பதிமறையோ னுபய நல்லடிகளைத்தொழுதென், அப்பனேயோர்மண்டலங்கெடு வளித்தாலட்டியில்லாமனற்கனிகள், முப்பதுங்கொடுப்பே னெனப் பணிந்தடவி தனிற்சென்று மோகமிலரசன். 11

மண்டலமாயின்மொழி தப்புமென்பான் மறையவன் முனிவனென்றயர்வா, னண்டர்களேத்து மத்தனேயென் பாலபயமென் றலறிவீழ்ந்தழுவான், தொண்டனுக்குற்ற துரிசினையகற்றுந் தூய்மையாரில்லையோவென்பான், எண் டிசைபோற்று நாரதமுனிவ னென்றன் பாலருளுடன் வந்தே. 12

கொடுத்தகற்குறையா லடுத்தவித்துறையைக் கூறு வதேவர்கள்பாலன்பான், சடத்தினைவிடுத்தனடுத்தறமென் பான்சடத்தினை விடுத்தினியடுத்த, சடத்தினிற்கொடுக்க லாமெனச்சொல்வான் சடத்தினை விடுநீகினிச்சடமே, கி டைத்திடலரிதென் றடிக்கடிநினைப்பான் கிலேசமுற்றயர்ந் துமூர்ச்சிப்பான், 13

இவ்விதத்துன்பத் திருக்குமன்னவன்பாலெழிலருளு ரதரடைந்து, திவ்வியவரசே யென்றுயர்ந்தொன்னதிருவடி களிற்பணிந்தேத்தி, அவ்வியநீத்தோய் நீமுனமெனக்கோ ரருங்கனியளித்ததுபோலத், திவ்வியக்கனிகள் முப்பதுந் தந்தென் றீவினையகற்றெனமுனிவன். 14

உம்பர்வாழ்சொர்க்கத் தொப்பிலாச்சோலை யொன்று ளதங்குநீவந்தா, லம்புவியிலிலாக் கனிகிடைக்குமென்றந்த வனந்தனிற்கொடுபோ, யும்பர்களருந்தும் பலங்களையளித் திவ்வுலகினில்விடுத்தவக்கணமே, அம்புயவரையனயோத் தியையடைந்தவ் வந்தணன் பதம்பணிந்தேத்தி 15

அந்தணற்கையா றருங்கனியளிக்கவயன்முகத்தோன் மகிழ்ந்தரசே, இந்தநற்பலங்களிருப்பிடம்பெண்களோடெ னைக் கொண்டுபோமென்ன, செந்தணல்மெழுகாயறையன் மூச்செறிந்தென் செய்துவணிதற்கெனத்துன்புற் றந்தண ன்பதத்தில் வந்தனஞ்செய்தென்னையனேகேளெனச்சொல் வான். 16

இந்தநற்கனிக ளிருப்பதண்டர்பா லித்தெரிவையர்க ளோடுனையும். அந்தச்சொர்க்கத்துக்கறிவிலேனெங்ஙனறி விப்பேனெனச்சினமாகி, அந்தணனுரைப்பானருமபலமிரு க்கு மண்டத்திற் கொண்டுபோகாயேல், உந்தனமாதரோ டுலகினையு முந்தனுக்களித்தியான் கானில். 17

செல்லுவனெனவவ் வந்தணன்றுளிற் றெண்டனிட் டையனேகானில், செல்லுதலழகோ சிலதினந்தனிலத் தேவலோகந்தனையடை, வல்லநற்றவத்தைச் செய்துமை வானில்வளப்பமாவைப்பனென் றுறுதி, சொல்லியவ்வரச னடவியிற்றனித்துத் தூயமாதவங்களைச்செய்தே. 18

அந்தணன்றனையுமரிவையர் தமையு மண்டர்வாழுல கினைச்சேர்ந்தவ், வந்தணற்குற்ற சாறநீங்கிடவிவ் வகிலத் தைப்புரந்திடவிசைந்தா, னெந்தமையீன்றோய் விச்சுவா மித்திரர்க் கிவ்வணமேயனைத்தினையுந், தந்தானுரைத்து மளித்ததைப்பெறச் சங்கடமடைந்தன னரிச்சந்த்ரன். 19

என்று பல நீதிவாக்கியங்களைப் புகன்று வேவுகாரரைப் பதினாயிரம் வராகனையுங் கொண்டு போகும்படியாயுரைத்துத் தந்தையின் மனதைக் கரைத்து இன்னம் பற்பல நீதிகளையோதி இந்த அண்டபிண்ட பிர்மாண்டங்களை யெல்லாங் காக்கும் பரந்தாமன் நமது பக்கலிருக்க நமக்கோர்குறையுண் டாகுமோ தேவரீர் பாண்டுரங்கன்மேல் பாரம் போட்டுச் சந்ததமும் கோவிந்தநாதனை வந்தனஞ் செய்துக் கொண்டிருக்க வேண்டுமல்லது சிந்தை நைந் திருக்கலாமோ வென் றுரைந்து இரண்டாஞ் சாமராத்திரி யானதால் வீட்டிலே சயனித்துக்கொண்டு விஷ்ணு சங்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டிருந்தார். நாமதேவர் பாடுங் கீர்த்தனைகளைத் தாம்ஸேட்டியும் குணபாயுங் கேட்டுச் சந்தோஷ சாகரத்திற் படிந்தவர்களாகி வெகுநேரஞ் சென்றபின் அயர்ந்து நித்திரை செய்தார்கள் நாமதேவருங் கண்வளர்ந்தார் இவர்க ளிப்படியிருக்கப் பதினாயிரம் வராகன் கொண்டு வந்த பரமபாகவத ரிருவரும் சன்னிதானத்தை யடைந்து பாண்டுரங்கனைப் பணிந்து நடந்த வர்த்தமானங்களைப் பகர்ந்து நாமதேவரை மிகவுந் துதிக்கத் தொடங்கினார்கள். பகவான் சந்தோஷமடைந்து நாலாஞ்சாமத்தில் அநேகம் பரமபாகவதர்களும் தேவகன்னிகைகளும் பலபல வஸ்துக்களை யேந்திக்கொண்டு தன்னைச் சூழ்ந்துவரத் தாள மேளங்கள் தாம்தாமென்று முழங்க முனிவர்க ளந்தணர்க ளாசிகூறப் பகவான் நாமதேவர் வீட்டை யடைந்து ஓ நாமதேவா வென்று கூப்பிட உடனே நாமதேவர் விழித்து வெளியில்வந்து பார்க்கையில் சாட்சாத் ஸ்ரீமந் நாராயணனே சகல சம்பாரங்களுடன் வந்து நிற்பதைக் கண்டு ஆனந்தங்கொண்டு பகவானைத் துதிக்கப்பகவான் நாமதேவனை யருகிலழைத்து உனக்கு மாத்திர மென் நிஜரூபந் தோற்றும் மற்றவர்களுக் கெல்லாம் ஓர் வர்த்தகனைப்போல் காணப்படும். இதைக் குறித்து நீ சங்கை கொள்ளாமல் சீக்கிரமாய் ஸ்நானஞ் செய்து ஆடையாபரணங்க ளணிந்துக்கொண்டு உனது மாதா பிதாவையும் அணிந்துக் கொள்ளச்செய்து என்னுடன் இந்த ரதத்தின்மீதி லமர்ந்து உனது சம்பந்தியின் மனைக்குப் போவோம் வாருமென் றுரைந்து நாமதேவனன்றி மற்றவர்கட்கெல்லாம் ஓர் சவ்காரைப்போல் தோன்றித் தாம்ஸேட்டி குணபாயியையும் அழைத்துக்கொண்டு பண்டாபுரம் கிடுகிடென்று நடுநடுக்கத் தோற் கருவிகளைக் கொட்டச்செய்து துளைக்கருவிகளை யூதச் செய்து கண்டோர் களிப்புறக் கன்னிகளை நடனம் புரியச் செய்து கேட்டோர் மதிமயங்கப் பதங்கள் பாடச் செய்து, எத்திசையிலும் பரிமளவாசனை பரவச்செய்து, இந்த வர்த்தகன் யாரென் றெண்ணுவோர்க் கெல்லாம் நானிருப்பது வைகுந்தபுரம் என்னுடைய நாமம் கேசவசவ்காரென் றுரைத்துக் கொண்டே நாமதேவர் மாமனார் வீட்டையடைந்து அங்குள்ள யாவரும் பிரமை கொள்ளும்படி ஆடையாபரணங்க ளளித்து அதிதிகட்கும் அந்தணர்க்கும் அளவற்ற சொர்னதானம் வஸ்திரதானம் கோதானங் கொடுத்து ராஜாபாயிக்கும் அவளையீன்றாளுக்கும் குணபாயிக்கும் அநேகா பரணங்களைப் பூட்டி நாமதேவர் மைந்தனாகிய விஷ்ணுதாசனுக்கு மயிர்வாங்கிக் காதுகுத்தி நவமணிக ளழுத்திய அநேகாபரணங்களைச் சூட்டி சம்பந்தியின் வீடெல்லாம் தங்கமயமாக்கி அதிதிகட்கும் விருந்தாளிகட்கும் முப்பத்திரண்டுவகை பதார்த்தங்களுடன் அன்னம்படைத்துண்டபின் சகலருக்குஞ் சாந்து சவ்வாதுகளைப் பூசி பன்னீரை வீசிப் பூமாலைகளை புனைந்து களிக்கடலி லமிழச்செய்து சம்பந்திக்கு முத்துமாலை மோகனமாலையைப் பூட்டி ஓ லட்சாதிபதியே! நானுமது மருமகனுக்கு பால்யசினேகனாதலால் அவரைப் பார்க்கவந்து அவர் மைந்தனுக்கின்று காதுகுத்துஞ் சடங்கெனக் கேட்டுவந்து என்னாலான வரிசைகொண்டு வந்தேன். எனக் குண்டானமட்டுந் தந்தேன், நாமதேவர் மனத்துக்கே வரலாமென்றிருந்தேன், அப்போது கூடாமையாயிருந்ததா லிப்போதிங் கடைந்தேன், இனியெனக்கு விடைகொடுத்தனுப்புமென் றுத்தரவு பெற்றுக்கொண்டு அவனால் செய்யப்பட்ட உபசாரணையை யேற்றுக்கொண்டு தாம்ஸேட்டியும் நாமதேவரையும் நோக்கி, இனி நீங்கள் சவுக்கியமாகச் சந்தோஷமாயிருங்கள் நான் பண்டரிநாதனுடைய சந்நிதானத்துக்குப்போய் பாண்டுரங்கனைத் தரிசனஞ் செய்துக்கொண்டு வைகுந்தபுரத்திற்குப் போகிறே னென் றுரைந்து விடைபெற்றுக் கொண்டு பட்டணத்துக்குள்ளிருந்து வெளிப்பட்டுச் சகலருடன் மாயமாய் மறைந்தார் பின்பு ராஜாபாயின் தந்தை களிசாகரத்தி லமிழ்ந்தவனாய் தாம்ஸேட்டி நாமதேவர் முதலானவர்களுக்கும் மரியாதை செய்து தன் வீட்டிலேயே வைத்துக்கொண்டிருந்தார் தாமஸேட்டி சிலநாள் சம்பந்தியின் வீட்டிலிருந்து பிறகு தன் வீட்டுக்குச் சகலருடன் சென்று ஆனந்தமாயிருந்தார். நாமதேவர் நாடோறும் பகவானுக்கு நைவேத்திய மூட்டி தானுமுண்டு வருங்காலத்தில் ஒருநாள் பகவான் நாமதேவர் எண்ண மறிந்திருந்தும் அறியாதவர்போல் அப்பா நாமதேவ் நானுனக்குப் பலதரம் சொர்னமளித்த தன்றிக் கூலியாளனாய் வந்து வேதையுடன் பந்தலைக் கட்டினேன் அதற் கிதுவரையில்

கூலிகொடுக்காமற் போனதன்றிப் பதிலுபகார மொன்றுஞ் செய்யாமலிருக்கின்று யுனக்கழகா யிருக்கின்றதோ வென்று கேட்டார் நாமதேவர் பகவானைப் பணிந்து ஓ என்னுண்டவனே! எல்லா மும்முடைய சொத்தாயிருக்க நானுமக் கெந்த வஸ்துவைக் கொடுப்பேன் அன்றி உம்மைவிட என்னையோ ரெஜமானுக்கிக் கூலிகேட்கத் தகுமோ? உமக்கடக்கமா யிருக்குமென்னை வேறுக்கி உபகாரஞ் செய்யென்று கேட்கக் கூடுமோ ? நீர் கேட்கும் விகட வினுவுக்கு என்னால் சமாதானஞ் செய்யக்கூடுமோ? நீர் கேட்பதற்கு முன்னமே என்னுடல் பொருளாவியை உமக்கு தத்தஞ்செய்திருக்க நீரென்னை வேறுபடுத்தலாமோ? நீர் பேதப்படுத்தினும் நான் பேதமாயிருப்பேனோ ? தேவரீ ரிவ்விதமொழி வின்ளலாமோ? என்னைத் தள்ளலாமோ வென் றுருகும்போது பகவான் மந்தகாசம் புரிந்து மார்புட ணணைத்துக் கொண்டு ஐயா நாமதேவா! உன்னெண்ண மிப்படியா யிருக்கின்றது நானறிகிலேனென் றுரைத்தார் நாமதேவ் ஓ மாயா விலாசனே! சுயம்பிரகாசனே! பாலினுள் வெண்ணை போலவும், எள்ளினுள் யெண்ணை போலவும், எங்கும் பரிபூரணமாயிருக்கும் நீர் என்னெண்ண மாத்திர மறிய மாட்டீரோ? உமது மனோபாவத்தை பிர்மருத்திராது மறிந்துக் கொள்ளக் கூடா தென்றால் என்னா லறிந்து கொள்ளக்கூடுமோ ? ஓ பரந்தாமா ! ரகுராமா ! சகஸ்ரநாமா ! நீலமேகஸ்யாமா! பக்தவச்சலா! பாண்டுரங்கா வென்று தோத்திரஞ் செய்யும்போது பகவான் நாமதேவுக்குப் பல ஆசிகள் கூறி நீயானந்தமா யிருப்பாயாக வென் றுரைத்து மறைந்து விக்கிரரூபமாயிருந்தார் நாமதேவ் பண்டரிநாதன் கோயிலே சொந்த வீடாக இரவும் பகலு மிருந்துக் கொண்டு சந்தோஷமாய் நாள் கழித்துக் கொண்டிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

பகவான் வரிசை கொண்டுவந்த அத்தியாயம்

மு ற் றி ற் று.

---

பகவான் துணை.

—(-*-)—

ஸ்ரீ நாமதேவர் க்ஞானேஸ்வரனோடு யாத்திரைபோய் அக்பர் பாதுஷாவால் கொல்லப்பட்ட பசுவின் கன்றை யெழுப்பினதும் மார்வாடி தேசத்தில் ஓர் நதிப் பிரவாகத்தை யுண்டாக்கினதும், நாகேஸ்வரர் கோயிலை மேற்கு முகமாகத் திருப்பினதும், ஆகாயத்திலிருந்து கொடிகள் வர நாகேஸ்வரர் கோயிலில் நாட்டியதும், யாத்திரைசெய்து பண்டாபுரத்தையடைய ஸ்ரீ பாண்டுரங்கன் விருந்து செய்ததும், விடோபாவினிடம் பிர்மோபதேசம் பெற்றுக்கொண்டதும், பரிசா பகவத்தாஸனை ஆட்கொள்ள அவனிடமிருந்த பரிசவேதியை நதியிலெறிந்து அவன் செய்த பலவந்தத்தால் சந்திரபாகா நதியில் மூழ்கி அரசன் முதலானவர்களும் களிக்க அளவற்ற பரிசவேதிகளைக் கொடுத்ததும் முதலான அத்தியாயங்கள் பின்வரும் பக்தர்களின் சரித்திரங்களின் தொடர்ந்தார்த்தமாய்வரும் அதை அங்கங்கே இரண்டாம் புஸ்தகத்திற் காணலாம். சுபம். அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகனே! ஆதிமத்யாந்த ரகிதனே! தந்தையின் மடியில் வீற்றிருப்பதற்கு அபாக்கியனான துருவனுக்கு அழியாப் பதமளித்தது போலவே ஒரு சரித்திரமே செய்வதற்குத் திறமையில்லா பாத்திரஞ்கிய அடியேனுக்கு எா-சரித்திரங்களும் அடியேன் செய்யும் படியான வரமளிக்க உனது தாட்டாமரைகட்கும் உனது வட்சஸ்தலத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீதேவியின் கமலக் கழல்களுக்கும் உனது பக்தர்களின் பாத பதுமங்களுக்கு மனேக வந்தனம் செய்யும் தாஸானு தாஸனுகிய வேங்கட தாஸனது மந்தமதியை எந்த விதத்தினாலாவது திருத்திஉனது சொந்த பக்தர்களது விந்தையான சரித்திரங்களை முழுதும் முடித்தாட் கொள்வது உமது பாரமாகும் ஸ்ரீமந்நாராயணாது திருவடிகளே சரணம்.

நாமதேவர் திருவருட்கழல்களே துணை.

விருத்தம்

வித்தைதந்து புத்திதந்து விக்கினங்கள்நீக்கும் வேழமாமுகவனது விமலபதம் வாழ்க
பத்தரது மனோரதத்துக் கனுகூலமாகும் பகவான்றன்றிருவடிகள் பல்லாண்டு வாழ்க
சத்துவத்தை யளித்தடியா ரிச்சைநிறைவேற்றும் சங்கரன்றன்றூண்மலர்கள் சந்ததமும் வாழ்க
உத்தமர்கள் சரிதைதனை யுவப்புடனேசெய்ய உதவியாயிருக்குமாறு முகனடிகள் வாழ்க.

நாமதேவர் சரித்திரம்.

மு ற் றி ற் று.

ஸ்ரீ

ஸ்ரீமத் விட்டலதேவாய நம:

# ஸ்ரீ மகாபக்த விஜயம்.

## ஐந்தாவது

# ஞானேசுவரர் சரித்திரம்.

### பகவான் துதி.

விருத்தம்.

தவபார்முனிவர் சுரரேத்துஞ் சடையோ முகநா லுடையோனும்
தவமோங் கிதனை மறந்தோருஞ் சகநாதாவுன் மாயக்கூத்
தேவர்தா னறிந்தார் நானறிய வெந்தாயகநா யகமேநான்
அவமா காதா ளச்சுதனே அடியேனுன்ற னடைக்கலமே.







### ஞானேசுவரர் துதி.

வேறு விருத்தம்.

மச்சகச்ச பலராம வாமன நரசிங்க
உச்சித பரசுராம வுயரிரா கவகோவிந்தா
கொச்சகுண் டலனுமான சுவாமியோ ருருவாய்வந்த
சச்சிதா னந்தஞானேசு வரன்சரண் டலைமேற் கொள்வாம்.

## முதலாவது

## ஞானேசுவரர் தந்தையாகிய விடோபாவின் யாத்திரை அத்தியாயம்.

—(-*-)—

ஆத்மா மாத்திரமாயிருந்தும் அணிமா - மகத்துவ மீயும், மகிமா-தன்னுக்கைகண்டிதமின்றிக் கண்டிப்புள்ள வற்றையுருவ வல்லமை யளிக்கும், சரிமா - இலகுத்துவங் கொடுக்கும், இலகிமா - வேண்டுவன வளிக்கும் பிராத்தி - நிறையுடனிருந்தும், பிரகாமியம் ஆட்சியுடனிருந்தும், ஈசத்துவம் - எல்லாவற்றையுந் தன்வசமாக்கும், வசித்துவம் - என்னும் அஷ்டசித்தியால் வசிஷ்டமடைந்திருக்கும்; உத்தவசித்தர் முதலானவர்களும் சேவல் கூவுமுன் னெழுந்து சந்திரபாகா நதியில் ஸ்நா

னஞ்செய்து ஜபதபங்களை முடித்துக் கொண்டு விரிஞ் சாவதாரனை நாபாஜி சித்தரிடம்போய் அவரை வலம் வந்து பணிந்து, ஓ மாசிலாமணியே! குருசிகாமணியே! மும்மூர்த்திகளும் ஆதிசத்தியு மவதாரஞ் செய்த சரி தையை நாங்கள் கேட்டு இன்பமடையத் தாங்க ளன் புடன் அனுக்கிரகம் புரியுமைய்யா வென்று துதிக்கப் பிபாஜிசித்தரின் நேசராகிய நாபாஜிசித்தர் சந்தோஷ சித்தராய் உத்தவசித்தர் முதலானவர்களை நோக்கி, ஓ யோகீசுவரர்களே! பக்தர்கள் அல்லது ஜீவன் முக்தர் கள் திருவிளையாடல்களாகிய திவ்விய சரித்திரங்களை அன் புடன்சொல்பவர்களும், இன்புடன் கேட்பவர்களும் சிவகாருண்யம், சாந்தம், சம்பாவம், சற்சங்கம், உபரதி சகுணத்தியானம், நிற்குணத் தியானம், பிரமக்ஞானம், அகண்டானந்த மோனமு மடைவதற்கு லேசில் சித்தி புத்திகளுஞ் சித்திக்கப்பெற்று முத்தி மார்க்கங்கற்றுத் தாட்சிகளற்று மாட்சிமையுற்றுப் பிர்மானந்த மடை வர்களாதலால் பக்த முக்தர் சரிதங்களுக் கிணையான பொருளொன் றுண்டென் றுரைத்தல் கூடாது எப்படி யென்றால் இந்தப் பக்தவிஜயமானது அஞ்ஞானவிருளை நீக்கி மெய்ஞ்ஞான தேஜசைக் கொடுத்தலால் ஜகசாட் சிய னென்றும், சாந்த மென்னுஞ் சீதளத்தை நிறைத் துத் துவேஷமென்னும் அக்கினியைத்தணித்தலால் தண் சுடரென்றும், நிஷ்களங்கமான மனதைக் கொடுத்து அரிஷட்வர்க்கங்களைத் தடுத்தலால் ஆரிய னென்றும். அறி வில்லாதவர்க்கு மெய்யறிவுண்டாக்கலால் இரணிய கர்ப்ப னென்றும், பாபகர்மங்களில் விழாமற் றடுத்தளித்த லால்வனமாலி யென்றும், நானென தென்னும் அகங் காரக் கிரந்தியை நாசஞ் செய்வதால் நிடலாட்ச னென் றும் பகிர்முக விஷயாதி போகங்களி லமிழ்ந்து மயக்க முற்றிருக்கும் ஜீவனை அந்தர்முக பேரின்பானுபூதியிற் சொக்கியிருக்கும் படியாச் செய்தலால் மஹேசனென் றும், கனவிலுஞ் சிற்றின்ப முன்னாது பேரின்பாமிர்த மூட்டுதலால் சதாசிவ னென்றும், நான் நீ எமது மத தென்னும் விகற்பத்தை நீத்து நிர்ச்சலனமா யிருத்துவ தால் பரப்பிரம்ம மென்றும் சொல்லலாம். அன்றி யிந்த க்ஞானேசுவரர் சரித்திரத்தைச் சொல்பவர் கேட் பவர்க்குற்ற பாக்கியத்தி னளவையே என்னாலுரைக்க கூடியதல்ல வென்றால் க்ஞானேசுவரர் சரித்திரத்தின் மாட்சிமையை யென்ன அரைக்கப்போமோ ஓ சித்தர் களே! இச்சரித்திரத்தை அத்தியந்த பக்தியோடும் கேட்பீராக வென் றெச்சரித்துப் பகவான் திவ்விய திருநாமங்களை யுச்சரித்து சொல்லத் தொடங்கினர்.

எப்படி யென்றால் ஓ புனிதர்களே! வேதாதிகள் புகழும் கோதாவரி நதிக்கணித்தாகிய மாபோதகர் பர வும் ஆபெகாமென்னு மூரில் மகாவிந்த நாதனைத் துதிக் கும் கோவிந்த பண்டித னென்பவர் சொரூப விசாரணை செய்த நிரூபாயென்னும் மனைவியோடு சபதபாதிகளை விடாமல் சஞ்சலத்துக் குட்படாமல் கர்ணீகப் பிராமண ராதலால் இராஜனிடங் கணக்கெழுதும் உத்தியோகத்தி லிருந்துகொண்டு அன்ன தானஞ் செய்துக்கொண்டு லோபிகளைப் போன்ற பாபிகளில்லையென விண்டு உத்த மர்க்கன்புடன் தொண்டு செய்வதே விரதமாகக்கொண்டு தனக் கெல்லாச் சம்பத்திருந்தும் புத்திர சம்பத்தில் லாக் குறையால் தானும் மனைவியுந் தனது குலதெய்வ மாகிய பகவானைத் தோத்திரஞ் செய்துக் கொண்டு வரு கிற காலத்தில் கடவுளருளால் ஓ ராண் குழந்தை பிறந் தது அக்கான்முளையை அன்பாய்ப் பாராட்டி இன்பமாய்ச் சீராட்டி விடோபாவைத் தியானஞ் செய்ததினா லுற்ப வித்த மைந்தனுக்கு விடோபாவென்று நாமதேயமிட்டு வயதுமுதிர்ந்தபின் உபநயனஞ் செய்து சகலவித்தியாப் பியாசமுஞ் செய்வித்துப் பால்ய தசை நீங்கிக் கௌமார தசை யடைந்ததே கலியாணஞ் செய்யயோசிக்கும் தாய் தந்தையரை விடோபாவணங்கி ஓ என் தாய் தந்தையே! விவாகஞ் செய்ய யோசித்ததை நிறுத்தி யான் யாத்திரை செய்து வரும்படியாக கிருபை கூறுங்களென்று தோத் திரஞ் செய்ய அன்னையு மப்பனும் சிந்தாக்கிராந்தர்களாய் ஓ எங்களருமைப் பாலனே! சொல்வதற்கரிய சீலனே! சம்சார விச்சை யில்லாதவர்களும் தந்தைதா யில்லாதவர் களும் செய்யத்தகாதபாவஞ் செய்தவர்களும் சஞ்சல மன துடையவர்களும அவசியம் செய்யவேண்டிய யாத்திரை யை மிகவுஞ் சிறியனாகிய நீ யிச்சித்தது வெகு ஆச்சரியம் தாய்தந்தையராகிய எங்களைப் பிரிந்துபோக உனக்குத் துணிவு வந்ததோ யாதுகாரணத்தா லிங்கிருக்கஉன்மனம் நொந்ததோ சவுக்கியமா யிருந்துக்கொண்டு மணஞ் செய் துக்கொண்டு நல்லறமான இல்லறத்தி லிருந்துக்கொண்டு விருத்தரான எங்களைப் புனிதராக்கு மப்பா வென்று பகர்ந்த தந்தை தாயைப் பணிந்து விடோபா சொல்லு கிறார், ஓ மாதா பிதாவே! இவ்வாக்கையோ தரங்க மென்றும், க்ஷணபங்குர மென்றும், செல்வமோ நீர்மே லெழுத்தென்றும் சுவரின்மேற் சுண்ணமென்றும், இளமையோ நீர்மேற் குமிழி யென்றும், சூரியனை மறைத்த மேக மென்றும் ஆயுளோ வில் நாணியைவிட்ட அம் பென்றும். விசையாயோடுங் காற்றென்றும், பிராணனோ

விருட்சமேலுற்ற பட்சியென்றும், வெட்ட வெளியில் வைத்த விளக்கென்றும், மனதோ சஞ்சல நிறைந்த சூட பென்றும், சன்மசாகரத்தி லமிழ்த்தும் வடமென்றும், விவேகமோ மின்மினிய வொளியென்றும், வெளியிறு வளியென்றும், பற்பலதர பொருவர்க்கொருவ ருரைக் துக்கொண்டிருக்கும் நீங்கள் சம்சாரியானபின் யாத்திரை போகலாமென் றெனக்குரைத்த லழகோ? அமாவாசை நிசியினுருட்டோர் திரணமாயதிலும் கணித விசாலமான அவிவேகவிருளாற் சூழப்பட்டுத் தொன்றுதொட்டுப் பவ சாகரத்துட்பட்டு மெய்ஞ்ஞான நிலைகெட்டுத் தட்டு கெட் டுத் தடுமாறிக் கொண்டிருக்கும் ஏழ்மையான கோழை யேன் சம்சாரத்துக் குட்படுவேனோ ? தையலரையுந் தொடுவேனோ? அந்தோ இல்லறமென்னுந் தொல்லையி லகப்பட்டோர்க் கல்லலன்றிச் சொல்லச் சுகமுண்டோ? ஓ அன்புள்ள அன்னையே! இன்புடன் வளர்த்த எந்தை யே! சம்சாரமென்னும் சாகரத்தில் மூழ்கினவன் சுக துக்கமென்னுந் திரைகளாலலக்கணுற் றழிவதே யல்லது மோட்சமடையுஞ் சூட்சுமந்தெரிவிக்கும் சாட்சிஸ்வரூப மாயிருக்கும் மாட்சிமை பொருந்திய குருஸ்வாமிக்கேவல் செய்யக்கூடுமா? இது கூடினும் ஞான சாஸ்திரங்களைச் சந்தேகமறத் தெளியக்கூடுமோ? இது வந்தாலும் தெளிந்த படி நிர்ச்சலனமாய் இருக்கக்கூடுமோ? இருந்தாலும் ஆனந் தாவேத மேலிட்டுத் தன்னை மறக்கும் நனவிற் சுழுப்தி நிலையை யடையக்கூடுமோ? இதையடைந்தால் கிரகஸ்தாசிர மத்துக் குதவமாட்டுவனே? இவ்வளவு அரிதானசுக ஜா னந்தானுபூதியை யடைந்தவர்போல் பேசும் வர்சாக் ஞா னிகளடையும் பயன் வார்த்தை மாத்திரமன்றிப் பரமார்த் தத்தை யடையக்கூடுமோ வென்கிற பல வார்த்தைகளாடி ஓ மாதா பிதாக்களே! வைராக்கிய மில்லாதவனுடைய சாஸ்திர விசாரணையும், ஞானமில்லா தவனுடைய விவேகமும் விதவஸ்திரீயின் பெவ்வர்னமும் பலமில்லாத வன் தேகபுஷ்டியும், பதிவிரதத்தன்மை யில்லாதவளுடை யஅலங்காரமும், சற்கர்மஞ்செய்யாமற் கழியும் ஆயுள் நாளும், விபசாரியிருக்கும் ஆசாரமும், பக்தியில்லாத பூ சையும். குரு நிந்தனை செய்யும் தியானமும், சஞ்சல மன துடையவன் செய்யுஞ் சபமும், பிரயோஜன மில்லாதது போல எவ்வர்னகாலத்தில் மோட்ச மார்க்கத்தைத் தே டாத புருஷனும் பயனடையான். ஆதலால், எனக்கு வது வையாகுமுன்னமே பல தேசங்களிற்றிரிந்து ஜலஸ்தல பரிசன தரிசனஞ்செய்து உத்தமர்களிடம் ஞானசாஸ் திரார்த்தங்க ளறிந்துக்கொண்டு இரண்டோராண்டில் வந்து உங்களிஷ்டப்படி நடந்துக்கொள்ளுகிறே னென் றுரைத்து வணங்குந் தனயனைத் தாயுந்தந்தையும் பலஆசி கள்கூறி, ஓ எங்களரும்பாலனே! விரதசீலனே சன்மார்க் கத்திற் செல்பவனைத் தடுப்பவர்க்கும் ஈவதை விலக்குப வர்க்கும் சொல்லொணாத் துன்புண்டென்று வேதமுறை யிடுகின்ற தாதலால் யாத்திரைபோகுமுன்னை நாங்கள் தடுக்கமாட்டோம். ஆனால் ஓராண்டுக்குள் யாத்திரை செய்து உன் அழகானமுகத்தை யாங்கள் கண்டு களிப் படையும்படியாக வாக்களித்துச் சுகமாய்ப்போய் வாருமப் பாவென்றறைந்த மாத்திரத்தில் விடோபா சந்தோஷ வாரியில் மூழ்கினவராய்த் தேவரீர்களுரைத்தவண்ணமே ஓராண்டுக்குள் வருகிறேனென் றறைந்து, விடைபெற் றுக்கொண்டு, துவாரகா, மச்சதீர்த்தம், பிண்டாரகம சுதாப்புரி, ருக்குமணியம்மாளுக்கு வதுவையான ஸ்தான மாகிய மூதமாதவம், ஸ்ரீ கிருஷ்ணர் சமாப்த விடமாகிய பானுகாதீர்த்தம், பிரபாஸ்தீர்த்தம், முசுகுந்தரிஷி அனந் தற்செய்த ஸ்தானமாகிய சோரதி, சோமநாதம், தவள புரி, சப்தசிருங்கி, அருணா, வருணா, மமலேசுவரம், திரி யம்பகநாதம், குஜாவர்த்தகம், சங்காதுவாரம், பிர்மகிரி பர்வதம், பீமாசங்கரம் முதலான ஸ்தலங்களுக்குச் சென்று சக்ர தீர்த்தத்துக்கு வந்து ஸ்நானஞ்செய்து ஜப தபங்களை முடித்துக்கொண்டு அத்தீர்த்தத்துக்குச் சமீப மாகிய அலங்காவதியிற் செல்லுகையில் அவ்வூரிலிருக் கும் சிதோபந்து என்னும் மறையோன் நாடோறும் சக் கர தீர்த்தத்துக்குப்போய் ஸ்நானஞ்செய்து கர்மானுஷ் டானங்களை முடித்துக்கொண்டு அங்குவந்த யாத்திரை பிராமணர்க ளெத்தனை பேரானாலுமவர்களை அழைத்துக் கொண்டுபோய் அன்ன முன்பித்தனுப்பும் வழக்கப்படி அன்றும் பூசுரரைத்தேடிக் காணுமல்வாடி விடோபாவைக் கண்டு ஆனந்தங்கொண்டு அழகு சுந்தர அடக்க ஒடுக்கத் துக்கு வியந்து, அவரைத் தன் இல்லறத்துக் கழைத்துக் கொண்டுபோய் அன்ன முன்பித்து வேத ரகசியங்களைப் பேசிக்கொண் டானந்தமா யிருந்தார்கள்

கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லுவார். கேளுஞ்சித்தர்களே! இப்பால் சிதோபந்து விடோபாவை நோக்கி, ஓ பரம பக்தனே! எளியேன்மேற் றயைசெய்து இரண்டு நாளிங்கிருந்து போமப்பா வென்று தன் வீட்டிலே நித்திரை செய்யும் படியாயுரைத்து வெகுநேரம் வேதாந்த வார்த்தைகளாடித்

தெளிந் தவனெனக் கொண்டாடி நடுராத்திரியானதால் அனந்தல் செய்யும்படியாய்ப் புகன்று தானுங் கண்வளர்ந்தார்.

அப்போது பகவான் சிதோபந்து சொர்ப்பனத்தில் வந்து, ஓ உத்தமனே! இப்போதுன்னருகில் படுத்திருக்கும் விடோபாவுக்கு உன் புத்திரியை நாளையத்தினமே மன்றல் செய்து மகிழ்ச்சி யடையக்கடவா யென்று திருவாய்மலர்ந்து மறைந்தார். உடனே சிதோபந்து விழித்து இதென்ன விந்தையா யிருக்கின்றது இப்புண்ணியனைப் போன்றவனுக்கே நமது கன்னிகையை மணஞ்செய்ய வேண்டுமென்று நினைத்த நினைவே இப்படிக் கனவாய் வந்ததோ அல்லது பகவான்ஸ்ரீசங்கல்பமே இப்படி இருக்கின்றதோ வெனப் பலவிதங்களா யோசித்துக் கொண்டிருந்து மூன்றும் சாமத்தினிறுதியில் விடோபாவை யெழுப்பி, அப்பா! உனக்கென்னருங் கன்னிகைக்கொடுத்து மன்றல் செய்யும்படியாய்ப் பகவானென் கனவில் வந்துரைத்தார். ஆதலால் பகவான் வாக்கியத்தைத் தள்ளாமல் யாதொருமொழியும் விள்ளாமல் என் புதல்வியைக் கலியாணஞ் செய்துக்கொண்டு களிப்புடனிருப்பாயாக வென்ன அவ்வசனத்தைக் கேட்ட விடோபா திடுக்கிட்டு இதென்ன கிணறு வெட்டப்போய் பூதம் புறப்பட்டாற்போலவும், பிள்ளை வரத்துக்குப்போய் புருஷனைப் பறிகொடுத்தாற்போலவு மிருக்கின்றது. தந்தைசொன்மிக்க மந்திரமில்லை யென்றறிந்திருந்தும், தந்தை வாக்கியத்தை தள்ளிப் பல தேசங்களிற் றிரிந்துவந்து இந்த பிராமணருரைத்தபடி பந்தத்தில் நுழையலாகுமாவென் றுணங்கிப் பிணங்கிச் சிதோபந்துவை வணங்கி இணங்கி, ஓ ஐயா! என் குலம் கோத்திரமறியாதவரா யிருந்தும் இப்படிப் பேசலாமா, முன்னம் கணிகையரிருவர் காமரசத்தை கலைக்கோட்டு மகாரிஷிக்கூட்டிக் காட்டை விடுக்கவும் காட்டையடுக்கவும் செய்ய, அந்நாட்டின் வேந்தல் தன் கன்னியரிருவரை அவருக்கு மணம்புரியச் செய்வித்தது போல எனக்கன்பான பன்னமூட்டி இன்பத்தைக்காட்டி இகபோகத்திலமிழ்த்த யோசித்தீர் இதற்காகத்தானோ இப்படி விசுவாசித்தீர் இனி இவ்வார்த்தையை என்னுடன் சொல்லாமலிருக்க மிகவும்மை வேண்டுகிறேனெனச் சிதோபந்து விடோபாவினிடம் நயவார்த்தைகளாடிக் கோத்திர முதலானதும் விசாரித்துத் தன்னினத்திற் சேர்ந்தவனாயிருக்கக் களிப்புற்று அப்பா விடோபா! நீயே என் புதல்விக்குகந்த மணாளன் இப்படி கூட்டிவைத்ததே குருகடாட்சமா யிருக்கின்றதென்று தன் மனைவியை விளித்து ஓ பெண்ணே! நமது மருமகனைக் கண்டாயா ஆனந்தங் கொண்டாயா வென்று களிப்பின்மிகுதியால்பற்பல வார்த்தைகளாட அதுகேட்டவிடோபா இதென்னதிருடப்போய் குருடனானது போலவும், பரம பக்தனாகப்போய்ப் பைசாசத்தாற் பீடிக்கப்பட்டதுபோலவு மிருக்கின்றது. ஓ ஐயா பிராமணோத்தமரே நான் சன்னியாசியா யிருக்க எனக்குமணஞ்செய்ய நினைக்கலாமா ஒருவர்விரதத்தைக் கெடுக்கலாமோ? எடுக்காப்பார மெடுக்கலாமா? வேண்டாமென்பவருக்குப் பெண் கொடுக்கலாமா? ஒருவர் யாத்திரையைத் தடுக்கலாமாவெனச் சிதோபந்து அப்பா மருமகனே! அழகானமுகனே! இராஜன் வார்த்தையைத் தடுத்தாலும் மாதா பிதாக்கள் வார்த்தையைத் தடுக்கலாகாது மாதாபிதாக்கள் வாக்கைத் தடுத்தாலும் குருவாக்கைத் தடுக்கலாகாது ஆரியர் வாக்கைத்தடுத்தாலும் தெய்வவாக்கியத்தைத் தடுக்கலாகாது ஆகலால் தெய்வவாக்கின்படி செய்ய நினைந்த என்மொழியைத் தடுக்காமல் வியாகுலத்தைக் கொடுக்காமல் இன்றைக்கே விவாகஞ்செய்து கொண்டு நீரு மமது மனைவியும் இஷ்டமான ஸ்தலஜல தரிசன பரிசனத்துக்குப் போகலாம் சீக்கிரம் எழுந்திரும் ஸ்நானஞ்செய்யும் திவ்பமான வஸ்திராபரணங்க ளணிந்துக்கொள்ளும் என விடோபா இதென்ன குளிக்கப் போய்ச் சேறுபூசிக்கொண்டது போலவும் கும்பிடத் தகுந்த குருவோடு வம்புசெய்வது போலவு மிருக்கின்றது என்றுன்னிச் சிதோபந்துவைப்பார்த்து ஓ ஐயா உமக்குசொற்பனஞ்சாதிக்க பகவான் என்கனவில் வந் துரைக்கமாட்டாரா திவ்வியதரிசனந் தாமாட்டாராவெனச் சிதோபந்து அகத்தியம் பகவான் உன்கனவிலும் வந்துரைப்பார் ஆதலால் இன்றிராத்திரிக் கிங்கேயே நித்திரை செய்யுமென் றுரைத்துச் சூரியோதயமானதே சக்காத்தீர்த்தத்திற்சென்று ஸ்நானஞ்செய்து ஜெபதபங்களை முடித்துக்கொண்டு வீட்டையடைந்து போஜனஞ்செய்து நல்லவார்த்தைகளாடிப் பகவான் கீர்த்தனைகளைப்பாடி ஜாமாரத்திரியான பின் கண்வளர்ந்தார்கள் இரண்டாஞ் சாமத்தில்பகவான்விடோபாவின் கனவிலடைந்து அப்பா விடோபா! இந்தச் சிதோபந்து புதல்வியாகிய பதிவிரதைகளில் முதல்வியை விவாகஞ்செய்துக் கொண்டு சுகமாயிருமென் றுரைத்து மறைந்தருளினார்

உடனே விடோபா விழித்து ஓ-ஓ மோசம் வந்தது நமது ஜென்மாயுசுக்கு மணஞ்செய்ய லாகாதென்கிற வைராக்கியத்தைக் கடவுளே கெடுப்பதுபோற் காண்கிறது அன்றித் தாய்தந்தையரறியாமல் நாமே மன்றல் செய்துக்கொண்டால் மாதா பிதாவின் மனம்நோகும் இதனால்

நரகத்தை படைதற்கேதுவாகும் அல்லாமல் சொர்க்கத்தி ற்சென்றவன் நரகத்தையும், சுகத்திலிருப்பவன் துக்கத் தையும், அமிர்தம்புசிப்பவன் விஷத்தையும், இராஜரீகஞ் செய்பவன் யாசிக்கவும் சம்பாவமுள்ளவன் ஆசிரியரை நிந்திக்கவும் நித்தியவஸ்துவை யடைந்தவன் அனித்தியப் பொருளையும் நரஜென்மத்தினருமை யறிந்தவன் வீணாள் கழிக்கவும் பரிமளாதிகளைப் பூசிக்கொள்பவன் மலத்தை யணிந்துக்கொள்ளவும் சமாதி நிஷ்டாசாதனஞ்செய்ய வி ருப்பமுள்ளவன் சஞ்சல வியாபாரத்திற் குட்படவும் வாஞ்சிப்பானோ வாஞ்சியான் அதுபோலவே சந்நியாசியா கவேஷமணிந்துகொண்ட நாம் சமுசாரத்துக் குட்படலாமா மரண பரியந்தம் பேய்கொண்டாலும்கொள்ளலாம் பெண் கொள்ளலாகாதென்று பழமொழி யிருப்பதன்றி சப்தத் தால் அகண்ட பட்சியும் ஸ்பரிசத்தால் யானையும் ரூபத் தால் விட்டிற்பூச்சியும ரசத்தால் மீனும் கந்தத்தால் ஒவ் வொருவிஷயமிருந்தே மாணமடைகிற தென்றும் இந்த ஐந்து விஷயங்களுங்கூடி ஒருருவாய் வந்து மயக்கந்தந்து மாந்தரைவாட்டும் மாதர்கள் தோதகத்து ளகப்பட்டவன் விடுபடுவது ஜென்மாந்தரங்களிலுங் கூடாதென்றும் சாஸ் திரங்களில் முறையிடுகின்றது. அப்பப்பா இந்தநப்பிதத் துக்குட்பட்டால் தனம்வேண்டும், கனம்வேண்டும், மனை வேண்டும், மக்கள்வேண்டும், பந்துக்கள்வேண்டும். பல ஜெந்துக்கள் வேண்டும் இதுதெரிந்தும் தீயில் விழுவே னோ இகத்தோரைத் தொழுவேனோ வென்று பலவிதங் களாயோசித்து இனி பொழுது விடியுமாயின் விபரீதம் விளையும் என்று கள்ளனைப்போலவும் விபசாரியைப்போல வும் மெள்ளநடந்து தெருவீதியிற்போனார் அத்தறு வா யில் சீதோபந்து புத்திரியாகிய ருக்மாபாயி நல்லவிவேக க்ஞான புருஷனையே மணம்புரியவேண்டுமென் றனேக நாளாய்ப் பார்க்கவியை ஸ்தோத்திரஞ் செய்துக்கொண் டிருந்தபடியே தனக்கு மணவாளன் கிடைத்ததற்கு நாம் செய்த பாக்கியமே பாக்கியம் நாமடைந்த சிலாக்கியமே சிலாக்கியம் இனி எப்போது பொழுதுவிடியும் விவாக மெப்பொழுது முடியும் இவருட னெப்போதுபேசுவோம் சந்நதிகளை யெப்போது பூசுவோம் என்கிற யெண்ண ங்களாற் பிடிக்கப்பட்டுத் துயில்வாாமல் விழித்துக் கொ ண்டிருந்து விடோபா சத்தடியின்றி வெளியிற்போகிற தைக்கண்டு சந்தேகங்கொண்டு இவருடைய மனைவியெ ன்று நம்மை நமது தாய்தந்தை எப்போதுதீர்ப்பு செய் தார்களோ அப்போதே இவருக்கு நாம் மனைவியானோம். அப்படியிருக்க இப்படி நம்மை மோசஞ்செய்து துவேஷ ங்கொண்டு போகிறதுபோற் காண்கின்றது சன்யாசி பப ணம் திண்ணை விட்டாலாச்சுது என்கிறது பொய்மொழி யா? நாம்செய்த புண்ணிய பலத்தாற் கிடைத்த புருஷோ த்தமனை யிழுத்த லறிவீனமல்லவா? பகவான் நமது தந் தையின் கனவிலுரைத்தவண்ணம் இவருடைய சொற்ப னத்திலுஞ் சாதித்திருப்பார்.

இதனாலேயே இவர்மனம் வேறுபட்டுப்போகின்றார் ஒருவேளை பகவான் இவர் சொற்பனத்தில் வந்துரைக்கா விட்டாலும் இவர் மணம் வேண்டாமென்று மறுத்தாலும் இவரே பதி நானே சதியென்றெப்போ தெண்ணங் கொ ண்டேனோ அப்போதே என்கற்பழிந்தது யாரால் கற்புக் கழிவு வந்ததோ அவரே கணவனாகும் கணவனுக் கைக்ய மான காந்தை கணவனைப் பிரிந்திருப்பதுமுண்டோ வெ ன்கிற பலவெண்ணங்களோடு மவர் பின் தொடர்ந்து கற் புள்ள பெண்களுக்குரிய நாணம் மடம்முதலான குணங் களாற் சிறப்புற்றோங்கிய உத்தமியாதலால் விடோபாவை மறிப்பதற்கும் கூப்பிடுவதற்குங் கூடாமல் அதிசீக்கிரமா யோடி அவரைப் பலதரஞ்சூழ்ந்து பாதங்களில் வீழ்ந்து ஓ ஸ்வாமி எங்கே கள்ளனைப்போல் மெள்ளப்போகிறீர் இங்கிருக்க உமக்கிஷ்ட மில்லாதிருந்தால் தாங்கள் நாடிய தேசத்துக்கு நாமிருவரும் போகலாம் என் தந்தையிடம் உத்திரவுபெற்றுக்கொள்ளு மையாவென விடோபா ருக் மாபாயின் சௌந்தரியத்தைக்கண்டு பிரமைகொண்டு நீ யாரென்று வினவ ருக்குமாபாயி ஓ ஸ்வாமி என்னையே உமக்கு வதுவைசெய்ய என்பிதாபேசி உமதைத் தன்ன ருகில் சயனிக்கச்செய்து தன்னைமறந்து தூங்குகின்றார் அவரறியாமல் நீர்போவதறிந் தும்மை மறுத்து வீட்டுக் கழைத்துக்கொண்டு போகவந்தேன் கிருபைகூர்ந்து மனை க்குள்வாரும் ஸ்வாமியென அவ்வசனத்தைக் கேட்ட விடோபா திடுக்கிட்டு ஸ்மரணைகெட்டு அறிவழிந்து உட னே தெளிந்து ஓ மாதரசே தந்தைதாய் ஒருவனுக்கு விவாகஞ்செய்யும் பரியந்தம் மாதாபிதாவே தெய்வமென் றும் தனித்தோர் புருஷரோடுரையாடாம லிருப்பதே விர தமென்றும் அயல்வீடறியாம லிருப்பதே அழகென்றும் கற்பைக்காத்தலே தபசென்றும் பெண்களுக்கு லட்சணஞ் சொல்வார்கள்.

அப்படியிருக்க நீ இப்படிசெய்யலாமா? வழிப்போ க்கனாகிய என்னை இந்த நடுராத்திரியில் தனித்து வந்து மறுக்கலாமா? இப்படி வேசைபுஞ்செய்யாள் இப்பேர்க் கொத்த அவலட்சண குணமுடைய உன்னை யான் விவா

கஞ் செய்துக்கொண்டபின் நாகடைய வேறோர் பாவமுஞ் செய்யவேண்டுமா? எப்போது தனித்து ஒரு புருஷனுட ன்பேசத் துணிந்தாளோ அப்போதே விபசாரியானு ளெ ன்று பெரியோர்க ளுரைக்கின்றார்கள் அந்தக்குண மூன் னிடத்திற் பிரத்தியட்சமாய்க் கண்டபின் உன் முகத்தி லும் விழிக்கலாமா? இப்பேர்க்கொத்த அபசாரிகளின் முகத்தில் விழித்தலன்றி வேறோர் தோஷமுஞ் செய்ய வேண்டுமா? சீ சீ போ போ வென்கிற கடினவார்த்தை களுரைத்துப்போக ருக்மாபாயி விடோபாவை மறுத்துப் பாதங்களிற் யணிந்து ஓ! என் பிராணநாயகா! பிராண சினேகா! எப்போது என் தாய்தந்தை உமக்கு விவாகஞ் செய்ய நினைத்து உம்முடன் பேசினார்களோ எப்போது பகவான் கனவில்வந்துரைத்தாரோ எப்போது நான் உப மைக் கணவனென்று பாவித்தேனோ அப்போதே விவாக மாய் விட்டது எல்லாவற்றிற்கும் மனமே காரணமன்றி இம்மணம் மணமாகுமா? நாலுபேரறிய விவாகஞ்செய்தா ற்றான் சதி புருஷர்கள் கூமக்கு என் தாய் தந்தை யிடஞ் சொல்லிப்போக மனமில்லா விட்டாலும் நானினி உம் மைப் பிரிந்திருப்பதில்லை இது சத்தியமாகும் ஒருவேளை நீர் பலவந்தமாயென்னைத் தள்ளிப்போனு லென்னுயிரை உமக்கர்ப்பனஞ் செய்வேன் இற்குத் தடையில்லையென அவ்வாக்கிங்கேட்ட விடோபாஆ-ஆண்டவனே! இதென்ன வல்லடிவழக்கா யிருக்கின்றது ஓ-பெண்ணே உலகத்தில் அனேகருக்கும் பெண்கொடுக்க தாய்தந்தையர் யோசிப் பார்கள் பலரை விசுவாசிப்பார்கள் அவர்களுக் கெல்லாம் அப்பெண் மனைவியாவாளா நிச்சய தாம்பூலமுதலானசட ங்குகள் நடந்தும் விவாகந்தவிர்ந்து போகிறதில்லையா, துனக்குத் தெரியாத தொல்லையா நீ தெரியாமையினு லிப்படிப்பேசினை இதை யாராவதறிந்தால் நிந்தைக்கிடமா கும் சீக்கிரம் வீட்டுக்குப்போய்ச் சந்தோஷமாயிரு நான் நாடோடி மனிதன் அன்றி எனக்கு சம்சாரவிச்சையில்லை ஸ்திரீகள் நடக்கக்கூடாது தன்னெல்லை சன்யாசியான என்னை மணஞ்செய்ய விரும்பலாமா நீ பயித்தியம் பிடித் தவள்போற் காண்கின்றதென் றறைந்துபோக ருக்குமா பாயி மறுத்து ஓசுவாமி சற்புள்ளவள் ஒருவனைக் கணவ னெனத் திர்மானித்தபின் அவனையன்றி மற்றொருபுருஷ னைக் கனவில்நினைத்தாலும் அவள்கழுதையேயாம் அவள் முகத்தில் விழித்தால் தாங்களுரைத்தபடி பாபம்வந்து நேரிடும் ஆதலால் நீரே பதியென்றும நா னும்முடைய சதியென்றுப் திர்மானித்தபின் உமமைப்பிரிய எனக்குநீதி யோ உம்மையன்றி வேறுபுருஷனைக்கருத எனக்கென்ன கொடியவிதியா நீ இப்படி நினைக்க எனக்குக் கெட்டமதி யா? நாலுபேரறிந்தால் நிந்தைக்கிட மாகுமென்றீரே யா ரும் அறியாமற் போய்விடலாம் வாரும்சுவாமியென்ன அது கேட்டு விடோபா ஓ அறிவையே விவேகமில்லாத தெரி வையே நீ சொல்லும்வார்த்தை உனக்குத் துன்பம்வந்தா ல் வரட்டும் எனக்கின்பம் வந்தால்போதுமென்கிறதுபோ லிருக்கின்றது நல்லகாரியம் தன்யோசனைப்படி நடப்பது சுகம் குருபுத்தி விசேஷசுகம் மாபுத்தி வினசகாலம் ஸ்தி ரிபுத்தி பிரளயம்யென்கிற பழமொழியை உன்பால் சோ தித்தேன் யாரும் அறியாமல் நீயென்னுடன் வருகிறதெ ன்ன நானழைத்துக்கொண்டு போகிறதென்ன (எண்ண தக்கற்று எழுத்தறவாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தி) யென்கிறது சரியா யிருக்கின்றது அருமையாகப் பெற்று வளர்த்த தாய்தந்தையரை வஞ்சித்து வழிப்போக்கனுகிய என்னுடன் வரத்துணிந்த கொடியபாதகியாகிய உன்னுட ன் பேசக்கூடாது இனி யென்முன்நிற்காதே யென்னை மறுக்காதே மாதா பிதாக்களை வெறுக்காதே இங்கிருக்க வென்மனம் பொறுக்காதே என்று சொல்ல ருக்மாபாயி ஓ ஸ்வாமி நீர் பதியென்றும் நான் சதியென்றும் கடவுள் முன்னமே அமைத்திருந்த காரணத்தாலேயே என்தந்தை யின் சொற்பனத்தில் வந்துரைத்தார் உம்முடை கனவி லும் வந்துரைத்திருப்பார் தெய்வவாக்குக்குமேலானவாக் கொன்றுண்டோ தெய்வவாக்குத்தப்புவதுமுண்டோ தப் புவதற்குத் தெய்வவாக்கு இரண்டா தெய்வவாக்கைத்தள் ளினோர்க்கின்பமுண்டா நீரிப்படிசெய்துஎன்னைச்சோதிக் கவெண்ணங்கொண்டா ஓ என் பிராணநாதா மெய்ஞ்ஞா னபோதரே தெய்வவாக்கின்படி நடக்கும் என்னை நிந்தித் தாலும் துன்மார்க்கியென்று சிந்தித்தாலும் எனக்குச் சந் தோஷயேமாய் வெனென்பீரோ உம்முடைய சொதனை நீ ரெப்படியெண்ணினுலும் துன்பமுறப்பண்ணினுலும் வா யில்வந்தபடி வைதாலும் அல்லது சித்ரவதைசெய்தாலும் செய்யலாமென விடோபா ஓ-ஓ-இதென்ன பிராமணன் யாததிரைபோய்ச் சூத்திரனனதுபோ லிருக்கின்றதுநாம் வந்த எத்தனமென்ன பகவான் செய்தமாயமென்ன இனி இவளைச்சந்தோஷவார்த்தைகளாற் நிறுத்தியது வைராக் கியத்தைவிருத்திசெய்யலாமென்றன்னி ஓகோதையே வி வேகமில்லாபேதையே உன்னுடைய சவுந்தரியத்துக்குகந் தமணுளன் நானுகுமா உன்னை நான் மணம்புரிதல் சந்தி

ரனைக் கிரகணம் பிடிப்பதொக்கும் உன் காலமுதக் கிணை
யாகா வென்னை யிச்சிக்க உனக்கு லச்சையாயிருக்க வில்
லையா? சகல லட்சணங்களும் வாய்ந்து கண்டோர் மயங்
கும்படியான மேனியுள்ள நீ அவிலட்சணமாயிருக்கு
மென்னைக் கனவிலும் நினைக்கலாமா? விவேகமற்ற உன்
தாதை அறிவினத்தாலுன்னை எனக்கு மன்றல் செய்ய
யோசித்தார். நீ விவேக சிகாமணியாயிருந்தும் பிச்சைக்
காரனாகிய என்னுடன் லச்சை செய்யலாமா? யாராவது
வந்தால் கெக்கலிகொட்டிக் கரங்களைக்கொட்டி மந்தகாச
மும் பரிகாசமும் செய்வார்கள் வாயில் வந்தபடி வைவார்
கள் சீக்கிரம் வீட்டுக்குள் போ போவென் றுரைத்துப்
போக ருக்மாபாயி ஓ ஸ்வாமி! கற்புள்ள ஸ்திரீ இவனை
நமக்குகந்த கணவனெனத் தீர்மானித்தபின் அவன் மூட
னாய்த் தரித்திர முடையவனாய் ரோகியாய்க் குரூபியா
யிருந்தாலும் அவனையன்றி மற்றொருவன் மன்மதனுக்
கிணையானவனா யிருந்தாலும் இச்சை கொள்வாளா?
நளாங்கினி தன் கணவன் குஷ்டரோகியாய்க் குரூபியான
போதும் வெறுத்தாளா? அப்பா பீஷ்மரை இச்சித்து
அவர் மறுத்ததால் மரணமடைந்தாளன்றி மற்றோராட
வனைப் புணர்ந்தாளா? தமயந்தி நளமகாராஜனைப் போ
லவே தேவர்கள் வந்து பலவித தந்திரஞ்செய்தும் அந்த
நளமகாராஜனை யன்றித் தேவர்கள்மே லாசைகொண்
டாளா? இந்த ஞாயங்களெல்லாமறிந்த நான் என்னுயிர்
நீக்கினும் வேறோ ராடவனைத் தொடுவேனா. நாகவேத
னைக் குட்படுவேனாவென விடோபா ஓ தெய்வமே! என்
னைப் பழிக்காளாக்கி விட்டாயே, சுடாமற் சுட்டாயே,
இந்த வம்புக்கென்ன செய்வேன், எப்படியுய்வேன் என்று
துக்கித்துச் சற்றே கோபம் பிறந்து தன்னை மறந்து ஓ
அரிவையே! அறிவில்லாத் தெரிவையே என்னை நல்ல
தனத்தால் விடுகிறாயா? அல்லதென் சாபம் பெறுகிறாயா
வென்று கடுகடுத்துரைக்க ருக்மாபாயி அவர் பாதங்களிற்
றொழுது கண்ணீர் விட்டழுது, ஓ ஸ்வாமி! நல்லோர்களை
அண்டின புல்லோர்களும் மேன்மை யடைவார்களென்
கிறபடி தேவரீரை யடைந்த அடியாளைக் கருணையுடன்
இரட்சித்தாலும் அல்லது சாபமிட்டுச் சிட்சித்தாலும்
ஏற்றுக்கொள்ளுகிறேன். உமது சித்தம், எனது பாக்
கியம். என்று அடிபெயர்த்து வைக்காமல் மறுத்து ஓ
வென்றழ,

அதனால் விடோபா கோபங்கொண்டு தூஷணவார்த்
தைகள் விண்டு முகமறியா வென் காத்தைப் பிடித்த
மூதேவி உன்னையும் அடைவாளா சீதேவி நீலிக்கு நிமை
யிலே கண்ணீரென்கிற பழமொழிப்படி தாரை தாரை
யாகக் கண்ணீர் விட்டழுகிறாய் அடிக்கடி காலில் விழுகி
றாய் சீ நாயே துர்க்குணமுள்ள பேயேயென் றுரக்கக்
கூவிச்சொல்ல, இவ்வரவத்தால் சிதோபந்து மவர் மனைவி
யும் விழித்து வெளியிலோடி வந்து விடோபாவிடஞ்
சென்று எதிரில் நின்று ஓவேதமோதிய விப்பிரனே!
நீதிகளறிந்த சுப்பிரனே யாருமறியாமல் இப்பெண்ணை
வெளியிலழைத்து வரலாமா எங்களுக்குத் துன்பந்தர
லாமாவென அவ்வாக்கியத்தைக்கேட்ட விடோபர் செவி
களைக் கரங்களால் மூடிக்கொண்டு அரி அரி என்ன வார்த்
தையைச் சொன்னீர்கள் இப்பெண்ணை நானிச்சித்திருப்
பேனாகில் நொந்துவந்தவர் முகத்தைப்பார்க்காத லோபி
யும் குருவைக்கண்டெழாத கொடியனும் நம்பினேனென்
கிறவர்களைக் கைவிட்ட நானும் ஏழைகளோ டெதிர்த்த
கோழையும், ஆரியரோ டெதிர்த்துப்பேசு மசடனும்
கர்த்தனைத்துதியா கசடனும், தந்தையைக்கொன்ற சண்
டாளனும் பரஸ்திரீகமனஞ்செய்யும் பாவியும் சகோதரி
யைப்புணரும் சபலனும் பரபுருஷனை இச்சிக்கும் பாவை
யும் தெய்வத்தையிகழுந் தீயனும் தீயருறவை நாடினபேய
னும் குருவை நிந்தை செய்பவரோடு கூடினவனும் பேடி
யாயிருந்தும் பெண்ணை மணம்புரிந்த பிரட்டனும், ஒரு
வர் குடியைக்கெடுக்க நினைத்தவனும், பெரியோர்களின்
மனம்நடுங்கச் செய்தவனும், பிட்சை யெடுப்போரை
வைதவனும், ஐயமிடாம லுண்டவனும், அறிவுள்ளோர்
மேல் விரோதங் கொண்டவனும், குண்டினிவேலை செய்
பவனும், கோவதை செய்து வுய்பவனும் போகிற கதியிற்
போவேனென்றறைந்து சிதோபந்துவை நோக்கி, உம்
மால் இவ்வளவு மேன்மை பெற்றதுபோதும் இம்மட்டில்
என்னைவிட்டு விடுமையாவென் றவ்விடம் விட்டுப்போக
அப்போது சிதோபந்து ருக்மாபாயைப் பார்த்து, அம்மா
பதிவிரதாசிகாமணி விழித்திருந்தடுத்து விடாச்சலந்
தொடுத்து இவரைப் போகாமற்றடுத்து எனக்குவரும்
வியாகுலத்தைக்கெடுத்து என்னைப் புனிதனாக்கினையே
இனி நீ வீட்டிற்செல்லு நானிவருக்குச் சமாதான முரை
த்து அழைத்துக்கொண்டு வருகிறேனென்றறைந்து
விடோபாவை நோக்கி, அப்பா என்னருமை மருமகனே!
பகவான் உன் சொற்பனத்தில் வந்தேதாவ துரைத்தாரா
இல்லையாவென்று கேட்க, விடோபா பகவான் பிரத்தி
யட்சமாய் வந்தென்னை விவாகஞ்செய்துக் கொள்ளும்படி
யாய்ப் புகன்றாலும் செய்துக்கொள்ளமாட்டே னுமது
வேலையைப் பாருமையாவென் றதிசீக்கிரமாய் நடக்கச்

சீதோபந்து மறுத்து அப்பா விடோபா! கடவுள் வாக்கியத்தை மறுத்தல் மிகவுங் குற்றத்துக்கிடமாகும். நீ யறியாதவனல்ல பலதரஞ்சொல்லச் சந்தோஷமாய் வந்து ருக்மாபாயை மணந்து இச்சையான விடத்திற்குப் போகலாம் வாருமையாவென்று கரத்தைப் பிடித்திழுக்க விடோபா சீதோ பந்துக்கு வந்தனஞ்செய்து ஓ ஐயா! என்னுயிரைக் கேட்கினுந் தருவேன். இக்காரியத்துக்கு மாத்திரஞ் சம்மதப்படமாட்டேன் மன்னித்தருளுமையாவெனச் சீதோபந்து அப்பா விடோபா! உன்னால் என் மகளை இழந்துவிடலாயிற்று. ஏனென்றால், நீயென் புத்திரியை மணம்புரியாமல் மறுத்துப் போவாயானால், என் புதல்வி உடனே மரிப்பாள். நானும் பிராணனிழந்து விடுவேன். இதனால் உனக்கு ஸ்திரீஹத்தி பிர்மத்தி நேரிடும். ஹத்தியை மேற்கொண்டபின் உன் யாத்திரை பலிக்குமா? தபஞ்சிறக்குமா? மோட்சமடையக் கூடுமாவென இவ்வசனங்களைக்கேட்ட விடோபா சோபமுற்று ஓ கர்த்தனே! பரிசுத்தனே! அருளத்தனே! மிகு சுத்தனே! என் விரதத்தை இப்படிக் கெடுக்கலாமா? இவரென்னைப் போகாமற்றடுக்கலாமா? விடாச்சலந் தொடுக்கலாமா? சாபங் கொடுக்கலாமா? வென்றுருக அப்போது கடவுள் அசரீரியாய் ஓ விடோபா! இவ்வுத்தமர் புத்திரியை மணந்து சுகமுற்றிருப்பாய். என் வாக்கை மறுக்காதேயென்றுரைக்க, விடோபா! அவ்வாக்கியத்தைக்கேட்டு திடுக்கிட்டு, இனியென்னசெய்வேன் தெய்வமேயென் றசைவறநிற்கச் சீதோபந்து அருள் வாக்கைக் கேட்டுப்பொங்கி ஆனந்தந் தங்கி விடோபாவின் கரத்தைப்பிடித் தழைத்துக்கொண்டு வந்து இப்பேர்க்கொத்த பரம பக்தருக்கென் புத்திரியைக் கொடுக்க என்ன பாக்கியஞ் செய்தேனோ ருக்மாபாயி என்னதவஞ் செய்தாளோவென்று உடலம் பூரித்து இருவரையுஞ் சிங்காரித்துச் சகல பந்துக்களுடன் சந்தோஷமாய்க் கலியாணஞ்செய்து ஆனந்தமடைந்தார். விடோபா விவாகமான மூன்றுநாள் மாமனாரைப்பார்த்து கரங்களைச் சேர்த்து, ஓ ஐயா! வேண்டா மென்கிறவன் கழுத்தில் லிங்கங்கட்டியது போலவும், முறையோவென்று மறுப்பவனுக்கு முத்திரைப்போட்டது போலவும், எனக்கு மணஞ்செய்து மனமகிழ்ந்தீர். கடவுள் வாக்கியப்படியே முடிந்து விட்டது, என் யாத்திரை கெட்டது, பாதி யாத்திரை செய்வதற்குள் பந்தத்துக்குட்பட்டேன், வைராக்கியங்கெட்டேன், தடைசெய்யாது விடைகொடுத்தால் மற்ற யாத்திரை செய்து வருகிறேன் லாபம் பெறுகிறேனென் றுரைக்கச் சீதோபந்து மருகனை நம்பாக் குறையால் தானுங்கூடவே பிரயாணப்பட்டுப் பண்டரபுரம்-அஹோபலநரசிம்ஹம்-திருவேங்கடம்-கோகர்ணம்-கோலாபுரம்-ராமேசுவரம்-சிதம்பரம்-தட்சிண கைலாசம்-கண்டி-கதிர்காமம்-சுப்பிரமணியம்-தணிகாசலம்-திருக்கழுக்குன்றம்-மகாபலிபுரம் முதலான திவ்யஸ்தலங்களும் தரிசித்துப் புண்ணிய நதிகளில் ஸ்நானஞ்செய்து அலங்காவதியையடைந்தார்கள் விடோபா மாமனார் வீட்டையடைந்தநாளாநாள் மாமனாரைப் பணிந்து, ஓ ஐயா! என் தாய் தந்தையைப் பிரிந்து வெகுநாளாயிற்று விவாகமானதுந் தெரியாமற்போயிற்று. ஆதலால் நாளையத்தினம் ஆபேகாமுக்குப் பிரயாணமாக வேண்டுமெனச் சீதோபந்து அப்படியே யாகட்டுமப்பாவென்று மறுநாள்காலையில் சகலருடன் பிரயாணப்பட்டுச் சிலநாள் நடந்து பல நாடுகளைக்கடந்து ஆபேகாவைச்சேர்ந்து களிகூர்ந்து வீட்டிற்பிரவேசித்துச் சம்பந்தியை விசுவாசித்து மிகவும் நேசித்தார். விடோபா மாதா பிதாக்களின் மலரடிதனிற்பணிந்து அட்சிகளிரண்டையு மணிந்து பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்ப வுற்றார்.

சீதோபந்து மனைவியும் மகளும் வந்தனஞ்செய்து நின்றார்கள். தநயனைக்கண்ட கோவிந்த பண்டிதனும் நிரூபாயும் மகனைக் கட்டியணைத்து முத்தமிட்டு ஆனந்தமேலிட்டுத் தங்களை மறந்து பின்னுந் தெளிந்து அப்பா! மகனே! அழகான முகனே! உன்னுடன் வந்த இவர்கள் யாரப்பாவென்று கேட்கச் சீதோபந்து விடோபா யாத்திரை வந்ததும், தன் வீட்டில் கண் வளர்ந்ததும், பகவானிருவர் சொர்ப்பனத்திலும் வந்நுபகர்ந்ததும், விடோபா வெறுத்ததும், பகவான் அசரீரிவாக்கால் மறுத்ததும், விவாகமானதும், பின்னும் யாத்திரை செய்ததும், சவிஸ்தாரமாகவுரைக்க அதுகேட்ட நிரூபாயி ருக்மாபாயின் முக விலாசமும், அழகுமேனியும் அடக்கமொடுக்க முதலானவைகட்கு மெச்சி, வைதேகியைப் பார்த்தானந்தமடைந்த கௌசலைபோலவும், பாஞ்சாலியைப் பார்த்துப் பரிவுகொண்ட குந்தியைப்போலவும் சந்தோஷித்து மருகியையும் அவள் மாதாவையும் அன்புடன் ஆதரணைசெய்தாள். கோவிந்த பண்டிதன் சீதோபந்துக்கு வந்தனஞ்செய்து, ஓ உத்தமரே! உமது கிருபையாலல்லவா என்னருமைப் பாலகனைக் கண்குளிரப்பார்த்தேனுமக்கென்ன உபகாரஞ் செய்யப்போகிறேன், மகனைக்கண்ட களிப்பானுடக்கு வந்தனஞ் செய்யாமலிருந்தேன். இதைக்குறித்து மன்னித்தருளுமையாவெனச் சீதோபந்து கோவிந்த பண்டிதரைப்பணிந்து, உமதருமைப் புத்திரனுக்கு என் சிறு

மியைக்கொடுக்க என்னபாக்கியஞ் செய்தேனோ எதுதவஞ் செய்தேனோ கடவுள் அசரீரியாய்ப் பலருமறியத் திருவாய்மலர்ந்த திருவாக்கைக் கேட்டபோதடைந்த களிப்பிலும் உம்மைக்கண்ட களிப்பே அதிகமென் றுன்னினேன் பரம சாதுவாகிய உம்முடன் சகவாசஞ் செய்யக்கூட்டி வைத்தது குருகடாட்சம் என்றுரைத்துச் சகலரும் அன்யோன்யமாய்க் களிப்புற்றிருந்தார்கள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னுஞ் சொல்லத்தொடங்கினர்

விடோபாவின் யாத்திரை அத்தியாயம்
முற்றிற்று.

---

மூன்றுவது.

## சன்னியாசி விடோபா அத்தியாயம்.

---

வாருங்கள் சித்தர்களே ! இவ்விதமா யனைவருஞ் சிலநாள் ஒற்றுமையோடிருந்து சிதோபந்தும் அவர் மனைவியும் கோவிந்த பண்டிதரிடம் விடை பெற்றுக்கொண்டு ருக்மாபாயிக்குச் சொல்ல வேண்டிய புத்திமதிகளை யுரைத்து அலங்காவதியைச் சேர்ந்து களிகூர்ந்திருந்தார்கள் இங்கே விடோபா மணமாய் ஐந்தாறு வருஷங்களாகியும் ஓர் நாளும் ருக்மாபாயியைக் கண்ணெடுத்துப் பார்க்காமல் மாரனுக்குத் தோர்க்காமல் வேதாந்த சிரவணங்களாலும் சாது சங்கத்தாலும் வைராக்கியமடைந்து சம்சாரத்திலிருப்பதற்கிடைந்து, எப்போது சந்யாசியாவோம் எக்காலத்திற்றன்னை மறந்திருப்போமென் றேக்கங்கொண்டிருக்கிற நாளில், வருஷகாலம் - சீதளகாலம் - வேனிற்காலம் என்னும் மூன்று காலங்களுக்குச் சமானமான பால யவ்வன விருத்தாப்பிய மென்னும் மூன்று பருவங்களுந் தேகத்துக் குடையதுபோல கோவிந்த பண்டித னும் நீரூபாயும மூப்புப் பருவமடைந்தும் மழை குளிர் வெப்பமென்னும் மூன்று காலங்களிலும் ஒரே விதமாயிராநின்ற ககனத்தைப்போல, பால - எவ்வன - விர்த்தமென்னும் மூன்று பருவங்களும் தானாகிய ஆத்மாவுக்கில்லையென் றுறுதிக்கொண்டிருந்தும் ஜனித்தது மரிக்குமென்னுங் காரணத்தால், சதிபதிகளிருவரும் சமாதி னிஷ்டையிலிருந்தபடி தேகவியோகமடைந்து மீளாக்கதியடைந்தார்கள், விடோபா தாய் தந்தையிருவரும் கைவல்லிய மடைந்ததற்கு வியப்படைந்து செய்யவேண்டிய கிரிகைகளெல்லாஞ் செய்து முடித்துச் சிலநாளிருந்து ஒருநாள் தன் மனைவியை நோக்கி, ஒ பெண்ணே! நானென் தந்தையின் அஸ்திகளைக் கொண்டுபோய்க் கங்கையில் விடவேண்டும். நான் போனபின்னிங்கு நீ தனித்திருக்க மாட்டாய் ஆதலால் உன் தந்தையிடங் கொண்டு போய் விட்டுப் போகிறேனென் றறைந்து, தன் தந்தை சம்பாதித்த திரவியத்தைக் காண்பித்து உனக்கெவ்வளவு இச்சையோ அவ்வள வெடுத்துக்கொண்டு மற்றவைகளெல்லாம் இன்றையதினமே அதிதிகட் களிப்பாயென் றுரைக்க ருக்மாபாயி கணவன் கட்டளைப்படி அன்றைய தினமே வீடு முதலானவைகளையும் அதிதிகட் கர்ப்பணஞ் செய்து வணங்க, விடோபா ருக்மாபாயி மங்கிலியந்தவிர மற்றவைகளை யெல்லாந் தானஞ்செய்ததற் கதிசயித்து, இவளுத்தமியே யென்றுன்னி ருக்மாபாயை யழைத்துக் கொண்டு அஸ்திகளையு மேந்திக்கொண்டு பல நாடுகளைக் கடந்து அலங்காவதியையடைந்து மாமனார் வீட்டிற் பிரவேசித்து மாமன் மாமியைப்பூசித்துத் தன் கருத்தைப் புகலச் சிதோபந்து சிலநாளிருந்து போய்வாரு மப்பாவென ருக்மாபாயி தாய்தந்தையை வணங்கி, மாதாவுடன் தன் கொழுநனுடைய வைராக்கியத்தைப் பகர்ந்து அவர் நம்மைப்பிரிந்துபோனு லினிவருவ தசாத்தியம், ஆதலால் நாமனைவருங் கூடத்தொடர்ந்து போவதே உத்தமமென, இணைபிரியாமலிருக்க விடோபா சிதோபந்தை வணங்கிப் பன்முறை கங்கைக்குப்போக விடைகேட்டும், தனித்துப் போக விடைகொடுக்காமையால், சிந்தாக்கிரந்தனாய் ஒரு நாளிரவில் யோசிக்கின்றார். அதாவது நமது தாய் தந்தை மரித்துப் போனதைப் பிரத்தியட்சமா யறிந்திருந்தும் தேகமனித்தியமெனத் தெரிந்திருந்தும் மோட்சமடையும் மார்க்கத்தை நாடாமல் சத்குருவைத் தேடாமல் பல தேசங்களிலோடாமல், சற்சனசங்கத்தைக் கூடாமல், மேல்வரும் எமவாதனைக்கு வாடாமல் வெகுநாளாய்ச் சமுசாரத்திலிருந்து விட்டேனே ஆ கெட்டேனே யென தறிவீனத்தை என்னவென்று சொல்லுவேன் சஞ்சல மனதை எப்போது கொல்லுவேன் அகமமதைகளை எக்காலத்தில் வெல்லுவேன், அந்தர் முகநிஷ்டையி லெந்தி னஞ்செல்லுவேன், ஆ ஆ நானினி அரைக்கணமும் சம்சாரத்திலிருக்கலாகாது, அது சங்கதி சிதோபந்துக்குந் தெரிந்து அநித்தியத்தை நித்தியமென்று நம்பியிருக்கும் அறிவீனர்களன்றி வேறு மூடர்களுமுண்டா ? எல்லாச் சென்மங்களிலும் இந்த மானிட சென்மம் அரிதான தல்லவா? இந்த மனுஷப்பிறப்பெடுக்க என்ன தவஞ்செய்தேனோ இப்பிறவி யகன்றால் இனி யெப்பிறவி கிடைக்குமோ ? இப்பிறப்பே கிடைத்தாலும் பிறப்புபிறப்புக்குச்

சங்கடந் தவிர்வது முண்டா? இவ்வளவு மறியாமல்மேற்
பிறப்பில் மோட்சமடையலா மென்றுன்ன லென்ன மதி
கொண்டோ? இம்மதியனேகர்க் கென்ன காரணத்தா
லிருக்கின்றதோ? இதைத்தான் மாயையின் சாமர்த்திய
மென்றுரைக்கத்தகும்.

அல்லாமல் மானிடரை யேமாற்றிப் பொருள் பரிக்
கும் வேசிகளைப்போன்ற மாயையினது மாந்தர்களையேமா
ற்று மறலிக் குணவாக்கிப் பல ஜென்மங்களைக் கொடுத்
துச் சனன மரணமென்னும் சுழலிலகப்பட் டுழலும்படி
யாகச் செய்யும் சாமர்த்தியமே சாமர்த்தியம். மாயை
யைக் கடத்தல் அரிதென்று பெரியோர்க ளுரைப்பதி
னாலேயாம். அம்மம்மா! அநித்திய காரியத்தை மெய்
யென் றிருமாப்படைந்து எமனுக்கிரையாகும் பேதை
மானிடரைப்போல நானிருக்கலாமா? கோடிபொன்னளித்
தாலும் அரைநிமை உயிர்தரிப்ப தரிதென்ப தபத்தமா
மரணமடைவ தசத்தியமா? முற்பவப் புண்ணியபலத்
தாற் கிடைத்த மானுஷ ஆயுள்நாளை வீணாளாகக் கழிக்க
லாமா? அந்தோ! நாடு நகர் பெண்டு பிள்ளை பண்டம்
பதார்த்தம் முதலானதும் கூட வருவதுண்டா? மறு
பிறப்புக்காவது உதவியாகுமா ஏன் அஞ்ஞான புத்தியா
லல்லவோ மெஞ்ஞானத்தைத் தேடாமல் பொய்ஞானத்தி
லிருந்துவிட்டேனென்று பற்பல யோசனைசெய்து தன்
மனைவியை விளித்து ஓ பெண்ணே! இனியெனக் கின்
வாழ்க்கை வேண்டியதில்லை. நான் சந்நியாசியாக வெண்
ணங்கொண்டிருக்கிறேன். வஞ்சகஞ் செய்துப் போகும்
கொஞ்ச மனிதரைப்போல உனக்குப் புலப்படுத்தாமல்
போகக்கூடாதென் றெண்ணத்தை யுரைத்தேன். ஆத
லால் சம்மதமானதே உன் தந்தை தாயாரிடம் வினவி, என்
மனதின்படி போக விடை கொண்டு வாவென்றறைய
ருக்மாபாயி வாக்கை மறுத்துரைக்கக் கூடாக் கொள்கை
யால் மகா பாக்கியமென்று வணங்கித் தன் தாய் தந்தை
யருக்குரைத்து வாட்டமுகத்துடன் நின்றாள்.

சிதோபந்து விடோபாவை நோக்கி, அப்பா மரு
மகனே இளமைப்பருவமுள்ள நீ இப்போதே சன்னியாசி
யாக வெண்ணங்கொள்ளலாமா பிரியமுள்ள மனைவியா
ளிப்படியும் விள்ளலாமா என்று எழுபத்தைந்து வயதுக்கு
மேல் சந்நியாசியாகவேண்டு மென்று சாஸ்திரம் முறை
யிடுகிற தஃதறிந்த நீ இப்படி செய்யக்கூடுமா எவ்வர்ன
காலத்தில் இந்திரியங்களிறத்தலென்பதுகூடாது. ஒழுக்க
மல்ல. சூதாடல் வாதாடல் முன்னம் இனிப்பாகத் தோன்
றிப் பின்னெப்படி இடையூறுகட் கிடமுண்டாகுமோ
அதுபோலவும், கோபத்தால் யாத்திரைபோய் தாபத்தை
யடைவ தெப்படியோ அதுபோலவும், சன்யாசமாகும்
போது வெகு சந்தோஷமாகவே யிருக்கும். ஆனபின்
இந்திரிய சேஷ்டையாலும் அந்தக்கரணசேஷ்டையாலும்
வாட்டமடைய நேரிடும். நனவிற் சுழுப்திநிலையை யடைந்
தவனே சன்யாசியென்றுரைக்கப்படும். காஷாய வஸ்திரங்
களா லலங்கரிக்கப்படுவது சன்யாசமல்ல மனுபாசங்களை
மாய்ப்பதே சன்யாசமாகும். பிரமக்ஞானியானதால் லே
சானதென்று நினையாதே. திரிவுலகத்தரி லொரு க்ஞானி
யென்கிற பெரியோர்கள் வாக்கியத்தின் மர்மத்தை நன்று
யூகித்துப் பாரும் பூசையில் மானச பூசையே சிரேஷ்ட
மானதுபோல சன்யாசிகளில் மனநாச சன்யாசியே சிரே
ஷ்டமுள்ளவனாகும். மாயையைச் செயித்த நாரதனும்
ஓர் மங்கையால் பங்கமுற்றான். பிரமசிருஷ்டிக் கெதிர்
சிருஷ்டிசெய்த விசுவாமித்திரனும் ஒரு கோதையால்
வேதையுற்றான் சுரகுருவான பிரகஸ்பதியும் அசுரர் குரு
வான சுக்கிராச்சாரியும மாதர்களாசைக் குள்ளானார்கள்
மாயாதீதரான திரிமூர்த்திகளும் அரிவையராசைக்குள்
சிக்கினார்கள். எமனைச் செயித்தாலும் செயிக்கலாமன்றி
மாரனைச் செயித்தல் மிகவுந் துர்லபம் சம்சாரத்தி லிருந்
துக்கொண்டே சிரேஷ்டமடைவது யோக்கியமல்லவா
நீர் தெரியாதவரல்ல பலதரம் நான்சொல்லவென்கிற பல
வாக்கியங்களுரைக்கும் மாமனாரை விடோபா வணங்கி
ஓ ஐயா! யுத்தகளத்திற் சென்ற வீரன் பகைவரை
செயிக்கக்கூடாமற் போனாலும் புறங்காட்டி யோடாமல்
போர்புரிந்து மரணமடைந்து வீரசொர்க்க மடைவது
போல் அடியேன் யதியானபின் தன்னை மறக்காச் சஞ்
சலனாயிருந்தாலும் அகக்கருவி புறக்கருவிகளுக் கிடங்
கொடுக்காமல் மனமென்னும பகைவனை யெதிர்த்துவெதி
ர்த்து மேன்மையையே யடைவன் பசியால் வாட்டமுற்ற
சிங்கமானது அருகிலிருக்கும் சிறு கலைமானைக் கொன்று
புசிக்காமல் யானையைத் தேடுவதுபோல விகாரமடைந்த
நான்பேரின்பங் கிட்டாமற் போனாலும் அதையே நாடி
யிருப்பேனன்றிச் சிற்றின்பத்தைக் கோருவேனா மலத்
தைப் பரிபளமென்று பூசிக்கொள்ளும் அறிவீனனைப்
போலத் துர்க்கந்தம் வீசும் தோகையர் போகத்தைக் கன
விலுஞ் சிந்திப்பேனா வென்கிற பல மொழிகள் புகன்று,
அஸ்திகளேந்திக்கொண்டு மாமன் மாமியாரைப் பணிந்து
வைராக்கியத்தாற் றுணிந்து யார் மறுத்தாலுங் கேட்கா
மல் வெறுத்து வாரணாசியை நோக்கிப் போகலுற்றார்.

அதனல் ருக்மாபாயி அலக்கணுற் றழுதுக்கொண்
டே மணுளன் பின் தொடர்ந் தோடலுற்றுள். தனேயை
தலேவிரிகோலமா யோடுவதைக்கண்ட தாயும் தந்தையுட
பின்தொடர்ந்தோடி மனமுருகிவாடி விடோபாவுக் கனந்
தம் கபவார்த்தைகளுரைத்துப் போகாமல் மறுத்தார்
கள். விடோபா அவ்வசனங்களைக் கேட்காமல் சற்றுந்
தங்காமல்போக ருக்மாபாயி தன் கொழுனன் றுள்களில்
விழ்ந்து பலதரந்தாழ்ந்து ஓ என் பிராணநாயகா! உம
மைப்பிரிந் துயிருடனிருக்க வென்னலாகுமா? ஒருவரா
லென்குறை போகுமாவென்று கறைந்தழத் தொடங்கி
னுள். விடோபா, ஓ பெண்ணே! நீ பதிவாக்கியங் கடக்
காச் சதியானல் என் வாக்கைத் தள்ளாமல் மறுத்தோர்
மொழி விள்ளாமல், தந்தையின்பா லிருவென்றுரைந்து
அதி வேகமாய் நடந்து மறைந்தார். ருக்மாபாயி அவ்
வாக்கியத்தாற் கட்டுப்பட்டு ஸ்மரணைகெட்டு நிலத்திற்
சாய்ந்து மூர்ச்சையடைந்தாள். அது தெரிந்த தாயுந்
தந்தையும் அலக்கணுற்று ருக்மாபாயிக் குபசாரணைசெய்
தெழுப்ப, ருக்மாபாயி மூர்ச்சை தெளிந்தெழுந்து தந்
தையின் றுளில்விழுந்து இனியென்ன செய்வேனென்
றலறியழுது கடவுளைத்தொழுது தன் பிராணனை விடுவ
தற்கு முயற்சிகொண்டாள். அதனல் சிதோபந்து மிக
வுந்துக்கித்து, சீ அம்மா! பதிவிரதா சிரோன்மணி
விருத்தாப்பியப் பருவமுள்ள எங்களைப் பரதவிக்கவிட்டு
நீ உயிர் விடுத்தால் நாங்களும் உயிர் பிரிந்து பிராணனை
விடமாட்டோமா இத்தோஷம் உன்மணுளனைச்சேராதா
இப்படி கணவனுக்குக் கர்மம் சம்பவிக்கச்செய்யும காந்
தை யுத்தமி யாவளாவென, ருக்மாபாயி ஓ என் தந்தை
யே! கணவனைப்பிரிந்த நானுயிருட னிருப்பதனுற் பிர
யோசனமேது பிராணநாயகனைப் பார்க்காமல் நானிருக்
கவேமாட்டேன். அவரைத் தேடிப்போகின்றேனென்று
நடக்கச் சிதோபந்து மறுத்து, ஓ என்னரும் புதல்வியே
இறந்துபோன சத்தியவானை விரதத்தா லெழுப்பிய
சாவித்திரியைப்போல நீ சிலனுள் கௌரி விரதத்தை
அனுட்டித்து வருவாயானல் உனது கணவன் உன்பா
லடைவதற்குத் தடையில்லவே யில்லை. பெண்கள் வை
ராக்கியத்தின்முன் ஆடவர் வைராக்கியம் அணுவுக்கிணை
யாகும். இறந்தவனை எழுப்பிய விரதம் கணவனைக் கை
வசப்படுத்த மாட்டாதா ஸ்ரீ பரமசிவனை மணஞ்செய்ய
ஆசித்த பார்வதியும், ஸ்ரீ கிருஷ்ணரை ஆசித்த ருக்மணி
யும் கௌரிவிரதத்தாலல்லவோ கோரிக்கை வீடேறக்
களிப்புற்றுர்கள். அவ்விரதத்தை நீயு மனுஷ்டிப்பாயா
னல் அகத்திய முன்கொழுனன் இங்கடைந்து உன் மன
துக் கிசைந்திருப்பான் என்று விரதமிருக்குந் தன்மை
யையுரைக்க ருக்மாபாயி சற்றேயோசித்து நாமிப்போது
கணவன்பின் தொடர்வதால் பதி வாக்கியத்தைக் கடந்
தவளாவதன்றி அவருட னன்புற்றிருப்பதற்கும் கூடாது
விரதமிருந்து மணுளனைச் சேர்வதே உத்தமமென்
றுறுதிகொண்டு விரதாநுஷ்டானத்தில் பசுமரத்தாணி
போல் விருப்புற்றிருந்து காலங்கழிக்கத்தொடங்கினுள்.
விடோபாவோ அலங்காவதியைவிட்டு நீங்கிப்பலகாடுகளை
யும் நாடுகளையுந்தாண்டி வாரணுசியை யடைந்து கங்கை
யில் ஸ்நானஞ்செய்து மாதா பிதாக்களின் அஸ்திகளைப்
பாகீரதியில் விடுத்துக் காசி விசுவநாதரைப் பணிந்து,
ஞானசாரியரைநாடிச் சிலனுள்தேடி அங்கு திகம்பராகி
யும், மாயா தீதராகியும், தேகஸ்மரணை யிறந்தவராகியும்
பிர்மானந்தம் நிறைந்தவராகியும் விளங்காநின்ற ஸ்ரீ பாத
ஸ்வாமிகளைக்கண்டு ஆனந்தங் கொண்டு அவரை வலம்
வந்து பணிந்து அவர் பாதங்களிற் றன் திருநயனங்
களை யணிந்து, ஓ சாந்தனே! உபசாந்தனே! ஞான
வேந்தனே! வேதவேதாந்தனே! நாதநாதாந்தனே!
யோகாந்தனே! ஏகாந்தனே! எனத்தோத்திரஞ்செய்து
அழுதகண்ணுந் தொழுதகையுமாய் நிற்கும் விடோபா
வை, ஸ்ரீ பாதஸ்வாமிகள் அருட்கண்ணுற்பார்த்து மார்
புடன் சேர்த்து ஓ பவபந்தநாசனே! அருள்முக விலா
சனே! என்னைப் பரப்பிர்மமாய்ப் பாவித்து அன்புடன்
சேவித்துப் பலதரமேன் தொழுகிறுய் கண்ணீர்விட்டே
னழுகிறுய் உனக்கென்ன குறைநேரிட்டது உரைப்பா
யப்பாவென, அவ்வாக்கியத்தைக்கேட்ட விடோபா களிக்
கடலிற் படிந்தவனுய் ஓ என் சத்குருநாதனே! மெய்ஞ்
ஞான போதனே! பவப்பிணிக் கயர்ந்துவந்து உமது
பக்கலடைந்தேன் பவசாகரத்தைக் கடந்தேன் முற்றினு
மென்னைக் காப்பாற்றுமையா களங்கமில்லா துய்யா
வென்று போற்ற ஸ்ரீ பாதஸ்வாமிகள் இம்மானிட ஜென்
மத்தா லுனக்கென்ன அவஸ்தை நேரிட்டது இதோ
சகலரும் சந்தோஷமாய் விஷயபோகங்களை அநுப
வித்துக்கொண்டு இதுவே மேலான போகமென விண்டு
களிப்புற்றிருக்க நீ மாத்திரம் துக்கமென்றேன் வெறுப்
புற்றுயென,

விடோபா ஓ ஸ்வாமி! நிஷ்காமி விஷங்களென்னுந்
தேள்களும் இந்திரியங்களென்னும் சர்ப்பங்களும், காமக்
குரோதங்களென்னும் வியாக்கிரங்களும், எண்ணங்க
ளென்னும் மந்திகளும், அகங்காரமென்னும் யானைகளும்
அபிமானமென்னும் முட்பன்றிகளும், இச்சையென்னும்
கோநாய்களும், அஞ்ஞானமென்னும் இருட் கூட்டங்

களுஞ் சூழ்ந்த தேகமென்னும் காட்டிலகப் பட்டுக் கொண்டு தப்பிப்போக வழியில்லாமல் வெகுகாலமாய் வருத்த முற்றிருக்கு மென்னை இக்கணமே தேவரீர் பாதுகாக்க வேண்டுமென்று பணிய, ஸ்ரீ பாதஸ்வாமிகள் அப்பா இவ்விஷயேந்திரிய காணுதி மிருகங்களைக் கண்டிக்குங் கடகமும் அஞ்ஞானவிருளை நீக்கும் மார்க்கமும் அறியாமல் அதையருளும் தேசிகாஸ்வாமியை நானே வெகு நாளாய்த் தேடித்திரிகிறேன் என்னைப்போல் நீயும் நொந்து வந்தாயோ, நீங்காஜயங் தந்தாயோ, இனி இதைப் பகுத்துரைக்காமல் வேறேதேனுங் கேள் தருகிறேன் என விடோபா அகக்கரண புறக்கரணங்களையொடுக்கும் உபாயமொன்று மாத்திரம் கிருபை கூர்ந்தால் எல்லாங் கொடுத்ததேயாகும். ஆதலால் ஏழையை வருத்தும் இந்திரியங்களைவெல்லும் அந்தக்கரணங்களைக் கொல்லும் தந்திர வித்தையை மாத்திரம் தந்தருளுமையாவென்று வணங்க, ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ பரிசுத்தனே ! பரமபக்தனே ! எனக்குத் தெரிந்த மேலான ராஜவசிய மந்திர முபதேசிக்கின்றேன் அதை வோர் மண்டலம் ஜபிப்பாயானல் இராஜன்வசமாவான் அதனுல் ஸ்திரீ போகங்களினுலும் தண்டிகை சவாரிகளாலும், ருசியான போகங்களாலும் மேலான யோகங்களாலும் சுகமுற்றிருக்கலாம். இதைவிடுத்துச் சன்யாசத்தையடுத்துச் சங்கடமே னடைகிறுயென, விடோபா, அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுச்சன், புரூரவன், கார்த்தவீரியன் என்னும் சக்ரவர்த்திக ளறுவரும் பட்டபாட்டைச் சாஸ்திரங்களி லறிந்ததென்ன பிரத்தியட்சமாய் அனேகராஜர்களடையும் துன்பத்தையுங்கண்ட நான் இராஜபோகத்தை வேண்டுவனே ? மோட்ச விருப்பமுள்ளோர்விஷயபோகத்தின்மே லிச்சை கொள்வாரோவென,

ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ வைராக்கியனே! போகத்தை யிகழ்ந்த அபாக்கியனே! எக்கியபல சித்திமந்திர முரைக்கின்றேன் இதனை யில்லறத்தி லிருந்துக் கொண்டே யாகங்கள் செய்து மேலான சொர்க்கத்தை யடைந்து ரம்பாமிர்தாதி போகங்களாற் சுகித்திருக்கலாம் அதை நீக்கி இறந்துண்ணும் யதிதி ஆசிரமத்தையேன் கோருகின்றுயென, விடோபாதேவர்களுக்கதிபதியான தேவேந்திரன் ஓர் காலத்தில் பிரமஹத்திக்கயர்ந்து தண்டாமரைத் தண்டின் நூலில் நுழைந்திருந் தலக்கணுற்று மேகவாகனயிருந்தும் தனது நந்தவனத்துக்கு ஜலமின்றி வாட்டமுற்று இருந்ததன்றி இராக்கதர்களால் பலதரம் பிடிக்கப்பட்டு இந்திரபதவியை விட்டு ஓடி வொளித்திருந்தானென்று சாஸ்திரங்களில் முறையிடுவதன்றி நான் பொன்னுலகை யாசிப்பேனேவென, ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ சீலனே! தவபரிபாலனே வேதங்கள் புகழும் அஷ்டாட்சரத்தை யுபதேசிக்கின்றேன் அதைச்சிலனுள் தியானஞ்செய்து வருவாயானல் ஸ்ரீமந்நாராயணர்வாசஸ்தானமாகிய பரமபதத்தை யடையலாம் இந்தப் பரமாம்சத்தை யேன் வாஞ்சித்தாயென, விடோபா ஓமாதவனே! அஞ்ஞானவிருளை நீக்குமாதவனே பரமபதமடைந்த ஜெய விஜயாள் ஸனக சனந்தனாதிகளால் சாபமடைந்து இராட்சச சன்மமெடுத்து துன்மார்க்கரெனப் பேர்பெற்றதால் திருமால் பதவியும் வேண்டிலேனென பாதஸ்வாமிகள் அரியயனுக் தேடிக்காணுப் பரமசிவனுர் வாஸஸ்தானமாகிய கைலாசத்தை யடையச்செய்யும் பஞ்சாட்சரத்தைப் போதிக்கின்றேன் இதனுல் பரம பக்தனுகலாமென விடோபா கைலாசவாசராகிய பரமசிவனுர் பிரமஹத்திக்கயர்ந்து பிச்சையெடுத் துழன்றதாலும், பார்வதி தட்சகப்பிரமாவின் யாகத்தில் வீழ்ந்திறந்து பர்வதராஜனுக்கு மகளானதாலும் சிவனுர் பதமும் வேண்டிலேனென ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ புண்ணியவானே ! அஜபா மந்திரமும் யோகப்பயிற்சியு முணர்த்துகின்றேன் அதனுல் சித்தபுருஷனுகி வேண்டிய சித்திகளையடைந்து கற்பாந்தரங்களிலும் நசியாத்தூலம்படைத் திருக்கலாமென விடோபா சாகாமற் கற்பதேகல்வி செத்தாற் பிறவாமலிருப்பதே காட்சியானுலுஞ்சூக்ஷ்மத்தில் மோட்சமார்க்கமுணர்த்தும் ஞானதேசிகராகிய தேவரீரிருக்க யோகப் பயிற்சியைக் கற்றுக் கொண்டு பிராணனைக் கும்பித்து ஸ்தம்பித்துப் பிரத்தியட்ச எமவாதைக் குட்பட்டு மரணகெட்டுத் தறிபோலிருப்பதைப்பார்க்கிலும் பக்தனுவதே மேன்மையாதலாலும் எத்தனையுகங்க ளிக்காயத் தோடிருக்கினும் அநித்தியமே யாதலாலும் தேக முத்தியடையக் கூடாமையாலும் அசத்தியப் பிரபஞ்சம் மெச்சும் காரடிவித்தைக்குச் சமானமான பல சித்திகளும் அகத்தை வளர்க்கும் மகத்துவ மானதாலும் அறுபத்துநாலு சித்தியும் முத்தியைக் கொடுக்காமையாலும தாமசாதிகளை நீக்கும் மோட்சமார்க்கமே அனுக்கிரகம் புரியுமையாவென்று பணிய ஸ்ரீபாதஸ்வாமிகள் ஓ புண்ணியவானே ! வேதத்தில் முறையிடும் மந்திரங்களையும் தந்திரங்களையும் பதங்களையும் இதங்களையும் நீக்கி விடாமல் வேறேதனைக் குபதேசிப்பேன் இதற்குமேலானதெனக்குத் தெரியாது வேறே ஆசானைத் தேடென்றுரைத்து, மௌனநாட்டத்தையடைந்திருந்தார் கேட்டீர்களோ சித்தர்களே யென்று நாபாஜி சித்தர் பின்னுஞ் சொல்லுவார்.

சன்னியாசி விடோபா அத்தியாயம் முற்றிற்று.

---

நான்காவது

## விடோபா ஞானோபதேச அத்தியாயம்.



கேளுங்கள் சித்தர்களே! இப்படி ஸ்ரீ பாதஸ்வாமிகள் மௌனமுற்றிருக்க, விடோபா அவரை இணைபிரியாமல் பலநாள் தொடர்ந்து ஓர்நாள் சோபமிகுந்து அவரை வணங்கி ஓ என் சத்குருவே! உம்மையன்றிவேறோ ராசானை சரணமடையேன், காரணம் பதிவிரதையிற் சிறந்த உத்தமபத்தினி கணவனையன்றி மற்றைத் திரிமூர்த்திகள் வந்தாலும் வணங்குவா ளன்றி இணங்குவாளா? காவலன் அயோக்கியனு யிருந்தாலும் யோக்கியனை நாடுவாளா? நாடாள். அதுபோல உத்தமன் ஓர் அடிகளை யடைந்து இவருக்கு ஞானமார்க்கந் தெரியவில்லை யோக்கியரு மல்லவென்று வேறு குருவைத் தேடான், தேடுவதினுல் மோட்ச லட்சுமியைக் கூடான் தன் பதி என்ன துர்க்குணமுடையவனுனுலும் அவனைச் சகதீசுவரனுகப் பாவிக்கும் விரதசீலி யல்லவோ மேன்மையை யடைவாள்? அவ்வுத்தமி யன்றி மற்ற விபசார மாதருக்கு இருணரகன்றி இகபரமும் கிட்டுமோ ஓ என்னையனே! மூன்று சங்க வருஷம் இராஜரீகஞ் செய்து வேதோபநிஷ தபங்களும் இயற்றிய திருச்சங்கு மகாராஜன் தனக்காதி குருவான வசிஷ்டரை வெறுத்து விசுவாமித்திரரை யடுத்துச் சண்டாளனுய்த் தான்நாடிய சொர்க்கத்துக்குஞ் செல்லாமல் இகலோகத்திலும் நில்லாமல் தலைகீழாயிருக்கும் அவாந்திரலோகத்தில் அயர்ந்திருப்பான். இச்சூசனையை யறிந்த இவ்வடியேன் நீரே எனக் குகந்த ஆரியனென்றும் உமதடைக்கலம் புகுந்த பின் உம்மையன்றி வேறோ ரடிகட் கடிமையாவேனோ என்னையேன் பரிசோதிக்கின்றீர் உமக்குத் தெரிந்திருக்கும் பிரமஞானத்தைப் போதித்து அஞ்ஞானமனதைச் சோதித்து, மமதகங்காரங்க ளறும்படியாகவும், பிர்மானந்த வாரியில் மூழ்கும்படி யாகவும், தேகஸ்மரணை யிறந்து திரியும்படி யாகவும், கருணைகூர்ந்தாட்கொள்ளுமையா வென் றிரந்து கூறும் விடோபாவை ஸ்ரீபாதஸ்வாமிகள் அன்புடன் பார்த்து மார்புடன் சேர்த்து ஓ சிலனே! உன்னைப்போலொத்த தீவிரவைராக்கிய முடையவனையே நான் தேடித்திரிகின்றேன் ஆதலால் நீ விவாகமான கிரகஸ்தனு விஷயபோக மறியாப் பிரமசாரியா வென்று கேட்க விடோபா கிரகஸ்த னென்றுல் உபதேசங் கிடைக்கத் தடையாகு மென்றும் நிச்சயமாய்த் தாம் ஸ்திரீ போகமறியா பிர்மசாரியே யாமென் றுரைக்க ஸ்ரீபாதஸ்வாமிகள் உன் தாய் தந்தை ஜீவித்திருக்கிறார்களா வென விடோபா யில்லை யென ஸ்ரீபாதஸ்வாமிகள் சந்தோஷசித்தராய் ஓ விடோபா! உனக்கு வேதோபநிஷதமான பிரமோபதேசஞ் செய்கிறேன், ஏக மனதுடன் கேட்பாயாக வென்று அஸ்தமஸ்த சையோகஞ் செய்து பிராணவாதி மந்திரங்களும் மேன்மையாகியும் அசரீரி வாக்கிய மாகியும், பல சித்திகளை லேசில் கொடுப்பதாகியும், நிர்க்குணத் தியானத்துக் குகந்ததாகியும், அத்வைத மந்திரமாகியும், வேதமுடிவாகியும், தேகபீடைகளை யெரிப்பதாகியும், மனோசஞ்சலங்களை யகற்றுவ தாகியும், சதுர்வேதங்க ளுண்டாவதற்குக் காரணமாகியும், தானே பிர்ம மென்னுஞ் சந்தோஷத்தை யளிப்பதாகியும் மூவரும் முனிவரும் சிந்திப்பதாகியும், அழியாப் பதவியை யளிப்ப தாகியும், திரிபதார்த்தங்களாற் பூர்த்தியடைந்த தாகியும், தன்னை மறக்கும் ஐக்ய பதத்தைக் காட்டுவதாகியும், சைவ வைஷ்ணவாதி சன் மதங்களை வாட்டுவதாகியும், அஞ்ஞான சந்தேக விபரீதங்களை நீக்குவதாகியும், மமதாகங்காரங்களை அடியோடும் போக்குவதாகியும், எல்லையற்ற அகண்டானந்த வாழ்வைத் தருவதாகியும், தியானித்தவனைச் சிரேஷ்டமானசம்பாவனையிற் கொண்டு வருவதாகியும் விளங்காநின்ற மகா வாக்கியத்தை உபதேசஞ் செய்தருளினர். விடோபா தேசிகஸ்வாமிகளின் திருத்தாட் டாமரைகளிற்றொழுது ஓ என்னையாவே! இவ்வற்புதமான மகா வாக்கியத்தின் மர்மத்தை விரித்துரைத் தாட்கொள்ளுமையா வென்று பணிய, ஸ்ரீ பாதஸ்வாமிகள் நமக் குகந்த மாணுக்க னிவனேயாகும் இப்பேர்க்கொத்த அதிதீவிர வைராக்கிய முடையவனுக் ககத்தியம் சொல்ல வேண்டுமென்று உன்னி அப்பா விடோபா! நீ மிகவும் புண்ணியவா னுனதால் உனக்கிந்த மகா வாக்கியார்த்தஞ் சொல்லத் தொடங்கினேன் ஏனெனில் பன்னிரெண் டாண்டு பரிசோதித்த பின்பே பெரியோர்களின் மர்மம் வெளிப்படுத்துவார்கள் பாறையின்மேல் விதைபோட்டாற் போல் * அபக்குவர்க் குரைக்கின் அபலமாய்ப் போவதன்றி உரைப்பவர்க் காயாசமும் கேட்பவர்க்

* வாசிஷ்டம் - இயற்குணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம். பிர்மம் நீ யென்னல்வேண்டும் வியற் புறுமாசையி லுழல்வார்க் கிவ்வாறேதில் வீழாத தீ நரகத்தில் வீழ்ந்ததாகும்.

கதிோகதியும் பலமாகும நீயிதற்குகந்தவ னென் றுரைக் கச் சம்மதித்தேன் நீ செய்த பாக்கியமே பாக்கியம், வசமனதுடம் கேட்பாயாக, மறப்பின்றி மனதிற் றரிப் பாயாக அதேதெனில் ஞானமே பிர்ம மென்னும் ஓர் மொழியி னர்த்தமே இருக்குவேதம் முறையிடுகின்றது வேதபுருஷனல் நாலு வாக்கியங்களுக்குறை நாலுவேதங் களால் விரித் துரைத்தும் அதற் கர்த்தமாகாமல் தயக்க முற்றுன தேவர்களுக்குக் காரணகுருவான பிரகஸ்பதி யென்பவரும் மற்றரிஷிகளும் ஞானகாண்டத்தில் தன்னு லானமட்டும மகா வாக்கியார்த்தத்தை விரித்துரைத்து முடிவுபெறுமல் தியக்கமுற்றூர்கள் அப்பேர்க் கொத்த வாக்கிய லட்சணத்தை என்னுலுரைக்கப் போமோ ஆயி னும் என தாசாரியரருளோ டுரைக்க நான் சிரவணஞ் செய்தபடி விரித் துரைக்காமல் சங்கிரகமாகப் புகல் கின்றேன் அதாவது ஞானமென்பது ஆத்மா, பிர்ம மென்பது பரமாத்மா, ஞானஸ்வரூபமே பிர்ம மென் றுரைக்கப் படுவதே இதனந்தார்த்த மென் றுரைக்க விடோபா ஞானமென்பதெது பிரமமென்பதெது ஆத் மாவே பரமாத்மா வான தெவ்வண்ணம் விரித்துரையு மையாவென்று கேட்க, ஸ்ரீ பாதஸ்வாமிகள் அப்பா விடோபா! ஞானமென்பது விஷயங்களையறியும் இந்திரி யங்களையும், இந்திரியங்களை யறியும் அந்தக் காணங்களை யும், அந்தக்காணங்களை யறியும் சிதாபாசனையும் இதுக ளெல்லா மொடுங்கும் அவித்தையும் சாட்சியாயிருந் தறிவ தெதுவோ அதையே ஞான மென்றும் இப்படியே சமஸ்த வஸ்துக்களிலு மிருந்தறியும் சர்வசாட்சியே பிர்ம மென்றும் வேதம் முறையிடுகின்றது.

அன்றிக் கூடஸ்தன் பிரத்யேகாத்மா திருக்குரோ தம, சைதன்யம், சித்து, சத்து, ஆனந்தம், நித்தியம், நிர்மலம, நிர்க்குணம், நிர்விகாரம், நிரஞ்சனம் என் கிற பல நாமங்களுக் காதாரமாகிய சாட்சியே ஞானமே ஆத்மா வென்றும், பரப்பிரமம் பரிபூரணமே பராபரம், பரமேசுவரம, பரஞ்சோதி, பராத்பரம், நிரூபம், நிர் நாமம், நிஷ்களங்கம், அசலம், அகண்டாகண்டம், அட் சயம், ஆதி, அனுதி என்கிற பல நாமங்களுக்காதேய மாகிய சர்வசாட்சியாகிய பிர்மமே பரமாத்மாவென்றும் ஈசுவர வாக்கிய மிருக்கின்றதென் றருள, விடோபா ஓ ஸ்வாமி! ஓர் தேகத்திலிருக்கும் காட்சியாகிய ஆத்மா சர்வ சாட்சியாகிய பரமாத்மா எப்படி யாகுமென்று சங்கைசெய்ய ஸ்ரீபாதஸ்வாமிகள் திரி தீவட்டி யென்று நாமம் வேறு பட்டாலும் பிரகாச மொன்று யிருப்பது போல் ஆத்ம பரமாத்மா வென்கிற நாமத்தால் வேறு படாமல் சுபாவ மொன்றுகவே யிருக்கிறது எப்படி யென்றல் பெரியதாயிருப்பதால் வாரி யென்றும் சிறிய தாயிருப்பதால் மடுவென்றும் பெரியதா யிருப்பதால் நதி யென்றும் சிறியதாயிருப்பதால் வோடையென்றும் பல மனிதர்களுக்குக் கூட்டமென்றும் ஒரு மானிடனுக்கு மனுஷனென்றும் பல விருட்சங்களுக்குத் தோப்பென் றும் ஓர் தருவுக்கு விருட்சமென்றும் நாமம் விகாரப்பட் டதால் ஜல மனித விருட்ச பாவம் வேறுபடாமலே ஏக பாவமா யிருப்பதுபோல அனேக சரீரங்களைக் குறித்து சர்வசாட்சி பரமாத்மா வென்றும் ஓர் சரீரத்தைக் குறித் துச் சர்வசாட்சி ஆத்மாவென்றும் உபாதி பேதத்தால் நாமம் வேறுபட்டதே யன்றி ஆத்மா பரமாத்மாக்களில் சற்றும் பேதமேயில்லை பரமாத்மா சர்வ ஜீவாத்மா வென் கிற வேதப்பிரமாணமு மிருப்பதன்றி ஆத்ம பரமாத்மா வில் பேதப்படுத்தினவன் ரவ்ரவாதி நரகத்தை யடைவா னென்று வியாசர் விஷ்ணு புராணத்திலும் இவ்வியாசர் தந்தைக்குப் பாட்டனை வசிஷ்டர் வாசிஷ்டத்திலும் வா ல்மீகர் அத்தியாத்மீக ராமாயணத்திலும் மகாவிஷ்ணுபக வத்கீதை உத்தரகீதையிலும் ருத்திரன் சிவகீதையிலும் பிர்மா பிர்மகீதையிலும் ஸ்ரீராமர் ராமகீதையிலும் திரு வாய் மலர்ந்திருப்பதன்றிச் சுகப்பிர்ம ரிஷிக்கு நாரதரும் ஸனக சனந்தனதியர்க்குச் சாம்பவனும் பாத்வாசருக்கு வால்மீகரும் ஸ்ரீராமருக்கு வதிஷ்டரும் சுக்ராசாரியருக் குப் பிருகுரிஷியும் பிரகலாதனன் அர்ச்சுனன் உத்தர வாதியோர்க்குப் பகவானும் சுவேத கேதுவுக்கு உத்தால கரும் இந்திரனுக்குப் பிரகஸ்பதியும் விதுரனுக்கு மயித் திரேயரும் தருமருக்குத் துறவாசரும் மாபலிக்குசுக்ரா ச்சாரியரும், அனுமாருக்குச் சீதையும, அஸ்தியருக்குச் சுப்ரமணியரும், புஜண்டருக்கு அபபிகையும், சதா னந்தருக்குக் கௌதமரும், பகீரதனுக்கு திரிதுவரும் தேவஹூதிக்குக் கபிலரும் போதித் திருக்கின்றூர்கள்.

ஆதலால் மறந்தும் ஆத்ம பரமாத்மாக்களின் பின் னபாவஞ் சொல்லக்கூடா தென் றறைய விடோபா ஓ ஐயனே! ஆத்மாவே பரமாத்மாவானல் முத்தி யடைவ தெது (க) பந்தத்திலிருப்ப தெவர் (உ) ஆத் மாவுக்குக் கைவல்லியங் கொடுப்பவர்யார் (ந) மீளாக் கதிக்கு முயற்சி செய்யுங் காரணமேன் (ச) சாதுக்கள் சேவை யேன் (ரு) புண்ணியத்தை யீட்டுவதேன் (சூ) சாஸ்திர விசாரணை யேன் (எ) குரு விசுவாசம் மேன் (அ) ஈசுவர பக்தியேன் (சு) என்கிற பல சங்கை கட் கிடமாகின்றதே, அறிவிலேனுக் கன்பா யனுக் கிரகம் புரியுமையாவென்று துதிக்க, ஸ்ரீ பாதஸ்வாமி

மிகள் ஓ விவேகவிஸ்திரணனே! முக்தியடைவது ஜீவனென்றுரைக்கத் தகும் (௧) அச்சீவனை நன்றாயறிவூன்றி விசாரிக்கில் சுத்தசூன்யமாயிருக்கும் நிழலோடு போராடுவதுபோல் மதபேதகர் புறக்காண அகக்கரணாதிகளின் கூட்ட விசேஷத்தால் நானென்றபிமானம் பூண்டிருக்கும் ஜீவத்வத்தைச் சிறுபிள்ளைகள் விளையாடலில் இவனிராஜன் இவன் மந்திரியென்கிற பல கோட்பாடுகளை ஏற்படுத்திக்கொண்டு விவகரிப்பதுபோல இல்லாத ஜீவத்வத்தை ஏற்படுத்தி அதன்மேறீ பாரத்தைச்சுமத்தி அநித்தியமான மாயா சப்சாரத்தில் மனப்பிரமை கொண்டு இல்லாததை யுண்டாக்கும் மாயா சம்பந்தத்துக்குள்ளாகி ஜனனமரண சாகரத்துக்கு ளமிழ்ந்திருக்கிறார்கள், தான் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவாயிருக்க மாயாந்தகாரத்தால் மறந்து தானல்லாததேகாதிகளைத் தானென்று பிருமாப்புற்று நாடு நகர் பெண்டு பிள்ளை பண்டபதார்த்தங்களைச் சதமென்றும், சுகந்தருமிதமென்று நம்பிப் பிரத்தியட்சத் துக்காத்மயமானவிவைகளை நித்யானந்தமாகப் பாவித்துத் தன்னாலே தான் கெட்டால் அண்ணாவி யென்னசெய்வா னென்கிற பழமொழிப்படி க்ஷணபங்கமான காயத்தைக் காப்பாற்றிக் காந்தையரைப்போற்றித் தானின்ன வஸ்துவென் றறியாமல் தேகேந்திரிய பாவமடைவதே பந்தம் இவர்கட்குத் துக்கமயமான சரீரமே கற்பகாலங்கடந்தும் சொந்தம் தானல்ல வாக்கையைத் தானெனப் பிரமிப்பதே பவதொந்தம ஸ்தூலசூட்சும காரணமென்னும் திரி சரீரத்தை யாராய்ந்தறியாததே மதிமந்தம், (௨) என் தேகம, என் கண், என் செவி, என் வாய், என் மனம், என் பிராணன், என் சீவனென்றுரைக்கும் நீ வேறாயிருந்து சக்ராவஸ்தையில் இந்திரிய வியாபாரத்தையும், சொப்னாவஸ்தையில் மனோவியாபாரத்தையும், சுழுப்தியவஸ்தையில் சுத்தசூன்யமாயிருக்கும் ஜீவத்தன்மையையும் சாட்சியா யறிந்துகொண்டிருக்கும் உன்னைக் கரதல நெல்லிக்கனிபோலக் காட்டுங் காரணகுருவே மோட்சமளிக்கும் ஜெகதீசுவரனாகும். (௩) வைகுந்தமாதியடைந்த ஜயவிஜயா ளாதியோர்க்குப் பின்னும் ஜன்மம் வந்தது போல் தனக்குப் பிரத்தியட்ச நகரமான தனுவுண்டாகாமல் ஜாக்ர சுழுப்தி நிலையையடைவ முயற்சிப்பதே பரமாத்மாவி லேக்யப்படுங் காரணமாகும். (௪) துர்க்கந்தமான விஷயானந்த போகத்தில் மலத்தை யாசித்த சிறவண்டைப்போலவும். பன்றியைப்போலவும் அமிழ்ந்து இடையூறுசெய்யும் எமனுக்கிரையாகும் சரீர வாஞ்சையையும் துக்கத்தைச் சுகமாகக்காட்டும் இந்திரியபோகத்தை மேன்மேலும் வாஞ்சிக்கச்செய்யும் துர்ச்சங்கம் நீங்கி இந்திரிய நீக்கி வைராக்கிய சீலராய்ச் சமாதி நிஷ்டானுபூதியால் அகண்டானந்தத்தால் திருப்தியடையச்செய்யும் சற்சங்க சகவாசஞ்செய்ய வேண்டுவதவசியமாகும். (௫) அனித்யமாகிய தேகத்தைக்காக்கும் புண்ணியத்தை டளித்து நித்யமான பிரமபதத்தை அபேட்சித்து ஸ்ரீ அரிபரந்தாமனை அந்யைகாலத்தில் தரிசித்து மறுஜெனனத்தில் சிறுத்தொண்டனாய்ப் பிறந்து கார்த்திகேயரால் பிரமக்ஞான முபதேசிக்கப் பெற்று புண்ணிய பதவிகளைத் தரிசித்து விதேக கைவல்யத்தையடைந்த கர்னனைப்போலத் தர்மத்தைப் பெருக்குவதே உத்தமர் துதிக்கும் முத்திக்கு வழியாகும். (௬) மூடசிரோன்மணிகளாகிய சிலர் காரியகுருக்கள் போதிக்கும் யாதாவோர் நிலையில் மனதை நிறுத்தி எதையோ ஒன்றைத் தியானித்து மற்றோர் மார்க்கத்தைச் சிரேஷ்டமாய்ப்பேச அதில் வாஞ்சைகொண்டு முன்னும் அனுஷ்டித்ததை வெறுத்துச் சஞ்சல மடையச்செய்யும் அவிவேகஞானத்திற் புகாமல் மனோதிடத்தையும் சம்பாவனையும் சந்தோஷத்தையும் சாந்தத்தையும் ஏகாக்கியானத்தையும் நிர்ச்சல சித்தத்தையும் அனுபவக்ஞானத்தையும் கிரியாவஸ்தைகளின் மர்மத்தையும் மனோவுற்பத்தி நாசத்தையும் பவபந்தம் வந்த சம்பந்தத்தையும் பயசாஸ்திரமான கர்மகாண்டத்தையும் நானீயென்னும் அகம்பாவத்தையும் மாற்றும் ஞானசாஸ்திர விசாரணையை அகத்தியஞ்செய்ய வேண்டும். (௭) மரணபவமென்னும் காலநேமியிற் சுழன்றலுத்து துன்பம் வலுத்து மோகாந்தகாரக் கூபத்திலமிழ்ந்து நன்கு தீதறியாப் பசுவைப்போலாகிப் பசுவென்றபேரையே யடைந்து மேலுமேலு முழாமல் ஊனக்கண்களை மறைத்து ஞானக்கண்களைத்திறந்து அநேக ஜன்மங்களுக்கு வித்தான சஞ்சித மர்மத்தைப் பஞ்சுமூட்டை பற்றிய ஊழித்தீயைப்போலெரித்துத் தாதாகாரமாயிருந்து சதாகாலமும் ஆனந்தமயமாயிருக்கச்செய்யும் ஆசிரியர்மேல் விசுவாசம் அகத்தியமிருக்கவேண்டும். (௮) அபமிர்த்தி யுவாதிகளை நீக்கி அதோகதிக்காளாக்கும கொடிய மனத்தைப்போக்கிப் பூரணக்ஞானியாகாமல் மரித்த உத்தமருக்கு மறுஜென்மத்திற் றெளிவளித்து அப்பா பிரகலாதனை இனிப் பிறவாவரங் கேளென்றுரைத்தது போலுரைத்தும் சங்கடமான காலத்தில் பிரசன்னமாய் வந்து களிப்படையும்படியான வரங்களைத்தந்து காத்து இரட்சிக்கும் இஷ்டதேவதைமேல் பூரணபக்தியு மிருக்கவேண்டும். (௯)

என்று விடோபா கேட்ட நவசங்கைகட்கும் உத்தா
முரைத்து இனி நீ தேகாதிகளை நியதிசெய்து ஆத்மா
வாகி ஆத்மாவே பரமாத்மாவென நம்பி ஆனந்த மடை
யலாமென்றறைய விடோபா ஆத்மாவே பரமாத்மா
வென்றறிந்ததனுல் ஆனந்த மடையலாமோ வென ஸ்ரீ
பாதஸ்வாமிகள் மந்தகாசம்புரிந்து நீ யானந்தஸ்வரூபமா
யிருக்க வேறு ஆனந்தத்தைத் தேடுவானே னென,
விடோபா நான் ஆனந்தஸ்வரூப மெப்படியாவேன் ஆனந்
தமாயிருப்பவனுக்கு இந்தத் துக்க மிருக்குமோ வென,
ஸ்ரீ பாதஸ்வாமிகள் உனதெதார்த்த ஸ்வரூபத்தை இன்
னம் நீ யறியாமல் அஞ்ஞானமயமாகவே யிருப்பதால்
ஆனந்தமயமாக வில்லையென விடோபா தேகேந்திரிய
காண பிராண ஜீவவிருளையறியும் ஆத்மாவே நானென்
றறிந்துகொண்டும், ஆனந்தமுதயமாக வில்லையேயென
ஸ்ரீ பாதஸ்வாமிகள் தேகாதிகள் தானல்ல ஆத்மாவே
தானென்றறிந்தபடி ஆத்மஸ்வரூபமா யிருந்தாலல்லவோ
ஆனந்தரூபமாவாயென,

விடோபா ஆத்மஸ்வரூபமாவ தெப்படி அதற்குச்
சாதனமென்ன திருவாய்மலர்ந்தருளுமையாவென, ஸ்ரீ
பாதஸ்வாமிகள் தேகாதிகள் தானல்லவென்று நியதி
செய்தவண்ணம் தேகாயாசங்களுக்கும் இந்திரிய கரணங்
களுக்கும் மனோராச்சியங்களுக்கும் இடங்கொடுக்காமல்
நிக்கிரகஞ்செய்து ஆத்மாவே தானுகி விஷயாதிகளையடக்
குங்கோனுகி மானுபிமானங்களைக் கடந்து மௌனமுத்
திரையையடைந்து சங்கல்ப விகல்பத்துக் குட்படாமல்
நிர்விகல்ப சமாதியைவிடாமல் இருப்பதே பிர்மானுசந்
தானமெனவிடோபா பகிர்முக திருஷ்டி நீங்கி அந்தர்முக
திருஷ்டி ஓங்கி நிர்ச்சலனமா யிருப்பதால் அகண்டானந்
தத்தை யனுபவிக்கக் கூடுமாவென, ஸ்ரீ பாதஸ்வாமிகள்
கனவிற் சுழுப்தி நிலையையடைவதே ஆனந்த மென
விடோபா நியதிசெய்து சூனியமாக்கிச் சாட்சிஸ்வரூப
மாகி அசையாச் சித்திரம்போலிருந்தும் ஆனந்தமுதய
மாகவில்லையேயென, ஸ்ரீ பாதஸ்வாமிகள் கருவிகாணு
திகளொழிந்த சுழுப்தி எவ்விதமா யிருக்கிற தென,
விடோபா ஆனந்தமாயிருக்கிறதென, ஸ்ரீ பாதஸ்வாமிகள்
என்ன காரணத்தால் ஆனந்தமாயிருந்ததென, விடோபா
பிரபஞ்ச வியாபாரமும் மனோவிகல்ப மில்லாமையால்
ஆனந்தமா யிருந்ததென ஸ்ரீ பாதஸ்வாமிகள் சுகதுக்கங்
கள் மனதிலிருப்பதாலும் மனம் சுழுப்தி யவஸ்தையில்
மறைந்ததாலும் வேறு கருவிகளில்லாமல் எல்லாஞ்
சூனியமாகி ஆத்மா ஒன்றுமாத்திர மிருந்ததால் ஆனந்
தமாயிருந்தது அந்த ஆனந் ஆத்மஸ்வரூபமென
விடோபா இந்தச் சாக்ராவஸ்தையில் ஆனந்தமாயிருப்ப
தெப்படியென ஸ்ரீ பாதஸ்வாமிகள் அகக்காண புறக்கா
ணங்களெப்போதும் துக்கமயமே யாகும். ஆத்மா எப்
போதும் ஆனந்தமயமேயாகும் இதுதெரியாமல் தேகாதி
களின் பீடையை ஆத்மாவின் மேலேன் சுமத்துகிறு
யென, விடோபா தேகேந்திரியாதிகளின் துன்பங்களால்
ஆத்மானந்தம் மறைபடுகிறதேயென ஸ்ரீ பாதஸ்வாமிகள்
மரணபரியந்தம் தேகாதிகளுக்குச் சுகதுக்கம் வந்துக்
கொண்டேயிருக்கும் ஆத்மானுபவ முடையவனுக்கு
அச்சுகதுக்கங்கள் சொற்பனகாட்சிபோல் தோன்றியுந்
தோன்றுமலிருக்கும் இப்படி தோன்றுவதும் அப்பாசிக்
கல்லாமல் ஆரூடனுக் கொன்றுந்தோன்று ஆனந்தமா
கவே யிருப்பானென விடோபா இப்படி ஆனந்தமயமா
யிருப்பவன் தானே மோட்சபாக்கியம் பெறுபவன் மற்ற
வர்களடையக் கூடாதோவென ஸ்ரீ பாதஸ்வாமிகள் பிரம
வித்து பிரமவான் பிரமவாரியான் பிரமவரிஷ்டன் என்
கிற நால்வரும் மோட்சமடைபவர்களே யானுலும்
தானின்ன தேசத்திலிருக்கிறதும் தானின் னுனென்ப
தும் மலசல விசர்ச்சனையாவதும் சடுரசங்களின் சுவையும்
அறியாப் பிரமவரிஷ்டனே இவனே பிர்மானந்த வாரியில்
மூழ்கித் தன்னைமறந்து ஜீவன் முக்தித்தன்மையைக்
காதலக்கனிபோல அடைந்தவன் அவ்வரிஷ்ட பதத்தை
யே நீயடைந்து ஆனந்தானுபோகம் பெறக்கடவாயென
விடோபா ஜீவனிருக்கும்போதே மோட்சமடையக் கூடு
மாவென ஸ்ரீ பாதஸ்வாமிகள் மோட்சமென்ப தினர்த்தம்
மோசனமாம் மோசனமென்பது பந்த விமோசனமாம்
பந்தமேநாகம் பந்த நிவர்த்தியே மோட்சம் துக்கமேநா
கம் பிரமானந்த மோட்சமன்றி வேறு மோட்சஸாதனம்
எங்குமில்லை. ஆதலால் துக்கமயமான வியாபாரங்க
ளொழிந்து சதா ஆனந்தமயமா யிருப்பா யப்பாவென
விடோபா அடியேன் பேரின்பவாரிதியில் மூழ்கி ஜீவன்
முத்தியடைய எத்தனைநாள் செல்லுமோ தேவரீருடைய
பரிபூரணதயை எக்காலத்தில் வருமோவென் றயர்ந்து
நிற்க, ஸ்ரீ பாதஸ்வாமிகள் அப்பா ஒப்பிலா பிரமஞ்ஞானி
யே! என்னிருகண்மணியே! இன்றுடன் தேகாபிமானத்
தை விடுத்து வலிமையான இச்சையைத்தடுத்துக் குட்சி
பாதையினிமித்தங்கிடைத்ததுண்டு உன்னை யண்டினோர்க்
காத்மானுபாவத்தையேவிண்டு மனவெண்ணங்களை மாய்
த்து மானுபிமானங்களைத் தேய்த்து ஆத்மஸ்வரூபமாய்ப்
பரமாத்மாவிலைக்யமாய்ப் பரிபூரணமாய் பரமானந்தபர
வசனுய்மௌனசமாதியை யடைந்திருக்கக்கடவாயென்று

பூரணாபிஷேகஞ்செய்து சைதன்ய சுவாமியென்கிற பேரைக்கொடுத்துத் தானும் பரமசமாதியடைந்து ஆனந்த மேலீட்டாற் றன்னை மறந்து அசைவற்றிருந்தார் விடோபா ஆசாரியருடைய பூரண கடாட்சம் பெற்றுக் கொண்டதால் பஞ்சு மூட்டையில் நெருப்புப் பற்றியது போலச் சங்கல்பங்களும் பஸ்பமாய்ப் பரமானந்த நிஷ்டையிற் பசுமரத்தாணிபோற் பதிந்து தன்னை மறந்து தலைவனிற் கலந்து பேய் பிடித்தவன் போலவும் சேய் இருப்பது போலவும் வாரணாசியில் பிரகாசித்துக்கொண்டிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

விடோபா ஞானோபதேச அத்தியாயம்

முற்றிற்று.

---

ஐந்தாவது

## விடோபா கிரகத்தாசிரம அத்தியாயம்.

வாருங்கள் சித்த சிகாமணிகளே! என்னிரு கண்மணிகளை விடோபா வாரணாசியில் இவ்விதமாயிருக்கையில் அலங்காவதியில் சிதோபந்து ஓ பகவானே! என்னருமைப் புத்திரியைச் சம்சார விச்சையில்லா விடோபாவுக்குப் பாணிக்கிரகணம் செய்யும்படியாய்ச் செய்து என் கழுத்தைக் கொய்து சதிபதிக ளொற்றுமையோடிருக்காமல் பிரித்து விட்டாயே! ஒப்பிலாப் பதிவிரதையாகிய என் தனயை படுந்துயர்பார்க்க என்னாலாகவில்லையே! தீராத தொல்லையே! ஓ தெய்வமே! இனி யென்ன செய்வேனென்று தியானஞ்செய்துக் கொண்டே வந்தார் அவர் மனைவியோ விடோபாவும் ருக்மாபாயும் சந்தோஷமாய்க் கூடிக்களித்திருக்கக் கருணை கூறுவாயென்று இலட்சுமியைப் பூசித்துக் கொண்டே வந்தாள். ருக்மாபாயி நாடோறும அதிகாலையி லெழுந்து சக்கரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து யீரவஸ்திரத்துடன் அரசும் வேம்புங் கலந்திருக்கும விருட்சத்தை நூற்றெட்டுதரம் பிரதட்சணஞ்செய்து தன் பதியின் திருநாமமாகிய விடோபா வென்னுந் திருநாமத்தையே பதினயிர முரு வேற்றி மூன்றுஞ் சாமத்தில் வீட்டை யடைந்து ஓர் பொழுதுண்டு தரையிற் புரண்டு நல்ல வஸ்திராபரணமணியாமல் தாய் தந்தையரோடும் பேசாமல் கூந்தல் சடைகளாய்த் தொங்க பார்த்தோர் பராசத்தி யென்று வணங்க பேய் பிடித்தவள் பால் குணம் வேறுபட்டுக் கிரகஸ்தாசிரமதுக்கு மாறுபட்டு நாள்கழிக்கத் தொடங்கினள். இப்படி பதினாறு மதிகள்கழிய தாய் தந்தை தனயை யென்னும் மூவர் செய்யும் தபோ பலமானது விடோபாவின் மனதிற் பிரவேசிப்பதனாற் பயனில்லையென்று அவருக்கு சன்யாசங் கொடுத்த ஸ்ரீ பாதஸ்வாமிகளின் மனதிற் பிரவேசித்து அவருடைய ஆரூடக்ஞானத்தைக் கலைத்து சஞ்சாரசமாதி செய்யும்படியான சலனத்தைக் கொடுத்து அஃதறியா ஸ்ரீ பாதஸ்வாமிகள் சஞ்சாரசமாதி செய்ய வேண்டு மென்கிற எண்ணங் கொண்டு வாரணாசியை விட்டு அலங்காவதியை நோக்கி புறப்பட்டுப் பல நாடுகளைக் கடந்து சக்ரதீர்த்தத்தை யடைந்து அதற் கருகாயிருக்கும் அரச விருட்சத்தின் கீழ் ஆயாசத்தால் சயனித்துக்கொண்டு ருக்மாபாயின் கோறிக்கை யீடேற்றவந்த ஜகதீசுவரன்போல பிரமானந்த நிஷ்டையி லெழுந்தருளி யிருந்தார்.

இப்படி மறுநாள் பரியந்தம் அசைவற்று ஆனந்த பரவசத்தில் தன்னை மறந்திருக்கும் அற்புதத்தைக் கண்ட ருக்மாபாயி இவர் யாரோ மகா புருஷனென்றும் இப்பேர்க்கொத்த மகாத்மாவால் தீராக் குறையுமுண்டோ வென்றும் அதிசீக்கிரமாய் வீட்டை யடைந்து பலகாரமும் பரமான்னமு மேந்திக் கொண்டுவந்து நமது சஞ்சலம் நீங்கு மென்று வந்து அவரருகிற் சென்று பயபக்தியுடன் நின்று ஓ ஸ்வாமி! அன்னமில்லா ஆயாசத்தால் களைத்திருக்கின்றீரோ அல்லது பிரமானந்தமேலீட்டால் தன்னை மறந்திருக்கிறீரோ ஓ பகவானே! அடிமை கொண்டு வந்த பலகார பரமான்ன முட்கொண்டு ஆயாசந் தீர்த்துக்கொண்டு பிரமநிஷ்டையி லெழுந்தருளியிருக்கலாம் எழுந்திரும் சுவாமி யென்று இனிய குரலோடு அவர் நிஷ்டை பிரஷ்டமடைய கூப்பிட்டாள் குயிலோசை போன்ற தொனியைக் கேட்ட ஸ்ரீ பாதஸ்வாமிகள் நிஷ்டை கலைந்து கண்களைத் திறந்து ருக்மாபாயியைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து ஓ அம்மா தபவேஷமாயிருக்கின்ற நீ யார் என்ன குறையால் வாட்டமுற்றுத் தபநாட்டத்தி லிருக்கிறாயென, ருக்மாபாயி ஓ ஸ்வாமி! எனக்குற்ற குறையைப் பின்னால் சொல்லுகிறேன் பலகார பரமான்ன முண்டு ஆயாசந் தீருமையா வென்று வணங்க ஸ்ரீபாதஸ்வாமிகள் பரிபக்குவியால் புசித்து உன் குறையைச் சொல்லுமம்மா வென, ருக்மாபாயி எனக்குப் புத்திரபாக்கியம் வேண்டுமென, ஸ்ரீபாதஸ்வாமிகள் ருக்மாபாயி செய்த உபசாரணைக்குச் சந்தோஷப்பட்டு ஓ அம்மா! உனக்கு நான்கு சிசுக்கள் பிறக்க வரமளித்தேன் இவ்வேஷத்தை மாற்றி உன் கணவனோடு சந்தோஷமாகக்கூடி யிருப்பாயாக சமஸ்த சுபங்களும

பெற்று வாழ்ந்திருப்பாயாக வென அது கேட்ட ருக்மா பாயி நமது கணவன் வரலாற்றை யுரைக்குமுன் நான்கு கான்முளையைப்பெற வரமளித்து விட்டாரே நமது காவலனைக் காண்பதெப்போ களிப்புடன் சேர்வ தெப்போ தனயரைப் பெறுவதெப்போ சந்தோஷ முறுவதெப்போ வென்று நகைத்தாள் ஸ்ரீபாதஸ்வாமிகள் ஓ அம்மணி! என் வாக்குப்பொய்யாகுமென உன்னியாநகைத்தாய் திரிமூர்த்திகள் தடுத்தாலும் என்னுசீர்வாதத்துக்குத் தடைவாராமல் மந்தாதாவின் பத்தினிக்கு நான்கு புத்திரமாக்கிய் மளித்த ஓர் முனியின் வாக்கியத்தி னுறுதிப் பிரகாரம் நீ நான்கு பிள்ளைகளைப்பெற்றுச் சுகமுற்றிருப்பாயென, அவ்வுறுதி வாக்கியத்தைக்கேட்ட ருக்மாபாயி இப்படியும் நமக்கனுகூல காலமுண்டாகுமா நிச்சயமென நம்பலாகுமா வென்று களிப்பின் மிகுதியால் மேன்மேலும் மந்தகாசம் புரிந்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்து ஒன்றுந் தோன்றாதவளாய்ப் பதுமைபோ லசைவற்று நின்றாள். ஸ்ரீ பாதஸ்வாமிகள் சந்தேகங் கொண்டு ஓ அம்மா! நீ நகைத்துக் கண்ணீர்விட் டழுங்காரணமேன் தெரியச் சொல்லுவாயென்று வற்புறுத்திக் கேட்க. ருக்மாபாயி ஓ என்னுண்டவனே! உமது வாக்கியப்படி சுபமங்கிலியத்துடன் சகல சாம்பிராச்சியமும் பெற்று வாழ்வது நிச்சயமாயினும் அக்கினி யில்லாமல் பாகமாகுமா? எண்ணெயில்லாமல் விளக்கெரியுமா? ஜலமில்லாமலங்குரம் புறப்படுமோ? விருட்சமில்லாமல் பலமுண்டாகுமா? புருஷனைப் பிரிந்த நான் புத்திரரைப் பெறகூடுமோ வென, ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ அம்மணி! உன் கணவன் வெறுப்பா லுன்னைப்பிரிந் தெங்கிருந்தாலும் என்னுசீர்வாதப்பலனால் உன்மேல்விருப்பங்கொண்டு வந் துன்னைச் சேர்வான் இனி அவதயிரியப் படாதேயென ருக்மாபாயி ஓ சுவாமி! சமுசாரத்தி லிருந்த போதே தொடாத என் கணவன் இப்போது சன்னியாசியா யிருக்கின்றாரே அவர் சமுசாரத்துக் குட்படுவாரா அன்பாயென்னையுந் தொடுவாரா காரணஞ் சொல்வதற்கு முன் அவசரப்பட்டு ஆசீர்வாதஞ் செய்தீரே கருணை மழை பெய்தீரே உமது வாக்கியப்படி நடப்பதற்குச் சன்யாசியான என் கணவன் சமுசாரியாக வேண்டுமே வென,

ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ புண்ணியவதி ஆயிரம் பேர்களுக்குத்தான் சிஷனுகலாமன்றி ஒருவனுக்காசானுவது கூடாது ஏனெனில் சப்த நரகங்களுக்கு அக்கினி வைப்பதும், சிஷனுக் கிருக்கும் எழுவகைப் பிறவிகளை மாற்றுவதும் ஒப்பாகும், காரணம் எழு பட்டணங்களை எரிப்பதனால் உண்டாகும் பாவத்தை நீங்குவது லேசாகவும் அனேக ஜன்மங்களுக்கு வித்தாயிருக்கும் மாணுக்கனுடைய சஞ்சித கர்மத்தைப் பஸ்பமாக்குவது கடினமாகவும் இருக்கும் ஒரு சிஷ்யனை ஜன்மசாகரத் தமிழாமல் மோட்சமடையச் செய்தல் எளிதானதல்ல ஒருவனை கிர்தார்த்தனுக்க ஆசான் தான் செய்த தபத்தை யெல்லாம் தாரைவார்க்க வேண்டும் இதை யறியாக் காரியகுருக்கள் டம்பத்துக் காகவும் பணிவிடைக் காகவும் அர்த்த நிமித்த மாகவும் அனேகரைச் சிஷர்களாக்கிக் கொண்டு அதோகதிக் காளாகிறார்கள் அதுபோல உனது கணவன் சம்சாரியா யிருக்கச் சன்னியாசங் கொடுத்த ஆசானெவன் அப்படி சன்னியாசங் கொடுத்த தேசிகனும் காஷாயம் பெற்றுக்கொண்ட மாணுக்கனும் குற்றத்துக் குள்ளாவார்கள் நல்லதுன் கொழுநன் எந்தத்தேசத்தி லிருக்கிறான் யாரிட முபதேசம் பெற்றுக்கொண்டான் சொல்லுமம்மா வென ருக்மா பாயி ஓ சுவாமி! இப்போது காசிதேசத்தி லிருக்கின்றார் உபதேசம் யாரிடம் பெற்றுக்கொண்டாரோ யானறிகிலேனென ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ பாக்கியவதி! என்ன காரணத்தா லுன்னைப் பிரிந்துபோனுன் பிரிந் தெத்தனை நாளாயிற்று பதிவிரதையான நீ அவனைத் தொடர்ந்து போகாமலிருக்க காரண மென்ன சொல்லுமம்மா வென, ருக்மாபாயி தன் கணவன் தன் தந்தைதாய் விவாகஞ்செய்ய அதைத் தடுத்து யாத்திரை வந்ததும் அலங்காவதியை யடைந்ததும் தன் வீட்டில் சயனித்ததும் தன் தந்தைக்குப் பகவான் சொர்ப்பனஞ் சாதித்ததும் மறுநாள் கணவனுடைய கனவிலுரைத்ததும் ஆர்வலன் நடுராத்திரியிலெழுந்து போனதும் தான் மறித்ததும் அசரீரி விவாகஞ் செய்துக்கொள் ளென்று பகர்ந்ததும் தந்தை பலவந்தமாய் பாணிக்கிரகணஞ் செய்ததும் ஐந்தாறு வருஷங்களாகத் தன்னை யேரிட்டுப் பாராமலிருந்ததும் தன் தாய் தந்தை மரித்த சாதிகை முன்னிட்டுக்கொண்டு காசிக்குப் பிரயாணப்பட்டதும், தன் தந்தை கூடவே தொடர்ந்ததும் பின்பு சன்னியாசியாக இச்சையிருப்பதை வெளியிட்டதும், பதிவாக்கியத்தை மறுத்தல் பதிவிரதைக் கழகல்ல வென்று தன்னை மறித்துப்போனதும் சொல்லி முடித்து ஓ என்னையனே! என் நாயகன் என்னைப் பிரிந்து பதினறு திங்களாயிற்று பதிவாக்கைக் கடக்கக் கூடாக்குறையால் அவரைத் தொடர்ந்து போகாம லிருந்து விட்டேன் காரணங்க ளிப்படியிருக்க யான் புத்திரரை யெவ்விதமாய்ப் பெறுவேனென,

ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ விரதசீலியே! அதிதிகட்கனு கூலியே! உன் மணாளன் குணம் குறி ரூபம் வயது சொல்வாயம்மா வென, ருக்மாபாயி அவர் குணாதிசயங் களைச் சொல்லிக்கொண்டே வர, அதுகேட்ட ஸ்ரீபாத ஸ்வாமிகள் அம்பலத்தில் கொண்டுவரப்பட்ட விபசாரி யின் மனம் போலவும் தண்டனைக் குட்பட்ட குற்றவாளி யின் நெஞ்சம்போலவும் உள்ளங்கலங்கிப் பித்தசுரக்கார னுக்கு மதுரமான சர்க்கரை கசப்பதுபோலவும் விடநாய கிக்கு நிஷ்காமியான கணவன்மேல் வெறுப்புறுவதுபோல வும் துவேஷ முற்பவித்து ஓ பதிவிரதையே! உன் ஆர் வலன் நாமதேயம் என்ன சொல்லுமென ருக்மாபாயி கணவன் திருநாமம் வாக்காற் சொல்லக்கூடாக்குறையால் தரையில் வரைந்து அத்திவ்ய நாமத்துக்குச் சிரசாஷ் டாங்கமாய் வந்தனஞ்செய்ய, அதைக்கண்ட ஸ்ரீபாதஸ்வா மிகள் தனது மாணாக்கன்மீது அதிக கோபங்கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு இக்கணம் அந்த விடோபா வென்னும் பொய்யனைப் பஸ்பமாய்ப் போக ஜபித்துவிடு வேன் ஆ ஆ உனக்குக் கொடுத்த ஆசீர்வசனத் தடையா லல்லவோ என்னிடம் சன்யாசம் வாங்கிக்கொண்ட உன் கணவனுக்குச் சாபங்கொடுக்காமல் பொறுக்க நேரிட்டது சொல்வதற்கரிய பத்தினியாகிய உன்னை மோசஞ்செய்து என்னிடம் சத்தியம் பேசி என்னைக் குற்றத்துக்குள் ளாக்கிவிட்டான் இப்போதே காசிக்குப்போய் அவனை உதைக்கிறேன் நையும்படி சிதைக்கிறேனென்று ஆக்கு ரோஷத்தோடும் வாரணாசியை நோக்கிப் போக ருக்மா பாயி ஓ பகவானே! இதென்ன விபரீதம் நேரிட்டது இதற்கு நானென்ன செய்வேனென்று அதி சீக்கிரமா யோடி அவர் பாதாம்புயங்களில் வீழ்ந்து பலதரந்தாழ்ந்து ஓ எங்களாண்டவனே! என்பதி பிராணனோ டிருக்கிறு ரென்கிற கேள்வியே எனக்குச் சகல பாக்கியமுங் கிடை த்ததற்குச் சமானம் அதையும் இழக்கும்படியான காலம் நேரிட்டதோ அதனாலேயே உமக் கிவ்வளவு கோபம் வந் ததோ எனக்குப் புத்திரபாக்கியமும் அஷ்டைசுவரியமும் வேண்டியதில்லை மாங்கல்ய பிட்சையே கொடுத்தாட் கொள்ளும் சுவாமியென்று பிரலாபிக்க ஸ்ரீபாதஸ்வாமிகள் ஓ குணோத்தமியே! உன் பதி சுகசீவியா யுன்னோடு சந் தோஷத்துடன் கூடியிருப்பான் என் வாக்கியப்படி நான்கு குழவிகளையும் பெறுவாய் நீ யாதொன்றுக்கும் வியாகுலப் படாமல் சிலநாள் என்வரவுக் கெதிர்நோக்கிக் கொண் டிருப்பாயாகவென் றுரைத்து நாடு காடுகளைக் கடந்து வாரணாசியை யடைந்து விடோபாவிடஞ் சென்று ஓ அசத்தியனே யெனப் புகன்று அடா சைதன்யா! உனக் குச் சமுசாரமிருக்கின்றதா இல்லையா? உண்மையைச் சொல். இன்றேல் அகஸ்தியர் தன் சீஷனுக்குப் பர்வதா காரமாகவே யிருக்கச் சாபமிட்டதுபோலவும், பிரகஸ்பதி தன் மாணாக்கனுக்கு குஷ்டரோகியாய்ப் போகச் சாபமிட் டதுபோலவும் ஜபித்துவிடுவேன் கோபாக்கினியாற் றகி த்துவிடுவேன் என்று தூருவாசரைப்போல் கோபாவேசத் தாற் றுவேஷிக்கத் தொடங்கினர்.

விடோபா இராஜன் முன் குற்றவாளியும் மாமியார் முன் மருகியும் வித்யாகுருவின் முன் மாணாக்கனும் பதி யின் முன் விபசாரியும் நடுங்குவதுபோலக் கிடுகிடென்று நடுநடுங்கிப் பூனைபோலொடுங்கி வாய்குளறி நாத்தடுமாறி ஓ தெய்வமே! அசப்பற்றற்றவனுக்குப் புறப்பற்றென் னும் சமுசாரமேது நானென்னும் மேன்மையேது என தென்னும் பான்மையேது பெண்டுபிள்ளை தாய் தந்தை தமரென்னும் பந்தமேது இவர்கள்மே லபிமானங் கொண் டிருக்குந் தொந்தமேது அப்படியிருக்க நமது சுவாமிகள் நகைமுகம் வேறுபட்டு மிகவும் வெகுளி மேலிட்டு உண் மைதெரிந்தவர்போல் உனக்குச் சமுசாரமுண்டா இல் லையா நிஜத்தைச் சொல்லென்று கேட்கின்றுரே மித்திர னிடத் தசத்தியம் பேசினல் விரோதமும், பிரஜைகளிட மும் கைதவமுரைத்தால் அவமரியாதையும், இராஜனிடம் பொய் பேசினல் தண்டனையும், ஆசானிடம் அபத்தம் புகன்றுல் நரகப்பிராப்தியு முண்டாகுமென்று சாஸ்திர மிருக்கின்ற தல்லாமல் பொய்யானது பஞ்ச பாதகத்தி லொன்றாய்ப் பாபங்களுக்கெல்லாம் மூலமாயிருக்கின்ற காரணத்தால் உண்மையை சொல்லவேண்டும். அன்றித் தாய் தந்தை சாபத்தால் எடுத்த தேகத்துக்குப் பீடையும் பெரியோர்கள் கோபத்தால் பலஜென்மங்களுக்குப் பீடை யும் ஆசாரியர் சீற்றத்தால் ரவ்ரவாதி நரகமும் உண்டா குமே தாய் தந்தை பெரியோர் தெய்வ மமிட்ட சாபமுங் குருஸ்வாமிகளால் நிவர்த்தியாகும் ஆசானிட்ட சாபத்தை அரியயாதிகளாலும் அகற்றக்கூடியதல்லவே இப்போது சமுசார முண்டென்றுரைத்தால் முன்னில்லையெனறுரை த்ததைக் குறித்துக் கோபம வருமே ஆரியரிடம் அசத்தி யமும பேசலாகாதே இதற்கென்ன செய்யலா மென்று பலவாறான வெண்ணங்களோடுங் கூடி உத்திரஞ்சொல்வ தற்குத் தடமாடி கண்ணீர்விட்டழுது அடியற்ற பனைபோ லவரடிகளில் வீழ்ந்து தொழுது ஓ என்னாண்டவனே! உடல் பொரு ளாவி யென்னு மூன்றையும் முன்னமே உமக்குத் தத்தஞ்செய் திருக்கிறபடியால் இவ்வேழை

யேன் சிரத்தைத் தறித்துவிட்டாலும் பஸ்பமாய்ப்போக எரித்துவிட்டாலும் தேவரீரை நம்பினவடியேனுக் குறையுண்டாகுமோ ? அப்படி குறைநேரிட்டாலும் உமக்கன்றி எனக்கென்கிற சுதந்தர முண்டோ? ஓ சாந்தஞ்சேர்ந்த சதுர்வேதாந்த உபசாந்தபோதனே ! நாதனே ! நீதனே ! விநோதனே ! அதீதனே ! அவதூதனே ! நித்தனே ! நிமலனே ! நிர்க்குணாசரணம், சத்யனே சாந்தனே சத்குணாசரணம், சுத்தனே ! சுகிர்தனே ! சோதியே சரணம், அத்தனே ! அமுதனே ! ஆதியே சரணம், கர்த்தனே! கடவுளே! காரணாசரணம், புத்தனே! புனிதனே! பூரணாசரணம், நிச்சயப்பொருளான நீதியே சரணம், அச்சுதாத்விதவனுபூதியே சரணம், சுந்தரானந்த சுயதுரியனே சரணம், அந்தமாதியிலாத வரியனே சரணம், மோட்சமீந்தெனையாண்ட முத்தனே சரணம், சாட்சியாயிலகு நிர்ச்சாந்தனே சரணம், கருவிகரணாதிகளை வென்றவா சரணம், அருவாகியருளாகி நின்றவா சரணம், மமதகந்தையுமிலா மாதவாசரணம், சமதமாதிகளீந்த ஆதவா சரணம், காட்சியருளிய ஞானக்கண்மணியே சரணம், மாட்சிபருளுந்தூய மனோன்மணியே சரணம், தேவரீரத்தித் துதிசெய்சீலனே சரணம், மூவரோருருவமான மூலனே சரணம் என்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

அப்போது விடோபாவைச் சூழ்ந்திருக்கும் தொண்டர்களும் ஸ்ரீ பாதசுவாமிகளின் பாதங்களிற் பணிந்து, பற்பல விதங்களாகத் துதிக்கலுற்றார்கள் ஸ்ரீ பாதஸ்வாமிகள், விடோபா தேம்பித்தேம்பி யழுகிறதையும், அவருடைய பணியாளர் தோத்திரம் புரிந்தேத்துகிறதையும், நோக்கி கோபத்தை நீக்கி ஓ ஓ கோபமல்லவா பாபங்களுக்கெல்லாம் மூலப், பொறுமை கடலினும் பெரிதல்லவா? அன்றி ஒருவனைக்கொல்வதா கொலை, மனம்நோக வைப்பதே கொலை, ஒருவனைப்புணர்வதா விபசாரம், மனதில் வாஞ்சை கொண்டதே விபசாரப, வாக்கினாற் றோத்திரஞ்செய்வதா பூசை. மனதிலுள்ள அன்பே பூசை, ஒருவரை ஒருவர் தழுவுவதா ஆசை, மனதிலுள்ள பிரியமே ஆசை, அனேக பதார்த்தங்களை ஊட்டுவதா அமிர்தப், அன்புடனன்னப்பா லூற்றுவதே அமிர்தப், பணிவிடை செய்வதா பக்தி, பயத்துடனிருப்பதே பக்தி, கங்கையில் மூழ்குவதா ஸ்நானப், களங்கமற்றிருப்பதே ஸ்நானம், மடியோடிருப்பதா ஆசாரப், மாடகூடங்களோ டிருப்பதா கெம்பீரம், தியானஞ்செய்வதா நிஷ்டை, மோனமுற்றிருப்பதே நிஷ்டை, கலைக்ஞானங்கற்பதா வித்தை, பிரமக்ஞானங் கற்பதே வித்தை, கோபமா கொடியது குரோதமே கொடியது, வாயிலுள்ளபற்களா கெட்டவை, வயிற்றிலுள்ள பற்களே கெட்டவை ஆதலால் சாந்தமென்னு மாபரணம்பூண்டு சாதுவென்று பேரெடுத்தநாம் சாந்தமாயிருக்காமல் சத்சீடன்செய்த குற்றத்தைப் பொறுக்காமல் சன்யாசியாகியும் சமுசாரியைப்போல் கோபத்துக் குட்பட்டேனே, தபநிலைகெட்டேனே, கோபத்தினாலல்லவோ அனேகம் ரிஷிகள் தவமழிந்து விட்டார்கள், நரகத்துக் குட்பட்டார்கள், விஸ்வம்பரனான பரப்பிரமத்துக்கு மிகவும் நேசனான விசுவாமித்திரனை வசிஷ்டர் சாந்தத்தாலல்லவோ வெற்றிபெற்றார். சாந்தமே சிறந்தபக்தியும், ஜீவன்முக்தியும், சாந்தமே ஏகதியானமும் பிரமக்ஞானமுமாகும். அன்றி மோக்ஷயிச்சையுள்ளவன் நானென்னு மகங்காரமும் எனதென்னும் மமகாரமும் அற்றவனன்றி மற்றவனுகான் நானென்பதற்றவன் எனதென்னும் சுதந்தரமொன் றுண்டென்றுரைப்பானு நானென்னதற்றவனே ஞானியன்றி மற்றவர்கள் ஞானிகளாவார்களா வென்றனந்தம் விதங்களாயோசித்து, விடோபாவை நேசித்து, அப்பா விடோபா என் வரலாற்றையெல்லாம் அலங்காவதியிலிருக்கும் ஓர் பதிவிரதையால் கேள்விப்பட்டேன். அசரீரி வாக்கியத்தை மறுக்காமலல்லவோ பாணிக்கிரகணஞ் செய்துக்கொண்டாய் நானுபதேசஞ்செய்யமாட்டேனென்றல்லவோ பொய்மொழி புகன்றாய் நீ யாதொன்றுக்கும் அஞ்சாமல் என்னுடன்வா மறுத்தொன்றும்பேசாதேயென் றழைத்துக்கொண்டு அலங்காவதியிற் சென்று சிதோபந்து வீட்டின் முன்னின்று அம்மா ருக்மாபாயியென்று கூப்பிட்டார். அந்திவேளையில் அந்திவண்ணனைப்போல வந்து கூப்பிடும் ஸ்ரீ பாதஸ்வாமிகளின் இனிய தொனியைக்கேட்ட ருக்மாபாயி அதிதுரிதமாய் புறம்போந்து ஸ்ரீ பாதஸ்வாமிகளின் பாதங்களுக்கு வந்தனஞ் செய்து அவர்பின் ஜடாமகுட காஷாய வஸ்திராவதாரியாய் நிற்கும் தன் கொழுநன் திருவடிகளிற்பணிந்து பரமசிவமே யெனத துணிந்து அழுதகண்ணுந் தொழுதகையுமாய் நின்றாள். விடோபா தன் மனையாள் தன்னைப்போலவே ஜடைகள் வளர்த்து சரீரந்தளர்ந்து பரமசாதுவாயிருப்பதற் காச்சரியப்பட்டுச் சத்குருநாதனிவளுடன் கூடியிருக்கச் சொல்வாரோ வென்று பயப்பட்டு அரசன் முன்னிற்குந் திருடனைப்போலவும் விபசாரஞ்செய் தகப்பட்டுக்கொண்ட அபசாரியைப்போலவும் தலை குனிந்து

னிருந்தார். அத்தருவாயில ஸ்ரீ பாதஸ்வாமிகள் அப்பா விடோபா இவ்வுத்தமி யாருடைய பத்தினியென்று கேட்டார். விடோபா ஒன்றுஞ்சொல்லாமல் மௌனமுற்றிருந்தார். ஸ்ரீ பாதஸ்வாமிகள் ஓ விடோபா அருந்ததி அநுசூயை சந்திரமதி தமயந்தி முதலான பதிவிரதைகளிற் சிறந்த இவ்விரதசிலியை நீக்கி மேல் வேஷமான சன்யாசத்தா லென்னலாப்பம் பெறப்போகிறாய் ஆயிரஞ்சன்யாசிகள ஓர் இல்லறஞானிக் கிணையாவார்களா? கற்புள்ள மாதுசிரோன்மணியால் கைவல்யமடைவ தன்மையலலவா? விரித்துச்சொலலவா? இவ்வுத்தமியின் கற்பென்னும் அக்கினியால் நாமிருவரு மெரிந்துபோக மாட்டோமா? சிருஷ்டி ஸ்திதிசம்ஹாரஞ்செய்யும் திரிமூர்த்திகளும் அநுசூயாதேவியின் கற்பால் தங்கள் வல்லமைகுன்றிக் குழந்தைகளாய்ப் போகவில்லையா? பிருந்தையின் கற்பென்னும் பலத்தால் சலந்தரன் திரிமூர்த்திகளுமஜெயிக்கவில்லையா? நளாங்கினியால் ஏழுநாள் சூர்யோதயமாகாம லிவ்வுலகை இருள்மூடிக் கொள்ளவில்லையா? உனக்குத் தெரியாத தொல்லையா? பதிவிரதைகளின் மனதை நோகவைத்தால் ரவ்ரவாதி நரகத்துக்கிடமில்லையா? அழகான வாய்திறந் துண்மை வார்த்தைகளைச் சொல்லையா வென்று அவர் காத்தைப்பிடித்துக்கொண்டு ஓ என்னப்பனே! இந்த அற்புத குணமுள்ள கற்பிற் சிறந்த காந்தையைத் தள்ளாமல் என் வாக்கை மறுப்பதற் கெண்ணங்கொள்ளாமல் நல்லறமாகிய இல்லறத்திலிருந்து பிர்மக்ஞானியாய் மோட்ச மடையக்கடவாய் அகததுறவன்றிப் புறத்துறவாலோர் பலனுண்டா? குருவாக்குக் கெதிர்வாக்குரைத்தவருமுண்டா? ஆசானை அவமதித்தவருமுண்டா ஆசிரிய ராசீர்வாதம பெற்றவர்க்கோ ரிடையூறும வருவதுண்டா? ஓ குருபக்தியிற் சிறந்தவனே! பிர்மக்ஞானிகள் கட்டிற் பிறந்தவனே! ஆசையை யணுவும வைக்காமற் றுறந்தவனே! ஆசாரியரே நீரே கெதியெனறறைந்தவனே! அஞ்ஞானத்திற் குறைந்தவனே! மெய்ஞ்ஞானத்தில் நிறைந்தவனே! அகமதை யிறந்தவனே! ஆனநதத்தில் மறைந்தவனே! பிரபஞ்ச வியாபாரம மறநதவனே என்றனந்தம வார்த்தைகளாடிமிகவுங்கொண்டாடிக் காஷாயத்தை நீக்கி ஜடாபாரத்தைப்போக்கி ஆடையாபரணங்களைச் சிங்காரித்து அழகில் மதனெனப்பூரித்து ருக்மாபாயியையும் அலஙகரித்து அன்பாயுபசரித்து மகா வாக்யோபதேசஞ்செய்து மாசுகளனைத்தையுங் கொய்து மூவருந் தேவருந்தொண்டு உங்களுக்குச்செய்யக்கடவதெனவிணடு பாக்கியஞ் செய்தவர்களெனறு பற்பல வார்த்தைகள் புகன்று இனி நான் போய்வருகிறேனென்று அவ்விடம விட்டகன்று போகலுற்றார். அப்போது விடோபா, ஸ்ரீ பாதஸ்வாமிகளின் பின் தொடர்ந்துபோய் பலதாஞ்சூழ்ந்து பாதங்களில் விழ்ந்து ஓ என்னையாண்டவனே, ஆனந்தக் தாண்டவனே, நிசாரமாகிய இச்சமுசார சாகரத்திலென்னையழுத்திச் சள்ளை பொழிந்ததென்று சற்றுந்தன்காமல் நம்பின என்னை கைநழுவவிட்டேகுதலால் என் னுயிருடனசைக்கணமிங்கு தங்கியிருப்பேனோ, அடியேன்மீ திவ்வளவு அருவருப்பேனோ? இக்குவலயத்தில் நீரன்றி எனக்கோர் திக்குமுண்டோ? தாயை விட்டகன்ற கன்றுமுண்டோ? அருளோருருவாகி யென்னை யாட்கொள்ளவந்த என்னையனே! காதல நெல்லிக்கனிபோல் கைவல்யமளித்த மெய்யனே! சுகானந்தோதத் தய்யனே! துரிசுகளகற்றிய அய்யனே என்று தோத்திரஞ்செய்து தாட்டாமரைகளைத் தழுவி கண்ணீராற்கழுவி பிரிவாற்றாமையால் ஓவென்றழுதுக்கொண்டே தோத்திரஞ் செய்யத் தொடங்கினர்.

---

## குருஸ்துதி.

### விருத்தம்.

உலகம்புரக்குந்திருமாலு மூயர்வேதாவுஞ்சங்கரனும் இலகுமுலகீரேழேத்து மெழிலாலருளே தேசிகஸ்வாமி, நலமென்று மிலர்நாயேனை நயந்தாட்கொண்டநாயகனீ,பதியலாரெனக்கு துணையுண்டிங் கடியேற்கருளிய கல்வீரே.

அகலவைத்தா லெளியேனை யஞ்சேலென்பாரிவண் யாரே, முகமனுரைத்திங்கிருவென்றுன்முகாமில்லா மூடனைப்போல், பகலுமிரவுந்துதித்தேத்தும் பகவானேயுன்றிருவடியை, அலகித்தெங்ஙனமறந்திருப்பே னந்தோவெந் தாயறியேனே. 2

அறியாமையினு லில்லமெனுமளற்றிலமிழ்ந்தே வலக்கணுற்றேன், பிரியாவினையோ பெண்ணெனும் பேய்பிடித்தாள் விடுக்காதெனைக் கெடுத்தாள். முறையோமுறை பென்றெனை நீவிர் மோசஞ்செய்தீண் டிவண்விடுத்துப் பிறியேல் பிறியே லருட்குருவே பேரின் பளித்தபெருமானே. 3

பெருமானேயென் பிறவியெனும் பிணிக்கோர்மருந்தே யருந்தவமே, கருமால்விழியார் மயல்வேண்டேன் கனகம் வேண்டேன் கயிலையொடு, திருமால்பதமும்யான் வேண்டேன் றிமிரம்மருளு மகற்றியவுன், அருளார்பதமும் வேண்டுமெனக் களிப்பாயளிப்பாயநுதினமே. 4

தினமுமுனது திருச்சேவைசெய்தோர்க் குண்டோ நீங் குனைவிட், டனமுஞ்சென்மோதுயில் வருமோவரை மாத்திரையு முனைப்பிரிய, மனமும்வருமோமகிழ்வுறுமோ மறந்துமிருக்க மதிப்பேனோ, கனமுந்தனமுங்கதிபதியு நீயென்றுன்னுங் கடையேனே. 5

உனைனற்கரிய பேரொளிநீ யுணர்வுக்குணர்வு முயிர்க்குயிர்நீ, மன்னுக்தவமுமாட்சியுநீ மனக்கண்டகனுக்கன்னருட்கணுநீ, சொர்னமாசுதூய்மையுநீ சுாருண்ண முதுஞ்சோபிதந், அன்னை தந்தை தெய்வமுநீ என்றேயிருந்தே னருட்குருவே. 6

அருளேஞானமணிவிளக்கே ஆவித்துணையேயச்சுத மெய்ப், பொருளேஸ்பூரணபுண்ணியமே புனிதஸ்புடமே போதகமே, மருளேன்மனதினுட்டெளிவெ மணமார் சுகமேமாதவமே இருணீக்கிடுமாப்பேரொளியேஎளியேனன் பேதென்பொருளே. 7

தென்பேசிற்றின்பினை வேண்டாத் திருக்குவாக்கித் தெளிந்தோர்கள், அன்பேயகண்டாகார வருளானேருள மென்றசலாநல், இன்பேமுப்பாழ்கடத்தப்பா லேகப்பொருளில் விழித்தோர்கள், துன்பேதுமிலாவுபசாந்தத் தூய்மையளிக்கும் வாய்மையனே. 8

வாயுமனமுமௌனமுமாம் வகையன்று வகையோடருளிச், சேயென்றெனையாட் கொண்டவருட் டேவேகோவே மருளிருளும், மாயும்படிசெய்தெனைமறந்து மாருவனுபூதியுமேற்கொண், டோயும்பொழுதில் பழுதுறநீ யுன்னத்தகுமோ வென்னிறையே. 9

இறையேயன்னம்பகிர்ந்துகர மெட்டிப்பிடித் தூண் தடுத்தாப்போல், முறையோடறையக் கப்பாற்கொடுபோய் யோகத்தைக்யமாக்கியபின், குறைநானுற்றலென் றீவினையோகுருவேதுணையென் றிருப்போர்க்கோர், குறையேதறைவாய்நிறைவான கோனேச்சுகார்நிகரோனே. 10

நிகரில்பதத்தை யடைந்தோர்க ணிலையில் வாழ்வை மதிப்பதுபோல். சிகியென்றறிந்தும்மதிப்பதுபோல் தேனைப்பொ சித்துக்கடுவுண்டு, மிகவோர்காளம் செய்வது போய் மிடியேற் கடுத்தந்தோவான், இகமுமிழந்தேனைப்போன்ற வேழையுலகிலிலையிலையே. 11

இல்லந்துறந்துன்றனை யிறந்தவென்னை மறந்துன்றனைமறந்தே, அல்லலிறந்தின் பினையடைந்த வங்கந்தனைக் காத்தலுங்கடந்து தொல்லையன்றேயகமுகத்திற் றூங்குமென்னைப்பகிர்முகமா இல்லறத்திருந்துமல்லலுற வேனீர் வாஞ்சையானீரே. 12

என்றிவ்விதமாகத் தோத்திரஞ்செய்து முறையோவென் றோலமிட்டழும் விடோபாவை ஸ்ரீ பாதஸ்வாமிகள் வாரியெடுத்து மார்புடனணைத்துக் கடந்த மனமுருகிக் கண்ணீர்பெருகி ஒப்பிலா வென்னப்பனே இதுகாலபரியந்தம் நான் செய்துவந்த தபோபலமெல்லாம் உனக்குத் தத்தஞ்செய்தேன். உனது முன்னேழு பின்னேழு மரபினர் பாவத்தைக் கொய்தேன் உனக்குத் திரிமூர்த்திகளும் ஆதிசத்தியும் புத்திராய்ப்பிறக்க வரமளித்தேன். உனக்குபதேசஞ் செய்ததால் மிகவுங்களித்தேன். நீ பிர்மானந்தத்தால் தன்னை மறந்திருப்பாயாக அகண்ட சாம்பிராச்சியத்தைப் பெற்றிருப்பாயாகவென் றுணந்தமேலீட்டாலனேகவரந் தந்து, மிகவுமுவந்து ஓ விடோபா! என் மொழிதள்ளாமல் சந்தேகங்கொள்ளாமல் ருக்மாபாயுடன் சேர்ந்திரு சிலனாள் பொறுத்து சஞ்சாரமாதி செய்துவந்துன்னைப் பிரியாமலிருக்கின்றேன் இதைச் சத்திய வசனமென்று நம்புவாயெனப்புகன்று போவதற்கு விடைகேட்டார் விடோபா குருவாக்குக் கெதிர்வாக்குரையாக் குறையால் ஓ ஸ்வாமி சஞ்சல சுபாவமான இச்சமுசாரமுஞ் சமாதி நிஷ்டையைத் தவிர்த்துவிட்டாற்றனை பிர்மமென்கிற திடம நீங்கி படம் வோங்கி மாயாந்தகாரத்தில் மறைந்திருக்க நேரிடுமே அதை நீக்குதற்குபாயமே தென்று பணிய, ஸ்ரீ பாதஸ்வாமிக ளது நீங்கப் பிர்மத்தைத் தியானஞ் செய்வாயென்றுரைத்த வாக்கியம்.

---

## பரப்பிரம்மஸ்துதி.

விருத்தம்.

திருமாலீசனயன்போற்றுந் தேஜோன்மயமாமப்பரப்பிர்மம்
சித்தர்பத்தர்நற்றவருஞ் சீவன்முத்தர்பணிபிர்மம்
அரியரனர் வசிஷ்டர்க்கருள்பிர்மம் அகண்டானந்தபரப்பிர்மம்
அரியஜனகர்சுகமுனிவர்க் கன்போடறைந்தபரப்பிர்மம், 1

அருவாயுருவாயருவுருவா யைம்பூதமுமாம்பரப்பிர்மம்
அருளாம்பொருளாயனுபவமா யதுதானயபரப்பிர்மம்
குருவாம்பிர்மம்குணபிர்மங் குணமுங்கடந்தபரப்பிர்மம் (பாய்
குறியில்பிர்மந்தனைத்தொழுது கொடியதடைக்குவிடை கொடுப்

திருவருட்பொருளாகியபரப்பிர்மந் திருக்குவாகியபரப் பிர்மம், திசைமுகன்முதலானவர்பணிபிர்மந் தெருண்மறை காணொணாப்பிர்மம், அரன்றனக்காசானருள் பரப்பிர்மம் அசிபதத்தொளிர்பரப்பிர்மம், அருட்சுகர்க்கெழினாதரருட்பிர்மம்அணு மகத்தாகியபரப்பிர்மம் 3

திரிகரணத்தாலறியொணாப்பிர்மந் திரிபுடிகுணமிலாபிர்மம்
சித்தர் முத்தர்களுந்தேடிடும்பிர்மந் திக்குதேசாதியில்பிர்மம்
துரியமா நிலையிற்று றங்கியபிர்மஞ் சுயம்பிரகாசமாம்பிர்மம்
சுகப்பிரமந்தனையனுதினமுந் தொழுதருட் பிரமமாயிருப்பாய்

வேறு.

உலகமெலாம்நிறைபொருளே
யுயிர்க்குயிராகும்பொருளே வொழிவுக்கப்பால்
இலகியநிர்க்குணப்பொருளே
யிதுவதுவாகப்பொருளே யெழிலார்வேத
பலகலைக் கெட்டாப்பொருளைப்
பரமானந்தப்பொருளைப் பழையஞான
தலமாறுங்கடந்தேழாந்தலத்திலுறும்
பொருளையன்பாய்த் தாழ்ந்துவாழ்வாய்

வேறு.

பொன்னுலகோரும் போதனும்பிரகலாதனும் போற்றிய பொருளே, மன்னுநிஷத வாகமமறையா வாக்கிதத்தந்தமாம் பொருளே, உன்னுதற்கரியயோகமாதிகள் செய்யுத்தமர்க்

கரியவான்பொருளைத், தன்னையாராயுந் தவத்தினர்க்கெளி யதத்பரப்பொருளையே தொழுவாய், 6

அந்தமாதியுங்கீழ் மேலிலாப்பொருளை யற்புதவத்வி தப் பொருளைப், பந்தமில்சுகருக் கெங்குமேநின்ற பரப் பிர்மப்பொருளைமாவாக்யத், தைந்துமாப்பதங்கட்சி லட்சி யப்பொருளை யகனிதப்பொருளை ஞானிகட்கே. சொந்த மாம் பொருளை சுகந்தரும்பொருளைத் துரியமாம் பொரு ளையே தொழுவாய். 7

கனவினிற்சலர்சூழ்ந் திடவிருதைபனடிக்கிடநகைத் திடும்பொருளைக், கனவினிலொரு வீரியன் புரியோரைக் கண்டுக்களித்திடும்பொருளை, நினைவில்மிப்பிரமத் தொரு வருமறியா நீவிபைப்புணர்ந்துயரின்பந் தனையுறும்பொரு ளைச் சாட்சியாம்பொருளைச் சந்ததஞ்சிந்தனைசெய்வாய். 8

ஊமையன்கண்ட கனவினைப்போலவுரைப்பதற்கரிய தாம்பொருளை, ஆமையைப்போலவந்துபூதத்தை யடக்கெ னவுறும்பரம்பொருளை, நாமரூபங்கள் குணங்குறிபாசநாச மில்லாத வான்பொருளைச், சோமசூரியர்க ளொளிபலமழு க்குஞ் சோதியாம்பொருளையே தொழுவாய். 9

வேறு.

பிர்மங்கருத்தாஜகநாதன் பிரானந்தாதிபிறப்பில்லான், பர மம்பரமேச்சுரன்முதலோன் பகவன்விமலன்வேதார்த்தன் தருமக்கோடியோன்சர்வேசன் சர்வவியாபிதனிக்கோலான் கருணைலபஞதியநாமக் கடவுடன்னைப்பணிவாயே. 10

வேறு.

பூவலம்வந்துங்காணுப் புண்ணியஞ்செய்துங்காணு, நாவி னுற்றுதித்துங்காணு நற்கிரியையினுங்காணு, ஆவிபைமறி த்துங்காணு அஷ்டசித்தியினுங்காணு, மூவருங்காணுமோ னமுதல்வனைவணங்குவாயே. 11

குகைதனிலிருந்துங்காணுக்கோயிலுட்புகுந்துங்காணு மகம்பலசெய்துங்காணு வாழ்வினைத்துறந்துங்காணு, அக முகமுறுமானந்தவறிவினர்கண்டுங்காணுப், பகவனையகண் டானந்த பரமனைவணங்குவாயே. 12

வேறு.

அரனரியயனுமேத்திடும்போதவ் வசரீரியுரைத்தமந் திரத்தைத், தருமநற்சனக ஸனந்தருக்கன்று சங்கரன ரைந்தமந்திரத்தை, அருள்புலஸ்தியர்நாரதர் பிருகுவுக்கு மயன்மகிழ்ந்திசைத்தமந்திரத்தைப், பிரகலாதனனுதியர்க் கரிமொழிந்தபிர்ம மந்திரத்தினைச் செபிப்பாய். 13

ஞானமாம்பொருளே மோனமென்றுணர்த்தி தற்சுக மீயும்வாக்கியத்தைத், தானெனும் பொருளே வானமென் றுணர்த்திதன்மயமீயும் வாக்கியத்தை, மோனமாம்பொ ருளேஞானமென்றுணர்த்தி முத்திபையீயும்வாக்கியத்தை நானே நீநானென்னும் வாக்கியத்தைநாடோறுந்தியானஞ் செய்திடுவாய். 14

என்று விலட்சண லட்சண பாவத்தைக் கொடுக் கும் துவிதாத்வித தியானத்தை உபாசித்து மாயா மயக் கத்தை நீத்து மோன நிஷ்டையாற் பிரகாசித்து பர மாதம ஸ்வரூபமாய் விளங்கியிருக்கக் கடவாயென்று திருவாய் மலர்ந்தருளி எங்கும் குருரூபமாய்த் தெரியும் குரு துரியானுபவத்தை யுபதேசித்து ஸ்ரீபாதஸ்வாமிகள் சஞ்சாரசமாதி செய்ய அவ்விடம் விட்டகன்றார். இப் பால் விடோபா ஜீவதுரியம் பரதுரியமுங் கடந்த முப் பாழுக்கப்பாலான குரு துரியானுபவத்தால் எங்கணும் குருஸ்வரூபத்தையே கண்டு ஆனந்தங்கொண்டு மௌன ஸ்திதியை யடைந்திருந்தார். ருக்மாபாயி ஸ்ரீ பாத ஸ்வாமிகளை அநேகவிதமாகத்துதித்து அவருபதேசித்த மகா வாக்கியத்தை மனதிற்பதித்துத் தன் கொழுனன் திருவடிகளிற் பணிந்தழைததுக் கொண்டுபோய் வீட்டி னுள் வீற்றிருக்கச் செய்து அறுசுவை யுண்டிகளைச் சமைத்து அதிமதுர பாகமாக சமைத்துத் தாய்தந்தை ஆர்வலனுக்கும் படைத்து ஆனந்த சமுத்திரத்தில் மூழ் கினவள்போலக் களிப்புற்றிருந்தாள். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

விடோபா கிரகஸ்தாசிரம அத்தியாயம் முற்றிற்று.

---

ஆறுவது

## திரிமூர்த்திகளும் ஆதிசத்தியு முற்பத்தியான அத்தியாயம்.

கேளுங்கள் சித்தர்களே விடோபா குருவாக்கினை யைக்கடவாமல் மனைக்கு ளெழுந்திருக்கும் அற்புதத் தைக் கண்ட சிதோபந்து ஆனந்தவாரியிற் குளித்து அளவிலா வின்புடன் களித்து அருள்கொழுந்துபோற் றுளிர்த்து அழகுள்ள பூங்கொடிபோற் றளிர்த்து மரு கன்வந்த சந்தோஷத்தால் மறுநாள் அலங்காவதியிலிருக் கும் உறவினர்க்கும் மற்றைப் பிராமணர்களுக்கும் விரு ந்துசெய்ய யோசித்து சகல பதார்த்தங்களோடு அன்ன முஞ் சமைப்பித்துப் பந்திக்களையும் பார்ப்பாரையும் விருந்துண்ண அழைத்தார், அப்போ தவ்வூரிலிருக்கும் அந்தணரெல்லாம் அவரகத்தில் வந்துகூடி சிதோபந்தை நோக்கி, ஓ அந்தண! உன்னுடைய மருமகனுகிய விடோபா வாரணாசிக்குப்போய்ச் சன்யாசம் வாங்கிக் கொண்டு கண்டோர் வீட்டிலுண்டு பிரஷ்டனுய்போன துஷ்டனை விட்டில் வைத்துக்கொண்டு எங்களை விருக் துக்கழைத்துத் தான் கெட்ட குரங்கு வனத்தையெல்

லாக கெடுத்ததுபோல நீ கெட்டதன்றி எங்களையுங் கெடுக்கவா நினைத்தாய் அமிர்தம் புசிப்பவன் சுராபானம் புசிப்பதுபோலவும், வேதமோதுபவன் களாசாஸ்திரம் வாசிப்பதுபோலவும், பிராமணனு யிருந்தவன் நீச னுனவன்போலவும், சன்யாசியானவன் சமுசாரியாகிச் சகலரையுங் கெடுக்க உகந்தவனை உன்வீட்டிலிருந் திப்போதே ஓட்டிவிட்டாற்றான் நாங்களனைவரும் வந்தன்ன முண்ணுவோம் இன்றேல் உன்னைச் சாதியிலிருந்து விலக்க எண்ணுவோம் மறுத்துப் பேசினுலுனக்குப் பிராயச்சித்தமும் பண்ணுவோம் பண்ணினபின்பே உன்னைப் பந்தியில் வைத்துக்கொண் டுண்ணுவோம் என்கிற பற்பல வார்த்தைகள் காகூவென்று இரைச்சலிட்டுப்போகத் தொடங்கினுர்கள் அப்போது சிதோபந்து ஓ பிராமணுேத்தமர்களே! உங்க ளனைவோருக்கும் வந்தனஞ் செய்கிறேன் விபரீத வார்த்தைகள் பேசாமல் விடோபாவைப் பந்தியில் வைத்துக்கொண் டுண்பதற்குக் கூசாமல் யாதொரு சந்தேகமுங் கொள்ளாமல் ஏழையேன் செய்த விருந்தைத் தள்ளாமல் கிருபைகூருங்களென்று சகலரையும் வேண்டிக்கொண்டார். அதற்குத் தப்புள்ள விப்பிரர் சிதோபந்தை நோக்கி, அடா பிரஷ்டா! அடா துஷ்டா! நீ செய்யும் உபசாரத்தால் அபசாரத்துக் குட்படுவோமா? வர்ண வைராக்கியத்தை விடுவோமா? இந்த அனுசாரத்தைத் தொடுவோமா? உன்னையழைத் தினி யன்னமிடுவோமா? சீ சீ நாயே பேயேயென்று வாயில் வந்தபடி வைது அங்கொருவரையு முண்ணுமற் செய்து தங்கடங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

அது தெரிந்த விடோபா ஓ ஓ பிரபஞ்ச ஆசையிற் சிக்கி விஷயானந்த போகத்திற் சொக்கி மாயையென் னுஞ் சுழலிஜுழலும் உன்மத்த னென்னும் பயித்திய பேயிட்டோர் ஆக்குரோஷத்தோடு கூக்குரலிட்டு ஓடுகின்றுர்கள் ஓர்வேளை இங்கடைந்து கோபமென்னும் வாயால் குரோத மென்னும் பற்கள் பதிய விரோத மொழிக ளென்பதனுற் கடித்தால் அபிமான மென்னும் விஷந் தலைக்கேறி அகங்கார மென்னும் மயக்கம்மீறி அஞ்ஞான மென்னும் நரகத்தை யடைந்து பிரபஞ்ச மென்னும் துக்கத்தா லிடைந்து மெஞ்ஞான மென்னும் விவேகங் கலைந்துபோகும் ஆதலாலிதற் கிக்கணமே தப்பித்துக்கொண்டு போய்விடுவதே உத்தமமென் றுன்னிச் சிதோபந்தை வணங்கி, ஓ துய்யனே! முதற்பிடி சாதத் திலேயே பல யீக்கள் மடிந்திருக்கக்கண்ட சீலன் அருவருப்பின்றி யதை யுண்பதற்கும் விவாகமானவன்றே உதையுங் குத்தும் பிரயோகஞ்செய்த அறிவில்லா ஆடவனுடன் மெலிவான மெய்யுடைய மங்கை இங்கிதமாய்க் கூடி யிருப்பதற்கும் பேசினநாளே பெரும்போர் செய்யும் சம்பந்தியோடுமிகவும் மானஸ்தனுகிய விவேகி யுறவு செய்யவும் பழகினநாளே பழிபோட்டு அம்பலத்தில் குடிபல்கூட்டி வாட்டப்படுத்தின துஷ்டனுடன் அறிவிற் சிறந்தோன் சகவாசஞ் செய்யவும் வஞ்சைகொள்ளக்காரணம்போல் வீட்டையடைந்த மறுநாளே மனக்கோட்ட முண்டாகிய இந்நாட்டில் வேட்கையுற் றிருக்காமல் காட்டையடைவதே எனக் குறுதியான வபீஷ்டமென்ன சேஷ்டையில்லாக் காட்டை நோக்கிப் போக லுற்றுர்.

அப்போது வாட்டமுற்ற ருக்மாபாயி கோஷ்டத் துடன் கொழுநன்பின் தொடர்ந்தாள் சிதோபந்து விடோபாவைமறுத்து அந்தணரால் நமக்கக்கரையென்ன நமது வீட்டில் சுகமாயிருப்போம் வாருமப்பா வென் றழைத்தார். விடோபா மாமனுரை வணங்கி ஊரிலிருக்கப் பிணங்கி, ஓ ஐயா! அடியேன் பிரஷ்டனுன துஷ்டனென்ப துன்மையே யாதலால் இக்கொடியேனுல் தாங்கள் குடும்பத்துடன் பிரஷ்டமடைவது தகுதியா? இது விவேக மிகுதியா? பெரியோர்க்குறுதியான பகுதியா? வர்ணுசிரமதர்மம் கடக்கத்தகுந்த தொகுதியா நான் காட்டை யடைவதே உத்தமம் என்று போகலுற் றுர் சிதோபந்தும் அவர் மனைவியும் நாங்களும் கூடவே வந்து காட்டிலிருக்கிறோ மென்று பின் தொடர்ந்தார்கள் ருக்மாபாயி ஓ என் தாய் தந்தையே! தள்ளாமையான நீங்கள் காட்டிலிருந்து காலங்கழித்தல் வெகு துர்லபம் என்வாக்கை மறுக்காமல் நாட்டிலேயே யிருங்கள். அடியாள் பன்முறைவந்து பார்த்துப் போகிறேனென் றுறுதி கூறிக் கணவன் பக்திமீறிப் பதியோடு கூடியிருப்பதற் குக் கோரிப் பிரபஞ்சிகளோடு பேசுவதற்கு வேசாரி கணவனைத் தொடர்ந்து போனுள். விடோபா நாட்டுக் கொருநாள் பயணத்திலிருக்கும ஓர் மலைக்குகையில் தங்கி ஆனந்தம பொங்கிப் பிரபஞ்ச வெண்ணமிறந்து பேதா பேதங்களைத் துறந்து தன்னை மறந்து தலைவனிற் சலந்து மௌனசமாதியி லெழுந்தருளியிருந்தார். ருக்மாபாயி கணவன் சமாதி நிலையிலிருக்கும்போது தான் நாட்டையடைந்து மாதா பிதாக்களைப் பணிந்து வேண்டிய பதார்த்தங்கள் கொண்டுவந்து ஆர்வலனுக் குண்பித்து வந்து ஆனந்தமா யிருந்தார்கள். காட்டிலிவர்களிப்படியிருக்க ஸ்ரீபாதஸ்வாமிகள் ஒருநாள் மனமொத்த மாணுக்கனுகிய விடோபாவை நினைத்துத் திரிமூர்த்திகளும் ஆதிசத்தியும், மகவாய்ப் பிறக்க வரந்தந்தோமே அப்படி யாகிறது வெகு அருமை யல்லவா? சத்சிஷன்மேல் வந்த சந்தோஷத்தாலல்லவோ இப்படி வரமளித்து விட்டோம் வரங் கொடுத்தபடி மைந்தர்கள்

பிறக்காவிட்டால் நமது வாக்கியம் அசத்தியமாய்ப் போகுமே இதற்கென்ன செய்யலாமென்று யோசித்து நால்வரும் பிரசன்ன மாகும் பொருட்டு பரப்பிர்மத்தை ஏகாக்கிர சித்தத்தோடு தைலதாரைபோல தியானஞ் செய்யத் தொடங்கினர். இப்படி ஒரு முகூர்த்தம் தியானஞ்செய்யவே ஆதிசத்தியும் திரிமூர்த்திகளும் பிரசன்னமாய் ஓ பேதமிறந்த பிர்மஞானிகளே நிர்க்குணத் தொனிகளே எங்கள் வரவைக்கோரிய காரணமேதென்று கேட்க ஸ்ரீ பாதஸ்வாமிகள் நால்வருக்கும் வந்தனஞ் செய்து ஓ ஜகத்ரட்சகரே ! தேவரீர்களை எளியேனென்ன காரணத்தால்வரத் துதித்தேனே அது வுங்களுக்குத் தெரியாததோ தெரிந்து மிவ்வடியேனை கேட்கலாமோ நானுங்களை வரும்படியாகக் கோரியது நீங்கள் நால்வரும் எனது மாணாக்கனாகிய விடோபாவுக்குக் குழவிகளாய்ப் பிறக்கவேயாம் எங்களை வரவழைத்த காரணமேதென்று வினவியபோதே என் கோரிக்கையை நிறைவேற்றினீர்கள் காருண்யக்கடவுளாகிய நீங்கள் எம்போலொத்த எளியோர் வாக்கைக் காப்பாற்றல் வேண்டுமல்லவோ வென்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ்செய்ய அவர் தோத்திரத்துக் கிரக்கமுற்ற பகவான் ஓ அவதூதனே நாங்களிவ்வுலகி லவதாரஞ் செய்து வர்ணாசிரம தருமங்களையும் சகுண நிர்க்குண தியானங்களையும் நிலை நிறுத்த முன்னமே யோசித்திருக்கின்றோம் அது நிறைவேறவே உமது வாக்கி லிப்போக்கொத்த வாக்கியம் பிறந்தது. ஆனால் விடோபாவை யாரென்றுநினைத்தீர் அவர் சாட்சாத் வசிஷ்டாம்சமாகும் அதெப்படியென்றால் அயோத்தியில் அறுபதினாயிர வருஷம் அரசுபுரிந்த தசரதமகாராஜனுக்கு நானுமெனது சயனமும சங்கு சக்கரமும் புதல்வராகப்பிறந்து அந்த தசரதனார் மடியில் நான் வீற்றிருக்கும்போது மற்ற பாத சத்துருக்க லட்சுமணனும் பாலிய பருவத்தால் தாங்களும் தசரதன் மடியில் வீற்றிருக்க இடம்போதாமல் ஒருவரையொருவ ரடித்துக் கலக்கப்பட்டுக் கண்ணீர் விட்டு ஓவென்றழுத காரணத்தால் தசரதர் இருவரை மடியினும் இருவரை தோள்களினும் வைத்துக்கொண்டார் மடியில் வீற்றிருந்த லட்சுமணனும் அவ்வரசன் தோண்மேலுட்காருதற் காசித்து பாதசத்துருக்க திருவர் கரத்தையும் பிடித்திழுத்தோம அவ்விருவரும் புஜத்திலிருந் திறக்காமல் தந்தையின் கழுத்தை உறுதியாகக் கட்டிப் பிடித்துக்கொண்டு சற்றும் அசையாமலிருந்தார்கள்.

அப்போது நான் முன் பக்கமாய் நின்றும் லட்சுமணன் பின்பக்கமாய், நின்றும் தசரதனார் மிடற்றைக் கட்டிப் பிடித்துக்கொண்டு நால்வரும் நான்குபக்க மிழுக்க தொடங்கினோம் அதை பார்த்துக் கொண்டிருந்த கௌசலை சுமத்திரை கைகையும் சந்தோஷமேலீட்டால் காங்களைக்கொட்டி நகைத்தார்கள் தசரதனோ தனக்கனேக நாளாய்ப் பிள்ளைகளில்லாமல் ஏககாலத்தில் நால்வர்பிறந்து சுகமாய் வளர்ந்து இருவர்தோள்களி லேறிக்கொண்டும் ஒருவன் முதுகின்மீதும் ஒருவன் மார்பின் மீதும் பாதங்களைத்தாங்கிக்கொண்டும் மிடற்றைப் பிடித்துக்கொண்டும் தொங்குவதால் புளகாங்கனாய் மயிர்க்குச்செறிந்து ஆனந்த பரவசத்தால் என்னைத் தழுவிக்கொண்டு கண்ணீரைத் தாரை தாரையாய்ப் பெருகவிட்டார். அவ்விசயத்தை அருகிலிருக்கும் வசிஷ்டர் பார்த்து இராசன் சந்தோஷமேலீட்டால் ஆநந்த பாஷ்பங்களைச்சொரிந்தார் இவ்வுலகில் புத்ரபாக்கியமே பாக்கியம் என்று தந்தை மார்பிறுகத் தழுவிக்கொண்டிருக்கும் என்னைத் தன் தோண்மேல் வைத்துக்கொண் டின்புற வெண்ணங்கொண்டு தனதிரு கரங்களால் எடுத்துக் கொண்டு ஓர் தோண்மே லிருத்திக்கொண்டும் லட்சுமணனையும் ஓர் தோளிலிருத்திக் கொண்டும் இராஜ ஞபாசத்தை நிவர்த்தி செய்பவர்போல அபிநயங்காட்டித் தனக்குற்ற புத்ரவாஞ்சை வெளிப்பட்டு ஓ ஸ்ரீராமா பரந்தாமா உன்னையும் நான் புத்திரனாகப் பெரும்படியான நற்காலமும் வருமோ ஆனந்தபரவசமுந் தருமோ வென்று தன் கண்ணீரால் என் பாதத்துக்கபிஷேகஞ் செய்தார். உடனே அவ்வசிஷ்ட ரழகிய அட்சிகளிக்கு நான் திரிமூர்த்தி ஸ்வரூபமாய்த் தரிசனந்தந்தேன் வாஞ்சை யென்னும் வாரிதியைக்கடந்த அவ்வசிஷ்டர் ஓ பகவானே ! திரிமூர்த்தி ஸ்வரூபமாய்த்தோன்றும் நீ ஏகனாயிருந்தும என்கண்ணுக்கு மூவராய்த்தோன்றின காரணத்தால் அத்திரி மகாரிஷிக்கு மூவரும் புதல்வராய்ப் பிறந்த படியே எனக்குப் பிறந்த இந்தசரதனைப் போல் என்னைக் களிப்புறச்செய்வ தெப்போவென்று என் கழலுக்கு முத்தமிட்டார் உடனே பிர்மஞானம் பிறந்து தானுடிய வார்த்தைகளைத் தானே மறந்து தசரதனை நோக்கி, ஓ இராஜனே! நீசெய்த பாக்கியமே பாக்கியம் இப்புத்திர பாக்கியம் கலைக்கோட்டு மகாரிஷியினாலல்லவோ உமக்கே கிடைத்ததென்று பகர்ந்தார் தசரதன் வசிஷ்டரை வணங்கி ஓ என் குலகுருவே ! கலைக்கோட்டு மகாரிஷியை வரவழைத்ததும் புத்ரபாக்கியந்தருவித்ததும் நீரேயென்று முடியைச்சாய்த்து ஓபகவானே ! உமக்கே புத்திரவாஞ்சை மேன்மேலுமிருக்க என்போலியர்க் கில்லாமற் போகுமோவென் றுரையாடிக் குருசந்

கீர்த்தனங்களைப்பாடி வசிஷ்டரைக் கொண்டாடினார். பிரபஞ்ச பாசமில்லாவசிஷ்டர் சற்றுநேரமிருந்து எங்களிருவரையும் இராஜன்மடியி லுட்காரவைத்து அரசன்பால் விடைபெற்றுக்கொண்டு தன்னிருப்பிடஞ் சேர்ந்து தன் மனைவியான அருந்ததியை நோக்கி ஓ பெண்ணே! எனக் கென்றுமில்லாப் புத்ரவாஞ்சை இன்றுவந்தது. அவமானந்தந்தது அதாவது திரிமூர்த்திகளையும மைந்தர்களாய்ப்பெற எண்ணங்கொண்டே னென்று ரது கேட்ட அருந்ததி ஓ சுவாமி! தெய்வசபையில் நாரதர் அநுசூயாதேவியைப் புகழ்ந்தபோது திரிமூர்த்திகளையும் நான் புத்திரராகப்பெறுவ தெப்போவென்றும பார்வதி இமோற்பர்வத ராஜனுக்கு மகளாகிப் பரமசிவனைக் கலியாணஞ்செய்தபோது இப்பராசத்தியை நானெக்காலத்தில் புத்திரியாய்த் பெறுவேனென்றும் வாஞ்சை கொண்டிருக்கிறேனென்றாள் அத்தருணத்தில் நாரதர் அவர்பாலடைந்து வசிஷ்டரை நோக்கி ஓ முனிசிரேஷ்டரே! உம்முடைய இச்சையும் உமது மனைவியினிச்சையும் மற்றனேக ரிஷிகளினிச்சையும் கலியுகத்திற்றீரும் புத்ரருக்காய்ப்பேசியது போதுமென்றார் வசிஷ்டர் நாரதரறிந்தால் நாற்றிசையும் அறியுமேயென்று அந்த யாழ் வல்லோனைத் தொழுது, ஓ பகவானே! நானும் என் மனைவியும் திரிமூர்த்திகளையும் ஆதிசத்தியையும் மகவாகப்பெற்றெடுக்கக் கலியுகத்தில் மானிடராய்ப் பிறக்கும்போது நீ எங்களுக்கு ஆசானாகவரவும் அக்காலத்திலேயே இவ்வார்த்தையை உமது வாக்கா லுரைக்கவும் அதுவரையில் மறைந்து வைக்கவும் வேண்டுகிறேனென்றார் அப்படியே செய்வேனென் றுரைத்த நாரதராகிய நீரிக்கலியுகத்தில் பிறந்து ஸ்ரீ பாதஸ்வாமிகளென்றுபேர் பெற்றீர் வசிஷ்டரும் அருந்ததியும் விடோபாவாகவும் ருக்மாபாயாகவும் பிறந்தார்கள் நானுமிவர்களும் உன் வாக்கியப்படி விடோபாவுக்குப் புத்திரராய்ப் பிறக்கப் போகிறோம். நீ ரவதயிரியப் படவேண்டாமென்று திருவாய் மலர்ந்தருளி மூவருடன் அந்தர்த்தானமாய் வைகுந்தமடைந்தார். அவ்வற்புத வசனங்களைக்கேட்ட ஸ்ரீ பாதஸ்வாமிகள் பிரமித்து மர்மம் வெளிப்படுத்தாமல் பிர்மக்ஞானத்தில் சொக்கியிருந்தார் இப்பால் பரமசிவனைப் பகவான் நோக்கி, ஓ மகாதேவா! நீர் முந்திப் போய் விடோபாவுக்கு மைந்தனாய்ப் பிறந்து களிப்புறச் செய்வீர் நாங்கள் மூவரும் உமக்கிளையவரா யுற்பவிக்கிறோமென,

அதற்குப் பரமேசன் ஓ பகவானே! உமதிஷ்டப்படி நானே முந்திப்போய் விடோபாவுக்குப் புத்திரனாகின்றேன் ஆனால் நான் துருவாசனாதி யவதாரங்களெடுத்து எவனையே புகழ்ந்துக்கொண்டேன் நீரோ வியாசாதி அவதாரங்களெடுத்து உம்மையே சிரேஷ்டப்படுத்தினீர் இதனையே வற்புறுத்தி அனேக ரிஷிகள் சைவ வைஷ்ணவமென்னும் இருபிரிவாகப்பிரிந்து சதுர்வேதங்களைப் பிறருக்குப் போதிக்காமல் மறைத்து ஆறுசாஸ்திரங்களிலும் பதினெண் புராணங்களிலும் தங்கள் கருத்தை வெளிப்படக்காட்டிச் சகுணத் தியானத்தையே விஸ்தீரணஞ்செய்து நிர்குணதியானத்தை மறைத்து உபநிஷதங்களில் காட்டாமற் காட்டின காரணத்தால் பிர்மக்ஞானம மறைந்து அஞ்ஞானம் நிறைந்து கர்மகாண்டத்தால் கட்டுப்பட்டு ஆத்மாவையாராய்ந் தறியுமுணர்வுகெட்டு ஞானக்கண் துலங்காமல் ஊனக்கண் மலங்காமல் நிர்க்குண தியானிகளாகிய இஸ்மாயில் இஸாக்கென்பவரா லேற்படுத்தப்பட்ட மதங்களிலனேகர் பிரவேசித்து அரியாகிய நம்மைத் தூஷித்துப் பிரஷ்டத்துவ மடைந்தார்கள் இதுகாரணத்தால் நாமிப் புவியிலவதரித்து நிர்க்குணத்தையே விஸ்தீரணமாகப் போதித்து ஈனமதஸ்தரைவாதித்துக் கொலையாதி பஞ்ச பாதகங்களை நிக்கிரகித்து நமக்குப் * பூசனை செய்யும்படி செய்யவேண்டு மென்றுரைத்தார். அதற்குப் பிரமாவும் ஆதிசத்தியும் இப்படிச்செய்வதே உத்தமமென் றுரைந்தார்கள். அதற்குப் பகவான் நானுமுங்களிஷ்டப்படியே நடந்து கொள்ளுகிறேன் ஆனால் தன்னையறிந்த பிர்மக்ஞானியும், சகுண தியானத்தால் பரவசமடைவதால் சகுணத்தையும் பலர்க்கு விளங்கச்செய்து நிர்க்குண தியானிகளாகிய புறமதஸ்தரைச் சகுணதியானிகளால் பங்கப்படுத்துவோம் இதனால் சகுண தியானத்தை வெறுக்கும் நிர்க்குணதியானிகளும் சகுணோபாசனைக் குட்பட்டுக் கிர்தார்த்தராவார்கள் ஆகாயத்தை எட்டிப்பிடிப்பது போல் ரூபமாகிய பரப்பிரமத்தை அபக்குவர்கள் தியானித்துப் பலனடையாமலும் ரூபமாகிய நம்மைத் துதித்து வருகாமல் துவேஷித்து நரசென்மமடையாமலும குறுக்கி யோனிகளிற சுழன்று அதோகதிக்காளாகினார்கள். அன்றிப் பேதமிறந்த பிரமக்ஞானியும் உலகோபகாரநிமித்தம் ஜபதப தியான தானாதிகள் அவசியம் செய்ய வேணடுமென்று முன்னமே அனேக சாஸ்திரங்களிற் கண்டிருக்கிறதெனறு பல வார்த்தைகளாடி ஓ வாமதேவா! நீர்போ யவதரித்துப் பிரமக்ஞானத்தையும நிர்ச்சலனமான மோனத்தையும விளக்குவீராகவென்று மற்றிருவருக்கும விடை கொடுத்..

---

* குறள்-சிறப்பொடு பூசனை செல்லாதுவானம், வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

ஒனுப்பினுர். இப்பால் பரமேசன் தன்னம்சத்தை விடோ
பாவின் வீரியத்தில் பிரவேசிக்கச்செய்து அவருடைய
நிஷ்டையைக்கலைத்து ருக்மாபாயுடன் கூடுமபடியாகச்
செய்து அவ்வுத்தமியின் கர்ப்பத்திற்றங்கிப் பூரணமான
பின் இகலோகமும் பரலோகமும் ஈடேறும் பொருட்டு
அவதரித்தார் உடனே அக்குழவின்மேல் தேவர்கள்
சலசலவென்று பூமாரிபொழிந்து தேவதுந்துபியைமுழக்
கினுர்கள். அழகான புத்திரனுற்பத்தியானதும் கக
னத்திலிருந்து பூமாரி பொழிந்ததும் பார்த்த விடோ
பாவும் ருக்மாபாயும் களிசாகரத்திற் படிந்தவர்களாய்
அன்பாகப்பாராட்டி இன்பாகச்சீராட்டி எல்லாவற்றை
யும் வெறுத்த பரமாம்சனைப்போல் அசையாமல் தறி
போலெப்போழ்து மிருக்கும் குழந்தைக்கு நிவர்த்தி
சாதுவென நாமகரணமிட்டு பாதுகாத்துவந்தனர்.

பின்பு பகவானம்ஸம் விடோபாவை மயங்கச்
செய்து ருக்மாபாயின் கர்ப்பத்தடைந்து விர்த்தியாய்
ஜனிக்கும்போதே தந்தை களிக்கும்படியான ஞான
வார்த்தைகளாடிக்கொண்டே பிறந்தார். அதனுல் சதி
பதிகளதிசயித்து அக்குழவிக்கு ஞானேசுவரரென்று
பேரிட்டுக் களிப்புற்றிருந்தார்கள். பின்பு பிரமாம்ஸம்
ருக்மாபாயின் அகட்டிலடைந்து வளர்ந்து உற்பவிக்கும்
போது உலர்ந்த விருட்சங்கள் பச்சையாகித் தனிர்ந்த
படியாலும் இறந்துகிடந்த ஈயெறும்பு முதலானதும்
உயிர்பெற் றெழுந்தபடியாலும தாய்தந்தை இப்பாலன்
றன்னிமித்தத்திற் பிறந்த காரணத்தால் சோபான் தே
வென்று நாமமிட்டு வளர்த்தார்கள். இப்பால் ஆதிசத்
தியினம்ஸம் ருக்மாபாயின் வயிற்றிலடைந்து வளர்ந்து
உற்பத்தியாகும்போது மோனமே முக்தியென் றுரைத்
துக்கொண்டே பிறந்தகாரணத்தால் முக்தாபாயென்று
நாமமிட்டு நான்கு சிசுவையும் அன்பாய்ப்பாலித்து
ஆனந்தவாரியிற் படிந்திருந்தார்கள் கேட்டீர்களோ
சித்தர்களேயென்று பின்னும நாபாஜிசித்தர் சொல்லத்
தொடங்கினுர்.

திரிமூர்த்திகளும் ஆதிசத்தியு முற்பத்தி
முற்றிற்று.



## ஏழாவது
## விடோபா சஞ்சலத்துக்காற்றுமல் பரப் பிரமத்தைத் துதித்த அத்தியாம்.



ஸ்ரீமந்நாராயணருடைய திருத்தாட் டாமரைகளை
அத்தியந்த பத்தியோடு தியானஞ் செய்தேத்தும் சித்தர்
களே! ஸ்ரீ கயிலாசவாசனும் ஸ்ரீ வைகுந்தவாசனும்
பிரமதேவனும் ஆதிசத்தியும் தனக்குக் குழவிகளா யவ
தரிக்கும்படியான பாக்கியம் பெற்றும் பத்தர் சித்தர்
களுக்கு மரிதான பிரமவித்தையைக் கற்று அகண்டித
மான பிரமானந்தத்திற் பொருந்திப் பேதா பேதங்க
ளில்லாமற் றிருந்திப் பெருந்தவத்தில் மனநாட்டமுற்
றிருந்த விடோபாவானவர் (கடந்தஞானியுங் கடப்பிரா
மக்கள்மேல் காதலென்கிற ) பழமொழிப்படியே பிள்ளை
கள் வாஞ்சைமீறிப் பிரமக்ஞானம்மாறிக் காளைகளாசை
யாற் கட்டுண்டிருந்தார். ருக்மாபாயி வாரத்துக்கோர்
தரம் நாட்டிற்சென்று தந்தைவிட்டிருக்கும் பண்டங்
களைக்கொண்டுவந்து பாகஞ்செய்து பதிக்கும் பாலருக்
கும் படைத்துக்கொண்டிருந்தாள். இப்படி ஆறுவரு
ஷங்கள் கழியத் தந்தையினுஸ்தியெல்லாம் நாஸ்தியாயச்
சீதோபந்து பிட்சை யெடுப்பதற் காரம்பித்ததறிந்த
ருக்மாபாயி தன் பதியைப்பணிந்து ஓ ஸ்வாமி! நம்மால்
எனது தந்தை பிச்சையெடுத்துண்பதற் காரம்பித்தார்.
இனிகாட்டிலிருந்து இக்குழந்தைகளைக் காக்க நம்மா
லாகாது ஆதலால் நாட்டிற்செல்வதே உத்தமமென்று
வணக்க, விடோபா சம்சாரத் தொல்லைபாலல்லவா
சமாதிநிலை தவிர்த்தது என்றுன்னிச் சண்டிக் குதிரைக்
குச் சறுக்கினதே சாக்கென்பதுபோல் ஓ பெண்ணே!
நீ குழந்தைகளோடு நாட்டிற்சென்று சுகமாயிரு நான்
காட்டிலேயே காலங்கழிக்கிறேனென ருக்மாபாயி ஓ
என்பிராணநாயகா! காட்சியளிக்கும் மாட்சிமையாயுப
கொழுநனைப்பிரிந்த குலமங்கைய ருலகிலுண்டா? பிரிந்து
துணிந்திருப்பவர்க்குப் பரகதியுண்டா? நீரிப்படிச்சொல்
வது தவத்தின்மேலாசைகொண்டா? அல்லது வேறெண்
ணங்கொண்டா? பிள்ளைகளாலல்லவோ இச்சள்ளை நேரிட்
டது குழந்தைகளைக்கொண்டு போய்விட்டு வருகிறே
னென விடோபா கும்பிடப்போனதெய்வம் குறுக்கே
வந்ததைப்போலச் சந்தோஷித்து இவள்நாட்டிற்சென்ற
வுடன் நாம் காட்டிற் போகலாமென்கிற எண்ணத்தால்
இது நல்லவுபாயம் இவள் செய்வது சகாயம் என்று ஓ
பெண்ணே! என்னிருகண்ணே! நாட்டிற்கொண்டுபோய்ச்
சீக்கிரம் விட்டுவாவென, ருக்மாபாயி பதிவார்த்தைக்
கெதிர்மொழி சொல்லாமல் மக்களை யழைத்துக்கொண்டு
காட்டையடைந்தாள் விடோபா இது நல்லதருணம்
இந்த சமுசாரத்துக்குச் சரணம் நமக்கேனிந்த ஆவர
ணம் இதனுலல்லவே ஜனனமரணம் என்றுதுணிந்து
சத்குருநாதனைப் பணிந்து தபோவெண்ண யோகி
அவ்வரையை நீங்கி மக்களாசையா லேங்கிக் காட்டிற்

செல்லப் பின்தாங்கி மலைபினருகேவருவார் யாருக்கார் துணையென்று காட்டிற்செல்வார் காலெழாக் குறைபால் பர்வதத்தண்டை வருவார் விவேகமேலீட்டார் பின்னுங் காட்டிற்செல்வார் இப்படி வெகுநேரம் ஊஞ்சலைவது போல் மலைக்கும் கானகத்துக்கும் பலதா மலைந்து திரிந்து முடிவில் மக்களாசை பிறந்து மனதிற் றெளிவுபிறந்து மனதின் விருத்திகள் குறைந்து பிரமஞ்ஞானம் நிறைந்து பேரின்பத்தின் மனமுறைந்து அடர்ந்தகாட்டிற் பிரவேசித்துக் கடவுளை மனதிற்பூசித்து இது நல்ல ஸ்தானமென்று யோசித்துச் சமுசாரத்தை தூஷித்துச் சன்யாசத்தைப் பூசித்துக் குரு சங்கீர்த்தனங்களைக் கோஷித்துப் பிரமானந்த நிஷ்டையிலிருக்க ஆசித்துப் பத்மாசனத்தில் வீற்றிருந்து தேகத்தை அசைக்காமல் ஊனக் கண்களை மூடி ஒன்றுன பிரமத்தை பாடி ஓயாத வெண்ணங்களால் வாடி உவகையிற் பிரமத்தை நாடி இந்திரியங்கள் விஷயங்களைப் புல்லாமல் மடக்கி மன வெண்ணங்க ளோங்காம லொடுக்கி மனதைக் கூடஸ்தப் பிரமத்தி லொடுக்கி மாறெண்ணம் வாமல் முடிக்கி ஞானக்கண் ஒளிபெற்றுத் துலங்க நானென்னு மகங்காரங் கலங்க மாயையிலிருந்து வெளிப்பட்டு அனேக காலமாகத் தொன்றுதொட்டு வரும் வாசனைக ளொன்றுபட்டு ஆகாமியத்தைக் கொன்றுவிட்டுச் சஞ்சிதத்தை ஞானக்கினியாற் சுட்டுப் பிரமானந்தத்தி லொன்றுபட்டுப் பிராலபதமென்னும் தேகஸ்மானை அடிபட்டுப் போகும்படியாகச் சித்திர தீபம்போலவும் நிவாதீபம்போலவும் நிர்ப்பநிஷ்டையிற் றிகழ்ந்திருந்தார்.

இவரிங்கிப்படியிருக்க ருக்மாபாயி குழந்தைகளை யழைத்துக் கொண்டுபோய்த் தந்தை தாயைக் கண்டு எந்தையே என்னைவளர்த்த தந்தையே தாயே என்னை யீன்ற ஆயே இக்குழந்தைகளை நீங்களே பாதுகாக்க வேண்டியதல்லது வனத்திலிருக்கும் எங்களாலாகாது ஆதலாலிங்கு விட்டுப்போக வந்தேனெனச் சிதோபந்து ஓ என் செல்வப்புத்திரியே! கற்பிற்சிறந்த தாத்திரியே மக்களுக்காக மகா ரிஷிகளெல்லாம் மாதவஞ்செய்ய அருமையான தபோ பலத்தாலும் ஆசிரியர் ஆசீர்வாதத்தாலும் பிறந்தகுழந்தைகளைப் பிரிந்து விடோபா எப்படி மனந்துணிந்திருப்பார், நீதான் எப்படி துணிவுற்றிருப்பாய் அரைக்கண முன்னைவிட் டிப்பாலக ரெப்படி யிருப்பாரகளென்ன ருக்மாபாயி தந்தையை வணங்கி இக்கான்முனைகளால் என் பதிக்குள்ள பிரமஞ்ஞானக் தவிர்ந்துபோகும்படியா யிருக்கின்றது ஏனெனின் என்னேரமும் இவர்களுக்காகப் பண்டு பலாதிகள் கொண்டு வரவும், ஆழ்ந்த சுனையிற் சென்று ஜலங் கொண்டுவாவும், மிருகங்களாற் சேதம் வாாமற் பார்க்கவும் பாதுகாக்கவும சரியாயிருக்கின்றது. இதனால் அங்கங் கறுத்து மனம் வெறுத்து வெகுநாளாய்ப் பொறுத்து மக்கள் பாசத்தையறுத்துக் குழந்தைகளை நாட்டில் விட்டுவாவென்று வாய்விட்டறைந்தார். கொழுநன் வாக்கியத்தை மறுத்தல் மதிதனில் மிருந்த பதிவிரதைகளுக் கடாது மறுத்தால்தோஷம் விடாது. அன்றி நான் வீட்டுக்கு வந்து போவதக்குள் அவர்சமாதிநிஷ்டையில் தன்னை மறந்திருந்தால் மக்களை மிருகங்கள் கொன்றுவிட்டாலும் கொன்றுவிடும் தின்றுவிட்டாலும் தின்றுவிடும் அல்லாமல் சத் புத்திரர்களுக்குத் தந்தை வாக்கே வேதம் சந்சிஷர்களுக்கு சத்குருவாக்கே வேதம் பதிவிரதைகட்குப் பதியின் வாக்கே வேதம் ஆதலால் பாலகரைக் கொண்டு போய் இவர்கள் பாட்டனரிடம் விட்டுவாவென்றறைந்த வாக்கியத்தை நான் மறுக்கலாமா? சற்றும் பொறுக்கலாமா? பதியை வெறுக்கலாமா? தவத்தைச் சுறுக்கலாமாவென்று பணியச் சிதோபந்து உன்பதியை நாட்டிலழைத்துக்கொண்டு வந்து சுகமுற்றிருக்கலாமே தவத்தைப் பெறுக்கலாமே காட்டிலிருப்பானேனென, ருக்மாபாயி பதிவாக்கியம் மறுக்கவும் மறுத்தோருரையுரைக்கவும் பதியைப் பிரிந்திருக்கவும் கூடாததால் சீக்கிரம் நானவரிடம் போகவேண்டுமென்று குழந்தைகளுக்கு முத்தமிட்டுக் கண்ணீர் தாரைதாரையாய் விட்டுத் தாய் தந்தையைக் கும்பிட்டு நாட்டிலிருக்கப் பின்னிட்டுக்காட்டிற் செல்ல முன்னிட்டுப் போகும்போது குழந்தைகள் அம்மா அப்பவென்று கூப்பிட்டுக்கொண்டே மறுக்கவும் கண்டோர் மக்களைவிட மணாள னதிகமாவென்று வெறுக்கவும் தாயானவள் குழந்தைகளுன்னை விட்டெப்படி யிருக்குமென்றழவும் தந்தை யெங்களுக்குக் கிவ்வித சங்கடந் தகாதோ வென்று தெய்வத்தைத் தொழவும் பார்த்த ருக்மாபாயி பதியினைப் பிரிந்திப் பார்தனில் பாவைபாருக்கலாமா? இது நீதியாகுமாவென்று மக்களை வெறுத்து மணாளனை யடுத்துக் கற்பினிலைமையைக் காட்டிய தமயந்தி அற்பமானவளா பிரபஞ்சத்தோர்க்கச்சமுற்றுப் போனவளாவென்று பட்டணத்தை விட்டு வெளியே புறப்பட்டுத் தோப்பு துறவுகளையுங் கடந்து கொஞ்சதூரம் நடந்து மக்கள் வாஞ்சையா லிடைந்து சொல்லொணுத்துன்பமடைந்து காதலாசை மீறிக்காவலனாசைமாறி மைந்தரைப்பார்க்க ஆசித்து மண்டலத்திற் பிரவேசித்து மைந்தரை வாரியெடுத்து மாருத்துன்பத்

தைக்கெடுத்துச்சற்றுநேரமிருந்து கணவனைநினைத்துகண்
ணீரால்நனைந்துமக்களைப்பிரிந்து மணவாளன் பாற்போகத்
துணிந்து பாம்பைப் போலவும் கொடிகளைப் போலவும்
பன்னிப் பிடித்துக் கொள்ளும் பாலரை விட்டுப் பிரி
வதற்கும் கணவன்பாற் செல்லுதற்குங் கூடாமல் இரு
புறமும் அக்கினி மூண்டெரியும் மூங்கிற் குழாய்க்குள்
ளலையும், எறும்பைப்போலக் காட்டுக்கும் நாட்டுக்கும்
பன்முறை யலைந்து பாலராசை கொலைந்து மலைச்சார
லிற் சென்று வாஸ்தானத்திற்போய் நின்று மணாளனை
நாடிக் காணாமல் வாடிச் சுற்றுபக்கங்களி லோடி அதிக
பரபரப்போடுந் தேடிப் புதருகளில் நுழைந்து களையால்
கீழ்விழுந்து ஐயோ பொழுது போச்சுதே எனக்கே துன்
பம் வாய்ச்சுதே என்று செடிகளில் மயிர்சிக்கவும் தோள்
புயங்க ளிடிக்கவும் முட்களாலுதிரம் பெருகவும் கற்
களால் கண்ணீர் பெருகவும் உடல்வேர்த் தருகவும்
உள்ளங் கலங்கி யுருகவும் காடியும் புலியும் மிரட்டவும்
கரியு மெருமையு மதட்டவும் நடுங்கி ஒடுங்கிக் குருதி
யாலுங் கண்ணீராலும் நனைந்து கொழுநனை அடிக்கடி
நினைந்து ஓ என் பிராணநாயகா! பிராணசிநேகா!
சர்வசங்க பரித்தியாகா! சதானந்தபோகா! நீ யிப்படி
மோசஞ்செய்வா யென் றறியாமற்போனேனே ஆரூத
துபாத்துக் குள்ளானேனே மணம்வேண்டா மென்று
மறுத்தவா மாதாபிதாவையும்வெறுத்தவா காமக்கடலைக்
கடந்தவா காசினித் தலங்களுக்கு நடந்தவா மோட்ச
வீட்டில் நுழைத்தவா மோனானந்தத்திற் றழைத்தவா
மிருகங்களின் கர்ச்சனையால் மனம்நடுங்குகின்றதே உன்
னைக் காணாக் குறையால் பிராணனும் ஒடுங்குகின்றதே
இருட்டால் வழியுந் தெரியவில்லையே ஏனோ தந்தாயிவ்
வளவு தொல்லையே இன்னம் உனது மனமிரங்க வில்
லையே எனக்குன் அருமைத் தரிசனந் தரவில்லையே மாத
ரச்சத்தால் மரண மடைவாரே மணாளன்மே லிச்சை
யால் மிகவும் இடைவாரே என்னை நீ யிவ்விதஞ் சோதி
க்கலாமோ இருளினு மறைவுற்றுப் பேதிக்கலாமோ ஓ
புருஷோத்தமா புண்ணிய புருஷா பூததயாளா புண்ட
ரீகத்தாளா ஓ என் தெய்வமே என்னுயிரே தனித்திவ்
விருளி லுன்னைத் தேடித்தேடித் திரிகிறேனே பதறிக்
கதறி வெகுநேரமாய்ப் புலம்புகிறேனே ஏனென்று பேச
லாகாதா இன்னமோர் கணத்தி லென்னுயிர் போகாதா
இன்னம் ஒளித்திருப்பதற் கிச்சையா எளியாளுடன்
பேசவுமலச்சையா என்கிற பலவார்த்தைகளாடிக் கொண்
டே இராத்திரி யெல்லாந் தேடிச் சூரியோதய மானதே
மலைக்குகைகளிலும் புதருகளிலும் பர்ணசாலைகளிலும்
அடர்ந்த சோலைகளிலும் பார்த்து அங்கம் வேர்த்து ஓ
மயில்களே குயில்களே என் மணாளனைக் கண்டீர்களா
ஓ கரிகளே நரிகளே என் காவலனைப் பார்த்தீர்களா ஓ
புலிகளே புனுகுபூனைகளே என் கணவனிங்கு வந்தானா
ஓ காகங்களே யூகங்களே என்னுர்வல னுங்களுக்குத் தரி
சனந்தந்தானா வென்று மிருகங்களையும் பட்சிகளையுங்
கேட்டுக் கொண்டு வாயில் வரும் மொழிகளை விண்டு
பிள்ளைக ளாசையாலல்லவோ பிராண நாயகரை யிழந்
தேன் பிரியாத் துன்பத்தாற் குழைந்தேன் ஓ கர்த்தனே
பரிசுத்தனே பரமேசனே ஜகதீசனே பரிபாலனே மறை
மூலனே பிள்ளைகளா லென்ன பேற்றைப் பெற வென்
ணியோ பிராணநாதனைப் பிரிந்தேன் இடரால் வயிறெரிந்
தேன், ஓ பகவானே! பகவானே! என் பிராணநாய
கனை மிருகங்கள் கொன்றதோ அல்லது தின்றதோ
வெருப்பால் வேறிடம்போனாரோ வேஷ்டைடால் தனிய
னானாரோ ஒன்றுந் தெரியவில்லையே ஒன்றுந் தோன்ற
வில்லையே ஓ தெய்வமே! மனந்துணிந் தெப்படி யிருப்
பேன் என்மேலுனக் கிவ்வள வறுவறுப்பேன் எனக்
குற்ற தீயவிதி யிவ்வுலகிலியாருக்காவ துண்டா யாருஞ்
செய்யாப் பாவம் நானொருத்தியே செய்த துண்டா
பதினாலு வருஷங்களாய்த் துக்கமே துணையா யிருக்
கின்றதே விசனமே குடியா யிருக்கின்றதே ஓ ஆதி
காரணா! சர்வபரிபூரணா! அனந்தசயனா! கமல நயனா!
பாண்டுரங்கா! ஸ்ரீரங்கா! நாராயணா! பரம பாராயணா
வென் றிவ்விதமாகத் தோத்திரஞ் செய்துக்கொண்டே
அடக்காரடவியில் ஓலமிட் டழுதுக்கொண்டே பார்த்த
விடங்களிலேயே பலதரம் பார்த்து வாட்டத்தோ டிருக்
கும்போது நாட்டில் அன்னையைப் பிரிந்த பாலர் நால்
வரில் நிவர்த்திசாமி இதோ வருகிறே னென்று போன
மாதா மறுநாள் மாலை பரியந்தம் வராக்குறையாலும்
மார்மேலுந் தோண்மேலு மேந்திக் கொண்டிருந்த தந்
தையை பிரிந்ததாலும் மனம் மயங்கி மிகவுந் தயங்கி
ஓ தந்தையே தந்தையே என்னை வளர்த்த எந்தையே
எந்தையே ஓ என்னருமைத் தாயே தாயே என்னை
யீன்ற ஆயே ஆயே எங்களை விட்டெங்கே போனீர்கள்
போனீர்கள் எமகள்மேல் நிராசையே னானீர்கள் ஆனீர்
கள் என்கிற பல வார்த்தைக ளாடிக்கொண்டே தாய்
போன மார்க்கத்தை நோக்கிப் போகலுற்றார். அப்
போது ஞானேசுவரர் ஓ ஐயா ஐயா எனைக் காதந
மெய்யா மெய்யா எனதன்புள்ள ஔவையே ஔவையே
எனைப்பயின்ற கௌவையே கௌவையே உங்களை விட்டு
நாங்க ளிருப்போமா இருப்போமா இருந்துயிர் தரிய
போமா தரிப்போமா வென் றுரைத்துக் கொணடே

தலையன் பின்றொடர்ந்து போகலுற்றார் அத்தருவாயில் சோபானதேவ் ஓ அத்தனே அத்தனே வாஞ்சையுள்ள கர்த்தனே கர்த்தனே அன்ன மூட்டின, அன்னையே அன்னையே இதோ வருகிறேனெனச் சொன்னையே சொன்னையே இதுபரியந்தம் வாராமலிருக்கும் காரணம் ஏதோ ஏதோ எவரால் வந்த வாதோ வாதோ வென்று கண்ணீர்வடிய முன்னோர் பின்னாகவே செல்லலுற்றார். அத்தருணத்தில் முக்தாபாயி ஓ தாதாயே தாதையே இதுவென்ன வார்த்தையே வார்த்தையே ஓ அம்மனே அம்மனே பாலூட்டுந் தம்மனே தம்மனே ஓ அம்மா அம்மா நீவருகிறேனென்று போனது சும்மா சும்மா ஓ எங்கள் எம்மை அம்மை நீ பிரிந்தெங்கு போனாய் எம்மையென அழுதுக்கொண்டும் தாயைப் பார்க்க ஏக்கங் கொண்டு முன்னவர் பின்னவர் ஓடத் தொடங்கினார்கள். அதை யறிந்தச் சிதோபந்தும் அவர் மனைவியும் அதிக பரபரப்போடும்போய்க் குழந்தைகளை மறுத்துக் கொடிய விதியை வெறுத்து அப்பா ஒப்பிலாச் சிகாமணிகளே என் னிரு கண்மணிகளே உங்கள் தாய்தந்தை இதோ ஒரு நொடிக்குள் வருவார்கள் தரிசனந் தருவார்கள் இதற்குள்ளென் வோடுகிறீர்கள் சோபமுற்றேன் வாடுகிறீர்களென்று காலவரையும் விட்டிற் சொண்டுவந்து பண்டு பலாதிகளைத் தந்து சந்தோஷப் படுத்தினும் கண்ணீர் விட்டு ஐயா ஐயா அம்மா அம்மா வென்று தாயைப் பிரிந்தழுதழுதக்கொண்டு மறுநாள் சாயந்திர பரியந்தம் அழத் தொடங்கினார்கள். ஆதனல் சிதோ பந்துவின் மனங்கலங்கி. ஓ தெய்வமே! எங்களையும் இச்சிசுக்களையும் இவ்விதமாய்ப் பாதவிக்கச் செய்வ தனக்கழகோ அந்த விடோபாவை நாட்டிற் கொண்டுவந்து சேர்க்கலாகாதா உனதருட்கண்ணு விப்பாலகரைப் பார்க்கலாகாதா ஆகாரமும் நித்திரையுமின்றி அறியாக்குழந்தைகளல்லோ யப்பனைப் பிரிந்திருக்க மாட்டாமல் கதறுகின்றார்களே கதறிப் பதறுகிறார்களே உனக்குக் கருணையில்லையா நாங்கள் செய்தக் கொண்டதே தொல்லையா ஓ கண்ணிலாத தெய்வமே கதறுங் கான்முளைக் கென்ன செய்வேமோ ஓ கர்த்தனே கர்த்தனே பரிசுத்தனே சுத்தனே ஓ பகவானே பகவானே மகவானே மகவானே என்று கண்ணீர் விட்டழுத் தொடங்கினர்.

அவர் மனைவியும் கனலிலிட்ட மெழுகுபோற் கரைந்தழுத் தொடங்கினள் இவ்விதமாக நான்கு குழந்தைகளும் சிதோபந்தும் அவர் மனைவியும் மனம்புழுங்கியிருக்குங் காரணத்தாலும் கானகத்தில் ஒருத்தியாய்த் தனித்து ஓலமிட் டுருகும் ருக்மாபாயின் சோகத்தாலும் அடர்ந்த கானிற சென்று அருந்தவத்தி லிருக்கும் விடோபாவின் சமாதி நிஷ்டை கலைந்து விட்டது ஏனென்றால் திரிமூர்த்திகளும் ஆதிசத்தியும் கலக்கமுற்றால் கலங்காத தொன்றுண்டோ தாத்திரையசைந்தால் சகலமு மசைவதுபோல விடோபா மனக்கலக்கமுற்று தனயர்மேல் வாஞ்சையுண்டாகி அத்வைதமாயிருந்த மனமிரண்டாகி அனலிலிட்ட அரக்குபோலுருகி கண்ணீர் தாரைதாரையாப் பெருகி அடிக்கடிக் குழந்தைகளை நினைந்து வோயாக் கண்ணீரால் நனைந்து ஓ பரமாத்மாவே! தேவாதிதேவே வேண்டாமென்று மறுத்தவெனக்கு விவாகமேன் செய்துவைத்தாய் சன்னியாசியாய்ப் போன வென்னைச் சம்சாரமேன் தொடர்ந்திருக்க வைத்தாய் உனதிஷ்டமான வென்னைக் குலப்பிரஷ்டனாகவே வமைத்தாய் நிஷ்காமியான வெனக்கு அடங்காக் காமத்தை யேன் ஜனிக்கவைத்தாய் மகவை வேண்டாதவெனக்கு நான்கு மைந்தரேன் பிறக்கச்செய்தாய் ஒருநாளும் பிரியாப் பாலரைப் பிரியும்படி யேன் செய்தாய் சஞ்சலமில்லா வெனக்குச் சஞ்சல மேன் பிறப்பித்தாய் என்கிற பற்பல மொழிகள் பகர்ந்து பாலரைப் பார்க்க வாஞ்சையாகி மனையாள்மேல் மிகு மோகமாகி ஓ நிவர்த்திசாதுவே உன் பரிசம் பட்ட மாத்திரத்தில் அனேகநாள் நிஷ்டையிலிருந்தும் சஞ்சலமுற்றிருக்கும் நெஞ்சமானது ஒரு கணத்தில் நிர்ச்சலன மாய் மௌனானந்தத்தைக் கொடுக்குமே அகண்டானந்தமென்னை யடுக்குமே இப்பேர்க்கொத்த மைந்தனாகிய உன்னைப் பிரிந்த காரணமேதோ யான் செய்த தீதோ ஓ ஞானேசுவரா! உன் பாத பரிசம் பட்ட மாத்திரத்தில் மாயா மயக்கங்களெல்லாம் மாண்டு போகுமே ஓயாக்கவலைகளெல்லா மோய்ந்து போகுமே என்றுங் காணு இன்பஞ் சுரக்குமே என்னை யின்னென்றறியாமல் மறக்குமே இப்பேர்க்கொத்த புத்திர சிகாமணியாகிய வுன்னையேன் பிரிந்தேனோ பிரிந்திங்கு தனித்து ஏனிருந்தேனோ ஓ சோபானதேவா! மஹானுபாவா! உன்னை என் அஸ்தங்களாற் றொட்ட மாத்திரத்தில் ஆகாத வேதாந்தங்களெல்லா மரைக்கணத்தி லாகுமே அகலாச் சங்கைக ளகன்று போகுமே மாறா வனுபூதிவந்து வாய்க்குமே மனதிலானந்தம் வந்து தேக்குமே ஓ முக்தாபாயி என்னைப்பெற்ற தாயி உன்னை என் மடிமேலிருத்திக்கொண்டால் அஷ்டசித்திகளின் அனுபவந் தோன்றுமே அளவிலா வின்ப மகத்திற் றேன்றுமே நிஷ்டையில் நெஞ்சம் நிலைத்திருக்குமே, நிலையில் பாழ் மனதினை மிக வுருக்குமே யென்பார் தன் விவேக பேலீட்டால் தனயரை வெறுத்து மௌன நிஷ்டையிலிருப்பார் சஞ்சலப்பட்டுப் பிரமநிஷ்டை கெட்டு மனைவியைப்

கொண்டாடுவார். ஐயோ பிரிந்துவந்து விட்டோமே யென்று வாடுவார் தன் விசாரஞானத்தால் மனைவியின் வாஞ்சையை நீக்குவார் சற்றுமில்லாமற் போக்குவார் சற்றுநேரம் நிஷ்டையிலிருப்பார் பின்னுங் கண்களைத் திறப்பார் சமாதிநிலையை மறப்பார் தன்னைத்தானே வெறுப்பார் அந்தோ இந்த வடவியி லேன்வந்தேனென் பார் மனைவியைப் பிரிந்தேனென்பார். இவ்விதமாக நிஷ் டையிலிருப்பதும் பிரபஞ்ச வியாபாரத்தால் விழித் திருப்பதுமாயிருந்து முடிவில் சஞ்சலசித்தனுகிப் பிதற் றவும் பித்தனுகி விகற்பத்திலுஞ்செல்லாமல் நிருவிகற் பத்திலும் நில்லாமல் சங்கல்பத்தினும் போகாமல் நிர்ச் சங்கல்பத்துக்கு முள்ளாகாமல் அசரீரியுரைத்ததும் வைராக்கியம் பின்னப்பட்டதும் சன்யாசம் நீங்கினதும் குலபிரஷ்டமடைந்ததும் தாரித்திர மடைந்ததும் தாய் தந்தையரைப் பிரிந்ததும் சமாதிஞானங் கலைந்ததும் ஆகிய இவைகளை நினைத்து நினைத்து ஒன்றுந்தோன்று தவராய் பரப்பிர்மத்தைத் தன் வாய்விட்டுத் தோத்திரஞ் செய்யத்தொடங்கினர்.

---

## பரப்பிரம ஸ்துதி.

### சந்த விருத்தம்.

அம்பரகோசம்பரங்கா லங்கி திங்களெங்குமாய்ச்
சம்பு *நேமிசமயம்பு 0 சாமிசதாசிவன்பணிலிங்கமாய்க்
கம்பநீக்கியகம்பமாக்கிய கற்பவாழ்வருடுங்கமாய்ப்
பிம்பமாகியபிம்பமாகிய பிர்மமேபரப்பிர்மமே. 1

பூதமும்மனமாதியும்முயிர் போதமேதவிர்போதமே
நேதியும்மிகுதிநீதியுந்தவிர் நீதமேநவநீதமே
நாதமும்ஒளிபேதமும்உணர் நாதமேஜகநாதமே
பேதையேகவிரோதமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 2

தன்னையாய்ந்தவருன்னையாய்ந்தவர் சாந்தமேபவசாந்தமே
கன்னலேயுயிர்மின்னலேஅருட் காந்தமேநல்லேகாந்தமே
என்னையாரிடர்தன்னையாரோ டியம்புவேனுசயம்புவே
பின்னமாகியபின்னமாகிய பிரமமேபரப்பிர்மமே. 3

தஞ்சமென்பவர்பானிரஞ்சன சாட்சியேசர்வசாட்சியே
வஞ்சமின்றியநெஞ்சில்வாழிரு வாட்சியேயுயர்காட்சியே
அஞ்சலென்றுனைகெஞ்சினேற்கரு ளாட்சியேமிகுசூட்சியே
பிஞ்சகன்றொழுமாட்சியேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 4

அந்தரந்தனிலேறுக்குவோர்க்கறி வானசின்மயகோலமே
சிந்தைநொந்துனையேத்துவோர்மன சேட்டைநீக்கிடுஞ்சீலமே
நொந்துவந்துனையண்டினேர்க்கரு ளேக்கமீந்தறிவாக்குவாய்
பிந்துநாதமுணர்ந்ததேசுள பிர்மமேபரப்பிர்மமே. 5

சட்சுவாதிகள்சேஷ்டைநீங்குமோசத்துவக்குணமோங்குமோ
பட்சமின்றியமாதர்மேலுறு பட்சமெத்தினநீங்குமோ
இட்சணமெனையாண்டிடாவிடி னென்மனத்துயர்தாங்குமோ
பிட்சையேற்றவரங்கமேபரப் பிர்மமேபரப் பிர்மமே 6

அன்னைநீயலோதந்தைநீயலோ அன்புமின்பமுநீயலோ
சொன்னநீயலோயன்னநீயலோ ஸ்தூலமூலமுநீயலோ
என்னையாள் பவனீயலோவிடந் தன்னைக்காப்பவநீயலோ
பின்னையுங்குருநீயலோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 7

அண்டரும்நவகண்டருந்தொழு மாதியேயருள்வீதியே
தொண்டருக்கருடண்டருஞ்சுயஞ் சோதியேயனுபூதியே
ஒண்டியாகியகண்டமாகிய ஓதியேமிகுநீதியே
பிண்டமாகியபிண்டமாகிய பிர்மமேபரப்பிர்மமே. 8

அண்டரண்டமழியினுமழி யாவகண்டிதகாலமே
விண்டரனயன்செய்கையீந்தவ வேலைமாற்றிடுமூலமே
தொண்டருக்கெனைதொண்டனுக்குவைதோன்றலேசுருக்கநான்
பிண்டஞானமளித்திடும்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 9

செய்வதொன்றுமறிகிலேனொரு திக்கிலாக்கொடும்பாவியேன்
உய்வதற்கொருமார்க்கமின்றிவ ணொண்டியாயுனையண்டினேன்
தெய்வநீயலதிந்தவேளையிற் றீயனென்றுயர்மாயவே
பெய்வியாருண்மாரியைப்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 10

ஆயனேமிகுமாயனேயுனை யண்டினேனேழைத் தொண்ட னேன், தாயனே யருட்காயனே தெருள் சோமனேபலநாமனே, நாயினேற்கிகபோகவின்பொரு நாளும் வேண்டிலேன் வேண்டி லேன், பேயனேற்கினிநேயமேயருட்பிர்மமேபரப்பிர்மமே. 11

அருமையார்தவஞ்செய்குவோர்க்கறி வானபேர்கனுகூலமே
தருமசாந்தசகந்தமம்புகழ்ச் சத்சுகம்விளைஞாலமே
கருமகூபத்தளற்றிலாழ்ந்திவண் கண்கலங்கியவென்னையாள்
பிரமனும்பணிசுந்தரானந்த பிர்மமேபரப்பிர்மவே. 12

வித்தையாலுனைகாணலாமெனில்வேதமுன்னையறியுமோ
சித்தியாலடைதற்குநீயெத் திசையிற்றசத்திருத்தலே
பத்தியாயுனையுண்ணுவோமெனிகபாழ்மனநிலைநிற்குமோ
பித்தனேற்கருண்முத்தநீயருள் பிர்மமேபரப்பிர்மமே. 13

ஆசையும்பசுபாசமுந்தவி ரார்த்தமேபரிசுத்தமே
நேசமும்விசுவாசமும்மரு ளித்தமேயெனும்புத்தமே
மோசமங்கையர்நேசம்நீத்தருண் முத்தமேபிரசித்தமே
பேசுதற்கரிசத்தமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 14

பரிதியிந்துவும்பார்புலன்கனல் பாயும்வாயுவின்மூலமே
கரணசீவவிருட்புலன்பொறி காமமாமிந்த்ரஜாலமே
தருணமீதெனையாளுவாயசம சாந்தசாஸ்விததற்பத
பெருமைமாதவமீகுவாய்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 15

அன்னைதந்தையுமில்லையேயுற வாளருமிவணில்லையே
சொன்னந்தானியமில்லையேயரு தோழருமெனக்கில்லையே
பின்னையோர்துணையில்லையேபிற குன்னருள்வரவில்லையே
பின்னையாருளரென்னையாள்பவர் பிர்மமேபரப்பிர்மமே. 16

அச்சுதானந்தகச்சினேர்முகத் தந்தமேமுதலந்தமே
மெய்ச்சுகோதயநற்சுனையா விந்தமேமகாவிந்தமே
துச்சனேற்குறுபொய்ச்சுழக்கடற் றெருந்தமேதவிர்சொந்தமே
பிச்சையேற்றுணுமுச்சிதர்க்கருள் பிர்மமேபரப்பிர்மமே. 17

---

* நேமி - விஷ்ணு. 0 சாமி - மயேசன்.

அன்பனேமிகுஅன்பனேயென தாவியேசஞ்சீவியே
துன்பமீயுமிவ்வாழ்விஞர்பல துன்பமுற்றனனிக்கணம்
இன்பமீந்தெனேயாண்டிடாவிடி னென்ன துன்பம்விளையுமோ
பின்புயாரெனேயாளுவார்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 18

யாருந்திக்கிலே யிக்கணத்தெனே யாண்டுகொண்டருளாண்டவா, ஊரிலுள்ளவராலுமென்று ரோயுமோமுத்துத் தாண்டவா, சிரிலக்கியதேவர்வன் றீயனென்றெனேநீக்கிஞ, பேரிழந்திருள் வாரிமூழ்குவன் பிர்மமேபரப்பிர்மமே. 19

சுத்தசாஸ்விதசுதந்தராயருட் யேரேத்திமெந்திரா
முத்தர்நெஞ்சினிரந்தராபர மோனமீரிஞ்சுதந்தரா
முத்தியீயுஞ்சுதந்தராவெகு முக்கியமாம்பிர்மாந்திரா
பித்தனுக்கருடந்திராபர பிர்மமேபரப்பிர்மமே. 20

வையினுங்கழலாலுதைத்தெழின் மந்தகம்பிளப்பாகவே
கையிஞலறைந்தாவிநீங்கிடக் கண்கலங்கிடவேகுறை
செய்பினுங்குருபக்திமேவிய சீலர்சொன்முனமேமழை
பெய்யுமேயவர்க்கேவல்செய்யருள் பிர்மமேபரம்பிர்மமே. 2

ஆசைவெட்கமறியுமோபல வாணையாற்றடையாகுமோ
நேசர்சொல்லினுமோயுமோவரு நிஷ்டைகூடினுமாயுமோ
ஈசனேயிடராசைநீத்தரு ளேகபாவனேயீகுவாய்
பேசிலாமறைவாசனேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 22

அந்தமாதியுல்காரணவடி யார்கள்பாற்பரிபூரண
விந்தையாகுமுதாரணவருண் மேவினேர்க்கருடாரண
சொந்தமாகியகாரணமிகு தூய்மையீய்ந்திடுமோரண
பந்தநீக்கிடும்பாரணபரப் பிர்மமேபரப்பிர்மமே. 23

மாடகூடமும்யானையும்பரி மாவுஞ்சேனைதலங்களும்
கூடுநீங்குமிரேகுநாளினிற் கூடவேகுவதின்றெனப்
பாடுபட்டருட்பாதைபெற்றிருட் பாதைபுக்கினஏழையாய்
பீடையுற்றனனென்கொலோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 24

முன்னம்யான்செய்த தின்மையோமதி மோசமோ வென்னமோசமே, தன்னேயாய்ந்தவரென்றனுக்கிட்ட சாபமோ யென்னபாபமோ, என்னமாயமோவுன்னேயான்மறந் தினனிஞருமோ பின்னுமுன்னுமில்லாதசின்மய! பிர்மமேபரம் பிர்மமே. 25

பாதகமறுஞ்ஞானமேயருட் பாதைகாட்டுநிதானமே
மாதவமருடானமேமகா வாக்கியத்துறமோனமே
சேதிசெய்திடுஞானமேசுய நேயமாகியவானமே
பேதமின்றியதியானமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 26

வேதமேத்திடுகற்புமேவிய மெல்லியர்மனம்நொந்ததோ
சோதிவிட்டருள்கோதிலாக்குரு சுவாமியார்மனம்நொந்ததோ
யாதுகாரணமோமனேவிரு ளென்னேச்சூழ்ந்தகலாமலே
பீதிமீவதுணர்த்திலேன்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 27

எந்நாளினிற்பந்தமாமன மின்பவீட்டைவிரும்புமோ
விந்தையாகியவிந்தவாழ்வினின் மேவிடாமல்விரும்புமோ
முந்தியெனேயாண்டுகொண்டவன் மோசஞ்செய்தனியாயமோ
பந்தமீவதென்மாயமோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 28

அருடரும்குருநேசமேகதி ராதியாம்பிரகாசமே
மருளரும்புவிவாசமேவிசு வாசர்பால்விசுவாசமே
இருடரும்பவநாசமேயெனு மேகமானவாகாசமே
பிர்மைநீக்கும்விலாசமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 29

ஆயிதென்னவதிசயமென்ன தாயுளிலறியாதவோர்
மாயவிந்தையைக்கண்டனனிது மாயையென்றுவழிந்தபின்
தீயதென்றிதைநீக்கிடாதரு டேவநின்னருளேக்கிடாப்
பேயனுனதென்மாயமோபரப் பிர்மமேபரப்பிர்மமே. 30

ஊரும்வேண்டிலன் பேரும்வேண்டில னுலகவாசையும் வேண்டிலன், பாரும்வேண்டிலன் பதியும்வேண்டிலன் பசிய பொன்னேயும் வேண்டிலன், சீரெலாந்தரு முன்னருட்டொடர் தியானமொன்றினே வேண்டிலன், பேருமூருடன் யாதுமின்றிய பிர்மமேபரப்பிர்மமே. 31

தேகமிந்திரியம்முயிர் ஜீவனேயுணர்தீபமே
மேகலோகப வகோரசோப முழுதுநீக்கிடுந்தூபமே
ஏகபோகவுற்சாகதியாகமு மின்பமீந்திடும்லாபமே
பீகரந்தருகியாபமேபரப் பிர்மமேபரப்பிர்மமே 32

வணங்கியேயுனேவாழ்ந்திடாதிக வாழ்வினுலறிவீனனு
உணங்கினேனெருதிக்கிலாதிவ ணேலமிட்டழுதேத்தினேன்
இணங்கியேயாண்டிடாவிடி னியாவரென்முறைகேட்பவர்
பிணங்கினேன்குறைதீர்க்கவாபரப் பிர்மமேபரப்பிர்மமே. 33

சோடுநீங்கியபேடுபோற்பிணி தொல்லேயாலழும்பிள்ளேபோல்
வீடுநீங்கியநங்கைபோலெரி வீட்டிலேயுறுமங்கைபோல்
வாடுகின்றனனேயனேயென்றன் வாட்டந்தீர்த்தருடய்யனே
பீடுதந்தருள்மெய்யனேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 34

நிஷ்டருக்கனுபோகமேயரு ணேசர்வாழ்பரலோகமே
சிஷ்டர்நெஞ்சினுற்சாகமேமுத்தி சித்தியீயும்விவேகமே
துஷ்டனேக்குலபிரஷ்டனேயி வண் சோதியாதருண்மோனமாம்
பெட்கமேயருடியாகமேபரப் பிர்மமேபரப்பிர்மமே.

லச்சையும்பணத்திச்சையுமவ லட்சணம்மிகுபட்சணம்
மிச்சையாற்விஷயேச்சையும்விப சாரமும்மபசாரமும்
குச்சிதமொழிமிச்சமுமுள கோதைமார்களேவிட்டெனும்
பிச்சையேற்பதுலட்சணம்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 36

நீதிசற்றுமிலாதவன்குரு நிந்தகன்ஞானவந்தகன்
நாதியற்றவனுதியாகிய நாயினேன்றனேயிக்கணம்
ஆதியாகியதேவதேவநீ யாண்டிடாவிடினேழையாய்ப்
பீதியாழியிலாழுவேன்பரப் பிர்மமேபரப்பிர்மமே. 37

மத்தருக்கதிதூரமேயொரு மாசிலாதகெம்பீரமே
நித்தமர்க்கதி பாரமேகுரு நேசர்நெஞ்சிற்கர்ப்பூரமே
புத்திமேவியட்சிரமேயனு பூதியீந்திடுஞ்சாரமே
குற்றநீக்குபகாரமேபரப் பிர்மமேபரப்பிர்மமே. 38

அந்தமாதியில்விந்தையாகிய வாதவாமிகுமாதவா
எந்தமக்குற்றபந்தமாமிட ரேகுமோபெரிதாகுமோ
சொந்தமாயுனேநம்பியேபல தோத்திரம்புரிந்தேத்தினேன்
பந்தர்க்குஞ்சுகந்தமேபரப் பிர்மமேபரப்பிர்மமே 39

தருமதானமுஞ்செய்திலேனருட் சாதனங்களாலுய்கிலேன்
குரவனற்பெதமேத்திலேனிருட் கோசபாசமுநீந்திலேன்
கருமபாமரநீக்கிலேனுடற் கள்ளஞானமும்போக்கிலேன்
பிரியமோடெனேயாள்வையோபரப் பிர்மமேபரப்பிர்மமே 40

சுந்தரானந்தசோபிதகுரு சுவாமியேசுயமேகம
அந்தமாதியிலாததூயறி வானசின்மயமேகம
தந்தைதாய்குருதெய்வமேசர்வ சாட்சிதன்மயமேகம
பந்துவாகியுகந்தவாகம பிர்மமேபரப்பிர்மமே. 41

அச்சுதாத்விதவஸ்துவேகம வற்புதப்பொருளேகம
உச்சிதப்பரவஸ்துவேகம வுண்மைமெய்ப்பொருளேகம
சச்சிதானந்தவஸ்துவேகம சாந்தமாம்பொருளேகம
பிச்சர்நெஞ்சுறுவஸ்துவேகம பிர்மமேபரப்பிர்மமே. 42

முத்தமேபரிசுத்தமேகம மோனவாழ்வேகமோகம
புத்தமேபிரசித்தமேகம போதவாழ்வேகமோகம
அர்த்தமேமறையர்த்தமேகம வாதிவாழ்வேகமோகம
பெத்தநீக்கிடுஞ்சத்தமேகம பிர்மமேபரப்பிர்மமே 43

என்று நாற்பத்திமூன்று சுலோகங்கள்பாடி மனங்குறைந்துருகிப் பிரம்மத்தைத் தோத்திரஞ்செய்த மாத்திரத்தில் அசரீரி ஓ விடோபா உனக்குற்ற சமஸ்தகுறைகள் நீங்கவும் அகண்டானந்த மோங்கவும் வரங்கொடுத்ததுமன்றி இப்பிரமஸ்துதியை அன்புடன் தோத்திரஞ்செய்தவர்களும் உனக்களித்த வரம்பெறக்கடவர்களென்றுறைந்த மாத்திரத்தில் விடோபாவுக்குற்ற சமஸ்த சங்கல்பமும் நிவர்த்தியாய்ப் பிரமானந்தப் பூர்த்தியாய்த் தன்னை மறந்து தலைவனிற்கலந்து சவ்விகற்ப சமாதியிலசைவற்றிருந்தார். இவ்விதமாய் விடோபா நிருவிகல்ப சமாதியி லெழுந்தருளி யிருக்கையில் பரப்பிர்மத்தினருளால் ருக்மாபாயி விடோபா வீற்றிருக்கும்ஸ்தானத்துக்குச் சரியாய் நடந்துவந்து மணாளனைக்கண்டு ஓ-என் பிராணநாயகா, பிராணசிநேகா, என்னையிப்படிமோசஞ்செய்துவரலாபா, நான் சோகமுறலாமோ வென்றுரைத்துப் பதியின் பாதங்களில்வீழ்ந்து பலதரந்தாழ்ந்து ஒலமிட்டழத்தொடங்கினாள், மனோவிகாரங்களிறந்து தன்னை மறந்து ஆனந்தத்திற் சொக்கியிருக்கும் விடோபா கண்களைத்திறந்து மனைவியைப்பார்த்து ஓ-பெண்ணே இக்காரடவியி லெப்படிவந்தாய் என்னைத் தேடியேன் னொந்தாய் குழந்தைகளை எங்கே விடுத்தாய் என்னையே னடுத்தாய் தவத்தையேன் கெடுத்தாய் சஞ்சலத்தையேன்கொடுத்தாய் இனி பெண்மேலிருக்கும் வாஞ்சையை விட்டுவிடுவதே நன்மை விடாமலிருப்பதே தின்மை இக்கணம் காட்டுக்குப்போவதே நல்லஸ்திதி பாலகரைக் காப்பதே நல்லகதி காட்டிலிருக்க உனக்கென்ன கொடியவிதி கற்புள்ளவளுக்குக் கணவனேபதி இப்படி நிச்சயித்திருப்பவளேசதி இது பதிவிரதைக்குள்ள மதி காட்டிலிருந்துக்கொண்டு தெய்வத்தைத்துதி உனக்குண்டாகும் நல்லகதி உனக்கு மெனக்குங் கடவுளே அதிபதி தபஞ்செய்யும் எனக்கு நீயுகந்தாதி ஆதலால் சீக்கிரம் காட்டிற்சென்று மக்களுட னிருப்பாயென்று கண்ணைமூடிக் கடவுளைநாடி அகமுகமாயோடி ஆனந்தத்தைத்தேடி பிர்மநிஷ்டையி லெழுந்தருளியிருந்தார்.

அப்பால் ருக்மாபாயி மக்கள்மேல் மிகவும் வாஞ்சைகொண்டிருந்தும் கணவனை நம்பாக்குறையால் கணமும் பிரியாமல் பண்டுபலாதிகளைக் கொண்டுவந்து காவலனுக்குத்தந்து நாள்கழிக்கத் தொடங்கினாள். இப்படிமூன்று நாள்செல்ல விடோபாவுக்குக் கருணைபிறந்து திருவாக்கைத்திறந்து ஓ பெண்ணே விருத்தாப்பிய பருவமுள்ள உன் தாய்தந்தை எவ்விதமாய்வருந்துகிறார்களோ பாலர் நம்மைக் காணாம லெவ்விதமா யலைகிறார்களோ நான் முன்னிருந்தவிடத்தில் வந்து தங்கியிருக்கிறேன் நம்புவாயென்று உறுதிகூறிமனைவியோடும் முன்னிருப்பிடமடைந்து ஓ-மாதரசே நீ-சீக்கிரம்போய்க் காதலரைப்பார்த்து அவர் வியாகுலத்தைத் தீர்த்து வருவாயாக வென்றனுப்பினார். ருக்மாபாயி கணவன் கட்டளையைக் கடவாமல் நாட்டையடைந்து தனயரைக்கண்டு ஆனந்தங்கொண்டு இரண்டொருளிலிருந்து பாலரைத்தேற்றி மாதாபிதாவைப் போற்றிப் பின்னும் வருகிறேனென் றுரைத்து மைந்தர் மனதைக் கரைத்துப் பதியின் பக்கலடைந்து குழவிகளின் வாஞ்சையை யுரைத்திடைந்து நாட்டிக்கும் காட்டுக்கும் போக்குவருத்தா யிருந்துக்கொண் டின்புற்றிருந்தாள். விடோபா விவேகமேலீட்டால் மக்கள்வாஞ்சைக்குள்ளாகாமல் பிர்மானந்தத்திற் சொக்கி யிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ் சொல்லத் தொடங்கினர்.

விடோபா சஞ்சலத்துக்காற்றாமல் பரப்பிரம்மத்தைத்
துதித்தஅத்தியாயம்
முற்றிற்று.

எட்டாவது

## ஞானேசுவரர் அந்தணரை அவமானஞ் செய்து ஐசுவரியம் பெற்ற அத்தியாயம்.

வாருங்கள் சித்தர்களே பரிசுத்தர்களே விடோபாவும் ருக்மாபாயும் காட்டிலிப்படி களித்திருக்க நாட்டில் சிதோபந்து நாம் சம்பாதித்துவைத்திருந்த ஆஸ்தியெல்லாம் நாஸ்தியாய் விட்டதே இக்குழந்தைகளை எப்படி காப்பாற்றப் போகிறேமென்கிற ஏக்கத்தினால் நோக்கமுற்று வீதிகளிற்சென்று ஆதிசினேகரைக்கண்டு தனக்குற்ற அபாக்கியத்தை விண்டு மனைவிபால் கொடுத்தேங்கித் துக்கம்மிகவும் வோங்கிப் பட்டினியால் வாடி தூங்கிக்கேட்டோரை கேட்பதற்குப்பின்வாங்கி வீடுவீடாகப்

போய்பிட்சையெடுக்க ஆரம்பித்தார். ஒருநாள் க்ஞானேஸ்வரர் பாட்டனுர் படுந்துயரந் தீரப் பலரும் மோட்ச வீட்டைச்சேர ஞானமார்க்கத்தைச்சேரப் பாசங்கள் நாசமா யீடேறச் சிதோபந்துடன் தானும்போய்ப் பிட்சையெடுக்க ஆரம்பித்தார். அரிபரந்தாமனுகிய ஞானேசுரரைக்கண்ட தருமத்திற்சிறந்த உத்தமர்களும் கற்பிற் சிறந்த உத்தமிகளும் சிதோபந்தைப் பார்த்துக் கரங்களைச் சேர்த்து அந்தோ இச்சிறுபால்யனை அகோரமானவெய்யலில் ஏனழைத்து வந்தீர் குழந்தைகளுக் கேனுபாசந் தந்தீரென்று குழவியினழுக்கும் கல்விக்குமெச்சி உச்சிமோந்து முத்தமிட்டு சாயக்கிரிகை முதல் தவசமும் எதேஷ்டமாய்க் கொடுத்தார்கள். சிதோபந்து அதையெடுக்கமாட்டாமல் ஓர் தெருத் திண்ணையில் வைத்து இதையெப்படி யெடுத்துக்கொண்டு போவேனென்றுவாட்டமடைய அதுதெரிந்த க்ஞானேசுவரர் நான் பாதி எடுத்துக்கொண்டு வருகிறேனென்று சாமார்த்திய வசனங்களைப் புகன்று பாதிபகிர்ந்து தன் வஸ்திரத்தில் ஸ்திரமாயிருக்கிக் கட்டித் தலைமே லேந்திக்கொண்டு சற்று தூரம் நடந்து காலிடரிக் கீழேவிழுந்து பாட்டனுர் பார்த்தால் முனிவுகொள்வாரென்கிற பயத்தால் சிந்திச் சிதறின தானியத்தை அதிசிக்கிரமா யோரிடத்திற் சேர்த்துக்கொண்டும்மூதாதையை அடிக்கடி பார்த்துக்கொண்டுமிருந்தார். சிதோபந்து திரும்பிப் பார்த்துக் கோபத்தால் தேகம்வேர்த்து அடா க்ஞானதேவ் வேண்டா மென்று பன்முறைமறுத்துங் கேட்காமல் பலவந்தமாய் வாங்கிக்கட்டிக்கொண்டு தரையிற்கொட்டிவிட்டாயே ஆயாசத்துக்குட்பட்டாயே என்று கடினவார்த்தைக ளாடிக்கொண்டே பசிமிகுதியாலும் வறுமை மேலீட்டாலும் அடிக்கிறேன் இடிக்கிறேனென்றருகில்வந்து தலைமேலோர்குட்டுகுட்டினர். க்ஞானேசுவரர் வெகுண்டு பலங்கொண்டு சிதோபந்தைத் தள்ளினர். விருத்தப் பருவத்தாலும் பலவீனத்தாலும் கீழேவிழுந்த சிதோபந்து மிகவும் முனிந்து அடா துஷ்டப்பயலே என்னை இப்படி அவமரியாதைசெய்யத்தானு உன்னை அருமையாக வளர்த்தேன் மட்டிப்பயலே உன்னை எட்டி யுதைக்கிறேனென் றெழுந்தார். க்ஞானேசுவரர் பாட்டனுர் சீற்றத்துக்கஞ்சி மூட்டையைவிட்டு ஓடத்தொடங்கினர்.

சிதோபந்து நடுத்தெருவில் இரண்டு மூட்டையிலுள்ள தவசங்கள் சிதறுண்டதால் வெகுளிக் கிடங்கொடுத்துப் பின்தொடர்ந்தோடி க்ஞானேசுவரரைப்பிடித்துக் கொண்டு தூஷணவார்த்தைகள் விண்டு முதுகின்பேரில் தும் தும் மென்று குத்தத்தொடங்கினர். அடிக்கடிபின் திரும்பிப் பார்த்துக்கொண்டோடின காரணத்தா லகப்பட்டுக்கொண்ட க்ஞானேசுவரர் பாட்டனுர்க்குப்பயந்து நயந்து ஓ வென்றழத் தொடங்கினர். அதை ஆகாயத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த தேவர்கள் க்ஞானேசுவரர் திருக்கூத்துக் காச்சரியப்பட்டு ஓம் அரி ஹரி முரஹரி நரஹரி அம்புஜாட்சரி பச்சைவர்ணு கமலக்கண்ணு கருடவாகனு கோபியர் மோஹனு நாராயணு பரமபாராயணு ஒ-சுவாமி முன்னம் பூமிபாரந்தீர்த்தக் காரணு அநந்தசயனு வாமனு கிருஷ்ணு ஜனுர்த்தனு ராவண மர்த்தனு காளிங்கமர்த்தனு நந்தநந்தனு மதுசூதனு பரிபூரணு சர்வகாரணு பத்மசரணு வெங்கடரமணு சங்கடநிமித்தம் கிருஷ்ணுவதாரமெடுத்துத் தந்த வக்ரன் தூரத்த ஒட்டமெடுத்தகப்படாத நீர் இவ்விருத்தருக்குத் தப்பித்துக் கொண்டோடாம லகப்பட்டுக்கொண்ட காரணமேதோ தந்தவக்ரனைவிட இம்மறையோன் சமர்த்தனே நீர் செய்யும் லீலாவினேதமோ மகா வல்லமை சாலியாகிய இரணியாக்கனை வென்ற நீர் இந்த விப்ரன்கையி லகப்பட்டுக்கொண் டடிபடல் நியாயமோ இதென்ன மாயமோ அந்த இரணியாக்கனிலும் இவ்விருத்தன்வலியுள்ளவனே கோவர்த்தனகிரியை ஓர் விரலாற்றூங்கின உமக்கு இத் தானியமூட்டை பளுவாய்விட்டதோ உமக்கிருந்த பலங்கெட்டதோ ஓ வென்றழுங் காரணம் பீஷ்மாச்சாரியார் முதலானோர் விட்ட அம்புகளால் தேகம் ரணமாயிருக்கின்றதோ அல்லது கோபிகாஸ்திரீகளா லடிபட்டுப்புண்ணுயிருக்கின்றதோ அதனுல் பொறுக்கக் கூடாம லழுகின்றீரோ உம்மை நீர் மறந்துவிட்டீரோ பக்தர் முன் பலம் நடக்கவில்லையோ கதறுவது கலியுகத்தின் தொல்லையோவென்று பற்பல விதங்களாகத் தோத்திரஞ் செய்வதைக்கேட்ட க்ஞானேசுவர் ஆனந்தமடைந்து பாட்டனுர்க் கிடைந்து ஓ தாதா இனிமேலெப்போதும் இப்படி செய்யமாட்டேன் உமக்குத் துன்பந்தர மாட்டேன் என்கிற பாசாங்கு வார்த்தைகள் கூசாமற்செய்து பேசாமலிருந்தார்.

அப்போது வீதியிற்போகும் பலரும்சிதோபந்தை நோக்கி நீ-வீணுக சிறுகுழந்தையை அடிக்கிறீர்கள். வேண்டாம் வேண்டா மென்று விலக்கி விட்டார்கள். சிதோபந்து சற்றே கோபந்தணிந்து சாமக்கிரிகைகளை ஓர் கூலியாளன்மேல் வைத்து வீட்டிற்கொண்டு வந்து மனைவிபாற்றந்து க்ஞானேசுவரர்செய்த துடுக்குத்தனத்தைப் பகர்ந்து என் கோபத்தா லடித்துவிட்டே னென்

றயர்ந்து சமைத்த பதார்த்தங்களை நுகர்ந்து வறுமையை யிகழ்ந்து நாள்கழிக்கத் தொடங்கினர்.

இப்படியிருக்கிற காலத்தில் ஒருநாள் ஓரிடத்தில் சந்தர்ப்பணம் நடக்க அங்குச் சிதோபந்துவும் குழந்தைகள் நால்வரும் சிதோபந்து மனைவியும் போய் ஓர்பக்கலுட்கார்ந்தார். பால்யரைக் கண்ட விப்பிரர் சிதோபந்தை நோக்கி அடா பிரஷ்டப் பிராமணா பிரஷ்டனுக்குப் பிறந்த இத்துஷ்டப் பிள்ளைகளை அழைத்துவந் தெங்களோடு பந்தியிலுட்கார வைத்து எங்களையும் பிரஷ்டராக்கவா நினைத்தாய் இக்கணம் இச்சிறுவரைத் தூரமாகப் போகும்படிச் செய்யாவிட்டாலுன்னையும் பந்தியிலிருந்து எழுப்பிவிடுவோமென்றறைந்து மிகவுமிறைந்த அச்சிறுவர் கைையைப்பிடித் திழுத்துத் தூரமாயுட்காரவைத்துப் பத்திரங்கள் போட்டு அன்னம் பகிர்ந்தார்கள். க்ஞானேசுவரர் மிகவுங் குரோதமுற்றிருந்து சகலரும் புசித்திருக்குந் தருணத்தில் நிவர்த்திசாது வேண்டாம்வேண்டாமென்று மறுத்துரைத்துக் கொண்டிருக்கும்போதே கேட்காமற் போய்ப் பந்தியிலிருந் துண்ணவும் பாட்டனார் பத்திரத்திலுட்கார்ந்தார். அதனால் அந்தணர் முனிந்து அடா துஷ்டப்பயலே பிரஷ்டப்பயலே உன் தாதையினருகில் வந்துட்கார்ந்து எங்களை அன்னமுண்ணாமற் செய்துவிட்டாயே நீ கெட்டாயே என்று வாயில் வந்தபடி வைது ஆளுக்கோ ரடியடித்து அன்னமுண்ணாம லினி யென்றொருவர் ஒருவரை யோசனை கேட்க அதற்குச் சிதோபந்து ஓ பூசுரரே! இவ்வறியாக் குழவியால் உங்களாசாரம்போகாது வீணாய் வம்புசெய்யலாகாது அறியாக்குழந்தையைப் பலரும் இப்படி அடிக்கலாமா தூஷணமொழிகள் படிக்கலாமா அடாத காரியஞ்செய்தால் படாத பாடுபட வேண்டியதாய் வருமென்றறைய அவ்வசனத்தைக் கேட்ட விப்பிரர் துவேஷமேலிட்டு அடா சிதோ பந்து நீ யறியாப் பிள்ளைகளைக் கூடவைத்துக்கொண் டுண்ணுவதெங்களுக்குத் தெரியாது இன்று பிரத்தியட்சமாய் பார்த்த காரணத்தால் இனிமே லெங்களோ டிருந்துண்ணத் தக்கவனல்ல பந்தியிலிருந் திக்கணம் தூரமாய்ப் போ. இல்லாவிட்டால் வாயில் வந்தபடி திட்டிவிடுவோம் என்று பலரும் பகர்ந்து சீக்கிரம் எழுந்துபோகும்படியாயிரைந்து பேச, அதனால் சிதோபந்துக்குக் கோபம் பிறந்து தன் கையிலிருந்த பஞ்சபாத்திரத்தைப் பிராமணர் மீது விசியெறிய அந்தணர் ஆக்கிரம நிக்குரோதர்களாய்ச் சிதோபந்தைச் சூழ்ந்துக்கொண்டு அடா மடையா அடா சடையா வென்று வைது ஆளுக்கோரடியடித்து மூர்ச்சையாய் விழும்படிச் செய்தார்கள். அதைப் பார்த்த க்ஞானேசுவரர் மிகவும் முனிந்து ஓ விப்பிரர்களே! பிரமக்ஞானனது பிராமணவென்கிற வேதவாக்கியப்படி பிரமத்தையுணர்ந்தவனே பிராமணனன்றி நீங்களெல்லாம் பிராமணர்களாவீர்களா அதஞ்செய்யும் பிராமணனுக் கிதஞ்செய்பவனல்லவோ அந்தணனென் றுகமத்தில் முறையிடுகின்றது அதையறியா நீங்களெல்லாம் அந்தணராகக் கூடுமா? கொலைசெய்யும் நீசரே விவேகமில்லா மிலேச்சரே வீணாயெங்கள் மூதாதையோடு வாதாடி மூர்ச்சையடைய அடித்தீர்களே காயம் படாமல் ஆபம் பார்த்து இடித்தீர்களே இனியுங்களைக் கொஞ்சத்தில் விடப்போகிறேனாவென் றங்கிருக்கும் ஓர் பெருத்த கட்டையை எடுத்துக்கொண்டு பாட்டனாருகில் யாரும்வராமல் நாலு பக்கமும் வீசப் பூசுரரெல்லாம் பிரமித்து ஒன்றுயொருமித்து இந்தத் துஷ்டப்பயலை வெட்டிவிடவேண்டுமென்று தாங்களும் பெருத்த கட்டைகளை எடுத்துக் கொண்டு க்ஞானேசுவரர்மேல் விழப்போகையில் நிவர்த்திசாது ஓ பிராமணசீலரே! ஏழைகட் கனுகூலரே! விருத்தரையும் பால்யரையும் அதட்டவும் வாய்வராதே அப்படியிருக்க நீங்களிப்படி செய்யலாமா வேதமோது மாதவர்க் கிதியல்வானதா எங்கள் பாட்டனாரை மூர்ச்சை யடைவித்ததன்றிச் சிறுகுழந்தையையும் அடிக்கத் துணிந்தீரே இது தருமமாயிருக்கின்றதா இப்பேர்க்கொத்தமூட்டுக்குணம பூசுரர்க் கிருக்கலாமா கோபத்தைப் பெருக்கலாமா சாந்தத்தைச் சுருக்கலாமா ஏழைகளை வெறுக்கலாமா வென்கிற நீதிவாக்கியங்க ளோத அவ்வசனங்களைக் கேட்ட முப்புரி நூலோர் கோபித்து ஓ ஓ விளையும் பயிர் முளையில் தெரியுமென்கிற பழமொழிப்படி இனிமேல் விபரீதஞ்செய்யும் இவர்கள் இப்போதே நமக்கு நீதிகளுரைத்துத் தங்கள் குணத்தைக் காட்டினார்கள். மேன்மையைப் பாராட்டினார்கள். பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரியுமென்கிறபடி பிரஷ்டனுக்குப் பிறந்தவர்களின் துஷ்டகுணத்தைச் சிறுபொழுதிலேயே துலங்கச் செய்தார்கள்.

இக்கணம் இவனையும் அவனையும் இறுக்கிக் கட்டி நறுக்கி விடுவதே நன்மை. இன்றே லந்தணர்க்கு வருந் தின்மையென்று நிவர்த்தி சாதுவையும் க்ஞானேசுவரரையும் கற்களாலும் சழிகளாலும் அடிக்க ஆரம்பித்தார்கள். அதனால் க்ஞானேசுவரர் பற்களை நறநறவென்றுகடித்துத் தூஷணவார்த்தைகள் படித்து இராக்கதர் கூட்டத்திற் புகுந்த அனுமானைப்போலவும் யானைத்திரளிற் புகுந்த சிங்கத்தைப்போலவும் பசு மந்தையிற் பிரவேசித்த வியாக்கிரமத்தைப் போலவும் அந்தணர் குழுவிற் புகுந்து தன்

கையிலிருந்த கட்டையால் மறையோர்கரங்களிலும், சிரங்களிலும், தாள்களிலும், தோள்களிலும், உதிரம் புறப்படவும், அவர்கள் வீரங்கெடவும், மூலைக் கொருவராயோடிப் பதுங்கவும் கண்கள் பிதுங்கவும், தரையில் விழவும், சரணார்த்தியென்று தொழவும், தங்களைத் தாங்களே வெறுக்கவும், சக்ரபாணி நீ யென்றுரைக்கவும், ஒருவரையொருவர் தள்ளவும், உச்சித நீயென்று விள்ளவும், அடியடி யென்றடித்து காக்கைகள்போலப் பறக்கடித்து பின்னாலோடிப் பிடித்து மூளைகள் சிதறவிடித்து ஒரு கணத்தில் ரணக்களமாக்கிவிட்டார், அதனால் நிவர்த்திநாதர் க்ஞானேசுவரின் கரத்தைப் பிடித்துக்கொண்டு ஓ பகவானே ! நாம் பிறந்திருக்கும் காரியமென்ன நீ கொண்ட கோலமென்ன கலியுகதர்ம மறிந்திருந்தும் விபரீதங்கள் நடக்கிறதெனத் தெரிந்திருந்தும் அந்தணரைப் பிடித்துக் கொள்ளலாமா தூஷணவார்த்தைகள் சொல்லலாமாவென்றுரைத்து மறித்த பேர்களெல்லாம் உயிர்பெற் றெழும்படியாய்ச்செய்து இன்னஞ் சிலநாள் நமது மகிமையைக் காட்டாம லிருப்பதே நமக்குகந்த யோக்கியம் இதனால் வருஞ் சிலாக்கியம் என்று பாட்டனுருடைய மூர்ச்சையை தெளிவித்து வீட்டுக்கழைத்துக் கொண்டுபோக க்ஞானேசுவரர் கோபந்தணிந்து சோபான் தேவையும் முக்தாபாயியையும் நோக்கி இப்படி நான் செய்யாவிட்டால் விப்பிரர் மிகவும் விபரீதஞ் செய்வார்கள் என்றுரைத்து பாட்டன் பின்னாகவேபோய் வீட்டையடைந்து வேஷ்டையற்றிருந்தார்.

அத்தருவாயில் ஓடிப்போன அந்தணர்களெல்லாம் அரசனிடம்போய் முறையிட்டுத் தங்கள் தேகத்திற்பட்ட காயங்களைக்காட்டி இக்கணம் சிதோபந்தையும் அவன் வீட்டிலிருக்கும் பிள்ளைகளையும் ஓட்டிவிட வேண்டும் இனிமேல் கழுவில்மாட்டிவிடவேண்டுமென்றூர்ப்பரித்தார்கள். அதுகேட்ட இராஜன் மிகவும் கோபதீப்தனாகி மறையோரையடித்த மகாபாதகரைத் தூர்த்தகுணமுள்ள தோதகரை இக்கணமே அழைப்பியும் மந்திரியென்றறைந்து அந்தணரை அன்போடாதரணை செய்தான் மந்திரி காவலரை நோக்கி, நீங்களிக்கணம்போய்ச் சிதோபந்தையும் அவன் வீட்டிலிருக்கும் சிறுவரையும் அதிசீக்கிரமாயழைத்துக்கொண்டு வாருங்களென் றுக்யாபித்தான். ஏவலாளர்கள் மகா பாக்கியமென்று சிதோபந்து வீட்டையடைந்து சிதோபந்தை நோக்கி, ஓ துஷ்டப்பிராமணா, ஓ பிரஷ்டப்பிள்ளைகளே உங்களை இராஜனதிதுரிதமாயழைத்துக்கொண்டு வரும்படியாகக் கட்டளையிட்டார் சீக்கிரம் நடவுங்களென் றதட்டினார்கள், அவ்வசனங்கேட்ட க்ஞானேசுவரர் ஓ காவலரே ! எங்கள் பாட்டனார் அந்தணர்களா லடிப்பட்டுப் பெருமூச்சு விட்டுக்கொண் டிருக்கின்றார் என் தமையன் முதலானோர் அவர்க் குபசாரணை செய்துக்கொண்டிருக்கின்றார்கள் இவர்களுக்குப்பதிலாக நானொருவனே வருகிறேன் அரையன் வினவுக்கு விடை தருகிறேன் வாருங்களென் றழைத்துக்கொண்டு சபா மண்டபத்துக் கெழுந்தருளி ஓ பூபதியே ! எங்களை அழைப்பித்த காரணமேதென்று வினவினர். க்ஞானேசுவரர் செருக்குடன் பேசியதைக்கேட்ட தமக்குள்ளநரபதி மிகவும் முனிந்து, அடா ! இதென்ன கத்தரிக்காய்க்குக் கால்கை முளைத்ததுபோல ஜாண்பையலாயிருந்தும் வெகு முறுக்குடன் சுருக்கென்னும் வார்த்தைக ளாடினான் இவன் வெகு துஷ்டனாகவே யிருக்கின்றான் நல்லதாகட்டும் பார்க்கிறேனென்றட்டகாசஞ்செய்து, ஓ பிரஷ்டனே நீயுமுன் சகோதரரும் பூசுரரை அடித்தகாரணமென்ன சீக்கிரஞ் சொல்லடா என்று கேட்க, க்ஞானேசுவரர் ஓ மண்டலாதிபதியே நியாயமாய் விசாரித்து நல்லோர்க்குச் சகாயஞ்செய்யும நரபாலனே! பொல்லாங்குஅபாயந்தரும் பூபாலனே! சந்தர்ப்பணம் நடக்கும் பந்தியில் பிள்ளைகளாகிய நாங்கள்போய் வீற்றிருக்க இவ்வேதியர் மறுத்த காரணமும் வேதமோதிய விப்பிரர்களாயிருந்தும் தப்பிதஞ்செய்யா எங்கள் மூதாதையை நைய அடித்து மூர்ச்சையடையச் செய்த காரணமும் போர்புரியாதீர்களென்றறைந்த என் தமையன்மேல்சீறி விழுந்தடித்த காரணமும் முன்னம் விசாரித்து எங்கள்மேல் குற்றமிருந்தால் தடையின்றித் தண்டனை கொடுக்கலாம். காரணந்தெரிந்துக்கொள்வதற்கு முன்பே கடுஞ்சினமடைந்தால் காவலனாகிய உம்மை யெதிர்த்துத்தாஞ் சொல்லஎன்னாலாகுமா? என்னால் ஆனாலு முமது சீற்றம்போகுமா? அரசனுக்கு நீதியும், ஆசானுக்கு விவேகமும், மந்திரிகட் காலோசனையும், பதிவிரதைகட்குக் கற்பின் மேன்மையும் சொல்பவருண்டா? கொடுங்கோல் பிடித்த கோமானும், கோள் சொல்லும் விப்பிர சிபானும், விவேகமில்லா மந்திரியும், விபசாரஞ்செய்யு மங்கையும், நரகன்றி பரமடைவதுண்டா? வென்கிற பற்பல நீதிவாக்கியங்க ளெடுத்துக்காட்டி வெகுளிநிறைந்த வேந்தன் மனதை வாட்டி மௌனமாயிருந்தார். அவ்வாக்கியங்களைக் கேட்ட கொற்றவன் ஆச்சரியப்பட்டுத் தனக்கிருந்த மாச்சரியங்கெட்டு முப்புரி நூலோரை நோக்கி, ஓ விப்பிரர்களே ! பந்தியில் வந்திருந்த மைந்தர்களை நீங்கள் தள்ளின

காரணமேது சொல்லுங்களென்று கேட்கப் பூசுரர் இப்பாலர் தந்தையாகிய விடோபா வென்பவன் சன்யாசியாகிப் பலர் வீட்டிலுமுண்டு பிரஷ்டனாய் விட்டானென்று முன்னமே குலத்திலிருந்து நீக்கி விட்டோம். அவன் காட்டை யடைந்தபின் உற்பவித்த இச்சிறுவர் நாட்டை யடைந்து எங்கள் பந்தியிலிருந்துண்ண வந்தால் நாங்கள் வேண்டாமென்றுரைக்க அதற்கு க்ஞானேசுவரர் ஐயா இராஜனே! பிரமக்ஞானந்தந்து பிராமணனென்கிற தேவ வாக்கியப்படி பிரமத்தை யறிந்து கொள்வதற்காக வெங்கள் தந்தை சன்யாசியாய்ப்போனார். பிரமக்ஞானியானார் குருவாக்கை மறுக்காமல் சம்சாரியானார். இதனால் அவரெப்படி பிரஷ்டனானார் கேட்பீராகவென, அந்தணர் சன்யாசி சண்டாளன் வீட்டிலும் புசித்திருப்பானாதலால் சாதியிலிருந்து தள்ளநேரிட்ட தென்றுரைய க்ஞானேசுவரர் பலர் வீட்டிலுமுண்ணும பரமாம்ஸனை அந்தணர் பந்தியில் வைத்துக்கொண் டுண்ணும்படியாய் வேதத்தில் முறையிடுவதால் எங்கள் தாதை பிரஷ்ட னெப்படியானார் அன்றி முன்னோர் அனேககாலங் காட்டிற் றவம்புரிந்தும் அனேக தேசங்களிற்றிரிந்தும் சன்யாசவேஷமாயிருந்தும் பின் சம்சாரிக ளாகவில்லையா? காஷாயதாரியாகிய கலைக்கோட்டு முனிவர் ஓர் காவலனீன்ற கன்னிய ரிருவரைக் கலியாணஞ் செய்துக்கொள்ள வில்லையா? அனேக நாள் சன்யாசியாயிருந்த கும்பமுனி ஓரரசன் புத்திரியை மணந்து சம்சாரியாக வில்லையா? எங்கள் தாதை மாத்திரஞ் செய்தது தொல்லையா? பிர்மத்தை யுணர்ந்தவர்களுக்கு சாதிபேதமுண்டென் றெச்சாத்திரத்தில் முறையிடுகின்றது.

அப்படியே பேதமாய்ப் புகன்றிருக்குமாகில் சக்கிலிடன் வீட்டில் வளர்ந்த அருந்ததியைமணந்த வசிஷ்டரும், மச்சகந்தியின் கர்ப்பத்திற் பிறந்த வியாசரும், கிராதனாயிருந்த வால்மீகரும், வலைஞனுக்கு மாணாக்கனாகி யவன் எச்சலையுண்ட நாரதரும், பிரஷ்டமடைந்திருக்க வேண்டுமல்லவா? அப்படி யில்லாமையாலும் பிரமக்ஞானந்தந்து பிராமணனென்று வேதம் முறையிடுவதாலும யாவரும் ஒப்புக்கொளளாத தப்புவார்த்தைக ளாதலால் தலைகள் வெடித்துப் போகாதாவென்றறைந்து, பின்னும் அரசனை நோக்கி, ஓ இராஜனே! எங்கள் தந்தை பிர்மக்ஞானத்தை வேண்டிக் காசிதேசத்திற் சென்று விசுவநாதரைப்பாடி ஆசானைத்தேடி பிராமணோத்தமராகிய ஸ்ரீ பாதஸ்வாமிகளிட முபதேசம் பெற்றுத தபவேஷமுற்று தன்னை மறந்து பிர்மானந்தம் நிறைந்து குருவாக்குக் கெதிர்வாக்குச் சொல்லாமல் சம்சாரத்துக்குட்பட்டார். அவரெப்படி குலபிரஷ்டரானார் அநீதியான காரியங்கள் செய்கிறவர்களை பிரஷ்டரன்றி பிரமக்ஞானிகள் பிரஷ்டராவார்களா? அன்றிக் குணம் சிரேஷ்டமென்றும், குலம் சிரேஷ்டமல்லவென்றும் வியாச வசிஷ்டாதியோரால் பிரத்தியட்சமாய்க் காணப்படுகின்றதால் இனி. யுமதிஷ்டப்படி தீர்ப்பு செய்யுமென்றுரைக்க, அவ்வாக்கியங்களைக்கேட்ட அரசன் ஓ போக்கியத்திலும் சமஸ்தபாக்கியத்திலும் சிறப்புள்ள பாலயனே! உன்றிருவாயா லுரைத்தருளிய வசனங்களெல்லாம் வேதமந்திரமேயாகும். எனக்கென்றுமில்லா ஆனந்தந்தந்தாய் ஓ விடோபாவின் மைந்தா! சீக்கிரம் என்னருகில்வா முத்தந்தாவென்றவரை வாரியெடுத்து மார்புடனணைத்து நீர் எட்டுவயதுள்ள குழைந்தையாயிருந்தும் மிகவும் அற்புதமான வசனங்கள் புகன்றாய் இனி பெரியவனானால் உன்னுட னெதிர்த்துப்பேச இவ்வுலகிலொருவருண்டோ உனக்கிணை லட்சம் பிராமணர்களுமாகார்கள்? ஓ மதிமந்திரி! இச்சிறுவன் பேசிய வசனங்களைக் கேட்டீரா? நீரும் முத்தந்தர மாட்டீராவென்றறைந்து, ஓ காவலரே! இக்கணம் மூன்று தண்டிகைகளைக் கொண்டுபோய் இவ்வுத்தமருடைய சகோதரரை அதில் ஏற்றிக்கொண்டு வாருங்களென்றறைந்து காவலராற்கொண்டு வரப்பட்ட நிவர்த்திசாது முதலானோரைப் பார்த்துக் கரங்களைச்சேர்த்து அவர்கள் வாய்மொழிகளையுங்கேட்டு ஆனந்த பரவசத்தனாகித் தன்னை மறந்து உடனே தெரிந்து சிம்மாசனங்களில் வீற்றிருக்கச்செய்து ஓ ஓ இப்பேர்க்கொத்த சீலர் என்னாட்டுக் கனுகூலர் இத்தேசத்திலிருக்க நானென்ன பாக்கியஞ் செய்தேனோ வென்கிற பற்பல மொழிகள் பகர்ந்து நால்வருக்கும் நான்கு மேடையும் அனேகாடை யாபரணங்களும் அளவற்ற சொர்னங்களுமளித்து மிகவுங்களித்து விப்பிரர்களை நோக்கி, ஓ பூசுரரே! என் வேண்டுகையில் யாதொரு குற்றமில்லாயிக்நற்றவரை உங்களிற் சேர்த்துக்கொண்டு பந்தியில் வைத்துக் கொண்டு என்னைக் களிப்படையச் செய்யுங்கள், என் கர்மத்தைக் கொய்யுங்கள், என்னைப் புனிதராக்குங்கள், உங்களுடைய துவேஷத்தை நீக்குங்கள். இதனிமித்தம் உககளொவ்வொருவனுக் காயிரம் வராகனளித்தே னென்றுரைக்க,

செங்கோலுக்குமுன் சங்கீதஞ் செல்லாக்குறையால் விப்பிரர் ஒப்புக்கொண்டதுபோல் அபிநயங்காட்டித் திரவியத்தைப் பெற்றுக்கொண்டு மறுநாள் இராஜன் பக்கலடைந்து ஓ அரசனே! உங்களுக்கு முதன்மை யாசாரி

யார் பண்டரிபுரியி லிருப்பதால் அவ்விடத்திற்குக் குழந்தைகளேயும் இவர்கள் தாய் தந்தையையும் அனுப்பி இவர்களுக்குச் செய்யவேண்டிய பிராயச்சித்தங்கள்செய்வித்து அவர்கள் சமாதானப் பத்திரிகையும் வரும்படியாய்ச் செய்தால் உங்களிஷ்டப்படி நடக்கிறேனென் றுரைக்க, இராஜன் அப்படியே செய்வேனென்று சிதோபந்தை வரவழைத்து நீரு மிக்குழந்தைகளும் பலகாவலர்சூழத் தண்டிகைமீ தூர்ந்துபோய் மகானுபாவராகிய விடோபாவு ம் விரதசீலியாகிய ருக்மாபாயியையும் தண்டி கைபின்மே லேற்றிக்கொண்டு ஆலசியஞ் செய்யாமல் அழைத்துக் கொண்டு வாருமென்றறைந்து பல காவலரையும் இரண்டு தண்டிகையையும் அனுப்பினர் அகண்ட சாம்பிராச்சியம் பெற்ற சிதோபந்து களிப்புற்றுப் பேரன்மாருடன் காட்டை யடைந்து மலைச் சாரலில் வாசமாயிருக்கும் விடோபாவிடஞ் சேர்ந்து களிகூர்ந்து அப்பா மருமகனே நீ பெற்ற பால்யரால் நமது தாரித்ரமும் சகலதுறைகளும் நீங்கிவிட்டன. அரசன் உன்னையிக்கணமே அழைத்துக் கொண்டுவரும்படியாய்ப் பல காவலரையும் தண்டிகையையும் அனுப்பினர் தடைசெய்யாமல் நாட்டுக்கெழுந்தருளுமப்பாவென்றழைக்க, அவ்வசனங் கேட்ட விடோபா நகைத்து, ஓ ஐயா! காட்டிலிருந்து களிப்புற்றவர்கள் நாட்டையடைந்து நலிக்குள் ளாகார்கள் அது தெரிந்த தேவரீர் அடியேனை அரசனழைத்தாரென் றறைந்தீர், (துறவிக்கு வேந்தனொரு துரும்பு) என்கிற வாக்கியமறியாதவரோ ஒன்றுந் தெரியாதவரோ இனி இவ்வாக்கிய முறைக்காமல் என்னை வெறுக்காமல் இச்சிறுவருடன் நாட்டுக்குப்போய் வாட்டமற் றிருப்பீராகவென்று மைந்தரையும் பார்க்காமல் மௌன நாட்டத்திலிருந்தார் க்ஞானேசுவரர் பாட்டனுரையும் காவலரையும் நோக்கி, நீங்களித்தண்டிகை முதலானவைகளுடன் நாட்டுக்குப் போங்கள் நானிவரை நாலுநாளுக்கு ளழைத்துக்கொண்டு வருகிறேனென் றுரைத்தனுப்பிச் சகோதரருடன் தந்தையிடத்தில் சந்தோஷத்துடனிருந்தார். கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் சாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

ஞானேசுவரர் அந்தணரை அவமானஞ்செய்து

ஐசுவரியம்பெற்ற அத்தியாயம்

முற்றிற்று.

ஒன்பதாவது

## ஞானேசுவரர் தன் தந்தையை நாட்டி லழைத்து வந்த அத்தியாயம்

பக்தர்களின் எண்ணமுழுதும் இனிதாய் நிறைவேற்றும் கருணாகரக் கணபதியை ஆராதாரத்துக் காதாரமான மூலாதாரத்திற் கண்டு களிப்புற்ற சித்தர்களே! ஏகாக்கிரக சித்தத்தோடுங் கேட்பீராக. சிதோபந்தும் காவலரும் நாட்டை யடைந்தபின் காட்டிலிருக்கும் ஸ்ரீமந் நாராயணராகிய க்ஞானேசுவரர் தங்கள்மேல் பஞ்சப் பிராணனேயும் விட்டுத் தந்தையாகிய விடோபா தபோபலத்தாலும் பிரமக்ஞான நிஷ்டையாலும் ஆனந்த பரவசத்தாலும் தன்னை மறந்து சங்கல்பமிறந்து தட்சிணாமூர்த்தியைப்போல் சமாதிநிலையைச் சார்ந்திருப்பதைக் கண்டு அவருடன் தர்க்கஞ்செய்ய வாஞ்சைகொண்டு சின்மய முத்திரையிலிருக்கும் அவர் மடியின்மேற் போய் வீற்றிருக்கப் பாத்பரனாகிய க்ஞானேசுவரர் பரிசம்பட்ட மாத்திரத்தில் எல்லையற்ற பரவசத்தனாயிருக்கும் விடோபாவின் நிர்விகற்ப சமாதிக்கெட்டுச் சுழுப்தி மௌனத்தைவிட்டுப் புளகாங்கிதனாகி விகற்ப மனதுடையவனாகி ஞானக்கண்ணைத்திறந்து ஊனக்கண்களைத் திறந்து தன் மடியின்மேல் வீற்றிருக்கும் பக்தவச்சலனாகியக்ஞானேசுவரர்மேல் மிகவும் வாஞ்சைகொண்டு என் கண்மணியே யென்று விண்டு வாரியெடுத்து மார்பகத்திலணைத்து உச்சிமோந்து முத்தங்கொடுத்து நிவர்த்தி சாது முதலானவர்களேயுந்தழுவி ஆனந்த பாஷ்பங்களாற்கழுவி ஓ ஒப்பில்லா மைந்தர்களே! யான் வணங்குதற் குகந்தவர்களே! சவுக்கியமான நாட்டைவிட்டுக் காட்டிலேன் வந்தீர்கள் அன்பிலா வென்பாலேன் வந்து நொந்தீர்கள், அழகொழுகிய உங்கள் முகதரிசன மின்றே தந்தீர்கள்.

அனேகநாளா வன் தரிசனந்தாராமலிருந்தீர்கள் என்கிற பல பட்சவார்த்தைகளாடி உடனே மௌன நாட்டை நாடிப் பரப்பிரம்ம சங்கீர்த்தனம் பாடிப் பரமானந்தத்தைத்தேடி மகவாசையை நீக்கி மைந்தர்களை நோக்கி இனி சுகமாய் நாட்டைச்சேர்ந்து வேஷ்டைதீர்ந்து மயக்குத்தீர்ந்துபேர்ந்து மிகவும் களிகூர்ந்து அரசனே டன்புற்றிருங்களென்று பகர்ந்து மடியிலிருந்த ஞானேசுவரரை எழுந்திருமப்பாவென சபடநாடகனாகிய ஸ்ரீஞானேசுவரர் ஓ எந்தையே! எங்களைப்பெற்ற தந்தையே! தேவரீரும் நாட்டுக்கு வரவேண்டும். எங்களுட னிருக்கவேண்

டும், நாங்கள் களிக்கவேண்டும், இந்தவரம் நீரிப்போதே தரவேண்டுமென் றுரைந்து மற்றோர் வாமத்தின்மேல் வாமபாகனுகிய நிவர்த்தி சாதுவும் எதிரில் சோபான் தேவும் முக்தாபாயும் வீற்றிருக்கச்செய்தபின் ஞானேசுவரர் தந்தையை நோக்கி நீர் நாட்டையடையாம விக் காட்டிலிருக்க நாங்கள் சுகமுற்றிருப்போமா பெற்ற தந்தையையும் வெறுப்போமா சீக்கிர பெங்களுடன் பட்டணத்துக்குப் பிரயாணப்படுமென, அதற்கு விடோபா அப்பா ஞானேசுவரா! சுக்கினது ஆயாசந்தீர்க்கும் பாயாச மானுலும் அதை நக்குவாருண்டா? உத்தயர் வாக்கிரண்டா? காட்டில் வந்தபின் நாட்டிற் பிரவேசிக்கலாமா? அறிவில்லாத மாக்கரோடும் நேசிக்கலாமா? அன் பார்ந்த நெஞ்சுடன் விசுவாசிக்கலாமா? அற்பமான அரசனைப் பூசிக்கலாமா? எப்பொழுது மெனக்குக் காடே கெதியாகும் உங்களுக்கு நாடே கெதியாகும் ஆதலால் வாட்ட மற்று நாட்டையுற் றிருப்பீர்களென ஞானேசுவரர் என்னையனே! நீர் காட்டிலிருக்கும் காரணமேதென விடோபா அப்பா மகனே நான் நாட்டையடைந்து இனி பெறும்படியான போக லாப மேதிருக்கின்றது நாட்டில் வருவதால் மோக்ஷத்துக்கு விக்கினமேயன்றிச் சகாயமில்லை, நிர்ச்சங்கமான இந்தக் கானகமே மோன நிஷ்டைக்கு யோக்கிய மானதால் இம்மலைச்சாரலிற் சஞ்சரிக்கின்றே னென, ஞானேசுவரர் கண்களை மூடாமல் கவசனையால் விண்ணைமூட நினைப்பது போலவும், இடியைத் தன் சிறு கால்களாற் றாங்கக் கருதிய சிறு குருவியைப் போலவும், கர்மம் செய்துக்கொண்டே தர்மம் தேடுவது போலவும், கடினநெஞ்சன் காட்சியைப் பெற வாஞ்சை கொண்டது போலவும், நானென்பதை மாற்றுமல் ஞான நிஷ்டையைச் சாதிப்பது போலவும், நாடென்றுங் காடென்றும பேத வெண்ணங்க ளோடுங் கூடியிருக்கும் நீர் செய்யும் பிரம நிஷ்டையிருக்கின்றது அபேத நிஷ்டைக்குப் பேதநாட்ட மிருக்கலாமா வென, விடோபா எனதென்னும் பொருள்க ளிருக்கும் பரியந்தம் நானென்னு மகந்தையும் அது இது வென்னும் துவித பாவமும் போகாது இப்பேத பாவங்களை நீக்குவது நிர்விகற்ப நிஷ்டையாம், இந்நிர்விகற்ப நிஷ்டை நிர்ச்சங்கல்பத்தாலுமே லபிக்கும், ஆதலால் ஏகாந்தமான காடே மென நிஷ்டைக்குரிய தென் றிவ்விடத் திருக்கின்றே னென ஞானேசுவரர் தன்னை யறிந்து தானுயிருப்பதே பிரம நிஷ்டையன்றி, காட்டினிற் றனித்திருப்பது நிஷ்டையல்ல வென விடோபா சத்குரு முன்னிலையிற்றன்னை யறிந்துக் கொண்டாலும் தானுயிருப்பதற்கு ஏகாந்த ஸ்தானமே முக்கியமாக வேண்டுமல்லவா வென, ஞானேசுவரர் காட்டிற் றனித்து தபஞ் செய்வதால் அஞ்ஞான நிவர்த்தியாகாது அக மமதைகள் நீங்கிப்போகா தென்று மெய்ஞ்ஞானிகள் காடென்றும் நாடென்றும் சன்பாசமென்றும் சம்சாரமென்று முன்னுமல் திட மனதினேடு நிருவிகற்ப சமாதியைப் பொருந்தியிருக்க நீர் சம்சாரத்தை யெதிர்த்து இக்கானகத்தி லிருக்குங் காரணமேதென விடோபா சாட்சியை யறிந்து சர்வசாட்சியி லைக்யமானவர்கள் சம்சாரததி லிருப்பாரேல் சமாதிசாதனைக்கு விக்கினம் நேரிட்டுச் சாட்சாத்காரத்தை யிழந்துவிட நேரிடும், ஆதலால சகசானந்தபூதி பெற்றோர் சம்சார வபேட்சையைக் கனவிலுங் கொள்ளமாட்டார்க ளென க்ஞானேசுவரர் இது வேண்டு மென்கிற சங்கல்பமும் இது வேண்டாமென்கிற விகல்பமு மற்றிருப்பதே சகஸ நிஷ்டையன்றிக் காட்டைபபேட்சித்து நாட்டையுபேட்சித்திருப்பது நிஷ்டையாகுமா வென, விடோபா சங்கல்ப விகல்ப மற்றிருப்பவர்க்கு வியாபார மெவ்விதமாய் நடக்கும் விவகாரத்துக்குதவாதவன் நாட்டிலிருப்பதாற் பிரயோசன மென்ன? பிணத்துக்கு மணஞ் செய்வது போல அநித்யத்துக்காசுத்தமான இத்தேக போஷணையைக் குறித்துப் பல சங்கடங்களுக்கிடமான நாட்டிலிருக்கக் கூடவேகூடாதென, க்ஞானேசுவரர் வியாபாரத்திலிச்சையற்றவன் சமாதிசாதனஞ் செய்வானுயின் அச்சாதனமும் வியாபாரமல்லவோ இவ்வியாபார முள்ளவனுக்குச் சம்சார வியாபாரமு மிருக்கட்டுமே யென, விடோபா சமாதி ஓர் வியாபார மானுலும் சமஸ்த சங்கல்ப சஞ்சலங்களையும் மாற்றிவிடும், சம்சார வியாபாரம் சமஸ்த சஞ்சலங்களைக் கொடுத்து எந்நேரமும் அல்லலுறச் செய்யுமல்லவா வென ஞானேசுவரர் சச்சிதானந்தப் பொருளேதானுயிருக்க நிஷ்டாசாதன மெனகாரணஞ் செய்யவேண்டு மென விடோபா சாக்ராவஸ்தையில் சுழுப்திநிலையை யடைவதல்லவோ பிரம நிஷ்டையென்று உத்தமர்க ளுரைக்கின்றுர்கள் அப்படிக் கில்லாச் சமாதியால் தடையற்ற ஆநந்தம உண்டாகுமா வென, க்ஞானேசுவரர் சாக்ராவஸ்தையில் இந்திரியங்களின் சேஷ்டையும் சொப்னவஸ்தையில் மனோ வியாபாரத்தையும் சுழுப்தி யவஸ்தையில் சுத்த சூனியத்தையுங் கண்டு களித்திருப்பதே ஆனந்தமும், பருந்தி னிழல் போல் ஒன்றிலு மொட்டியு மொட்டாம லிருப்பதே நனவிற் சுழுப்தி நிலையும் என்று வேதங்கள் முறையிடச் சுத்த சூன்யமான சுழுப்தியைப்போலிருப்பதே ஆனந்த மென்

றும் கனவிற் சுழுப்தி யென்றும் நீர் நினைத்திருக்கலாமா வென, விடோபா சாக்ராவஸ்தையும் சொப்னவஸ்தையும் பிரபஞ்ச வியாபாரத்தி லமிழ்த்தி விஷயங்க ளென்னும் மிருகங்களுக் காகாரமாக்கி மிகவும் வேதனையடையும்படிச் செய்யும் ஆதலால் பிரபஞ்சவியாபார மிழந்த சுத்த சூன்யமான சுழுப்தி யவஸ்தைக் கிணையான சமாதியே உத்தம சமாதியன்றி வேறல்ல வென, க்ஞானேசுவரர் திருடனுக்கு முரடனே குருவென்பது போலப் பிரபஞ்ச வியாபாரத்தி லிருந்துக் கொண்டே ஜனகரைப்போல விஷயங்க ளென்னும் மிருகங்களைத் திடஞான மென்னும் வாளால் கண்டித்துச் சுகதுக்கங்களைச் சட்டை செய்யாமல் வெதிர்த்திருப்பதே பரமசமாதியன்றிச் சூன்யமா யிருப்பது சமாதியல்ல வென, விடோபா அனேக ஜென்மங்களாய் வாசனையேறி யிருக்கும் மனக்குரங்கை சகல பற்றுகளுமற்ற சுகப்பிர்ம ரிஷியால் ஜெயிக்கப்பட்ட தன்றிச் சுழுப்தி நிலையில்லாமல் தான் பிர்ம மென்கிற திடஞானமுள்ள ஜனகரால் ஜெயிக்கப்பட்ட தல்லவே யென, க்ஞானேசுவரர் கோலாடினுல் குரங்காடுவது போலதிடஞானமுள்ள ஜனகரால் மனநாச மடைந்ததே யன்றிப் புறப்பற்றுக் காடேகெதியாயிருந்த சுகரால் மனோலயமடைய வில்லையே யென, விடோபா திருக்குவாயிருந்து திரிசியத்தை யகற்ற வேண்டுமே யன்றித் திரிசியத்தி லிருந்துக் கொண்டே திரிசியத்தை யெப்படி நீக்கக்கூடும் விஷந்தீர விஷமே குடித்தால் மரணமேது வல்லவோ வென, க்ஞானேசுவரர் விஷந்தீர வேறோர் விஷமான அவுஷத முட்கொள்ளுவதுபோலப் பயமான விஷயேந்திரிய காரணுதிகள் நிர்பயமான திடஞானத்தால் கொள்பவனே சயர்த்தனன்றி எப்போதும் நிஷ்டையி லிருந்துக் கொண்டு எங்கே விஷயங்க ளென்னும் மிருகங்கள் வரப்போகிறதோ வென்கிற பீதியை குடிகொண்டிருப்ப வனுக்கு அப்பீதியே பலிதமன்றிப் பிர்மானந்த மோர்க லத்துங் கிட்டாது நன்றாயோசித்துப் பாருமென, விடோபா சன்யாசியாகி சதா சமாதி நிஷ்டையி லிருப்பவனையே சஞ்சலத்துக் குட்படுத்தும் விஷயங்கள் சம்சார வியாபாரத்தி லிருப்பவனை என்னென்ன படுத்தாது, பெரு வெள்ளத்தில் வீழ்ந்த சருகு சலனமின்றி ஒரிடத்தி லிருக்கவுங் கூடுமா வென, க்ஞானேசுவரர் திடஞான மில்லாதவன் எத்தனை நாள் அந்தர் திருஷ்டையி லிருந்தாலும் கருவிகள் பகிர்முகத்திற் கொண்டு வந்து பல துன்பமடையச் செய்யும் பெருத்த வெள்ளத்தில் வீழ்ந்த பருத்த கல்லானது சற்று மசையாம லிருப்பது போல் விஷயாதி விகாரங்க ளெத்தனை வந்தாலும் சகிக்காத் துன்பந் தந்தாலும் நிர்ச்சலனமா யிருப்பவனே பிர்மானந் தானுபவம் பெறுவா னன்றித் திடமில்லாத வனுடைய மடமை ஒருக்காலத்தும் நீங்கவே நீங்கா தென, விடோபா எவ்வளவு திடமிருந்தாலும் நிற்சங்கனுப் சதா பிர்மானுசந்தானஞ் செய்யாமற் போனல் மாயாந்தகாரகூபத்தி லமிழ்ந்து போவதற்குச் சந்தேகமே யில்லையென, க்ஞானேசுவரர் பிர்மத்தையன்றி மாயையென்ப தொன்றுண்டா யிருந்தா லல்லவோ சதா நிஷ்டையிலிருந் ததை நீக்கவேண்டும் தன் நிழல் தன்னேடெதிர்த்து யுத்தஞ்செய்யு மென்பது போல இல்லா மாயையும் இல்லா அகத்தையும் ஏற்படுத்திக் கொண்டு சதாநிஷ்டையி லிருக்கவேண்டுமென் றுரைக்கின்றீர் இல்லா நிழலோடு போராடுவதால் இளைப்பே பிரயோசனமாகுவதுபோல் என்றுமில்லா மாயையை இல்லை யென் றறிந்துக் கொண்டு மௌனமுற் றிருக்காமல் எந்நேரமும் நியதிகளைந்துக் கொண்டிருப்பது என்றும் நீங்காச் சள்ளையல்லவோ வென விடோபா நியதிகளையாமலும் ஏகாக்கிர சித்தமாகாமலும் சாட்சியா யிருக்காமலும் சகலஞானம் பொருந்துவ தெப்படி யென, க்ஞானேசுவரர் நேதிசெய்பச் செய்யப் புற்றினுள் ளிருந்து புறப்படும் ஈசலைப்போல மிகவும் விஷயங்கள் புறப்பட்டு நிற்கும் ஏகாக்கிரசித்த மாக்க வாக்க அடிக்கடிப் பந்தெழும்புவது போல மனஞ் சஞ்சலப்பட்டு நிற்கும் சாட்சியாயிருக்க விருக்கக் குணங்க ளெடுத்த கணங்கள் வாலைப் போலத் தனுவாதிகள் தானென்கிற பிரமையே வந்துக் கொண்டிருக்கும் ஆதலால் அவித்தை யென்னும் அகந்தையையும் மித்தை யென்னும் மாயையும் சுத்திகாரஜிதம்போல் முழுதும் மித்தையாயெண்ணி தானே பிர்மமென நண்ணி விசார க்ஞானத்தால் கெம்பீரத்துடனிருப்பதே பிர்மானந்த மென, விடோபா யாதொரு சாதனையுஞ் செய்யாமல் விசார ஞானத்தால் தானே பிர்மமென் றிருப்பதால் துக்கமயமான விஷயாதிகளை வெல்லக்கூடுமோ? அகண்டானந்த ஆத்மாவைப் புல்லக்கூடுமோவென க்ஞானேசுவரர் உயிரோடிருக்கும் பசுவே வியாக்கிரத்தைக் கொல்லாதாயின் இறந்துபோன பசு கொல்லுமா? அதுபோல நித்யமாகியும் நிஷ்களமாகியும் அகண்டானந்த மயமாகியும் விளங்காநின்ற ஆத்மாவை விஷயாதிக ளென்ன செய்யக்கூடும், கொழுத்த பசுவும் புலிமுன்வர அஞ்சுவது போலத் திடஞானத்தால் பூர்த்தி யடைந்திருக்கும் ஞானவான் முன் விஷயங்கள் வரவே வராது வந்தால் புலிமுன் வந்த பசு வெப்படி

அபாயமடையுமோ அப்படியே அழிந்து போகுமென, விடோபா விபசாரியோடு கூடிய சம்சாரியுங் கெடுவது போல அஞ்ஞானிகளோடு கூடிய மெய்ஞ்ஞானியும் விஷயாதிகளிற் சிக்கி மனோசஞ்சலத்திற் சொக்கி துக்கமயமாய்ப் போனாலோவென, க்ஞானேசுவரர் திடமுள்ள சம்சாரி பல விபசாரிகளோடு கூடியிருந்தாலுங் கற்பழியாமலே யிருப்பாள், திடமில்லாதவள் ஒருவர் கூட்டுறவில்லாதிருந்தும பதிவிரதைத் தன்மைக்குத் தானே பழிதேடிக் கொள்வாள்.

அதுபோலத் திடமுள்ளஞானி அனேக ஞானிகளோடு சூழ்வுற்றிருந்தாலும் பூரணஞானத்தை யிழக்கமாட்டான், திடமில்லாதவன் ஏகாந்தனாயிருந்து மிழந்து விடுவானென விடோபா சம்சார வியாபாரத்தி லிருந்துக்கொண்டு சகலஞானி யெப்படியாகக் கூடுமென க்ஞானேசுவரர் பார்ப்பான் தோட்டிவேஷம் போட்டு நாட்டிய மாடினாலும் தோட்டியாகாமல் அந்தணனாகவே யிருப்ப தெப்படியோ அப்படியே மெய்ஞ்ஞானி அஞ்ஞானிகளோடுகூடி அனேகவித நடனத்திலிருந்தாலும் பரமானந்தானுபோதியாகவே யிருப்பானென, விடோபா எவ்வளவு திடப்ரக்ஞை யுள்ளவனானாலும் ஓர் முகூர்த்த நேரமாவது பிரமானு சந்தானஞ் செய்யாமற்போனால் பிமஞானியாதல் வெகு துர்பலமென க்ஞானேசுவரர் தோட்டி வேஷம் போட்டு நாட்டியமாடும் மறையோன் அடிக்கடி நான் மறையோன் என்றுன்ன வேண்டுமோ? அப்படி நினைக்காவிட்டால் தோட்டியாய்ப் போவானோ? நாடறிந்த பிராமணனுக்குப் பூனூல் வேண்டுமோ? நானென்னு மகந்தையற்றபின் பின்னும் நானென்னு மகங்காரக்கிரந்தியை வைத்துக்கொண்டு அகம் பிர்மமென்னும் பிர்மானு சந்தானம் பண்ணவும் வேண்டுமோ? நாடறிந்த பிராமணனுக்குப் பூனூலில்லா விட்டாலும் எல்லாராலும் பூசுரரென்றே பூசிக்கப்படுவது போலவே நானெனதென்னும் அகமமதையற்றவன் யாதோரனு சந்தானஞ் செய்யாவிட்டாலும் எல்லாராலும் பூசிக்கப் பட்டுப் பிர்மானந்தானு போகியாகவே யிருப்பானென, விடோபா ஜகதீசுவரனுக் கிணையானவனானாலும் தான் பிர்மமென்கிற அநுசந்தானம் நாடோறுஞ் செய்யானாகில் அஞ்ஞானியாய்ப் போவதற்கோர் தடையில்லவே யில்லே தனுவாதிகளே நானென்னும் அகந்தை கொஞ்சத்திற் போகவே போகாதென, க்ஞானேசுவரர் விளக்கை கையிற் பிடித்துக்கொண்டு இருட்டே இருவென்றால் இருக்குமோ? பூனையை அருகில் வைத்துக்கொண்டு கிளியே பேசென்றால் பேசுமா? அதுபோலவே தேகாதிகள் தானென்னும் அஞ்ஞானத்தை வெதிர்த்துப் பிர்மமே தானென்றறிந்தபின் அஞ்ஞானமே இருப்பாயாக வென்பதாலிருக்குமா? ஜீவேசுவர ஜகத்தாதிகள் பொய் யென்றறிந்தபின் மாயையை வாவென்றால் வருமா? நபுமசகனென்றறிந்த ஸ்திரீயின் முன் நான் புருஷனென்று சொல்ல நாணமடைந்த பேடியைப்போல பிரமமென்பது சத்தியமென்றும் மாயையை அசத்தியமென்றும் பிர்மம் நிருவிகல்பமென்றும் மாயை சங்கல்ப விகல்பமென்றும் தானே பிர்மமென்றும் பிர்மமே தானென்றும் சற்குருநாதன் சன்னிதானத்திற் சந்தேகமறத் தெரிந்தவனுக்குச் சங்கல்பமேது விகல்பமேது பந்தமேது மோட்சமேது ஜனனமேது மரணமேது நாடேது காடேது தானமேது தபமேது சன்யாசமேது சமுசாரமேது என்று செத்தாட்டுக் கண்போலச் சகத்திலிருப்பவன் முன் மாயையின் சாமார்த்தியம் அணுவும் நடக்குமா? அஞ்ஞானத்தினு மடக்குமா? நன்று யூகித்துப்பாரு மென்றுரைக்கும்போது நிவர்த்திசாது ஓ என் தந்தையே! நீர் வெகுநேரமாகத் தர்க்கிப்பது விந்தையே எதை நினைத்த மாத்திரத்தில் சகல பாபங்களும் நிவாரணமாய்ப் போகுமோ எதைபாராயின் அனங்கனுவானோ எதனுடைய தரிசனத்தால் தன்னை மறப்பானோ எது ஞானர்ச்சனைக்குகந்ததோ ஏகமாயிருப்ப தெதுவோ அதையே யறிய வேண்டும் மிகவும் பிரியத்தைக் கொடுப்பதாகியும், அகண்டானந்தத்தை தருவதாகியும் ஓர் தாம் தரிசித்தாலும் ஆயுளிறுதி பரியந்தம் நினைத்து சுனைந்து வியப்படைவதாகியும், வெளியிலும், வளியிலும், சமீபமானதாகியும் கோடி சூரியப்பிரகாச மானதாகியும், மகாவாக்கியங்களுக்கு லட்சியமாகியும், எப்போதும் நூதனமானதாகியும் விளங்காநின்ற தெதுவோ அதையே தியானிக்க வேண்டும். எதனிடத்தில் இந்த அண்டாண்ட பிண்டாண்ட பிர்மாண்டங்களெல்லாம் சிருஷ்டிதிதி லயங்களைப்பொருந்தி யிருக்குமோ பூதபவுஷிய வர்த்தமானமென்னும் திரிகாலங்களிலும் பின்னமின்றி அத்துவிதமா யெந்தப் பொருளான திருக்கின்றதோ எது அவாங் மனோ கோசரமாயிருக்கின்றதோ எதுமேல் கீழ்நடுபக்கமும் நாமரூப விகாரமுமற்றிருக்கின்றதோ அது பிர்மமென்றுரைக்கத் தகும் என்று வேதத்தில் முறையிட்டாலும் சராசரங்களிலும் பிருதிவியாகி பஞ்ச பூதங்களிலும் சப்தமாதி பஞ்ச தன் மாத்திரைகளிலும், அவ்யக்தம மகத்வம் அகங்கார தத்வங்களிலும் சாத்வீக ராசுத் தமோகுணங்களிலும் இதின் பிரதி பிம்பமான திரிமூர்த்திகளிலும் பரமாணுக்களிலும் பரிபூரணமா யென்றும் நீங்காதிருக்கும் பரப்பிரமத்தை வணங்குவதெப்படி இணங்குவதெப்படி இப்பேர்க்கொத்ததென்று வாக்கினர் சொல்லவும்

மனதினால் நினைக்கவுங் கூடாததான வஸ்துவை வாழ்த்துவதெப்படி மனனஞ்செய்வதெப்படி எதனுக்கு ரூபஞ் சூன்பமாயிருக்குமோ எது நாமத்துக் கப்பாற்பட்டிருக்குமோ அதைப்பார்க்கவேண்டும் துதிக்கவேண்டும் என்று பலகரம் பேசுவதனால் பிரயோசனமேது சுருதி ஸ்மிருதிகளே அப்பரமாத்மாவின் நிலைமை யரைத்தற்குக் கூடாமல் மௌனஸ்திதியைப் பொருந்தியிருக்குமாயின் நாம் சொல்வதெப்படி நாமரூபங் குணங்குறி முதலியவைகளை நீக்கியபின் எந்தப்பொருள் மீதியாயிருக்கின்றதோ அந்தப்பொருளாகி சமஸ்த வஸ்துக்களிலும் சமத்துவம் பொருந்தியிருப்பதே மேன்மையான பிர்மத்தியானமாகும் விருப்பு வெறுப்புற்றுச் சுகதுக்க சகிதனாகி நானென்னும் அகங்காரக் கிரந்தியைக் களைதலே மாட்சிமையான பிர்மநிஷ்டையாகும் ஈதுண்மையாயிருக்க நீர் காட்டினிலிருக்குங் காரணமேன் தறிபோலசையாதோர் ஸ்தானத்தில் வீற்றிருப்பதேன் என்கிற பல வார்த்தைகளாடும் போது விடோபா தனயரோடு தர்க்கஞ்செய்யச் சாமர்த்தியமின்றி அப்பா நிவர்த்திசாது ஐயா க்ஞானேசுவரா! நீங்கள் ஜன்மிக்கும் போதே மெய்ஞ்ஞான நாட்டமும் சுஞ்ஞானகோஷ்டமும் விளக்கமுற் றிருந்தவர்களாதலால் உங்களுடன் வாது செய்ய என்னாலாகுமோ? இப்பேர்ப்பொந்த மகானுபாவர்களாகிய உங்களை நான் மைந்தர்களாய்ப்பெற என்னபாக்கியஞ் செய்தேனோ எதுதவஞ்செய்தேனோ வென்றவர்களை மார்பிருகத் தழுவிக்கொண்டு ஆனந்த மேலீட்டால் தன்னைமறந்தார், உடனே க்ஞானேசுவரரும் நிவர்த்தி சாதுவும் அரியர ஸ்வரூபிகளாய் வீற்றிருந்தார்கள் விடோபா கண்களைத்திறந்து ஆலிங்கனஞ்செய்த தனயரிருவரும் சங்கரன் சாரங்கபாணியா யிருக்கக்கண்டு ஆனந்தங்கொண்டு புளகாங்கனாய் மயிர்க்குச் செறிந்து தழுவினபடியே அரியரனைத் தோத்திரஞ் செய்பத் தொடங்கினார்.

---

## பகவான் துதி.

---

### விருத்தம்.

மந்திரகிரியெழுந்தா வகையுறப்படைக்கியாகி
இந்திராதியரைக்காத்த வெந்தையேநெடியமாலே
பந்தமாம்பகுதிக்குள்ளாய்ப் பவம்பலவெடுப்பேற்கும்நீ
மைந்தனாய்வந்ததென்ன மாயமோவறிகிலேனே. 1

மந்திரகிரிக்காற்றமல் வாசுகிக்குமாலம்
விந்தையாயுண்டவானோர் மேற்றயைசெய்தமூர்த்தி
தொந்தமாம்வாழ்வைமேலாஞ் சுகமெனநினைந்தேற்கும்நீ
மைந்தனாய்வந்ததென்ன மாயமோவறிகிலேனே. 2

பந்துபோலிருக்குமிந்த பற்பலவண்டபேதம்
அந்தணன்படைத்ததன்றோ வவற்குநீதாதையன்றோ
எந்தையேயுனக்குந்தாதை யிப்பாரத்துண்டோவுன்றன்
மைந்தனான்பிதாநீயென்ற மாயமோவறிகிலேனே. 3

அந்தணன்புலவனாகி யோர்சிரமாலைபூண்ட
தந்தையுந்தாயுமில்லாச் சங்கராவுனைப்பயந்தோர்
எந்தலோகத்திலுண்டு திங்ஙனமிருக்கவுன்றன்
மைந்தனான்பிதாநீயென்று மாயமோவறிகிலேனே. 4

சிந்துரஞ்சிஞ்சுமாரஞ் செயுஞ்சமர்க்கிடந்தயர்ந்தே
உந்திபூத்தவனேகாவென் றோலமிட்டிறைந்துகூவ
வந்தனனஞ்சேலென்று வகுத்தருண்மாலேநீயென்
மைந்தனாய்ப்பிறந்ததென்ன மாயமோவறிகிலேனே. 5

அந்தகன்வலியாங்கார மாவிநீங்கிடவுதைத்தே
எந்தன்மார்கண்டர்க்கிரெட்டாண்டினையளித்தாட்கொண்ட
சுந்தரானந்தஞானத் தோன்றலே தொழும்பனேற்கும்
மைந்தனாய்ப்பிறந்ததென்ன மாயமோவறிகிலேனே. 6

அந்தமார்பிரகலாத னரியரியெனவேசீற்றம்
வந்துதன்மகவுமாற்றும் வகைபலவியற்றினோனை
அந்திவேளையிலழித்த வாயனேநீயுமுன்றன்
மைந்தனானென்றறைந்த மாயமோவறிகிலேனே. 7

சுந்தரதிதியின்மைந்தன் துகளெலியுருவாய்ச்சென்று
அந்தரந்தனைக்கறிக்க வலவனாயடைந்தனோன்றன்
கந்தரங்கடித்துமூர்ச்சை யுறச்செய்தகபாலியுன்றன்
மைந்தனானென்றறைந்த மாயமோவறிகிலேனே 8

தந்தையின்மடிக்காசித்த தன்யனாந்துருவனுக்கே
அந்தரத்தசலவாழ்வையளித்தகாருண்யமாயா
வெந்துயர்கடலின்மூழ்கி வேட்கையுற்றிருப்போர்க்குநீ
மைந்தனாய்ப்பிறந்ததென்னமாயமோவறிகிலேனே. 9

நந்திவாகனனேயென்று நலவுபமன்யரேத்த
முந்தமிழ்துந்தியீந்த முக்கணாயகனேநீய
செந்துவர்வாய்நலார்தஞ் சேமமிச்சித்தேற்கும்நீ
மைந்தனாய்ப்பிறந்ததென்னமாயமோவறிகிலேனே. 10

என்றிவ்விதமாகத் துதித்துருகி ஓ வைகுந்தவாசனே! ஓ கைலாசநிவாசனே! நீங்களே எனக்குப் புத்திரரா யவதரித்திருக்கத் தவமுஞ் செய்யவேண்டுமோ? என்னைப் போன்ற புண்ணியவானு மிவ்வுலகிலுண்டோ? உங்களுக்குச் சேவை செய்வதை விடுத்து இக்காட்டிலிருந்த வென்னறியாமையை என்னவென்றுரைப்பேன் பிறந்த நாளிலேயே உங்களுடைய சுயரூபங்களைக் காண்பித் தென்னை யாட்கொள்ளலாகாதோ? இதுநாள் பரியந்தம் மறைந்திருந்த காரணமேதோ வென்கிற பல வார்த்தைகளாடிச் சோபான் தேவை நோக்கி ஓ மகானுபாவா! சோபான்தேவா! உம்முடைய திவ்விய உருவையும் அடியேன் தரிசிக்கும்படியாக அருள்புரியு மையாவென்று வேண்ட சோபான்தேவ் பிரமதேவனைக்

காட்சிகொடுத்துத் தந்தையைநோக்கி, ஓ பரமசாதுவே தனக்குள் பரப்பிர்மத்தை யறிந்து தானே பிர்மமெனத் தெளிந்து தனக்கு எக்காலத்திலும் ஜனன மரணாதிக ளில்லையென்றறைந்து பரிபூரண வஸ்துவா யிருப்பானா னால் அவனுக்கு மரணமுண்டா ஜன்மமுண்டா இப்படி பிறப்பிறப்பற்ற பிரமஞானிக்கு நரகமேது சொர்க்கமே து பந்தமேது மோட்சமேது எல்லாம் பிர்மமென்கிற அதர்வணவேத மகாவாக்கியார்த்தத்தின்படி பிபீலிகாதி சமஸ்த வஸ்துக்களும் பிர்மமயமென்றும் பிர்மம் அணு வுக்கணுவாகியும் மஹத்துக்கு மஹத்தாகியும் விளங்கும் பரவஸ்துவென்றும் அறிந்தவனே பிரமானுபூதி பெற்றவ னாகும் அன்றி இப்பேர்க்கொத்த அனுபவத்தி லிருந்துக் கொண்டே சம்சாரத்திலிருப்பவன் பிர்மவித் தென்றும் சுகஞானியென்றும் சொல்லப்படும் இல்லறத்தி லிருந்து தேர்ந்த வசிஷ்டருக்கு விசுவாமித்திரரும் ஜனகருக்குச் சுகப்பிர்ம ரிஷியும் ஸ்ரீ கிருஷ்ணருக்குத் தூருவாசரும் ஐக்யமாயிருந்தார்கள். ஆதலால் இல்லறஞானியே தன் னைமறந்த சன்யாசிகட்கும் மேலானவனாகுமென்றறையும் போது விடோபா ஓ சகத்சிருஷ்டிகரே! உமதுவாக்கைக் கடப்பவருமுண்டோ இனி நீங்களென்ன சொல்லுகிறீர் களோ அப்படியே நடக்கச் சித்தமா யிருக்கிறே னென் றறைந்து ஆனந்தம் நிறைந்து ருக்மாபாயியை நோக்கி ஓ பெண்ணே நமதாசிரியர் ஆசீர்வசனப்படி திரிமூர்த்தி களும் நமக்கு மகவாய்ப்பிறந்து நம்மை கிருதார்த்தராக் கினார்களினிநாம் தவமுஞ்செய்யவேண்டுமோ வனத்திலு மிருக்கவேண்டுமோ நம்மைப்போல் புண்ணியவான்களு முண்டோவென் றுரைக்கும்போது ருக்மாபாயி ஆனந்த வாரியில் மூழ்கினவளாய் இவ்வுலகில் இப்பேர்க் கொத்த விந்தையும் நடந்ததுண்டா ஆனால் அநசூயாதேவி புத் திரவாஞ்சையால் வாடக்கண்ட மும்மூர்த்திகளும் அவ் வுத்தமிக்கு மகவாகப் பிறந்தார்கள் காரணம் அவ்விரத சீலியின் கணவனாகிய அத்திரிமஹாரிஷியின் தபோபலத் தால் அநசூயாதேவியைப் பரிசோதிக்கவந்த மூவரும் தன் வல்லமைகுன்றிச் சிறுகுழவிகளா யிருந்ததினாலே யாம் மகாபதிவிரதையாகிய அநசூயா தேவிக்கும் மக வாய்ப்பிறந்த மூவரும் யாதொரு நற்குணமுமில்லா அடி யாளுக்கு அருங்குழவிகளா யுற்பவித்தது மிகவும் ஆச் சரியமல்லவா வென்கிற பலவார்த்தைகளாடி முக்தாபா யின் வதனத்தைநோக்கி ஓ அம்மா நீ சரஸ்வதியோ லட் சுமியோ பார்வதியோ யாங்களறிய உன் சுயரூபத்தையுங் காட்டி எங்களை ஆட்கொள்ளு மம்மாவென்று வணங்க

முக்தாபாயி மூவர் வேண்டுதலினால் தன்சுயரூபமெடுத்து ருக்மாபாயும் விடோபாவும் களிக்கடலில் மூழ்கும்படி யாகத் தரிசனந்தரவே சதிபதிகளிருவரும் பரமேசுவரி யின் பாதங்களிற்றொழுது ஓ அம்மணி பரமேசுவரி ஜக தீசுவரி அந்தரி சுந்தரி நிரந்தரி துரந்தரி சங்கரி பயங்கரி மனோன்மணி மஹாதேவி சகலலோகங்களையும் உன் உத ரத்தில் வைத்திருந்தும் எங்கள் அகட்டிற்பிறந்து குழந் தையென்கிற பேருறலாமோ தந்தைதாயென்னும் பேர் நாங்கள் பெறப்போமோ வென்றனந்தம் விதங்களாய்த் துதிக்கும்போது ஆதிசத்தி ருக்மாபாயியையும் விடோ பாவையும் நோக்கிப் புனிதர்களே நாங்கள் நால்வரும் உலகிலுள்ள கொடும்பாவங்களைப் பரிகரிக்கவும் கோஹ த்திமுதலான தீங்குகள்செய்யும் கொடியரை அடக்கவும் சகுண நிர்க்குண தியானங்கள் நிலைபெற்றிருக்கவும் ஸ்ரீ ராமலட்சுமண பரத சத்துருக்கரைப் போல் அவதரிக்க எண்ணங்கொண்டு மகா புண்ணியவான்களாகிய உங்க ளுக்கு மகவாய்ப்பிறந்தோம் அவதரித்த காரணத்தை முடிக்க நாட்டை யடையவேண்டுமாதலால் எங்கள் வாக் கியத்துக்கு மறுவாக்குரைக்காமல் நீங்களும் நாட்டுக்கு வரவேண்டும் அன்றிப் பிர்மானுபூதி பெறும்படியான அத்வைதஞானிகள் காடென்றும் நாடென்றும் பின்ன பாவமாகப் பார்க்கவேகூடாது மலமாதிகளும் சந்தனாதி களும் அபின்னமாய்ப் பார்ப்பவனும் விஷாமிர்தத்தை ஒன்றெனமதித்துப் புசிப்பவனும் சுகதுக்கத்தைச்சமமா க நினைத்திருப்பவனும் உறவும் பகையும் வொன்றென உன்னுபவனும் சாதிக்கும்படியான பிர்மநிஷ்டையைப் பேதபாவமுள்ளவனா லொருபொழுதும் சாதிக்கக் கூட வேகூடாது ஆதலால் எல்லாவற்றிற்கும் சமபாவ முள்ள வனால் சாதிப்பதற்குகந்த பிர்மநிஷ்டை நாடென்றுங்கா டென்றும் பேதபாவமுடைய உங்களால் அத்விதானுப வம் பெறவேகூடாது மூவர்தேவர் மற்றியாவர்களும் பிரி யமாகியும் அவர்கள்பா லணுமாத்திரமான ஆனந்தமாகி யும் தானகண்டானந்த மய்மாகியும் சராசரங்களில்நிறை ந்திருக்கும் பராபரமாகியும் இருப்பதெதுவோ அதுவே பிர்மமென்றுரைக்கத்தகும் அதை ஏகமென்றும் அனேக மென்றும் சொல்லக்கூடாது ஒன்றெனநிச்சயித்தபோதே அங்கனே விகற்பங்களுண்டாகும் அப்பரவஸ்துவை இப் பேர்க்கொத்ததென்று சொல்வதற்குக் கூடாமையாலே இப்பரமேசன் சின்முத்திரையால் ஜனகசனந்தனதியர்க் குங் காட்டாமற்காட்டிப் பரமாத்மாவி லைக்யப்பட்டு மௌனநிஷ்டையைப்பொருந்தியிருக்கிறார் இந்தமகாவி

ஷ்ணுவும் அப்பரப்பிரம்மத்தை இப்பேர்க்கொத்ததென் றுவுரைக்கக்கூடாமையால் பௌத்தாவதாரமாய் மௌன முற்றிருக்கின்றார்.

இப்பிரம்மாவும் அப்பரவஸ்துவை விரித்துரைத்துத் தன்னுலாகாமல் மூகபாவத்தை யடைந்திருக்கின்றார் வாக்கினற்சொல்லும் ஓர்மொழியை அவ்வாக்கினுலே ஸ்திரப்படுத்த வேண்டிவதுபோலப் பரமாத்மாவின் நிலைமை அப்பரமாத்மாவாலேயே அறியவேண்டும் சிவலிம்சை அச்சிவனன்றி மற்றதாலறிதற்குக் கூடாதது போலவும் நாகத்தின் வேஷ்டையைத் நாகமெடுத்தோனல் தெரிய வேண்டுவதுபோலவும் இனிய பதார்த்தத்தின் ருசியை அருந்தினவனலே அறிந்துக்கொள்வது போலவும் தானே அப்பரவஸ்துவை யாராய்ந் தறிந்துக்கொள்ள வேண்டுமன்றி ஒருவரா லுணர்த்துதற்குக்கூடாது குருவுஞ்சிஷனு மொன்றுயிருக்கும் அநுபவத்தில் சேவைசெய்பவன்யார் செய்வித்துக்கொள்பவன் யார் ஆசிரியர் மாணுக்கனைநோக்கி நீயே நான் நானே நீ யென்கிற அத்துவிதாநுபவத்தை யுரைப்பானுயின் மாணுக்கன் பின்னப்பட்டிருக்கக்கூடுமோ தன்னுடைய சொரூபஸ்திதி அபின்னசிர்த்தியாயிருக்கப் பின்னப்படுவ தெப்படி நன்றென்றும் தீதென்றும் பாராமல் காடாக்கினிக் கிணையாயிருப்பவர்க்குக் காடென்றும் நாடென்றும் துவிதபாவங் கொள்ளலாமோவென்கிற பல வார்த்தைகளாடி விடோபாவைநோக்கி ஓ புண்ணியவானே உண்மை இப்படியிருக்க நீர் நாட்டைவெறுத்துக் காட்டிலிருக்குங் காரணமேன் என்றுகேட்க விடோபா வணங்கி இனி உங்களிஷ்டப்படி நடப்பதே எனக்குறுதியான தபோபலம் ஆதலால் நாட்டிற் பிரவேசிக்கலாம் வாருங்களென் றுரைக்க மூவரும் ஆதிசத்தியும் விடோபாவைநோக்கி ஓ விரதசீலனே எங்களுடைய ரகசியத்தைப்பிறருக்குணர்த்தாமலும் நாங்களினிசெய்யும் திருக்கூத்துக்கு வெதிருக்தம் செய்யாமலும் மௌனநாட்டத்தி லிருப்பதே உமக்குறுதியான பிர்ம நிஷ்டையென்றுரைத்து நால்வரும் சிறுகுழந்தைகளாகி விடோபாவுக்கும் ருக்மாபாயிக்கும் முன்போல் புத்ரவாஞ்சையை யுண்டாக்கி அவர்களை அழைத்துக்கொண்டு காட்டைக்கடந்து நாட்டையடைந்து சிதோபந்தின் வீட்டிற்பிரவேசித்துப் பால்யரைப்போலவே விளையாடத்தொடங்கினர்கள். விடோபாவைக்கண்ட சிதோபந்து சந்தோஷசாகரத்திற் படிந்தவராய்க் களிப்படைந்துபலவுபசாரஞ்செய்யத் தொடங்கினர். விடோபா மாமன்மாமியார்க்கும் வந்தனஞ்செய்து களிக்கடலில்மிழ்ந்திருந்தார். ருக்மாபாயி தனக்குற்ற பாக்கியத்தை உன்னியுன்னிப் புளகாங்க மடைந்திருந்தாள் கேட்டீர்களோ சித்தர்களே யென்று பின்னும் நாபாஜிசித்தர் சொல்லத் தொடங்கினர்.

க்ஞானேசுவரர் தன்றந்தையை நாட்டி லழைத்துவந்த அத்தியாயம்
முற்றிற்று.

---

பத்தாவது

## க்ஞானேசுவரர் எருமைக் கிடாவினல் வேதத்தை விரித்துரைத்த அத்தியாயம்

---

வாருங்கள் சித்தர்களே விடோபா நாட்டைச்சேர்ந்த மறுநாள்காலையில் க்ஞானேசுவரர் தந்தையையழைத்துக்கொண் டரையன்பாற்சென்று வேந்தனை நோக்கி ஓ ஏந்தலே சாந்தியா லுபசாந்தியடைந்த எங்கள் தந்தை இதோவந்தனர் காட்டை நீங்க விடைந்தனர் நாட்டையடைய நொந்தனர் கிடைத்தற்கரிய சேவைதந்தனர் என் றுரைத்ததைக்கேட்ட நராதிபன் க்ஞானேசுவரருக்கு மவர் தாதைக்கும் வந்தனஞ்செய்து விடோபாவை நோக்கி ஓ புண்ணியமெல்லாந் திரண்டோருருவாய்வந்தபுனிதரே தவத்தில் கனிதரே இகபர சவுக்கியத்தையளிக்கும் நாட்டைவிட்டு ஜனசூன்யமான காட்டையடைந்த காரணமேதோ திருவாய்மலர்ந் தருளுமையாவென்று பணிவாகக்கேட்க விடோபா அரசனுக்காசிகூறி ஓ வீரமுந்திரமும் விளங்கிச் சலட்சண சுலட்சணங்களிற் பூர்த்தியாய்த் துலங்கிக் கொடுங்கோலை வாட்டிச் செங்கோலை யீட்டிக் கர்மத்தை நீத்துத் தர்மத்தைப் பாதுகாத்துவரும் தலைவனே நாட்டுக்கு நரரே முக்கியம் நாருக்கு நரபதியே முக்கியம் பதிக்குப் பண்பேமுக்கியம் பண்புக்கு பச்சாத்தாபமேமுக்கியம் தாபத்துக்கு சாந்தமே முக்கியம் சாந்தத்துக்கு தர்மமே முக்கியம் தர்மத்துக்குச் சத்புருஷரே முக்கியம் சத்புருஷருக்கு ஜகதீசுவரனே முக்கியம் ஜகதீஸ்வரனுக்கு தாசரே முக்கியம், தாசருக்குச் சம்பாவமே முக்கியம் சம்பாவத்துக்குத் தற்பரசோதனையேமுக்கியம் தற்பரசோதனைக்குச் சர்வசாட்சித்வமே முக்கியம் சர்வசாட்சித்வத்திற்குச் சாட்சாத்காரமே முக்கியம் சாட்சாத்காரத்திற்குச் சாஸ்திர விசாரணையே முக்கியம் சாஸ்திரவிசாரணைக்குச்சாட்சித்வமேமுக்கியம் சாட்சித்துவத்துக்குத் ததாகாரமேமுக்கியம் ததாகாரத்துக்கு ஜகத்விலட்சணமே முக்கியம் ஜகத்விலட்சணத்துக்குச் சர்வசங்கபரித்பாகமே முக்கியம் சர்வசங்க பரித்தி

யாகத்துக்குச் சதாநிஷ்டையே முக்கியம் சதாநிஷ்டைக்குத் தபசேமுக்கியம் தபசுக்கு * சங்கிரமமே முக்கியம் ஆதலால் காட்டையடைந்தேன் அல்லாமல் தியானத்துக்கு தபசே முக்கியம் தானத்துக்குச் சமுசாரமே முக்கியம் ஆதலால் தியானத்துக் குறுதியான தவஞ்செய்துக் கொண்டிருந்தேனென்றறைய அவ்வாக்கியங்களைக்கேட்ட அரசன் திக்கென்றெழுந்து அவர் சேவடியில் விழுந்து ஓ மா தவனே அஞ்ஞான இருளை நீக்கும் ஆதவனே! நரர்செய்யுங் குற்றம் நரபாலனுக் கென்கிற ஸ்மிருதியின்படி அடாத அகமமதை கெடாத அகிலாசாரத்தைவிடாத அந்தர்முகத்துக் குட்படாத அந்தணரெனக் கறிக்கை செய்யாமல் உம்மை அவமானஞ்செய் தடவியிற்போகும்படியாய்ச்செய்த அபசாரத்தை உபசாரமாகக் கொண்டு ஆசீர்வசனங்கள் விண்டு இப்போதே என்னையடிமையாக்கிக் கொள்ளுமையா வென்று மிகவும் வேண்டும் போது விடோபா இராஜனுக்கன்பான மொழிகள் பகர்ந்து நீர் பரிசுத்த மனதுடையவ ராதலால் சகல சாம்பிராச்சியத்துடன் சுபமுற்றிருப்பீர்களென்று ஆசீர்வாதஞ் செய்ய இராஜன் சந்தோஷித்தது தன்மந்திரியிடம் நிரூபம் எழுதிக்கொடுத்து நீ யிவ்வுத்தமர்களுடன் பைடனபுரிக்குப் போய் அங்கிருக்கும் ஆசாரியரைக் கண்டு இவர்களாட்சேப மற்றவர்களென்கிற நிரூபம் வாங்கிக்கொண்டு வாருமென்றனுப்ப க்ஞானேசுவரர் நிவிர்த்திசாது முதலானவர்களுடன் பைடனபுரிக்குப் பிரயாணப்பட்டுப்போய் கோதாவரியில் ஸ்நானஞ் செய்யப்போன ஆசாரியரைக் கண்டு வந்தனஞ்செய்து அரசன் வரைந்தனுப்பியகடிதத்தைக்கொடுப்பித்தார்.

அம்முடங்களைப்பார்த்த ஆரியன் அதற்கு முன்பே அலங்காவதியிலிருந்து அந்தணர் வரைந்தனுப்பிய கடிதங்களைப் பார்த்திருப்பவனுதலால் அங்கு ஸ்நானஞ் செய்யவந்த பல மறையோரையும் விளித்துக் கேட்டீர்களோ அந்தணரே சன்யாசியாய்ப் பலர்வீட்டிலுமுண்டு பிரஷ்டனுய்ப் போனவனையும் அவனுக்குப் பிறந்து மறையோரை அடித்த துஷ்டச் சிறுவரையும் நாம் அனைவோரும் மரியாதைசெய்து பந்தியில் வைத்துக்கொண் டன்ன முண்டு இவர்கள் மறுமாசில்லா அந்தணரென்று வரைந்து கொடுக்க வேண்டுமாம் இந்த விந்தையை யாராவதுபார்த்ததுண்டா கேட்டதுண்டா உலகிலிப் படியும் நடக்குமாவென்கிற பலபலவார்த்தைகளாட விப்பிரர் மதகரியின் தோலையும் கறுத்தநாயின் தோலையும் வெள்ளையாக்குவது போலல்லவோ இச்சங்கதி இருக்கின்றது சன்னியாசியானவன் சூத்திரன் பந்தியிலு முட்காருதற்குக் கூடாது அப்படியிருக்க இப்படி நம்மாற் செய்யக் கூடுமோ விபசாரியைப் பதிவிரதை யாக்குவதுபோ லல்லவோ இருக்கின்றது சூத்திரனே டுண்ண அபாத்திரனுனவன் அந்தணரோ டுண்ணப் பாத்திரனெப்படியாவான் என்கிற பல வார்த்தைகளாடிச் சீட்டைக்கிழித்தெறிந்து மந்திரியை நோக்கி இப்பிறப்பி லிவர்கள் விப்பிரரோ டுண்ணுவ தருமை மறுப்பிறப்புக்குதவுமென் றவ்வரசனுக் குறைப்பாயென்றறைந்தார்கள்.

அவ்வசனத்தைக்கேட்ட மந்திரி உலகியல்பை ஒருவரால் நிக்கிரகிப்ப தருமையென்றுன்னி அலங்காவதிக்குப் பிரயாணப்பட்டுப்போய்விட்டான் பின்புக்ஞானேசுவரர் வேதபாராயணருக்குத் தன் தந்தையின் வரலாற்றைப்புகன்று பரமார்த்தத்தைக் குறித்துச் சன்னியாசம்பெற்றுக்கொள்பவன் பிரஷ்ட னெப்படியாவான் இப்படிமிகவுங் கற்றோர் சொல்லவேமாட்டார்க ளென்றுரைக்க அதுகேட்ட பூசுரர் அடா துஷ்டப்பயலே மிகவுங் கற்றோரை நீ தானு பார்த்தாய் கண்டவர்வீட்டி லுண்டு பிரஷ்டனுன துஷ்டனுக்கு பிறந்தவர் சிரேஷ்டமொருகாலத்துமடைவதில்லை ஞாயமாயுங்களைத் தொட்டுக்கொண்டாலும் பிரஷ்டமடைய நேரிடுமென்றறைய க்ஞானேசுவரர் அஞ்ஞானத்தினுற் செருக்குற்றுத் தபநிலையற்றுச் சூத்திரர்பால் யாசிக்கும் உங்களைப்பார்த்தமாத்திரத்தில் தோஷம்வந்து நேரிடும் இதற்குச் சந்தேக முண்டோவென விடோபா அப்பா க்ஞானேசுவரா நமக்குவாதேன் வேண்டாமென்கிறவர்களைத் தீண்டலாகா தென்கிறபடி இச்சையில்லாதவருடன் லச்சைசெய்வ தழகல்ல இக்கணம் அலங்காவதிக்குப் போகலாம் வாருமப்பா வென முப்புரிநூலோர் க்ஞானேஸ்வரா வென்றழைத் ததைக் கேட்டுக் கெக்கலிகொட்டி நகைத்து ஓ விடோபா இச்சிறுவனை யென்னபேர் சொல்லியழைத்தாயென விடோபா க்ஞானேசுவரா வென்றழைத்தேனெனப்பூசுரர்மற்றமூன்று குழந்தைகளின் பெயரென்னவென மூத்தவன் பேர் நிவிர்த்திசாது இளையவன்பேர் சோபான்தேவ் இப்பெண்ணின்பேர் முக்தாபாயென ஆதிவருணர் மந்தகாசம் புரிந்து ஆச்சரியம், துடைப்பக்கற்றைக்குப்பட்டுக்குச்சங் கட்டினதுபோலவும் பறைக்கொட்டிப் பிழைப்பவனுக்கு துரையெனப் பேரிட்டதுபோலவும்உண்டவீட்டிலிரண்டகஞ்செய்தவனுக்குத் தொண்ட னென்றுரைப்பதுபோலவும் நிதிமேலாசையாய்ப் பதிதோறுந் திரிபவனுக்கு பதியென்பது போலவும் பதியையிழந்த மதியில்லா மங்கை

* சங்கிரமம் - காடு.

யைச் சதியென்பது போலவும் குருசுவாமியை நிந்திப் பவனைக் குருபக்தனென்பது போலவும் குண்டினிவேலை செய்பவனைப் பண்டிதனென்பது போலவும் பிரஷ்டனு கிய உனக்கு பிறந்த இத்துஷ்டப் பிள்ளைகளுக்கு நிவிர்த் திசாது க்ஞானேசுவரன் சோபான்தேவ் முக்தாபாயென் கிற பேரிட்டிருக்கிறது.

எந்த விந்தையிலு மிந்தவிந்தையே கேட்பதற் காச் சரியமா யிருக்கின்ற தென்றறைந்துப் பற்பல பரியாச வார்த்தைகளாடி ஸ்நானஞ்செய்ய நாடிப்போகும்போது க்ஞானேசுவரர் ஓ பிராமணோத்தமர்களே மலையைப்பார் த்துக குலைக்கும் நாய்க்கு ஆயாசமேயன்றிப் பர்வதத்து க்காயாசமுண்டோ நல்லோர்களைத்தூஷிக்கும் புல்லோர் களுக்குக் குற்றமுண்டோ தெய்வத்தை நிந்திக்கும் தீயர் க்குக் கேடன்றித் தெய்வத்துக்குக் கேடுண்டா அதுபோ லவே முப்பத்திரண்டு பெயர்களை காட்டிக் கெக்கலிகொ ட்டி நகைக்கும் உங்களுக்கவமானம் வருமேயன்றி எங்க ளுக்கொருபொழுதும் வராதென்றறைய வேதியர் அடா துஷ்டப்பயலே நீங்கள் மலையும் நாங்கள் நாய்களென்றல் லவோ ஒப்பிட் டுரைத்தாய் ஓ அறிவுகெட்டவனே உன் துஷ்டத்தன மடங்கவெட்டி விடுகிறோம் பற்களைத் தட்டி விடுகிறோம் பாரென்றுர்பரித்தார்கள் அப்போது நிவர்த் திசாது விப்பிரரை வணங்கி ஓ பூசுரரே எங்களுடைய ஸ்திதி தடங்கலின்றித் தங்களுக் குரைத்தோம் உங்களுக் குகந்தபடி எங்களுக்கேதாவ தெழுதிக் கொடுத்தாலும் சரி இல்லையென் றுரைத்தாலும்சரி அப்படி செய்யாமல் இப்படிதிட்டத் தருமா திட்டுவதன்றி நிந்தை செய்யலா மா? இப்படிசெய்வதால் தொந்தர வல்லவா வென ஆதி வருணர் இனி சந்தடிசெய்யாமல் வந்தவழிபோனுல்தொ ந்தரவென வருமென நிவிர்த்திசாது உங்களை நாடிவந்த எங்களுக்கு ஒருமையோடொரு நிருபம் எழுதிக்கொடு க்கலாகாதோவென வேள்வியாளர் பறையன் மறையோ னுகாதது போலவே நீங்களும் பிராமணராகமாட்டீர்கள் ஆதலால் இக்காரியத்தைக் குறித்தினி பேசாம லிருப்ப தே உங்களுக்குரிய யோக்கியமென்றறைய நிவிர்த்திசாது ஓ பூசுரரே வேதத்தை விரித்துரைத்த வியாசரும் அவர் தந்தையின் பாட்டனுகிய வசிஷ்டரும் பரத்துவாசன் ஆசிரியராகிய வால்மீகரும் குகமகாரிஷியும் விசுவாமித்தி ரரும் குலத்திற்றாழ்ந்தவரா யிருந்தும் தபத்தாலல்லவோ மேன்மை யடைந்து அந்தணர்க்காதி குருக்களானுர்கள் அப்படியிருக்கத் தபத்தைச்சார்ந்த எங்கள் தாதை எப் படி பிரஷ்டரானுர் சொல்லுங்களென அயன்முகத் துதி த்தோர் விவேகமில்லா வுனக்கு வெகுநேரமா யுரைத்தும் கேட்காமல் கிழக்கதைகள் சொல்லத்தொடங்கினுய்,

சாபானுக்கிரக சாமர்த்தியமுள்ள அவர்களுக்கிணை உன்தந்தை ஒருகாலத்து மாகமாட்டான் மகாரிஷிகளைத் துதித்ததுபோல் பழித்தாய் மோசலமாமுனி ஓர் நீச்ச ஸ்திரீயைச்சேர்ந்து அவளுக்குப் பிறந்த ஏழுகுழந்தைக ளையும் அழைத்துக்கொண்டு சொர்க்கத்துக்குப் போய் இவர்களுக்கு உபநயனஞ்செய்து ஆட்கொள்ளுங்களென் று ரிஷிகளைவேண்ட அவர்கள் கூடாதென மறுத்துவிட் டார்களென்று பெரியோர்க ளுரைப்பது மெய்யல்லவா அப்படியே பிரஷ்டனுக்குப்பிறந்த நீங்களும் மரணபரி யந்தம் பிரஷ்டராகவே யிருப்பீர்கள் பன்னிப் பன்னிப் பேசுவதா லோர்பயனு மில்லையென நிவர்த்தி சாது நாங் கள் நீச்சருக்குப் பிறந்தவர்களோவென அந்தணர் சன் னியாசியாய்க் கண்டோர் வீட்டிலுண்டவன் நீச்சனிலு மிழிவான மிலேச்சனே யாமென நிவர்த்திசாது நீங்கள் ஆகாத்தியத்தா லிப்படிப் பேசுகின்றீர்களே யன்றி அரு மறையாராய்ந் துணர்ந்தோ ரிப்படிச் சொல்லவே மாட் டார்களென அந்தணர் ஆதிமறையைஒதினோர்கள் தடை யின்றிச் சன்னியாசியைப் பிரஷ்டனென்றே யுரைப்பார் களென நிவர்த்திசாது வேதத்தில் பரமார்த்த நிமித்தம் பரமாம்சமானவன் பிரஷ்டனென் றுரைக்கின்றதாவென மறையோர் அப்படியே யுரைக்கின்றதென க்ஞானேசு வரர் ஜலத்தைச் சுமந்துக்கொண்டு போகும் எருமைக் கடாவைச் சுட்டிக்காட்டி இம்மேதிக் கடாவுக்கிணை யா ன நீங்கள் ஆதிநூலை ஒதியிருந்தாலல்லவோ நீதிகள் தெ ரியும் வேதமே ஒதாத நீங்கள் இம்மேதிக் கடாவோடும் வாதுசெய்யமாட்டீர்கள் அப்படியிருக்க இவருடன்வாது செய்யத் தகுந்தவர்களோ உங்களைத் துதிப்பதிலும் இந் த எருமைக்கடாவோடு பேசுவதாற் பிரயோசன முண் டென மறையோர் முக்காலமூடனை முழுமூடன் கொ ண்டாடுவதுபோல் எருமைக் கடாவிலும் இழிவான நீ இவ்வெருமைக் கடாவுடனே பேசத்தகுதியானவ னென க்ஞானேசுவரர் இந்த எருமைக்கடாவுக் கிருக்கும் அறி வில் ஆயிரம் பங்கில் ஓர் பங்குங்களுக் கிருந்தால் உங் களை அகத்தியங் கொண்டாட வேண்டியதே யென இரு பிறப்பாளா அடா துஷ்டா ! அந்த எருமைக்கடாவுக் கென்ன அறிவுண்டு இக்கணம் அதைப் புலப்படுத்தா மற் போனுல் உன்னை இரண்டு துண்டாக வெட்டுகிறோ ம் பாரென் றவ்வும்பலைக் கொண்டுவேந் தவர்முன் நிறுத் திப் பலவார்த்தைகள் கூசாமல்பேச க்ஞானேசுவரர் இந்தப் பகடுவின் பண்பை உங்களுக் கறிவிக்கிறேன்

பாருங்களென் றப்போத்துவின் மஸ்தகத்தின்மேல் தன் அஸ்தத்தை வைத்து ஒ ஒருத்தலே தபசால் பிராமணனு ஜாதியால் பிராமணனு பிரமம் க்ஞானத்தால்பிராமணனு கவேண்டுமா! கர்மகாரியங்களால்பிராமணனுகவேண்டுமா உண்மையைஉன்வாய்திறந்துரைப்பாயாகவென்றுதிருவா ய்மலர்ந்தருளின மாத்திரத்தில் அந்த ஏறு ருக்கு யஜுர் சாமம் அதர்வண மென்னும் நான்மறையிலுள்ள அநேக வாக்கியங்களுரைத்து முடிவில் இச்சுலோகஞ் சொன்ன து ஜன்மனுஜர்யதேசூத்ரகர்மணு ஜாயதேத்வஜாவேதமு க்கியந்து விப்ராணுப் பிர்மக்ஞானந்து பிராமணு (1) தாசீகர்ப்பசம் பூதம் நாரதஸ்ய மஹாமுனி தபஸப்பிரா மணோ புத்வா தன்யாஜாதம் நகாரயேத் (2) ஊர்வசீ கர் ப்பசம்பூதம் வசிஷ்டஸ்ய மஹாமுனி தபஸப்பிராமணோ த்புத்வா தஸ்யாஜாதம்நகாரயேத் (3)சுணகீகர்ப்பசம் பூத ம்சவுனகஸ்யா மஹாமுனி தபசப்பிராமணோத் புத்வா தஸ்யா ஜாதம் நகாரயேத்என்கிற பிராமணனுதற்கு முக் கியமான இவ்வாக்கியங்களைப் புகன்று க்ஞானேசுவரருக் குவந்தனஞ்செய்ய அந்தண ராச்சரியப்பட்டுத் தங்களுக் கிருந்த மாச்சரியங்கெட்டு அப்பா இவன் மகாமந்திரவா தி இனி நாமிங்கிருந்தா லபாயம நேரிடுமென் றொருவர் போனவழி ஒருவர்போகாமல் பல பக்கங்களில் தெரித் தோடிப் பதுங்கலுற்றார்கள்.

அப்போது செந்தீ வளர்ப்போருக்குத் தேசிகரான ஆசிரியர் பயந்து நயந்து க்ஞானேசுவர் திருவடிகளிற் பணிந்து நிவர்த்திசாது முதலானவர்களையும் வணங்கி விடோபாவுட னிணங்கி எருமைக்கடா வுரைத்த வாக்கி யம் சத்தியம் இவ்வாக்கியம் வேதத்திலில்லை யென்றுரை ப்போர் இருணரகடைவார் அடியேன் உங்களுடைய மகி மையை அறியாமல் அபசாரப்பட்டேன் இந்த அபசார த்தை உபசாரமாகக் கொண்டு என்னை யிக்கணமே ஆட் கொள்ளவாருங்களென்றுதன்மனைக்கழைத்துக்கொண்டு போ யுபசரணைசெய்து தனக்குற்ற சிலருடன் அவர்க ளைப் பந்தியில் வைத்துக்கொண் டன்னமுண்டு வேதாந்த வார்த்தைக ளாடிக்கொண் டின்புற்றிருந்தார் கள். இதுதெரிந்த அவ்வூரிலுள்ளவேதபாராயணரனைவ ரும் ஓரிடத்திற்சேர்ந்து நமதாசாரியன் பிரஷ்டர்களைச் சேர்த்துக்கொண்டு பந்தியில் வைத்துக்கொண்டு உண்டு ஆசாரங்கெட்டான் அனுசாரத்துக்கு உட்பட்டான் ஆத லால் அவன் வீட்டில் நடக்கும் சுபாசுப காரியங்களுக்கு நாம் யாரும் போகக்கூடாதென்று தீர்மானஞ் செய்துக் கொண் டன்றுடன் ஆசாரியரைப் பார்த்தாலும் பேசா மல் தூஷித்துக்கொண் டிருந்தார்கள். இப்படி யிருக்கிற நாளில் ஆசாரியர் தன் தந்தையின் திவசம் வந்தநாள் பிதுர் தேவதைகளுக்கு நைவேத்தியஞ்செய்ய வெண்ணி ச்செய்யவேண்டிய கிரிகைகளெல்லாஞ்செய்து முடித்து அந்தணர்க்கன்ன முண்பிக்கவேண்டித் தனக்கு மிகவு மன்பாயிருக்கும் சில மறையோரை அன்ன முண்ணுதற் குவரும்படியாய்க் கேட்டுக்கொண்டார்

அதற்கு அயன் முகத்துதித்தோர் ஒ அனுசாரிய னே? பிரஷ்டர்களான துஷ்டர்கள் யாதோ ஓர் வித்தை யால் எருமைக்கடாவினல் சில சுலோகங்களை ஒதிவைக் கவே நீ ஆசாரத்தைவிட்டு அனுசாரத்துக் குட்பட்டதன் றி எங்களையுங் கெடுக்க நினைக்கின்றாய் இனியுன் வீட்டில் நடக்கும் சுபாசுபகாரியங்களுக்கு நாங்கள் வரவே மாட் டோமென்று மறுக்க ஆசாரியர் வியாகுலத்தோடு வீட் டையடைந்து இதற்கென்ன செய்யலாமென் றிடைந்து முகஞ்சுருங்கி மனங்குழம்பி மனோராச்சியத்தி லிருக்க நிவர்த்திசாது ஆசாரியரைநோக்கி ஒ உத்தமரே! யாது காரணத்தால் முகவாட்டமும் மனக்கோட்டமும் பொரு ந்தியிருக்கின்றீர் என்னகுறை நேரிட்டதென ஆசாரியர் நடந்த விர்த்தாந்தத்தைப் புகன்று உலகக்கட்டுப் பாட் டை ஒருவராலுங் கடத்தற் கரிதாயிருக்கின்றதே யென நிவர்த்திசாது சற்குணமுள்ளவனே ஜாதிமான் சற்குண மில்லாதவன் சண்டாளனென்று வேதஞ் சாற்றுவதால் சற்குணமில்லா துர்க்குணரை அழைத்தல் குற்றத்துக் கிடமுண்டாகுமென ஆசாரியர் உலக வியாபாரத்தி லிரு க்கிற பரியந்தம் உலகத்தோ டொத்து வாழவேண்டும் இன்றேல் சன்னியாசியாய்ப் போகவேண்டும் இவ்விரண் டும் இல்லா நடுநாடனுக்குப் பழியே துணைக் காரணமா யிருக்கிறது நாடோட நாமும்வோட வேண்டுமென்கிற பழமொழியை இன்று பரீட்சித்தேனென நிவர்த்திசாது பிர்மக்ஞானத்து பிராமணுவென்றும் தபசே பிராமணத் துவமென்றும் எருமைக்கடாவினல் சொல்லி வைத்தும் தெளியாத அந்தணர்க்கினி எவ்விதத்திலறிவுணர்த்தலாம் பன்றியோடுகூடிய கன்றுங்கெட்டதுபோல் துஷ்டர்களா கிய எங்களோடுகூடி நீர் பிரஷ்டத்வமடைந்தீரே இதற்கு நானென்ன செய்வேனென்றுவாட்ட முகத்தைக் காட்ட ஆசாரியர் பரமார்த்தத்தை நாடிய நமக்கு அந்தணரோ டக்கரையில்லை யானுலும் பிதுர் தேவதைகட்குப் படை த்த அன்னத்தைப் பிராமணரன்றி மற்றவர்க ளுண்ணத் தகாது உண்டாலோ பிதுர்கர்மஞ் செய்தவனும் அவன் குடும்பமும் நரகத்தை யடைவார்களென்று கர்மகாண்ட த்தில் முறையிடுகின்ற ததனுலேயே வாட்டமடைய நேரி

ட்டதென அதுதெரிந்தக்ஞானேசுவரர் நீ பிதுர்தேவதை கட்குப் படைத்த அன்னம் அப்பிதுர் தேவதைகளே புசிக்கவேண்டுமன்றிப் பிராமனர் உண்ணவே கூடாதென ஆசாரியர் பிதுர்தேவதைகளை யழைப்பித் துண்பிக் கும்படியான வல்லமை யாருக்கிருக்கின்றதென க்ஞானேசுவரர் உமக்குற்றமனக்கோட்டம் நீங்க இக்கணமேஅந்த பிதுர்தேவதைகளை அழைப்பிக்கிறேன் பாருமென் றறைந்து ஓ பிதுர்தேவதைகளே இந்தப் பிராமணோத்தமர்களிப்புற இக்கணமேவந்து உங்களரிய தரிசனந்தந்து இவ்வன்னத்தையுண்டு ஆசாரியரை யாட்கொண்டு அந்தணர்க்கறிவுணர்த்திப் போங்களென் றுரைத்த மாத்திரத்தில் அவ்வூரிலுள்ள மாந்தர் யாவரும் பார்த்தாச்சரிப்படககனமர்க்கத்திலிருந்துவிமானங்களிலூர்ந்துக்கொண்டு அனேக பிதுர்தேவதைகள் ஆசாரியர் வீட்டிலிறங்கிப் பத்திரங்களில் வீற்றிருந் தன்னமுண் ணும்போது அவ்வற்புதத்தைப்பார்த்த அந்தணர் முதலானவரும் ஆச்சரியப்பட்டுந் தங்களுக்கிருந்த மாச்சரியங்கெட்டு ஆச்சாரியர் வீட்டினுட்சென்று ஈததிசயமெனப்புகன்று அன்னமும் பிதுர்தேவதைகளை வணங்கி ஆசாரியரை யிணங்கி க்ஞானேசுவரரைத் தாழ்ந்து நிவர்த்தி சாது முதலானவர்களின் திருவடிகளில் வீழ்ந்து நீங்களே பிரத்தியட்ச தெய்வங்களென்று பற்பலவிதங்களாக தோத்திரஞ் செய்ய, ஆசாரியர் உடல்பொங்கி உல்லாசத்திற்றங்கித் தன் பங்குறைந்தின்பம்நிறைந்துக்ஞானேசுவரர்திருவடிகளிற் பணிந்து தன திருநயனங்களைப்பணிந்து நீரே ஜகதீசுவரன் நீரே பரமேஸ்வரனென்று தோத்திரம் புரிய க்ஞானேசுவரர் அந்தணரைநோக்கிஓவிப்பிரரேபிரஷ்டனையும் பிரஷ்டனுக்குப்பிறந்த துஷ்டரையும் வணங்கலாமாவணங்கி யிணங்கலாமா இப்படிச் செய்வதால் உங்களாசாரத்துக்குக் குறைவாகுமே மேன்மை நீங்கிப்போகுமேயென மறையோர் ஓ மாதவனே யாங்கள்தொழும் யாதவனே அறியாமையாற்செய்த எங்களபசாரத்தை உபசாரமாகக்கொண்டு இக்கணமே அடியேங்களை ஆட்கொள்ளுமையாவென்று அவர் தாள்களில்வீழ்ந்து தோத்திரஞ் செய்ய க்ஞானேசுவரர் ஓ வேதியரே அகப்பட்டால் மூடி இல்லாவிட்டா லடியென்கிற பழமொழிக்குகந்த உங்கள்முகத்தைப்பார்க்கவே கூடாது பிதுர்தேவதைக ளன்னமுண்ணுமிடத்தி லுங்களுக்கென்ன காரியம் போங்களென ஆதிவருணர் (சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப்பதுகடனே) பென்கிற பழமொழிப்படி சிறியோங்கள் செய்த பிழையைப்பொறுத்து எங்களுக்குள்ள பாசங்களையறுத்து அடிமையாக்கிக் கொள்ளும் ஸ்வாமியென்று துதிக்கத் தயாநிதியான க்ஞானேசுவரர் ஓர் சார்பில் வீற்றிருங்களென் றறைந்து பிதுர்தேவதைகள் புசித்தபின் அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பி வேறுபத்திரங்கள் போடச்செய்து அந்தணர்களை விளித் துட்காரவைத்துத் தாங்களும் வீற்றிருந்தன்னமுண்டு ஆசாரியரைச் சந்தோஷமுறச்செய்தார்.

இப்பால் அவ்வூரிலுள்ள அந்தணரும் அரசனும் மற்ற மூன்று வர்ணத்தோரும் க்ஞானேசுவரர் முதலானோரைத் தெய்வங்களாகப் பாவித்து அன்போடு சிலநாள்வைத்திருந்து க்ஞானேசுவரருத்திரவின்படி அலங்காவதிக்குப் பிரயாணப்பட்டு பல நாடுகளைக்கடந்து அலங்காவதியையடைந்து அலங்காவதியைப்புறக்கும் அரசனையும் சோபந்தையும் புகழ்ந்து அவ்வூரிலுள்ள விப்பிரரோடுகூடிச் சகலருமுண்டு ஆனந்தங்கொண்டு க்ஞானேசுவரர் முதலானவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு பைடண புரியைச்சேர்ந்து களிகூர்ந்திருந்தார்கள் அலங்காவதியி னரசன் க்ஞானேசுவரர் முதலானோர் பாலியராயிருந்தாலும் பரமதேவதைகளெனத் துணிந்து அந்திசந்தி அவர்களின் தரிசன வரிசனத்தால் காலங்கழிக்கலானன் சோபந்து விடோபா ருக்மாபாயி முதலானோரும்க்ஞானேசுவரர்முதலானோர்தம்திருவிளையாடல்களை கண்டு ஆனந்தவாரியிற் படிந்திருந்தார்கள் க்ஞானேசுவரர் முதலானோர் அனேகருக்குப் பிரமக்ஞானமும் சகுணத்தியானமும் போதித்துக்கொண் டானந்தமா யிருந்தார்கள் கேட்டீர்களோ சித்தர்களேயென்று நாபாஜிசித்தர் பின்னுஞ்சொல்லத் தொடங்கினர்.

ஞானேசுவரர் எருமைக் கடாவினல் வேதத்தை
விரித்துரைத்த அத்தியாயம்
முற்றிற்று.

---

## ஞானேசுவரர் சரித்திரம்
முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீ புண்டரீகாய நம:

# ஸ்ரீ மகா பக்த விஜயம்.



## ஆறுவது
## குசேலமாமுனிவர் சரித்திரம்.









### ஸ்ரீ கண்ணபிரான் துதி.



பஃறொடை வெண்பா.

பூமேவுநான் முகத்தோன் போற்றித் துதிப்பதுவும்
தேமேவு பைந்துளவஞ் சேரக்கமழ் வதுவும்
மாமேவு மாமறைகள் வாழ்த்தப் பொலிவதுவும்
தேமேவும் வஞ்சச் சகடமுதைத் ததுவும்
தீமேவு மாகணியஞ் சென்றுரிந் ததுவும்
தூமேவு மன்பருளங் தோன்றப் பயில்வதுவும்
மாமோக மென்றும் விளைத்தடியரைக் காத்தத்
தாமேக வண்ணனிரு பதாம்புயத்தின் றன்புகழே.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

முற்றுவிள மென்றளிர்க் கரத்தான் முனிவிலாது மெல்லெனச் செம்
பொற்று மரையிற் குடியிருக்கும் பூவைவருடுங் தொறுஞ் சேர்க்கும்
விற்றுரணி நற்பத மிரண்டும் வியன்மால் நடந்தீண்டிட நடந்து
கற்று மேய்த்த சிற்றுயன் காமர்கீர்த்தி வாழியவே.



## ஸ்ரீ சுகப்பிரம்மரிஷி வாக்கியம்.

வாரீர் அகத்தாகியும், புறத்தாகியும், அனைத்தினும் வியாபகமாகியும், அணுவுக்கணுவாகியும், மாத்துக்கு மகத்தாகியும், பரமாகியும், அபரமாகியும் வளர்தலும் தேய்தலுமில்லாததாகியும், ஐகமாகியும் ஐகத்துக் காதாரமாகியும், சகல குணங்களாகியும், நிர்க்குணமாகியு , பாகுபோர்செய்து வேதங்கள் சொல்லும் பொருள்களின் விரிவுக்கும் எட்டப்படாததாகியும், உருவாகியும், அருவாகியும், உயிர்க்குயிராகியும், உணர்வுக்கு உணர்வாகியும், ஒளிவுக்கு ஒளியாகியும், துரியமாகியும், துரியாதீதமாகியும், தோன்றும் பொருளாகியும், நிர்மலனாகியும் மனத்தாலும் வாக்காலும் நினைக்கவும் உரைக்கவும் அரிதானவனுமாகியும், அநுபவனாகியும், அசண்டபரிபூரணனாகியும், கால் சக்கரத்தையும் குணங்களையுங் கடந்த நிருவிகற்பனாகியும், சருவக்கியனாகியும், அலகிலா விளையாடல்களில் இச்சையுடையவனாகியும், அடிநடு முடியற்றவனாகியும், முத்தியளிக்கு முதல்வனாகியும், பரதத்துவப் பொருளாகியும், பிராகிருத பற்றற்றவனாகியும், பிரபுவாகியும், புவனங்களுக் கெல்லாங் காரணனாகியும், அகாரணனாகியும், அப்பாலைக் கப்பாலாய் நின்ற அகளங்கனாகியும், சுயேச்சையாலன்றி பிறப்பு இறப்பற்றவனாகியும், ஞானனந்த மயனாகியும் மருவியிரானின்ற ஸ்ரீ பரவாசுதேவனது உயிர்த்தோழனும், பார்த்தன் பவித்திரனும் உத்தர குமாரன் மருமானும், பரமபாகவத சிரோன்மணியாகிய பரிட்சித்து மகாராஜனே! ஸ்ரீ குசேலமுனிவர் ஸ்ரீ பகவானோடு நட்பினராயிருந்து அவரால் இம்மையில் இன்பமும் மறுமையில் பேரின்பமுமுற்ற திவ்ய சரித்திரத்தை உரைக்கின்றேன். அதனை உள்ளத்தில் பதியும்படி செவிகுளிரக்கேட்டுப் பேரானந்தம் பெறுவீராகவென்று சுகமுனிவர் பின்னும் சொல்வா ராயினர்.

நெடிய கடல்புடை சூழ்ந்த பூமண்டலத்தில் பரத கண்டத்தில் பூமாதேவியின் முக்கமலம் போலவும், அம்முகத்தில் எழுதிய திலகம் போலவும், கண்கள் போலவும், திருமகள் மார்பில் தரிக்கும் மாங்கல்ய சூஸ்திரம் போலவும், அப்பராசத்தியின் ஸ்தனபாரங்களில், புனைந்த முத்துமாலை போலவும், அத்திருவீற்றிருக்கும்ஆசனமாகிய செந்தாமரை மலர்போலவும், மாயவன் மணிமார்பில் தரித்திருக்கும் கௌஸ்துவாபரணம் போலவும் அவ்வணிகன் வைக்கும் பெட்டி போலவும், ஊழிகாலத்தில் சகல சராசரங்களும் ஒடுங்கியுள்ள அப்பரந்தாமன் திருவுதாரம் போலவும், அப்பரமமூர்த்தி நித்த முத்தர்களோடு வாழும் அப்பிராகிருத வுலகமாகிய மரமபதம் போலவும், உத்தர மதுரையென்று ஒரு திருநகரம் விளங்குகின்றது. அதன்பாங்கோ மங்கைப்பருவமடைய் மாதர்கள் தங்கள் நாயகர்களோடு பிணங்கிக் கழற்றி வீசிய இரத்தினபரணங்கள் வீதிகள் தோறும் ஒளிவீசுகின்றதனல் இது சுவர்க்கலோகந்தானே என்று அமரர்களும் ஐயங்கொள்ளும் அற்புதமான அவந்தியென்னும் தேசம் ஒன்றுள்ளது. அதன் வளப்பம் செந்தமிழ்ப்புலவராலும் ஆதிசேடனாலும் புகழ்ந்துரைக்க முடியாது அப்படிப்பட்ட சிறப்புடைய செழிப்பைகூறுதற்கு என்னல் முடியாதாயினும் எனது உள்ளத்தில் உதிக்கும் சந்தோஷம் தாண்டுதலினல் சிறிது உணர்த்துகின்றேன். அத்தேசத்தில் மருத நிலத்தின் வயல்களின் நெற்பயிர்களானவை சூல்முதிர்ந்த பச்சை பாம்புபோல் கருப்பமடைந்து மேன்மைக் குணமற்ற செல்வப்பொருளுள்ள கீழோர்கள் இறுமாந்து தலை நிமிர்வதுபோல் நிமிர்ந்து கல்வி ஞானமுற்ற மேலோர்கள் அடக்க முடையோர்களாய்த் தலைகுனிந்து வணங்குவதுபோலக் கதிர்க்குலைகளைவிட்டுத் தாழ்ந்து காய்க்கும். அவைகள் காய்க்கும்படியாகத் தாமரை மலர்களிலிருந்து ஒழுகுந்தேனும் கொடிப்பூ வொட்டுப்பூ மற்றை நீர்ப்பூ முதலியவற்றினின்றும் சிந்துகின்ற தேனும் பெருக்கெடுத்து வயல் நதிகளிலும் கடலிலும் போய்விழும் வாளைமீன்கள் புரள்வதனல் கயற்கெண்டைகள் துள்ளிவிழ அதனல் வரால்கள் எருமைகளின் மூலை முதுகிழியப்பாய்ந்து மேலெழும்பிக் கமுகம்பாளை மொட்டுகளைக் கிழிய விரிக்கின்ற தடாகங்களுஞ் சூழ்ந்துள்ளது. சூரியனுடைய உருளைத் தேரிற்கட்டிய பச்சைப்புரவிகள் ஏழும் இளைப்பாறுதற்குத் தக்க பூஞ்சோலைகளும் அந்நாட்டு மங்கையர்கள் செல்வம் மிகுதியும் உடையவரா யிருத்தலுமன்றிக் கல்வியிலும் சார்புடையரா யிருத்தலினல் அதிதியர்கட்கும இரவலர்க்கு அகமகிழ்ந்து, கதலிக்கனி, மாங்கனி பலாக்கனிவர்க்கங்களோடுஅறுசுவைபதார்த்தவுணவுகளைஉண்பிக்கின்ற உற்சாகச்செய்கையும் குயில்போலும் மொழியும், அயில்போலும் விழியும், மயில்போலுஞ் சாயலும், பஞ்சின் மெல்லடியும் பவளவிதழும் முகமதியும் முத்துநகையும் பங்கயக்கொங்கையும் சங்கைநிகர்த்தகழுத்தும் ஆலிலைவயிறும் நூல்போல் மருங்குலும் அரவமல்குலுமுடையமாதர்களின் அளகபாரத்தைக்கண்டகோகிலங்களெல்லாம் மேகங்களென்று வாய்திறந்து மௌனிகளைப்

போல் பேசாதிருந்தன. மயில்கள் கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்றததினால் வானத்திற் பரவுகின்ற புகையைக் கண்ணுற்றுக் கொண்டலென்று கூத்தாடும் நம்முடைய நாடுநகரங்களின் வளப்பத்தை நிகர்த்து விண்ணுலகத்திலும் ஒருநாடு உள்ளதோவென்று எட்டிப்பார்ப்பது போன்ற இஞ்சிசூழ்மதிலும் மாதர்கள் தாளகதி தவறாது இசைக்கொத்து நிருத்தனஞ் செய்கின்ற நாடக சாலைகளும், அவ்வகை மாதர்களின் கண்வலையிலகப்படாதமுனிவர்கள்மடங்களும், கல்விச்சாலைகளும் தருமச்சாலைகளும் பொற்குவியல்களுள்ள அறைகளும, மணிக்குப்பைகளுடைய மண்டபங்களும், அந்தணர் அரசர் வைசியர்சூத்திரர்வாழும் வீதிகளும், விண்ணுலகத்துள்ள பண்ணவர்களாகிய இமையவர்களும், இமையாது பார்க்கின்ற கடைவீதிகளும், அங்கு மாலைவிலை பகர்கின்ற மாலைமதி நுதலியர்களாகிய மடமங்கையர்கள் மணமில்லா மலர்களையும், வெறுஞ்சாந்தையும்விற்க, அவற்றைக் கொள்பவர்களாகிய வாலிபர்கள் அப்பாவைமார்களின் கண்ணிழல் பாய்வதினால் கஸ்தூரி கலந்ததென்றும், சுவாசம் படுவதினாலே நற்கந்தம் பொருந்தியுள்ளதென்றும், அருமையாக வாங்குவதும் அன்னியர்களது பொருளைத் தங்கள் அரும்பொருளாகப் பாவித்து ஒன்றைப்பத்து நூறு ஆயிரம் ஆகப் பெருக்கி வாணிபஞ்செய்யும் வளப்பமும் ஐசுவரியத்தால் அளகவேந்தனையும், கல்வியால் அனந்தனையும், அழகால் அனங்கனையும் வென்ற கீர்த்தியுடைய மைந்தர்களும், கற்பில் அருந்ததியைப் பின்னிடச்செய்து கணவரது சொல்முறை கடவாதமாதர்களும்தங்கி இன்பமுறுவதும் இதழ்கள் விரிந்த மலர்களலர்ந்த நந்தவனங்களும், வாவிகூபங்களும், நான்கு வேதங்கள்போன்ற நான்கு கோபுரங்களும், முகில்படியும் மதில்களும், சொற்பசிகரங்கள் பல அமைத்துள்ள ஏழுநிலை மாடமாளிகைகளும், கூடங்களும், அவற்றிடையேயுள்ள திருவாலயங்களும் பலவுள்ளது அந்நகருக்குச் சமீபத்தில் மந்தாரம்-கச்சோலம்-வரகை-வெட்பாலை-சந்தனம்-வகுளம்-சண்பகம்-நாகம்-வேங்கை-பலா-முருக்கு-ஏழிலைப்பாலை-மாதுளை-ஞாழல்-தேக்கு முதலிய பல விருட்சங்களுமுடைய வனமொன்றுண்டு. அதனடுவில் குரவருமருளும் பெருங்குன்றம் ஒன்று உலகத்தை வோரடியாய் அளந்தருளிய திருவிக்கிரமனைப்போல் நீண்டுயர்ந்து அம்மலைச்சாரலில் கனிகிழங்கு சருகுகளாகிய உணவுகளை உண்டும் தோலாடை உடுத்தும் வேடர்களும் முனிவர்கள்போல் விளங்குவார்கள். சிங்கம் யானை புலிகலை ஒட்டகம் ஆளி இவைகளின் வோசை நீங்காது யானைகளின் தந்தங்களினின்றும் சிந்துகின்ற முத்துக்களும் பரவி ஒளி வீசுகின்றமையால் அவ்விடத்தில் இருளென்பது அரிதாயிற்று. அந்தப் பெரிய மலையின் கொடிமுடியின் நடுவில் முனிவர்கள் வாசஞ்சேரி ஒன்றுள்ளது. அந்தச்சேரியில் வேதகோஷ்டமும், யாகங்களில் கூறும் மந்திரயோசையும், அமரர்களை யழைத்து அவிர்ப்பாகங்களை அளிக்கின்ற ஆரவாரமும், ஆசீர்வசன வோசையும் கூடிக் கடலொலிபோல முழங்கிக்கொண்டிருக்கும். தருப்பை கொய்பவரும், சமித்தை தேடுபவரும், மாவிலை பறிப்பவரும், பஞ்சகௌவுஞ் சேர்ப்பவரும், பவித்திரமுடி தரிப்பவரும், மலர்களைப்பறிப்பவரும், சாஸ்திர ஆராய்ச்சிசெய்யும் மேலோர்க்கு உபசரிப்பவரும், சரியை கிரியை யோகம் ஞானம் இவற்றில் நிற்பவர்களும், ஒருபால் வேதமோதுபவர்களும், கற்பவர்களும், மற்றொருபால் மெய்ப்பொருள் பொய்ப் பொருள்கள் இரண்டையுந் தேரவிசாரித்து உணர்பவர்களும் உள்ளதாகிய அச்சேரியில் இயற்பெயர் வாய்ந்த குசேலரென்பவர் அங்குவாழும் முனிவர்களுடைய அருங்குலத்தில் திருப்பாற்கடலில் சோடச கலைகளும் நிறைந்த சந்திரன் உதித்தாற்போல் அவதரித்து அளிகள் ரீங்காரஞ்செய்கின்ற மகரந்தப்பொடியுள்ள செந்தாமரைமலரில் வீற்றிருக்கும் திருமகள் உறையும் திருமார்பனுகிய ஸ்ரீமந்நாராயணரது திருவடிக்கமலங்களை இடைபறுது தனதுள்ளக் கமலத்தில் பதியவ்வைத்து ஐம்பொறிகளையும்தீயவழிகளில் செல்லாமல் அடக்கும் மேலான நற்குணமுடையோனுகிமேலும் தன்னுயிர்போல பிறவுயிர்களையும் காப்பாற்றுதல் அறிவுடையோர்க்கு உறுதியாகிய செய்கையென்று தனது பரிசுத்தமாகிய உள்ளத்தில் உணர்ந்தும் உயர்திணை அஃறிணையென்னும் இருவகைஜீவராசிகளும் மனமகிழும்படி அகற்றிற்கு உதவிசெய்தலையே நினைத்தும், அடக்கமும் பெருமையும் கருணையும் சினேகமும் விரதங்களோடு தன்னிடத்து இமைப்பொழுதும் நீங்காது வளர்த்தும்கோபமும் காமமும் மயக்கமும் ஆகிய முக்குற்றங்களையே மேலும் விரும்பிச் செய்கின்ற கீழ்மக்களாகிய பாவிகளது கூட்டுறவை சொர்ப்பனத்திலும் பற்றுமல் அவற்றை அடியோடு பேர்த்தெறிந்தும், ஞானசாஸ்திரங்களை முற்றும் கற்றுணர்ந்து தன்னை அடுத்தோரை பரிபக்குவம் பார்த்து சித்து அசித்து ஈஸ்வரன் யென்னும் மூன்றுவகைகளையும் பயிலுவிக்கும் ஆசிரியராகிய சாந்தி

பமுனிவர் திருமலரடிகளை தஞ்சமாக அடைந்து வே தோப நிஷதங்களில் சந்தேக விபரீதங்களால் வாசனை வீசுகின்ற காயாம்பூ மலர்போலும் திருமேனியையுடைய மணிவண்ணனாகிய கண்ணபிரானோடு கற்றுணர்ந்தும் கொழுந்துவிட்டு எரியும் பசித்தலைத்தணிந்து குற்றமற்ற வைராக்கியம் அரிதரிது சாந்திராயணமுதலிய செய்தற் கருமையான விரதங்கள் பற்பலமேலோங்கி விளங்கப் பலநாள் செய்து முடித்து எலும்பு நரம்புகள் தோன்றித் தசைவற்றி யிளைத்த தேகமுடையவனாகியும் சூரியன் உதயகிரிமேல்தோன்றும் விடியற்காலத்தின்முன் ஐந்துநாழிகை உள்ளபோதே நித்திரையினின்றும் நீங்கிசௌகாதிகள் முடித்து தந்த சுத்திசெய்து தீர்த்தமாடி சந்திசெபம் வந்தனை முதலிய நியதிகளைக்குறையாது நிறையப்புரியும்செய்து அமைத்து மனக்குறிப்பின்படியே மெய்வாய் கண் நாசி காது என்னும் ஐம்பொறியின்வழி சுப்த ஸ்பரிச ரூப ரசகந்தம் என்னும் ஐம்புலன்களும் ஒன்றுபட்டு ஒழுக நடத்தும் தவவுறுதி உடையவனாகியும்,பொறாமையையொழித்தசிறந்த தவசிகள் அகம்புறமென்னும் பாகுபாட்டை கருவறுத்து மூவுலகங்களும் தமதிடமாக வாசஞ்செய்வா ராரென்று மறைகள் உரைப்பதற்கேற்ப இதுவீடென்றும் அதுகாடுயென்றும் தெரிந்து வசிக்கும் பேதமில்லாதவனாகியும் ஞானகீர்த்திபெற்ற அந்த பிராமண ஜனசாகரத்தைக்கடக்க எண்ணும் புத்திமான்கள் எவர்தாம் புகழமாட்டார்கள் ஏ பரிட்சித்து மன்னவனே! மேலும் பல பலகிழிந்த வஸ்திரங்களைச் சேர்த்து இணைத்துச் சூசியிற்புகுத்திய மெல்லிய இழைச்சரட்டினால் பொத்திய கந்தையே பட்டாடையாகத் தரித்துக்கொள்ளும் காரணத்தினால் இம்முனிவரைக் கண்டோர் யாவரும்குசேலன்என்னும்பெயரால் அழைப்பார்கள் அதன்றியும் அஞ்ஞானசாகரத்தைக்கடந்த மனமுடையவனாகி வேதமுடிவைக்கண்டு ஞானதீபமாய் விளங்குகின்ற இந்தக் குசேலமாமுனிவரானவர் பாற்கடல்மீது கார்க்கடல்போல படமுடையபலதலைகளையுடைய அரவணைமீது அறிதுயில் கொள்ளும் ஆதிபரஞ்சோதியாகிய அமலப்பிரானுடைய திருவடிகள் வருடச் சிவந்துகாட்டும் செந்தாமரைமலர்போன்ற திருவடிகளைத்தனது இருதய கமலத்திருத்தி மகாசிறப்புடனே பூசை செய்வார் இவ்வாறு ஞானவல்லமை பொருந்திய பூசனை இயற்றிவருபவர் தாம்செய்யும் தவத்திற்கு உதவியாகு நிமித்தம் அன்பினும் அழகினும் கற்பினும் சிறந்தவளாகிய பொறுமையிற் பூதேவியையொத்த ஓரணங்கை வேத விதிப்படி வதுவைசெய்தார். அவரது இல்லறக் கிழத்தியாகிய அம்மாது குற்றமில்லாத நற்குடியிற் பிறந்தவள் வந்த விருந்தினரை உண்பித்து இனிவரும் விருந்தையெதிர்பார்த்திருக்கும் அன்புடையவள் தன் நாயகனைப்பரிந்து ஒழுகுந்தன்மையுடையவள் வாய்மையுடையவள் சினஞ் சிறிதுமில்லாதவள் தனது கணவன் கொடுக்கப்பெற்றதைக்கொண்டு மகிழ்ச்சியுடையவள் பிள்ளைப் பேரில்லாதவர்க்குப் பரகதி நாஸ்தியென்று மறைமொழியும் பழமொழி வழங்கலாலே தன்குல நீடித்துப் பரம்பொருளை அடைய முயற்சிசெய்யும் பான்மையனாகி இருளும் மருகும் குழலையுடைய தன் மனையாளோடு புணர்ந்து அவளுக்கு இன்பம் நுகர்வித்தனர். அவ்வண்ணம் அவர் தன் மனைவியைக்கூடிப் புத்திரோற்பத்தி செய்வித்த மாத்திரத்தில் அம்மடந்தையின் தேகமுழுதும் பசிய நரம்புதோன்றிச் சேல்விழி குழிந்தும் கொங்கையில் பால்சுரந்து முகவிளர்த்து நான் பல சுவையினும் இச்சையுற்றுக்காட்டக் கருப்பமுதிர்ந்து பத்துமாதமும் நிரம்பிப் பால்போலும் பவளநிறமுடைய சங்கமானது அயரவுயிர்த்து முகத்தைப் பெற்றதைப்போல ஒருஆண் குழந்தையைப் பெற்றனள்.

பிறகு சிலநாள் கழித்துப்பின்னும் பிள்ளைகள்பெற வேண்டிக் கருத்துகொண்டு தனதுகாதலனைப் புணர்ந்து முறையே இருபத்தேழுசிறுவர்கள் யீன்றார்கள். கேளீர் அதமங்கிய மன்னரும் பெற்ற புதல்வனே மலைபோலப் பொருள்களைத் தங்கள் கிரகத்திற் குவியலாகச் சேர்த்து வைத்திருக்கும் செல்வமுடையோர்கள் மகிழும்படியாக ஒருபுத்திரனையும் அம்புபாசக்கடவுளானவர் ஈறும்பிற்கும் ஆஸ்பதமில்லாத வறியவனாகிய இந்தப் பிராமணனுக்கு இத்தனை பிள்ளைகளைக்கொடுத்தது அவரது திருவிளையாடலன்றோ இவர் செல்வத்தினாற் செருக்குற்றவர்களுடைய வீட்டின் வாயில்களைப்பற்றி பற்களையெல்லாந் தெரியக்காட்ட அகத்திலுள்ள துன்பத்தை முகத்திற்காட்டத்தங்குறைச்சொற்களையெல்லாம் நாட்டி இருகரங்களையும் விரித்து நீட்டித் தன்புறுத்தும் பசிப்பிணியை அகலவோட்டி மானமென்பதனை முற்றிலும் வீட்டி தெய்வம் இவ்வகைக்கோலஞ் செய்ததே யென்று தலையையாட்டிக் கிடைத்த பிட்சையால் மக்களையூட்டி யாசகஞ் செய்வது உலகத்துள் இகழ்ச்சி யென்பவற்றுக்கெல்லாம் இகழ்வானது என்று அதை ஒருத்துக்கானகத்தில்கொள்வாரில்லாது உதிர்ந்து கிடக்கின்ற சிறியபுல்தானியங்களை ஆராய்ந்து ஆராய்ந்து தனதுகத்தாற்கிள்ளிச் சேரஎடுத்

துக்கொண்டு வந்து தனது பத்தினிகரத்தில்கொடுப்பார் அதனை இருகைகளினாலும் வாங்கிச்சுத்தி பாகஞ்செய்து அதிதிக்கு ஓர் பாகம் வைத்துத்தனக்கெனப்பகிர்ந்து ஈந்ததை உண்டு மனமகிழ்ந்து தந்திரங்கட்கும்மறைகட்கும் எட்டாத மாதவனாகிய சிதரனுடைய பாதார விந்தத்தை சதா திபானித்துக் கொண்டிருப்பார்.

இவ்விதமாக இவர் வாழ்ந்துக்கொண்டிருக்க இவர் மனைவியார் தனது புத்திரர் இருபத்தேழு பேருக்கும் தனக்கு வந்த பங்குக்கஞ்சியை இலக்கவப் பாத்திரத்தில் சுற்றிவார்த்துக்கொண்டுவர கால்வயிற்றுக்கும் பற்றாமையைக்கொண்டு வெற்றுடம்பாகி நிற்பாள். ஐயோ இதன்மேல் தானென்னதான் செய்வாள் ஒரு குழந்தைக்கு வார்க்கும்போது மற்றொரு குழந்தைகளும் கைநீட்டும் ஒரேகாலத்தில் இரண்டு குழந்தைகளும் கையை நீட்டிக்கொண்டு மேல்விழும் வேறொரு குழந்தை கையைப் பற்றிக்கொள்ளும் அதுகண்டு தேம்பித்தேம்பி மற்றொரு குழந்தை அழும் வேறொருகுழந்தை பொருமிப்பொருமிக் கண்களைப் பிசைந்துகொண்டு ஒழுகும்இன்னொன்று புரண்டுவீழ்ந்து தரையிற்கிடந்தபடியே பிணங்கிக்கொண்டிருக்கும் மற்றொருமகவு என்வயிற்றில் பசிதணியவில்லையே அந்தோ என்று துயருறும் என்அன்னைஎனக்குக் கஞ்சிவார்க்கவேயில்லையென்று ஒருசேய் பொய்பேசும் மிக்க ஆவலோடு தாய் கையிலிருப்பதைப்பறித்து உண்ணச்செல்லும் ஓர் சேயை வேறொரு சேய் ஓடிமுடிகி யிழுக்க அதுவும் இழுக்க இவ்வண்ணம்ஒன்றோடொன்று பற்றி யிழுக்கும்போது சிதறிக்கொண்டு போவதைக் கண்டு சிரிக்கும் ஒருமகவுஇவ்வாறுகலகம் விளைவிக்கின்ற மைந்தர்களை நோக்கியும் பவளத் துண்டுகள் போன்ற விரல்களையுடைய கையால் தூக்கியும், அணைத்து வீக்கியும் மடித்தலத்து இருத்தியும், அலங்கரித்தும், சீர்திருத்தியும் மைதீட்டிய கண்ணீரைத் துடைத்தும், முதுகைத் தடவிக்கொடுத்தும், ஆம்பல் மலர்போலும்பவளச் செவ்வாயின் முத்தங்கொண்டும், அடுத்தமனையிலுள்ள சிறுவன் ஒருவன் இன்று உமது கிரகத்தில் என்ன பணிகாரம் யாது பதார்த்தம் செய்தார்கள் என்றுஅறுத்துக் கேட்க அதைக்கேட்டு ஓடிவந்து அம்மா பணிகாரம்என்பது எப்படியிருக்கும்பதார்த்தமாவதுயாது? அவைகள் எவ்விதச்சுவையோடுவுள்ளன? நீயெடுத்துக்கூறுமென்று இரங்கிக்கேட்கும் பிள்ளைக்கும் அவைகளைக்குறித்து ருசி பாகங்களை யெடுத்துச் சொல்லுவோம். ஆனால் அவத்தைச் செய்துகொடு என்றுகெஞ்சி ஏங்கினால் யான் என் செய்வேனென்று வேறு மொழிகூறி போக்குக்காட்டி அவற்றை மறக்கும் உபாயஞ்செய்வாள் மற்றொருமனையிலுள்ளஒருபிள்ளை கையிலேதின்பண்டம் ஏந்திக்கொண்டு நிற்கக்கண்டு ஓடிவந்து நின்று தாயின் வதனத்தைப்பார்த்து கண்களினின்றும் தாரைதாரையாக நீர்வொழுகத் தாயே என் வாயில் நீர் சுரக்கின்றது. ஆதலால் இப்பொழுதே செய்து அளிப்பாயென்று மீறற்சேலையைத்தொட்டிழுத்து என்ன தேறுதலாகச் சமாதானஞ் செய்தாலும் தேறாது, ஏங்குகின்ற மதலையை யெடுத்து மார்புடனணைத்து மனம் வியாகூலப்படுவாள். ஒரு குழந்தை தாயின் எதிர்வந்து நின்று அன்னாய்! அயல் வீட்டில் ஒருபையல் குண்டலம்-மோதிரம்-மணிகடகம்-நெற்றிச்சுட்டிபொன் அரைஞான்-சதங்கை இவைகளை அணிந்துக்கொண்டிருக்கிறான். எனக்கு நீ யிடா திருக்கும் பொருமையென்னோ அவை உள்ள விடத்தைப்பார்த்து எடுத்து உடனே எனக்கு இடுயெனச் சிணங்குகின்றதைநோக்கிக்கடன்வாங்கி தரித்திரன் ஒருவன் அக்கடன்காரன்வந்தபோதெல்லாம் நாளையதினம் நாளையதினம்பென்று தவணை செய்வது போல அவ்வருமைச் சிறுமகவுக்கு நாளைக்கு ஆகட்டும்! நாளைக்கு ஆகட்டும் பூட்டுகிறேன் என்பாள். அந்தோ! இவள் இல்லாமைக்கு என் செய்வாள் ஐயோ பாவம்!

அம்மாஎனக்குப் பருப்புஞ்சர்க்கரையும்தருவாளென்றும். அன்னாய் எனக்குமதுரயானபாலும்வெண்ணெயும் அளிப்பாயென்றும், மக்கள்தன்மேல்விழுந்துஅழும்போதெல்லாம் வாய்திறவாது சும்மா யிருப்பாள். பாலர்கள் தரித்துக்கொண்டிருப்பதுபாலமணிப்பூண்டுகளேஅல்லாமல் நவமணிகளன்றுஉடுத்திக்கொண்டிருப்பதுஒளியற்ற மரவுரிச்சீரையேயன்றி அரிய சரிகைப் பட்டுடையன்று உண்ணுதற்குரிய கலங்கள் இலைக்கமலங்களேயன்று விலைபெற்ற பொற்கலங்களன்று. அருந்துதற்கரிய நீர் நீசத்தண்ணீராகிய அன்னப்பாலேயல்லது ஆவின்பாலில்லை அதனை நுகர்ந்துந் தனையர்களுக்குப்பசிதீர்ந்தபாடுமில்லை பார்க்கச்சகியாத இவ்வித வறுமையைக் கண்டும் மெய்ஞ்ஞானியராகிய குசேலமுனிவர்க்கு உள்ளத்திற் கவலையென்பது சிறிதும் தொடர்ச்சியில் அளவு கூறப்படாத புகழுற்ற அவ்வந்தணர் தன் செய்கையைப் பார்த்தும் அவர்மீது விருப்பஞ் சற்றுங்குறைந்ததில்லை. வரவுஅதிகமுடையவராய் அளவிறந்த பெருஞ் செல்வத்தின்வளப்பமுடையவர்க்கும் அன்பொழியாத வொருபிள்ளை விரும்

பியவற்றை விரும்பியபடி அளித்துஉபசரித்தல்கூடாததா யிருக்க வெந்தஇருப்பூசிபோலவும், தனக்குஒப்பில்லாத யமனைப்போலவும், ஆலகாலவிஷம்போலவும் கடலைச்சுவ ரடிக்கும்வடவாக்கினிபோலவும்,பசிநோயானதுநீங்காது வாட்டவும், அதனால் சஞ்சலிக்காத மனத்தையும் சஞ் சலத்துக் குட்படுத்தும் தாரித்திரதசையில் பல புதல்வர் களைப் பெற்றவளின் செய்கைகள் இவ்வித முடையன யென்று கூறும் தரம் யாவரால்தான் முடியும்இவ்வண்ண மாக தரித்திரமென்னும் பெருஞ்சாகரத்தினுள் அழுந்தி யும் தனக்குள் இனியரான தாபத்தலைவரை வெறுத்து ஒன்றுமுரையாள். அக்கம் பக்கத்தார்கள் அறியும் வண் ணம் அலர் தூற்றாள். மைந்தர்கள் எவ்வணத்தாலெனி னும் உண்ணாத காரியம் சிறிதும் மனங்கூசிச்செய்யாள். அவ்வகை மேன்மையான சற்குணம் அப்பெண்மணிக்கு வாய்த்தது குசேலமாமுனிவர் இருகண்மணி நிகர்த்தா யுள்ளது. ஆயினும் அவள் குணாதிசயத்தைக்காண்போர் யாவரும் இவள் அநசூயையோ அருந்ததியோ என்று வியப்புறத்தக்க அரிவையர்க்கெல்லாம் அருங்கல மானவ ளிடத்து எவ்வாறு இந்த வறுமையென்னும் நெடுங்கட லாகிய தீராத்துயர் எக்காலத்தில்நீங்குமோவென்றுஎண் ணும் எண்ணமாத்திரம் உள்ளங்கருத்தில் உண்டுதன்னை முதலில்கற்பினின்றும் வழுவா துகாத்துக்கொண்டுபின்பு தன்னைக்கொண்டதலைவனை நல்ல சுவையுள்ள உணவுக ளால் உபசரித்து அதன் பின்னர் புகழ்நீங்காதுவளர்த்தி அவற்றை மறவாது பாதுகாக்கும் பொற்பாவையைநிகர் த்த பூவையானவள் சிறுமையேயுற்ற வறுமைக்கடலி லழுந்திமனம் புண்ணாகிஇவ்வாறு பற்பலநாள்கழிய ஒரு நாள் சமயமறிந்து உளந்துணிந்து நல்லொழுக்கத்தோடு பணிந்து ஞானபானுவின் உதயம்போன்ற தனது வுயிர் நாயகனது வதனத்தை நோக்கித் தானெண்ணிய கருத் தையுஞ் சுசமலரையும் செஞ்சடையையும் கொவ்வைக் கனியையும் போன்ற வாய்திறந்துகொஞ்சுங்கிளிப்போல் இன்சொல் உரைப்பாளாயினாள். வெண்மணிகளைக் கரை யில் ஒதுக்குகின்ற வெள்ளிய அலைகள் வீசுகின்ற கருங் கடலும் விரும்புகின்ற காயாம்பூமேனி மணிவண்ணப் பெருமானுடைய திருவடித்தாமரைகளைக்காமக்குரோத லோபமோக மதமாச்சரியமென்னும் அறுவகைப் பகை களையும் மாசுதீரவொழித்து உள்ளத்தில் தியானபரரால் ஏத்தித்துதிக்கும் எனது மணவாளரே! மறைமுடிமை உணர்ந்த மாதவரே! அரிகரி - பரி - புலி - சரபம் - கண்டபேரண்டம் திரிகின்ற பெருங்கானகத்தில் அனுகி

காய், சருகு, புலால், காற்று இவைகளை அருந்திக்கடல் போலும் விரிந்ததாகிய தீவினைகளுக்கு குடியிருப்புவீடா கிய வழும்பு உதிரம்-சீ-நம்பு-தசை-யிவைகளால் மூடப் பட்டு மலசலங்கள் ஒருகாமின்ற தேகச்சுமையை வளரச் செய்கின்ற உந்தித்தாமரை மலர்ப்பூங்கோட்டையில் வீற் றிருக்கும் அந்தணனையொத்த அந்தணரே தேவரீருக் குக்காதலியாகிய பேதையேனிடத்தும் பெதையேன் பா ல்பிறந்த மக்களிடத்தும் விருப்பம்வையாமலும் எங்கா ளும அன்னியரிடத்துச்சென்று யாசித்துக்கேட்பது இல் லாமலும் இருக்கின்றீர் நான் அதன் பயனை உணர்ந்துக் கொண்டேன் ஆனாலும் சஞ்சலப்படுகின்ற நோயுற்றமன த்தால் வருந்திப்புகலும் சிறிய வார்த்தைகளை அது ஒரு பேதையின் பேச்சு என்று மறுதலிக்காதுவிருப்பத்தோ டு கேட்கவேண்டு மென்று மீட்டும் கூறுவா ளாயினாள். காருகபத்தியம் தட்சணாக்கினியம் ஆசுவனீயம் என்னும் முத்தீயையும் சுடர்க்கொழுந்து விட்டெறியும் வண்ணம் வேள்வியை வளர்க்கும் குற்றமற்றமுனிவரே நம்முடைய சிறுவர்கள் அழுதழுது ஏங்கிக்கொண் டிருக்கப்பட்டவர் களாய்ப் பசிநீங்க அன்னமில்லாது தளர்ந்து சோர்ந்திரு க்கின்றார்களே அந்தோ புராணங்கள் பதினெட்டிலும் வல்லவர்கள் சோற்றால் எடுத்த வுடம்பென்றுசாற்றுகின் றது இக்கடல்சூழ்ந்த புவியில் உண்மையே அல்லவா நா ன்குவேதங்களும் உவர்க்கடலை ஆடையாய்வுடுத்த நானி லத்தில் உள்ள ஜீவகோடிகள் எல்லாம் இன்பத்தோடு மனமகிழ்ந்து நன்றாகவாழக்கடவன் என்று கோஷித்துக் கொண்டிருக்கும் அதற்குவிரோதமாகத் தேன் வழிந்து சிந்துகின்றாற்போல அழுதொழுகுகின்ற மழலைச்சொற்க ள்பொருந்திய சிவந்த வாய்களையுடைய சிறுவர்களுக்குச் சிறப்பாக அன்னமுதலியது அளிப்பது உமதுகடமையே ஆகும் படநெடுமரவம் உந்தியில்தாங்கும் இந்தத் தடநெ டும்புவியில் எவ்வகை மேலோர்களும் அஞ்சி நாணுதற் குக்காரணமாகிய தரித்திரமுடையவர் பாவியரும்தருமத் தையும் இன்பத்தையும் தருகின்ற செல்வப் பொருளு டையவர்கள் புன்பரும் அல்லவோ இன்பரும் உம்பருந் தொழும் எம்பிரான் எழுந்தருளி யிராநின்ற இதயதாம ரை யுடையவரே தரித்திரமானது தானடைந் துள்ள ஒருவனது அழகை அழித்து உடம்பைஉலர்த்திச்சோம் பலை எழுப்பி உலோபத்தை மிகுவிக்கு மல்லாமலும் நா யக நாயகியர்க்கு நடுவே நீங்காத கலகத்தை விளைவிக் கும் மேலும் அவமானம் பொய் இவைகளை வருவிக்கும்

ஆதலால் இந்த வறுமையைப்போன்ற கொடியது வேறொன்று உலகெங்கும் இல்லை இன்னும் இந்த இல்லாமையான சந்துஷ்டியாகிய சாகரத்தை வற்றச்செய்யும் வடவாமுகாக்கினியாகும் அன்றியும் பலபல யோசனைகளுக்கு இருப்பிடமாவதன்றிப் பலவகைத் துயர்களுக்கும் உறைவிடம் ஆம் என்பார்கள் நன்னூல் கற்றுணர்ந்த முன்னோர்கள் இவ்வறுமையானது ஒழுக்கம் உயர்குலத்திலும் மேம்பட்டதென்று விளம்பும் பழமொழிக்குமாறுதலாய் அநாசாரத்திற்கு மூலமாகும் கொடுமை பலவற்றிலும் கொடியது இம்மிடியே ஆதலின் அதனை யொழித்துக் கழித்தல் நன்மையோ தீமையோ யது தவகுல மென்னும் ஓதத்தில் ஆதவனைப்போல வுதித்து ஏனைய அரசர்களுக்கெல்லாம் அரசனாகித் தன் ஒப்பு ஒருபொருளும் இல்லாதவனும் மாதவனாகிய கண்ணபிரானுடன் பலகலைகளையும் ஒரே கல்லூரியில் கற்றுணர்ந்தீர் என்று சுவாமிகளே உம்மை ஒப்பார் பலருஷிகள் பகரக் கேட்டிருக்கின்றேன். ஆதலினால் அந்தப் பீதாம்பரதரனுடைய பக்கத்தே சென்று அப்பரமமூர்த்தி மனமகிழ்ந்து அன்பால்அளிக்கும் பெருந்திருவைக் கைக்கொண்டு கொணர்ந்து நமதுகுழந்தைகளுக்குக் கொடுத்து வறுமைப்பிணியைத் தவிர்க்க வேண்டும்.

தேவரீரோடு இளமையிற் கலைபயின்றவராகிய மணிவண்ணனாகிய கண்ணன் உம்மைக்கண்ட அளவில்எல்லா வளங்களும் அளிப்பான் அதற்கு ஐயமில்லை மாசற்ற நேசன் ஒருவனைப் படைத்ததால் அது அந்நேரம் படைத்தவனுக்கு பருந்தனப் பொதியென்று அறிவுடையோர் தெரிந்துரைக்கும் பழமொழி மெய்ம்மையோ பொய்ம்மையோ மண்ணுலகம் பொன்னுலகம் நாகருலகம் என்று கூறப்பட்ட இம்மூவுலகத்துள்ளும் உள்ள நல்லவர் துன்புறக் கொடுமைகளைச் செய்துவரும் கம்ஸன் முதலியோரைக்கொன்று நல்லோர் இன்புற அருள்செய்யும்பரமமூர்த்தி ஆதலால் அவர்நேரிற்சென்று புகழைப் பெருக்கும் செல்வம் வேண்டுவையே ஆனால் உமக்குந் தருவான் ஒருபோதும் அத்தினதயாளு ஈயாது மறுப்பானுயின் வேதங்கள் இன்னுந் தேடிக்காணாத பாதங்காணத் தரிசித்ததேபோதுமான அந்தப் பரந்தாமனுடைய பாததரிசனமன்றோ முத்தியாவதும் சித்தியாவதும் என்றுபவளவெள்ளத்திலிருந்து அமிர்தம் சிந்துவதுபோல் மதுரமாகிய திருமொழிகளை யெடுத்துப் பேசி நிறுத்தினாள் கண்ணனைத் திரும்பவும் மறுவும் துளபமாலிகையும் உடையவனாகிய மணிவண்ணனை யாசிலாமணிப நாள்தோறும் தவத்தினர் உள்ளத்தில் எண்ணியவை எண்ணியபடி அளிப்பவனை அடைந்து நமது குழந்தைகள் மனங்குழையாது பிழைக்க அவனருளிய செல்வத்தைப் பெற்று விரைவில்வாருமென்று மங்கையரிற் சிறந்த நங்கை நவின்ற மாத்திரத்தில் நல்ல தவமுனிவராகியகுசேலர் உரைப்பாராயினர் மக்களுக்காக இரங்கி வாடுகின்ற மடமை பொருந்திய மடநதையே கேளாய் முப்பிறப்பில் தருமம் நன்றாய்ச் செய்தவர்கள் இப்பிறப்பில் அதன்பயனை ஒருங்குசேர அனுபவிப்பார்கள்.

அறம் புரியாதவர்கள் துக்கசாகரத்தி லாழ்வார்கள் அது உண்மையாதலால் அதற்கு மனந்தடுமாறி மெலிய வேண்டுவதென்ன பவளம்போன்ற அதரமுடைய பாவையே? இவ்வுலகில் பிறந்த ஜீவர்களெல்லோரும் கிட்டாத பொருள்களை யெல்லாம் அநுபவிக்க வேண்டு மென்று மனோராச்சியஞ் செய்தால் எப்படி கிட்டும் எண்ணியது எண்ணியபடி முற்றுப்பெறுவது முத்தேவர்களின் மூலமுதற் பொருளாகிய அத்தேவ தேவனுக்கேயாம் ஏனையோர்க்கும் அவரவர் எண்ணப்படி அமைவதானால் மேலென்றும் கீழென்றும் பகுப்பு இரண்டுவுண் டாகுமோ தத்துவந்தெரிந்த மேலோர்கள் முற்பவத்திற்செய்த நன்மையையுந் தீமையையும் பொதுவாகக் கருமம் என்பார் அக்கருமத்துக்கிடாய் செல்வம் வறுமைகளைத்தந்து உயிர்களைப் பாதுகாப்பவன் வேதமும் போதமுங் காண்கிலாத சீதர மூர்த்தியாகிய எம்பிரான் என்றறி அமிர்தத்திலும் இனிய சொல்லுடைய மெல்லியரே மைந்தர்களை உபசரித்துக் காப்பாற்ற பெருநிதிவேண்டு மென்கிறுப் வனங்களில் உலவும் பறவைகளும் கானகங்களில் திரியும் மிருகங்களும் தமக்கொரு இரட்சகர் தேடுகின்றனவோ? அல்லது அவைகட்கு வருவாயுண்டோ எவ்விடத்திலேனும் சென்று இரந்து கேட்பதுண்டோ நாளைப்பொழுது என்செய்வோ மென்னுங் கவலையுண்டோ மேலும் அவைகட்கு உணவு அகப்படாமல் உயிர்நீத்ததுண்டோ சொல்லுவாய் கல்லினுள் சிறுதேரைக்கும் கருப்பை அண்டங்களில் வசிக்கும் ஜீவன்களுக்கும் விருப்பமுற்று உணவு அளித்துக் காப்பவன் துளபமாலைதோளிலசைய வேய்க்குழலால் ஆவினங்களைமேய்த்தருளிய எம்பிரானாகிய கண்ணனன்றோ அந்தச் செல்வநாயகன் உனது அரிய சிறுவர்களைக்காவாது கைவிடுவானோ விடான் விடான் இது உண்மையே ஆகும் நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நாற்குணங்களும் அமைந்த நாயகியே இவையெல்லாம் உயிருக்குச் சுபமே யென்னில் கர்ப்பத்தினின்றும் இந்தப்பூமியில் தோன்றியபோதே மலநலம்

விடுகின்றதே அஃது உணவின்று பொருந்துமோ அடி பேதாய் அலரவன் சிரத்திற் பொறித்த ஆயுளின் முடிவு வரையிலும் நல்லுணர் வெறுத்தற்குரிய உணவு யென்னும் இரண்டில் ஒன்றுண்டு உலகத்தில் உறையும் உயிர்க்கென்று அறநூலோராகிய மேலோர் உரைப்பார் இது சொற்பிரமாண மாத்திரம் அல்ல பிரத்தியட்ச பிரமாணமும் ஆகும் ஆதலினல் உனது மைந்தர்களுக்கு ஆயுளுள்ள வரையிலும் அவர்கள் அப்பிறப்பிற் செய்த இருவினைக்குத் தக்கபடி நற்சுவை உண்டியும் வெறுப்புடைய உணவும் இருக்கவே இருக்கின்றது. சிந்தை நொந்து வருந்தாதே யாதுவரினும் அது ஊழால் வந்ததென்று நினைத்திருத்தல் வேண்டும். அழகிய முகத்தையொத்த நகையினையுடைய நங்கையே! வளம் பொருந்திய நிதியைப்படைத்தோமென்றும், ரூபலாவண்யமுடைய மனையாளைப் படைத்தோமென்றும் பலபுத்திரர்களைப் பெற்றோமென்றும் நாம் நல்ல அநுபவங்களை அடைந்திருக்கின்றோமென்றும் இளமைப் பருவத்திற் சிறந்திருக்கின்றோமென்றும் அழகின் நலத்தைப் பெற்றிருக்கின்றோமென்றும் சற்றும் உண்மைநூலில் உணர்ச்சி யில்லாத செருக்குடைய மூடர்கள் மனமகிட்சி கொள்வார்கள். அன்றியும் உயிர்க்கொலை புரிதலும் உண்ணும் உணவில் மாறுாட்டஞ்செய்தலும் சிறிதும் அய்யமில்லாத நண்புடையாரிடத்து வஞ்சனைசெய்தலும் நல்லவர்களை நடுங்கத் தக்கதாக உதாசினம் பேசுதலும் மன்றிடப் பொய்க்கரி கூறுதலும் ஆலயத்தில் உள்ளசொத்துக்களை மறைத்துக் கணக்கிடுதலும் தம்மாதர்களைப் பிறருக்குப் புணர்ப்பித்தலும் வேசையர்களைக் காமிகளுக் குறவுபடுத்திச் செல்வ ஒழுக்கமுடையோனை ஒப்பாய் உலகில் நாய்கள் போல் திரிபவர் முயற்சியும் இவைபோன்ற முயற்சியும் இன்னும் பற்பலவும் செய்து கயவர்கள் காலங்கழிப்பார்கள்.

இவையெல்லாம் பொருள் நிமித்தமே ஆகும் அவ்வாறு பொருளைப்பெற்றால் புவியிற் புதைத்து வைத்துக் குதகுதப்படைந்து சுடலையைவிடாத பேய்போல் காத்து பணப்பேயென்று ஒருபட்டப்பெயர் பெற்றுச்சுற்றம் நட்பினர் அயலார் யாவருமிகழ வாழ்வார்கள் ஒரு சிறிய தருமமாயினுஞ்செய்யார்இரப்பவர்கள்வந்து கற்பகத்தருவை யொத்த கரங்களை யுடையவனே யென்று புகழ்ந்து கூறினும் மனத்தில் அங்கீகரியாமல் அருள் சிறிதுமில்லாமல் தனது மாளிகையின் வெளிப்புறத்தளவும் துரத்தித் தனது இல்லறத்தில் மீளவந்து புகுந்து கொள்வார்கள் மிகவும் நெருங்கிய தமது உறவினரையும் தழுவி உபசரிப்பார்கள். திலகவாள் நுதல் தெரிவையரே இப்படிப்பட்ட வுலோபியர்கள் குபேர சாம்பிராச்சியம் பெற்றவர்களா யிருந்தாலும் அதனல் என்ன பெற்றார்கள் இகழ்ச்சியே பெற்றார்கள். மற்றும் நீதிதப்பிய கொடுங்கோல்அரசர்களின்கோபத்திற்குமிகவும்ஆயாசமடைதலும் கள்ளர்களின் கொள்ளைக்கு மிகுதியும் பயமடைதலும்தாயாதிவழக்கிட்டுவவ்வுவார்களேயென்று அஞ்சித் துயருருதலும் பெற்றார்களே அன்றி பொருளினல்வரும் புண்ணியப்பயனைஎங்ஙனம் பெற்றார்கள். பரம்பொருளாகியபரம்பனைப் பகவானிடத்தும் பற்றற்றவராய்ப் பாழ்ப் பொருளின்கண்ணே பற்றுமிகுதியுடையார்களுக்குநல்ல நடத்தையையுடையவர்களைத்தீயநடத்தையையுடையவர்களென்று உரைக்கும்படி செய்யும் அற்பரை ஒழுக்கமுடையோ ரென்று சொல்விக்கும் கற்பிற்சிறந்த மாதர்களைக் கலவிசெய்யக் கருத்துடையவர்களாய் எதற்கும் அஞ்சாத முயற்சிசெய்விக்கும். மேலும் சுருங்கிய மருங்குலையும் நெருங்கிய குசங்களையும் உடைய நேரிழையே! மரணதிசையில் உயிரைநாடிவரும் கருநிறமுடைய காலதூதர்களைப் பணிந்து ஓ யமகிங்கரர்களே! கோடிபொன் கொடுக்கின்றேன் பெற்றுக்கொள்ளுங்கள் கைந்நொடிப் பொழுதில் பிணங்கியுள்ள எனது மனைவி புதல்வர் மருகன் மருகிகள் முதலியோர்களுக்கு ஒரு மொழி கூறி வருகின்றேன். சற்றுப் பொறுத்துக் கொள்வீரென்று பரிதாபமாகக் கூறினும் நாடியோடிவந்தகால தூதர்கள் பிடியாது விட்டுவிட்டு வெறுங்கையோடு செல்வார்களோ? தேன்மொழியே! அப்பொருளால் அவர்கள் அடைந்த பொருளின் பயனை நீ கண்டாயா? இன்னும் அப்பொருள் பந்தங்களை யெல்லாம் வருவிக்கும் அருளாழியப்ப னடித்துணையில் அன்பு நீங்கச் செய்யும் உறக்கமே உறுவிக்கும் கருப்ப அறைக்குள் புகுவிக்கும் இக்குற்றங்களா லன்றோ அப்பொருளுக்கு இம்மாநிலத்தில் வெறுக்கை யென்று காரணப் பெயர் வாய்த்ததென்று புல்லர்களெல்லாரும் உரைக்கின்றார்கள். அடி ஆரணங்கே! அறிவிற் சிறியவர்களே மதித்து இறுமாப்படைதற்குக் காரணமான இந்தச்செல்வம் வந்து அடைந்தபொழுதே மமதைக்கொண்டு வாய் மூடப் பெற்றுத் தாட்சணியமின்றி முன்பின் வழக்கத்தையும் பாராது தம்மை அணுகிவந்தவர்களை அலட்சியஞ்செய்து ஊமர்களாகின்றார்கள், கேட்கின்ற காதுடையவர்களும் செவிடராகின்றார்கள் கண்களுடையவர்களும் குருடராகின்றார்கள். ஆயிரங்கிரணங்களைப் பரப்பி ஒளிவீசி மேரு

வில் மறையும் சூரியனைப்போல அலைகடல் சூழும் அவனியில்தோன்றி மறைந்திடும். உங்களைவிட்டுச் செல்வம் என்னும் காரணத்தால் பொருளின் விரிவுக்குச் செல்வம் என்று உரைக்கும்பெயர் நன்றாகப் பொருந்தியிருக்கின்றது. வேல்விழியே அன்னம் நீரில்சுருட்டுந் திரைபோல் உடனே மறையும் பொருட்டுச் செல்வம் சதா அல்லலையே விளைப்பதனால் , அதனைப் பெருமுயற்சி செய்து அடைவது கூடிய காரியமாகுமா சீச்சீ அது சாலவும் பழிப்புடையது இஃதோ அழிவுறு செல்வம் அழியாக வுறுதியுடைய செல்வம் பாதனில் தேன்மடை திறந்து பாயும் துளபமாலிகையைத் தரித்துக் கலைகள் நிறைந்து திலகமாய் களங்கமுற்று கண்ணென கதிர் வாய்ந்து வில்லிரண்டுடையதாகிக் குவளையிரண்டு பூத்து ஒருமுழுமதி உலகில் காணப்படுமாயின் அதனை ஒத்து விளங்கிய முகமுடைய பதுமையாகிய பெருந்தேது தனது பவளத்துண்டுகளை நிகர்த்த கரகமலங்களால் மெல்லெனவருடச் சிவந்து தானுகந்து மெனக்கருதும் அன்பர் உள்ளக்கமலத்தில் புகுந்துவாழாநின்றபழமறைகள் நாடும் பரமேட்டியிற் பாததாமரையிற்பற்றுமிக்குறுகலே ஆகும் அடி மங்கையர்க்கரசியே! கையிற்பொருள் பெற்றபோதே கடவுள் ஆலயத்திற்கு அளித்து சாத்வீக புராணநூல்களை விருப்போடு கேட்டு மறுமைக்கு நமக்கு உதவும் பொக்கிஷம் என்றுகருதிஇரப்போர்க்கு சந்துவருபவர்கள் யமனது புயமலைமேல் உள்ள தண்டத்தால் படுந்தண்டனையின்றித் தத்துவங்கடந்த தற்பரனுகிய சிற்பர தாமோதரக்கண்ணன் உலகாகிய பரமபதத்தை அடைந்து நித்யவாழ்வை அடைகின்றார்கள். குடலும் உதிரம் - என்பும் - நிணமும் - வழும்பும் - தோலும் நாடிகளும்வைத்துச் சமத்திய தசையுங்கொண்டு படாச்செய்த ஜலமலபாண்டமே பேதையர்களின் வடிவம் பென்று தேறித்தெளியாது இத்தகைய கசமாலத்திற்கும் மனம்மயங்கி உடையான் அடிகளை மறந்திருக்கின்றனர் அந்தோ நம் ஐயனுகிய தெய்வநாயகன் மாயன் விளையாட்டே ஆகும் பவ்வீக்குழம்பு பல துவாரங்கள் தோரும் மோததலால் வழிந்து ஒழுகின்ற கும்பம் என்பது ஒவ்வொருவனுக்கு வேறுசாட்சிவேண்டாமலே தன்கடையே விளங்கும் இதனைமூத்திரபாத்திரம் என்று பல கிருமிக்குப் பை அடங்த நியினுற் கூடு என்று நல்லறிவாளர் உரைப்பன எல்லாம் கண்காட்சியல்லவோ இவ்வளவறியாது மாதர் மெய்யில் மையல்கொண்டு மாழ்குவார்கள். அது நிற்கட்டும் முன்னம் எத்தனைபேர் மைந்தர் பாராட்டினரோ பின்னும் எத்தனைபேர் மைந்தர்முறை பாராட்டினரோ இன்னும் எத்தனைபெயர் மைந்தர் முறைகொள்ள விருக்கின்றாரோ அறியோம் அவ்வண்ணம் நிகழா நிற்க அவ்விதபிள்ளைகளை நமது பிள்ளைகளென்று நீபேசுவது மகாவிரோதம்இது பேதையர்க்குண்டான இயல்பே ஆகும். நன்னடையில் அநுசூயையும் மென்னடையில் அன்னத்தையும் துன்னிடையில். மின்னலையும், என்னடையில் சொல்தவறுமையும் தொன்னடையில் வழுவாமையும் உடைய எனது காதலியாகிய தார்குழலே ! குழந்தை ப் பெருகின்ற காலத்திலும் வளர்க்கின்ற காலத்தும் அக்குழந்தைகளுக்குநோய் சம்பவிக்கும்போதும் பருவகாலத்தில் அவர்கள் வழியில்லாத வழிகளில் செல்லப்போகின்றார்களென்று ஜாக்கிரதையோடு காக்குங்காலத்தும் காலபாசர் வந்து கைபற்றும்போதும் அளவில்லாத துன்பமே ஆகும் இவ்வாறு கணக்கற்ற துக்கமேலிட்டிருக்கும் ஆனல் பெற்ற பிள்ளைகளால் சுகம் அநுபவித்தல் எக்காலத்தில் ஆதலால் அம்மகவுகளால் எங்ஙனும் துன்பமே ஆகும் பெற்ற பிள்ளைகள் தாய் தந்தையர் இளமைப்பருவத்திற்செய்யும் தண்டனைக்கு உட்பட்டு மனம்நடுநடுங்கி அவர்களை விடாதுன்னிக்கொண்டு நிற்பார்கள் வயது ஏறஏறத் தங்கள் மாதா பிதாக்களை நடுங்கச்சீறித் தன் மனம் போகும்வழியே ஒழுகி நிற்பார் புத்திரர்களுக்கு அன்னையும் அப்பனும் அனந்தம் ஆகும். அவர்கள் பிறந்த ஊர்களும் அனந்தமாகும். அவர்களுக்கு அனந்த ஜன்மங்களில் வாய்த்த சுற்றத்தாரும் அளவற்றவர் ஆவார்கள். அவர்கள் பெற்ற பெயர்களும் கணக்கில்லாதவைகளாகும். அவர்கள் செய்த தர்மங்களும் அளவற்றவைகளாகும். புகழும் இகழும் முடிவற்றவைகளாகும். அத்தன்மையான புதல்வர்கள் யார் நீயார் நான் யார் அவர்களையும்உன்னையும் காப்பாற்றுதற்கும் நானோ நான் மறைகளும் தான் முறையிட்டு நாடற்கரிய நாராயணனல்லேன் அனிச்சமலரை நெரிஞ்சி முள்ளென்று அடிகளை வைப்பதற்கு அஞ்சுகின்ற கிஞ்சுகவாயாளே! பாலர்கள்மேல் ஆசைகொண்டு வருந்துகின்றாய் இவ்வண்ணம் நீ இவ்வளவு வருந்துவதும் பித்தம் பிடித்த மத்தர்கள் செய்கை ஆகும். அறிவீனர் இம்மயக்கச்சேற்றில் அகப்பட்டு வீணே கவலைப்பட்டார். யாவரும் அவரவர் செய்த நல்வினைப்பயனல் இப்பிறப்பில் அது அதற்குத் தக்க சிற்றின்பங்களை அனுபவிப்பார். நல்வினையல்லாத பொல்லாத வினைகளின் பயனல் துன்பம் அநுபவிப்பார்கள் இவற்றைமுதியோர் ஊழ்வினையென்றும் விதியென்றும் ஆதிசங்கற்பம் என்றும், பிர்மலிபியென்றும் பெயர்

மாத்திரம் வேறுள்ள ஒரு பொருளையே காட்டுகின்ற அறிகுறி மொழியென்று பகர்கின்றார். நாம் அனுபவிக்கின்ற சுகாசுகங்களெல்லாம் இம்மையில் நாம் செய்யும் இச்சிறு முயற்சியினுலென்று சற்றேனும் எண்ணவேண்டாம்.

அவ்வித நினைப்புள்ளோர் ஒழுக்கமேயன்றி சாந்த குணம் வாய்ந்த கல்வி அறிவுடைய மெல்லியோர் நடக்கையன்று. அமிர்தத்திலும் இனிய சொற்களை யுடையாளே இந்தப்பிறவியில் தரும தானங்களைச் சிராக நடத்தினோர்கள் மறுபிறப்பில் தேவர்களாகி அமிர்தம் உண்டு விரும்பிய போகங்களைப் புண்ணியம் உள்ளவரையிலும் அனுபவித்துப் பின்பு இப்பூமண்டலத்தில் வந்து பிறந்து இவர் என் தாய்மார் இவர் என்தந்தையர்என்று அயலார்களையெல்லாந் தழுவுகின்ற சுபாவமுடையவர்களாக இருக்கின்றார்கள். அடி நேரிழையே! கேட்பன வற்றை கேட்கின்றவர்களுக்குப் பின்னை யென்னாது அந்தக்கணமே உதவுகின்ற கற்பகநாட்டை ஒருவன் அல்லது ஒருத்தி அடைதலும் இந்தத் தராதலத்தில் அநுபவித்தற்குரிய போகங்களை யெல்லாம் அநுபவித்தலும் நல்ல ஊழ் என்றே நினை. கொடுந்தண்டனைகளைப்பெறுகின்ற நரகத்தில் ஆழ்ந்து யாவராலும் ஆற்றப்படாத துக்கத்தைப் பொருந்துதலும், இம்மண்ணுலகத்தில் நெஞ்சுநைந்து தரித்திர முதலியவற்றால் துயர்மிக்குறுதலும் தீய ஊழ்வினையே யென்று உணர். இவ்வித இன்ப துன்பங்களை உணர்வுடையோர் அடையார் அவ்வறிஞர் பக்தியில் சிறிதும் வழுவாது நிலைபெற்று திருவின் நாயகன் திருவாய்மலர்ந்த வேதாகமங்கள் உரைக்கும் வண்ணமே அர்ச்சனைசெய்து நல்வழியில் சம்பாதித்த பொருள்களையெல்லாம் நிஷ்காமியமாக்கி என்னாளும் எழில் வண்ணனாகிய எம்மான் இணையடித்தாமரைகளை அடைந்து இடையறாத பேரின்ப சாகரத்தில் அமிழ்வார்கள் சளசளவென்று வாயில் நீர்ஊறல் தடையின்றி ஒழுகவும் பற்கள் உதிர்ந்து தேகந்தளர்ந்து திரைந்து மெலிந்து முதுகுவளைந்து தசைவற்று கெம்பீர நடைவொழிந்து சோறுான்றி விதிர் விதிர்த்து இருமி படுக்கையின் கண்ணே கிடந்த கிடக்கையாய் மலஜலம் வருவது அறியாத கிழத்தன்மையின் அளவைப்பார்த்து ஆராயாத அறிவீனர்தானே இளம்பருவ முடையார்களைக் கண்டால் மனமகிழ்ந்து மயங்குகின்றார்கள்.

அடி கோதைபெருகிய ப்பதையே! பாவகிருத்தியங்கள் மிகச்செய்தவர்கள் நரகர் உலகத்தில் உற்பவிப்பார்கள். புண்ணியம் மிகுதியுடையோர் மேகவாகனன் உலகத்தில் உதித்திடுவார் புண்ணியபாவம் இரண்டும் இயற்றினோர்கள் மானிலத்தில் கர்ப்பப் பையில் மானிடர்களாயும், மிருகங்களாயும் முட்டையில் பறவையாயும், பாம்பு ஒந்தி முதலாகியும் வேர்வையில் கோயி முதலாகியும், இன்னும் மற்றயோனிகளில் ஜீவராசிகளாயுதிப்பார்கள். அடிமருவற்ற குழலாளே! தேகத்திலுள்ளே யுள்ள அழுக்கு கண்ணிற் பீளையாயும் காதில் குரும்பியாயும் மூக்கில் சளியாயும், கண்டத்தில் ஈளையாயும், மூலாதாரத்தில் மலமாயும், இன்னும் பற்பல வகையாம் அடிகருங்குழலாளே! உணவின் சாரமானது உடலில் சுக்கில சுரோணிதங்களாகின்றன அவை ஆண் பெண் கூட்டுறவால் விளைந்து மாதர் கர்ப்பக் கோளரையில் தரித்து முதல்நாளில் பனிநீர்த்துளிபோல் இருந்து ஏழுநாள் அளவில் குழுமியாய்ப் பதினைந்து நாள்களில் நெகிழும் பிண்டமாய் ஒரு மாதத்தில் இறுகி வளர்ந்து இரண்டு மாதத்தில் தலையுள்ளதாகி மூன்றுமாதத்தில் கரங்களும் சரணங்களு முற்று நாலாந்திங்களில் சகனமுண்டாகி ஐந்தாந் திங்களில் மணியாய் ஆறுவது திங்களில் செவி நாசி கண்கள் அடைந்து ஏழாவது மதியில் சிவனுற்று எட்டாவது மாதத்தில் ஒவ்வோ ரங்கமும் குறைவற்ற பூரணமாகி ஒன்பதாவது திங்களில் குழந்தையாய்ப் பழைய பிறப்பு இறப்புகளைத் தெளிந்து துன்பத்தில் உழன்று கெர்ப்ப உபநிஷத்திற்கூறியபடியே பூதலத்தில் இனிப்பிறவாமல் ஸ்ரீ முகுந்தப்பிரானது சாணரவிந்தப்பதங்களைப் போற்றி அவனது மூலமந்திரத்தைத் தியானஞ்செய்து கொண்டிருக்கும். அந்தக் குழந்தையானது தாயினது சுரோணிதம் பெரிதானல் பெண்ணாகவும் பிதாவின் சுக்கிலம் மிகுத்தால் ஆணாகவும் சுரோணித சுக்கிலங்கள் இரண்டும் ஒத்துள்ளதானல் அலியாகவும், தாய் தந்தையர் மனமொத்து உடன் படாத புணர்ச்சியில் செவிடு, கூன்,குருடு,சப்பாணி, ஊமையாகவும், சுக்கில சுரோணிதங்கள் அபான வாயுவால் பிரிவுற்றால் இரட்டைப் பிள்ளைகளாகவும் பொருந்தும், பத்து மாதம் பூரணமானல் பிரசாபத்திய வாயுவானது அதோமுகமாய்த் தள்ள பருத்த பொற்கம்பியானது சிறிய தொளையுடைய அச்சில் நின்றும் கழன்று வருவதுபோல் அவயவ மெல்லாம் நெரிக்கிட அஞ்சி யோனித்துவாரத்தால் பூமியில் தன்னுடைய ஊழ்வினையோடு உதித்து முன்னுள்ள அறிவு மறிபட்டு பசியினுல்கலியுண்டு தாயானவள் எண்ணெயாலும்பாலாலும் பரிகரிக்கஉயிர்பிழைத்திருக்கும். இவ்விதமாக முத்தியடையு மளவும் பிறப்பதும் இறப்பதும் ஆகிய துக்கத்திலழுந்தும் இதனை ஒர்ந்து உணர்ந்தவர் அறவாழி அந்தணனது திருவடி

யாகிய மரக்கலத்தால்பிறவிக்கடல்கள் ஏழையும் கடப்பார்கள் மற்றவாகளோவெனில் அக்கடலில் அழுந்திச் சோகத்தி லகப்படுவார்கள்.

அடி திலகந்திற்றிய நெற்றியுடையவளே! நாடிகள் உரோமம், பந்தம், நகம், வீரிதம், பித்தம், கமழ், நிணம் தோல், உதிரம், தசை, மூளை ஆகிய இவைகளை ஆயிரம் பலம் அளவுள்ள வைகளாம், இப்படிப்பட்ட புலால் சுமையை நாள்தோறும் நிலைமையை யுடையதென்று எண்ணி பெண்ணி அன்புவைத்துக் காப்பாற்றி மலைத்து இளைத்து உழல்கின்றவைபெல்லாம் அறிவீனர்கள் செய்கைகளே ஆகும் கரும்புருவப் பாவையே! தரித்திரம் யென்று பலதரம் வருந்திக் கூவினுய் அவ்வார்த்தைப் பொதுமொழியாகக் கொண்டு தரித்து இரம் என்றுபிரித்து நாம் (நீடித்துத்) தரித்திருக்கமாட்டோம் என்னும் பொருளடங்கிய எதிர்மறைத்தன்மைப் பன்மைமுற்றுக இபற்றமிழ் ஆசிரியர்கள் விரித்து உரைக்கின்ற பொருளைத்தேற விசாரித்தறியவில்லை ஆதலால் தரித்திரமும் நிலைத்ததல்ல சேல்கெண்டை நிகர்த்த விழியும் கற்கண்டைப்பழித்தமொழியும் உடையாளே? பாற்கடலை அடைந்த மீனுனது அதிலுள்ள பாலைவிரும்பாது அதற்கேற்றபடி மற்றென்றை விரும்பினுற்போல நம்பெருமாள் திருமுன்சென்று நற்கதிகிடைக்கும் அந்த இன்பச் செல்வத்தை யான் அடைவேனே மானமற்று இழிவுபூண்டுசெல்வர்வீட்டுக் கடைவாசல் தோறும்சென்று இரந்து இத்தேகத்தைபெருத்திட வளர்த்தாலும் இது மின்னலைப் போலும் நீரில் எழுதிய எழுத்தைப்போலவும் நிலைமையை உடையதல்ல மலத்துள் அருந்தி நகர்கின்ற புழுக்கள் அதுவே மகாசுகம் என்பதுபோல இவ்வுடலைப்போற்றிக் காப்பாற்றுதல் நல்லோர்க் காரியமென்று அதனுல் பேதையே அக்குடும்பச்சேற்றில் உழலமாட்டேன் என்று தவராஜசிங்கமாகிய குசேலர் கூறி நிறுத்தினர்.

இதைக்கேட்டு அவர் பகர்ந்தது எல்லாம் உண்மையே ஆகுமென்று உணர்ந்து தான் விரும்பிப்பெற்ற மக்களிடத்தேவைத்த ஆசை மயக்கம் நீங்காததாகிப் பின்னும் தன்புத்தியில் விழும்பித் தனது கொழுனன் சீர்பாதங்களைப்பணிந்து நின்று கலைகளெல்லாம் முழுவதுமென்றுணர்ந்து கற்றுணர்ந்த காந்தரே! இவ்வுலகில் முயற்சி செய்யாதவருக்குச் செல்வம் எங்ஙனே தானேவந்து பொருந்தும் நிலத்தை உழுது விரையாதவனுக்கு இந்நிலம் பலனைத்தருமோ ஒருமானிடன் தனக்குப்பெருதற்கரிய செல்வம் வாய்க்கக் கடவதென்று அநுதினம் முயற்சி செய்வானுயின் பேராயிரமுடைய பெருங்கருணைப் பெருமானும் அதனை அளிப்பான் அதனுலன்றோ மால் மகனுகிய நான்முகனது திரு அவதாரத்தினராகிய திருவள்ளுவரும் தாமருளிச்செய்த தமிழ்வேதமாகிய திருக்குறளில் (முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை,யின்மை புகுத்திவிடும்) என்று யாம்நன்றுக உணரக்கூறினர் செய்யத்தகுந்த முயற்சி செய்தால் திருமணவாளன் இரங்கி வேண்டியவற்றையெல்லாம் அருளுவான் மும்முயற்சியின்றி சோம்பித்திரிந்தால் அளிக்கமாட்டா னென்று அறிஞர் உரைப்பார். உலகமுண்ட பெருமானுகிய தெய்வநாயகன் கொடுப்பானே அல்லாமல் அள்ளி ஊட்டுவானே ஏ! மாதவக்கடலே? முற்பிறப்பில் புண்ணியத்தைச் செய்தார் முயற்சியில்லாமல் உண்பாராயின் தன் குலம் முதலிய உபகரணங்கள் எல்லாம் உடையவர்களானுலும் சமையல் செய்யாமல் பசிநோயை ஒழிக்க உண்பதற்குத் தானே உணவாய்விடுமோ ஆதிநாளில் துறுவாசரால் சபிக்கப்பட்ட ஊ கூ யென்னும் கந்தருவனுகிய முதலையால் அழிந்து அகஸ்தியரால் சாபமுற்ற இந்த்ரப்பிரஸ் தமனுகிய கஜேந்திராழ்வானும் அரி ஓம் யென்று வேத முதலில் கூறுது தன் பெயரையே உரைக்கச் சொல்லிய இரணியனுல் மெலிந்த பிரகலாதாழ்வானும் இராஜசபையில் சுயோதனன் கட்டளையால் துச்சாதனன் சேலைகளை யமனமகிழ்ந்துமொழிந்த துருபதன்மகளும் மாற்றுந்தாயால் மனஸ்தாபமுற்ற துருவனும் அன்பினேடு ஏந்தி அழைக்க முயற்சியாலன்றோ முழுமுதற் கடவுளாகிய முகில்வண்ணன் விரைந்தெழுந்தருளி ஆண்டான் ஆதலினுல் முயற்சி செய்பவருக்கு அடையாத பொருளும் ஒன்றிருக்கின்றதா மும்மலங்களையும் அடியோடு கெடுத்த முனிவர்களும் வேண்டும் முகுந்தன் எவ்வண்ணம் பொருள் அளிப்பான் நான்கு வேதமும் ஆறுசாஸ்திரமும் நன்றுக ஆராய்ந்தவர்களினும் சிறந்தவரே பற்பல முனிவர்களா யுள்ளவர்களும் பலநாள் அருந்தவஞ்செய்துபெறும்பேறு நம்பெருமான் அளிக்கப் பெற்றோர்கள் நான்முகனையொத்த ஞானவரே நாம் நாடுதற்கரிய செல்வம் செல்விநாயகன் அளித்தலன்றிப் புகழ்ந்தடையுமோ அப்பரஞ்சுடராகிய பரந்தாமன் இணையடி அன்றி ஆதரவு எதுயென்று தெளிந்த தேசிகரே ஆசை பொய் சீற்றம் இவற்றைப்போக்கி நீராயினும் புராரி முதலியோர் நராரிவாழும் துவாரகாபுரியை அடைந்து சகல அயிஸ்வரியங்களை வேண்டி இருப்பீராயின் அதனுல் உமக்குத் தாழ்வுண்டாமோ கற்புடைய மாதர்களுக்குத் தங்கள்மணவாளரே தெய்வங்களென்று சாஸ்த்ரங்கள் கூறுவத

னால் நீரே எனக்கு ஈஸ்வரர் எளியானை இரட்சித்தலும் உமக்குக் கடமையேயாகும் தானம் தவமுதல்யாவும் நீர் செய்விக்கின்ற பணிவிடையல்லவோ ஸ்ரீ வாசுதேவர் பாததாமரையைத் திடமாக நினைத்து வல்வினையை சிதற அடித்த அந்தணரே உலகங்களிலெல்லாம் வாழும் உயிர்களையெல்லாம் உலகநாதனாகிய சலரகிதன் காப்பாற்றினாலும் உனது குழந்தைகளையும் பேதையாளையும் பாதுகாப்பது உமது கடமையேயாம் என்றுபேசி முகம்சோம்பி இரக்கத்தோடு தலைசாய்ந்து நின்றாள் அப்பொழுது முனிவர் நாம் கண்ணனைத்தரிசித்தால் பரகதி நண்ணும் மனைவி மக்களும் படுகின்ற வறுமைத்துயர் ஒழியும் என்று உள்ளத்தில் எண்ணி மனைவியின் முகம்நோக்கித் தனயர்பால் மிக்க அன்புடையாளேதெய்வம் ஆசாரியன் அரசன் இவர்களைத் தரிசிக்கச்செல்வோர் அவர்கள் அங்கிகரிக்கும யாதொரு பொருளையேனும் கைக்கொண்டு சென்று காண்பார்கள் யான் எதைக்கொண்டு செல்வேன் தரித்திரர் செல்வரிடத்தில் சென்றால் மதியார்கள் அவமானஞ் செய்வார்கள் மான முடையவர்க ளானால் அதனால் அப்பொழுதே உயிர்விட யத்தனிப்பார்கள் ஆதலால் அச்செல்வர்பால் செல்வது சிறந்ததென்று சிந்தியாதே இவ்வுலகில் இல்லாதவரை எல்லோரும் இகழ்வார்களென்று முன்னோர் உரைத்த நீதி வாக்கியத்தை மனதிற்கொள்ள தங்களைப்பெற்ற தாய் தகப்பன் மார்களும் தனயர்கள்மேல் தரித்திரகாலத்தில் தாட்சணியமின்றி வெறுப்படைவார்களானால் உலகத்தில் அன்னியர்கள் எவர்கள்தாம் வறுமையில் தூஷிக்கார்கள் தரித்திரர் ஒருபொருளையும் விரும்பாமலே பொருள் உள்ளவர்கள்பால் சென்றால் இவ்வறிஞர் இன்றையதினம் எதைக் கருதி இங்குவந்தார் என்று மனதில் கருதி, அவர்களுக்குமனம் வெதும்ப குறிப்புவார்த்தைகளைப்பேசுவார்கள் தெரியிழாய் செல்வரிடத்துச்சென்று - ந்தது சிறுமைபேயன்றி பெருமைகிடைத்ததோ ஏ சுடர்க்கொடி இவ்வண்ணம் இவர் உரைப்பது என்னவென்று நினையாதே ஏககாலத்தும் மானிடர் பந்தாபந்தம் இத் தன்மையை உடையதென்று பகர்ந்தேன் பரப்பிரமமாகிய ஸ்ரீஜநார்த்தனனிடத்துப்போவது தகாதென்று சொல்லவந்தேனல்லேன் கடலுக்குச் சிறுபனித்துளியானது என்ன சந்தோஷத்தைக் கொடுக்கும் மலையத்தனை தேவனுக்குக் கடுகவ்வளவு சாம்பிராணிபோலவும் பிறைமதிக்கு நூலிழைபறித்துத் தூவிவிட்டுச் சிந்தித்தல்போலவும் ஜகதீஸ்வரனுக்கும் கையுற கொண்டுபோய்க் காணவேண்டும் என்று உரைத்த காதலன் வாய்மொழியைக் கேட்டுக் களிகூர்ந்து இதற்குயாது செய்வதென்றுசிந்தித்து அன்றுமுதல் உபவாசம் தானிருந்து நாயகன் அருமையாகத் தேடிக்கொணர்ந்த நெல்லினில் தன்னொருபாகத்தை வேறெடுத்துச்சேர்ந்த நெல்லை நீரில் ஊறவைத்து வறுத்து எடுத்து உலக்கைகொண்டிடித்துக் கசிசுபோக்கி அவலாக்கி அவரது கந்தை வஸ்திரத்தின் ஓர் மூலையில் முடியிட்டுக்கொடுத்துச் சுகமாகப்போய் வருவீரென்றாள் அதனை வாங்கிக்கொண்டு முன்னே நெடுந்தூரவழி நடந்தறியாதவர் வழிப்போக்கர்களை வினவி வழிதேர்ந்து தடையிலாமல் பலகாதம் நடந்து கிளைவழிகண்டு மயங்கிநின்றுதன் அறிவால் இதுவேபோகும் மார்க்கமென்று தேர்ந்து செல்லும் வழியில் பலமலைகளையும் அங்கிருந்து ஓடுகின்ற அருவிகளையும், கடும்புலிவாழும் காடுகளையும் பலதேசங்களையும் நகரங்களையும் நதிகளையுங்கடந்து மற்ற வழியையும் எவ்வாறு கடப்பதென்று எண்ணி மெல்லமெல்லச் செல்லும்பொழுது வேனிற்காலமாதலால் மண்ணும் நீரும் வீசும் காற்றும் கொதிக்கவும் அதை நினைப்பவர் எண்ணமும் எரியும், வீட்டை விட்டு அகலாதவர்களுடைய கண்கொதிக்கவும் மேகங்கொதித்துக் கரிந்துவிழவும், பூமிபிளவுறவும், குளநீர்வறளவும், மான்கள் பேய்த்தேரின் விரைந்து சென்று இளைக்கவும் கண்டு வெய்யலில் பசியால் மிகநொந்து மரநிழலிலிருந்தும் எங்கும் நீர் கிடையாது வாய்வறண்டு வருந்தும்போது சூரியன் அஸ்தமயமாயிற்று அங்குள்ள நகரைக்கண்டு இங்குநித்திரை செய்ய பாட்டைசாரியாகிய நமக்கு ஆர் இடங்கொடுப்பார் நமக்கு இவ்வூரில் யாவரும் பழகியவருமில்லையென்று திடசித்தராய் அங்கு எதிர்ப்பட்ட ஒரு ஆலயத்தின் முன்னே உறங்கி உதயத்தில் எழுந்திருந்துநடக்கும்வழியில் முள்தைத்துக் கா லூன்ற முடியாமல் அதை வாங்குங்கருவியுமில்லாமல் மனமெலிந்து எண்ணுவார் ஒருவன்தன் இஷ்டப்படியேசெய்தால் நலமாகுங்குருமொழி கேட்டு நடந்தால் அதிலும் நன்மை பகைவர் சொற்படி கேட்டு நடக்க துக்கமே ஆகும் அதிலும் மனையாள்பேச்சின்வழி நடப்பது மகாதுக்கத்தைத்தரும் என்ற முதியார்மொழி உணர்ந்தும் மனையாட்டி விளம்பிய சொற்கு உடன்பட்டு வருந்தி மூர்ச்சித்து மெலிகின்றேன் துவாரகை எதுவென்றுகேட்டால் இன்னும் நெடுந்தூரம் என்கிறார்கள் மற்றை வழியையுங்கடக்க வழியில்லை ஆயினும் ஓர்விதத்தினால்கடந்தாலும் கடல்மார்க்கத்தை எவர்களுடைய சகாயத்தைக்கொண்டு கடப்பேன் அத

னைக் கடந்தாலும் அத்துவாரகையில் என்னை ஆர்மதிப்பார்கள் சற்றும்போசியாது பிரயாணப்பட்டேன் ஆ-ஆ என்னகாரியத்தைச் செய்துவிட்டேன் மகா மகுட முடி மன்னர்களெல்லாம் வந்து காத்திருக்கும் கோமகனுடைய தலைவாசலில் எவ்வாறு நெருங்குவன் அவ்வண்ணம் நுழைந்தாலும் அவ்வேத நாயகனது திருச்சேவை ஏழைக்கு எவ்விதத்திற்கிடைக்கும் கற்பகத்தைச் சார்ந்து வறிய காய்களைக் கேட்பாரைப்போல் எம்பெருமான் திருமுன்சென்று நீரலைப்போன்ற அற்ப செல்வத்தை விரும்புவது அறிவின் செய்கையோ பென்று பலபல எண்ணி இனி யென்னதுபர் நேரிடினும் முன்மனையாட்டிக்கு உரைத்தபடி முழுதும் போய்வருவதே தகுதியென்று சிலநாளில் மேல் கடற்கரையைச் சார்ந்தார் என்று சுகப்பிரமமுனிவர் திருவாய் மலர்ந்தருளக்கேட்ட பரிட்சித்து மகாராஜன் பரமாசாரியரே பின்னிட்ட சரித்திரத்தையும் உரைத்தருளுமென மீண்டும் உரைப்பாராயினர்.

முதலாவது மேல்கடலடைந்த அத்தியாயம்
முற்றிற்று.



## இரண்டாவது
## குசேலர் துவாரகாபுரியைக் கண்டு தன்னகர்ப்புறம் அடைந்த அத்தியாயம்.

ஸ்ரீ கண்ணபிரான் துதி
ஒருபொருள்மேல் மூன்றடுக்கு வந்த
ஆசிரியத்தாழிசை.

கீரார்பைங்கொண்டல் நிகர்திருமேனிப்பெருமான்
பாரார்நின்றசெழும் பங்கயச்செம்போதடிகள்
தேர்வார்வினையிருட்குச் செங்கதிரோனென்பாரால்

காயாம்பூவொத்த கதி த்திருமேனிப்பெருமான்
பாராயணமணக்கும் பங்கயச்செம்போதடிகள்
ஆய்வார்வினைவாரிக் கார்வடவையென்பாரால்

வற்றுக்கடல்நேர் வருதிருமேனிப்பெருமான்
பற்றுக்கடலொலிக்கும் பங்கயச்செம்போதடிகள்
உற்றூர்வினையாவுக் கோருவனமென்பாரால்.

வேறு விருத்தம்.

வேதந்தெரிந்தானும் வேதத்திற்குள்ளானுங்
கண்ணன்போலும்
போதந்தருவானும் போந்தெளிவால்நிற்பானுங்
கண்ணன்போலும்
ஏதந்தவிர்ப்பானும் எவ்வுயிருங்காப்பானுங்
கண்ணன்போலும்

என்ற ஆயிரம் பணமகுடங்களையுடைய திருவனந்தாழ்வானும் ஐராவதம் முதலிய அஷ்டதிக்கஜங்களும் இளைப்பாற இப்பூமண்டலங்களை யெல்லாம் தாங்கி நிற்கும் மலர்மாலையணிந்த மலைபோலுந் தோள்களையுடைய பரிட்சித்து மகாராஜனே மகா சுகசீலராகிய குசேலர் மேற்கடலாகிய யவணசமுத்திரத்தை அடைந்து மகா சந்தோஷத்துடனே அதன் கரையிலுள்ள ஓர் புன்னை மரத்தின் நிழலில் உட்கார்ந்து சிறிது இளைப்பாறி இங்குள்ள தோணியேறிப் போவதற்கு அதனை வோட்டுபவனாகிய மீகாமனுக்குக் கூலிகொடுக்க ஓர் அரைக் காசும் என்கையில்லில்லை அல்லது இந்தக்கப்பல் வோட்டுகின்றவனே என்னைக் கூலிகேளாது ஏற்றிக்கொண்டு போவானென்று நினைப்பதற்கு இடமில்லை ஏனெனில் நானோ வஸ்திர ஹீனனாய் மதிப்பற்றவனாக இருக்கின்றேன் ஒருவேளை தேவகிதேவியின் திருக்குமாரராகிய கமலக் கண்ணனது திருச்சேவைக்குப் போகின்றேனென்று உண்மையைக் கூறினபோதிலும் எதார்த்தமாக நம்புவானோ அல்லது நம்பமாட்டானோ ஆயினும் இந்தக் கப்பலோட்டிக்கு நல்ல உபசார வார்த்தைகூறி இரந்துகேட்பதே உறுதியான காரணமென்றுதனது திருவுள்ளத்தில்எண்ணி அம்மரத்தினின்றும் எழுந்திருந்து மீகாமனருகே வந்து அவன் இறங்கும்படியாகப் பல பல நயனவசனங்களைப்பேசிய வளவில் அவன் மனதிறங்கி நாவாய் மீது யேற்றிக்கொண்டனன்.

கேட்டீரோ பரிட்சித்து மகாராஜனே குசேலமுனிவரும் கப்பலேறிச்செல்லுகையில் மீகாமன் துவாரகையின் கரையருகில்செலுத்தி நிறுத்தினவுடனே பரமபாகவத சிகாமணியாகிய குசேலர் அங்கு இறங்குவாரோடு இறங்கி களிப்படைந்து துவாரகாபுரியைத் தரிசித்தார் தெரிசித்த மாத்திரத்தில் மாசிலா மணிவண்ணனுடைய

கண்ணனைக்கண்டு களிகூர்ந்தாற்போல் மனமகிழ்ச்சியடைந்து ஆனந்த குதூகுலனாய்ச் செல்லும்போது வழியில் வாயுவேக மனோவேகமாய்ச் செல்கின்ற பரிகளுக்கு ஒதுங்கிப் பதுங்கியும் அசைந் தசைந்து நடக்கின்ற மும்மதக்கரிகளுக்கு அஞ்சி அயலேசென்றுநடுங்கியும் விரைந்து செல்லுகின்ற இரதக்குழாங்களுக்குக் குலை குலைந்து வெகுதூரம் வாடி ஒடியும் மங்கையர்கண்களாகிய வாள்களுக்குப் படாமல் கடுநடைநடந்தும் முன்னும்பின்னும் பார்த்துக்கொண்டே தனது காலடிகளால் நகர்ந்துபோகின்ற எறும்பு பழு பூச்சிகள் அகப்பட்டு இறந்து விடுமேயென்று தரையை நோக்கி மெல்லென நடந்தும் யானைக்கூட்டங்களும் பரிகள் கட்டப்பட்டுள்ள மந்திரங்களும் அந்தணர் மந்தணங்களும் கல்லூரிகளும் இரதசாலைகளும் உடையனவாகிய அந்தப்பட்டணத்தின் ஒரு பகுதியைக்கடந்து ஆண்யானைகளும் பிடிகளும் விளையாடுவன சிவந்தைகளால் நீர்க்குழல் விசிறிகளால் நீ ரிறைத்து விளையாடல் செய்கின்ற மாதர்களும் மாந்தர்களும் நீராடுகின்ற மலர்த்தடாகங்களும் இயற்றமிழ்ப் புலவர்களால் இயற்றப்பட்ட பாடல்களில் ஆழமுள்ள கருத்தைப்போல் ஆழமுடையதாயும் கன்னியருடைய கடிதடதடாகத்தைப்போல யாவரும் படிதற்குக்கூடாத காவலுடையதாயும் இராநின்ற அகழியையும் தாண்டி பலதலைகளுள்ள பாம்பாகிய படுக்கையிற்பள்ளிகொள்ளும் பரமபொருளாகிய பகவான் தனதுபாதத்தால் பாரளந்திட்டகாலையில் வளர்ந்த திருவுருவம்போல் உயர்ந்து ஒங்கிய மதிலின் வாயில்களையும் தடையறக்கடந்து நமது ஐயனைக்காணும்பொருட்டுச் செல்கின்ற அரசர்களும்கண்டுவருகின்ற கொற்றவர்களும் வரும்போதும் போம் போதும் வழியில் நெருங்குகின்ற நெருக்கததில் தனது பார்வையும் நுழையாமல் தேகத்தை ஒடுக்கிக்கொண்டு கரங்களைச்சிரத்தின்மீது தூக்கிக்கொண்டும் சாலத்துயருடையவனாய் உள்புகுந்துநடக்கும் இடங்களிலெல்லாம் நெருக்கமா யிருப்பதால் அங்குபோகின்றவர்கள் வருகின்றவர்கள் அணிந்துக்கொண் டிருக்கின்ற மலர் மாலைகளின் மகரந்தப் பொடிகளும் பூசிக்கொண்டிராநின்ற குங்குமக்குழம்பும் கஸ்தூரியும் கலந்து தனது கந்தைவஸ்திரத்திற்செறிந்து அக்கந்தையும் சுகுமாரமாக பரிமளம்வீசாநின்ற தாயிற்று

கேட்டீரோ பரிட்சித்து மன்னவரே! இவ்வண்ணமாகக் குசேலமாமுனிவர் வழிநடந்து வெளியில் வருபவரும் உள்ளே நுழைபவரும் வீதியில் கலகம்விளைப்பவரும் மலர்மாலைசந்தனம் இவற்றை முன்னிட்டுக் கொண்டுபோய் அலங்கரிப்பவரும் கரங்களைத் தட்டுபவரும் காவாட்சிகளை மெல்ல விரல்களால் அசைப்பவரும் நாய்கள்போல் உழல்பவரும் ஆக்காளையர்களா யுள்ள வாலிபர்களுக்குத் தேகத்தைவிற்று கலவியின்பம் அளித்துத் தாங்கள் அவர்கள் கைப்பொருள்களை யெல்லாங் கவர்ந்து உண்டு காலத்தைக்கழிக்கும் கணிகையற் சேரியையுங் கடந்து இரவலர்க்கு முப்பழங்களோடு அறுசுவை யுண்டியை உதவுகின்ற கொடையாளராகிய வேளாளருள்ள வீதியையும் பொற்கட்டிகளால் அடுப்பமைத்து குமுதமலர்ப்பானையையேற்றி பனிநீர் வார்த்து உலைவைத்துகுத்தரிசிபோட்டு மாணிக்கத்தீயிலிட்டு பவளக்கோல் விறகிட்டுச் சிறுவீட்டில் சமையல்தொழிலைப் பயிலுகின்றசிறுமகளிர் விளையாடுகின்ற மாணிகத்தெருவும் கோமயத்தால் மெழுகி மணித்துகளால் கோலமிட்டு பார்ப்பனமகளிர்கள் நிற்க யாககுண்டலத்தில் பிறந்த அவிற்பாகங்களை அமரர்க்கூட்டிய அந்தணர்களிருக்கும் யாகசாலைவீதிகளும் அங்கு அந்தணர் சிறுவர்கள் கலைபயிலிடமும் கண்டுகொண்டு இராஜவீதியிற்புகுந்து யாழ்முதலிய கருவிகளின் இசை ஒலியும் மிருதங்க பேரிகைமுதலிய வாத்தியங்களின் மங்களவோசையும் சிங்கநாதமும் சங்கநாதமும் செவியுறக்கேட்டுக் கொண்டே உள்ளுள்ளே நகையுடையவராயும் வாரும் ஐயா குசேலரே ஜகதீஸ்வரன் தனது அருட்சத்தியோடு அடியார்களுக் கருள்செய்யு நிமித்தமாக இங்கே யெழுந்தருளி யிருக்கின்றான் விரைவில்வாரும் அவன் திருவழகைப்பாரும் ஜனன மரண வாதை இன்றோடே தீரும்யென்று கையால் அழைப்பதுபோல உப்பரிகைகளின்மீது ஆடுகின்ற கொடிகளையும், அமலனைக்காணும்படி வந்த அமரர்கள் ஊர்ந்து வந்த விமானங்கள் தோரணங்களில் சிக்குண்டு கிடப்பன வற்றையும் அந்தணர் களுக்குத் தானஞ் செய்யும்போது வார்த்த நீரானது ஆறாய்வோட அதில்தோணியைவிட்டு அக்கரை சேர்பவர்களையும் மன்னவர்கள் குடை பிச்சம் விசிறி ஆலவட்டம் மரகதம் வயிரமுதலியவற்றால் இழைத்த மகுடங்கள் வெயிலை ஒட்டுதலையும் மாதர் நுதற்பிறையும் சீதமதிப்பிறையும் வேற்றுமை தெரியாத ஒரு வாலிபன் தனதுகாதலியின் வாள்நுதலென்று அதன்நடுவே திலகமும் எழுதுகிறதையும்கண்ணன்திருவடியும்வரைந்துள்ளசுவர்த்தலங்களையும்பார்த்துக்கொண்டேபோம்போது கம்சன்சாளவன் சிறுபாலன் காலயவனன்முதலியோ

ரைச் சம்மரித்த ஜனார்த்தனது திவ்விய சரித்திரத்தை இடங்கடோறும் பண்ணுடன் பாடுகின்றதைக் கேட்டுந் தன் வயிற்றில் உலகை அடக்கிய மாயனைத் தன்னிடையே ஒடுக்கிவைத் திருக்கின்ற வுப்பரிகையையுடைய இந்நகரத்தின் சிறப்புகூறுதற்கு சேடனாலும் ஆகாதென மதித்து இவ்வகையே அந்நகரத்தின் வளப்பத்தை சிறிதுமாத்திரமே அறிந்ததினாலேயே பற்பல காதவழி நடந்த இளைப்பும் வருத்தமும் பசியும் பறந்து வொழிந்தன. நாவில் நீர்சுரந்தது தேகமும் பூரித்தது ஐந்து துந்துபியின் முழக்கமும் காவலர் கழலொலியும் பரிகளின் கனைப்பும் களிற்றிரள் பிளிறலும் தேரினரவமும் இடைவிடாது கோஷிக்கின்ற பரந்தாமனது திருக்கோயிலின் தலைவாயிலை அடைந்தார்.

கேளீர் பரிட்சித்து வேந்தே! அந்த வாசலின் சிறப்பைக் கண்டவுடனே உள்ளக்கமலத்தில் திகைப்புற்று அடங்காத பெருங்களிப்படைந்து அம்மம்மா நான் இங்கு ஒரு கற்பகாலம் வரையிலும் காத்திருந்த போதிலும் மன்னவர் துன்னும் நெருக்கமுமாறாது ஆதலால் எவ்வாறு உள்ளே புகுவது முடவன் மலைமுடியிலுள்ள தேனைவிரும்பினால் கிட்டுமா? வாவரப்பொழுது கழிகின்றது சும்மா காலதாமதஞ்செய்து நிற்பது காரியமன்று இனி துணிந்து இந்த நெருக்கத்தில் செல்லுவோம் வருபவை யெல்லாம் வருக என்று அணுகிப்போமளவில் அங்கு ஓர் அரசனைச் சூழ்ந்து காவலாளிகளாயிரா நின்ற கஞ்சுமாக்கள் வெருட்ட அஞ்சித் தூரமாகச் சென்று மீண்டும் உறுதிகொண்டு போகாநின்ற ஆழிக்கண்ணபிரானுக்கு திரையளிக்கின்றதினால் மேடாகக் குவித்திருக்கின்ற திரவியக் குப்பல்களை இது மகாமேருவோ? இது கயிலாச பருவதமோ? அல்லது அஷ்டகுலாசமோ? யென்று ஐயுற்றுப் பெரிதும் ஆராய்ந்து சற்று நிற்கும்போது அவ்விடத்தில் ஓரரசன் சேனைபரிவாரங்கள்வர மெல்ல அதில் புகுந்து தேகம் அரைப்பட்டு நசுங்கிக் கால் தரையில் பாவாமல் கையிடிப்புண்டு வெயர்வை ஒழுகக்கண்டு அந்தோ இதில்நின்றும்பிழைத்தது நமக்கு இரண்டாம் பிறப்பென்று உணர்ந்து துவாரபாலகர் உள்ளயிடத்தை அடைந்து திருநெடுமால் அடியவர் இவர் என்றுஎவரும் புகழ்ந்துபேச துவாதசத்திருமணக்குறு நெற்றிமுதலிய பன்னிரண்டு ஸ்தானங்களில் தரித்து விளங்குகின்ற அவர்களைக் கண்டவுடனே இவர்கள் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வைகுந்தத்துள்ள ஜெயவிஜயர்களே ஆகும். இவர்களை ஒப்பவர் ஒருவரும் இலரென நினைந்து பொத்தல் கந்தையுடனே அந்தத் துவாரபாலர்கள் முன் நெருங்கி சற்குணமுடையீரே கேட்டருள்வீர்க ளென்று உரைக்கத் தொடங்கினார்.

ஓ பரிட்சித்து காவலனே! அவர்களை நோக்கி நீலமேனியனுக்கு அடியீராக விருக்கின்றீர். என் ஆசீர்வாதத்தைக் கொள்ளுங்கள் உங்களைப் பார்த்தபோதே திருமங்கை மணாளனாகிய செங்கண்மாலைக் கண்டாற்போல உவகை பெருகுகின்றது. கமலாசனியாகிய கோமளவல்லியைத் திருமார்பில் அணிந்துள்ள தேவதேவனது திவ்விய சேவை தினேதினே செய்கின்றீர்களாதலால் உம்முடைய மேன்மையை எம்மாற் சொல்லி முடியாது. நானோ அந்தணர் குலத்தில் உதித்தவன் என் பெயர் குசேலன் திருப்பாற்கடலில் ஆயிரம் பணாமணி முடிகளுடைய திருவனந் தாழ்வான்மீது திருத்துயில் கொள்ளும் யோகநித்திரையை ஒழித்து அடியார்க்கருள் செய்து ஏனையோர்க்கும் அழிவு செய்திட அவதரித்தருளிய அருள்ளனாகிய ஸ்ரீ கண்ணபிரானோடு இளமையில் கல்வியில் பழகினேன் இந்திரன் பெய்வித்த கல்மழையை ஒரு கல்மலையேந்தித் தடுத்தருளிய அச்சுதன் சந்நிதியில் சென்றுஎளியேன்வரவை அறிவித்துஏழையாகிய என்னை அந்தப்புரம் மூர்த்தியிடஞ் சேர்ப்புவிப்பது உங்கள் கடமை யென்று உரைத்தனன்.

கேட்டீரோ பரிட்சித்துப் பூபதியே! இன்னபடி வாசல் காப்பவரோடு கழறிய மொழிகளை அவர்கள் பக்கலிலிருந்த சில மடமையுடையோர் கேட்டுப் பழிக்க வாரம்பித்தனர். எவ்வாறெனில் ஓ ஏழைப்பார்ப்பானே! பகைவரை அடக்கி எமலோகத்துக்கு அனுப்பும் வலியோனான கண்ணபிரானுக்கும் உனக்கும் தாரதம்மியம் யெங்கே உனக்குப் பகுத்தறியுங்குணம் சற்றேனும் இல்லை அன்றியும் வீணே பயனின்றி மூப்படைந்தாய் பகைவர் மலிவுகளைத் தேய்க்கும் கழலணிந்த மலரடிகளையுடைய மாதவனது பெருந்தன்மையும் தரித்திரனாகிய உனது தாழ்ந்த தன்மையும் தெளிந்து பார்த்தால்மேருவும் அணுவும் போலும் நன்னீர் கடல் நீரும் சிறுகுழி நீரும் ஒக்கும் நினையும் மக்கமும் போலும் கையில் பொருள் உள்ளவ னென்று யாவரும் புகழும் வார்த்தை பெற்றிருக்க வேண்டும். இருகரங்களிலும் மணி அணிக்கடகம் பூண்டிருத்தல் வேண்டும் இருசெவிகளிலும் இரத்தக் குண்டலங்கள் தரித்திருத்தல் வேண்டும். மார்பில் மதாணியும்வேண்டும். உயர்ந்த பட்டாடை இடையில் புனைந்திருத்தல் வேண்டும். அன்றியும் ஏறிநடத்தத் தண்டிகையில் செலவுக்குப் பொருளும் ஏவலாளிகளும்

மற்றும் ஆடம்பரங்களும் இராஜசேவைக்குப் போகின்ற வர்களுக்கு வேண்டும். இன்னுங் கேளும் செல்வர்களா யின் மன்னவர்கள் உபசரிப்பார்கள் வறியோராளுல்பிடர் பிடித்துத் தள்ளுவார்கள் இஃதறியாத நீ உன்மேல் உள்ள நட்பை இதுவரையிலும் மறந்திடாது ஞாபகத் தில் வைத்திருப்பா னென்று நினையா நிற்கின்றாய் நேற் றுண்ட உணவின்கையை இன்று மறப்பாக விருக்க இவ் வாறு நீ உண்ணுவது திருடன் இராஜவிழி விழிப்பது போல் இருக்கின்றது. ஓர் நகரத்தில் செல்வராயுள்ள வர்கள் எங்குஞ் செல்வர் நேசத்தை விரும்பு வார்கள் அவர்களில் தரித்திரர் நட்பு நிலையுறாது அவ்வண்ணம் இருக்க மன்னர் பெருமானிடத்து உன்னுடைய நட்பு என்ன பயனைத்தரும். செல்வமுடையோன் முன்பின்பழ க்க மில்லாதவனுனும் நகரத்திற் சிறந்தவனுகின்றான்.

மேலும் காமம், வெகுளி, மயக்கம், என்னும் முக் குற்றங்களில் ஒவ்வொன்றி லகப்பட்டோர்களாகி வேத விதியையும் விலக்கி மந்திரிமார்கள் இடித்திடித்து கூறும் புத்தியையும் கேளாதவர்கள் உனது குறையை யார் செவிகொடுத்துக் கேட்கப் போகின்றார்கள். பாடசாலை யில் ஒன்றுகூடி கலை கற்கும்போது பிரியாச் சினேக முடையராக இருந்தோ மென்று கூறினீர் அவ்வண்ணம் பிரியாத நட்பில் பிரியம் இந்தக் கோபாலகிருஷ்ண பர மார்த்தனுக்கிருக்குமாயின் உமதிருப்பிடத்திற்குக்காலா காலத்திலேனும் ஒரு திருமுகச் சந்திரிகை வரைந்து அனுப்பலாமே? அல்லது ஒரு தூதனையாயினும் செலுத் தலாமே? இப்போது இந்தக் கோவிந்தராஜன் உள்ள நிலைமையைக் கண்டால் அந்தரவாசிகளாகிய இந்திராதி யரும் காணுதற்கு அருமையாகவே யிருக்கின்றது. இந்தப் பூபாலனுகிய கோபாலன் சகல சாதாரணமாக யாவரிடத்திலும் கூட்டுறவு உடையவ னென்று நினைத் துப் பழய சினேக மென்றும் உறுதி கொண்டு முடுகிச் சொல்லாதீர். என் மொழியைத் தடைசெய்து சமயத் தைநோக்காது பிரயாசைகொண்டு உள்புகுந்தீராயினும் உமக்கு வருவது அவமானம் ஒன்றேயாகும். ஓ விப்பிர குலோத்தமரே! தன் வீட்டு விளக்காயினும் முத்த மிடுவாருண்டோ ? உனது குலோத்தோர் செய்யும்அறு தொழிலிலொன்றாகிய யாகத்தொழிலைச் செய்துவந்த பயனைகொண்டு நல்லாடை உடுத்து அறுசுவை உணவை வுண்டு காலங்கழியாது வேறோ ரெண்ணங் கொண்டு வழிநடந்து இளைத்து மெய்வாடினுய் ஐயோ இது ஆகா யச் சந்திரனே இங்கே வாவென் றழைத்து வராமல் போனவுடனே அழுஞ் சிறுகுழந்தைத் தனமாக விருக் கின்றது குபேரனும் அவன் நேசனுகிய பரமேசனும் இந்திரனும் இன்னும் மற்றுமுள்ள வானவரும் இந்த அற்புத சேவைக்காகக் காத்திருக்கின்ற அருமையைக் காணுதிருக்கிறாய் போலும் ஓ வேதியனே! இதோ நிற் கிறவன் மகததேசமன்னவன், அவன் கொங்கணதேசத் துக் கொற்றவன் இதோ வாளேந்தியுள்ளவன் கூர்ச்சர தேசாதிபதி அதோ வாகுவலய மணிந்து அழகுடைய தேக காந்தியுடைய மன்மதன் போல் வருகின்றவன் அயோத்தி அரசன் அவன் காம்போஜன் இவன் அங்க நாட்டிறைவன் அவன் துளுவதேசத்து இறைவன் அவன் பல்லவராயன் அதோ குழாங்கூடி ஒருங்குசேர வார்த்தையாடிக் கொண்டிருக்கிறவர்கள் கலிங்க, காஸ் மீர, கேகய, சிங்கள, சோனக, சீன சீனதாத்தார, நேபாள, வங்க, வங்காள, மராட, மச்ச, குடகு, காந்தார தேசங்களை ஆள்கின்றகாவலர்கள். இத்தனை அரசர்களில் யாரை நீ வேண்டித்திருக்கின்றாய் ஓய் கிழிந்தகந்தை இடை யிற் சுற்றிய மறையோனே பதினாறாயிரம்-பொன்களை யொத்த மாதர்கள் புடைசூழத் திருவிளையாடலைச் செய்கின்ற தேவதேவனுகிய வாசுதேவன் தரிசனைக்கு நீ பாத்திர னுவாயோ? உன் பிரயத்தனம் கண்ணில்லாதவன் கதிர வனைக்காண நினைப்பதையும் செவிடன் யாழிசை கேட்க முயற்சி செய்வதையும், முடவன் கடலைக்கடக்கக் கருது வதையும் நிகராயிருக்கின்றது. ஓ உயர்குலத்தினரே! இவ்விமையவர்களும் அரசர்களும் பொன்னுடையோர் கள் ஏவலாளர்கள் உள்ளவர்களை பூமியுடையவர்கள் ஆத லாலே எத்தனைகாலங் காத்திருந்தாலும் சிறுமையில்லை, இவற்றில் ஒன்று இல்லாத உனக்குத் தகுதியாகுமா? அந்தோ! ஆசைவுனக்கு அளவற்றதாக விருக்கின்றது பேராசை யுடையவரே தரித்திரம். அனுபவிக்கிற தென் கிற பழமொழியை நீர் இது வரையிலும் கேட்டிலீர் போலும் இனியாயினும் இந்தச் செய்தியை யறிந்து வந்தவழி பார்த்துக்கொண்டு உமது ஊருக்குப் போதல் நலமாகத் தோன்றுகின்றது என்று அங்குள்ள அறி விலார்கள் உரைக்கக் கேட்ட குசேலர் ஆம் ஆம் நமக்கு மார்பில் அணிய மதாணியுமில்லை இடையில் அணிய பட்டாடையுமில்லை. பொற் சிவிகையுமில்லை. இன்னும் வேண்டுவன ஒன்றுமில்லை. இப்போது எங்குபோய்இவற் றைப்பெறுவது நான் கந்தையில் கட்டிவைத்திருக்கின்ற அவல் மூட்டையை இவர்கள் கண்டாராமானல் நமக்கு மிக இகழ்ச்சி அதுவுமன்றியும் சிரிப்புக்கிடம் என்று மனங்கூசிநிற்கும் குசேலரைத்துவாரபாலகர்கள் கண்டு சொல்வாராயினர்.

ஏ பரிட்சித்து மகாராஜனே ! இவ்வண்ணம்அங்கிரு
ந்த மடமையுடையோர் கூறியவற்றையெல்லாம் கேட்டுத்
துவாரபாலகர் ஓ மடையர்களே ! நீங்கள் இந்த அந்தண
னை யாரென்று நினைக்கின்றீர்கள். பொய் என்பது
கனவிலும் பேசாதவர் மகா விரதம் பூண்டவர், வேதம்
கரைகண்டவர், இவர் யாவரிடத்தாயினும் போகின்ற
வரோ மிக இனிய வார்த்தை பேசுகின்றவரென்றுயாம்
மனதிற் கொள்ளுகிறோம். பாவிபரே ! இவ்வுலகத்தில்
மானிடப் பிறப்பே பல பிறப்புகளிலும் மேலான ஜனன
மாகும். அதிலும் தாழ்ந்த குலத்தை நீக்கிஉயர்ந்த குலத்
தில் பிறப்பது அருமை அந்தக்குலத்தில் பிறந்த யிவர்
நமக்குஆசாரியரும்தெய்வமும்ஆவார். அப்படியேபிர்மா
முதலில் சகலரும் உரைத்திருக்கின்றார் இப்படியே வேத
மூலகாரணனாகிய நாரணன் திருவவதார புருஷ விக்கிர
மாகிய நமது ஸ்ரீ கண்ணபிரான் திருவாய்மலர்ந்தருளவுங்
கேட்டிருக்கின்றோம். ஆதலால் இவரைப்பற்றி நாம் சந்
தேகிக்க வேண்டியது என்ன விருக்கின்றது. அந்தணர்
களுக்கு பூசைசெய்ய திரு ஆலயங்களும் கிரகங்களும்
சமைத்துக் கொடுப்பவரும், உபநயனம் திருக்கல்யாண
முதலியவை செய்ய பொருள் அளிப்பார்கள், கறவைப்
பசுக்களும் இன்னும் அவர்கள் விரும்பியவற்றைத் தருப
வர்களும், அவர்கள் அருந்த அறுசுவை உணவை அளிப்
பவர்களும், புலி - கரடி முதலிய மிருகங்களினாலும்
கொடுங்கோல் அரசர்களினாலும்அக்கினியாலும் தண்ணீ
ராலும் கள்வர்களினாலும் இடர் வருமானால் அப்படிப்
பட்ட துக்கத்துக்கு ஐயோவென்று இரங்கி விரைந்து
பொருள் முதலியவை கொடுத்து அன்புவுண்டாகி பேரு
தவிசெய்து மேலுமேலும் காப்பாற்றுவோம் என்பவர்
களும், இப்பிறப்பில் பல பெருஞ்செல்வம் இடைபறாது
விருத்தியாகப்பெற்ற பிள்ளைகள் தங்களைச் சூழ்ந்திருக்க
வும் மகாபாக்கிய போகங்களை அநுபவித்து மறுமையில்
சுவர்க்காதி போகங்களையும் அநுபவிப்பார்கள் இவ்வித
பிராமணராகிய இவரை இலேசாகநினைத்து இவ்வண்ணம்
பேசிவிட்டீர்கள். இந்தவேதவித்தாகிய மறையவனை முழு
ஞானி யென்று நினையுங்கள் எத்தன்மையாலென்று
கேட்பீராகில்மெஞ்ஞானியர்களுடையஇலக்கணங்களும்
குடிகளும் கூறக்கேளீர் நற்குணங்களும் புலன்களிற்
செல்லாமல் மண் - பெண் - பொன் இவற்றின்மேலுள்ள
ஆசைகளை வெறுத்த இவர்க்கு பணிகளாலும் பொருளா
லும் வேந்தர்களாலும் உம்மாலும் எம்மாலும் உண்டா
கும் யாதுள்ளது சொல்வீர்கள். மேகங்கள் மின்னி
இடித்தாலும் பிரசண்டமாருதம் வீசினாலும் ஏழுகடலும்
நிலைபெயர்ந்து வந்தாலும் தங்கள் நிலைபெயரார்கள் மன
ம் நடுங்கார்கள் அவற்றைக்கண்டு நகைப்பார்கள் தம்மை
ப்புகழ்ந்து நல்ல மணமுள்ள கலவைச்சாந்தை மார்பில
ணிந்தாலும் இகழ்ந்து பேசினாலும் விருப்பு வெறுப்பு
என்பது அவர்களுக்கு ஒன்றுமில்லை பூமியில் உள்ள கிழ
ங்குமுதலிய அவற்றைப் பசிவந்தபோது அமுதம்போல
ப்புசிப்பார்கள் நாளைக்கு வேண்டுமென்று சிறிதாயினும்
வைத்துக் கொள்ளார்கள் ஆகாயத்தில் செல்லுதலும்
பாதலத்தில் புகுதலும் பரகாயப் பிரவேசஞ் செய்தலும்
உள்ளவிடத்தே எண்ணியவைகளை வரச்செய்தலும் முத
லியவைகளாகிய சித்திகளையும் வேண்டார்கள் பெருமை
சிறுமை யில்லாதவர்கள் உன்மத்தர்போல் திரிவார்கள்
நகைத்திடுவார் கைகொட்டி ஆடிப்பாடுவார்கள் இன்றிரு
ந்தவிடம் நாளையிருக்க மனம்பற்றார்கள் கந்தை அன்றி
வேறு உடுக்கார்கள் அப்படிப்பட்டவர்களின் பெருமை
இத்தன்மையதென்று யாவரால் மதிக்கக்கூடும் தலைமயிர்
விரித்து பீலிப்பிச்சங் கரத்திலேந்திப் பாயுடை புனைந்து
தவசிகளைப்போல வீணே விஸ்தரிப்பதும் ஞானமென்று
கந்த ஐந்துவற்ற சீவரம்போர்த்து விளங்குவதும் ஞான
மல்ல தவம்வேண்டாம் நாமே பிர்மம் என்றுபேசுவதும்
மெய்யுணர்ச்சி அல்ல என்றுரைத்தார்.

கேட்டீரோ பரிட்சித்து மகாராஜனே இவ்வாறு
அம்மடமையோர்க்குஅறிவுறுத்தித் துவாரபாலகர்மேலு
ம்கூறுவாராயினர், ஞானியர்போல் பேசுவார்கள் அவர்
கள்போல் வேடம்பூண்பார்கள் சத்கருமம் செய்பவர்களி
டத்துச்சென்று இதைவொழித்துவிடென்பார்கள்இவை
யெல்லாம்பிரமத்தி நிலையென்பார்கள் இவ்விதமாக தாங்
கள் கெடுவதன்றி மற்றவர்களையுங் கெடுக்கும் எண்ணம்
பூண்பார்கள் பொன் முதலியவற்றின்மேல் இச்சையற்ற
வர்கள்போல் துறவுபூண்டு பின்பு பக்குவமுடையோர்க்
குபதேசித்தும் வருவார் அவர்கள் நடக்கையானது ஆற்
றில் அடித்துக்கொண்டுபோகும் கரடியைக்கண்டு ஆடெ
ன்று விரும்பிப் பற்றியபோது அக்கரடியோடே தானும்
அழிந்தகதையொக்கும் மிக்க வறிவுடையவரைப்போல
வும் உடலின் பற்றுகளை விடுத்தவர்போலவும் பேசும்
வழக்கத்தில் அயர்திணைவினையே அஃறிணை வினையாய்ச்
சமையப்பேசியும் அறிவில்லா மயக்கியும் அவர் கைப்
பொருள்களைப் பறிப்பதற்கு இவ்வகை உபாயஞ் செய்
வார்கள் மேலும் மெஞ்ஞானியரா யுள்ளவர்கள் இல்

றைத்திலிருந்தும் உண்டு வுடுத்தும் மனைவி மக்களோடு நெருங்கியிருந்தாராயினும் தாமரையிலைத்தண்ணீர்போல் பற்றற்றவராக விருப்பார். இவர்களுடைய பெருமையை வேதமானது துறவிகளுக்கும்பெருந்தன்மையதாகக்கூறு மிந்த பிராமணர் முழு ஞானியாயிருந்தும் சத்கருமமிழந் தவரல்ல. அப்படிப்பட்ட சத்கருமத்தாலேயே இவரது தேக மினைப்புற்றிருக்கின்றது நூல்களில் திரிலோகத்தில் ஒருஞானி கிடைத்தல் மகா அருமையென்று கூறும் எங் களைத் திருத்தி ஆண்டருள இங்கெழுந்தருளினுரென் றெண்ணுகிறோம். இவர் சிறுபோதில் நமது மகாராஜ ருக்கு நேசரென்பது உண்மையே ஆகும் அந்த நேசத் தாலே ஆசை அதிகரிக்கத் தேடிவந்தனர் அதன்றி நம் அரசரிடத்திலிவர் பெருங்காரியம் ஒன்றுமில்லை. நம்மு டைய பாபவிமோசனம் ஆகுங்கால் நேரிட்டதனல் இவரை யின்று கண்டோம் ஆ ஆ இந்தப் பிராமணமுனி வரைப் பார்க்குந்தோறும் மனதில் சந்தோஷம் பெருகு கின்றது தேகத்தில் புளகம் அரும்புகின்றது கண்களில் ஆனந்தபாஷ்பம் பெருகுகின்றது நாவானது துதிப்பதற் குத் துடி துடிக்கின்றது ஆதலால் நாம் விரைந்துசென்று இப்பொழுதே நமது பெருமானுக்கு இவர் நல்வரவை விண்ணப்பஞ்செய்ய வேண்டு மென்று அறியாமை யினல் யிகழ்ந்துபேசிய மனமுடையோர் வாயடங்கிப் பேசினர்கள்.

ஓ பரிட்சித்துப் பூபாலனே ! இவ்வண்ணம் பேசி நிறுத்திக் குசேலமுனிவர் திருமுகத்தைப் பார்த்துக் கூறுவாராயினர். ஓ ஞானச்செல்வரே ! நீர் இவ்விடம் பெழுந்தருளியதால் குறையெல்லாம் தவிர்ந்தோம்உமது தவப்பெருமையை அஞ்ஞானிகளாகிய இவ்வுலகத்திலு ள்ளயார்அறியப்போகின்றார் இந்தச்சிறியவர்கள்உரைத்த வார்த்தையை உமதுதிருவுள்ளத்தில்கொள்ளாதீர்சுவாமி களே சிறிது கொள்வீரானல் பெருந்துன்பக்கடலில் ஆழ்ந்து விடுவார்கள். கங்கைமுதலிய நதிகளில் ஆடியும் தானங்கள் புரிந்தும் பெறும் பலன்களெல்லாம்உமதுதரி சனம் ஒன்றினலேயே அடைந்தோம் ஐயா வுமக்கு நமஸ் கரிக்கின்றோம் சற்று இவ்விடத்திலிருந்தால் மன்னவ ருக்கு உமது வரவைப்பகர்ந்து காரியத்தை நிறைவேற்று கின்றோம் மென்று வணங்கிக்கோபுரவாயிலினின்று பொன் னற்செய்த மணிகளால் இழைக்கப்பட்ட எழுபத்திரண்டு வாசல்களையுங் கடந்து அங்கு கூடியிராநின்ற மன்னவர் களை நோக்கி, நம்மரசர் வீற்றிருக்கின்றது எந்த விடத் தில் பென்று வினவவும், அவர்கள் துவாரபாலர்களேதம் முடைய நாயகிமாரோடு அந்தப்புரத்தில் எழுந்தருளி யிருக்கின்றாரென விடைகொடுத்தார். அதுகேட்டமாத திரத்தில் சரேலென்று அதிவேகமாகச்சென்றுமாதர்கள் காவற்புரியும் மணிவாயிலின் அருகு வந்து நிற்க, அங்கு விளங்குகின்ற பவளத்தூண்கள் நிறுத்தி வயிரவட்டஞ் சேர்ந்து மற்ற மணிகளால் தூலம் நிறுத்தி கட்டியுள்ள மாடங்களும் நிலாமுற்றங்களும் அவ்விடத்து வரிசை வரிசையாய்த் தொங்குகின்றமுத்துமாலைகளும்மலர்மாலை களும் பொன்னறிமாலைகளும்மணம்வீசிவிளங்கிக்கொண் டிருக்கவும் இது ஸ்ரீ வைகுந்தமேயென்று தேவர்களும் மயங்கத்தக்க மாளிகையையுங் கண்டு சந்திரகாந்தத்தில் அமைந்த தலங்களில் - சந்தனம், - கற்பூரம் - கஸ்தூரி- குங்குமம் இன்னுமுள்ள வாசனை வீசுகின்ற வர்க்கங்களை யுங் கூட்டி பனிநீரிற் குழைத்துப் புரையில்லாமற் பூசி வயிரபேழிய அகிற்கட்டைகளை புதைத்து துத்திநாகப் பளிங்கங்களைப் பரப்பி அதனடுவில் பலமணிகள் அழுத் திய கட்டிலின்மேல் அம்சச்சிறகு முதலியவற்றால்செய்த மெத்தையில் வெண்பட்டு விரித்து மயிலியற்சாயல்மாதர் கள் யிட்ட படுக்கையில் திருப்பாற்கடல்போலுஞ் சிறப் புள்ளதாகப் பொருந்தி அமுதம்போலும் மொழிகளை யுடைய மாதர்கள் கவரிவீசவும், முத்துகளைஓரத்திலழுத் திய சாந்தாற்றியாகிய விசிறி வொன்றை அசைக்கவும், ஒரு குயில்போலும் மொழியினையுடையாள் ஒருத்தி முறுக்காணிகளை முறுக்கிச் சுதிகூட்டி யாழ்வாசிக்கவும், பச்சைகற்பூரம் இலவங்கம் ஏலம் இவற்றைச்சேர்த்து ஒருமாதுவெற்றிலைச்சுருளைநீட்டவும், பூங்கொடிபோலும் ஒரு சந்தரவல்லி பொற்படிகம் ஏந்தவும் சேலை யொத்த கண்களை நிகர்த்த விழிகளையுடைய வொறு பொற்கொடி எங்கள் மனதை உருக்குகின்ற வுருவமுடைய வுமதுவடி வழகை நீரே பாருமென்று குறுநகையோடுகண்ணுடிஏந் திக்காட்டவும், பனிநீர்தெளித்து மணமுள்ள இந்தப்பூச் செண்டை வாங்கி மோருவீரென்று ஒரு தேன்மொழி இமைகொட்டாமல் ஐயன் வடிவழகில் ஈடுபட்டு அவன் மலர்க்கரத்தில் தன்மலர்க்கரம்பரிசிக்கும்படியாய்க்கொடு க்கவும் துடியிடைஒருத்தி பொற்கமண்டல நீரைத்தாங்கி நிற்கவும், மலர்க்குமலுடைய வொருபெண்கள் நாயகம் விரைப்புகையிடவும், ஒருபிறைபோலும் நுதலையுடைய வொண்டொடியாகிய வுருக்கு மணியின் தொடை களின்மீது சிரத்தைவைத்துத் தன்பால் அன்புடை யவர்களுக்குக் கொடுக்கும் மலரடிகளை அழகிய சத்

தியபாமையின் துடைகள்மீது நீட்டியும் நமது நாயகனு கிய சீதாபிராமன் மனமகிழ்ந்து படுத்திருந்தான்.

வாரீர் பரிட்சித்து மகாராஜனே அதிகாலையில் அவ் வாயிலில் நின்ற துவாரபாலர்கள் அங்கே காவல் காக்கி ன்ற மாதர்களை நோக்கி நீங்கள்சென்று உம்முடைய தெய்வநாயகனுக்கு வாயில் காப்பாளர் வந்திருக்கின்ற னர் என்று மொழிந்து வாரும் என்றுரைக்க அது கே ட்டு மாதர்களும் விரைந்துசென்று பகவானிடத்துக் கொஞ்சுங்கிளிபோல உரைத்தனர் அதுகேட்டு ஆதிய ஞ்சோதியாகிய அமலப்பிரான் அவர்களை இங்கு அழை த்துவாருமென்றான் காவல்புரியும் மங்கைமார்களும் தட் சணம்விரைந்து வந்து கூறக்கேட்ட துவாரபாலவர்கள் அனேமமாயிரம் நட்சத்திரக் கூட்டங்களின் மத்தியில் ஒரு பூரணச்சந்திரன் தனது தண் கதிர்கள்பரப்பிக்கொ ண்டு விளங்கிக்கொண்டிராநின்ற வேதமூல காரணனைத் தரிசித்துச் சிந்தையுள்மகிழ்ச்சிபொங்கச் சிரங்களின்மீது வீழ்ந்து தண்டன்சமர்ப்பித்து வஸ்திரத்தை பொடுக்கிக் கொண்டு நிற்க எதிரில் நிற்பவர்களைப்பார்த்துப் பவள வாய்திறந்து நீர் வந்தகாரியம் யாதென்று மாயப்பிரான் கேட்க உரைப்பாராயினர்.

கேளீர் பரிட்சித்து மகாராஜனே கோபால பூபால னாகிய புருஷோத்தமன் யாதுசெய்தி யென்றுகேட்கவும் துவாரபாலகர்கள் எங்களை வழிவழி அடிமை கொள்ளு மையனே வேதமுதல்வனே சந்திரகுலதீபமே காமனும் வேமனும் பூமனும் சாமதகனனும் ஸ்ரீமானே யென்று புகழ்ந்து போற்றியும் காண்பதற்கரிய ஆண்டவனே துவாரபாலகர்க் கதிப்தி ாகிய தோன்றலே ஒரு பிராம ணமுனிவர் அவர் திருநாமம் குசேலர்யென்றார் உம்மோ டு சிறுவயதில் படித்தவராம் உமக்கு உயிர்த் தோழராம் அவர் தேகமுழுவதும் மாமிசம்வற்றி எலும்புதோன்றும் தோற்றமுடையவராக இருக்கின்றார் அவர் தேவரீர்மீது வைத்துள்ள அன்பின் உறுதியைப்பகுத்தறிந்து அளக்க வல்லவர் எம்மைப்போன்றவர்களோ இப்பொழுதுநமது அரண்மனையின் தலைவாயிலின் பக்கத்தில்வந்து நின்றார் இதுவே எமது விண்ணப்பம் என்றார்கள் இவ்வாறு அவ ர்கள்கூறிய வசனங்களைச்செவிகுளிரக்கேட் டருளியஜக தீஸ்வரன் திருமேனிபூரித்து முகமலர்ந்து கருணைபொ ங்கி வழியவும் அவர் ஊைநோக்கி விரைவிற்சென்று இன் று நம் வாயலின் சார்பில் வந்திராநின்ற தவராஜனுகிய குசேலரை இங்கு அழைப்பீராக என்று திருவாய்மலர்ந் தருளினர் துவாரபாலகர்கள் அவ்வண்ணமே பலவாயில் காவல்களையெல்லாங் கடந்து குசேலமாமுனிவரைக்கண் டு அவரடிகளில் நெற்றி நிலத்தில் படியத்தாழ்ந்து ஒ மா தவச்சிங்கமே மறையவர் குலவிளக்கே சன்மக்கடலைச் சர்வேசனுக்களித்த பூர்வ நேசரே உமக்குவந்தனஞ்செய் கிறோம் என்று பற்பலதுதிகளைக்கூறி குசேலரே நாம் சென்றுமது வரலாற்றை யாதவகுலத்திற்கு ஒரு ஆத மன்போலவதரித்தருளிய ஸ்ரீமாதவனைக்கண்டு உரைத் தோம் அப்போது அவர்கொண்ட களிப்பின் மிகுதியை ஆயிரநாவினனுகிய ஆதிசேஷனாலும் மிகுத்துப் பேசுவ தற்காகுமோ அய்யா அந்தணர் பெருமானே அக்காலத் தில் உமது வரவைக்கேட்ட வுடனே தனது மனைவிமார் களோடு மகா விலாசமாக கொஞ்சிக்கொண்டிருந்த இன் பம் முழுவதும் மறந்துவிட்டார் நல்லோர் நட்பைப்பார் க்கிலும் நானிலத்தில் நலந்தருவது ஒன்றுண்டோ அன் றியும் தாய்வரவைக்கண்ட இளங்குழவிபோல அன்புடை யராகி மனத்தில் மகிழ்ச்சிபிறந்து அழைத்து வாருங்கள் விரைவில் என்றனர் நாங்களும் தடையின்றி வந்தோம் இனி காலதாமதமின்றி நீர் வரவேண்டும் இக்கு சிறிது பொழுது செல்லாது நிற்போமானு லவர் தான் இங்கு நேரே வருவார் ஆதலால் நம்பெருமானுக்கு உற்சாகம் உண்டாக எழுந்தருளக்கடவீர் என்று கைகூப்பிநிற்கக் கேட்ட குசேலர் நடந்துசெல்வதை முன்பு அறிவுசிறிது மிராமல் இகழ்ந்துபேசிய மடமக்கள்கண்டு நாம் என்ன காரியஞ் செய்துவிட்டோம் நாம்பேசிய கடுஞ்சொற்களை நமது இறைவன் அறிவாரானல் யாதுதீங்கு நேரிடுமோ என்று நடுங்கி நின்றார்கள்.



ஸ்ரீகுசேலமுனிவர் ஸ்ரீராதாருக்மணி சமேதரா யிருக்கப்பட்ட மணி வண்ணனைக் காணுதல்.

குசேலமாமுனிவர் துவாரபாலர் வழிகாட்ட ஆங் காங்குள்ள சிறப்புகளை யெல்லாம் பார்த்து சந்தோஷ

சாகரத்திலமுழ்கி இந்த நகரத்தைப்பார்க்கிலும் மற்றொருநகரம் பிரமாண்டத்துக்குள் எங்குமிராது என்று மனதிற்கொண்டு பலவாகிய மணிவாசலைக் கடந்து இராஜமண்டலங்களைக்கண்டு ஆரணப்பொருளாகிய நாரணக் கடவுளிருக்கும் அந்தபபுத்தைச் சமீபித்து அவ்விடங்களில் சித்திரமண்டபங்களை அடைந்து அவற்றி லெழுதியுள்ள கண்ணன் திருவுருவங்களை யெழுதி வைத்ததாக நினையாமல் சாட்சாத் ஸ்ரீ பகவானென்று விரைந்து சென்று நெருங்கி ஆலிங்கனஞ்செய்ய நினைத்தமாத்திரத்தில் சுவாமிகளே இவ்வுருவங்களெல்லாம் மாயபிரான்போலச் சிர்திருத்திவைத்த படங்களெனத் தன்னுடன் கூடவந்த துவாரபாலகர்கள் மொழியைக்கேட்டு அகத்தில்தெளிந்து அப்புறஞ்சென்று நடக்கும்போது நம்மை அடிமைகொண்ட வச்சுதன் இன்னும் ஏன்வரவில்லையென்று சூரியன் உதயம்பார்க்குஞ் செந்தாமரையைப் போலவும் சந்திரன் வரவைக்காணும் அரக்காம்பல்போலவும் மேகங்களின் வரவைநோக்கும் மயிலைப்போலவும் தாயின்வரவை யெதிர்நோக்கு இளங்கன்றுபோலவும், ஸ்ரீ தாமோதரனுதன் வரவைப்பார்க்கும் மெய்ஞ்ஞானியைப்போலவும் தருமத்தண்ணீர் வார்க்கும் இடத்தைக்காணும் தாகம் உடையவன்போலவும் மணம்வீசும் தண்டுழாய்மாலையை அணிந்துள்ள அழகன் மறைவன் வரவை பார்த்திருக்க அந்தக் குசேலமாமுனிவர் அரிவையர் காவல்செய்யும் அந்தப்புரவாயிலையுங் கடந்து அளவற்றமங்கைமார் சூழ்ந்திருக்கும் பிர்ம உருத்திராதியர்களும் அணுகுதற்கு அருமையான அவ்விடத்தை அடையும்போது தினந்தோறும் பசிப்பிணியால் வருந்துகின்ற ஓர் தரித்திரன் புதையலைக்கண்டாற்போலவும், உண்ணும் உண்டியைத் தவிர்ந்து நிற்கும் ஒருமனிதன் திருப்பாற்கடல் அமிர்தத்தைக்கண்டாற் போலவும், உஷ்ணத்தால் விடாய்த்தவொருமானிடன் கற்பகத்தருவைக் கண்ணுற்றாற்போலவும் ஜகமாயையில் அழுந்திய ஒரு அஞ்ஞானியானவன் பிர்ம்மாசாரியனைக் கண்டதுபோலவும் ஆதித்திருவருள் என்கிற மூலப்பிரகிருதியாகிய ஸ்ரீ பராசக்தி யென்னும் பெரிய பிராட்டியாருக்குத் தனது திருமார்பை யீந்தருளிய ஸ்ரீமணிவண்ணனாகிய கண்ணனைச் சூரிய சந்திரர்களாகிய திருவாழி யாழ்வனையும் ஸ்ரீபாஞ்சசந்நியப் பெருமானையும் வலத்தும் இடத்தும் தாங்கிய மூலகாரண ஸ்ரீ பரப்பிரமமாகிய வாசுதேவனைக் கண்ட மாத்திரத்தில் உவகைபூத்து அதிசீக்கிரமாகச் செல்லக்கண்ட புருஷோத்தமனாகிய ஸ்ரீ புண்டரீகாட்சன் பஞ்சசயனத்தை விட்டு எழுந்து அணைகடந்த வெள்ளம்போல் அன்புபெருக்க குசேலமுனிவர் எதிர்சென்று அவரது பொன்னடியில் வணக்கி யெழுந்திருந்து சரேலென்று ஆலிங்கனஞ்செய்துக்கொண்டார்.

கேட்டீரோ பரிட்சித்துப் புரவலனே பூமானாகிய ஸ்ரீமான் அந்தக் குசேலருக்கு உயிர்த்தோழனென்று நிலவுலகத்திலுள்ளோர் கூறும்வார்த்தையை நிலைநிறுத்தியருளினார் மேலும் இந்நாள் நான் பாக்கியத்தை யுற்றேன் யான் பாக்கியத்தையடைந்தேன் நான்செய்த கருமம் இன்று பலித்தது அறத்தின் பயன் இன்றைபொழுது கிடைத்தது என்று சகல பாக்கியாதிபதியாகிய சர்வேஸ்வரன் திருத்தாண்டவமாடி நின்றான் அவனது மாயையின் வல்லமையை யாவர்தான் அறியவல்லவர்கள், உடனே அங்குள்ள ஒரு வுப்பரிகையில் அந்தணர் பிரானாகிய குசேலமுனிவரை யெழுந்தருளப் பண்ணிக் கொண்டுபோய்ப் பொற்குடத்தில் நிறைத்துவைத் திருக்கும் புதிய திருமஞ்சனநீரால் அபிஷேகஞ்செய்வித்து ஒற்றாடையால் துடைப்பித்து தவட பீதாம்பரத்தை அணிவித்துக் கர்ப்பூரம் கஸ்தூரிகலந்த சந்தனக்குழம்பை அவரது திருமேனியிற்சாத்தி முத்துக்களாகிய அட்சதையும் இறைத்து மலர்மாலையணிந்து மணமுள்ள தூபங்காட்டி தீபஞ்சுற்றி திருஷ்டிகழித்து அமிர்தம்போன்ற அறுசுவை உணவும் உண்பித்துத் திருவாயையும் கரசரணாரவிந்தங்களை அலம்பித் தாம்பூலஞ் சமர்ப்பித்து இனிய வார்த்தைகளாக வுபசரித்துத் தனது பீதாம்பரம் விரித்தபடுக்கையில் ஏத்தி அன்பு பெருகப்பெருக அவரதுமுதுகைத்தடவிக் கொடுத்தும் பின்னரும் தாமரை மலர் போன்ற தமது கரங்களால் கவரிவீசி ஆ-ஆ அடியேன் நிமித்தமாக வழிநடந்து இளைத்தனவே உமது திருவடிகள் இரண்டும் என்று மிகவும் மகிழ்ச்சி அதிகரிக்க மிருதுவாகத் திருவடிகளைத் தடவிக்கொடுத்து வாய்பொத்தி நின்றான். வாரீர் பரிட்சித்துப் பூபாலரே இவ்வகைபலவுபசாரங்கள்செய்தும் தன்னைஅறியாது அந்தப்பரமாத்மனுடைய பாதாரவிந்தங்களில் தனது இதயகமலத்தைச் செலுத்தியிருந்தார் பித்தர் பாலகர்கள் பிசாசு பிடித்தவர் ஆகிய இவர்களாறு குணத்தை ஒத்துப் பரமபாகவத ஞானயோக சிகாமணிகள் இருப்பார்களென்று வேதங்கள்முறையிடுவதற் கொப்பத்தனது சித்தத்தைவிட்டுஸ்ரீதரன்திருவடிக்கமலங்களை அகலாது தியானஞ் செய்து பரமஞானமிர்தத்திற் புனைந்து அசைவற்று மௌனமா

யிருந்தார் ஸ்ரீ குசேலமுனிவர் பூசிய குளவியின் ஓசை யைத்தவிர வேறே ஒன்றின் சப்தத்தையம் அறியாத புழுவைப்போல இராநின்ற இந்தப் பரம பாகவதர் தனது மனையாளின் சொற்படி நிலையில்லாத பொய்ச் செல்வத்தையோ விரும்புவார்.

ஓ பரிட்சித்து மகாராஜரே! இந்தக் குசேலமா முனிவர் எம்பெருமாள் திருவுருவைத் தரிசித்தும் மர கதமலைபோன்ற திருத்தோள்களில் அசையும் வனமாலை யின் கணத்தை மோந்தும், நான்முகற்கு நான்குமறை களைப் பகர்ந்த திருவாய் மொழிகளைக் கேட்டும், மழை வண்ணத் திருமேனியைப்பரிசித்தும், பிரகலாதாழ்வான் முதலிய பேரறிவாளர் புகழ்ந்துரைத்தவையும், உபநிஷ தங்களால் பொருள் அறியப் படாததும் ஆகிய திரு நாமங்களைத் துதித்தும், தனது ஐம்பொறிகளும் பேரா னந்தம் உற விளங்குகின்ற குடத்தினுள் தீபம்போலப் பிரகாசித் திருந்தனர். நீரில் உப்பைப்போலவும், கற்பூர தீபம்போலும் சுத்தசாத்வீக சுரூப பரம்பொருளாகிய சுவாமியிடத்துத் தன்மனமானது பசுமரத்தாணியைப் போலக் கலந்திருந்தால் இந்தப் பிரபஞ்ச வாழ்க்கை யாகிய வியாதி ஒழிந்துபோக அந்த ஸ்ரீ வாசுதேவனு டைய திரிமூர்த்தியாகிய கண்ணபிரானது திருவுருவமும் தோன்றாது நிற்க இவரது வரவின் செய்கையைச்சொல் லாததற்கு முன்னே உணர்ந்த பரமாத்ம சொரூபியாகிய பகவான் அவரது திருமுக மண்டலத்தை நோக்கி வேத வேதாந்தங்களை யெல்லாம் உணர்ந்த மகாதவ சிரேஷ் டரே! உம்முடைய தரிசனத்தால் தேகம் பூரித்தேன் ஐயா அந்தணரே! அமரர்களுள்ளும் அந்தணருள்ளும் அரசருள்ளும் நான்பெற்றபேறு யார்பெற்றார்கள், இனி யார் பெறுவார்கள், நீர்இப்போது என்னிடத்தில்வைத்த தயைபோல வெப்போதும் வைக்கவேண்டும். ஓ சாந்த குணமுடையவரே! நான் எப்போதும் உம்மை நினை யாத காலமில்லை இப்போதும் நினைத்துக்கொண்டு தான் யிருந்தேன் உமது சினேகத்தைப் பார்க்கிலும் மற்றொன் றில் எனக்கு பிரீதியில்லை ஐயா வேதமுதலிய கலைகள் முழுமையும் உணர்ந்து தருமாதருமம் பார்த்து இது நன்று இது தீது என்றுணர்ந்து தாமறிந்தது போலவே பிறர்க்கும் அறிவுறுத்தும் அறிவுடையோர் நேசத்தை மறப்பவர்க ளிப்பூமண்டலத்தில் நாயினும் கீழ்பட்டவர்க ளாவார், நல்லவர் சொல்லில் விருப்ப முறுவதும் அவர் களைக் காண்பதுவும் அவர்களுக்கு ஒருதவி செய்வதும் அவர்களைப் புகழ்வதும் நன்றென்று ஸ்ரீ பாஞ்சராத்திர ஆகம முதலியவ றிற் கூறப்பட் டிருக்கின்றது ஆன் றோர்பொன்னுள்ளவன் பூமியுள்ளவன் புத்தியுள்ளவனை னும் நட்புடைய னல்லனுயின் அவன் பயனுடையவனல் லன் ஒருபொருளு மில்லாதவனுனாலும் சினேகமுடைய னுனால் அவனுக்கில்லரத பொருளும் அவற்றால் உண் டாகிய பயனும் உண்டோ பிரியரே பேயோடு பழகினும் பின்பு அதை விட்டு பிரிதல்பிரயாசையென்று மேலோர் உரைக்கின்றார். மேலோர்க ளானாலும் முன்செய்த தவ மிருந்தாலன்றி நல்ல சினேகரைப் பெறுவாரோ நேசம் அவ்வளவு அருமையாயிருக்க இலேசாக வொருத்தனுக் குக்கிடைத்தால் இகழ்ச்சி செய்வார்களோ ஒருவனுக்கு நல்லசினேகமிருந்தால் நல்லவழியில் தன்னையும் நடப் பிக்கும் சுவர்க்காதி போகங்களிலும் மனஞ்செல்லாது சாஸ்திரமுணர்ந்த சாந்தகுண முடையவருடைய நடத் தை காணக்கிடைத்தலும் அரிதாகும் அவ்வித நண்பே தேடக்கிடையாத திரவியமாகும் மேலும் சித்திக்கும் முத்திக்கும் வித்துமாகும்.

இஃது இருக்கட்டும் உமக்கு திருமணம் ஆயிற்று உமதுதேவியார் நற்குண நற்செய்கையை யுடையவராயி ருக்கின்றாரோ உம்மை தன்னுயிர்போல் பாதுகாக்கின் றாரோ உம்முடைய வரவுக்கு ஏற்ற செலவு செய்பவரா உமது சொற்படி நடப்பவரோ என்ன தரித்திரம் வந்த போதிலும் அக்கம் பக்கத்தார்க்குத் தமது குறையைச் சொல்லாதவரோ இதுவரையிலும் பலபுத்திரர் பிறந்தி ருக்கவேண்டுமே தகப்பன் என்னதவத்தைச் செய்தா னே என்னும் பிள்ளைகள் உனக்கு எத்தனை உண்டு அப் பிள்ளைகளுக்கு அழகான ஆடை முதலியவைகள் வாங் கித்தந்தீரோ உபநயனம் முதலிய சத்கருமங்கள் செய்து முடித்தீரோ உமது தேவியார் மகிழ புத்திரர்களைக் கற் றுணர்ந்தோர் புகழக் கலைகற்பித்தீரோ ஸ்நானம், சந்தி, ஜபம் முதலியவைகள் நன்றாக நடக்கின்றனவா இவைக ளைக் குறைவரச்செய்ய உமது தேசம் செவ்வையாக இரு க்கின்றதோ வேதோப நிஷதங்கள்|வைத்த தியானம்சித றாமல் ஒருவழியே நின்றதா உமது ஊரிலின்று எமதி டத்திற்கு வருபவரால் உமது க்ஷேம சமாச்சாரங்களை யெல்லாம் நேற்றைய வரையிலும் விசாரித்துக் கொண் டிருந்தேன் வெகுநாள் சென்றபின்பு இப்பொழுது கூடி னோம் சினேகமில்லாதவர் நெருங்கியிருந்த போதிலும் நட்புடையவராகார். கூடிப் பிரியாதவர்கள் தூரத்தே யிருந்தபோதிலும் அன்பு நீங்கார் ஐயரே நீர் குடியிருக் கும் அழகியநாட்டில் அதிகமழைபெய்யும்நாம் இருவோ ரும் கல்விச்சாலையில் வாசிக்கும்போது பேசிய வசனங்க ளெல்லாம் ஞாபகமிருக்கின்றதா ஒருநாள் நமது குருநா

யகனுகிய சாந்தீபமுனிவருடைய பத்தினியாகிய நமது தாயானவள் நம்மைப்பார்த்து அமுது சமைப்பதற்காக எரிகருப்பு கொண்டு வாருங்களென்று கட்டளையிட்ட வுடன் உடனேபோய் விறகொடித்துக் கட்டியெடுத்துக் கொண்டபோது ஆகாயத்தில் மேகங்கள் கவிந்துபரந்து மின்னிக் குமுறியிடித்து மழை தாரையாக விடாதுபெய்ய அப்போது நிற்கயிடமில்லாமல் குருந்தம் புன்னைகொன்றை முதலிய அடிகளில் திகைத்து நின்றேம்.

அப்போழ்து நமது தேகமுழுவதும் நனைந்து விறகுகட்டும் நனைந்து குளிரில் நடுநடுங்கியு மிருந்தோம் மேலுமேலும் விடாமழை பேய்ந்ததினுல் வெள்ளம் பெருகி முதலில் காலளவாய் பின்பு கணைக்கால் முழங்கால் அரையளவாயினது அதுகண்டு இன்னும் மாரிவிடாமல் பெய்கின்றதே நாமென்ன செய்வோமென்று நாம் உள்ளத்தில் யோசித்துக்கொண் டிருக்கும்போது ஒருகுளிர் காற்றுவந்து கடுகிச் சுழன்றடித்து அதன்பின்பு வருவதற்கு வழிதெரியாது மயங்கியிருக்குங் காலையில் சந்திரோதயமாயிற்று அன்றிரவெல்லாம் அக்கானகத்தே தங்கியிருந்து சூரியவுதயமான வுடனே நாம் ஊர் நோக்கி வரும்போது நமதாச்சாரியரான சாந்தீபமுனிவர் நம்மைத்தேடி ஐயோ நமது மாணுக்கர்களாகிய பிர்மாச்சாரிக ளிருவரும் எங்குசென்றுர்களோ என்னபாடு பட்டார்களோ என்று இரங்கி வந்துகொண்டிருக்கும் போது நாம் கண்டு வணக்கஞ்செய்து நிற்கக்கண்ட நமது குருராயர் நம்மைப்பார்த்து சிஷர்களே என்னிடத்துக் கற்கும் மாணுக்கர்களில் உம்மைப்போன்ற புனிதர்கள் எவரிருக்கின்றுர் என்னிமித்தம் நீங்கள் மழையில் நனைந்தீர்கள் அதனுல் வருத்தமிகக்கொண்டீர் இதுவேயெனக்குக் குருதட்சணையாகும் என்றுரைத்தும் மேலும் உங்களுக்குக் கல்விப்பொருள் வாய்த்ததுபோல்செல்வப்பொருளும் கற்புடைய மனைவியரும் மழலைப்பிள்ளைகளும் நல்வுறவினர்களுடன் தீர்க்காயுசும் உண்டாகக் கடவதென்று ஆசீர்வதித்து தமது கிருகத்திற் அழைத்துப் போயினரே இவையெல்லாம் உமக்கு ஞாபகம் இருக்கின்றனவா சகல பற்றுக்களையும் ஒழித்தமேலோரே பலநாள் சென்று என்னை நாடிவந்ீரே யென்னகொண்டு வந்தீர் அதனை இப்பொழுதுதருவீராயின் சாலவும் நன்று நான் தின்பதற்குப் பட்சணங்கொண்டு வருவீரென்று என்மனம் அதனையே நாடிக்கொண் டிருக்கின்றதென்று கபடநாடக சூஸ்திராவதாரியாகிய கண்ணபிரான் வினவியருளினர்.

வாரீர் பரிட்சித்து மகாராஜனே இவ்வாறு வினவியமது அரும்பெற வடிகளாகிய நந்ததநந்தனன் சிறிது நின்று மீண்டும் ஒ நட்பினரே நீர் சிற்றுணவு இல்லாமல் வருவீரோ உமது தேவியாரும் வெறுங்கையோடு போய் வாரும் என்பாரோ? எதோ நீர் கொண்டுவந்ததை அளிப்பீரென்று செந்தாமரை மலர்போன்ற தனதுகரத்தை நீட்டக்கண்ட குசேலர் நிதானித்துப் பாலன்னம் என்பவர்க்கு புளித்த காடிச்சோற்றைக் கொடுப்பது போல இம்முழுமுதற் கடவுளுக்கு அவலையா நாம்கொடுப்பதென்று சும்மாவிருந்தனர். அதுதெரிந்த சர்வக்யன் குசேலன் தனது பக்கத்தில் பலநாள் கண்ட கந்தையில் முடித்துவைத்துக் கொண்டிருக்கும் சிறிது அவல் மூட்டையைக்கண்டு முடியை அவிழ்த்து நோக்கி எனக்கு நன்றாக இன்றையதினம் வாய்க்காத அரும்பொருள்வாய்த்ததென்று அண்டசராசரங்களை யெல்லாம் பிரளயகாலத்தில் விழுங்கிய ஸ்ரீபரஞ்சோதியாகிய கண்ணபிரான் தனது திருவுதரத்திட்டு குதப்பி இதுநல்ல உருசிகரமாகவிருக்கின்றது நூதனமாக இப்போழ்துதான் இடித்ததாக தோன்றுகின்றது கடையில் வாங்கினுல் இப்படி நெய்மணத்துக்கொண் டிருக்குமோயென்று அடுக்குஉறிகளில் ஆய்ச்சிமார்கள் சேர்த்துவைத்திருந்த வெண்ணெயையும் தயிரையும் வாரியுண்டதுபோல ஒருபிடி அவலையும் உண்டு இதற்கு வெல்லஞ்சேராமலே யிவ்வளவு சுவையுள்ளதாயின் இதன் அருமை பெருமையை நம்மால் சொல்லத்தரமோ என்று தவறி கொடிற்றில் ஒதுக்கப்பட்டிருந்த சிலவூரில் சுவைகொடுக்கச் சுற்றிருத்தி மென்றுமென்று அருந்தும்போது பலதரம் சிரத்தை அசைத்தும் பெரிய பிராட்டியாருடைய குமுதவாய் தேனூறலைச்சுவைத்து வுண்ணும் பவளவாயால் ஐயா குசேலரே நமக்கு இவ்வவல் மிகவிருப்பமென்று முன்னம் யாவராயினும் சொல்லக்கேட்டிருக்கின்றீர்களோ என்று முன்னுள் அமரர்களுக்கு அமிர்தத்தை வுண்பித்த அயன் அன்பராகிய குசேலருடைய அன்பையுங்கூட்டி உண்பதுபோலத் தின்றுவிட்டு மற்றொரு பிடியெடுத்துத்தனது வாயிலிடப் போகுங்காலத்தில் உருக்குமணிப் பிராட்டியார் வெகுபரபரப்புடனே ஒடிவந்து பரமஞானிகளுடைய இருதய தாமரையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய கரகமலத்தை தனது நாயகனென்று சுதந்தரத்தால் தனது கைத்தாமரையில் பிடித்துக்கொண்டாள்,

இவ்வாறு நமது திருத்தாயாராகிய உருக்குமணிப் பிராட்டியார் ஒரு ஆண் யானையைப் பெண் யானை

யானது தனது துதிக்கையால் சுற்றிக் கொள்வதுபோல் பற்றிக் கொண்டனள் என்று ஸ்ரீ சுகப்பிர்மமுனிவர் உரைத்த அளவில் இப்பரதகண்ட பூமண்டலத்தை ஆளும் பரிட்சித்துமகாராஜர் கைகூப்பித்துதித்து வினவு வாராயினர், ஓ தேசிகரே! இப்பொழுது தேவரீர் எடுத்து உரைத்தது மகா அற்புதமாயிருக்கின்றது கற்பிலக்கண சாத்திரத்தில் கற்புடைய மனையாள் தனது நாயகனுக்கு வேண்டிய பணிவிடைகளை அவன் விரும்பியபடி செய்வதே அல்லாமல் கணவன் மகா இஷ்டத்தோடு உண்ணும் உணவைத் தடுக்கும் காதலியின் ஒழுக்கமும் நல்ல இயல்பினையடையா தென்று கூறுகின்றதே பாற்கடலிற் பிறந்த விஷபத்தை சிவபெருமானிடம் தேவர்கள் வருந்தி முறையிடுங் காலையில் அவர்களுக்கு க்ஷேமகர முண்டாகப் பருகிய காலத்தில் உமாதேவியாரும் தடுத்த தன்றோ பிணியால் வாதைப்படுகின்ற நாயகன் ஆயுள்வேதியர் தடைசெய்த அபத்திய வுணவுகளின் மேல் ஆசை கொள்வானுயின் அப்பொழுது மெல்லென இது தீது யென்று உரைத்தலும் மகா அருமை ஆயிற்றே, நாயகனுக்குப் பணிசெய்வதில் ஊழியக்காரியைப் போலவும், அறிவில் மந்திரியைப் போலவும், அன்பில் தாயைப் போலவும் அன்றோ இருத்தல் வேண்டும். அவ்வண்ணமிருக்கத் தனது கணவன் அருந்துவதைத் தடை செய்து என்னசொல்லுமையா என்று வினவச்சொல்லுகின்றார். ஓ புரவலரே! ஸ்ரீ மகாலட்சுமியின அம்சத்தில் அவதரித்து இலக்கணங்க ளெல்லாம் அமைந்து புகழ்பெற்ற சவுந்தரவதியாகிய உருக்குமணிப் பிராட்டியாரும் நாதனுக்கு மனவருத்தம் வரச்செய்வாரோ? பல சாஸ்திரங்களையும் உணர்ந்த அந்த அந்தணர்க்குப் பெருமகிழ்ச்சி யுண்டாக ஒழியாக பெருஞ் செல்வம் இவ்வுலகத்தில் உண்டாகவேண்டுமென்று ஸ்ரீபரந்தாமன் தனது திருவுள்ளத்தில் சங்கற்பித்து ஓர் பிடி அவலெடுத்து திரு அமுது செய்தாரென்று அறிந்து கொண்டு இவ்வொருபிடி அவலுக்கே பெருஞ்செல்வம் பொருந்துமானல் மீட்டும் ஒருபிடி யெடுத்து மனமகிழ்ந்து தின்றால் பலநாளும் அம்முனிவர்க்கு அடிமையாய் அவர் சொல்லும் பணிவிடைகளைக்கடவாமல் திருநாதன் அடைய வேண்டிமுடியும் என்று தனது உள்ளத்தில் அந்தக் கருத்து பிறக்க இயற்கைமனம் பொருந்திய குழலையும் குழலிசை யாழிசை குயில்வோசை தேன்கலந்த அமுதின் சுவை யிவற்றைப் பழித்த மொழியையு முடைய அவ் வேதவல்லி வேதநாயகனது திருக்கரத்தைப்பிடித்துத் தடுத்தனள். அன்றியும் அத்தொழுகுலத்தானது அழகிய கிருகத்திற்கு வேண்டுவதுசெல்வம் ஒன்றுதானே அவர்க்குப் பணிவிடை செயயவேண்டிய தில்லையே ஆதலினல் தன்னுபகனுக்குப் பொருந்தியபடி செய்தாரே அல்லது மற்றென்று செய்தாரோ? எப்பெருமானும் தன்பால் அன்புடையார்க்கு இது அருளத்தகும் தகா தென்று தன் பட்சத்திலாயினும் எண்ணத் தக்கரோ? இவ்வுலகத்தில் ஒரு மகானுபாவன் தன்னை யறியாது சிறிது கர்மம் செய்தானுயினும் சுவர்க்கத்தில் பெரும்போகத்தை அனுபவிக் கின்றானுனல் குசேலருக்கு இது ஒரு பெரிதோ பகவானுடைய திருவடியை மறவாது வைத்திருக்கும் இருதயமும் சேஷ்டைகளற்ற பொறிகளும் உடைய மாதவரல்லவா என்று மீண்டும் உரைப்பாராயினர்

ஓ வேல்வேந்தே! தனது தேவியால் தடைபட்டு நின்று மிருந்த அவலை அவரது கந்தையில் தானே முடிந்து விட்டு முன் தின்ற வொருபிடி யவலிலேயே மிகு மகிழ்ச்சியுடையவராய் முனிவரைப் பலதரம்துதிசெய்து உபசரித்து அன்று இரவில் பள்ளி அலங்கரித்து உதவ அதில் பள்ளிகொண்டு பகவானுடைய திருமாளிகையில் அந்தப்புர வேடிக்கையைக் கண்டதனல் பேரானந்தம் ஒழியாமல் குடிகொள்ளவும் நித்திரை செய்தனர். மறுநாள் அருணோதயத்திற்குமுன் நித்திரை தெளிந்தெழுந்திருந்து பல கடமைகளையும் முடித்துக்கொண்டு தெய்வநாயகனை ஒன்றுங் கேளாமல் பொருள்மிகுதியும் பெற்றவர்போல நினைந்து தன் ஊருக்குப் பிரயாணப்பட அப்போது ஆதிமூர்த்தியும் தன் அணிவாயில் வரையினும் வந்து ஆர்வமேலிட்டு அந்தணரது அடியில் வீழ்ந்து வணங்கிட மகிழ்ந்து ஆசிகூறித் துவாரபாலகர் வாயிலைக் கடந்து அப்பால் செல்லும்போது பகைவரது மணிமகுடங்களை மிதித்துக் கலங்கச் செய்கின்ற வீரகண்டந் தரித்த திருவடியையும் துளபமாலையை யணிந்த திருத்தோள்களும் உடைய தேவர்பெருமானர் கண் களிகூர்ந்து தமது அரண்மனையின் திருமாளிகையின் அந்தப்புறத்தில் செல்ல அங்கிருக்கும் மின்னிடை மாதர்களும் கண்டு அவர்களிற் சிலர் மதிவதனங்களைச் சாய்த்துக் கொள்பவர்களும், சிலர் உதட்டைப் பிதுக்குபவர்களும், தோழிமார்களை வெருப்பவர்களும் சிலர் முருக்குத்திரும்பி நடப்பவர்களும் ஆகி நன்றுநன்று வந்தபிராமணர்க்கு ஒன்றுங் கொடாமல் மகா பிரீதியுடைய நேசனைப்போல ஊாரறியப்போய் எதிர்கொண்டு காலில்வீழ்ந்து அலங்கரித்து அவர்கொண்டுவந்த அவலைமாத்திரம் வாங்கித் தின்று போவென்றுரைத்தார் பார்த்தீர்களா யென்றும்

சில மாதர்கள் பார்த்தீர்களா இந்தப் பார்த்தசாரதி பண்ணிய வேலையை அனேக மகுடமாந்தாதிக ளெல்லாம் தமது சேவைக்குக் காத்திருக்கப் பாராதவனாய் ஒரு பார்ப்பானையெதிர்கொண்டு பணிந்து கொண்டாடி யாதுந் தாராமல் அந்தோ வீணாகப்போவென்றான் இப்புருஷோத்தமன் கீர்த்தியில் மகா மேன்மை பெற்றவர்தான் என்றும், சில மடந்தைமார்கள் அம்மம்மா அந்த மாயவன் தன்பால்வந்த ஏழையாகிய பிராமண அதிதியைக்கண்டவுடனே பூரண அன்புடையவனைப்போலக்கட்டி அணைத்தான் தொழுது தொழுது முகமன் கூறினான் பள்ளிமீதிருத்தினான் புகழ்ந்தான் முடிவில் ஒன்றும் கொடுத்திட்டவன் அல்லன், பொழுது விடிந்தும் விடியா தற்கு முன்னே உமது ஊருக்குப் போய்வாரு மென்றான் இது நல்ல நாடகந்தான் என்றார்கள். சில பூவைமார் ஐயோ எளியன் பாவம் இத்தனை தூரம் என் வந்தான் வாயாரத் தித்திக்கப் பேசிக் களிகூர்ந்து ஓர் காசும் ஈயாமல் செலுகவென்றான் ஆதலின் இனி நல்லோர் இவன் திருவாய்மொழியை உறுதியாகக் கொள்ளார்கள் என்றார்கள். சில பாவைமார் இவ்விப்பிர குலோத்துங்கன் மகாபிரயாசையோடு காடு நாடு கடந்து நெடுநாளாக உள்ள வறுமை ஒழியுமென்று மிக ஆவலோடு எண்ணங் கொண்டு வந்தார் ஐயோ பாவம் இங்கு வொருவேளைச் சோற்றுக்கே வழியில்லை இதுதானோ ஜனக ஜனந்தனாதிகளாகிய மகான்கள் புகழும் புகழ்ச்சி யென்றார்கள். சில மங்கையர் குன்று குடையா யெடுத்த இந்தப் பாலகிருஷ்ணர் பரமதயாளுவைப்போல எதிர் சென்று எனது உயிர்த் தோழரே யென்று நயமொழிபேசி அவர் கொண்டு வந்ததையும் வாரித்தின்று விட்டு வாயலின் அளவே விட்டு விட்டு நடந்து போகச் செய்தாரே இந்தக் கருணைக் கடலாகிய கண்ணபிரானுக்கு என்ன குறைவு யென்றார்கள். சில அரிவைமார் இந்த அந்தணர் முற்பிறப்பில் தவஞ்செய்தவர் அல்ல வென்று நினைக்கின்றோம் எனெனில் கங்கா ஸ்நானம் செய்தும் கர்மம் தொலையாதது போல லட்சுமிபதியைக் கண்டும் கால்நடையாகச் செல்வதைப் பாருங்கள் என்றார்கள். சில தெரிவைமார் சரிதான் அண்டங்களை யெல்லாம் வாரியுண்டருளும் ! பெருவாயாகிய இந்த ஜகநாதருக்கு அதுவும் போதாதென்றல்லவோ அந்த சுவர்க்காதி பதியாகிய இந்திரனுக்குப் படைத்த ஆராதனைப் பொங்கல்களை யெல்லாம் அமுது செய்தும் ஆயர்பாடி கிருகத்தில் அனைதயிர் தாரி உண்டும் யாராவது யாசகர் வந்தால் அதையும் பலாத்காரமாக வாங்கித்தின்பது என்றார்கள், சில காரிகைமார் இந்த தேவதேவன் வெளியில் பார்த்தால் மாத்திரம் பார்ப்பவர்களுக்கு அகண்ட அயிஸ்வரியவானைப் போலக் காணப்படுகின்றானேயல்லது உள்நுழைந்து பார்த்தால் எல்லாம் வெட்ட வெளிதான் என்றார்கள். சில மடந்தமார் ஆம் ஆம் அக்கைமாரே ! உலகாள்பவர்கள் தேவிமார்களானாலும் அவர்கள் கைகளில் தரிப்பது மண்வளையல் தானே யென்றார்கள். சில பேதையர்கள் இந்த மறையவன்மேல் வைத்த தயையெல்லாம் அறிந்தோம் கையில் அணிந்துக் கொண்டிருக்கும் கங்கணத்தைக் காண்பதற்குக் கண்ணாடியும் வேண்டுமோ ஒருவேளை அன்னம் உண்டது மலையைத்துளைத்து எலியைப் பிடித்ததுபோலாயிற்றென்றார்கள். சில வனிதையர் இந்தப் பிராமணோத்தமருடைய மனைவியும் மைந்தர்களும் வருவார் பொன்னொடும் பொருளொடு மென்று வழிபார்த்துக் கொண் டிருப்பார்களே இவர் கந்தையன்றி வேறொன்று மில்லாது செல்கின்றாரே இதுதானோ உலகரட்சகம் என்றார்கள். சில மாதர்கள் எவ்வளவு செல்வமிருந்தாலும் கொடுக்க மனம் வருமோ இந்தக் கபடநாடகனுடைய பேச்சினால் மதிமயங்கி மரியாதையாய் ஒன்றுங் கேளாமல் மறையவரும் பித்தம் பிடித்துப் போகின்றார் அவர் நேசரென்று வாயாற் பந்தலிட்டுத் திரும்பி வருகின்றார் இந்தப் பூபதியும் கண்டீர்களோ இப்படிப்பட்ட சிநேகம் இருந்தென்ன இராமற் போய்தான் என்ன என்றார்கள், சில மடமாதர் இந்த வேதியர் என்ன நினைத்து வந்தாரோ நமது இராஜகோபாலர் யாது கருதியிருக்கின்றாரோ பகவான் செய்யும்மாயை யார்தான் அறிவார்கள் நாம் வாயில் வந்தவற்றைப் பேசுவதனால் பயனென்ன அப்படி நாம் பேசினாலும் நமக்கு அறிவாகுமா இவ்விஷயம் தம்மையுட தலைவனையும் உணர்ந்த ஞானிகளுக்கே புலப்படா தென்று வேத புருஷனே உரைப்பானானால் நம் தரத்தில் ஆகுமோ என்றார்கள்.

ஓ பரிட்சித்துவே ! இவ்வண்ணம் மாதர்கள் பல வாறாகப் பேசிக்கொண் டிருக்கும்போது குசேலமுனிவர் துவாரகாபுரியின் நெடுந் தெருவுகள் பல கடந்து சென்று கடலையும முன் போலத் தாண்டித் தான் வந்த வழியை யடைந்து நடக்கும்போது ஸ்ரீ கண்ணபிரான் திருவருளினாலே விரத முதலான வைகளாலே மிகவும் இளைந்து மெலிந்த தனது திருவுளம் பூரித்துப் பழங்கந்தையும் பீதாம்பரமாகிக் கண்டத்தில் அணிந்திராநின்ற துளபமாலை இரத்தின மாலையாய் விளங்கிற்று, மேலும் காதில் நூதனமாக மகர குண்டலங்களும் கையில் உள்ள பவுத்திரம் கனையாழியும அதிபராக்கிரமும் மன்மதனும் இச்சிக்கும்

கட்டழகும் ஆகி வழிநடந்த இளைப்பும்போய் மகிழ்வடைந்து செல்லச்செல்ல வெயில் குளிர்ந்து தென்றற் காற்று வீசக்கண்டு இது சர்வாந்திரியாமியாகிய ஸ்ரீ கோபால சுவாமியின் திவ்விய சங்கற்ப மென்றறிந்து கொண்டனர் பின்னர் யானை இரதம் குதிரை காவலர்கள் உடைய பல மன்னர்கள்வந்து எதிர்கொண்டு தாள்களிற் பணிந்து துதித்து அன்பில் வழிபாடு செய்து முனிராஜரே! நீவ்விரதத்தின்மேல் எழுந்தருள வேண்டுமென்று வேண்டிநிற்கப் பொன் மயமாகிய மகம்மேருவின்மேல் உதயசூரியன் உதித்தாப்போல ஒரு பொற்றேர்மேல் ஏறியருளினர். அப்போது விண்ணவர் இந்த மண்ணுலகம் மறைந்து போம்படி. ககனத்தில் மலர்மாரி சொரிந்து களித்து ஆர்த்தார்கள் ஆகாயதுந்துபி முழங்கிற்று இவ்வோசைகள் அண்டகோளகை யதிரும்படி பேரொலி செய்தன. அன்றியும் அந்தரத்தில் அரம்பையர்கள் மின்னல்கள் நடிக்கின்றாற்போல நடித்தனர். மேலும் பரமாத்மாக்களாகிய பிரகலாதாழ்வான் · பாராசரபகவான் சவுனக முனிவர் வேதவியாசர் அம்பரீஷன் புண்டரீகர் முதலியோர்கள் விரவி நின்று துதித்தனர். இவ்வாடம்பரங்களையெல்லாங் கண்டு அச்சமுற்று இது ஆதிகேசவனாகிய ஸ்ரீ வேதநாயகனது திருக்கூத்து யென்று தமது திருத்தாமரையில் அப்பரமபுருஷனது திருமலரடிகளை மறவாது செல்பவர்க்கு முன்னும் பின்னும் அரசர்கள் ஏவலாளர்கள்போல் அணியணியாய்த் தம்மைக் கைகூப்பித் தொழுதுவரவும், கரி பரி காலாள்களாகிய சேனைகளும் சூழ்ந்து வாட்படைகளைத்தாங்கி வரவும் தாம் தமது ஊர் செய்தவந்தான் இதுவென்று காண்பவர் உரைக்கவும் ஊர்ப்புறத்தில் வந்து தங்கினர். யாவராலும் வெறுக்கத்தக்க பழங்கந்தையை இடையிலணிந்த இந்த விரதியர் இவ்வளவு மேன்மை பெற்றுடையவரானல் அவரது தவத்தினளவு யாவரால்தான் புகழக்கூடும் என்று சுகப்பிர்ம முனிவரை வணங்கி மற்றைச் சரித்திரத்தையும் நடத்தி யருளவேண்டும் எனக்கேட்க மீளவும் சுகப்பிரம முனிவர் உரைப்பாராயினர்.

உ-வது குசேலர் துவாரகைகண்டு தன்
னகர்ப்புரமடைந்த அத்தியாயம்
முற்றிற்று.

---

மூன்றாவது
குசேலர் செல்வநுகர்ந்து பரமபத
மடைந்த அத்தியாயம்.

வேறெலி வெண்டுறை.

[பக்காமர்
கருங்கடலினடுவெணெழிகதிரெனக்கார்நிறத்துகணிகதிர்
பெருங்சனகவரையெனச் செம்பொன்னுடைநான்ற புயம்
வென்றிவாளறவமும் தொடரமென்றுமறை[பிறங்கபாயல்
துன்றுமாமங்கையுந் தொடரவாய்விட்டெழுயீ
மன்றவேதங்களுந் தொடர்வான்சுவையமிந்
தொன்றுசெந்தமிழ்தொட ரொருவர்பின்றொடர்தரச்
சென்றவன்றிருவடி தேருவார்யாருமே.

கலித்தாழிசை.

காமன்நறுவிரைத்துளபக் கண்ணியனைப்புண்ணியனை
மாமன்தன்கொழுநனை வழுத்துவீர்மானிடர்காள்
மாமகள்தன்கொழுநனை வழுத்துவீராமாயின்
தாமரைப்பெருமுதலுஞ் சாற்றரியகதிசார்வீரே.

ஒப்புமை பற்றிவந்த ஆறடித்தரவு
கொச்சகக்கலிப்பா

வண்டாடுபூந்துளவ மாலையனைவானோர்கள்
கொண்டாடுசீர்த்தியனைக் கோவலாபாடித்தயிர்நெய்
உண்டாடுசீதரனை ஒப்பிலாவற்புதனை
கண்டாடுமன்பருளங் காதலிக்கும்புண்ணியனைத்
தொண்டாடுவன்றியெனச் சொல்லித்துதிமுழக்கி
ஒண்டாடுனைக்கொண் டுயர்வீருலகீரே.

ஓ பரிட்சித்து மகாராஜாவே! குசேலமுனிவர் தன் ஊர்ப்புறம் சார்ந்தமாத்திரத்தில் தன்னுடைய சீரூர் பெருநகரமாகிய அத னுள்ளும்புறமுமுள்ள காடுகளெல்லாம் மாடமாளிகைகளாகிய விஸ்வகர்மாவினாலும் தொட்டு அழகுசெய்து படைத்தற்கரிதாகியதென்று புலவர்களாலும் கற்பனை செய்தற்கரிய சிறப்புவாய்ந்து அப்பிராகிருத திவ்விய லோகமாகிய ஸ்ரீ வைகுந்தமே இவ்வுலகத்தில் இறங்கி வீற்றிருத்தல்போல விளங்கிக்கொண்டிருந்தது. அயன் அருளுண்டானல் கிடையாதது என்னவிருக்கின்றது. அப்படிப்பட்ட அழகிய நகரத்தை தேவர்கள் கண்டு நமக்கு விரோதமாக விஸ்வாமித்திர முனிவர் வேறொரு பொன்னகரம் சமைத்தனரோ என்று மதிமயங்கினர்கள். அந்நகரத்தில் பளிங்குக் கற்களாலும் தவளைச்சுதையாலும் கட்டி மெழுகியிரானின்ற வெள்ளிய மாளிகைகள் தோறும் பொற்பதுமைகள் போல் மாதர்கள் நிற்கின்ற தோற்றங்களானவை திருப்

பார்க்கடலில் பெரிய பிராட்டியார் திருவடிவம் பல எடுத்து நிற்பனபோலவும் வெள்ளிமலையில் பவளக்கொடிகள் பல படர்ந்துள்ளவைபோலவு மிருந்தது. அந்நகரத்துள் குசேலர் செல்வதற்கு மதிலின் வாயிலின் அடையுங்காலையில் அந்நகரத்துள்ளவர்கள் களிப்பு மேற்கொண்டு முனிவரை வந்து காணும்பொருட்டுக் கைகளிற் பரிசாக எலுமிச்சை முதலிய கனிவர்க்கங்களோடு மற்றுமுள்ள மங்கலப் பொருள்களையேந்தி எடுத்துக்கொண்டு பல மங்களவாத்தியங்கள் முழங்கவந்து அடியேங்கள் வாழ்ந்தோம் என்றுகூறி முகமலர்ச்சிகொண்டு பூமியில் நெற்றி தோள் முதலிய அங்கங்கள் படியத்தாழ்ந்து வணங்கினார்கள். உடனே அவ்விரதத்தில் நின்றும் முனிவரை யிறக்குவித்து முத்துத்தண்டிகையிலேற்றி அழகிய வெண்பட்டுக் குடைகள் நிழலைச்செய்யும் பல வாத்தியங்கள் முழங்கவும் கவரி வீசிக்கொண்டு வரவும், சதுரங்கசேனைகள் புடைசூழ்ந்துவரவும், மறையவர் மங்களவாழ்த்துப்பாடவும், முனிவர்கள் பல்லாண்டு கூறவும் அழைத்துக்கொண்டு வரும்போது வீதிகளில் இருபுறத்திலுமுள்ள உப்பரிகைகளில் விளங்காநின்ற சாளரங்கள் தோறும் சந்திரோதயம்போலத் தங்கள் வதனங்களைச் சாய்த்து மங்கைமார்களெல்லாம் மகிழ்ந்து நோக்கி, ஞானத்தில் தனக்கு ஒப்பிலாத இந்த முனிவர் முற்பிறப்பில் செய்த தவந்தான் யாதோ என்றும், கிள்ளித்தெறிப்பதற்கும் சற்றும் தசையில்லாத தேகத்தில் கிழிந்த வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு திரிபவர்க்கும் பட்டாடையுடுக்கவும் பல்லக்கேறிவரவும் வாய்த்ததைப் பாரீரென்றும் கந்தமூலம் புசித்தும் கானகத்தில் திரிந்தும் பந்தமொழிப்பவர் மிகவும் தவஞ்செய்வார்கள் பலரும் இவர் செய்த பாக்கியப்பேறு யார் பெற்றார்கள் மனம் வாக்குக் காயம் என்னும் மூன்று கரணங்களையும் ஸ்ரீ முகுந்தனுடைய திருவடிக்கே சமர்ப்பித்துத் தினமும் நன்னெறியில் நிலையா நிற்கும் அகழ்வாய்ந்த இந்த முனிவர்க்கு வாய்ப்பது இச்செல்வந்தானோ பரமபத வாழ்வல்லவோ என்பார்கள் கற்புடைய மனைவிவேண்ட கண்ணன்பாற் சென்று அவரளித்ததைப்பெற்று இப்படிப்பட்ட போக பாக்கியத்தோடு இம்முனிவர் வருவது நம்முடைய பாக்கியமே என்பார்கள். சில நங்கைமார் மெய்ஞ்ஞானியராகவுள்ளவர் தங்கள்பால் செல்வம் வந்துற்றாலும் அல்லது வறுமையுற்றாலும் தங்கள் சுபாவம் சிறிதும் குறையாமல் அதற்குத் திருஷ்டாந்தம் ஜனகமகாராஜர் தழல் தட்டில் ஒருதாளும் சந்தனத்தட்டில் மற்றொருதாளும் வைத்துத் தாரகநிறைபோல் செங்கோல் செலுத்தி மனம் சமமாகப்பொருந்தி யிருந்தாற்போலத் தோன்றுவார்கள் இவரும் அவர்போலவே இந்த வுலகமயக்கத்தில் சிக்காமலே செல்கின்றார் பாருங்கள் பாவைமார்களே யென்றார்கள் சில பூவைமார்கள் இம்முனிவர்க்கு இந்த அயிஸ்வரியமும் பெண்போகமும் தருமோ என்று சில மங்கையர் பேசக்கேட்ட சிலமாதர்கள் சிவனரென்னும் முனிவர் இளமைப்பருவம் மேற்கொண்டு பொற்றொடிப்போகம்விரும்பிப் பலநாள் இருந்திலரோவென்று கூறினார்கள். இதைக்கேட்ட பரீட்சித்துமன்னர் சுகப்பிர்மத்தின் திருவடிகளை வணங்கி ஆரியரே சிவனரென்னும் முனிவர் வரலாறு என்னவென்று வினவ உரைப்பாராயினர்

ஓ பரிட்சித்து மகாராஜாவே! பிருகுவென்னும் பெருந்தவமுனிவர் குமாரர் ஆகிய சிவனர் இமயகிரியின் சாரலில் உள்ளவனத்தில் நெடுநாள் தவம்புரிந்து கொண்டிருக்கும்போது அவர் திருமேனியை புற்று மூடிக்கொண்டது அவ்விடத்தில் சையாதியென்னும் ஓர் அரசன்மகள் சுகன்னியென்பவள் பாங்கிமாரோடு மலர்கொய்ய அவ்வனம்வந்து அங்கு அப்புற்றைக்கண்டு அதனுள்ளிருப்பது என்னவென்று அதன் தொளைவழியே பார்க்க அதில் தவஞ்செய்யும் முனிவரது கண்கள்தோன்றக்கண்டு இவை பொன்வண்டுகளோ என்று ஐயமுற்று ஒருதிரணம் எடுத்துக்குத்தவும் அம்முனிவர் யோகம் நீங்கி இது யார் செய்தாரென்று பார்த்து அவள்மேல் மோகங்கொண்டு அவள் கரத்தைப் பற்றினமாத்திரத்தில் பதைத்து உதறிக் கரத்தைப் பறித்துக்கொண்டு பாங்கிமாரிடத்து ஓடிவிழவும் அவர்கள் இவள் எதையோ கண்டு பயந்தாளென்று விசிறி இளைப்பாற்றிக் கொண்டிருக்கும்போது அவ்வனம் பார்க்கவந்த அவள் பிதா சையாதி அரசன் அப்புற்றினருகே அம்முனிவரைக் கண்டு அடிவணங்கி யெழுந்திருந்து அவரது கண்களிலிருந்து நீரொழுகுவதைக்கண்டு இது செய்தவர் யாரென்று தேடிவரப் பாங்கிமார் நடுவில் சேர்ந்திருந்த மகளைக்கண்டு முனிவருக்குக் கண்களில் நீர் வரும்படியான உபத்திரவம் யார் செய்தவர் யாவரெனக்கேட்க நான் செய்தேனென்று நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் கூற மனம்வருந்தி என்னகாரியஞ்செய்தாய் பேதாய் என்றிரங்கி விரைந்து முனிவரிடத்துச்சென்று சுவாமிகள் என் புத்திரியின் புன் செய்கையைப் பொறுத்தருளுமென்று பிரார்த்திக்க அவர் உன்செய்கையைநன்செய்கைதான்உன் மகளை எனக்கு மணம் முடித்துத் தருவாயேல் பொறுப்

பேன் இல்லாவிடில் சபிப்பேனென அதற்கரசன் உடன் பட்டு மகளை அழைத்து கல்யாணஞ் செய்வித்தான் அம்மாது முனிவருக்கு வேண்டிய உபசரணைகள் செய்து வரும் நாட்களில் ஓர்நாள் அசுவனிதேவர்கள் சுகன்னி யை நோக்கி, அவளழகில் பரவசப்பட்டு காரிகையே ! உன்தந்தை யார் உன்பெயர் யாது நாங்கள் அசுவனி தேவர்கள் உன்மீது காதலித்தோம் என்று உருகி இரங் கிக்கேட்க அவள் நான் சையாதிமகாராஜாவின் குமா ரத்தி என்பெயர் சுகன்னி சிவனமுனிவர் மனைவி ஆக லால் உங்கள் கருத்து முடிவுபெறாது யென்று யெடுத் தெரிந்து பேசித் தலைகுனிந்து நிற்பவளைப்பார்த்து மா தே உன் புருஷனும் நாங்களும் இந்த மலர்த்தடாகத் தில் மூழ்கினால் நல்ல இளமைப்பருவம் வாய்ந்து அழ குள்ள புருஷர்களாய் நிற்போம். இம்மூவருள் உனக் கிஷ் டமானவர்களைச் சேரென்று உரைக்கக்கேட்டு மவுன மாய் விரைவில் தனது நாயகனிடத்து ஓடிச் சொல்லினள் அவர் அதுகேட்டுச் சம்மதித்துத் தானும் தன் மனையாளோடு வந்து அசுவனி தேவர்களைக்கண்டு அவ் விருவரோடு முனிவரும் அம்மலர்ப் பொய்கையில்மூழ்கி இளமையும் வனப்பும்பெற்று வெளிவந்தார்கள் சுக ன்னியானவள் நான் கற்புடையாளானால் என் புரு ஷனே புருஷனாக வேண்டுமென்று புருஷோத்தமனைத் தியானஞ்செய்து தன்கணவனது தோள்களைத் தழுவிக் கொண்டாள்.

அதுகண்ட சிவனமுனிவர் அசுவனிதேவர்களே நீங்கள் செய்தவுதவி எனக்கு யார் செய்வார்கள் என்று உடனே ஓர் யாகஞ்செய்து அவர்களுக்கு அவிர்ப்பாகம் பகிர்ந்தளித்து அனுப்பிவிட்டு சுகன்னியோடு வாழ்ந் திருந்தார், அவர்போலவே இந்தக் குசேலமுனிவர் என்னபாக்கிய போகம் எம்பிரானருளால் வாய்த்தபோது ம் ஐயன் திருவடியை மறப்பாரோ யென்றார்கள். சில மாதர்கள் இவ்வாறு தத்தம கிருகங்களில் முனிவரது செல்வத்தைக் கண்டு மகிழ்ந்து பேசிக்கொண்டிருக்கும் போது குசேலமுனிவர் தனது வாயிலையடைந்து சிவிகை முதலியவை அலங்கிர்தையாய்த் தன்னை எதிர்கொண்டுபோங் கிமார்சூழத் தன்மனைவிவந்து வந்தனை புரிந்து கரகநீரால் திருவடிவிலக்கி கந்தமிட்டு மலர்சூடி தூபதீபங்காட்டி ஆலாற்றி சுற்றியெறிந்து வணங்கி நிற்கக் குசேலர் உள்ளெழுந்தருளி இரத்தினக்குப்பை பொற்பொட்டி முதலியவைகளையும் பாலசுப்பிரமணியனைப்போல் அழகு வாய்ந்த தனது புத்திரர்களையும் கண்டுகொண்டிருக்க மனையாள் அங்கொரு ஆசனமிட்டு அவரை அதில் இரு த்தி தயிலக்காப்பிட்டு நீராட்டி ஈரம் வுலர்த்தி வேறுடை வுடுத்ததி நின்றனள். குசேலர் நியமனம் முடித்து அவள் உபசரிக்கவுண்டு மனையாளோடு இவ்வகையாக இன்பம் நுகர்ந்து ஒருநாள் அந்தப்புரத்தில் ஓர் அறையில் தாவ தனியேயிருந்து கபாடத்தைத் தாளிட்டு யோசிக்கின் றாள். பொருள் சம்பாதித்தலும் அதைக்காத்தலும் இழைத்தலும் துக்கமேயாகும், அது நரகத்திலும் சேர்க்கும். சீ சீ இப்பொருளைப் பரமபாகவதர்கள் மறந் தும் நினைப்பார்களோ அதனாலே பிறப்பும் பெருகும் இதனாலே யான் சம்பாதிக்கேன் என் வீடு என் பொருள் என்று மயக்கம் உண்டாகின்றது. அதை ஒழிப்பவனே பிரமாதிகளுக்கு எட்டாத முத்தியுலகமாகிய பரமபதத் தை அடைகின்றானென்று வேதோப நிஷத்துக்கள் முறையிடுகின்றன. தெய்வம் உள்ளதோ இல்லதோ வினைப்பயன் உண்டோ யில்லையோயென்னுஞ் சங்கை யை ஒழித்து ஞான அநுபவத்தால் பரமாசாரியனையும் பகவானையும் உணர்ந்தவனே இவ்வுலக மயக்கத்தினின் றும் ஒழிந்தவனாவான். ஆசையற்றவனன்றோ ஞானியா வன் மற்றவைகளையெல்லாம் நீக்கினவனானாலும் அஞ்ஞா னியே யாவான். இம்மனையிலிருந்து ஜீவன் முத்தனாவன் என்பது மலையைக் கடலிலிட்டுப் புணையாக்கி அக்கரை சேர நினைக்கும். ஒருவனை ஒக்கும் ஆதலின் சர்வேஸ்வர னைத் துதிப்பேனென்று பகவஸ்மரணைசெய்து கண்களில் நீரரும்ப இருகரங்களையுஞ் சென்னி மேற் குவித்து பாவர்க்கும் பிரானாகிய ஸ்ரீ வாசுதேவன் எனக்கருளு வனோ என்று மனநெக்குருகிக் கசிவுறுங்காலத்தில் வேத மூலமாகிய ஆதிபிரான் ஒரு பச்சைமலையானது தன் முடி யில் சூரியனை பதித்துக்கொண்டு இரண்டு சந்திர மண்ட லங்களை நெடிய சிகரத்தின் இரண்டுபக்கங்களிலும் தரித் துப் பல சுடர்களோடும் பல தாமரை மலர்களோடும் வருவதுபோல ஸ்ரீமந்நாராயணன் அவர் முன் யெழுந் தருள முனிவரெழுந்து கைகூப்பி மும்முறை வலம்வந்து ஞானபூசைசெய்து ஐயா நெடுநாள் தவமிருந்து யோகஞ் செய்து காணொணாப் பரஞ்சுடராகிய நீர் அவற்றில் ஒன் றும் செய்து அறியாத பாவியாகிய எனக்கும் உமது தரி சனம் கிடைத்ததே நான்கு வேதங்களும் ஓலமிட்டும் காணாத நினது திருவடிக்காட்சி இருவினை கடலிற் கலங் கிய மருளில் மூழ்கும் அறிவில்லாத எனக்கும் காணக் கிடைத்தது மஹாபுதுமை அடியேன்முடியில் உமது சீர் பாதம் வைத்தருளினால் பழவினை மாய்ந்து போம். ஐய னே உமதடியவர் அடியாகுதலே பெருஞ் செல்வமாக வேண்டுகின்றேன் இச்செல்வம் வேண்டாம் என்ன குசே

லீரே! வறுமையை வேண்டுதல் என்னகாரணம் என்று யெல்லாந்தெரிந்த இறைவன் கேட்கக் குசேலர் ஆரணப் பொருளே உமதடியில் தியானம் வைத்து இடையூறுகிற தென்ன குசேலரே எனக்குத் திருவளித்தது உனக் கல்ல உன்னைச் சேர்ந்தவர்க்கே உன்னைச் சேர்ந்தவர் துன் புறுதல் அழகாகுமா உன்னுள்ளம்போல் அவருள்ளம் பற்றில்லாம லிருக்குமா மந்திரவாதிகளை பாம்பின்விஷம் ஒன்றும் செய்யாததுபோல் செல்வம் என்னைஎன்ன துன் பஞ்செய்யும் சற்று நிதானித்துப்பாரும் என்று கம்பீர மாகக் கருணைக்கடலாகிய கமலக்கண்ணன் குறுநகை யோடு திருவாய் மலர்ந்தருளியதைக் கேட்டு எம்பெரு மானைத்தொழுது தொழுது துதிப்பாராயினர்.

ஓ ஜெகதலத்தரசனான பரிட்சித்து மன்னவரே! குசேலர் ஐயனது சீர்பாதங்களில் விழுந்து யெழுந்த துதித்த துதிசளைக்கேளும்: ஓ மாதவனே! எழுதறிய மறையைக் கவர்ந்துகொண்டு கடலிற் புகுந்து ஒளித்த சோமுகாசுரனுயிரை மீனுருவெடுத்து அவனுயிர் மாய் த்து அவன் விடாதுபற்றியிருந்த வேதத்தைப் பெற்று நாமகள் நாயகனாகிய நான்முகக் கடவுளுக்களித்து உயிர் களையெல்லாம் புரந்தருளும் புண்ணியனே போற்றி போற்றி திருப்பாற்கடலின் நடுவே மந்தரகிரியை மத் தாக்கி மதியைத் தறியாக்கி நாட்டி வாசுகியை வடமாகப் பூட்டிச் சுராசுரர்கள் கடையும்போது அம்மலை கடலி லழுந்தாவண்ணம் ஆமைவுருவுற்றுப் பரித்த பராபரனே போற்றி போற்றி பார்மகளைப் பாயாகச்சுருட்டி பாதலத் தில் மறைந்த இராட்சதனுடைய உயிர் குடிப்பதற்கு இமைப்பொழுதில் அப்பூமியை விரிப்பதற்கு வராகவடிவு கொண்டருளிய வரதனே போற்றிபோற்றி இரணியாட் சதனுடைய உயிரை நீக்கிப் பழிவாங்கிக் கொள்ளக் கரு திப் பிரமவுருத்திராதிகட்கு அச்சுறுத்தியும் தன் பெய ரையே வேதாரம்பத்தில் வழுத்த ஆக்கினையே செய்து தன்னையே யாவரும்வந்து வணங்க இறுமாந்திருந்த இர ணியன்மார்பை அவனுலறைப்பட்ட தூணிலிருந்து பிற ந்து அவ்வசுரனைக்கொன்று அவன் புத்திரனாகிய பிரகலா தாழ்வானைக் காத்தருளிய கருணாகரனே போற்றி போ ற்றி தவத்திற்சிறந்த காசிபமுனிவரும் அதிதியும் தந் தையுந் தாயுமாக அவதரித்து மமதையிற்படிந்த மாவலி யென்னும் அவுணனிடத்துச்சென்று ஓரடியால் மூவுலகு கொண்டு ஓரடிக்கு இடம்போறாமல் அவ்வசுரன் முடி மேல் வைத்து இந்திராதியரைப்புரந்த பிரதானனாகிய வாமனனே போற்றி போற்றி சமதக்கினிக்கும் ரேணு கைக்கும் புத்திரனாகப்பிறந்து உலக நடையிற் சிறந்து நடந்த கார்த்தவீரியார்ச்சுனன் முதலிய சூரியகுல அசு ரர்களையழித்து அந்தணரைக் காத்தருளிய அச்சுதனா கிய பரசுராமனே போற்றி போற்றி திருவயோத்தியில் தசரதச் சக்ரவர்த்திக்கும் கௌசலா தேவிக்கும் புத்திர னாய் சங்குசக்கர அனந்தவுருவாகிய பரத சத்துருக்க இலட்சுமணர்கள் தம்பியர்களாகி அடி பரவ வுதித்துக் காடகை தன் மகனோடு வருகையிலுருளச் சாந்தொடு த்து விஸ்வாமித்திரன் வேள்வியைக்காத்து கல்லுரு வாய்க்கிடந்த அகலிகை சாபந்தீர்ந்து மிதிலைநகரம் புகு ந்து காளகண்டனது கார்முகமிருத்தி மலர்கள் உருவாம் சீதையை மணந்துமீட்டும் அயோத்தியையடைந்து தாய் சொல் தாங்கித் தம்பியும் தொடர அன்றுமலர்ந்த தாமரை மலர்போல் முகமலர்ந்த மகிழ்ச்சியோடு அந்நகர் நீங்கிக் குகப்பெருமானைச் சிநேகித்து சித்திரகூடபர்வத மடைந்து அங்குதன்னைக்காண ஆவலாயோடிவந்தபரதாழ் வானுக்கு இனிமைகூறிப் பாதுகமளித்து அனுப்பி தண் டகாரணியம்புகுந்து அங்கு ஜானகியைத் தூக்கிச்சென்ற விராதனைமாட்டி அவ்வசுரன் துதிகேட்டுச் சாபங்கள் தருத்தினை முடித்து அகஸ்தியர் ஆசிரமமடைந்து அவ ரருளிய படை முதலியவற்றைக் கைக்கொண்டு பஞ்ச வடியடைந்து சடாயு சந்தோஷம் அடையச்செய்து சூர்ப்பனகையின் உருவபங்கங்கண்டு தூரத்திக் கரன் முதலியோரைக் காலனார்க்கு அனுப்பி மாரீசனை மாய்த் துச் சிறகறுப்புண்டு வீழ்ந்து கிடந்த தந்தையைக்கண்டு ஈமக்கடன் முடித்துக் கவந்தனை வீட்டி அவன் துதி யேற்று சவரிபூசை கொண்டு மதங்கமலையைக் கண் ணுற்று அனுமானால சுக்ரீவனைக்கண்டு மராமரந்தொளை த்து வாலியைப்போக்கி ஆஞ்சநேயரால் அறிவதை அறி ந்து வருணனை அடக்கி சேதுகட்டி இலங்கை புகுந்து கும்பகர்ணதியரையும் தசமுகனையும் கொன்று விபீஷ ணர்க்கு அரசளித்துக் கற்புக்கரசியை மீட்டு விமான மேறி பரத்துவாசர் ஆசிரமம் அடைந்து விருந்துண்டு அனுமரால் அக்கினிப்பிரவேசமாகாமல் பரதரைத்தடை செய்வித்து அயோத்திசென்று இராச்சிய பாரஞ்செய்த ஸ்ரீராகவபிரானாகிய சீதரனே போற்றிபோற்றி தேவகி தேவிக்கும் உரோகணி ஒருமகனாக அவதரித்துப் பிற லம்பன்முதலியோரைக் கூற்றுவனார்க்குப் பலிகொடுத்த பலராமனாகிய பரந்தாமனே போற்றி போற்றி வடமது ரையில் ஆவணிமாதத்தில் கிருஷ்ண அஷ்டமியில் தேவகி யின் திருவுதிரத்தில் திருவவதரித்து வசுதேவன் கால் விலங்குதெறிப்பித்து அவர்மலர்க்கரம் அடைந்து காவற்

தவு திறக்கவும் யமுனைவழி விடவும் கடாட்சித்து நந்த
கோபர் கிருகத்தில் அசோதை பெற்ற யோக மாயை
யின் திருவுருவாகிய வைஷ்ணவி பிறந்த மனையுள் புகு
ந்து எல்லாரு மகிழ வளருநாளில் கம்சனுகிய மாமன்
டுக்கவந்த பூதனையின் முலைப்பாலுண்டு உயிர்போக்
ச் சகடாசூரனை உதைத்து வதைத்து வாயில் சுழன்று
காண்டு செல்லும் அரக்கனை மாயும்படி வீழ்த்தித்
ய் காணும்படி வயிற்றுள் பல்லாயிரங்கோடி அண்
ங்களையும் அவைகளுக்குத் தலைவர்களாகிய தேவர்
ளையுங் காட்டி மறைத்து தயிர்கடையும் வேளையில்
பால்பொங்கிவழிய தாய் ஆற்றப்போன சமயம் பார்த்து
அங்குள்ள தயிர்த் தாழிகளை மத்தாலுடைத்து வெண்
ணெயைத்திரட்டி உண்டு அடுத்த மனையிற்புகுந்து உறல்
மேல் நின்று உரியிலுள்ள வெண்ணெயை வாரியுண்டு
பூனைக்குங் கொடுத்து தாம்பால் உரலில் உதரத்தில்
கட்டிவைக்க அதை இழுத்துக் கொண்டு மருதமரங்க
ளிரண்டொடிய இடையே தவழ்ந்து நளகூபமணிக் கிரி
வானை அநுக்கிரகித்துப் பிருந்தாவன மடைந்து கன்று
கள் மேய்த்து அவற்றில் கன்றுபோல் மாயை கொண்டு
வந்த ஒரு அசுரக்கன்றால் விளம்பழ முதிர்த்து பகா
சூரன் வாய்கிழிந்து விழப்பாம்பின் வாய்ப்புகுந்து சாப
மொழித்து ஆயர் சிறுவர்களோடு கட்டமுது பொசித்து
பிரமதேவர் கவர்ந்து கொண்டுபோன சிறுவர்களையும்
கன்றுகளையும் பண்டுபோல் உண்டாக்கி விஷநீர் உண்டு
உயிர் துறந்த உயிர்களாய்த்திடக் கடைக்கண் பார்த்துக்
காளியன் முடியில் நடித்து ஆயர்சிறுவர்களைக் காட்டழல்
வளைந்துகொள்ள அதனை அயின்று ஆச்சியார் மயங்கப்
பவளவாயில் வேய்ங்குழல் வைத்து ஊதி அவர் நீராடல்
செய்யும்போது கலைகளைக் கவர்ந்து குருந்த மரத்தின்
மீதேறிக் கரைமிசை வந்தவர்களுக்குத் துகிலை யெடுத்
தெடுத்து ஈந்து மலர்ச்சோலையில் பல வுருவங்கொண்டு
அவர் கனிவாயமுதுண்டு முனிவர்கள் பத்தினிமார்கள்
சமைத்தளித்த இன்சுவை யமுதுண்டு உவந்து இந்திர
னுக்கு இடும் பொங்கல் பூசையைக் கொண்டு மலையால்
மழையைத் தடுத்து சிவந்த கண்களையுடைய ஓர் அசுரன்
கொண்டு செல்லும் தந்தையைத் திருப்பிக் கொண்டு
வந்து அவனும் அண்டர்களும் தரிசிக்க ஸ்ரீ வைகுந்தத்
தைக் காட்டித் திடீரென்றுமறைத்து பசுக்காவல் செய்யு
மிடத்தில் ராதையின் அழகியநலத்தைக் கவர்ந்து பல
மாதர்களோடு ஆயர்பாடிக்குச் செல்லும்போது தந்தை
யைப் பற்றும பாம்பைப் பாதத்தால் மிதித்து அகற்றிக்
காட்டைக் மீட்டுமடைந்து சங்கசூடனை மாய்த்து மணி
யினைப் பலராமர்க் களித்து நாரதமுனிவர் சொல்லக்
கேட்டு கம்ஸன் அனுப்பிய தேகியினுயிர்குடித்து அவன்
அமர்ந்திருந்த மதுரையைஅடைந்து ஈரங்கொல்லியைத்
தடிந்து எழில்கலன் உதவி மதுமலர் மாலையைக் கொடுத்
தவர்க்கு இன்பவீடளித்து கூனியை நல்ல தெய்வப்
பெண்ணாகச் சமைத்து இராஜசபைக்குப் போய்க் குவ
லயா பீடமென்னும் குஞ்சரத்தையும் மல்லர்களையும்
கஞ்சனையும் கொன்று உக்கிர சேனர்க்கு அரசுரிமை
அளித்து தந்தை மனமகிழ்ந்து பூநூல் கலியாண முதலிய
யவை செய்த வளவில் சாந்தீபமுனிவரை அடைந்து
வேதமுதலிய கலைகளெல்லா முணர்ந்து குருதக்ஷணைக்
காக கொடிய பராக்கிரமம் பொருந்திய அவனது மலை
போன்ற மார்பைக் கிழித்து சக்கரமேவி முன்னிறந்த
மதலையை மீட்டு ஆசாரியன் தேவி முன்வைத்து கோபி
யர்களைத் தேற்ற வுத்தவரை செலுத்திக் கூனியின் இள
நலம் பேசித் திரிகராஷ்டிரனிடத்தில் அக்குரூரரைப்
போக்கிச் சராசந்தனோடு பதினேழுநாள் அமர் விளைத்து
அம்மதுரையைக் காலயவனன் வந்து வளைத்துக்கொள்ள்
வும் மேற்கடல் நடுவே துவாரகா புரியென்று ஒரு அழ
கிய நகரமொன் றுண்டாக்கிப் போரில் வலியில்லாமல்
புறங்கொடுத்து ஓடுபவனைப்போல் விரைந்தோடி முசு
குந்தன் உறங்கும் மலைக்குகையில் புகுந்து அவனால்
பகைவனை அழைப்பித்துப் பலராமரோடு வடமதுரையி
லிருந்து துவாரகாபுரிக்குச் செல்லும்போது சராசந்தன்
வளைக்க அவனுக்கு அஞ்சினவர்போல் பலராமரோடும்
மலையேறி அழல்சூழக் கவலையில்லாமல் விரைந்து தாண்
டிச்சென்று துவாரகை யடைந்து விதர்ப்பதேசத்தரசன்
நங்கை முன்னோனுரைக் கஞ்சி விடுத்த தூதைக் கண்ட
பொழுதே தேர்மிசை ஏறிச்சென்று கவுரியை வணங்கி
கன்னியைக் கவர்ந்து பகைத்த அரசர்களை ஓட்டி ருக்கு
மன் குடுமியை அரிந்து துவாரகையைச் சேர்ந்து பின்பு
ருக்மணிபெற்ற புத்திரன் மீன்வயிற்றையடைந்து இரதி
யைச் சார்ந்து வளர்ந்து அவள் நலனுண்டு எதிர்த்த
சம்பரனை வென்று அவளோடு துவாரகையில் புகக்கண்டு
மனமகிழ்ந்து சத்திராஜித்து சூரியன்பாற் பெற்ற சிவந்
தக மணியைப் பிரசேனன் கரத்திற் கொடுக்க அதனைச்
சிங்கங் கவர்ந்துகொண்டு போக அதினின்றும் ஜாம்புவந்
தர் பரித்துப் பிலத்தை அடைந்து தன் மகளிடத்து
வைக்க அதுகண்டு பெரும்பழி வருமென்று உடனே
அப்பிலத்தை அடைந்து ஜாம்புவந்தரோடு போர் செய்து
வென்று அவர்களையும் அம்மணியையும் பெற்று சத்தி
ராசித்துவுக்கு அளிக்க மிகமகிழ்ந்து சத்தியபாமையை

மணியைப் உவந்து கொடுக்க மிகமகிழ்ந்து மணியை அம்மான்கை அளித்து தருமர் முதலாயினோர் துயர் ஒழிய அவர்களிருக்குமிடம் சென்றுரையுங் காலையில் மானைக் கடிந்து அப்பமணியைக் கைகொண்ட சத்தனு மனின் உயிர்நீங்கத் தொலைத்துப் பின்னர் மழைபெய்யு மிருந்தம் அக்ரூரன் சியமந்தக மணியோடு வந்துகண்ட மாத்திரத்தே மிகமகிழ்ந்து அம்மணியைச் சத்யபாமைக் குகவுசெயன்று இனிதளித்துச் சுபத்திரையை அர்ச்சுன னுக் கீந்து இந்திரப் பிரஸ்தத்துக்குப் போகும்போது பார்த்தனோடு கானில் வேட்டையாடுங் காலையில் காளிந் தியின் இன்பத்தை அனுபவித்து துவாரகா புரியை அடைந்து அவந்திராசன் பெற்ற மித்திர விந்தையைக் கவர்ந்து துரியோதனன் முதலானோர் மனத்தில் அரசு முறையில் வளைத்து அமர்த்திக் கோசலராஜன் விட்ட போர்விடை யேழையுந் தழுவிச் சத்தியை மணந்து கேகயராஜன் சுயம்வரஞ்செய்துகொடுக்க பத்திரையின் இன்பம் அனுபவித்து இலக்கணையை மணம் புணர்ந்து நாகாசுரனைக் கொன்று வச்சிராயுதபாணியின் மனக் குறையை முடித்து பிலத்தில் வைத்திருந்த பதினறுபிர மங்கையர் போகம் விருப்பிச் சத்தியபாமைக்குக் கற் பகத்தருவைக் கொண்டுவந்து கொடுத்து மழலைச்சொற் களையுடைய கலைகள் அளவரநவர் பிறக்க அகமகிழ்ந்து பௌத்திரனைச் சிறைவைத்த பாணசுரன் கரங்களை யறத்தெறிந்து சோம்பியாய்க் கிடந்தவன் பாதகந் தவிர்த்து காசிராஜனையும் பாம்பணைப் பரமன் யானேயென்று உலகத்துள்ள மாதர்களை யெல்லாம் மயக்கித் திரிந்த பௌண்டரகன் வாசுதேவனையும் உயிரொழித்து அக்காசி ராஜன் விடுத்த பூதத்தைத் துரந்து சுயோதனன் கன்னி யின் போகம் விரும்பி நூர்ந்து சாம்பன் சிறையைப் பல ராமர் மீட்டு வாக்களித்து நாரதபகவான் காணப் பதினு யிரந் திருவுருக்காட்டச் சராசந்தனுடைய உடலைப் பிள ந்து பீமனறியப் புல்லைக் கிழித்துப் பலநாள் வருந்திய அரசர்கள் சிறைவிடுத்துத் தருமர் புரிந்த இராயசூயத் தில் நிந்தித்த சிசுபாலனை வாதித்துச் சாளுவனையும் தந்தவக்ரனையும் சேனைகளோடு மடித்துப் பார்த்தனுக் குச் சாரதியாய்த் தேரை நடத்திப் பஞ்சவர்களால் அர வக்கொடியோன் முதலியோரை அதஞ் செய்வித்து பூபாரந் தொலைந்து தருமருக்கு அரசு நல்கி யெனத் நந்தையில் முடிந்துள்ள அவலையும் அவிழ்த்துத் தின் கமலக்கண் ணுடையக் கடவுளே போற்றி போற்றி எ பிரான் போற்றி மாயவா போற்றி கஜேந்திர வரத போற்றி கமலநாயகனே போற்றி போற்றி யென்று கண் களில்நீரரும்ப இருகரங்களுஞ் சென்னிமேற் குவிய ம னெக்குருகி யுருகுங்காலையில் மறையின் பொருளா என்றைக்குமெட்டாத மாயபிரான் விரைந்து காட்சி கொடுத்த அளவில் பெருக்கெனயெழுந்து பலகால் திரு வடியில் வீழ்ந்து யெழுந்து முடிமிசைக் கரங்குவி வலம் வந்து ஆடிப்பாடி என்போல் யார் தவஞ்செய்தார் ளென்று பூசைசெய்து ஐயனே ஆரணயஞ் சென்று தீர்த்தம் திவ்விய தலங்கள் சார்ந்தும் மலைக்குகைகளில் புகுந்து ஐம்பொறிகளை வாட்டியும் தவஞ்செய்வார்க்குக் கிடைத்தற்கரிய நினதுசேவை பாவி யெனக்கிடைத் ததே யென்றுரைத்து மீண்டும் அப்பனே! நீர் அளித்த இச்செல்வம் பிறவிக்கு ஏது ஆதலால் எவ்வளவுவேண் டாம் அடியார்க்கடியேனென்னும் அப்பெருஞ் செல்வம் வேண்டா நிற்கின்றேன் என்றிரங்கும் அன்பன் வார்த் தையைச் செவியிலேற்றுத் தொண்டரே உமக்கு இச் செல்வம் நாம் அளித்தது உம்பொருட்டல்ல உம்மைச் சார்ந்தவர்களுக்கே யாம். அழித்த இவ்வைஸ்வரியம் உம்மை யென்னசெய்யும் மந்திரவாதிகளை பாம்பின் விஷம் என்னசெய்யமாட்டும்? இத்திருவோடு நெடுங் காலமிருந்து உம் நிலைதவறாது முடிவில் பரமபதம் சார் வாயென்று ஜெகதீஸ்வரியைத் தனது திருமார்பில்வைத் துள்ள பகவான் ஆக்கினைப்படி புத்திரபாக்கியம் பெருக வாழ்ந்து பின்னர் ஒருநாள் உம்பர் மலர்மழை பெய்ய விமானமேறி பரமபதஞ்சார்ந்தார்.

ஸ்ரீ வைகுந்தமடைந்த அத்தியாயம் முற்றிற்று

---

விருத்தம்.

சீரியராம்ஜெயதேவ் கபீர்த் துளசிதாசர்ச் சிறந்த நாம்தேவ் ஞானேசர் குசேலர் முன்னம்
பேரின்பம் பெற்றயர் சரிதைதன்னை பிரியமொடு படிப்பவரும் கேட்போரும்
பாரின்மிசை பவநாச மற்றமேலாம் பதமுற்று ஹரிபரந் தாமனேக்கால்
மாரிமாதம் மூன்றுதரம் பெய்ச்சென்னல் மக்கள்மனைச் செழித்துமகி தறத்துய்வாரே.

கலி விருத்தம்.

மன்னு மாமறை வாழிமா மறையவர்
பன்னு மான்முதல் வாழிகற் பார்த்திபர்
மின்னு நீதியும் வாழி மிகுநல
மென்னு மிக்கதை யின்தமிழ் வாழியே.

குசேலமாமுனிவர் சரித்திரம் முற்றிற்று.

---




...பிரஸ், ஜூஜ மதராஸ்.